# மன்னன் மகள்

## 1. சூடாமணி விஹாரம்

சித்திரைத் திங்கள் துவங்கிப் பதினைந்து நாட்களுக்கு மேலாகிவிட்டதால் இரவு முழுவதும் மக்களை வாட்டி வதைத்த அந்தக் கோடை வெப்பம்கூடக் காலை வேளையில் அடியோடு நீங்கி, சூடாமணி விஹாரத்தின் சுற்றுப்புறம் பூராவிலும் இதமான சீதளநிலை நிலவ உதவி புரிந்தது. சைலேந்திர மன்னனான ஸ்ரீமாற விஜயதுங்கவர்மனால் நிர்மாணிக்கப்பட்ட பிரும்மாண்டமான அந்த புத்த விஹாரத்தின் எதிரே இருந்த நாகைக் கடலின் அலைகள்கூட அன்று காலையில் புத்தர்பிரான் மனத்தைப் போல அமைதியடைந்து லேசாகத் தரையை வந்து தொட்டுத் தொட்டுச் சென்று கொண்டிருந்தன. கடலில் எழுந்த குளிர்ந்த காற்றை அனுபவித்த கடல் நாரைகள், ஆனந்தத்தால் பலவித சப்தங்களை எழுப்பிக் கொண்டு, தங்கள் வெள்ளை இறகுகளை அகல விரித்துப் பறந்து, மெல்லிய தோலால் பாவப்பட்டிருந்த தங்கள் நரம்புப் பாதங்களை ஜலமட்டத்தில் வைத்து மிதந்து மிதந்து, ஓடுமீன் ஓட உறுமீன் வருவதை எதிர்பார்த்து, அப்படியும் இப்படியும் தங்கள் அலகுகளை ஆட்டிக்கொண்டிருந்தன.

இரவின் வெப்பத்தால் கரை யோரத்தில் அலைக்கருகே பதுங்கிக்கிடந்த கடல் நண்டுகள் வெளியே கிளம்பித் தங்கள் கால்களால் மணலைக் கவ்விக் கவ்வி நடந்து வளைகளைத் தேடிச் சென்றன. உக்கிரமான காற்றில்லாததால் சிறுக அடித்துக் கொண்டிருந்த அலைகளிலும், தக்கையான கிளிஞ்சல்கள் பல மிதந்து வந்து கரையில் பாய்ந்து ஓடும் நண்டுகளைப் பார்த்து விழித்தன. உறுமீனை நோக்கி ஜல மட்டத்தில் உட்கார்ந்தும் பறந்தும் கொண்டிருந்த நாரைகளையும், முடிந்தால் மனிதர்களையும் பட்சணம் செய்யக்கூடிய பெரிய சுறாக்கள், சிறிது தூரத்தில் பிரும்மாண்டமாக ஜலமட்டத்துக்கு மேல் எழும்பி எழும்பித் தங்கள் வாய்களில் நீரை வானம்போல் ஊதிவிட்டு மீண்டும் கடலுக்குள் பாய்ந்து மறைந்தன. இந்தச் சுறாக்களோடு பிரதி தினமும் போராடும் மீனவர் மட்டும், காலை நேரத்தின் குளிர்ச்சியை அனுபவித்துக்கொண்டு மணலில் குழந்தையும் குட்டியுமாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தனர். கரைக்குச் சற்றுத் தூரத்தில் சோணாட்டுப் போர்க்கலங்கள் இரண்டு நங்கூரம் பாய்ச்சி நின்று லேசாக ஆடிக் கொண்டிருந்தன. அவற்றைக் கரைக்கு வா வா என்று அழைப்பனபோல் சூடாமணி விஹாரத்தில் புஷ்பச் செடிகள் காலை நேரத்தின் இன்பமான குளிர்ந்த காற்றில் தங்கள் மலர்த்தலைகளை அசைத்தன.

இரவு முழுவதும் வெப்பத்தின் காரணமாக உறக்கம் பிடிக்காதிருந்த நாகைப்பட்டணத்துப் பொதுமக்கள் இன்பமான அந்தக் காலை நேரத்தை அனுபவிக்க எழுந்திருக்கவில்லையே தவிர, சூடாமணி விஹாரத்தின் விமானங் களிலிருந்த புறாக்களும், கிள்ளைகளும், எழுந்து சப்திக்கத் தொடங்கிவிட்டன. விஹாரத்தைச் சுற்றியிருந்த தோட்டச் செடிகளில் கூடு கட்டியிருந்த பறவைகளும் உள்ளே கோயில் கொண்டிருந்த புத்தர் பிரானுக்கு உதய ராகம் பாடின. இயற்கையில் கலந்து வாழும் அந்தப் புள்ளினங்களின் இன்பக் கூச்சலுக்குச் சுருதி கூட்டுவதுபோல், விஹாரத்திலிருந்த புத்த பிக்ஷுக்கள், "புத்தம் சரணம் கச்சாமி!" என்று மெல்லக் கோஷித்தார்கள். பயபக்தியுடன் மெல்ல எழுப்பப்பட்ட அந்தச் சரணாகதிச் சப்தம், அந்த விஹாரத்தின் பிரும்மாண்டமான ஸப்தஸ்வர கற்றூண்களிலும், பெரிய சுவர் களிலும் தாக்கி எதிரொலி செய்ததால் கருணையே உருவான புத்த மகானின் நாமத்தைக் கல்லும் உருகிச் சொல்வது போன்ற பிரமை ஏற்பட்டது. சூடாமணி விஹாரத்தின் நடு மஹாலில் உட்கார்ந்து புத்தபிரான் நாமத்தைத் துதித்த அந்த இருபத்தைந்து பிக்ஷுக்களின் மீது மட்டு மின்றி, அந்தக் கூட்டத்திலிருந்து சற்று விலகித் தலைசாய்த்து நின்ற ஒரு வாலிபன் மீதும், புத்தரின் மந்தஹாசம் விழுந்து கொண்டிருந்தது. மூடிய கண்களைத் திறக்காமலே தியானத்தில் ஆழ்ந்திருந்த அந்தச் சிறுவனை, விஹாரத்தின் தலைமைப் பிக்ஷுவே தொட்டு, "தம்பி! விழித்துக்கொள். காலைப் பிரார்த்தனை முடிந்துவிட்டது," என்றார்.

கண்களைச் சிறிதே அகல விழித்த அந்த வாலிபன், பதிலேதும் சொல்லாமல் அந்தப் பெரியவரைப் பின் தொடர்ந்து சென்றான். இருபது இருபத்திரண்டு வயதுக்கு மேற்படாத

## பிறந்த நாள் எது ?



காயிதே மில்லத் இஸ்மாயில் சாகிபின் பிறந்த நாள் ஜூன் மாதம் ஐந்தாம் தேதி என்று பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் அது சரியானதா என்பது சந்தேகமே.

அந்தக் காலத்தில் கிராமப் புறங்களில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்க அழைத்து வருவார்கள். பிறந்த தேதி என்ன என்று ஆசிரியர் கேட்டால் தெரியாது என்பார்கள். கல்வியாண்டு தொடங்கி, பள்ளிக்கூடம் திறக்கும் நாள் ஜூன் 5'ம் தேதியாக இருக்கும். அதையே குழந்தையின் பிறந்த நாளாக ஆசிரியர் குறித்துக் கொள்வார். அந்த ரகத்தில் சேர்ந்ததுதான் காயிதே மில்லத்தின் பிறந்த தேதி யும்.

ஆதாரம்: ஏ.கே. ரிபாயி

அந்த வாலிபனின் நடை மிகக் கம்பீரமாக இருந்தது. பிக்ஷுக்களுக்குரிய காஷாய வஸ்திரத்தை அவன் அணிந்திருந்த போதிலும், காஷாயத்துக்கும் அவனுக்கும் எந்தவித சம்பந்தமுமிருக்க முடியாதென்பதை அவன் கைகளை ஆட்டிச் சென்ற தோரணை மட்டுமின்றி, அவன் இடையில் வயிற்றுக்கு நேர் எதிரில் வேஷ்டியின் மடிப்பில் செருகியிருந்த உடைவாளும் நிரூபித்தது. தீர்க்கமான நாசியுடன் சந்திர பிம்பத்தையும் பழிக்கும்படி எழில் மிகுந்து கிடந்த அவனுடைய குழந்தை முகத்தைச் சுற்றிலும் நன்றாக வெட்டப்பட்டுச் சுருண்டு சுருண்டு கிடந்த மயிர்கள் செந்தாமரையைச் சுற்றி வட்டமிடும் வண்டுகளைப் போல காட்சியளித்தன. அவ்வளவு அழகிய முகத்திலும் அழகாகவே திகழ்ந்த கண்கள் மட்டும் இரண்டு கூரிய ஈட்டிகள் போல ஜொலித்துக் கொண்டிருந்தன. மிகச் சுறுசுறுப்புடன் சதா அப்புறமும் இப்புறமும் சஞ்சரித்த அந்தக் கூரிய விழிகளில் இருந்த பார்வை, அந்த வாலிபனின் சீரிய ஆராய்ச்சி நோக்கத்தைக் காட்டியது. அவனுடைய செவ்விய உதடுகள் லேசாக மடிந்து கிடந்த மாதிரியிலிருந்து அவன் உள்ளத்தின் உறுதி நன்றாகத் தெரிந்தது. அந்த உறுதியை, திட்டமாகப் பாதம் பாவிச் சென்ற அவன் நடை நிரூபித்தது.

விஹாரத்தின் தலைமைப் பிக்ஷுவும் பின்னால் சென்ற வாலிபனும் ஒருவருக்கொருவர் எந்தவித வார்த்தையும் பேசாமலே சீரிய சிந்தனையுடன் நடந்து, தாழ்வாரங்களைத் தாண்டி, மூலையிலிருந்த ஒரு பெரிய அறைக்கு வந்து சேர்ந்தனர். அறையிலிருந்த பெரிய பாயை இழுத்துப் போட்டுக் கொண்டு பிக்ஷு உட்கார்ந்து, பக்கத்திலிருந்த மரப்பெட்டியையும் தமக்காக இழுத்துக் கொண்டார். பிறகு எதையோ மறந்து விட்டவர்போல் வெளியே சென்று பெரிய சாவிக் கொத்துடன் திரும்பி வந்து பழையபடி பாயில் உட்கார்ந்து, வெகு நேரம் ஏதோ மௌனமாக யோசித்துக் கொண்டிருந்தார். கடைசியாகத் தலைநிமிர்ந்து எதிரேயிருந்த வாலிபனை உற்று நோக்கியபோது, அவர் கண்களில் ஒரு பொட்டுக் கண்ணீரும் தேங்கி நின்றது. அதைக் காஷாயத்தின் தலைப்பால் துடைத்துக்கொண்ட பிக்ஷு கேட்டார், ''தம்பி! கடைசியாக விஹாரத்தை விட்டுப் போய்விடுவதென்று தீர்மானித்து விட்டாயா?'' என்று.

அவருடைய சொற்களில் தொனித்த துக்கத்தையோ கண்ணில் துளிர்த்த நீரையோ பார்க்கத் தவறாத அந்த வாலிபனும், உணர்ச்சி ததும்பும் குரலிலேயே பேசத் தொடங்கி, ''தந்தையே! எனக்கு நினைவு பிறந்த நாளிலிருந்து உங்களையும் கருணா மூர்த்தியான புத்தர் பிரானையும் தவிர வேறு பெற்றோர்களை நான் அறியேன். இந்த விஹாரத்தையும் சித்தார்த்தனின் திருவடி நிழலையும் விட்டு, தங்களுடைய அன்பு வலையிலிருந்து விலகிச் செல்ல எனக்கும் இஷ்டமில்லைதான். இருந்தாலும் பிறந்த கடன் ஒன்று இருக்கிறது; அது தங்களுக்கும் தெரியாததல்ல. என் கடமையை நான் நிறைவேற்ற வேண்டாமா?'' என்றான்.

''உன்னை அனாதரவாக விட்டுப் போன உன் தந்தைக்கு நீ செலுத்த வேண்டிய கடமை என்ன இருக்கிறது தம்பி? அதைவிடப் புத்த பகவானுக்கும் இந்த விஹாரத்துக்கும் நீ உன்னை அர்ப்பணித்துக்கொண்டால், உலகத்துக்கு எத்தனையோ நன்மை செய்யலாமே,'' என்றார் தலைமைப் பிக்ஷு.

''தந்தையே! துறவி மனபான்மை எனக்கு இன்னும் ஏற்படவில்லையே. அதற்கான வயதும் ஆகவில்லையே,'' என்றான் வாலிபன்.

''தம்பி! துறவறம் வயதைப் பொறுத்ததல்ல; மனத்தைப் பொறுத்தது. அதைப் பக்குவப்படுத்த நானிருக்கிறேன்,'' என்று சொன்னார் பெரியவர்.

''பக்குவப் படுத்துவதற்கும் கடவுளின் கருணை வேண்டுமல்லவா? களி மண்ணைப் பக்குவப் படுத்துவதற்கும் தண்ணீர் வேண்டும்; அதைப் போலத்தான் மனித மனமும். அதைப் பக்குவப்படுத்த மனித முயற்சியோடு கடவுளின் கருணையாகிற தண்ணீரும் கலக்க வேண்டும். இதை நீங்களே

ஆறு வித்தியாசங்கள் விடை:



1. இஸ்திரிப் பெட்டி
2. கதவு
3. விளக்குக் கம்பம்
4. சக்கரம்
5. படி
6. சலவைக்காரர் கால்

சொல்லியிருக்கிறீர்களே!'' என்று பதில் கூறிய வாலிபன். பெரியவர் முகம் சற்றே சுளிப்பதைக் கண்டான், அதற்குக் காரணம் அவனுக்குத் தெரியும். கடவுள் என்ற சொல் அவரது உள்ளத்தைச் சற்று உறுத்தியிருக்கிறது என்பதையும் அந்தச் சொல்லுக்குப் பதில் புத்தர் பிரான் கருணை என்று சொல்லியிருந்தால் அவருக்கு எத்தனையோ ஆனந்த மாயிருக்கும் என்பதையும் புரிந்து கொண்ட வாலிபன் உதடுகளில் லேசாகப் புன்முறுவலும் தோன்றியது.

அவன் உதடுகளில் உதயமான புன்முறுவலைக் கவனித்த பெரிய பிக்ஷுவும் முகச்சுளிப்பை விநாடியில் மறைத்துக் கொண்டு, ''தம்பி! புத்தர் கருணை மழைநீர் போன்றது. எல்லோருக்கும் சமமாகப் பெய்கிறது. உனக்கும் அது கிடைக்காது என்று ஏன் நினைக்கிறாய்?'' என்று கேட்டார்.

''தந்தையே, பிசகு புத்தபிரான் மீதல்ல. விழலில் நெல் விளையவில்லை யென்றால் அது மழையின் குற்றமல்ல,'' என்றான் வாலிபன்.

''உன் உள்ளம் விளையாட்டு உள்ளமல்ல, தம்பி! சகல சாஸ்திரங் ளையும் படித்திருக்கிறாயே,'' என்றார் பெரியவர் மீண்டும்.

''சாஸ்திரம் படித்திருக்கிறேன் உங்கள் கருணையால். ஆனால், சாந்தி பெறவில்லை. மனம் பெற்றோர்களைத் தேடத் துடிக்கிறது. உலக பந்தத்தில் இப்படிச் சிக்கியுள்ள மனம் துறவறத்துக்குத் தகுந்ததல்ல. காஷாயம் மட்டும் துறவறத்தின் அடையாள மென்றால், இப்பொழுதே நான் துறவி தான். அப்படி என்னைத் துறவியாக்கும் உத்தேசமிருந்தால் எனக்குச் சாஸ்திரங்களை மட்டும் கற்றுக் கொடுத்திருக்கலாம். எதற்காக வாட் போர்ப் பயிற்சி அளித்தீர்கள்?'' என்று வினவினான்.

''உன் தந்தைக்கு நான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற; அதுவும் நீ ஐந்து வயதில் இங்கு வந்தாய். இந்தச் சிறுவயதுக்குள் பெரிய தர்க்க சாஸ்திரியாகி விடுவாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை தம்பி. தவிர இத்தனை பாசம் உன்மீது எனக்கு ஏற்படும் என்றும் எதிர்பார்க்கவில்லை,'' என்று சொன்னபோது பெரியவரின் குரல் ஓரளவு தழுதழுக்கவும் செய்தது. உலக பாசத்தில் இப்படி சிக்கியதற்காக அடுத்த விநாடி வெட்கப்பட்ட பெரிய பிக்ஷு தமது உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு, ''தம்பி, உன் தகப்பனுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டேன். நான் பௌத்தனானாலும் உன் தந்தையின் விருப்பப்படி உனக்குச் சைவ சமய நூல்கள் அத்தனையும் கற்பித்து விட்டேன். வாட்போரிலும் உனக்கு இணையானவர்கள் இன்றைய தமிழ் மண்டலத்தில் இருக்க முடியாது...'' என்ற பெரியவரை இடைமறித்த வாலிபன், ''என்ன அப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று வினவினான்.

தலைமை பிக்ஷுவின் உதடுகளில் புன்சிரிப்பு லேசாகத் தாண்டவமாடியது. ''தம்பி! இந்தத் துறவியும் ஒரு காலத்தில் மனிதர்களை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்த மகாபாதகன் தான். ஆனால் புத்தர் பிரான் கருணையால் அந்தக் கொலைத் தொழிலிலிருந்து மீண்டேன். எனக்களித்த கருணையை புத்த பகவான் உனக்கும் ஒரு நாள் அளிக்கட்டும்!'' என்றார்.

அவர் பேச்சின் உட்கருத்தை விநாடியில் புரிந்துகொண்ட வாலிபன், ஆச்சர்யம் ததும்பும் கண்களுடன் அவரை உற்றுப் பார்த்தான். அந்த புத்த பிக்ஷுவும் ஒரு காலத்தில் பெரிய வீரராயிருந்திருக்க வேண்டுமென்றும் பிறகு உலகை வெறுத்துத் துறவறம் கொண்டிருக்க வேண்டுமென்றும் அவனுடைய தெள்ளிய புத்தியில் திட்டமாகப் பளிச்சிட்டது. தலைமைப் பிக்ஷு தற்பெருமையைக்கூட எத்தனை சாமர்த்தியமாக வெளியிட்டார் என்பதை நினைத்த வாலிபன் உள்ளூர லேசாக நகைத்துக் கொண்டான். 'உன்னைப் போல் வாள் வீரன் தமிழ் மண்டலத்தில் யாரும் இருக்க முடியாது' என்று அவர் தன்னைப் புகழ்ந்ததிலிருந்தே, குருவான அவருடைய தற்பெருமை



உள்ளடங்கி நின்ற விசித்திரத்தை நினைத்து வியந்தான். தலைமைப் பிக்ஷுவின் கூர்மையான புத்தியையும், ஆழ்ந்த ராஜதந்திரத்தையும், விசாலமான நோக்கத்தையும் பல சமயங்களில் அனுபவித்திருந்த அந்த வாலிபனுக்கு, அவரை விட்டுப் பிரியவும் மனமில்லை. ஆனால் வாழ்க்கையின் கடமையை நினைத்து அந்த விஹாரத்திலிருந்து வெளியேற நினைத்தான். அந்த எண்ணத்தை மீண்டும் வலியுறுத்த நினைத்த வாலிபன், பெரியவரைப் பார்த்துச் சொன்னான்: ''தந்தையே, தங்கள் சித்தப்படி நடக்கட்டும். என் வாழ்க்கைக் கடன் முடிந்து, புத்தர்பிரான் கருணையும் பிறக்குமானால் மீண்டும் இந்த விஹாரம் வந்து உங்கள் உத்தரவுப்படி நடக்கிறேன். அதற்கிடையில் தாங்கள் சொல்லிக் கொடுத்த வாள் பயிற்சிக்கும் வேலை கொடுக்க வேண்டாமா?''

பெரியவர் அவனை ஏறெடுத்துப் பார்த்து, ''தம்பி! வாழ்க்கையில் வாளுக்கு வேலை குறைவேயில்லை. மனிதர்களுக்கு ஆசையிருக்கும் வரையில் சச்சரவு உண்டு. சச்சரவிருக்கும் வரையில் போர்க்கருவிகளுக்கு வேலை உண்டு. அதுவும் கொந்தளிக்கும் நிலைமையிலுள்ள இந்தப் பாரத பூமியில் உன் வாளுக்கென்ன, புத்திக்கும் நிறைய வேலை கிடைக்கும். கௌடில்யனுடைய அர்த்த சாஸ்திரத்தைப் பூராவாகப் படித்திருக்கும் உனக்கு, ராஜதந்திரத்தைப் பற்றிச் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. புராணங்களைத் தலைகீழாக அலச வல்ல உனக்குப் போர்த் தந்திரங்களும் புதிதல்ல. யுத்த சாஸ்திர வியூகங்களில் உனக்குத் தெரியாதது என்ன இருக்கிறது?'' என்றார்.

''எல்லாம் ஏட்டுச் சுரைக்காய் தானே!'' என்றான் வாலிபன்.

''ஏட்டுச் சுரைக்காய், மனிதனுக்கு உரமூட்டும் உணவுக்குப் பயன்படாதிருக்கலாம் தம்பி; ஆனால் மனிதர்களைக் கொல்லக் கண்டிப்பாய்ப் பயன்படும். உலகத்திலே சிறிது காலம் சுற்று முன்னரே அனுபவத்தைப் பூரணமாகப் பெறுவாய். அந்த அனுபவத்துடன் சாஸ்திர ஞானமும் சேர்ந்தால் உன்னை வெல்ல ஒருவராலும் முடியாது. ஏதோ உன்னைத் தோத்திரம் செய்கிறேனென்று நினைக்காதே. உண்மையைச் சொல்லுகிறேன். இத்தனை அறிவாளியான ஒருவன் நாசவேலைக்கு உடந்தையாகப் போகிறாயே என்ற வருத்தத்துடன் சொல்கிறேன்,'' என்றார்.

''நான் என்ன, உடனே சைனியத்தில் சேரப் போகிறேனா?''

''நீ சேராவிட்டாலும் உன் நாடு விடாது.''

''என் நாடு எது?''

''இந்த நாடுதான். சோழ நாடு.''

''இத்தனை திட்டவட்டமாகச் சொல்லும் நீங்கள், ஏன் என் தகப்பனார் இன்னாரென்று சொல்ல மறுக்கிறீர்கள்?''

''மறுக்கவில்லை தம்பி? எனக்கே தெரியாது.''

''அப்படியானால் நான் வீரன் மகன் என்பது மட்டும் எப்படித் தெரியும்?''

''உன் தந்தையைப் பார்த்திருக்கிறேன். அவர் பெரிய வீரர் என்பது நெற்றியில் எழுதி ஒட்டியிருந்தது. அதோ உன் முகமேதான். சற்று முற்றியிருக்கும் அதோ அந்தக் கூரிய பார்வை அவருக்கும் உண்டு...'' என்று ஏதோ கனவில் பேசுவது போல் பேசிக்கொண்டு போன பெரியவர், ''தம்பி, அது மட்டுமல்ல; உனக்கு அவர் வைக்கச் சொன்ன பெயரும் எனக்குச் சந்தேகத்தை அளித்தது,'' என்றார்.

வாலிபன் கண்களில் திடீரென்று ஒரு பிரகாசம் தோன்றியது. ''எனக்கு என்ன பெயரை வைத்திருக்கிறீர்கள்? அதைக்கூட இருபது வருஷமாக மறைத்து விட்டீர்களே. இங்குள்ள பிக்ஷுக்களெல்லாம் என்னைத் 'தம்பி' என்றழைக்கிறார்கள். வெளியே ஊரில் போனால், 'சின்ன சாமியார்' என்றழைக்கிறார்கள். நீங்கள் வைத்த பெயர்தான் என்ன?'' என்று கேட்டான்.

தலைமைப் பிக்ஷு பதில் ஏதும்

அவன்: பாண்டியராஜன் ஔவையார் படம் எடுத்தால் என்ன பேர் வைப்பார்?

இவன்: கிழவி ரெடி.

—கௌரி

# என்ன ஷா, ட்ரிஷா?



குறைந்த செலவு, பொறுமையான வேகம், வசதியாக அளவான குடும்பம் செல்லக் கூடியது, இந்த ட்ரிஷா வாகனம் பினாங்கில் பிரபலம். விவரமறிந்த அனுபவமிக்க ட்ரிஷா ஓட்டுனர்கள் வெளிநாட்டுப் பயணிகளை ஒவ்வொரு இடத்துக்கும் கூட்டிச் சென்று அழகாக விவரித்து விளக்குகிறார்கள். இரவில் 'ட்ரிஷா ட்ரிப்' ஒரு சுகமான அனுபவம்.

—ச.வெ.ரா. மோகன்

சொல்லாமல், பக்கத்திலிருந்த மரப் பெட்டியைத் திறந்து பெரிய பச்சைக்கல் மோதிரம் ஒன்றை எடுத்து வாலிபனிடம் கொடுத்தார். விலை உயர்ந்த அந்த மோதிரத்தைப் பலமுறை திருப்பித் திருப்பிப் பார்த்த வாலிபன், அதன் உட்புறத்தைக் கூர்ந்து நோக்கினான். மிகுந்த பிரமிப்பால் அவன் கண்கள் மலர்ந்தன. உதடுகள் 'கரிகாலன்' 'கரிகாலன்' என்று இருமுறை உச்சரித்தன. வேத அத்யயனத்தின் போதுகூட உச்சரிக்காத அத்தனை பக்தியுடனும் உணர்ச்சியுடனும் அந்தப் பெயரை உச்சரித்த அந்த வாலிபனை நோக்கிய பெரியவர், ''ஆம் கரிகாலா! அதுதான் உன் தந்தை உனக்குச் சூட்டச் சொன்ன பெயர்!'' என்றார்.

''அப்படியானால் நான்...'' என்று ஏதோ கேட்க வாயெடுத்த வாலிபனை, மேற்கொண்டு பேசவிடாமல் தடுத்த தலைமைத் துறவி, ''கரிகாலா! சீக்கிரம் உடைகளை மாற்றிக் கொண்டு கிளம்பு. உனக்காகக் குதிரையொன்று வாசலில் நிற்கிறது. இங்கிருந்து கும்பகோணம் மடாலயத்துக்கு மாலைக்குள் போய்ச் சேரலாம். அங்கு ஒரு துறவி உன்னைச் சந்திப்பார். மீதி விஷயங்களை அவர் உனக்கு விளக்குவார்,'' என்றார்.

தந்தைக்கும் மேலாக மதித்து வந்த அந்தப் புத்தத் துறவியிடமும் இதர பிக்ஷுக்களிடமும் விடைபெற்றுக் கொண்டு சூடாமணி விஹாரத்திலிருந்து கிளம்பிய கரிகாலன் தலைமைப் பிக்ஷு சொன்னபடி கும்பகோணம் காவிரிக் கரையிலிருந்த புத்த மடாலயத்தருகே அன்று மாலையே வந்து சேர்ந்தான். மடாலயத்துக்கு எதிரே பிரவகித்துக் கொண்டிருந்த காவிரியின் அழகில் கருத்தை லயிக்க விட்டுக் குதிரை மீது கற்சிலையென உட்கார்ந்திருந்த கரிகாலனை, ''யாரப்பா அது? குதிரையை விலக்கி ஓட்டு!'' என்ற குரல் எச்சரித்தது. யாரது அப்படி அதட்டுவது என்று திரும்பிப் பார்த்த கரிகாலன் முன்பாக, ஒரு சைவத் துறவி நின்று கொண்டிருந்தார். அந்தத் துறவியால் தன் வாழ்க்கை எத்தனை தூரம் திரும்பப் போகிறதென்பதை அறியாத கரிகாலன், குதிரையை அசைக்காமலேயே அவருடன் பேச்சுக் கொடுக்கவும் தொடங்கினான்.

(தொடரும்)

காய் எண்ணெய் சேர்ந்த தைலம். உடலில் தேய்த்துக் குளித்தால் தோல் நோய்களைத் தவிர்க்கலாம். ஆண்மைப் பெருக்கத்துக்குத் தேனும் பேரீச்சம் பழமும் உதவும்.

## பெருமானாரின் வரலாற்றில் 100 ஏடுகள்

(இரண்டாம் அச்சு —தொகுப்பு: அப்ஸலுல் உலமா, ஏ.எஸ். அலாவுதீன் பாஜில் —பக். 44 —ரூ. 4 —காஜியார் புக் டிப்போ, முஸ்லிம் தெரு, எம். சாவடி, தஞ்சாவூர் 613 001).

''வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்து விடுவதே சிறந்தது; தலைக்கு எண்ணெய் இட்டு அழகாக வைத்துக்கொள்ள வேண்டும்; தலைவிரி கோலமாக இருப்பது சைத்தானுடைய செயல்; உலகாசையை விட்டால் அல்லா நேசிப்பார். மனிதர்களிடம் எதையும் எதிர்பார்ப்பதை விட்டால் மனிதர்கள் உம்மை நேசிப்பார்கள்.'' நபிகள் நாயகத்தின் அறிவுரைகள்.

## இதயவானில் உதய நிலவு

(தண்டு குண்ணத்தூர் தமிழன் —பக். 108 —ரூ. 9; இளவழகி பதிப்பகம், திம்மாம்பேட்டை அஞ்சல் (வழி) அம்பலூர், வாணியம்பாடி வட்டம், வ.ஆ. மா.)

பெரியார், அண்ணா, எம்.ஜி.ஆர்., ஆகியோரது வாழ்க்கை வரலாறுகள். எளிய நடையில். (பெரியார் மூன்று பேய்கள் என்று வர்ணித்தவை: 1. கடவுள், 2. சாதி · மதம்; 3. சனநாயகம்; ஐந்து நோய்கள்: 1. பிராம்மணன்; 2. பத்திரிகை; 3. அரசியல் கட்சி. 4. தேர்தல்; 5. சினிமா.)

## 3. விக்கிரமாதித்தன் கதை

(ஆறாம் அச்சு—பதிப்பாசிரியர்: முல்லை முத்தையா —பக். 356 —ரூ. 20. —வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை 600 017)

அசாதாரணமான, ஆனால் சுவையுள்ள பழங் கதைத் தொகுப்பு.

## அனந்தனைப் பாடிய அடியார்கள்

(நாகர்கோவில் கிருஷ்ணன் —பக். 428 —ரூ. 40 —மஹேஸ்வரி பிரசுரம், 45, மந்தவெளி லேன், சென்னை 600 004)

''வீணையும் கையுமாகக் காட்சியளித்த விண்ணவர் கோன் திருமுடியிலே நவரத்தின கிரீடம் ஜொலிக்க திருச் செவிகளிலே மகர குண்டலங்கள் பிரகாசிக்க, திருநெற்றியிலே திருமண் துலங்க, திருமேனியிலே பட்டு பீதாம்பரங்களும், நவரத்தின மணி மாலைகளும், துளசி மணி மாலைகளும் பிரகாசிக்க.....'' இப்படி வட்டிக் கடை வியாபாரியாக ஆரம்பித்து வைணவ பக்தராக மாறிய புரந்தரதாசர் கதையில் வருகிறது. 43 அடியார் வரலாறுகள்.

## நோயின்றி வாழ்க

(டாக்டர் அ. கதிரேசன் —பக். 348 —ரூ. 35 —நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41. பி., சிட்கோ எஸ்டேட், சென்னை 600 098)

''உங்கள் கைகள் காயமுற்றால், மிகச் சிறிய காயமானலும் உடனடியாக சுத்தமான தண்ணீரால் கழுவ வேண்டும். சுத்தமான துணியால் அல்லது வலைத் துணியால் காயத்தை மூட வேண்டும். இரத்தக் கசிவைக் கட்டுப்படுத்த, அடிபட்ட கையைத் தலைக்கு மேல் உயர்த்திவைக்க வேண்டும். காயத்தின் மேல் மசி, கருகிய துணி, களிம்பை போடக் கூடாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் பஞ்சை வைக்கக் கூடாது.'' இப்படி, பல நோய்களுக்கு, அனுபவமிக்க ஒரு டாக்டரின் ஆலோசனைகள்.

'தங்க நாகம்' படத்தில் அர்ஜுன்—சசிகலா

(விஷத்தை உறிஞ்சுகிறார் போலிருக்கிறது.)




‘வினோலியா’

# பரம்பரைச் சொத்து

அறுந்த செருப்பை இழுத்துக் கொண்டு பஸ் ஸ்டாப்பை நோக்கி நடந்தேன். ஷெல்ட்டரை ஒட்டிய கட்டைச் சுவரில் சில கல்லூரிப் பிரதிநிதிகள் இருப்பது நேராய்ப்

பார்க்காமல் தெரிந்தது. பெண்ணைக் கிண்டால் கிண்டல் ஆரம்பித்து விடுவார்கள். அதுவும் நான் இழுத்து இழுத்து நடக்கிறேன்...

''லேட்டா வர்றியே.. ஸ்வீட் வாங்கிட்டு வந்தியா..''

''நொண்டிக் கிளியாடா.. ஆனாலும் ஸ்மார்ட்.. இல்லே...''

''அசப்பில் டி.வி.சீரியல் ஏர் ஹோஸ்டஸ் ரீத்து மாதிரி இல்ல?''

கல்லூரிப் பிரதிநிதிகள் காமெண்ட்ஸ். அலட்சியமாய் ஒதுக்க நினைத்தாலும் ஏதோ ஒரு குரல் தூரத்துப் பழக்கம் போல் தோன்றியது. திரும்பிப் பார்க்க அசிங்கமாய் இருந்தது.

கண்டுபிடித்து விட்டேன்! சிவா... இந்தி கிளாஸ்மேட்...

பளிச்சென்று திரும்பினேன். நாலு பேரில் மூன்றாவதாக உட்கார்ந் திருந்தான் சிவா. ஒரு நிமிஷம் பார்த்து விட்டு...

''நீங்க... நீ... நிர்மலா தானே...''

தொப்பென்று குதித்து அவன் என்னைச் சமீபிக்க மற்றவர்களும் பின் பற்றினர்.

''ஆமாம்...''

''மை.. காட்.... ரொம்ப மாறிப் போயிட்ட நிர்மலா, கால்ல என்னாச்சு...''

''செருப்பு அறுந்து போச்சு...''

''ச்சுச்சு... ஸாரி நிர்மலா... நீன்னு தெரியாம கிண்டல் பண்ணிட்டம். பின்னாலேர்ந்து பாக்க அடையாளம் தெரியலை.. அத்தோட மூணு வருஷம் ஆச்சே பாத்து...''

''பரவாயில்லை. ஆமா, அதென்ன, தெரிஞ்சவள்னா கிண்டல் பண்ண மாட்டியா?''

''மாட்டோம். கிண்டல் தர்மம்.'' மூவரும் சிரித்தார்கள்.

''இந்தி கிளாஸ்ல படிச்சப்ப ரொம்ப சாதுவா இருந்தியே சிவா.''

''இப்ப என்ன கெட்டுப் போயிட்டேன்.''

''பின்ன.. பஸ் ஸ்டாப்ல நின்னு இப்படிக் கேலி பண்றியே, தப்பில்லையா? எனக்கே ரொம்பக் கஷ்டமா இருந்திச்சு..''

''சும்மா எப்படி உட்கார்ந்திருக்கிறது நிர்மலா, போரடிக்குமே.. அதனால நேரத்தைக் கொஞ்சம் ஜோடிச்சு விடறோம்... நாங்க என்ன டீன் ஏஜ் மட்டுமா கிண்டல் பண்ணறோம்... கிழவி போனாலும் கூப்டு வோம்...''

''சிவா பஸ்ஸு...''

அவசரமாய் உரையாடல் வெட்டப்பட்டு பஸ் ஏறினோம். நான் கடைசி சீட்டில் உட்கார, சிவா அண்ட் கோ என் பக்கமாய்த் திரும்பிப் படிக் கட்டில் நின்றது.

''ஸ்டெப்ஸுல நிக்காதப்பா...'' கண்டக்டர் குரல் யாருக்கோவென்று காற்றில் போனது.

''எங்க இறங்கணும் நிர்மலா?'' உருவிய ரூபா நோட்டுடன் சிவா கேட்க...

''டிபென்ஸ் காலனி... நானே வாங்கிக்கறேன்..'' என்றேன்.

''பரவாயில்ல.. நீ வர்றதுனாலத்தான் நாங்களே டிக்கெட் வாங்கறோம். இல்லன்னா வித்தவுட் தான்...''

---

''புடவை எடுக்கப் போன என் மனைவியை ரெண்டு நாளா காணோம்.''

''அடப் பாவமே, அப்புறம் என்னாச்சு?''

''மூணாவது நாள் புடவையை செலக்ட் பண்ணி எடுத்துட்டு வந்துட்டாள்!''

—பிரபாகர்



''ச்சே... ரொம்பக் கெட்டுப் போனே சிவா... சீசன் டிக்கெட் வாங்கறதில்லையா?''

''அதெதுக்கு வேஸ்ட். இதில இருக்கிற த்ரில் அதுல இருக்குமா...'' இன்னொருவன்.

''லைஃபை என்ஜாய் பண்ணணும் நிர்மலா...''

''இதெல்லாம் உங்கப்பாவுக்குத் தெரியுமா?''

''தெரியுமே... தினமும் கத்துவார். அடங்காப் பிடாரி... ஊர்ப்பொறுக்கின்னு...''

''பின்ன... சீராட்டு வாங்களாக்கும். எவ்வளவு கஷ்டப்பட்டுப் படிக்க வைக்கிறாங்க...''

சிவா இரைந்து சிரிக்க, பிரயாணிகள் பலர் திரும்பிப் பார்த்தனர்.

''எங்கப்பா மாதிரியே பேசறியே நிர்மலா. டீன் ஏஜ்ல லூட்டி அடிக்காதவன் மனுஷனா. தினம் தினம் என்னைத் திட்டறாரே எங்கப்பா, அவரு வயசுக் காலத்துல வாலில்லாமயா இருந்திருப்பாரு. மாந்தோப்பில மாங்கா அடிச்சதையும், போர்டிங் ஸ்கூல்ல தலகாணிய வச்சிப்பிட்டுப் போய் செகண்ட் ஷோ பாத்துட்டு வந்து செவுரு ஏறிக் குதிச்சதையும் கண்ணு விரிய எங்க கிட்ட சொல்லியிருக்காரு. அந்த மாதிரி எம்புள்ளைக்கு நான் சொல்ல வேண்டாமா? போனாப் போனா இன்னும் ரெண்டு மூணு வருஷத்துக்குத் தான் நாங்க இப்படி இருக்க முடியும்... அப்புறம் வேலைக்கி நாயா அலையணும்....''

''அதானே! இந்த வயசில தப்பெல்லாம் சகஜம்... என்னிக்கோ ஒருநாள் இவன் சிகரெட் தின்னதை இவங்கப்பா பாத்து வீட்ல ரகளை பண்ணியிருக்கார். தேவையா...'' தலையில் கட்டியிருந்த கர்ச்சீப்பை அவிழ்த்து உதறினான் மற்றொருவன்.

''ஆம் நிர்மலா... அந்தக் கத்து கத்தினார். அவரும்தான் ஸ்மோக் பண்றார். திருப்பிக் கேக்க எவ்ளோ நேரமாகும். மரியாதைக்கி விட்டேன்.''

''உங்கப்பாவுக்கு அம்பது வயசாவுது, குடிக்கிறார். உனக்கென்ன இப்பவே...''

''சிகரெட்டைப் பார்த்ததும் ஆடி ஓயற வயசுல கூட அவருக்கு ஆசை வரலாம்... நமக்கு வரப்படாதா...''

''என்னால இதெல்லாம் டைஜஸ்ட் பண்ணிக்க முடியலை சிவா. பெரியவுங்களோட அட்வைசை நாம கேட்டுத்தானாகணும்.''

''முடியாது நிர்மலா. எங்கப்பா தன்னோட அம்பதாவது வயசிலதான் ஆயிரத்து தொள்ளாயிரத்து எம்பத்து ஆறைப் பாத்திருக்கார். நாங்க எங்க இருபதாவது வயசிலேயே பாத்துட்டோமே... இருவது வயசில எங்களுக்குக் கம்ப்யூட்டர் மட்டுமா அறிமுகமாச்சு... வீடியோ கேமுந்தான். நிர்மலா, நாடு முன்னேறுதுன்னா... நல்லதுல மட்டுந்தான் முன்னேறுமா... எல்லாத்திலேயும்தான் முன்னேறும்.. நோய்க்கிருமிகள் இல்லாம சாப்புடணும், சுவாசிக்கணும்னு நெனைக்கிறது முட்டாள்தனம். எதிர்ப்பு சக்தியை உடம்புல வளர்த்திருந்தம்னா எந்தக் கிருமியும் உள்ள தங்காது. கண்டதுலயும்




எங்க ஆபீஸ் ஆண்டு விழாவுல பட்டிமன்றம் நடத்தப் போகிறோம்.

என்ன தலைப்பு..?

'ஆண்களுக்கு எளிதானது ஆபீஸ் வேலையா? வீட்டு வேலையா?'

—ஜா. ரவி

# கொசுக்களா?




உங்கள் குடும்பத்திற்கு இரவு முழுவதும் இனிய உறக்கத்தைத் தர பாதுகாப்புடன் பலனளிக்கும்

# ரூஸ்டர்

கொசுவர்த்திச் சுருள்– ''பி-ஃபார்ட்'' கொண்டது.

படுக்குமுன் ரூஸ்டர் சுருளைக் கொளுத்திவைத்தால் ஒரு மெலலிய புகைச்சுருள் கொசுக்களை இரவு முழுவதும் வராமல் தடுக்கிறது.ரூஸ்டர் ''பி-ஃபார்ட்'' கொண்டது. இந்த பி-ஃபார்ட் இப்பொழுதுதான் நிருபணம் பெற்ற ரிபெல்லண்ட். இது ஜப்பானில் தயார் செய்யப்படுகிறது. குழந்தைகளுக்கும் செல்லப் பிராணிகளுக்கும் பாதுகாப்பானது.

இரட்டைச் சுருள் எளிதாகப் பிரிகிறது.

எளிதில் உடையாது. அதிக புகை வராது.

## உபயோகக் குறிப்பு

இரட்டைச் சுருளைத் தளர்த்ததை மெதுவாக ஆட்டவும். பின் ஒரு சுருளின் உள்முனையை லேசாக கிழ்நோக்கியும் மற்றொரு சுருளின் உள் முனையை லேசாக மேல் நோக்கியும் அழுத்தி இரட்டைச்சுருளைத் தனித்தனியாகப் பிரிக்கவும். உலோக ஸ்டாண்டில் ஒரு சுருளைப் பொருத்திக் கொளுத்தவும். அது உடைந்து விட்டால் மேற் கண்டவாறு உடைந்த துண்டை ஒட்டவும்.





தயாரிப்போர்:

ஸன்—அப் பொடானிக்ஸ் பிரைவேட் லிட்., 788/1 ஜி.ஐ.டி.சி. வாபி, குஜராத்

RADEUS/SB/1-86

புரள்ற எங்களுக்கு மனசில எதிர்ப்பு சக்தி இருக்கு. போகப் போக விளையாட்டுப் புத்தியெல்லாம் போயிடும். அந்தந்த வயசுக் குணங்கள்ளாம் கட்டை வரைக்கும் வரணும்னு சட்டமா என்ன?''

ஒரு வயசான பெரியவர் கையில் துணிப்பையுடன் பின் பக்கப் படி அருகே வந்தார்.

''என்ன தாத்தா... எங்க எறங்கணும்...'' சிவா.

''கல்யாணி ஆஸுபத்திரிப் பா...''

''அதுக்குத்தானா ஐஸ் அவுஸி லேயே எந்திரிச்சுட்டே...''

சிரித்துக் கொண்டே பெரிய வருக்கு வழியை விட்டு விட்டுக் காலியாய் இருந்த சீட்டில் உட்கார்ந்து அரட்டையை தொடர்ந்தனர்.

பேச்சு எதையெதையோ தொட்டுத் திரும்பிக் கொண்டிருக்கையில் பஸ் லாயிட்ஸ் ரோடிலிருந்து ராதாகிருஷ்ணா ரோடுக்குத் திரும்பிக் கொண்டிருந்தது. படிக்கட்டில் நின்றிருந்த முதியவர் என்ன நினைத்தாரோ அல்லது என்ன செய்தாரோ, ஓடிக்கொண்டிருந்த பஸ்ஸிலிருந்து வெளியே சாய்ந்தார்.

நானும் சிலரும் போட்ட கூச்சலில் பஸ் பத்தடி போய் நிற்க, அதற்குள் சிவா அண்ட் கோ இறங்கி விழுந்த பெரியவரை நோக்கி ஓடியது.

விழுந்த அதிர்ச்சியில் கிடந்த அவரை ஒருவன் தூக்க, சிவா சோடாவுக்கு ஓட... அமர்க்களந்தான்...

சிராய்ப்புகளோடு தப்பித்திருந்த முதியவரைக் கண்டக்டர் போஸ் விட, பஸ் பிரயாணிகளெல்லாம் வண்டியை எடுக்கச் சொல்லி முணு முணுத்தனர்.

சிவா என்னிடம் வந்தான்.

''ஸாரி நிர்மலா... அடிபடலைன்னாலும் கிழவர் ரொம்ப பயந்திருக்கார்... கரகரன்னு கண்ணில தண்ணி வருது... அதுனால நாங்க அவரைக் கொண்டு போய் அவர் வீட்டிலே சேர்த்துடறோம்... நீ வீட்டுக்குப் போ. முடிஞ்சா இன்னொரு நாள் பாக்கலாம்... ஓகே... ஸீ யூ...''

நான் பதில் பேசாமல் பஸ் புறப்பட்டுவிட வெறுமனே கையசைத்து விடை கொடுத்தேன்.

ம்ஹூம்... என் காலத்திலாவது நான் இளைஞர்களைக் காயப்படுத்தக் கூடாது... புரிந்துகொண்டு வழிவிட வேண்டும்!

வெட்டியாய்ப் போன டிக்கெட்டுகளை வெறித்தேன்.

---

●● எல்லாப் பெண்களும் அம்மாவைக் கொண்டிருக்கிறார்கள். அதுதான் அவர்கள் துரதிர்ஷ்டம். எந்த ஆணும் அம்மாவைக் கொண்டிருப்பதில்லை. அதுதான் அவர்கள் துரதிர்ஷ்டம்.

●● நான் முற்ற முழுக்கத் தெரிந்து கொள்ள விரும்பும் ஒரே ஆள்: நான்தான்.

—ஆஸ்கார் ஒயில்டு



# மன்னன் மகள்

## 2. காவிரியின் எழிலும் துறவியின் தொழிலும்

சிருஷ்டிக் கடலிலே மனித வாழ்க்கை ஒரு மரக்கலம். அந்தக் கடலில் பயணத்தை இன்பமயமாக்கவல்ல தேமதுரத் தென்றலுண்டு, இஷ்டப்பட்ட திசையை நோக்கிப் பாய் மரங்களை உந்திச் செல்லும் பருவக் காற்றுகள் உண்டு. கரை சேராமலே கவிழ்ந்துவிடும் சுழல்களுண்டு. சுழன்று சுழன்றடித்துப் பயணத்தின் திசையை மாற்றி எதிர்பாராத கரையில் கொண்டு தள்ளிவிடும் சூறாவளிகள் உண்டு. எது எப்பொழுது நேரும், வாழ்க்கைப் பயணம் எப்படித் திசை மாறும் என்று மட்டும் சொல்ல யாராலும் இயலாது. மனித புத்திக்கு அப்பாற்பட்ட சிருஷ்டி விசித்திரம் அது. அந்த விசித்திரங்களில் ஒன்றினால்தான் கரிகாலன் அந்தச் சைவத் துறவியை அன்று






காவிரியின் கரையிலே சந்திக்கவும் அவருடன் சம்பாஷணையில் இறங்கவும் நேர்ந்தது.

நினைவு தெரிந்த நாளாகச் சூடாமணி விஹாரத்தையும் நாகைப்பட்டணத்துக் கடைத் தெருவையும் தவிர வேறெதையும் காணாத கரிகாலன் கண்களுக்குக் காவிரிக் கரையின் மாலைநேரம் விவரிக்க இயலாத பிரமிப்பை அளித்ததால், அவன் மனத்தைப் பரிபூரணமாகப் பொன்னியின் எழிலிலேயே லயிக்க விட்டுக் குதிரையின் மீதே நீண்ட நேரம் அசைவற்று உட்கார்ந்திருந்தான். குடமலையில் பிறந்த காவிரியன்னை, தன் சிறு பருவத்தில் அம்மலைப் பாறையில் தவழ்ந்து இறங்கி, சற்றுக் கீழேயிருந்த சிறு கற்களிலும் பாறைகளிலும் தளர்நடை புரிந்தது. பிறகு துள்ளியோடி, வழியில் சரணடைந்த பூமியையெல்லாம் வளம் தந்து வாழ்வித்துச் சோணாடு வரும்போது கன்னிப் பருவமெய்தியதால் எல்லையற்ற எழிலுடனும் நாணத்துடனும் சிறிது அடக்கமாகவே அழகு நடை நடந்து வந்தாள். குடமூக்கு எனப் பழங்கவிகளால் புகழ்பெற்ற கும்பகோணத்தின் கரையிலே நின்று அவள் வனப்பைக் கண்ட கரிகாலன் இத்தகைய ஒரு சிருஷ்டி அற்புதத்தைக் காணாமல் எதற்காக இருபத்து ஓராண்டுகள் கழிந்தோம் என எண்ணி ஏங்கி ஒரு பெருமூச்சு விட்டான்.

மாலை நேரத்து மஞ்சள் வெய்யில் மேலே பட்டதால் பசு மஞ்சளை அரைத்துப் பூசிய பருவமங்கையெனப் பளபளத்துக் கொண்டிருந்தாள் பொன்னி. அவளை இருபுறமும் தாக்கிய கரைகளிலிருந்து அவள் ஒடுங்கிச் சென்றது திருவிழாக் கூட்டத்தின் நடுவே சிக்கிய கன்னியர் நடக்கும் அழகு நடையை நினைப்பூட்டியது. அவள் சரீர அலைகளிலே கதிரவன் கிரணங்கள் பாய்ந்ததால் பளிச் பளிச்சென்று மின்னிய ஒளிகள் அவள் எத்தனை வைர வைடூரியங்களை அணிந்திருந்தாள் என்பதை நிரூபித்தன. தங்களை அணைத்தோடும் அந்தப் பெண்ணுக்கு மலர் சூட்ட எண்ணமிட்ட கரையோர மரங்கள், தென்றலில் லேசாக அசைந்தாடிப் புஷ்பங்களை அவள் மேனியிலே உதிர்த்தன, பொன்னியின் அலைக்கரங்களும் அந்தப் புஷ்பங்களைத் தாவிப் பிடித்து இடை இடையேயிருந்த குழல்களில் சேர்த்துக் குவித்து தமிழ்நாட்டின் அந்த இளவரசியின்

கூந்தலுக்குச் சின்னஞ் சிறு புஷ்பக் கிரீடங்களைத் தயாரித்துக் கொண்டிருந்தன. அந்த அலங்காரத்தால் மகிழ்ந்த பொன்னியும் சில சிறு வெள்ளைத் திரைகளை லேசாக எழுப்பி மந்தகாசம் செய்தாள். அந்த மந்தகாசத்திலும் பொன்னியின் நாணம் மிகுந்த அன்ன நடையிலும் எத்தனை எத்தனை கவிப்பெரு மக்கள் தங்கள் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறார்கள்!

பிற்காலத்தில் பொன்னி பெருக்கெடுத்த ஒரு சமயத்தில் 'பெண்கள் நாணத்தை விடலாகாது, நாணமென்னும் கரை உடைந்தால் நாட்டுக்கு நாசம்' என்ற பொருளை வைத்து,

''கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரை யழிந்து போனாளென் றந்நீர்
உரைகிடைக் கலாமோ உலகுடைய தாயே
கரை கடக்கலாகாது காண்''

என்று கம்பர் பெருமானும் பாடினார். ''கன்னியாகிய குமரியைக் கடலரசன் கவர்ந்து கொண்டதால் அவள் அழிந்த னள். கங்கையும் வழி தவறிவிட்டாள். ஆனால் உலகுக்கெலாம் தாயாயிருக்கும் உனக்கு, 'பொன்னி கரையிழந்து விட்டாள்' என்ற பெயர் வரலாகாது. ஆகையால் கரை கடக்காதே, வரம்பை மீறாதே,'' என்று இறைஞ்சிய இப் பாட்டினாலேயே, கம்பர் 'கவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டப் பெயரை அடைந்தார் எனப் புலவர் வரலாறு கூறும். இன்பத் தமிழ் கவிதைக்கும் அறிவுள்ள கவிப்பெரு மக்களுக்கும் அடங்கி, தர்ம முள்ளளவும் கரை கடக்காமலே கட்டழகுடன் பிரவகித்து வந்த பொன்னியின் எழிலிலே மனத்தைக் கரிகாலன் பறிகொடுத்து விட்டதில் விந்தை என்ன இருக்கிறது?

இந்தக் கதை நிகழும் காலத்தில் குடமூக்கு மிகச் சிறிய கிராமமாகவே இருந்து வந்ததால், பொன்னியாற்றைச் சுற்றிலும் வயல்கள் பெரிய மரகதப் பாய்களைப்போல் பரந்து கிடந்தன. சற்று தூரத்திலிருந்த சின்னஞ்சிறு வீடுகளை மறைத்தபடி நின்றன புஷ்பச் சோலைகள் பல. பக்கத்து வயல்களுக்குப் பாய்ந்த சின்னஞ்சிறு வாய்க்கால் நீரில் கயல் மீன்கள் துள்ளி விளையாடி, மாலை நேரத்து வெய்யிலில் பொன் மீன்களைப் போல் காட்சி அளித்தன. கோடைக்கால மாதலால் அந்த மாலை வேளையிலும் குட மூக்கின் இளமாதர்கள் மஞ்சள் நீராடிக் கொண்டிருந்தனர். வம்பு பேசியும் சிரித்துக் கொண்டும் கழுத்து வரையில் அமிழ்ந்து அமிழ்ந்து எழுந்ததால், அந்தப் பெண் களின் புடவைகள் நீர் மட்டத்தில் பெரிய குடங்களைப் போலாகி குடமூக்கு என்று அந்த ஊருக்குப் பெயர் வந்ததற்கு ஒரு காரணத்தைச் சிருஷ்டித்துக்கொண்டிருந் தன. இளமங்கைகளும் அந்தத் துணிக் குடங்களை விடாமல் அடியில் சேர்த்துப் பிடித்து நீரில் அழுத்தித் திளைந்ததால் காற்றுப் பொறிகள் நீர் மட்டத்தில் கிளம்பிவிடப் 'புஸ்' என்று சப்தித்தன. இந்த வேடிக்கையைக் கண்டு கலகலவென நகைத்த அந்தப் பெண்களோடு சேர்ந்து கொண்டு தனது சிற்றலைகளைப் படித் துறைகளில் மோதி 'க்ளுக் க்ளுக்'கென்று பொன்னியும் நகைத்தாள்.

அந்தச் சோணாட்டுப் பெண்களின் எழிலையும் பொன்னியில் நாள்தோறும் நீராடியதால் அவர்கள் மேனியிலிருந்த மெருகையும் கண்டு கரிகாலன் பிரமிப்படைந்தான். இருபத்தொரு வருடங்களாகப் பிரம்மச் சாரியாகப் புத்த மடாலயத்தில் காலம் கழித்த கரிகாலன் மனத்தை அந்தப் பெண்களின் உடலில் தோன்றிய அழகுச் சின்னங்கள் ஓரளவு அலைக்கழிக்கவும் தொடங்கின. இயற்கையாகவே திரண்டு எழுந்திருந்த அந்த இளமங்கையரின் எழில்

### சென்ற வாரம்

நாகப்பட்டணத்துக் கடற்கரையில் அமைந்திருக்கும் சூடாமணி புத்த விஹாரத்தில் தலைமைப் பிக்ஷுவிடம் விடைபெற்றுக்கொண்டிருக்கிறான் ஒரு வாலிபன். அவன் தந்தையின் விருப்பப்படி, ஐந்து வயது முதல் அவனை வளர்த்து, சைவ சமய நூல்களிலும் வாட்போரிலும் பயிற்சி கொடுத்து வந்திருக்கிறார் தலைமைப் பிக்ஷு. ஆனால் அவனுக்குத் தன் தந்தையைப் பற்றி எதுவும் தெரியாது. தன் பெயரைக்கூட அவன் அறியான். தலைமைப் பிக்ஷு அவனிடம் ஒரு பச்சைக் கல் மோதிரத்தைக் கொடுத்து அதில் கண்டிருக்கும் 'கரிகாலன்' என்பதுதான் அவனது பெயர் என்று தெரிவிக்கிறார். அத்துடன், கும்பகோணம் மடாலயத்தில் ஒரு துறவி அவனைச் சந்திப்பார் என்றும் கூறுகிறார். குதிரையின் மீதேறிப் புறப் பட்ட கரிகாலன் கும்பகோணம் காவிரிக் கரையில் ஒரு சைவத் துறவியைச் சந்திக்கிறான்.



'சொல்லத் துடிக்குது மனசு' படத்தில் கதாநாயகியாக அறிமுகமாகிறார் ப்ரியா. அசல் பெயர்: கற்பகவல்லி. படத்தில் இவருக்கு இரட்டை வேடம். —ரா.

பிரதேசங்கள், ஸ்நானமும் செய்து கரையில் எழுந்து நின்றபோது ஆடை ஆங்காங்கே உடலில் ஒட்டி நின்றதால் அளவுக்கு அதிகமாகவே கண்களைத் தாக்கத் தொடங்கின. எவ்வளவோ லாகவமாக அவர்கள் புடவைகளை உடலைச் சுற்றி வளைத்துக் கால்கள் மூலம் சேலையின் பெரும்பாகத்தைச் சோரவிட்டு எஞ்சியதை மார்பில் நன்றாக முடிப்பிட்டுக் கொண்டாலும், என்ன அடக்கவொடுக்குமாகப் படித் துறைகளில் புடவைகளைத் துவைத்தாலும் சிறிதும் கட்டுத் தளராத உடலமைப்புகளை அடியோடு மறைத்து வைக்க அந்த மங்கையரால் இயலவில்லை. 'இப்படி நாணத்தால் அவஸ்தைப் பட்டும் நெளிந்தும் வார்த்தையாடியும் சிரித்தும் நீராடியதால் எழுந்த இன்ப நாதத்திற்கு முன்னால் சற்றுத் தூரத்திலிருந்த புத்த விஹாரத்திலிருந்து எழுந்த புத்தம் சரணம் கச்சாமி எத்தனை அபச்ருதியாக இருக்கிறது' என்று எண்ணினான் வாலிபனான கரிகாலன். சங்ககால முதலாகப் பல தமிழ்க் கவிஞரும் வால்மீகி முதலாகப் பல வடமொழிக் கவிஞரும் சிருங்கார ரசத்தில் ஏன் திளைத்தார்கள் என்ற கேள்விக்கு விடையை அன்று குடமூக்கில் பொன்னியாற்றங்கரையில் புரிந்துகொண்டான் சாஸ்திரங்களைக் கரை கண்ட கரிகாலன்.

மாலை நேரம் சிருஷ்டித்த அந்த இந்திர போகத்தில் திளைத்திருந்த கரிகாலனைச் சைவத் துறவியின் அதட்டலான சொற்கள் இக உலகத்துக்கு இழுக்கவே, சற்றுக் கோபத்துடனேயே திரும்பிய கரிகாலன், துறவியை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு குதிரையைச் சற்றும் அசைக்காமலேயே கேட்டான். ''இந்தப் பாதையில் செல்ல வேறு இடமேயில்லையோ?'' என்று.

சைவத் துறவியின் கண்களிலும் லேசாகக் கோபம் உதயமாகத் தொடங்கியது. ''இதென்ன விதண்டா வாதம் தம்பி. குதிரையைப் பாதைக்குக் குறுக்கே நிறுத்தியிருக்கிறாய். விலக்கி ஓட்டு என்றால் வம்பு பேசுகிறாய். ராஜேந்திரன் ஆட்சியில் துறவிகளுக்குத் துன்பம் விளைவிப்பதற்கு என்ன




'ஆண்களை நம்பாதே' படத்தில்: பாண்டியன், செந்தில்.

தண்டனை தெரியுமா?'' என்று பிகுவை விடாமலே பேசினார் சைவத் துறவியும்.

''துறவியை யார் எதிர்த்தால் தண்டனை?'' என்று புன்சிரிப்புடன் கேட்டான் கரிகாலன்.

''யார் எதிர்த்தாலும் சரிதான். சாதாரணப் பிரஜையாயிருந்தாலும் படை வீரனாயிருந்தாலும் தண்டனை ஒரே தண்டனைதான். சிறைக் கோட்டத்தில் பத்து நாட்கள் போட்டுக் கிட்டி அடிப்பார்கள்!'' என்று சொன்ன சைவத் துறவி, தமக்கு ராஜேந்திர சோழன் ஆட்சியிலுள்ள உயர்ந்த அந்தஸ்தைக் குறிப்பிடும் முறையில், தமது நீண்ட தாடியையும் லேசாக உருவி விட்டுக் கொண்டார்.

துறவியின் அகந்தையைக் கண்ட கரிகாலன் உதடுகளில் மீண்டும் புன்முறுவல் தவழ்ந்தது. ''அது சரி, ஸ்வாமி! தாங்கள் சொல்லும் தண்டனைகளெல்லாம் சாதாரண மக்களுக்கு. துறவிக்கும் துறவிக்கும் சண்டை நேர்ந்தால் தண்டனை விவரம் எப்படி?'' என்று வினவினான்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்பதை அறியாத சைவத் துறவி, திருதிருவென்று விழித்தார். இருந்த போதிலும் மெள்ளச் சமாளித்துக் கொண்டு, ''அதைப்பற்றி நீ ஏன் கவலைப் படுகிறாய் தம்பி?'' என்று கேட்டார்.

கரிகாலன் சிரித்துக்கொண்டே குதிரையை விட்டு இறங்கிச் சேணத்தைப் பிடித்துக் கொண்டு துறவியை நோக்கி, ''ஸ்வாமி! நானும் ஒரு துறவிதான்; ஆகவே நம்மிருவருக்குள் சண்டை ஏற்பட்டால் விவகாரம் எப்படி என்பதை அறிய ஆசைப்பட்டேன்,'' என்றான்.

''நீ துறவியா!'' சைவத் துறவி அவன்மீது ஆச்சரியத்துடன் கண்களை ஓட்டினார்.

''ஆமாம் ஸ்வாமி.''

''உனது உடைக்கும் ஆசிரமத்துக்கும் சம்பந்தமில்லையே தம்பி.''

''நேற்றுத்தான் காவியைக் களைந்தேன். ஆசிரமத்தை இன்னும் களையவில்லை.''

''துறவி இந்த உடையை உடுக்கலாமா? அபசாரம், அபசாரம்!''

''காவி உடையில் பல அபசாரங்கள் நடக்கவில்லையா? வெள்ளை உடையில் எத்தனையோ நன்மைகள் நிகழவில்லையா? பற்றுதலுக்கும் உடைக்கும் என்ன சம்பந்தம் ஸ்வாமி? ஜடபரதன் கதை உங்களுக்குத் தெரியாததா?''

''ஜடபரதனா? அது யார்?''

துறவியின் இந்தக் கேள்வி காதில் விழுந்ததும், சற்று அதிர்ச்சியடைந்த கரிகாலன் துறவியை உற்று நோக்கினான். அவன் கண்களைச் சந்தித்த துறவியின் கண்கள் அச்சத்தால் சலித்தன. கரிகாலனின் கூரிய கண்கள் அவர் கண்களையும் கண்கள் மூலம் உள்ளத்தையும் ஆராயத் தொடங்கின. பிறகு அவன் பார்வை துறவியின் உடல் பூராவையும் ஒருமுறை அளவெடுத்தது. மனித சுபாவத்தை அரை நொடியில் எடை போடவல்ல ஆராய்ச்சி மனப்பான்மையுள்ள கரிகாலனுக்குத் துறவியின் தோரணையில் பெரிதும் சந்தேகமுண்டாயிற்று. பொதுவில் துறவியிடம் காஷாயம் ஒன்றைத் தவிர வேறு துறவிக்குள்ள குணம் ஏதும் இல்லையென்பதைக் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்தில் புரிந்து கொண்டான் கரிகாலன். துறவியின் தலையில் நாலாபுறத்திலும் பிய்த்துவிட்டது போல் தொங்கிக் கொண்டிருந்த முரட்டு

(தொடர்ச்சி 67'ம் பக்கம்)

மயிர்களும், நீள வளர்ந்திருந்த தாடியும், சல்லைப்பட்ட கண்களும் அவர் முகத்துக்குப் பெரும் குரூரத்தை அளித்தன. அவருடைய நீண்ட கைகள் நன்றாக உரம் பெற்றுக் கிடந்ததன்றிச் சில இடங்களில் காயத்தின் அடையாளங்களான தழும்புகளும் தெரிந்தன. சாமியார் அவசியமானால் சண்டையும் போட வல்லவர் என்பதை உணர்ந்து கொண்ட கரிகாலன், அவர் கன்னத்திலிருந்த வெட்டுக் காயத் தழும்பு முகத்தின் கொடூரத்தை எத்தனை தூரம் அதிகப்படுத்தியது என்பதைக் கவனித்தான். ஜடபரதனுடைய கதையைக் கூடத் தெரிந்து கொள்ளாமல் ஒருவர் எப்படி துறவியாக முடியும்? 'பற்றை அறுத்துக் கொள்வதற்கு உதாரணமாகச் சொல்லப் படுவது அந்தக் கதை தானே' என்று நினைத்தான். ஆகவே, அந்தத் துறவியைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள விரும்பிச் சம்பாஷணையைத் தொடர்ந்து, ''என்ன? ஜடபரதன் கதை உங்களுக்குத் தெரியாதா?'' என்றான் வியப்புடன்.

அவன் மனத்திலோடிய எண்ணங்களை அந்தத் துறவியும் புரிந்து கொண்டிருக்க வேண்டும். நிலைமையைச் சமாளிக்க ஆகாயத்தை நோக்கிப் பெருமூச்சுவிட்டு, ''அப்பனே! இந்த அடியேன் கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது மலையளவு. கற்ற அகந்தை இவனிடம் இல்லை!'' என்றார்.

சைவத் துறவி தன் மமதையைச் சுட்டிக்காட்டித் தப்ப முயல்வதைக் கண்ட கரிகாலனும், ''ஸ்வாமி! அந்தக் கைம்மண்ணளவில் ஜடபரதன் கதையும் சேருமே. துறவறம் மேற்கொண்டு காட்டுக்குச் சென்ற ஜடபரதன், மான் குட்டியிடம் ஆசை கொண்டு, பற்றுதல் மிகுந்ததால் மறு ஜென்மத்தில் மானாகப் பிறந்தான் என்பதைத் தாங்கள் அறியமாட்டீர்களா?'' என்றான்.

''ஓ! அதுவா? அறிவோம் அறிவோம்,'' என்று தலை அசைத்தார் துறவி.

தன் கச்சையிலிருந்து ஓர் ஓலையை எடுத்துப் பிரித்து அவரை நோக்கி நீட்டிய கரிகாலன், ''ஸ்வாமி! இதில் குறிப்பிட்டிருக்கும் புத்த மடாலயம் எங்கிருக்கிறது?'' என்று கேட்டான். அதை ஊன்றிப் படித்த சைவத் துறவியார் ஓலையை ஒரு கையில் பிடித்துக் கொண்டு, ''தம்பி! அதோ இருக்கிறதே அந்தப் புத்த

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. பூங்கொத்து
2. காப்பி டம்ளர் டபரா
3. ஆன்ட்டென்னா
4. வெற்றிலை
5. டி.வி.யில் உருவங்கள்
6. புத்தகங்கள்



மடாலயம்தான்,'' என்று தூரத்தே காவிரிக் கரையில் தனியாக நின்று கொண்டிருந்த புத்த விஹாரத்தைச் சுட்டிக் காட்டினார்.

அடுத்த விநாடி, கரிகாலன் பெரிதாக நகைத்தான். அவன் நகைப்பைக் கண்டு துறவியின் முகத்தில் அச்சம் படரவே அவர் கேட்டார், ''ஏன் தம்பி அப்படிச் சிரிக்கிறாய்?'' என்று.

''ஸ்வாமி! நான் ஓலையைத் தலைகீழாகத் திருப்பிக் கொடுத்தேன்; நீங்களும் அதைச் சுவாரஸ்யமாகப் படித்தீர்கள். தங்களுக்கு எல்லாம் தலைகீழ்ப் பாடம்தான் போல் இருக்கிறது!'' என்றான் நகைத்துக் கொண்டே.

''தம்பி! அடியேனுக்கு அட்சராப்பியாசம் கிடையாது. தநதை சொல்லித்தான் படிப்பு,'' என்றார் துறவி.

''பிறகு எப்படி அந்தப் புத்த மடாலயத்தைச் சுட்டிக் காட்டினீர்?'' என்று கேட்டான் கரிகாலன்.

''ஊகம் அப்பனே ஊகம். அட்சரத்தைக் காட்டாத ஆண்டவன், இந்த அடியவனுக்கு அறிவை ஏராளமாக அளித்திருக்கிறான். அதைத் தவிர.....'' என்று சற்று நிறுத்தினார் துறவி.

''தவிர?'' என்று வினவினான் கரிகாலன்.

''இந்தச் சிற்றூரில் வேறு மடமே கிடையாது,'' என்று சொல்லிப் புன்னகை பூத்தார் துறவி.

''ஸ்வாமி! தாங்கள் பெரிய பேர்வழி!'' என்றான் கரிகாலன்.

''இல்லாவிட்டால் இந்த உலகத்தில் குப்பை கொட்ட முடியாது, அப்பனே,'' என்றார் துறவியார்.

துறவியைக் கத்தரித்துக் கொண்டு கிளம்ப முயன்ற கரிகாலன், ''ஸ்வாமி! இந்தச் சோழ நாட்டில் தங்களைப் போன்ற துறவிகள் எத்தனை பேர் இருக்கிறார்களோ தெரியாது. எத்தனை பேரைச் சந்திக்கும் பாக்கியம்

தொலைந்தான்!

●● மனைவி வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்லாத போது கூட அவள் என்ன சொல்கிறாள் என்பதை உணர்ந்து கொள்கிற கணவன்—தொலைந்தான்.

—ரஸ்ஸல் கிரீன்

எனக்கு ஏற்படுமோ?'' என்று சொல்லிக் கொண்டே, குதிரைக் கடிவாளத்தைப் பிடித்து இழுத்துத் திருப்பி இரண்டடி எடுத்து வைத்தான்.

''தம்பி!'' என்று அவனை அழைத்து நிறுத்தினார் சைவத் துறவி.

''ஏன் ஸ்வாமி?''

''அந்தப் புத்த விஹாரத்தில் எல்லோரும் உனக்குத் தெரிந்தவர்கள் தானே?''

''ஆமாம்.''

''அப்படியானால் ஓர் உதவி செய்ய முடியுமா?''

''என்ன ஸ்வாமி?''

''அங்கு எனக்கும் இந்த இரவு தங்க இடம் தரச் சொல்கிறாயா?''

''நீங்கள் அங்கு ஏன் தங்க வேண்டும்? கிராமத்தில் எங்கும் இடம் கிடைக்காதா?''

''கிடைக்கும் தம்பி! ஆனால் துறவிகள் இருக்கும் இடம்தான் துறவிகளுக்குச் சௌகரியம். ஆனால், நான் சைவன்.''

''அதனாலென்ன, நானும் சைவன்தான்.''

''சைவர்களுக்குப் புத்த மடாலயத்தில் தங்க இடம் கொடுப்பார்களா?''

''ஏன் கொடுக்க மாட்டார்கள்? உலகத்தில் யாருக்கு எந்தத் துன்பம் நேரிட்டாலும் இதய ரத்தத்தைக் கொட்டும் கருணை வாய்ந்த சித்தார்த்தர் வழியில் வந்த பிக்ஷுக்கள், அண்டிவரும் யாருக்கும் இடம் கொடுக்க மறுக்க மாட்டார்கள்.''

''அப்படியானால் நானும் உன்னுடன் வருகிறேன், தம்பி!'' என்று கரிகாலனுடன் ஒட்டிக் கொண்டார் துறவி.

கரிகாலன் குதிரையைப் பிடித்துக் கொண்டு முன்னே செல்ல, துறவி அவன் பின்னே மெல்ல நடந்தார். நடக்கும்போது ஒரு கையிலிருந்த கமண்டலத்தை மற்றொரு கையிலிருந்த காவிப்பைக்குள் திணித்து, கயிற்றால் பையின் கழுத்தை நன்றாக இறுகக் கட்டிப் பையை இரு கைகளாலும் சேர்த்துப் பத்திரமாகக் கட்டிக் கொண்டார்.

புத்த விஹாரத்தை அவர்கள் அடையும்போது விளக்கு வைக்கும் சமயம். விஹாரத்தின் மத்திய மண்டபத்திலிருந்த புத்த பிரான் திருவுருவத்துக்கு முன்பாக விளக்கு ஏற்றப்பட்டு மாலை பூஜை தொடங்கி விட்டது. 'புத்தம் சரணம் கச்சாமி' என்று பிக்ஷுக்கள் கோஷித்தார்கள். விஹாரத்தின் வாயிலை அடைந்த கரிகாலனும், ''புத்தம் சரணம் கச்சாமி,'' என்று ஸ்மரித்தான். கூடவந்த சைவத் துறவி மட்டும், ''சச்சிதானந்தம், சச்சிதானந்தம்!'' என்று கூவினார்.

விஹாரத்தின் வாயிலில் இருந்த பூவரச மரத்தில் குதிரையைக் கட்டிவிட்டு உள்ளே நுழைந்த கரிகாலன் பிக்ஷுக்கள் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு வெளியே வரும்வரை மண்டபத்தின் முகப்பிலேயே காத்துக் கொண்டிருந்தான். கால் ஜாம நேரம் நடந்த பிரார்த்தனைக்குப் பிறகு வெளியே வந்த பிக்ஷுக்கள் கூட்டத்தின் நடுவே முகத்தில் திவ்விய தேஜஸ் ஜொலிக்க வந்த தலைமைப் பிக்ஷு மண்டப முகப்பில் நின்றிருந்த இருவரையும் நெருங்கி வந்து, ''நீங்கள் யார்? என்ன வேண்டும்?'' என்று மிகுந்த மரியாதையுடனும் அடக்கத்துடனும் விசாரித்தார்.

''ஸ்வாமி! நான் சூடாமணி விஹாரத்திலிருந்து வருகிறேன்,'' என்று சொல்லிக் கொண்டே அவரை வணங்கிய கரிகாலன், தன் கச்சையிலிருந்த ஓலையை எடுத்து அவரிடம் பயபக்தியுடன் கொடுத்தான்.

ஓலையைப் படித்த தலைமைப்

பிக்ஷு நீண்ட நேரம் சிந்தித்தார். ''தம்பி! இதில் கண்டிருக்கும் பணியை நிறைவேற்றுவது மிகக் கடினம். இரண்டு நாட்களுக்குள் ஒரு துறவியை வரவழைக்கி றேன். அவர் சொல்லும் தகவலைக் கொண்டுதான் உன் பிரயாணம் எங்கே என்று நிர்ணயிக்க வேண்டும். இரண்டு நாட்கள் இங்கேயே தங்கி இரு. கருணைக் கடலான புத்த பகவான் சரியான வழி காட்டுவார்!'' என்றார்.

''ஸ்வாமி! உங்கள் உத்தரவு. அத்துடன் இன்னும் ஒரு கோரிக்கை.''

''என்ன தம்பி?''

''இதோ என்னுடன் வந்திருப் பவர் சைவத் துறவி. எனது நண்பர். இவரும் என்னுடன் தங்க அனுமதி தர வேண்டும்.''

''அதற்கென்ன தம்பி! அப்படியே ஆகட்டும்,'' என்றார் பிக்ஷு.

தலைமைப் பிக்ஷு உத்தரவிட்டுச் சென்றதும், தம்மைத் தொடர்ந்து வரும் படி கரிகாலனுக்கும் சைவத் துறவிக்கும் சைகை செய்த ஓர் உபபிக்ஷு இருவரையும் மடாலயத்தின் கோடியிலுள்ள தனி அறை யில் தங்க வைத்தார். அந்த அறையில் அன்றிரவு ஏற்பட்ட விசித்திர அனுபவங்களை நினைத்து நினைத்துப் பிற்காலத்தில் கரிகாலன் பெரிதும் வியந் திருக்கிறான்.

குடமூக்கின் காவிரிக் கரையிலே சந்தித்ததால் கரிகாலனைப் பிடித்துக் கொண்ட சைவத் துறவிக்கும் கடும் பசியாய் இருந்திருக்க வேண்டும். புத்த விஹாரத்தில் அன்றிரவு படைக்கப்பட்ட அறுசுவை உண்டியைக் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் கபளீகரம் செய்த தன்றி, சாப்பிடும்போது ஒவ்வொன்றை யும் ருசித்தும், 'பிரமாதம், பிரமாதம்!' என்று வாய்விட்டுச் சிலாகித்துக் கொண்டும், இரண்டு பேர் உண்ணக்கூடிய உணவை உண்டு தீர்த்த அந்தத் துறவி யைக் கண்ட கரிகாலன், சைவத்துறவி ஒருவேளை கடோற்கசன் அவதாரமோ என்று சிரித்து வியந்தான். அவன் வியப்பு அன்றிரவு தூங்கும்போது இன்னும் அதிக மாயிற்று.

இரவு ஏறிவிட்டதால் புத்த விஹாரமே உறங்கிக் கிடந்ததுபோல் எங்கும் நிசப்தம் நிலவிக் கிடந்தது. அதைத் தவிர அறையில் வேறு வெளிச்சமே இல்லை. எல்லோரும் உறங்கிவிட்டார் களென்று தீர்ந்தபின், கரிகாலனுடன் படுத்திருந்த சைவத் துறவி மெல்ல எழுந் தார். அறையில் சற்று நேரம் மெல்ல உலாவினார். பிறகு அறையில் சாளரங்களை எல்லாம் நன்றாக அடைத் தார். மறுபடி படுக்கைக்கு அருகே வந்து கரிகாலன் முகத்தைக் கூர்ந்து கவனித் தார். கரிகாலன் மூச்சு ஒரே நிதானத்தில் வந்து கொண்டிருந்ததால், அவன் நன்றாக உறங்குகிறானென்று தீர்மானித்துக் கொண்ட சைவத் துறவி, ''இனி இந்தச் சனியனை எடுக்கலாம்,'' என்று சொல்லிக் கொண்டு, தலைமயிரில் கையை வைத்து அசக்கி அசக்கிச் சடை மண்டியிருந்த தலைமயிரையும், அத்துடன் இணைக்கப் பட்டிருந்த தாடி மீசை முதலியவற்றையும் மிகுந்த சிரமப்பட்டுக் கழற்றி வைத்தார்.

உறங்குவதுபோல் பாசாங்கு செய்து கொண்டு, துறவி வேறு பக்கம் திரும்பும்போதெல்லாம் கடைக் கண்ணால் அவர் விவகாரங்களைக் கவனித்து வியப்பும் கோபமும் ஒருங்கே பொங்கப் பல உணர்ச்சிகளின் வசப்பட்டு உள்ளம் குமுறிக் கொண்டிருந்த கரிகாலனை, அப்படியே சிலையெனச் சமைத்துவிடக் கூடிய இன்னொரு பணியி லும் இறங்கினார் சைவத் துறவி.

அவருடைய கடைசி நடவடிக்கையைக் கண்ட கரிகாலன் மிகுந்த பிரமிப்பாலும் கலவரத்தாலும் என்ன செய்வது என்று தெரியாமல் அடியோடு திணற ஆரம்பித்தான்.

(தொடரும்)



விருந்தாளி: ''ராத்திரி என் கட்டி லுக்கு மேலே ஒரு பந்து இருந்தது. இப்போ அதைக் காணோமே!''

இவர்: ''அது பந்து இல்லேங்க. மூட்டைப் பூச்சி!''

—பிரபா.

# கடன்



சீனு தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். வேதாசலத்துக்கு எரிச்சல்.

சீனு அவருடைய மாணவன். படிப்பு ஏறவில்லை. ஒரு பெட்டிக் கடை வைத்துப் பிழைத்துக் கொள்கிறேன் என்றான். அவர்தான் தெரிந்த இடத்தில் சிபாரிசு செய்து கடை வைத்துக்கொள்ள ஏற்பாடு செய்தார்.

அப்புறம் கடைக்குச் சரக்கு வாங்கிப் போட வேண்டும் என்று சம்பளம் வாங்கும் சமயம் பார்த்துக் கடன் கேட்டு வருவது வாடிக்கையாகி விட்டது.

''சார், நீங்க வேற சவுண்ட் பார்ட்டிகிட்ட எனக்குக் கடன் கொடுக்க ஏற்பாடு செய்யுங்க. நான் நாணயமாய் நடந்துக்குவேன். உங்களை விட்டுடறேன்,'' என்றான் சிரித்துக் கொண்டே.

அவன் உபத்திரவத்திலிருந்து விடுபட்டால் போதும் என்று வேறு ஒரு பைனான்சியரிடம் அவனுக்காகச் சிபாரிசு செய்தார். அப்புறம் அவன் வருவதும் நின்று போயிற்று.

வேதாசலமும் கடனை உடனை, வாங்கி மூன்று பெண்ணுக்கும் கல்யாணம் பண்ணிக் கொடுத்துவிட்டார். கடைசிப் பையன் காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். நடுவில் அவருக்கு அடுத்த ஊருக்கு மாற்றலானபோது சற்றுச் சிரமப்பட்டார். மனைவி கொஞ்சம் செலவாளி.

பெரிய பெண் பிரசவத்துக்கு வந்திருந்தது. சின்ன பெண்ணின் கல்யாணத்துக்கு வாங்கிய கடனுக்கு வட்டிப் பணம் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம். வேதாசலத்துக்கு முழி பிதுங்கிற்று.

அவரிடமே படித்து அவருடனே பி.டி. மாஸ்டராய் வேலை பார்க்கும் சிவராமிடம் அவ்வப்போது தனது இருப்பை அவர் சொல்வதுண்டு. ''சார், எனக்குத் தெரிந்தவர் ஒருவர் இருக்கிறார். நல்லவர். கொடுத்து உதவுவார். அவரிடம் உங்களைக் கூட்டிப் போகிறேன்,'' என்று ஒரு நாள் அழைத்துப் போனான் சிவராம்.

பெரிய பங்களா. வாசலிலே தோட்டம். போர்ட்டிகோவில் கார். மணக்க மணக்க வெளிவந்த அந்தப் பணக்காரரைப் பார்த்ததும் அசந்து போனார் வேதாசலம். சீனு!

''சீனு, நீ... நீ... எப்படி... கடன் வாங்கி...'' என்று தடுமாறினார்.

''ரொம்ப சிம்பிள் சார்,'' என்று சிரித்துக்கொண்டே விளக்கினான் அவன். ''சார், நான் அன்னிக்கும் உங்களண்டை நூறு இருநூறுன்னு கடன் வாங்கினேன். இன்னிக்கும் ஐம்பதினாயிரம், லட்சம்னு பாங்கியில கடன் வாங்கறேன். எவ்வளவு கடன் வாங்கறோம்கிறது கணக்கில்லை. அதை எதுக்கு வாங்கறோம்கிறதுதான் முக்கியம். நான் கடன் வாங்கறது பிஸினஸுக்கு. அதாவது பணத்தைக் கொண்டு பணத்தைப் பெருக்கறதுக்கு. ஆனா நீங்க? எண்ணிச் சுட்ட பணியாரமா சம்பளம் வாங்கற நீங்க, சொந்தச் செலவுக்கு வாங்கறபோது, பார்த்துத்தான் வாங்கணும். ஏன்னா நீங்க செலவு பண்ணா பண்ணதுதான். அது திரும்ப வராது சார், என்னை மன்னிச்சிடுங்க. நான் உங்களுக்கு வாத்தியார் மாதிரி என்ன என்னென்னமோ பேசிட்டேன்.''

''நீ வாத்தியார்தாம்பா,'' என்றார் வேதாசலம் தலை குனிந்து கொண்டு.

'தருமன்'

# சர்க்கரை

நர்ஸிங் ஹோமில் சற்றுமுன் விசாலி நுழைவதற்கும், தங்கையின் பிரசவம் முடிந்து அறையில் குழந்தையையும் தாயையும் கொண்டுவந்து விடுவதற்கும் சரியாயிருந்தது.

வாயெல்லாம் பல்லாக அம்மா கொஞ்ச, சிசு வராட் வராட்டென்று கத்திக்கொண்டிருந்தது.

"சர்க்கரை ஜலம் புகட்டுங்கள். ஸ்பூன் கொண்டு வந்திருக்கீங்க இல்லே?" என்று சொல்லிவிட்டுப் போனாள் நர்ஸ்.

அம்மா தான் கொண்டு வந்திருந்த பலவகை மூட்டைகளைப் பிரித்துத் தேடினாள்.

"என்னம்மா?"

"சர்க்கரையைக் காணோம்."

"ஏம்மா, பிரசவத்துக்கு அட்மிட் பண்ணறப்ப இன்னின்ன கொண்டு வரணும்னு அவங்கதான் கார்டிலே குறிச்சுக் கொடுத்திருப்பாங்களே?"

"நான்தான் எங்கேயோ கை மறதியா வச்சிட்டேன் என்கிறேனோ இல்லையோ? இங்கே பக்கத்து ரூம்களில் யாராவது கொண்டு வந்திருப்பாங்க. கேட்டுப் பார்."

விசாலி வெராந்தாவில் ஒவ்வோர் அறையாகப் போய்ப் பார்த்தாள். ஓர் அறையின் வாசலில் ஒரு பெரியவர் நின்றிருந்தார்.

"சார்... கொஞ்சம் சர்க்கரை வேணும்... குழந்தைக்குப் புகட்ட..."

அவர் தன் சட்டைப் பையிலிருந்த ஒரு சின்னப் பொட்டலத்தை எடுத்துத் தந்தார். அவர்கள் வீட்டில் யாருக்கோ பிரசவம் போலிருக்கிறது என்று எண்ணியபடி 'தாங்க்ஸ்' சொல்லிவிட்டு அம்மாவிடம் தந்தாள்.

"சர்க்கரை கிடைச்சிட்டுதா? எனக்குக் கொஞ்சம் வேணும்," என்றார் அந்தப் பெரியவர்.

'ஐயய்ய! சரியான அல்பமா இருக்கும் போலிருக்கே? இப்படியா ஒரு ஸ்பூன் சர்க்கரையைத் திருப்பிக் கேட்பார்கள்?' என்று மனத்துக்குள் நினைத்துக்கொண்டாள் விசாலி.

அறைக்குள் பார்த்து, "ஏம்மா, சர்க்கரைப் புட்டி அகப்பட்டுதா இல்லையா? இவருக்கு வேணுமாம். வந்து கேட்கிறார் பார்," என்று குரல் கொடுத்தாள்—கொஞ்சம் குத்தலாகவே.

"இதோ அகப்பட்டிட்டுது," என்று அம்மா கொண்டு வந்து தர, புட்டியிலிருந்து சிறிது எடுத்து காகிதத்தில் சின்னப் பொட்டலமாகக் கட்டி எடுத்துக் கொண்டார்.

கொஞ்ச நேரம் கழித்து, வெராந்தாவில் அந்தப் பெரியவர் நின்றிருந்தார். சும்மா போகிற மாதிரி போய் அவரிடம், "சர்க்கரை போதுமா? இன்னும் கொஞ்சம் வேணுமா?" என்றாள் விசாலி.

"இல்லை, ஒரு பொட்டலம் போதும்," என்றவர் தொடர்ந்து கூறினார்: "எனக்குச் சர்க்கரை வியாதி. அதாவது, உடம்பிலே சர்க்கரைச் சத்து திடீர் திடீர்னு குறைஞ்சிடும். ஒரே படபடப்பாகிவிடும். அந்த மாதிரி டயத்திலே டக்குனு கொஞ்சம் சர்க்கரையை வாயிலே போட்டுக்கொண்டால் அதுவே பெஸ்ட் மருந்து. அதுதான், இருந்த பொட்டலத்தைக் கொடுத்து விட்டோமே என்று திருப்பிக் கேட்டேன்."

விசாலிக்குத் தன் தலையில் நாலு போட்டுக் கொள்ளலாம் போலிருந்தது.

'பாப்பா ரகு'

# மன்னன் மகள்

## 3. செங்கதிர் மாலை

காவிரிக் கரையில் கண்ட விநாடியிலிருந்து அந்தக் கபடசன்னியாசியின் பார்வையிலும் போக்கிலும் கரிகாலன் கடும் சந்தேகம் கொண்டானானாலும், அந்தத் துறவி அத்தனை தூரம் போலியாயிருப்பாரென்று அவன் எள்ளளவும் கருதவில்லையாகையால், அன்றிரவு அவர் அறையின் சாளரங்களை அடைத்து, தான் உறங்குவது உண்மைதானா என்று சோதித்தபின், தலைச் சடையையும் தாடி மீசையையும் களைந்தெறிந்து தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்ட போது பெரிதும் அதிர்ச்சியே அடைந்தான். துறவி வேஷத்தை ஒரு மனிதன் அத்தனை நன்றாகப் போட முடியும் என்றோ, தலையோடும் கன்னத்தோடும் ஒட்டி இயற்கைக்கும் செயற்கைக்கும் வித்தியாசம் கடுகளவும் தெரியாத முறையில் தலைச்சடை, தாடி மீசைகளை அமைக்க முடியுமென்றோ கரிகாலன் அன்றுவரை கனவிலும் கருதவில்லையாதலால், அந்தச் சைவத் துறவி வேஷம் களைந்த முறையே பெரும் விசித்திரமாயிருந்தது அவனுக்கு. 'நந்தர்கள் மந்திரியான ராட்சசனை ஒழிக்கவும், சந்திரகுப்த மௌரியர்களை அரச பீடத்தில் அமர்த்தவும்; அர்த்த சாஸ்திரியான சாணக்கியன் தனது சீடர்களை இதே மாதிரி வேஷம் போட்டு எதிரி நகருக்குள் அனுப்பித் துப்பு விசாரித்தான், போலி யாகம் செய்தான், இன்னும் பல தந்திரங்களைச் செய்தான்' என்று சரித்திரத்தில் பலமுறை படித்த காலத்தில் 'இதெல்லாம் உண்மையாயிருக்க முடியுமா? காரியத்துக்கு ஒத்து வருமா?' என்று சந்தேகப்பட்ட கரிகாலனுக்கு, 'சாணக்கிய தந்திர இதிகாசத்தில் எதுவும் அனுபவத்திற்கு விரோதமில்லை; அத்தனையும் கடைப்பிடிக்கக் கூடிய தந்திரம்தான்' என்பதை வலியுறுத்திச் சந்தேக நிவர்த்தி செய்யவந்த ஆசான்போல் அன்றிரவு அந்த சைவத் துறவி விளங்கினார். அவர் எத்தனை எச்சரிக்கையுடன் நடந்து கொண்டாரென்பதையும், எத்தனை



லாகவமாக வேஷத்தைக் களைந்தாரென்பதையும் கவனித்த கரிகாலன், துறவியார் இத்தகைய வேடம் தரிப்பதோ, இத்தகைய பணியில் இறங்குவதோ இது முதல் தடவையல்ல என்பதை மட்டும் சந்தேகத்துக்கு இடமின்றிப் புரிந்து கொண்டான். தமது காரியங்களில் ஈடுபட்ட அந்தத் துறவி அடிக்கடி நமட்டு விஷமமாகச் சிரித்துக் கொண்டதையும், அவர் கண்களில் இயற்கையாக இருந்த குரூரம் விளக்கொளி அவற்றின் மீது பட்ட சமயங்களிலெல்லாம் அதிகமாகச் சுடர் விட்டுப் பிரகாசித்ததையும் கண்ட கரிகாலன், தான் கவனிப்பதைத் துறவியார் அறிந்தால் கொலைக்கும் அஞ்ச மாட்டார் என்பதையும் திட்டமாகத் தெரிந்து கொண்டதால், அவர் தன்னைப் பார்க்காத சமயங்களில் மட்டுமே கண்களைப் பக்கவாட்டில் அவர்மீது ஓட்டி, அவர் மேற்கொண்டு எத்தகைய பணியில் ஈடுபடுகிறார் என்பதை எச்சரிக்கையுடன் பார்க்கத் தொடங்கினான்.

கும்பகோணம் புத்த மடாலயத்தின் அந்த அறை சற்று விசாலமாகவே இருந்ததாலும், அறையின் ஒரு கோடியில் வைக்கப்பட்டிருந்த வெண்கல அகல் விளக்கிலிருந்து வெளி வந்த பிரகாசம் மிக மங்கலாகவே இருந்த படியாலும், துறவியின் நடவடிக்கைகளைக் கவனிப்பது சிறிது கஷ்டமாகவே இருந்தது கரிகாலனுக்கு. அந்தக் கஷ்டத்தை நிவர்த்திப்பதற்குத்தானோ என்னவோ துறவியார் அறைக் கோடிக்குச் சென்று, அங்கிருந்த வெண்கல அகலை எடுத்து வந்து கீழே படுப்பதற்காக விரித்திருந்த மான் தோலுக்குப் பக்கத்தில் வைத்துக் கொண்டார்.

பிறகு மீண்டும் ஒருமுறை எழுந்திருந்து சாளரங்கள் சரியாக மூடப்பட்டிருக்கின்றனவா என்பதைப் பரிசோதித்தார். அடுத்தபடி பூனை போல் அடிமேலடி எடுத்து வைத்துக் கரிகாலனுக்கு வெகு அருகில் வந்து அவனை நீண்ட நேரம் உற்றுப் பார்த்தார். கடைசியாக ஏதோ ஒரு முடிவுக்கு வந்து விட்டதுபோல் தமது மான் தோலின்மேல் வந்து உட்கார்ந்து கொண்டு பக்கத்திலிருந்த காவிப் பையை எடுத்து அதன் கழுத்திலிருந்த கயிற்றை அவிழ்த்து வாயை அகல விரித்து உள்ளேயிருந்த கமண்டலத்தை எடுத்து எதிரே வைத்தார். மீண்டும் கையைப் பைக்குள் செலுத்திக்

சாண்டில்யன்

சிறு உடைவாளொன்றை வெளியில் எடுத்து அதன் கைப்பிடியிலும் உறையிலு மிருந்த நவரத்தின வேலைப்பாட்டைக் கண்டு பெரிதும் ரசித்தார்.

உறையிலிருந்து உடைவாளை உருவி அதன் நுனியையும் கூர் பார்த்து, இடதுகையில் பக்கவாட்டிலும் இருமுறை தீட்டிப் பார்த்தார். மற்றொரு முறை அந்த உடைவாளின் பிடியை வலது கையால் இறுகப் பிடித்து உயர்த்தி, அதை விளக்கொளியில் கவனித்து மகிழ்ந்த தல்லாமல், அதை விரல்களுக்கிடையில் அனாயாசமாகப் பலவிதமாகச் சுழற்றித் தமக்கிருக்கும் வாட் பயிற்சியின் வன்மையைக் கண்டு தாமே சந்தோஷப் பட்டார். அந்தச் சந்துஷ்டிக்கு அடையாள மாக அவருடைய இதழ்களில் புன்முறுவ லொன்றும் லேசாகப் படர்ந்தது.

அந்தப் போலித் துறவியின் ஒவ்வொரு நடவடிக்கையையும் வெகு ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண் டிருந்த கரிகாலன், அவர் அந்த உடை வாளைப் பார்த்து மகிழ்ந்த விதத் திலிருந்தும், அதன் பிடியை விரல்களுக் கிடையில் வைத்துச் சுழற்றி விளையாடிய மாதிரியிலிருந்தும் துறவியும் உடைவாளும் இணைபிரியா நண்பர்களென்பதையும், தான் விழித்துக் கொண்டிருந்த விஷயம் தெரிந்தால், அந்த உடைவாள் தன் மார்பில் சந்தேகமறப் பாய்ச்சப்படு மென்பதையும் திட்டமாக அறிந்து கொண்டான். ஆகவே மூச்சைக்கூடத் தாராளமாக விடாமல் தன்னை நிதானப் படுத்திக்கொண்டு அவருடைய அடுத்த நடவடிக்கையைக் கவனிக்கலானான். ஆனால், துறவி அடுத்த நடவடிக்கையை அவ்வளவு சீக்கிரத்தில் துவங்கவில்லை. காவிப் பைக்குள் கையைவிட்ட வண்ணம் நீண்ட நேரம் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தார். பிறகு ஒருவழியாக முடிவுக்கு வந்தவர்போல் தானே தலையை அசைத்துக்கொண்டு பையிலிருந்து கையை வெளியே எடுத்தார். அவ்வளவுதான். அந்த அறையே இந்திர ஜாலமாக மாறியது.

சாஸ்திரங்களை அணு அணுவாய்ப் படித்தவனும், எந்தச் சந்தர்ப்பத்திலும் நிதானத்தை இம்மிகூட இழக்காதவனுமான கரிகாலன் சிந்தனையே, அந்த இந்திர ஜாலத்தால் பெரிதும் குழம்பி நின்றது. அவன் கண்களில் சொல்லவொண்ணாத பிரமை தட்டினாலும் கண்களை அகல விரித்துப் பார்ப்பது அபாயமானதால், அரைக் கண்ணை மூடியே புத்த விஹாரத்தின் அந்த அறையின் தளத்தை அண்ணாந்து நோக்கினான். அறையே ரத்த வர்ணத்தில் ஆழ்ந்து கிடந்தது. சுவர்கள் ரத்த மயம்! சுவர்களின் மூலைகளிலும் நடுவிலும் நிறுத்தப்பட்டிருந்த தூண்கள் ரத்த மயம்! சாளரங்களுக்குத் தீட்டப்பட்டிருந்த பச்சை வர்ணத்திலும் ரத்தம் பாய்ந்தது போன்ற ஒரு பிரமையான காட்சி! அறையின் தளத்தில் ஒட்டியிருந்த கண்டிக் கற்களுக்குமேல் நன்றாக அரைத்த சுண்ணாம்பினால் வழவழவென வெள்ளை வைக்கப்பட்டிருந்த இடத்தில் மஞ்சள் வர்ணம் தீட்டப்பட்டு, அதில் சில வெண் தாமரை மலர்களும், புத்தர் பிரான் வாழ்க்கையில் சம்பந்தப்பட்ட பிம்பங் களும் எழுதப்பட்டிருந்தன. அந்த வெண் தாமரைகள் செந்தாமரைகளாக மாறின. சித்தார்த்தரின் இளம் குழவியின் மருண்ட விழிகள் கூடத் திடீரென்று சிவப்பு ஏறி நெருப்புப் பொறிகள் போல் ஜொலித்தன. சித்தார்த்தரின் மனைவியின் கண்கள் கீழ் நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்ததால் அந்த அன்னையின் கண்கள் தப்பினவே யொழிய அவள் ஆடை தப்பாமல் திடீரெனச் சிவந்து நெருப்பைக் கக்கத் தொடங்கியது. அறை முழுவதும் அக்கினியின் சொரூபம்! ரத்த வர்ணத்தின் கோரம்!

கோரத்திலும் எல்லையற்ற இன்பம் கலக்க முடியும் என்பதைக் கரிகாலன் அறிந்துகொண்டான். அத்தனை ரத்த வர்ணத்திலும் திடீரென மாறிய அந்த அறையின் அழகு எத்தனை மடங்கு ஏறியதென்பதைக் கரிகாலன் கவனித்தான். தன்மேல் தவழ்ந்து ஓடிய செவ்விய ஒளி தன் கைகளை எத்தனை சிவப்பாக அடித்ததென்பதையும், பிரயாண அலுப்பை அந்த ஒளி எத்தனை தூரம் துடைத்தெறிந்துவிட்ட தென்பதையும் உணர்ந்த அந்த

2
3
4
5
6

"ஜோதிடரே! இளவரசன் பிற்காலத்தில் பெரும் வீரனாவான் என்று எதை வைத்துக் கூறுகிறீர்?"

"மன்னா! அவர்தான் இந்த இளம்பிராயத்திலேயே எதற்கெடுத் தாலும் வாள் வாள் என்று கத்து கிறாரே!"

—டாக்டர் கு. ராஜசேகர்.

வாலிபனுக்கு, நாகரத்தினங்களின் மகிமையைப் பற்றிப் புராணங்களில் வர்ணித்திருப்பது எத்தனை தூரம் உண்மை என்பது தெளிவாகத் தெரிந்தது. தன் மேல் விழுந்த செவ்வொளி தன் அழகிய விரல்களைச் சிவப்பாக அடித்ததன்றி நகங்களுக்கும் மருதாணி இட்ட பிரமையை அளிப்பதைக் கண்டு வியந்தான். அத்தனை இந்திர ஜாலத்தை திடீரென விளைவித்த வஸ்து எதுவாயிருக்குமென்பதை அறிய அதுவரை ஒருகளித்துப் படுத்திருந்தவன், சற்று மல்லாக்கப் புரண்டு துறவிக்காகக் கண்களை நன்றாக ஓட்டினான். சாதாரண சமயமாயிருந்தால் அவன் அசைந்ததைக் கூடத் துறவி கவனித்திருப்பார். ஆனால் அவன் எதைக் கண்டு பிரமித்தானோ, எதைக் கண்ட மாத்திரத்தில் அவன் கண்கள் கூசினவோ, அதை இமை கொட்டாமல் பார்த்து மனத்தை அப்படியே அந்த வஸ்துவிலேயே துறவியும், லயிக்கவிட்டிருந்தபடியால் அவன் திரும்பியதையோ தம்மையும் தம் கையிலிருந்த அந்த இரத்தின ஆரத்தையும் பார்த்துப் பிரமித்துக் கொண்டிருப்பதையோ அவர் அடியோடு கவனிக்கவில்லை. காவிப் பையிலிருந்து எடுத்த இரத்தின ஆரத்தை இடது கையில் தூக்கிப் பிடித்தது முதல் அவரும் அதன் அழகில் ஈடுபட்டு உலகத்தையே மறந்துவிட்டிருந்தார்.

பாரதத்தின் சரித்திரத்தைக் கரதல பாடமாகப் படித்திருந்த கரிகாலன், அந்த இரத்தின மாலையைப் பார்த்த விநாடியிலேயே அதன் மர்மம் பூராவையும் உணர்ந்து கொண்டானாதலால், அவன் ஆச்சரியம் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகப் பெருகியது. பெரிய ருத்திராட்சத்தின் அளவுக்கிருந்த இருபத்தைந்து ரத்தினங்களுடன் சிவப்பு ஜுவாலையை நெருப்பெனக் கக்கிக் கொண்டிருந்த அந்த அபூர்வ மாலையைப் பார்த்த கரிகாலன் மனம் 'செங்கதிர் மாலை, செங்கதிர் மாலை' எனப் பலமுறை உச்சரித்தன. அந்த மாலையைப் பற்றிப் புலவர் பெருமக்கள் பாடியதும், இராஜேந்திரசோழன் கல்லில் வெட்டி வைத்ததுமான ஒரு பாட்டும் அவன் சித்தத்தே சுழன்றது.

"எதிபடை கேரளன் முறைமையிற் சூடும்
குலதன மாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவல் பல்பழந் தீவும்"

என்ற வரிகள் திரும்பத் திரும்ப அவன் கருத்திலே பவனி வந்தன. பரகேசரி வர்மனான இராஜேந்திர சோழன், சேர நாட்டின் மீது படையெடுத்து, அந்நாட்டரசன் குலத்தே பரம்பரையாயிருந்த மணிமுடியையும், சூரியனுடைய காலைக் கதிர்கள் போல் ஜொலிக்கும் இயல்புடைத்தானதால் 'செங்கதிர் மாலை' எனப் புகழப்பட்டதும், தெய்வீக சக்தி உடையது எனப் பாராட்டப்பட்டதுமான இரத்தின ஆரத்தையும் கைக் கொண்டுவந்தான் என்ற சரித்திர வரலாற்றை நினைவு படுத்திக்கொண்ட கரிகாலனுக்கு, 'அதே செங்கதிர் மாலைதான் இது' என்பதை நிர்ணயிக்க அதிக நேரம் பிடிக்கவில்லை. அவன் ஊகத்தை ஊர்ஜிதம் செய்ய அந்த மாலையின் பிரகாசமே போதும். ஆனால் சந்தேகத்துக்கு இடம் வைக்காத முறையில் இன்னொரு சாட்சியம் மாலையின் அடிப்புறத்திலிருப்பதைக் கரிகாலன் கண்கள் கண்டன.

அந்த இரத்தின மாலையின் அடிப்பாகத்தில், சுற்றிலும் பத்தரை மாற்றுப் பசும்பொன்னால் அமைக்கப்பட்ட விளிம்புடன் காட்சியளித்தது தாமரை வடிவமுள்ள பதக்கம். மாலையுடன் இணைக்கப்பட்டிருந்த அந்தப் பதக்கமும் மாலையின் அளவுக்குத் தகுந்தபடி மிகப் பெரிதாக உள்ளங்கை அகலத்துக்கு இருந்தபடியால், அதிலும் சில இரத்தினங்கள் புதைந்து கிடந்தன. அந்த இரத்தினங்களுக்கிடையே மரகதப் பச்சையையும் வைரத்தையும் மாறி மாறிப் பொருத்தியிருந்ததால் சங்கிலியின் வடிவமொன்று திகழ்ந்தது. அகல் விளக்கின் மங்கலான ஒளியில் கூட அந்த ஜாதி வைரங்களும் விலை மதிக்க முடியாத



மரக்தப் பச்சைகளும் பலவித வர்ண ஜாலங்களைக் கிளப்பின.

இரத்தின மாலையின் அற்புதத்திலும், அறை முழுவதும் அதன் ஒளி சிருஷ்டித்த இந்திர ஜாலத்திலும், அதன் சரித்திரத்தை நினைத்துப் பார்த்ததால் சிந்தையில் எழுந்த எண்ண அலைகளாலும் நீண்ட நேரம் சூழ்நிலையை மறந்துவிட்ட கரிகாலன் மீண்டும் சுயநிலைக்கு வந்து, ‘இராஜேந்திர சோழன் பொக்கிஷத்திலிருக்க வேண்டிய இந்தத் தெய்வீக மாலை இந்தப் போலித் துறவியின் கையில் எப்படி வந்தது? இவன் திருடனா, ஒற்றனா?’ என்று சிந்திக்க ஆரம்பித்தான். இராஜேந்திர சோழன் பொக்கிஷத்திலிருந்து மாலையை எடுப்பதும் அவ்வளவு சுலபமல்ல என்பதைக் கரிகாலன் அறிந்திருந்தானாகையால், போலித் துறவி சேர நாட்டு ஒற்றனாகத்தானிருக்க வேண்டுமென்ற முடிவுக்கும் வந்தான். அத்துடன் இராஜேந்திர சோழனைச் சுற்றிச் சேர நாட்டு ஒற்றர்கள் இன்னும் பலர் இருக்க வேண்டுமென்ற முடிவுக்கும் வந்தான். அத்துடன் தனிப்பட்ட ஒருவனால் மாலையைக் கிளப்புவதும் எளிதல்லவென்றும் தீர்மானித்துக் கொண்டான். பல ஒற்றர்களுடைய உதவியால் அபகரிக்கப்பட்ட இந்த மாலையை, இந்தப் போலித் துறவி எங்கு கொண்டுபோக உத்தேசித்திருக்கிறார் என்பதை அறியவும் கரிகாலன் ஆசைப்பட்டானாகையால் அந்த விநாடியில் எத்தகைய நடவடிக்கையும் தான் எடுப்பது உசிதமல்லவென்பதையும் முடிவு செய்து கொண்டான்.

‘ரத்தின ஆரத்தைச் சோழ நாட்டுக்குள் ஒளித்து வைக்க முயல்வது சூரியனைப் பைக்குள் வைத்துக் கட்டி ஒளிக்க முயல்வதற்குச் சமானம்—எப்படியும் இந்தத் துறவியைத் தேடி இராஜேந்திரன் வீரர்கள் எங்கும் திரிவார்கள். அவர்கள் வரும் வரையில் இந்தத் துறவியை நமது கண்ணிலிருந்து தப்ப விடக்கூடாது’ என்று கரிகாலன் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

தவிர, அந்தத் துறவி தன்னுடன் ஒட்டிக்கொண்ட காரணத்தையும், புத்த விஹாரத்தில் தன் உதவியால் தங்க அவர் ஏற்பாடு செய்து கொண்டதற்கான அவசியத்தையும் அவன் சந்தேகமறப் புரிந்துகொண்டான். இராஜேந்திர சோழன் சைவ சமயப் பற்றுள்ளவனாயிருந்தாலும் புத்த விஹாரங்களுக்கு எத்தகைய அவமரியாதையும் விளைவிக்கக் கூடாதெனக் கண்டிப்பாக உத்தரவிட்டிருந்தானாகையால், புத்த விஹாரத்தில் தங்கினால் இராஜேந்திர சோழனுடைய படை வீரர்கள் கூட இஷ்டப்படி அங்கு நுழைந்து சோதனை செய்ய முடியாதென்பதைப் போலித் துறவி நன்றாகப் புரிந்துகொண்டே, தன்னை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டாரென்பதையும் கரிகாலன் தெள்ளெனத் தெரிந்துகொண்டான். அந்த விநாடி முதல், அந்தச் சைவத் துறவியைத் தானும் விடாப்பிடியாகக் கண்காணிக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்ட கரிகாலன், பெற்றோரைத் தேடிச் சூடாமணி விஹாரத்திலிருந்து புறப்பட்ட அன்று மாலை முதலாகவே தான் பெரிய அரசியல் சுழலில் சிக்கிக்கொள்ள நேரிட்டதை நினைத்து வியந்தான். ‘உலகம் பொல்லாதது; அங்கு நீ எதற்காகப் போகவேண்டும்?’ என்று சூடாமணி விஹாரத்துத் தலைமைப் பிக்ஷு எச்சரித்தது எத்தனை சரியாகப் போயிற்று என்று நினைத்துப் பெருமூச்சும் விட்டான்.

சைவத் துறவியும் நீண்டதொரு பெருமூச்சை விட்டு, இரத்தின மாலையைத் தாம் உட்கார்ந்திருந்த மான் தோலில் தமக்குப் பக்கத்தில் வைத்துக்



## குமரிக்கு ஒரு குழப்பம்

டெல்லியில் சில நாட்களுக்கு முன்பு பிரதமர் ராஜீவ்காந்தியைச் சந்தித்தார் குமரி அனந்தன்.

காங்கிரஸ் கட்சியோடு அனந்தனின் கட்சியும் (கா.கா.தே.க.) இணைந்து, புதிய பொறுப்பு அவருக்குத் தரப்படக்கூடும் என்று பேச்சு அடிபட்டது.

சில மேலிடத்துக் காங்கிரஸ் பெரும் புள்ளிகளும் குமரி அனந்தனை வரவேற்கிற மாதிரி நடந்து கொண்டனர்.

இப்போது அதே காங்கிரஸ் புள்ளிகள் அனந்தனிடம் அசட்டையாக இருக்கிறார்களாம்.

காங்கிரசுக்கு மீண்டும் இவர் வருவதற்கு யார் முட்டுக்கட்டையாக இருந்திருப்பார்கள் என்று புரியாமல் அனந்தன் இப்போது குழம்பிப் போயிருக்கிறாராம்.

—லிப்ரன்.

கொண்டு, காவிப் பைக்குள்ளிருந்து ஒரு காய்ந்த பாக்குப் பட்டையை எடுத்து அதில் இரத்தின மாலையை வைத்து நன்றாக மடித்து, அதன் மேல் ஒரு கிழிசல் துணியையும் போட்டுக் கட்டினார். அந்தக் கிழிசல் முடிப்பை மட்டும் அப்புறமாக வைத்துவிட்டு, உடைவாள் கமண்டலம் முதலியவற்றை மீண்டும் காவிப் பைக்குள் வைத்துப் பையின் வாயைக் கயிற்றினால் கட்டிவிட்டு எழுந்தார். அகல் விளக்கை முன்போல் அறைக் கோடிக்கு எடுத்துச் சென்று வைத்துவிட்டுத் திரும்பினார். அவருடைய ஒவ்வொரு செய்கையையும் கவனித்துக் கொண்டிருந்த கரிகாலன் அவரது கடைசி நடவடிக்கையை கண்டதும் சொல்லவொண்ணாப் பிரமிப்பும் ஓரளவு கலவரமும் கொண்டான். போலித் துறவியார் அவனருகே மெள்ள வந்து அவன் நித்திரையை மறுபடியும் சோதித்தார். பிறகு அவன் தலையணையை லேசாகத் தூக்கி, அதற்கடியிலிருந்த அவன் கச்சையை எடுத்து, அதன் மடிப்பில் இரத்தின மாலை முடிப்பைப் பத்திரப்படுத்தி, மீண்டும் கச்சையை அவன் தலையணைக்குக் கீழே வைத்துவிட்டுச் சாளரங்களையும் திறந்து விட்டார். தமது படுக்கைக்குத் திரும்பி வந்ததும் கீழே கிடந்த சடைமுடி, தாடி, மீசைகளை எரிச்சலுடன் பார்த்துவிட்டு, ''அட சனியன்களே! உங்களைக் கட்டிக் கொண்டு எத்தனை நாள்தான் அழ வேண்டுமோ? வாருங்கள்,'' என்று சற்று உரக்கப் பேசி அலுத்துக் கொண்டு, நன்றாக மல்லாந்து படுத்து ஏதும் நடக்காததுபோல நித்திரை வசப்பட்டார்.

கரிகாலனுக்குத் தூக்கம் மட்டும் வரவேயில்லை. சரித்திரப் பிரசித்தி பெற்ற சேரமன்னர் பரம்பரையின் ரத்தின மாலை எதுவோ, எதை அடைவதற்காக இராஜேந்திர சோழன் சேர நாட்டின் மீது பெரும்போர் தொடுத்தானோ, எதை அடைந்ததைக் குறித்துப் பெருமை பாராட்டி, தான் முடிசூடிய ஆறாவது வருடத்திலேயே இராஜேந்திர மன்னன் கல்வெட்டு வெட்டினானோ அந்தச் செங்கதிர் மாலை தன் தலையடியில் கிடந்ததை நினைக்க நினைக்க, அவன் சித்தத்தில் ஏதேதோ எண்ணங்கள் ஓடின. எந்தக் கணத்திலும் அந்த மாலையைத்



தேடிச் சோழ நாட்டுப் படைவீரர் வரலா மாகையாலும், யார் வந்தாலும் தான் அகப்பட்டுக் கொள்ளக்கூடாது என்பதற்காகவே துறவி தன் கச்சையில் மாலையைப் பத்திரப்படுத்தி விட்டா ரென்பதையும் அறிந்த கரிகாலன் மனம் விவரிக்க இயலாத பல உணர்ச்சிகளின் வசப்பட்டுத் தத்தளித்தது. ஆனால் எந்த அலைக்கும் ஓயும் நேரம் உண்டல்லவா? நேரம் கடக்கக் கடக்கக் கரிகாலன் கண்களும் சோர்ந்தன. நித்திராதேவி அவனையும் ஆட்கொண்டாள்.

மறுநாள் பொழுது விடிந்து வெகு நேரத்துக்குப் பின்பே கரிகாலன் எழுந்திருந்தான். அவன் கண் விழித்தபோது கதிரவனின் காலைக் கதிர்கள் அறைச் சாளரங்கள் வழியாக உள்ளே வந்து கொண்டிருந்தன. சைவத் துறவியார் விடியற் காலையிலேயே எழுந்து நீராடி விட்டு, அறையின் மூலையில் தியானம் செய்து கொண்டிருந்தார். அவர் நிஷ்டையின் உக்கிரத்தைக் கண்ட கரிகாலன், முதல் நாளிரவு கண்ட தெல்லாம் கனவாயிருக்குமோ என்றுகூட ஒரு விநாடி சிந்தித்தான். ஆனால் அன்றும் மறுநாளும் நடந்த நிகழ்ச்சிகள் அது கனவல்ல, முற்றும் நனவேதான் என்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்தன.

அன்று காலை அவன் எழுந்தது முதல், சைவத் துறவி அவனை நிழல் போலவே எங்கும் தொடர்ந்தார். புத்த விஹாரத்தின் தலைமைப் பிக்ஷுவிடம் அவன் சொந்த விஷயங்களைப் பேசும் போதுகூட அவனை விட்டு அகலாமல் கூடவே இருந்தார். தலைமைப் பிக்ஷுவிடம் கரிகாலன் அந்தச் சைவத் துறவியைத் தனது நண்பராக அறிமுகப் படுத்தியிருந்தால், தலைமைப் பிக்ஷுவும் அவர் சம்பாஷணைகளில் கலந்து கொள்வதை ஆட்சேபிக்கவில்லை. ஆனால், இரண்டாம் நாளன்று தலைமைப் பிக்ஷுவின் ஆணைப்படி தஞ்சையிலிருந்து வந்து சேர்ந்த புதுத் துறவியார் மட்டும், சைவத் துறவி முன்பாக எதுவும் பேச மறுத்து விட்டார். "இது கரிகாலனைப் பற்றிய சொந்த விஷயம். இதை யார் முன்னிலையிலும் பேச எனக்கு அனுமதியில்லை," என்று திட்டமாகக் கூறிவிட்டார் புதுத் துறவி.

"ஆனால் நான் மட்டும் இருக்கலாமா?" என்று கேட்டார் தலைமைப் பிக்ஷு.

"தாங்கள் இருக்கலாம் என்று உத்தரவிருக்கிறது," என்றார் புதுத் துறவி.

"யார் உத்தரவு?" என்று சீறினார் சைவத் துறவி.

"அதை நாம் உமக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை," என்றார் புதுத் துறவி.

கடைசியில் சைவத் துறவி வெளியே அனுப்பப்பட்ட பின்பே, புதுத் துறவி வாயைத் திறந்து, "அப்பனே! எங்கே, மோதிரத்தை எடு," என்றார்.

கரிகாலன் கச்சையிலிருந்து மோதிரத்தை எடுத்து அவரிடம் கொடுத்தான். புதுத் துறவி மோதிரத்தைப் பல கோணங்களிலும் திருப்பித் திருப்பி நன்றாக ஆராய்ந்தார். அவர் மட்டுமென்ன, பின் பக்கத்திலிருந்த சாளரத்தின் மறைவில் பதுங்கி நின்ற சைவத் துறவியும் அதை நன்றாய்க் கவனித்தார். அந்தப் பச்சைக் கல் மோதிரத்தைக் கண்ட அவர் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. 'அதே மோதிரந்தான்; சந்தேகமில்லை. இந்தப் பச்சைக் கல் தமிழ் மண்டலத்தில் வேறு யாரிடமும் கிடையாது. அப்படியானால்?' இதை நினைத்த துறவியின் கண்களில் ஆச்சரியம் மறைந்து, சொல்லவொண்ணாத பயமும், கலவரமும் தாண்டவமாடத் தொடங்கின. "அவன் மகன் இவன்!" என்ற சொற்களும், அவர் உதட்டிலிருந்து நடுங்கிய வண்ணம் உதிர்ந்தன.

(தொடரும்)

'இது எங்கள் பூமி' படத்தில் அறிமுகமான விஜய சாமுண்டீஸ்வரிக்கு சில்க், அனுராதா காட்டிய வழியே அவர் வழியாம். மறைந்த நட்சத்திரம் சாவித்திரியின் மகளா இவர் என்று குழம்பிக்கொள்ள வேண்டாம். கோலாரைச் சேர்ந்தவர் இந்த விஜயசாமுண்டீஸ்வரி.

—துரை. ராமச்சந்திரன்

## புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் புதிய ஹமாம்!

கண்டுகொள்வீர் புதிய ஹமாம் புரியும் ஜாலத்தை. காலம் காலமாக உங்கள் குடும்பத்தில் அனைவரையும் கவர்ந்த சோப்.

இது காறும் கண்டதைவிட கூடுதல் புத்துணர்ச்சியும் பொலிவும் உமதே.

மனம் மயக்கும் மென்மையான புத்தம் புது நறுமணம் உமதே.

செழுமையான, அமோகமான நுரைவளம் உமதே.

புதிய பசுமை ஓங்கும் ஹமாம். புத்துணர்ச்சியையும் பொலிவையும் உணருவீர்.

**ஹமாம்**
**குடும்ப சோப்**




செழுமையான, க்ரீம் போன்ற நுரை, நீடித்திருக்கும் நறுமணம்.

டாடா தயாரிப்பு

# பிறந்த கிழமை தெரிய வேண்டுமா?



மாதங்கள்

| மாதம் | எண் |
|---|---|
| ஜனவரி | 2 |
| பெப்ரவரி | 5 |
| மார்ச் | 5 |
| ஏப்ரல் | 1 |
| மே | 3 |
| ஜூன் | 6 |
| ஜூலை | 1 |
| ஆகஸ்ட் | 4 |
| செப்டம்பர் | 0 |
| அக்டோபர் | 2 |
| நவம்பர் | 5 |
| டிசம்பர் | 0 |

லிருந்து கீழே இறங்கினால் 4 என்ற எண் கிடைக்கும். இந்த எண்ணைத் தந்திர எண் ஆறுக்குக் கீழாகப் போட்டுக் கொள்ள வேண்டும்.

மாதங்கள் என்ற கட்டத்தில் செப்டம்பர் மாதத்திற்கு நேராக 0 (ஜீரோ) கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே,

தந்திர எண்—6
வருட எண்—4
மாத எண்—0

என்று குறித்துக் கொள்ள வேண்டும். பிறகு அவர் பிறந்த தேதி 16.

$$\begin{array}{r} 6 \\ 4 \\ 0 \\ 16 \\ \hline 26 \\ \hline \end{array}$$

இதன் கூட்டுத் தொகை 26 வருகிறது. இந்தக் கூட்டுத் தொகை 26-ஐ 7ஆல் வகுக்க வேண்டும்.

$$\begin{array}{r} 7)26(3 \\ 21 \\ \hline 5 \\ \hline \end{array}$$

மீதமிருப்பது ஐந்து என்ற எண். பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள வரிசை எண்ணில் எந்த எண்ணுக்கு நேராக எந்தக் கிழமை கொடுக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் கிழமைதான் அவர் பிறந்த கிழமை.

1—சனிக்கிழமை.
2—ஞாயிற்றுக் கிழமை.
3—திங்கட்கிழமை.
4—செவ்வாய்க் கிழமை.
5—புதன் கிழமை.
6—வியாழக் கிழமை.
0—வெள்ளிக் கிழமை.

எனவே, 1942 வருடம் செப்டம்பர் மாதம் 16'ம் தேதி பிறந்தவர் புதன் கிழமையன்று பிறந்திருக்கிறார் என்று தெரிந்து கொள்ளலாம்.

—நந்திதேவன் எழுதிய 'நவீன நியூமராலஜி' புத்தகத்திலிருந்து.

(ஸ்டார் பிரசுரம் வெளியீடு).

# மன்னன் மகள்

சாண்டில்யன்

## 4. நட்சத்திரங்கள் நகைத்தன

கும்பகோணம் புத்த மடாலயத்திற்குக் கரிகாலன் வந்து சேர்ந்த இரண்டாம் நள்ளிரவின் ஆரம்ப ஜாமத்தில், அந்த விஹாரத்தின் தலைமைப் பிக்ஷுவின் அந்தரங்க அறையில், தஞ்சைத் துறவியார் பரீட்சை செய்யத் தொடங்கிய அந்தப் பச்சைக் கல் மோதிரம் சாளரத்தருகே மறைந்து நின்றபடி உள்ளே நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த சைவத் துறவியின் உடலை ஓர் உலுக்கு உலுக்கியே விட்டது. எத்தனை பெரிய ராஜ ரகசியம் அந்த மோதிரத்தில் புதைந்து கிடக்கிறது என்பதைக் கண நேரத்தில் புரிந்து கொண்ட காரணத்தால், பேசவோ அசையவோ சக்தியற்று ஒரு விநாடி கல்லாய்ச் சமைந்த சிலையென நின்றுவிட்ட அவருடைய தேகத்தில், அடுத்த விநாடி பல பயங்கர அலைகள் பாய்ந்து சென்றன. உணர்ச்சி மிகுந்ததால் நரம்புகள் சற்றே தளர்ச்சி கொடுத்து உடலில் நடுக்கத்தைக் கொடுத்தன. அந்த நடுக்கத்தின்போது, 'அவன் மகனா இவன்!' என்று உச்சரித்த சொற்களும் நடுங்கியே உதிர்ந்தன. 'இந்த ரகசியம் வெளியானால் என்ன விளையும்?' என்பதை நினைத்துப் பார்த்த சைவத் துறவி, அதிக பீதியால் மேற்கொண்டு எதையும் நினைக்காமலும் மனத்தில் எழுந்த கேள்விக்குப் பதில் தம் உள்ளத்தில் கூட எழவொட்டாமலும் அடக்கி விட்டு, அறைக்குள்ளே மேற்கொண்டு என்ன நடக்கிறது என்பதைக் கவனிக்கலானார்.



மோதிரத்தைப் பற்றியும் மோதிரத்தின் ரகசியத்தைப் பற்றியும் சைவத் துறவியார் அவ்வளவு தூரம் நடுங்கினாரே தவிர, தஞ்சையிலிருந்து வந்த புத்தத் துறவி எந்தவிதப் பயத்தையோ வேறெவ்வித உணர்ச்சியையோ முகத்தில் காட்டாமலே, ஏதோ நகை வியாபாரி நோட்டம் பார்ப்பதுபோல் மோதிரத்தை நீண்ட நேரம் பரீட்சை செய்தார். பிறகு அந்த மோதிரத்தை அறையின் கோடியில் புத்தர் சிலைக்குப் பக்கத்திலிருந்த ஒரு விளக்கருகில் கொண்டு போய் அதன் உட்பக்கத்திலிருந்த வரிகளை மிக நிதானமாகப் படித்தார். மோதிரத்தின் உட்பக்கத்தில் வெட்டப்பட்டிருந்த 'கரிகாலன்' என்ற ஒரு வார்த்தையைப் படிக்க எதற்காக அத்தனை நேரம் ஆகவேண்டும் என்று கரிகாலன் நினைத்து வியந்தான். புத்த விஹாரத்தின் தலைமைப் பிக்ஷுவுக்குக் கூட அது ஆச்சரியமாகத்தானிருந்தது. தஞ்சைத் துறவி வீண் விஷயத்திற்குக் காலத்தை ஓட்டுகிறார் என்று நினைத்த விஹாரத் தலைவர், ''ஏன் சுவாமி! அதில் அத்தனை தூரம் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று சலிப்புடனே கேட்டார்.

அவர் குரலில் கண்ட சலிப்பையும், கரிகாலனுக்கும் தலைமைப் பிக்ஷுவுக்கும் இருந்த அவசரத்தையும் தஞ்சைத் துறவி உணர்ந்து கொண்டாலும், அவர் களது சலிப்பையோ அவசரத் தையோ லட்சியம் செய்யாமல் மிக நிதானமாகவே அவர் மோதி ரத்தை ஆராய்ந்தார். பிறகு தலைமைப் பிக்ஷுவை நோக்கி, ''மான் தோல் ஒரு துண்டு கொண்டு வரச் சொல் கிறீர்களா?'' என்று கேட்டார்.

''மான் தோலா? எதற் காக?'' என்று வினவினார் தலைமைப் பிக்ஷு.

''மடாலயத்தில் நாய்த் தோல் எங்கே கிடைக்கப் போகிறது?'' என்று பதில் சொன்னார் தஞ்சைத் துறவி.

இதைக் கேட்டதும் சாந்த சொரூபியான தலைமைப் பிக்ஷு வின் முகத்திலும் கோபக் குறிகள் தோன்றத் தொடங்

கின குரலிலும் உஷ்ணம் தொனிக்கப் பேசத் தொடங்கிய தலைமைப் பிக்ஷு, ''நாய்த் தோல் மட்டும் போதுமா? அல்லது வேறு ஏதாவது மிருகங்களின் சருமங்களும் சுவாமிக்குத் தேவையாக இருக்குமா?'' என்று கேட்டது மல்லாமல், ''இதை வேட்டைக்காரன் வீடு என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது? இது புத்த விஹாரம் சுவாமி. இங்கு எந்த மிருகங்களையும் கொல்வதில்லை,'' என்று சற்று அழுத்தமான குரலிலும் சொன்னார்.

தஞ்சைத் துறவியார் புத்தரின் விளக்குக்கு அருகிலிருந்தே திரும்பி, தலைமைப் பிக்ஷுவைப் பார்த்துப் புன்முறுவல் செய்து, ''சுவாமி, தவறாக அர்த்தம் செய்து கொள்ளாதீர்கள். இந்த மோதிரத்தில் ஒரு முக்கியக் குறியைக் காணோம். உட்பக்கத்தில் ஓர் இடத்தில் பொட்டாகத் தெரிகிறது. அதைத் தேய்த்துப் பார்த்தால் ஒருவேளை நான் எதிர்பார்ப்பது அதில் இருக்கலாம். நகைகளைச் சுத்தம் செய்ய நாய்த்தோல் தான் உபயோகப்படும். சில வேளைகளில் மான் தோலும் பயன்படும். விஹாரத்தில் நாய்த்தோல் கிடைக்காதே என்பதற்காக மான் தோல் கேட்டேன்,'' என்று விளக்கினார்.

''ஓஹோ! அப்படியா!'' என்று சற்று ஆசுவாசப்பட்ட தலைமைப் பிக்ஷு, ''மான் தோல் மட்டும் புத்த விஹாரத்தில் எங்கிருந்து கிடைக்கும்?'' என்று கேட்டார்.

அதுவரை இந்தச் சச்சரவில் ஈடுபடாதிருந்த கரிகாலன், அவர்களிருவரையும் சமாதானப்படுத்த முற்பட்டு, ''சுவாமி, இந்த மான் தோலுக்காக எதற்காக இத்தனை சண்டை? என்னுடன் வந்த சைவத் துறவியாரிடம் மான் தோல் இருக்கிறது. வேண்டுமானால் கொண்டு வருகிறேன்,'' என்றான்.

தஞ்சைத் துறவியார் அதற்குச் சம்மதிக்கவில்லை. ''வேண்டாம் தம்பி! மோதிரத்தைத் துலக்கிப் பார்க்க வேறு வழி இருக்கிறது,'' என்று சொல்லிவிட்டு, அகல் விளக்கின் எண்ணெய்க் கசண்டைச் சிறிது கட்டை விரலால் எடுத்து மோதிரத்தின் உட்புறத்தில் தடவி, தமது காவி வஸ்திரத்தால் அதைப் பலம் கொண்ட மட்டும் தேய்த்துவிட்டு, மீண்டும் விளக்கில் பரிசோதித்தார். அவர் மறுபடியும் தலையைத் தூக்கிக் கரிகாலனையும் தலைமைப் பிக்ஷுவையும் பார்த்த பொழுது, அவர் முகத்தில் எல்லையற்ற திருப்தியும் மகிழ்ச்சியும் குடிகொண்டிருப்பதைக் கண்ட மற்ற இருவரும் தஞ்சைத் துறவியார் தேடிய குறி கிடைத்துவிட்டதென்பதைப் புரிந்து கொண்டனர். இரகசியத்தைத் தாம் புரிந்து கொண்டதோடு நிற்காத தஞ்சைத் துறவியார், தலைமைப் பிக்ஷுவையும் விளக்கிடம் வரும்படி அழைத்து, மங்கலான அந்த விளக்கொளியில் மோதிரத்தின் அடிப்பாகத்தில் ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டினார். தலைமைப் பிக்ஷுவைத் தொடர்ந்து சென்று கரிகாலனும் மோதிரத்திலிருந்த அந்தக் குறியைக் கண்டானானாலும், அதில் அந்த இரு பிக்ஷுக்களும் பிரமிக்கும்






படியான விசித்திரம் என்ன இருக்கிற தென்று அவனுக்குச் சிறிதும் புரியவில்லை யாகையால், ''சுவாமி! இதில் என்ன அப்பேர்ப்பட்ட விசித்திரம் இருக்கிறது?'' என்று தஞ்சைத் துறவியை நோக்கி வினவினான்.

தஞ்சைத் துறவி பதிலேதும் சொல்லாமலே மற்ற இருவரும் பின்தொடர அறையின் நடுவுக்கு வந்து தலைமைப் பிக்ஷுவையும் கரிகாலனையும் மஞ்சங்களில் உட்காரச் சொல்லிவிட்டுச் சற்று நேரம் அவர்கள் எதிரில் மௌன மாகவே நின்று நீண்ட நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு கரிகாலனை நோக்கி, ''தம்பி! மோதிரத்தின் விசித்திரம் என்ன என்பதை ஒரு காலத்தில் நீயே புரிந்து கொள்வாய். இன்று நான் அதைப்பற்றி எதுவும் சொல்லாததன் காரணமும் அன்று உனக்குத் தெரியும். தற்சமயம் அதைப் பற்றி மூச்சுக்கூட விட முடியாத நிலையில் நான் இருக்கிறேன்,'' என்று கூறினார்.

கரிகாலனுடைய கண்கள் தஞ்சைத் துறவியின் முகத்தை ஏறெடுத்து நோக்கின. ''சுவாமி! தங்கள் திருவாக்கி லிருந்து இதைக் கேட்பதற்காகவா சூடா மணி விஹாரத்திலிருந்து இங்கு வந்தேன்?'' என்று அவனிடமிருந்து வெளி வந்த சொற்களிலும், கோபம் சற்றே தொனித்தது.

தஞ்சைத் துறவியாரின் முகத்தில் சாந்தமும் அனுதாபமுமே நிலவிக் கிடந்தன. கருணை சொட்டும் விழிகளைக் கரிகாலன் மீது நாட்டிய அந்தத் துறவி, பரிதாபம் கலந்த குரலில், ''தம்பி! உன் பிறப்பைப் பற்றிய வரலாற்றை மறைத்து வைக்க வேண்டிய அவசியமில்லா விட்டால், இந்த விநாடியே முழுத் தகவலையும் உன்னிடம் சொல்லிவிடு வேன். ஆனால், அப்படிச் செய்ய இப்பொழுது எனக்கு அனுமதியில்லை. நன்றாக யோசித்துப் பார். உன் பிறப்பைப் பகிரங்கப்படுத்த முடியுமானால், உன் தந்தையோ அல்லது அவருடன் சம்பந்தப் பட்டவர்களோ உன்னை எதற்காகச் சூடாமணி விஹாரத்தில் ஒளித்து வைக்க வேண்டும்? உன் பிறப்பின் கதையைச் சொல்லும் இந்த மோதிர அடை யாளத்தை மட்டும் எதற்காக விஹாரத் தின் தலைமைப் பிக்ஷுவிடம் கொடுத்துச் செல்ல வேண்டும்? இப்படி மர்மம் நிறைந்த உன் பிறப்பு வரலாற்றை நான் அவ்வளவு சுலபமாக உடைத்துச் சொல்லி விட முடியும் என்றா நினைக்கிறாய்? உன் மோதிரத்தில் நான் சுட்டிக் காட்டினேனே ஒரு கிரீடத்தின் சிறு குறி, அந்தச் சின்னத்தை எதற்காக அவ்வளவு சிறிதாக, அவ்வளவு லாகவமாக வெட்டி இருக்கிறார்கள்? முத்திரைகளை மோதிரத்தின் மேல் பொறிப்பதுண்டு. கற்கள் வைத்துக் குறிபோல் கட்டுவது உண்டு. மோதிரத்தின் உட்புறத்தில் முத்திரையைப் பொறித்திருப்பதை நீ பார்த்திருக்கிறாயா?'' என்று கேட்டார்.

கரிகாலன் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து ஊசலாடின. மோதிரத்தில் கண்ட முத்திரை யாதா யிருக்கும் என்று ஆராயப் பார்த்தான். தான் படித்த அத்தனை படிப்பிலும் இத்தகைய முத்திரையைப் பற்றிய







—மீனலோசனி

தகவலேதும் இல்லாததை எண்ணிய கரிகாலன், படிப்புக்குப் பூர்த்தி என்பது ஒன்று கிடையாது என்று பெரியவர்கள் சொல்வது எவ்வளவு சரியாயிருக்கிறது என்று நினைத்துப் பார்த்துப் பெருமூச் சொன்றும் விட்டான்.

அவன் அடிவயிற்றிலிருந்து எழுந்த அந்த சோகப் பெருமூச்சின் காரணத்தை நன்றாக உணர்ந்த கும்பகோணம் மடாலயத்தின் தலைமைப் பிக்ஷு, தஞ்சைத் துறவியை நோக்கி, ''சுவாமி, தம்பி சோகத்தால் உருகிப் போகிறானே, அவன் பிறப்பைப் பற்றிய பூரா உண்மையைச் சொல்லாது போனா லும், ஓரளவு கோடியாவது காட்டக் கூடாதா?'' என்று அனுதாபம் பரிபூரண மாகத் தொனிக்கும் குரலில் கேட்டார்.

''சுவாமி! கோடி காட்டுவதும் அபாயம். தம்பி சாஸ்திரங்களில் கைதேர்ந் தவன் என்பதைச் சூடாமணி விஹாரத் தலைவர் பலமுறை எழுதியிருக்கிறார், 'அவன் புத்தி சூடம் போன்றது, விளக்கைச் சற்று அருகில் கொண்டு போனால் ஜ்வாலை பிடித்துக் கொள்ளும்,' என்று ஏற்கனவே எச்சரித் திருக்கிறார். ஆகவே, இது விஷயத்தில் நாம் சற்று எச்சரிக்கையாகவே நடந்து கொள்ள வேண்டும்,'' என்றார் தஞ்சைத் துறவி.

தஞ்சைத் துறவி விளக்க விளக்க, அவர் சொன்ன வார்த்தைகள் மர்மத்தை அதிகப்படுத்தினவே தவிரக் குறைக்க வில்லை என்பதைக் கவனித்த கரிகாலன் முகம் கோபத்தால் சிவந்தது. இணையற்ற அழகுடன் விளங்கிய அவன் முகம் அவசிய மான சமயத்தில் எத்தனை பயங்கரமாக மாற முடியும் என்பதைக் கோபம் பொங்கியதால் ஈட்டிகளைப் போல் விளக்கொளியில் ஜொலித்த அவன் கண்கள் நிரூபித்தன. அவன் உதடுகளி லிருந்து உதிர்ந்த சொற்களிலும் உக்கிரம் தீவிரமாகத் துளிர்த்து நின்றது. ''எதற் காக இந்த அநாவசிய எச்சரிக்கை? என் பிறப்பு மர்மம் தெரிந்தால் தலையா போய் விடும்?'' என்று இரைந்த கரிகாலன், ஆசனத்திலிருந்து சட்டென்று எழுந்தான்.

தஞ்சைத் துறவி அவன் பதட்டத் தையோ, உக்கிரத்தையோ லட்சியம் செய்யாமலேயே, அவனை உற்றுநோக்கி,

''தலை போவதாயிருந்தால் நான் கவலைப்பட மாட்டேன். தம்பி! தலைகள் உருளும். ஆயிரக்கணக்கான தலைகள் உருளும்!'' என்று கூறினார்.

''ஏன் உருள வேண்டும்?'' என்றான் கரிகாலனும், விடாப்பிடியாக.

''போர் மூண்டால் தலைகள் தரையில் உருளாமல் அவரவர் தோள்கள் மீதா உட்கார்ந்திருக்கும்?'' என்று துறவி யும் குத்தலாகச் சொல்லி, தமக்குச் சிறிது நகைச்சுவையும் உண்டு என்பதைக் காட்ட லேசாகப் புன்னகையும் செய்தார்.

கரிகாலன் ஸ்தம்பித்து நின்றான். ''போர் மூளுமா!'' என்ற சொற்கள் அவன் வாயிலிருந்து மெதுவாக வெளிவந்தன.

''ஆம் தம்பி! போர் மூளும். நீ உயிரோடிருக்கிற விஷயம் தெரிந்தால், நிகழக்கூடிய அனர்த்தங்கள் பல. அதை விவரித்துச் சொல்ல எனக்கு உரிமை யில்லை. சோழ நாட்டின் பிற்கால அந்தஸ்து, விஸ்தரிப்பு, பெருமை, இராஜேந்திர தேவனுடைய வாழ்க்கை லட்சியத்தின் பூர்த்தி, இத்தனையுடன் உன் பிறப்பின் ரகசியமும் பிணைந்து கிடக்கிறது. ஆகையால், அதைப்பற்றி எதையும் கேட்காதே. சரியான சந்தர்ப் பத்தில், நானே வந்து உன்னை யார் என்று பகிரங்கப்படுத்துகிறேன். அதுவரை பொறுத்திரு.''

''நான் எதற்காகப் பொறுக்க வேண்டும்? பெற்ற தாய் தந்தையரை அறிந்துகொள்ளும் உரிமையை எதற்காகத் தியாகம் செய்ய வேண்டும்?''

''சோழ நாட்டின் நன்மைக்காக, பெரிய பேரரசின் க்ஷேமத்திற்காக, சூரிய வம்சத்தில் வந்த சோழர்களின் ஒளி பார் முழுவதிலும் கடல் கடந்தும் வீசுவதற் காக, அவர்கள் சாம்ராஜ்யம் நாற்புறத்தி லும் பரந்து செழித்தோங்குவதற்காக, புலிக் கொடியின் நிழலில் தங்கும் மக்கள் இதர நாட்டு நரிகளால் தீண்டப்படாதிருப் பதற்காக,'' என்று தஞ்சைத் துறவியார் ஆவேசத்தோடு பேசினார்.

கரிகாலன் அவருக்கு ஏதும் பதில் சொல்லவே இல்லை. தன் பிறப்பை அறிவ தில் இத்தனை சங்கடம் இருக்கு மென்பதையோ சாந்த சொரூபியான தஞ்சையின் புத்தத் துறவிக்கே ஆவேசத்தை ஊட்டக் கூடியதாக இருக்கு மென்றோ அவன் எண்ணவேயில்லை. ஆதலால், அவருக்குப் பதிலேதும் சொல்ல

**அந்த ராக்கி**

ஜெயப்பிரதா ராக்கி கட்டுவது அவரு டைய சொந்தச் சகோதரர் ராம்குமாருக்கு. அவரும் இப்படத்தில் நடிக்கிறார்.

# பாண்டியனும் சேரனும் பத்தினிக் கோட்டத்

செங்குட்டுவன் கண்ணகியின் சிலைக்குக் கல்லெடுக்க வடபுலம் சென்றபோது, அவனுக்கும் சோழ—பாண்டியருக்குமிடையே பகை எதுவும் இருக்கவில்லையென்று தெரிகிறது. ஆம், செங்குட்டுவன் வஞ்சியிலிருந்து புறப்பட்டு, இமயம் செல்லும் வழியில் நீலகிரியில் பாடிவீடு அமைத்திருந்த போது, பாண்டி வேந்தன் செங்குட்டுவனுக்கு வாழ்த்துச் செய்தியும் பரிசுப் பொருள்களும் தூதுவர் மூலம் வழங்கி, அவனை வழியனுப்பி வைக்கிறான்.

சேர நாட்டைக் குட்டுவன் ஆண்டபோது, சோழ நாட்டில் கிள்ளி என்பவன் ஆட்சியில் இருந்தான். அவனுக்கும் செங்குட்டுவனுக்கும் உறவு நல்லவிதமாக இருந்திருக்கிறது. அவனை ஆட்சியில் அமர்த்தியவனே செங்குட்டுவன் தான்.

இந்த அளவுக்குச் சோழனுக்கும் சேரனுக்கும் நல்லுறவு இருந்திருக்கிறது. வஞ்சியில் பத்தினிக் கோட்டம் அமைப்பதுவரை சூழ்நிலை இவ்வாறு இருந்தும், பாண்டியனும் சோழனும் பத்தினிக் கோட்டத் திறப்பு விழாவுக்கு வராதது ஏன்?

சேரன் தன்னிடம் போரில் தோற்ற—கண்ணகித் தெய்வத்திற்கென தான் இமயத்தில் எடுத்த கல்லைச் சுமக்கும் கோலத்துடன் உள்ள—வடவாரிய மன்னரை சோழனுக்கும் பாண்டியனுக்கும் காட்டிவரச் செய்கிறான். அவர்கள் சோழ—பாண்டிய மன்னர்களையும் பழித்தார்களாதலால், அவர்கள் கல் சுமக்கும் காட்சியைக் கண்டு சோழனும் பாண்டியனும் மகிழ்ச்சியடைவார்கள் என்று செங்குட்டுவன் நம்பினான்.

நீலனைத் தலைவனாகக் கொண்ட கஞ்சுக

---

வழியில்லாமல் அசைவற்று அறை நடுவில் நின்றான். தஞ்சைத் துறவியின் உறுதியைப் பார்த்த பிறகு, அதை உடைப்பதென்பது நடவாத காரியமென்பதைப் பரிபூரணமாக அறிந்து கொண்ட கரிகாலன், கடைசியாக அவரை நோக்கி, ''சுவாமி! அடுத்தபடியாக என் வாழ்க்கை திரும்ப வேண்டிய வழி என்ன? வழியை நீங்கள் சொல்வீர்களென்று `சூடாமணி விஹாரத்திலிருந்த தந்தையார் சொன்னார். என்ன வழி?'' என்று வினவினான்.

''சூடாமணி விஹாரப் பெரியவர் சொன்னதில் தவறேதுமில்லை, தம்பி! உன் வாழ்க்கைக்கு வழி காட்டுவது என் கடமை. அது நான் நாட்டுக்குச் செய்ய வேண்டிய பணி. அதைப் புரிவதற்குச் சித்தமாகவே நான் வந்திருக்கிறேன்,'' என்று கரிகாலனை நோக்கிக் கூறிய தஞ்சைத் துறவி, பக்கத்திலிருந்த தலைமைப் பிக்ஷுவை நோக்கி, ''சுவாமி! ஓர் ஓலையும் எழுத்தாணியும் வேண்டும்,'' என்றார்.

தலைமைப் பிக்ஷு ஆகட்டுமென்பதற்காகத் தமது தலையை ஒரு முறை ஆட்டிவிட்டு அறைக்கு வெளியே சென்று, சற்று நேரத்திற்கெல்லாம் ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வந்தார். அவற்றை வாங்கிக் கொண்ட தஞ்சைத் துறவி, புத்த பகவானுக்கு எதிராகத் தரையில் சப்பளிக்க உட்கார்ந்து, ஓலையைத் தமது தொடையில் வைத்துக் கொண்டு எழுத்தாணியால் அசக்கி அசக்கி எழுதலானார். அவர் மிகுந்த யோசனையுடன் ஓலையை எழுதிய மாதிரியிலிருந்தும், இடையிடையே அவர் யோசித்த விதத்திலிருந்தும், ஓலை யாரோ ஒரு முக்கியமான பேர் வழிக்கு எழுதப்படுகிறது என்பதை உணர்ந்து கொண்டான் கரிகாலன். துறவியும் ஓலையை எழுதி முடித்துக் கொண்டு எழுந்திருந்து தலைமைப் பிக்ஷுவிடம் தந்து, ''சுவாமி! விலாசம் சரிதானே?'' என்றார்.

விலாசத்தைப் படித்த தலைமைப் பிக்ஷுவின் முகத்தில் மட்டுமென்ன, கரிகாலன் முகத்திலும் ஆச்சரியமும் பிரமையும் கலந்து தாண்டவமாடின.

''இவரையா நான் சந்திக்க வேண்டும்?'' என்று நம்பிக்கை பூரணமாகப் பிறக்காத குரலில் கேட்டான் கரிகாலன்.

''ஆமாம், தம்பி! இவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?'' என்று கேட்டார் தஞ்சைத் துறவி.

''இவரைப் பற்றித் தெரியாதவர்கள் சோழ மண்டலத்தில் இருக்க முடியுமா?'' என்றான் கரிகாலன்.

''உண்மை, தம்பி! நேராக இந்த ஓலையைக் கொண்டு போய் அவரிடம் கொடு. உன் வாழ்க்கை சரியான பாதையில் செலுத்தப்படும்,'' என்று கூறிய தஞ்சைத் துறவி, தமது காரியத்தைச் சாதித்து விட்டதற்கு அறிகுறியாகப் பெருமூச்சும் விட்டார்.

அறையில் நடந்த நிகழ்ச்சிகள் பூராவையும் சாளரத்தருகே நின்று கவனித்துக் கொண்டிருந்த சைவத் துறவியார் ஓலையில் கண்ட விலாசம் யாருடையது என்று அறிந்து கொள்ளத் துடித்தார். ஆனால், விலாசத்தில் கண்ட

# திறப்பு விழாவுக்கு வராதது ஏன்?

மாக்கள் என்போர், கல் சுமக்கும் காட்சியைக் காட்டினார். அப்போது சோழன் கூறினான்:

''போர்க்களத்தில் பேராண்மையுடன் போராட வேண்டியவர்கள், அப்படிப் போராடாமல், கை வாளையும் வெண் கொற்றக் குடையையும் போர்க்களத்தில் போட்டுவிட்டு வீரர்கள் கொல்லத் துணியாத மாற்றுருவுடன் ஓடி உயிர் பிழைத்தவர்கள் இவர்கள். இவர்களைப் பிடித்து வருதல் சிறந்த வெற்றி ஆகாது.''

சோழனை விட்டு பாண்டியன் அரசவைக்குச் சென்று அங்கு அவனைக் கண்டு, கனகனையும் விசயனையும் காட்டினர் கஞ்சுக மாக்கள். பாண்டியன், செங்குட்டுவனைப் பாராட்டவில்லை; பரிகசித்துப் பேசினான்:

''இவர்கள் போர்க்களம் நும் மன்னனுக்கு ஆகுமாறு அதனை விட்டோடி, காஷாயமணிந்து, சந்நியாசி வேடம் பூண்டனர். வீரமற்று ஓடி உயிர் பிழைத்தோர் மீது சீற்றம் கொண்டு அவர்களைப் பிடித்து வந்த நும் மன்னரின் வெற்றிச் சிறப்பு தமிழக வரலாற்றிலேயே புதுமையானதாகும்.''

பத்தினித் தெய்வத்தின் புண்ணிய வரலாற்றிலே பகை மன்னரைப் பழிவாங்கிய பாவமும் கலந்துவிட்டதைச் சோழனும், பாண்டியனும் வெறுத்தனர். அதனாற்றான், சேர மன்னன் வஞ்சிமா நகரில் நடத்திய பத்தினிக் கோட்டத் திறப்பு விழாவிலே அவர்கள் கலந்துகொள்ளவில்லை.

—ம.பொ. சிவஞானம் எழுதிய பூங்கொடி பதிப்பக வெளியீடான 'சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு' என்ற நூலிலிருந்து.

---

பெயரை மட்டும் அறையிலிருந்த மூவரும் உச்சரிக்கவில்லை. கடைசியாக தலைமைப் பிக்ஷு அந்தப் பெயரை உச்சரித்தபோது, பெரிய இடியே தலையில் இறங்கிவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது சைவத் துறவிக்கு.

''அரையன் ராஜராஜனை அணுகுவது அவ்வளவு சுலபமென்று நினைக்கிறீர்களா?'' என்று சற்றுச் சந்தேகத்துடன் வினவினார் தலைமைப் பிக்ஷு.

''என் ஓலையை அவர் அலட்சியம் செய்ய முடியாது. என் கையெழுத்து அரண்மனைகளையே திறந்துவிடும் என்பது உமக்குத் தெரியாதா?'' என்று தஞ்சைத் துறவியார் கேட்டார்.

''அரண்மனைக் கோட்டைகளைப் பலமான சேனை அரண் அரயன் ராஜராஜனைச் சூழ்ந்து நிற்கிறதே!'' என்று மீண்டும் சந்தேகக் குரலை எழுப்பினார் தலைமைப் பிக்ஷு.

''அந்தப் படை அரணையும் இந்த ஓலை உடைக்க வல்லது சுவாமி!'' என்று தலைமைப் பிக்ஷுவைச் சமாதானப் படுத்திய தஞ்சைத் துறவியார், ''தம்பி! அரையன் ராஜராஜன் பெரும் படையுடன் மேலைச் சாளுக்கியர் எல்லையில் தங்கியிருக்கிறான்! அங்கு போய் அவனைப் பார். பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் கவனிக்கிறேன். நாளைக் காலையிலேயே நீ புறப்பட வேண்டும்,'' என்றார்.

மறுநாள் காலை அவன் பயணப் பட்டபோது சைவத் துறவியாரும் அவனுடன் கிளம்பினார். கரிகாலன் அவரைத் தட்டிக் கழிக்கச் செய்த முயற்சிகள் எதுவும் பலிக்கவில்லை, சைவத் துறவியின் மர்மத்தைப் புரிந்து கொள்ளாத தலைமைப் பிக்ஷு, தம்பிக்குச் சோழநாட்டு வட எல்லை வழிகள் தெரியாதாகையால் அவனுக்குத் துணையாக இருக்கட்டுமென்று சைவத் துறவிக்கு மடாலயத்திலிருந்த ஒரு புரவியையும் இரவலாகக் கொடுத்தார்.

கும்பகோணம் மடாலயத்திலிருந்து கிளம்பிய இருவரும் பதினைந்து நாட்கள் விடாமல் வடக்கே பயணம் செய்த பிறகு, கிருஷ்ணா நதிக்கு அருகிலிருந்த ஒரு நகரத்தை அடைந்தனர். அன்றிரவு அந்த நகரத்தின் சத்திரத்தில் தங்கியிருந்த கரிகாலன் மனத்தில் பெரியதொரு சந்தேகம் கிளம்பவே, நள்ளிரவில் சைவத் துறவியின் நித்திரையைச் சோதித்துச் சத்திரத்தை விட்டு வெளியேறி ஆகாயத்தை நோக்கினான். நிலவு அற்ற ஆகாயத்தில் ஆயிரம் ஆயிரம் வீண்மீன்கள் ஜொலித்தன. அவற்றை ஆராய்ந்த கரிகாலன் கண்களில் கோபம் பீறிட்டெழுந்தது.

இந்தக் கரிகாலன் எத்தனை தந்திரமாகச் சைவத் துறவியால் ஏமாற்றப் பட்டான் என்ற கதையைச் சொல்லிச் சொல்லி விண்மீன்கள் கண்சிமிட்டிச் சிரித்தன. அந்தச் சிரிப்பினால் வெகுண்டுதானோ என்னவோ கரிகாலன் கை அவன் இடையிலிருந்த உடைவாளை நோக்கிச் சென்றது. அந்த உடைவாளை அவன் உருவுவதற்கு முன்பாக மற்றொரு உடைவாள் அவன் கழுத்தைத் தடவிக் கொண்டு நின்றது.

(தொடரும்)

கோத்ரெஜ்

புதிய

# மேகா

ஏ ஓ எஸ்* கொண்ட
நீல டிடர்ஜென்ட் கட்டி




நியாயத்திற்குப் போராடும் இந்தியாவின் நட்சத்திரம் ரஜனி இப்போது மேகா மட்டுமே உபயோகிக்கிறார்.

*ஏஓஎஸ், அதிக நுரையையும் அதிக சலவைத் திறனையும் தரும் அற்புதமான மூலப்பொருள்.

# விடியும் காலைப்பொழுதை விறுவிறுப்புடன் துவக்குங்கள்!



விடியற்காலையில் பெப்பர் மின்ட் மற்றும் ஸ்பியர்மின்டின் விறுவிறுப்புச் சுவை. அதோடு, இதன் விசேஷ உட்பொருள் பற்களை பளிச்சென துலக்கி, சுவாசத்தை தூய்மையாக்கி புத்துணர்ச்சி அளிக்கிறது.

பாண்ட்ஸ் டூத்பேஸ்ட், பல் துலக்குவதை ஒரு புத்துணர்ச்சி தரும், ரசிக்கக்கூடிய அனுபவமாக்குகிறது. எனவே, குழந்தைகள் பல்துலக்குவதை பாரமாக கருதமாட்டார்கள்.

இன்றே புதிய பாண்ட்ஸ் டூத்பேஸ்ட் வாங்கிடுவீர். என்றென்றும் விடிகாலையில் விறுவிறுப்புடன் விழித்திடுவீர்.






விசேஷ உட்பொருள், விரைவாக நுரையைப் பரப்புகிறது. 'சக்தியூட்டப்பட்ட' நுரை...



... பல் காரைகளையும், உணவுத் துணுக்குகளையும் சுலபமாக வெளியேற்றி, பற்களை தூய்மையாகவும், ஆரோக்கியமாகவும் வைக்கிறது.

புதிய
**பாண்ட்ஸ்**
**டூத்பேஸ்ட்**
*தூய்மையான சுவாசம், ஆரோக்கியமான பற்கள்*

OBM 101 TM

5-3-87

## 5. சொர்க்கத்தின் கதவு

கரிய வானிலே, கறுப்புக் கம்பளியில் வாரி இறைக்கப்பட்ட பல்லாயிரம் வைரங்களைப்போல, ஜாஜ்வல்லியமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்த நட்சத்திரக் கூட்டங்கள் நகைத்து அறிவுறுத்திய உண்மையால் ஒரு கணம் அறிவைக் கோபத்துக்கு அடகு வைத்த கரிகாலன், கத்தியின் முனையொன்று கழுத்தில் லேசாகத் தடவத் தொடங்கியதும் கோபத்தைச் சரேலென்று உதறி




விட்டு, விநாடி நேரத்தில் உணர்ச்சிகளைத் தன் கட்டுப் பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டான். கத்தி கழுத்தில் முதலில் லேசாகத் தடவியபோதோ, 'சிறிதும் அசையாதே' என்று எச்சரிக்கைக்கு அறிகுறியாக அதன் நுனி கழுத்தில் இடப்புறத்தில் சற்றே அழுத்தியபோதோ, எத்தகைய பதட்டத்துக்கும் இடம் கொடுக்காத கரிகாலன், தன் கண்களை இடதுபுறமாகச் சாய்த்து, கத்தி அழுந்தி நின்ற இடத்தையும் அதைப் பிடித்து நின்ற கையையும் கவனித்து, கத்திக்கு உடையவன் யாரென்பதைத் தீர்மானித்துக் கொண்டான். காரிருளில் பளபளவென ஒளி வீசிய அந்த உடைவாளின் அமைப்பையும், அதைப் பிடித்து நின்ற கைவிரல்களுக்கிடையே தெரிந்த பிடியின் வேலைப்பாட்டையும் கடைக் கண்ணால் கவனித்து, கத்தியைப் பிடித்து நிற்பவர் தனக்குத் துணையாக வந்த சைவத் துறவியே என்பதைக் கணநேரத்தில் உணர்ந்துகொண்ட கரிகாலன் உதடுகளில் லேசாகப் புன்னகையொன்றும் அரும்பியது. அவருடைய அந்த நடவடிக்கைக்கும் எச்சரிக்கைக்கும் காரணத்தைப் புரிந்து கொள்ளவும் கரிகாலனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

மேலைச் சாளுக்கியர்களின் இடைதுறை நாட்டுக்கு எதிரில், சோழநாட்டின் வடமேற்கு எல்லையில் பெரும்படையுடன் தங்கியிருந்த அரையன் ராஜராஜனிடம் தன்னைக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டிய சைவத் துறவி, வேண்டுமென்றே வழியை மாற்றி, கீழைச் சாளுக்கியர்களின் ஆட்சிக்குட்பட்ட வேங்கிநாட்டின் முன்பாக, சோழநாட்டின் வடகிழக்கு எல்லையில் கொண்டுவந்து நிறுத்திவிட்டாரென்பதை, நட்சத்திரங்கள் இருந்த அமைப்பிலிருந்து புரிந்து கொண்ட



கரிகாலன், தனக்கு உண்மை புலனாகி விட்டதைச் சைவத் துறவியும் புரிந்து கொண்டு விட்டாரென்பதையும், ஆகவே முன்னெச்சரிக்கையாகத் தம்மை மடக்கி யிருக்கிறாரென்பதையும் நிமிஷ நேரத்தில் அறிந்து கொண்டான். தான் உண்மையை உணர்ந்து கொண்ட காரணத்தால் இனிமேல் தன்னுடனிருப்பது உசிதமல்ல வென்பதைச் சைவத் துறவி சந்தேகமறத் தெரிந்து கொண்டிருக்க வேண்டுமென் றும், ஆகவே தன் கச்சையிலுள்ள செங்கதிர் மாலையைத் தட்டிக்கொண்டு போகவே முயற்சி செய்கிறார் என்பதையும் அறிந்து கொண்டான் கரிகாலன். இருந்த போதிலும், ஏதும் நடக்காதது போலவே பேச்சுக் கொடுக்கத் தொடங்கி, ''சுவாமி



பக்தன்: இறைவன் அருள் பெற என்ன செய்ய வேண்டும் சுவாமி?

துறவி: வாழ்க்கையை வெறுக்க வேண்டும்.

பக்தன்: அதற்கு என்ன செய்யவேண்டும் சுவாமி?

துறவி: திருமணம் செய்து கொள்ள வேண்டும்.

—மஞ்சுளா

களுக்கு இன்னும் தூக்கம் வரவில்லை போலிருக்கிறது?'' என்று கழுத்தை அப்புறம் இப்புறம் திருப்பாமலே கேட்டான்.

பதிலுக்குக் கத்தி அவன் கழுத்தில் சற்றுக் கடுமையாகவே ஊன்றியது. ''கரிகாலா! சிறிதும் அசையாதே! அசைந்தால், எந்த ஆகாசத்தைப் பார்த்து இத்தனை நேரம் மலைத்தாயோ, அதே ஆகாசத்தை நோக்கி உன் உயிர் சிட்டாய்ப் பறந்துவிடும்,'' என்றார் துறவி.

''சுவாமிக்கு இத்தகைய கொலைத் தொழில் நீண்ட நாளாகப் பழக்கமோ?'' என்று மீண்டும் வினவினான் கரிகாலன்.

அந்தக் கேள்வியில் பட்ட வர்த்தனமாகத் தொனித்த கேலியைச் சைவத் துறவியும் உணராமலில்லை. ஆகவே, அவர் தமக்கும் சிறிது நகைச்சுவை உண்டு என்பதைக் காட்ட, ''அப்பனே! பாவத் தொழில் புரிந்து பாரில் மாயும் மக்களின் உயிர்களை அரன் அடி சேர்ப்பது அடியார்களின் கடமை. ஆனால் உன்னைப் போன்ற ஒரு வாலிபனை இந்தச் சிறிய வயதில் சிவபதம் சேர்க்க இந்த அடியவனுக்குக்கூட மனம் வரவில்லை. ஆகவே, அந்தப் பணியில் ஈடுபட என்னைத் தூண்டாதே. உன் கச்சையிலுள்ள மாலையை எடுத்து என்னிடம் கொடுத்துவிடு,'' என்றார்.

''ஏது சுவாமி மாலை?'' என்று கேட்டான் கரிகாலன் நின்ற இடத்திலிருந்து அசையாமலே.

''என்னுடைய மாலைதான் கரிகாலா! உன் கச்சையில் பத்திரமாக வைத்திருக்கிறேன்; எடு!'' என்றார் துறவி.

''ருத்திராட்ச மாலையா? அதற்கெதற்கு சுவாமி இத்தனை பத்திரம்?'' என்று ஏதுமறியாதது மாதிரி மீண்டும் கேட்டான் கரிகாலன்.

''ருத்திராட்சமா! சை!'' என்று அலுத்துக்கொண்டார் சைவத்துறவி. துறவியார் அப்படி ருத்திராட்சத்தைத் துச்சமாக மதித்து 'சை' என்று சப்புக் கொட்டியது, அவருடைய உண்மை சொரூபத்தை நன்றாக அறிந்து கொண்டிருந்த கரிகாலனுக்குச் சிறிதும் ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை யானாலும், துறவியின் புத்தியை அஜாக்கிரதைப் படுத்துவதற்காகவே மேலும் பேச்சுக் கொடுத்து, ''என்ன ருத்திராட்சத்தைப் பற்றி அப்படி அலட்சியமாகப் பேசி விட்டீர்கள்? வேறு என்ன மாலை என்னிடம் இருக்கிறது?'' என்றும் ஒன்றும் அறியாதவன் போல் வினவினான்.

சைவத் துறவியும் லேசாகச் சிரித்தார், ''பைத்தியக்காரா! ருத்திராட்சங்கள் தெருவில் இறைந்து கிடந்தாலும் பொறுக்குவதற்கு இந்த நாளில் யாரிருக்கிறார்கள்? அப்படியிருக்க ருத்திராட்ச மாலையைப் பத்திரப்படுத்துவேனா?'' என்று கேலியும் குரூரமும் தொனிக்கும் குரலில் பேசிய சைவத் துறவி, ''அதல்ல கரிகாலா! உன் கச்சையிலிருப்பது விலை மதிப்பிட முடியாத பொக்கிஷம். தமிழ் நாட்டின் சரித்திரப் பிரசித்தி பெற்ற ரத்தின மாலை. சீக்கிரம் எடு அதை,'' என்று உத்தரவிட்டார்.

அதை எடுக்க எந்த முயற்சியும் செய்யாத கரிகாலன், ''துறவியாகிய உங்களுக்கு எதற்காக ரத்தின மாலை? அது என்னிடம்தான் இருக்கட்டுமே!'' என்றான்.

சைவத் துறவியிடமிருந்து அடுத்தபடி எழுந்த சொற்களில் கோபம் எல்லையற்றுத் தாண்டவமாடத் தொடங்கியது. ''பேய் அதிகப் பிரசங்கி! பேசாமல் மாலையை எடுத்துக் கையில் கொடுத்து விடு. இல்லையேல்...'' என்று கூறிய துறவி வாசகத்தை முடிக்காமல், இல்லையேல் என்ன நடக்குமென்பதை ஊகத்திலேயே விட்டு மிரட்டினார்.

துறவி முடிக்காமல் விட்ட வாக்கியத்தைத் தானே முடிக்கத் தொடங்கி, ''இல்லையேல் கழுத்தில்

கத்தியைப் பாய்ச்சி விடுவீர்களாக்கும்?'' என்று கேட்டான் கரிகாலன்.

கரிகாலன் வீணாகப் பேசிக் காலத்தை ஓட்டுவதைக் கண்டு மேலும் சகிக்காத சைவத் துறவி, ''கரிகாலா! வீணாகப் பேசிக் காலத்தை ஓட்டினால் சைவத்துறவி ஏமாந்து விடுவாரென்று மனப்பால் குடிக்காதே. சீக்கிரம் எடு மாலையை. நான் இந்த விநாடியே பயணப்பட வேண்டும்,'' என்றார்.

''என்னை விட்டுவிட்டா போகப் போகிறீர்கள்?'' என்று பயப்படுபவன் போல் கேட்டான் கரிகாலன்.

''ஆம்.''

''பிறகு எனக்குத் துணை?''

''துணை இனித் தேவையில்லை. உன்னை எங்கு கொண்டு வந்து சேர்க்க வேண்டுமோ அங்கு சேர்த்து விட்டேன்.''

''அப்படியானால் உங்கள் பணியைத் தீர்த்து விட்டீர்கள்?''

''ஆமாம்.''

''உண்மையாகவா சொல்லு கிறீர்கள்?''

''சத்தியமாக!''

''அரன்மேல் ஆணையாகச் சொல்வீர்களா?''

''ஆணை! யார் மேல் வேண்டு மானாலும் ஆணை செய்வேன்.''

''அப்படியானால் அரையன் ராஜராஜன் பாசறை?''

''இங்கு அருகில்தான் இருக் கிறது.''

இந்தக் கோட்டைப் புளுகைக் கேட்ட கரிகாலன் இதழ்களில் மீண்டும் புன்னகை அரும்பியது. ஆனால் அந்தப் புன்னகையையோ, அதைத் தொடர்ந்தோ அவன் கரிய விழிகளில் உதித்த ஒரு விசித்திரப் பார்வையையோ அவனுக்குப் பின்னால் நின்றிருந்த சைவத் துறவியால் பார்க்க முடியவில்லை. ஆகையால் கரி காலன் மன ஓட்டத்தைப் புரிந்து கொள்ளாதவராய், ''சரி, எடு மாலையை,'' என்று மீண்டும் அவசரப் படுத்தினார்.

''இதோ எடுத்துத் தருகிறேன், சுவாமி!'' என்று சொல்லிக் கச்சையைப் பிரிக்க முயன்ற கரிகாலன் கச்சையை அந்தப்புறமும் இந்தப்புறமும் அசைக்கத் தொடங்கினான். பலமுறை முயன்றும்




ஒரு கிரவுண்டு விலை சென்னை யில் சில இடங்களில் சுமார் எவ்வளவு இருக்கும்?

சில ரியல் எஸ்டேட்காரர்களிடமும் நண் பர்களிடமும் சேகரித்த தகவல்கள் இவை. (தோராயமான விலை)

தாம்பரம்: ரூ. 75000 முதல் 1,00,000 வரை

குரோம்பேட்டை: ரூ. 60,000 முதல் 1,00,000 வரை

பல்லாவரம்: ரூ. 50,000 முதல் 80,000 வரை

மீனம்பாக்கம்: ரூ. 30,000 முதல் 50,000 வரை

பரங்கிமலை: ரூ. 40,000 முதல் 1,00,000 வரை

கிண்டி: ரூ. 75,000 முதல் 1,25,000 வரை

சைதாப்பேட்டை: ரூ. 2,00,000 முதல் 3,00,000 வரை

மாம்பலம் (தி.நகர்): ரூ. 4,00,000 முதல் 8,00,000 வரை

மைலாப்பூர்: ரூ. 4,00,000 முதல் மேற்கொண்டு

பெஸன்ட்நகர்: ரூ. 2,00,000 முதல் 3,00,000 வரை

அடையாறு: ரூ. 4,00,000 முதல்

வடபழனி: ரூ. 1,50,000 முதல் 2,50,000 வரை

வேளச்சேரி: ரூ. 60,000 முதல் 1,25,000 வரை

அண்ணாநகர்: ரூ. 3,00,000 வரை

திருவல்லிக்கேணி: ரூ. 3,00,000 முதல் 4,50,000 வரை.

—பாமா கோபாலன்




கேள்வி: டி.வி.யில் கிரிக்கெட், டென்னிஸ் வர்ணனையாளராகவும், க்விஸ் மாஸ்டராகவும் இருந்து வருவதால் காது, மூக்கு, தொண்டை ஸ்பெஷலிஸ்டான, உங்கள் டாக்டர் தொழில் பாதிக்கப்படவில்லையா?

நரோத்தம்பூரி: ஒருவிதத்தில் நஷ்டம், அதே நேரத்தில் லாபமும் உண்டு. 'இந்த டாக்டர், எப்போது பார்த்தாலும் கிரிக்கெட், டென்னிஸ் என்று போயிவிடுகிறார்' என்று என் மீது கோபித்துக் கொண்டு, வேறு டாக்டரிடம் போய்விடும் நோயாளிகளும் உண்டு, என்னை டி.வி.யில் பார்த்ததால் என்மீது அன்பு கொண்டு என்னிடம்தான் டிரீட்மெண்ட் எடுத்துக்கொள்ளவேண்டும் நான்தான் ஆபரேஷன் செய்யவேண்டும் என்று காத்துக் கொண்டிருப்பவர்களும் உண்டு. இதில் குழந்தைகள் நிறையப் பேர் அடங்கும்.

—செல்லப்பா

அதன் முடிப்பை அவிழ்க்க முடியாமல் திண்டாடிச் சற்றுத் தலையைச் சரேலெனக் குனிந்தான். அந்த அசைவைத் தொடர்ந்து 'கண்ணிமைக்கும் நேரத்தில் பிரமிக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடந்தேறின. அடுத்த விநாடி சைவத் துறவியின் உடைவாள் ஆகாசத்தில் பறந்து கொண்டிருந்தது. துறவியார் மண்ணில் புரண்டு கொண்டிருந்தார்.

நிகழ்ச்சிகள் அத்தனை துரிதமாக நடக்குமென்றோ, கரிகாலனுடைய அந்த மெல்லிய இளங்கரங்களில் அத்தனை வலு இருக்குமென்றோ கனவிலும் கருதாத சைவத் துறவி, மண்ணில் புரண்டதும் சொல்லவொண்ணாத ஆச்சரியத்தால் அடியோடு பிரமித்துப் போனார்.

கச்சையை அவிழ்க்கும் பாவனையில் அந்த வாலிபன் சட்டென்று தலையைக் குனிந்து தனது கத்தியின் குறியிலிருந்து விநாடி நேரத்தில் தப்பிக் கொண்டதும் அடுத்த கணமே அந்தக் கத்தியைப் பிடித்திருந்த தம் கையில் அவன் கொடுத்த அடி இருப்புச் சலாகையால் அடிப்பதுபோல் பாய்ந்து கத்தியை விண்ணில் பறக்க விட்டதும், மார்பில் ஒரு குத்து தம்மை மண்ணில் சாய்த்து விட்டதையும் எண்ணிப் பார்த்து, 'பையன் புத்த விஹாரத்தில் வளர்ந்திருந்தாலும் சண்டையில் கைதேர்ந்தவனாக வளர்க்கப் பட்டிருக்கிறான்' என்பதை நினைத்த சைவத் துறவியார், 'அடுத்தபடி என்ன நேரிடுமோ?' என்று கலங்கினார். மின்னல் வேகத்தில் தொடர்ந்த நடவடிக்கைகளால் மண்ணில் கிடந்த சைவத் துறவி, அடுத்தபடியாகக் கரிகாலன் தம்மீது உட்காருவானென்றோ, கத்தியை உருவிக் குத்தி விடுவானென்றோ நினைத்திருந்தால் ஏமாந்தே போனார். ஏதும் நடக்காதது போலவே கரிகாலன் அவர் முன்பாகச் சிறிது நேரம் நின்றான். இடையிலிருந்த உடைவாளைக் கூட அவன் கரம் நாடவில்லை. கண்கள் மட்டும் சைவத் துறவியின் முகத்தில் ஆழப் பதிந்து கிடந்தன. அந்தப் பார்வையைச் சந்திக்கச் சக்தியற்ற துறவியின் கண்கள், பயத்தால் இப்படியும் அப்படியும் உருண்டோடின.

இந்த சம்பவத்துக்குப் பிறகு, துறவி விஷயத்தில் காட்டி வந்த போலி மரியாதையை அடியோடு கைவிட்ட கரிகாலன், ''டேய் எழுந்திரு,'' என்று உத்தரவிட்டான்.

கரிகாலனுடன் சகவாசம் செய்த அந்தப் பதினேழு நாட்களாக, இத்தகைய அவமரியாதைப் பேச்சை அவன் வாயிலிருந்து கேட்காத அந்தப் போலித் துறவி, ''கரிகாலா! இது நியாயமல்ல...'' என்று ஆரம்பித்தார்.

அவருடைய வார்த்தையைப் பாதியிலேயே வெட்டிய கரிகாலன், ''எது நியாயமல்ல? நீ. போலித் துறவியென்பதையும், சேரநாட்டு ஒற்றன் என்பதையும் அறிந்திருந்தும், உன்னைக் கும்பகோணம் புத்த மடாலயத்திலேயே பிடித்துக் கொடுக்காததா? அல்லது இராஜேந்திர சோழ தேவன் போரிட்டுச் சேரனிடமிருந்து பெற்ற மாலையை நீ திருடிக் கொண்டு வந்திருக்கிறாய் என்பதைக் கும்பகோணம் மடாலயத்தில் நாம் தங்கிய முதல் நாளிரவே அறிந்த நான், உன்னை அன்றே காட்டிக் கொடுக்காததா? அல்லது நீ அயோக்கியனென்று உணர்ந்தும், உன்னைத் துணைகொண்டு அங்கிருந்து புறப்பட்டேனே அதுவா? மேற்குச் சாளுக்கிய நாட்டு எல்லைக்கு அழைத்துப் போக வேண்டிய நீ, வேங்கி நாட்டு எல்லையில் என்னைக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறாயென்பதை அறிந்தும், உன்னை இன்னும் கொல்லாதிருக்கிறேனே அதுவா? எது நியாயமல்ல?''



பையன் 1: கடைசியாக இந்த ஊரில் எப்படா மழை பெய்தது?

பையன் 2: வேறு யாரையாவது கேளு! நமக்கு எட்டு வயசுதானே ஆகுது?

குதிரை: ஹா! ஹா!

—உ.ரா.

---

என்று குரலில் கோபம் பூரணமாகத் தொனிக்கக் கேட்டான்.

''நான் போலியா! நான் துறவியல்லவா? நாம் இருக்குமிடம் வேங்கி நாடா!'' என்று ஏதுமறியாதது போல் பாசாங்கு செய்தார் துறவி.

அந்த பாசாங்கைக் கண்ட கரிகாலன் பெரிதாக நகைத்தான். ''டேய் துறவி! கரிகாலனை அடிமுட்டாளென்று நினைத்துக் கொண்டாயா? மனிதனுடைய அயோக்கியத்தனத்தைப் பொய்த் தாடியும் மீசையும் மறைத்துவிடுமா?

''அகத்தினழகு முகத்தில் தெரியும் என்ற பழமொழியை நீ கேட்டதில்லையா? காவிரிக் கரையில் உன்னைச் சந்தித்த போதே உன்னைப் பற்றிப் பெரிதும் சந்தேகித்தேன், உன் கண்கள் சொல்லின உன் கதையை. அத்துடன் உன் கன்னத்தில் அதோ இருக்கும் வெட்டுக் காயம் கதையை ஊர்ஜிதப்படுத்தியது. மனோதத்துவ சாஸ்திரத்தை நான் படிக்கவில்லையென்று நினைக்கிறாயா? சூடாமணி விஹாரத்தின் தந்தை எனக்குச் சகலத்தையும் போதித்திருக்கிறார். வெளி உலகத்துடன் நான் பழகவில்லை. ஆனால் அதைப்பற்றி நிரம்பப் படித்திருக்கிறேன் சரித்திரத்தில். உன்னைப் போன்றவனைக் கண்டதும் ஏமாந்திருப்பேனென்று நினைக்கிறாயா? உன்னைக் கண்டதும் உன் யோக்கியதையை உணர்ந்து கொண்டேன். என்னுடன் புத்த மடாலயத்துக்கு வர ஒட்டிக் கொண்டதும் எச்சரிக்கையாயிருந்தேன். அன்றிரவு நான் தூங்கி விட்டதாக நினைத்துத் தலை மயிரையும் தாடியையும் கலைத்துவிட்டுக் காவிப் பையிலிருந்து செங்கதிர் மாலையை எடுத்து அழகு பார்த்தாயே, அதையெல்லாம் நான் கவனிக்கவில்லையென்றா நினைத்தாய்? சோழ வீரர்கள் பிடித்துக்

கொண்டால் நீ தப்பி விடுவதற்காக மாலையை என் கச்சையில் பத்திரப்படுத்தி யதை நான் பார்க்கவில்லையென்றா மனப் பால் குடித்தாய்? அத்தனையும் பார்த் தேன். மாலை என்னிடமிருந்ததால், அன்று முதல் நீ என்னை நிழல்போல் பிடித்துக் கொண்டதும் எனக்குத் தெரியும். அரையன் இராஜராஜன் இருக்கு மிடம் சென்று அகப்பட்டுக் கொண்டால், இரத்தின மாலை மீண்டும் சோழ மன்னன் பொக்கிஷத்துக்குப் போய் விடுமே என் பதற்காக, வேங்கி நாட்டுக்கு என்னைக் கொண்டு வந்துவிட்டாய்! நான் ஆகாயத்தை ஆராய்ந்து இருப்பிடத்தை அறிந்துகொண்டு விட்டேனென்பதை உணர்ந்ததும் கத்தியைக் காட்டிப் பய முறுத்தி மாலையை வாங்கிக் கொண்டு ஓடிவிடலாமெனத் திட்டம் போட்டாய். ஆனால், எந்தத் திட்டத்துக்கும் ஒரு முடிவு உண்டு. உன் திட்டத்திற்கு முடிவு இன்று வந்து விட்டது!'' என்று விளக்கிய கரி காலன், எழுந்திரு என்பதற்கு அடையாள மாகத் தன் விரலைத் துறவியை நோக்கி அசைத்தான்.

எழுந்திருந்த அந்தப் போலித் துறவி ஒரு விநாடி ஆச்சரியம் ததும்பும் கண்களுடன் கரிகாலனை நோக்கிவிட்டு, ''இது வேங்கி நாடு என்று உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டார்.

''வரும்போதே கிருஷ்ணா நதியைக் கவனித்தேன். மேலைச் சாளுக்கிய நாட்டின் எல்லையாயிருந்தால், துங்கபத்திரா நதி தீரத்தில் இருக்க வேண்டும். ஆனால் கிருஷ்ணா நதி தீரத்துக்கு வந்து விட்டோம்...'' என்ற கரி காலன் பேச்சை இடைமறித்து வெட்டிய துறவி, ''இது கிருஷ்ணா நதியென்று எப்படித் தெரியும்?'' என்று கேட்டார்.

''துங்கபத்திரா இத்தனை அகலமுள்ளதல்ல. கிருஷ்ணாவின் ஆழமும் அதற்குக் கிடையாது,'' என்று விளக்கிய கரிகாலன், ''தவிர, இதோ பார், நாம் வடமேற்கு எல்லையிலிருந்தால் அதோ புஷ்பக் கொத்துபோல் தெரியும் புஷ்ப நட்சத்திரக் கூட்டம் அந்த இடத்தில் இருக் காது. சப்த ரிஷி மண்டலமும் இப்படித் தலைகீழாகத் திரும்பியிருக்காது,'' என்று ஆகாயத்தையும் சுட்டிக் காட்டினான்.

சேரநாட்டு ஒற்றனான சைவத் துறவி மிரள மிரள விழித்தார். ''சரி, உள்ளே சென்று உன் காவிப் பையை எடுத்துக் கொண்டு வா,'' என்று விரட்டி னான் கரிகாலன்.



''திரைப்பட உலகில் இதுவரைக்கும் யாருமே டச் பண்ணாததை நான் டச் பண்ணப் போறேன்னு டைரக்டர் பேட்டியிலே சொல்லி யிருக்காரே, அது என்னவா இருக்கும்?''

''புதுமுகமா இருக்கும்!''

—கடுவை கோபால்சாமி

''எங்கு அழைத்துப் போகப் போகிறாய்?'' என்று வினவிய போலித் துறவியின் குரல், சற்றே ஆட்டம் கொண் டிருந்தது.

''நாம் போக வேண்டிய இடத்துக்கு.''

''போக வேண்டிய இடம் எது?''

''மேலைச் சாளுக்கிய நாட்டு எல்லை. அரையன் ராஜராஜன் பாசறை.''

''அது மேற்குக் கோடி. நாம் கிழக்குக் கோடியிலிருக்கிறோம்.''

''செய்த தவற்றைத் திருத்த உனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கிறேன்.'' கரிகாலனுடைய இந்தப் பதிலில் அடங்கிய உறுதியைக் கவனித்த துறவி, வேறு வழி யில்லாமல் காவிப் பையை எடுத்து வர ஓர் அடி எடுத்து வைத்தவர் சட்டென்று, ''அது என்ன சப்தம்?'' என்றார்.

கரிகாலனும் சப்தம் வந்த திக்கை நோக்கித் திரும்பினான். குதிரைகளின் குளம்படிச் சப்தம் வெகு பலமாகக் கேட்டது. ''குதிரை வீரர்கள் போல் இருக் கிறது,'' என்றான் அமைதியாக.

அந்த அமைதி போலித் துறவிக்கு இல்லாது போகவே அவர் நெஞ்சு பட படத்தது. ''இதோ வந்து விட்டேன். அவர்கள் வருமுன்னர் இந்த இடத்தை விட்டு ஓடிவிட வேண்டும்,'' என்று கூறிக் கொண்டு சத்திரத்திற்குள் ஓடினார். அவர் வெளியே வருவதற்கும், குதிரை வீரர்கள் பத்துப் பேர் அந்தச் சத்திரத்திற்குள் வரு

வதற்கும் சரியாயிருந்தது. வெளியில் காவிப் பையுடன் வந்த துறவியைக் கண்ட அந்தக் குதிரை வீரர்களின் தலைவன், ''அதோ இருக்கிறான். பிடியுங்கள் அவனை!'' என்று கூவினான்.

தலைவனை நோக்கிய துறவி, ''அப்பனே! சிவனடியார்களை மரியாதைக் குறைவாகப் பேசுவதும், அவர்களைப் பிடித்துத் தொந்தரவு கொடுப்பதும் வேங்கி நாட்டுப் பழக்கமோ!'' என்றார்.

''ஆமாம். துறவியை எதற்காக இம்சை செய்ய வேண்டும்?'' என்று அதற்குள் அங்கு கூடிவிட்ட கூட்டத்திலிருந்து ஒருவன் பரிந்துகொண்டு முன் வந்தான்.

''இவன் திருடன்!'' என்றான் குதிரை மீதிருந்த தலைவன்.

''நான் திருடனல்லப்பா! வேண்டுமானால் என்னுடன் வந்திருக்கும் தம்பியைக் கேள்,'' என்று கரிகாலனைச் சுட்டிக் காட்டினார் துறவி.

கரிகாலன் மீது கண்களை ஓட்டிய வீரர்கள் தலைவன், ''சரி, இவனையும் சிறை செய்யுங்கள்,'' என்றான்.

''நான் அவனுக்குத் தோழனல்ல,'' என்று கோபத்துடன் கூறிய கரிகாலனைப் பார்த்து, வீரர்கள் தலைவன், ''நீங்கள் இந்தப் பக்கம் வரும் தகவல் நேற்றே கிடைத்து விட்டது. மரியாதையாக வந்துவிடு,'' என்று சொல்லி விட்டுத் தன் வீரர்களை நோக்கி, ''இவர்களைப் பிடித்துக் கொண்டு வாருங்கள். ரத்தினமாலை இவர்களிடம்தான் இருக்கிறது,'' என்று உத்தரவிட்டான்.

கரிகாலனுக்குத் தன் நிலைமை நன்றாகப் புரிந்து விட்டது. ரத்தினமாலை தன்னிடமிருப்பதால், தான் குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் யாரும் நம்ப மாட்டார்களென்று தீர்மானித்துக் கொண்டதால் அங்கிருந்து தப்புவதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்து, பக்கத்திலிருந்த குதிரை வீரன் மீது பாய்ந்து, அவன் வாளை உறையிலிருந்து ஒரே நொடியில் உருவிக் கொண்டதன்றி, அவனையும் கீழே தள்ளிவிட்டு, அந்தப் புரவியின் மேல் பாய்ந்து அதைத் தட்டி விட்டான். புரவியும் கூட்டத்தில் பாய்ந்து, மின்னல் வேகத்தில் பறந்து சென்றது.

கூட்டத்தில் ஏற்பட்ட குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு துறவியும் மறைந்துவிட்டதால், கோபம் தலைக்கேறிய வீரர்களின் தலைவன், குதிரை மீது ஓடியவனையாவது பிடிப்போமென்று கரிகாலன் சென்ற திக்கில் தன் குதிரையையும் தட்டிவிட்டான்.

துரிதமாகக் கரிகாலன் பெரியதொரு கோட்டைச் சுவருக்கருகில் வந்து சேர்ந்து, எதிரே நோக்கி, இனி தப்ப வழியில்லை என்பதை அறிந்து திகைத்து நின்றான். கோட்டைச் சுவர் வீதியை அடைத்து நின்றது. எதிர்ப் பக்கம் போனால் வீரர்கள் வாயில் நுழைய வேண்டும். என்ன செய்வதென்று அறியாது திகைத்த கரிகாலன், குதிரை மீதிருந்து கீழே குதித்துக் கோட்டைச் சுவரிலிருந்த பெரிய மரக் கதவின்மீது சாய்ந்தான்.

திடீரென்று திறந்தது அந்தக் கோட்டைக் கதவு. கரிகாலன் பிரமித்து, உள்ளே நுழைந்து, கதவைச் சாத்தி, பெரிய இரும்புத் தாழ்ப்பாளை எடுத்து மாட்டினான். கதவு திறந்த விந்தையைவிட இன்னும் பெரிய அதிசயம், அவன் பிரவேசித்த இடத்தில் காத்துக் கொண்டிருந்தது. கண்களை அப்படியே பறிக்கும் படியான எழிலுடன் கதவுக்கு அப்பால் நின்றிருந்தாள் ஒரு பேரழகி. அவளுடைய அபார எழிலைக் கண்டு சித்தம் ஸ்தம்பிக்க, அப்படியே சிலையென நின்று விட்டான் கரிகாலன். ''திறந்தது கோட்டைக் கதவல்ல, சொர்க்கத்தின் கதவு போலிருக்கிறது,'' என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டான். நின்றிருந்த அழகி, அவனைக் கிட்டே வரச் சொல்லிச் சைகை செய்ததும், கொஞ்ச நஞ்சமிருந்த சுய உணர்வையும் அடியோடு இழந்த கரிகாலன், ஏதோ மந்திரத்தால் இழுக்கப்பட்ட மரப் பாவையைப் போல், அவளை நோக்கி மெல்ல இரண்டடி எடுத்து வைத்தான்.

(தொடரும்)





# மன்னன் மகள்

## சாண்டில்யன்

12-3-87

### 6. நந்தவனத்து மோகினி

இரவு மூன்றாம் ஜாமத்தை எட்டிக் கொண்டிருந்ததால் பாதி தேய்ந்துபோய் இரண்டாக வெட்டப் பட்ட பெரிய வெள்ளி நாணயம்போல், வான வீதியில் உதயமான கிருஷ்ண பட்சத்துச் சந்திரன், அதுவரை பிரமாத மாக ஜொலித்துக் கொண்டிருந்த நட்சத்திரங்களின் கொட்டத்தை அடக்கிப் பூமி மீதும் தன் குளிர்க் கிரணங்களை உதிர்க்கவே, கோட்டைக்குள்ளிருந்த நந்தவனப் பிரதேசம் மிக ரம்மியமாகக் காட்சி அளித்தது. எதிரே நின்றவாறு தன்னை அழைத்த அந்தப் பேரழகியை நோக்கி நகர்ந்த கரிகாலன், அவள் அழகிற்குத் தகுந்த சூழ்நிலையும் அங்கே நிலவி யிருப்பதைக் கண்ட ஆச்சரியத்தில், சுற்றிலும் ஒரு முறை தன் கண்களை ஓட விட்டான்.

ஆகாயத்தை அளாவி நின்ற பிரும்மாண்டமான கோட்டைச் சுவர் வெகு தூரம்வரை வளைந்தோடுவதை யும், இருபதடி தூரத்துக்கு ஒருதரம் மேலே ஏறிச் செல்லப் பெரிய படிகள் சுவரை அணைத்து நிற்பதையும் கண்ட கரிகாலன், ஏதோ பெரிய போர் அரணுக்குள் தான் இருப்பதைத் தெரிந்து கொண்டான். சுவரின் உச்சி மட்டம் இருந்த மாதிரியிலிருந்தும், தொலை தூரத்திற்கப்பால் இருந்த சுவரின் ஒரு பகுதியில் ஆயுதம் தரித்த வீரர்கள் பாராக் கொடுத்துக் கொண்டு நின்றதிலிருந்தும், சுவர் சுமார் நான்கடி அகலத்துக்காவது நிர்மாணிக்கப் பட்டிருக்க வேண்டுமென்பதைக் கரி காலன் சந்தேமறப் புரிந்துகொண் டான். யுத்த சாத்திரத்தை நன்றாக அறிந்த அவனுக்கு இந்தக் கோட்டை சாளுக்கியர்களின் போர்ப் பாதுகாப்பு முறைப்படி அமைக்கப்பட்டிருக் கிறதென்பதையோ, ஆகவே தான் கீழைச் சாளுக்கியயர்களின் மிக முக்கிய மான கோட்டைக்குள் சிக்கியிருப் பதையோ அறிய, அதிக நேரம் பிடிக்க வில்லை.

சாளுக்கிய வீரர்களிடமிருந்து தப்பிய தன்னை விதி உந்தி, சாளுக்கியர்களின் கோட்டைக்குள் சிக்க வைத்தது எத்தனை விந்தை என்று நினைத்துப் பெருமூச்சொன்றும் விட்டான். அத்தனை ஆபத்தான நிலையிலும், அந்தக் கோட்டையின் அழகையும், சாளுக்கியர்களின் பாதுகாப்பு ஏற்பாடுகளையும், நந்தவனப் பிரதேசத்தின் வனப்பையும் ரசிக்காதிருக்கக் கரிகாலனால் முடியவில்லை.

கோட்டையும், கோட்டைக்குள்ளிருந்த கட்டிடங்களும் நந்தவனத்தின் பெரிய மரங்களும், சிறிய செடிகளும் செடிகளையும் மரங்களையும் தழுவி நின்ற கொடிகளும் வெண்ணிலவிலே கண்ணைப் பறிக்கும் எழிலுடன் விளங்கின. கோட்டைச் சுவரை அடுத்து நின்ற பெரிய நந்தவனத்துக்கு அப்பால், தூரத்தே தெரிந்த பிரும்மாண்டமான கட்டிடமும் அதன் ஸ்தூபிகளும் நிலவைக் கிழித்துக்கொண்டு எழுந்த பல பாணங்கள் போல் ஆகாயத்தை நோக்கிக் கிளம்பி நின்றன. அந்தக் கட்டிடத்தையும் நந்தவனத்தையும் பிரித்து நின்ற சிறிய இடைச்சுவர், தான் அந்தக் கட்டிடத்தைப் போல் அத்தனை உயரமில்லையே என்ற துக்கத்தால் உள்ளம் கறுத்து அந்தக் கருமைக்கு அடையாளமாகத் தன் கறுப்பு நிழலைத் தோட்டப் பகுதியில் பாய்ச்சி நின்றது. சுற்றிலும் ஓடிய பெரிய கோட்டைச் சுவர் கூட தனக்குக் கீழே இருந்த ஆயுத அறைகளை மறைக்கும் நோக்கத்துடன் பக்கவாட்டில் நிழலை ஆங்காங்கு வீசி, கறுப்புத் திரையைப் பல இடங்களில் விரித்திருந்தது. நந்தவனத்தின் மற்றோர்



ஓரத்திலிருந்த பெரிய மரங்கள் கரி காலனுக்கு அபயம் அளிக்கவேண்டுமென்ற எண்ணத்தாலோ என்னவோ, தங்கள் இருப்பிடத்திற்குள் சந்திர கிரணங்களை வரவிடாமல் தடுக்க முயன்றன. இருப்பினும் வெண்மதிக்குத் துணையாய் நின்ற ஒரு சில கிளைகள் மட்டும் இப்படி யும் அப்படியும் காற்றில் அசைந்து, இலைகளின் இடுக்குகளின் வழியாகக் கிரணங்களை உட்புகவிட்டு "தப்பி வந்த திருடன் இதோ இருக்கிறான்," என்று காட்டிக் கொடுக்க முற்பட்டன.

ஆனால் இப்படி எதையும் ஒளிக்க இஷ்டப்படாத நந்தவனத்தின் நடுப் பிராந்தியத்தில் பலப் பல மலர்கொடி கள் தங்கள் புஷ்பங்களை நிலவின் அமுதத்தில் குளிப்பாட்டிக் கொண்டு நின்றன. இயற்கையின் அந்த அழகையும், இரவின் அந்தக் குளுமையையும் அனுபவிக்கக் கொடுத்து வைக்காத மயில் கள் இரண்டு சற்றுத் தூரத்தே புல் தரையில் உறங்கிக்கொண்டிருந்தன. அந்த மயில்களுக்கு அப்பாலிருந்த தடாகத்தின் தண்ணீர்கூட இரவின் அந்த இந்திர ஜாலத்தில் சொக்கி அசைவற்று நின்றது. தண்ணீருக்குள்ளிருந்த மீன்களுமா இரவில் நித்திரை செய்யும்! அவை நித்திரை செய்தாலும், கூம்பாமல் கண் களை அகல விரித்து நின்ற ஆம்பல்கள் ஏன் அவற்றை எழுப்பி இரவின் அந்த மகோன்னத இன்பத்தை அனுபவிக்க அழைக்கக் கூடாது? அழைக்கத்தான் இல்லையே, ஆம்பல்களாவது சற்றுத் தலைகளை அசைத்து இரவில் ஆனந்தக் கூத்தாடி, தடாகத்தின் சிற்றலைகளை எழுப்பி, பல அற்புதங்களைச் சிருஷ்டிக் கலாமே! அவையும் ஏன் அப்படிப் பிரமித்து நிற்க வேண்டும்? எங்கும் ஸ்தம்பித்துப் போன நிலை. மரக்கிளைகள் மட்டுமே சற்று விலக்கு. அந்தச் சலனமும் குறிப் பிடத்தக்க அளவுக்கு இல்லை.

தண்ணீர் நிறைந்து ஸ்தம்பித்து நின்ற அந்தத் தடாகத்துக்கு அக்கரையில் நின்றது ஒரு வசந்த மண்டபம். நன்றாக வெள்ளை வைத்ததால் இயற்கையாகவே வெண்மைமிக்க அதன் சுவர்களும் தூண் களும் இரவின் அந்தப் பால் நிலவிலே இன்னும் அதிக வெளுப்பாகத் தெரிந்தன. அதன் தூண்களைத் தழுவி ஓடிய சம்பங்கிக் கொடிகள் மட்டும் தூண்களின் பகுதிகளைப் பச்சையாக அடித்ததன்றி மேல் தளத்தின் ஒரு பகுதியையும் கௌவிக் கொண்டிருந்தன. அவற்றிலிருந்து தொங்கிய சம்பங்கி மலர்க் கொத்துக்கள், தங்கள் மஞ்சள் வாயைத் திறந்து, சுகந்தத்தை நாற்புறமும் சூழவிட்டுக் கொண்டிருந்தன.

வசந்த மண்டபம் தடாகத்துக்கு அப்பால் சற்றுத் தள்ளி நின்றதால், கிட்டத்தட்டக் கோட்டைச் சுவரின் ஒரு பகுதிக்கு அருகாமையில் இருந்ததையும், மண்டபத்திலிருந்து ஓடிய பின்தளம்

## திடுக்கிட வைக்கும்









சுவரில் முட்டியிருந்ததையும் கவனித்த கரிகாலன், அதற்குப் பின்னால் என்ன இருக்கிறதென்பதையும் புரிந்து கொண்டான். கோட்டை மதிலின் ஒரு பகுதி கிருஷ்ணா நதியை அடுத்து, நிற்கவேண்டும் என்றும், இந்த வசந்த மண்டபத்தை அடுத்து ராஜ ஸ்திரீகளின் ஸ்நான கட்டம் இருக்க வேண்டும் என்றும் கரிகாலன் தீர்மானித்துக் கொண்டான். அதைத் தவிர, நந்தவனத் தடாகத்திற்கும் கிருஷ்ணா நதியிலிருந்தே நீர் வருகிறதென்றும் ஊகித்துக் கொண்டான். ''இல்லாவிட்டால் இத்தனை கோடை காலத்தில் தடாகம் எப்படிப் பூரணமாயிருக்க முடியும்?'' என்றும் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

எதிரே நின்று தன்னை அழைத்த அந்த மங்கையின் சூழ்நிலையை அளவெடுத்ததால் மனத்தை எங்கோ சில விநாடிகள் பறக்கவிட்ட கரிகாலன், கோட்டைக் கதவின் அருகில் திடீரென்று குதிரைகளின் காலடிச் சப்தம் வருவதைக் கேட்டு, முன் எடுத்து வைத்த காலைப் பின்னுக்கு வாங்கிச் சட்டென்று நின்று உற்றுக் கேட்கத் தொடங்கினான். அடுத்த வினாடி குதிரைகள் கதவை நெருங்கி விட்டதற்கான ஒலிகளும், வீரர்கள் திடீர் திடீரெனக் குதிரைகளிலிருந்து குதிக்கும் சப்தமும் கேட்கவே, சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த அந்த ஏந்திழையை நோக்கிய கரிகாலன், அவள் முகத்திலும் கவலைக் குறிகள் படர்வதைக் கண்டு, பேசாமலிருக்கும்படி அவளுக்குச் சைகை செய்து, தொடர்ந்து வந்த வீரர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை ஆராயக் கதவுப் பக்கம் சென்று சற்று உற்றுக் கேட்கத் தொடங்கினான்.

''அவன் இந்தப் பக்கம்தான் வந்தான்,'' என்றது ஒரு குரல். அந்தக் குரல் தன்னைப் பிடிக்க உத்தரவிட்ட வீரர்களின் தலைவனுக்குச் சொந்தம் என்று முடிவு செய்து கொண்டான் கரிகாலன்.

''இந்தப் பக்கம் வந்தால் அவன் எங்கே போயிருக்க முடியும்?'' என்று வினவினான் மற்றொரு வீரன்.

''இந்தக் கதவின் வழியாகக் கோட்டைக்குள் புகுந்திருக்க வேண்டும்,'' என்று திட்டமாக அறிவித்தான் தலைவன்.

''இருக்க முடியாது பிரபு! இது நந்தவனத்தின் கதவு. இதை எப்போதுமே திறப்பதில்லை. திறந்து உள்ளே நுழைந்தால் மரண தண்டனை கிடைக்கும்,'' என்றான் ஒரு வீரன்.

''எதற்கும் திறந்து பார்.''

''தண்டனை கிடைக்குமே பிரபு?''

''அரசாங்க அலுவலாக நுழைகிற வீரர்களுக்கு எந்தத் தண்டனையும் கிடையாது.''

## சில அறிவிப்புகள்...










—நடேஷ் ஷா

# 47 ஆண்டுகளுக்கு முன்பு எங்களுக்கு ஒரு காட்சி புலப்பட்டது



**1939.** நாடு முழுதும் சுதந்திர உதயம் என்னும் வைகறை ஒளி லேசாகப் பரவத் தொடங்கிய சமயம். ஆயிரமாயிரம் உள்ளங்களில் துடிப்பும் ஆர்வமும் பொங்கிப் பூரித்திருந்த காலகட்டம். மூவர்ணக் கொடி இன்னும் பறக்கத் துவங்கவில்லை. இச்சமயம் ஒரு நிறுவனம் நமது முன்னோர்களின் தொலைநோக்கை பகிர்ந்துகொண்டது. அது, நமது நாடு பொருளாதாரத் துறையில் தன்னையே சார்ந்திருக்க வேண்டும் என்ற தொலைநோக்கு தான். அந்த நிறுவனம்: டால்மியா சிமெண்ட்.

சிமெண்ட் உற்பத்தித் தொழிலில் முதல் முதல் இறங்கிய நிறுவனங்களில் இது ஒன்று. மிக உயர்ந்த நிர்ணயங்களின் அடிப்படையில், தரத்திற்கு உத்திரவாதம் தரக்கூடிய ஒரு சில பெயர்களில் இது ஒன்று. ஆகவே மிக முக்கியமான பாதுகாப்புத்துறை பணிகளுக்காக நாட்டின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்கு



## கிசு கிசு

தலைவர் ஒருவரின் புகழைக் குறைக்க, மந்திரவாதி ஒரு யாகம் செய்ய வேண்டுமென்று சொன்னாராம். மகாபலிபுரம் அருகே உள்ள உத்தண்டி கிராமத்தில் யாகத்திற்கு ஏற்பாடானது. தலைவர் உபயோகிக்கும் பொருள் ஒன்று வேண்டும் என்றார் மந்திரவாதி. தலைவர் மேல் துண்டு அணிவாராம். அந்தத் துண்டை எப்படியோ கைப்பற்றிக் கொண்டு வந்ததாம் எதிர்கோஷ்டி.

மதுரையை ஆண்ட மன்னனை, கதிர் அரிவாள் கட்சி நடவடிக்கைகளில் பங்கு கொள்ளாதவாறு நீக்கி வைத்திருக்கிறார்கள். அவர் மேடைகளில் பேசவோ, திருமண நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவோ கட்சி மேலிடத்தில் முன் அனுமதி பெற வேண்டுமாம்.

மூன்றெழுத்துக் கட்சி நடத்திய பேரணி ஊர்வலத்தின்போது, மாவட்டச் செயலாளரிடம், 'நான் சிறையில் இருந்தபோது தாடி டைரக்டர் திரட்டிய ஒரு கூட்டம் இதைவிடப் பெரிதாக இருந்ததே!' என்று தலைவர் ஒப்பிட்டுப் பேசியதில் செயலாருக்கு வருத்தமாம்.

—விப்ரன்

அடுத்தபடி கதவைத் திறக்க முயற்சி நடந்தது. திடும் திடும் என்று நாலைந்து உடல்கள் மோதப்பட்ட சப்தங்களைக் கேட்ட கரிகாலன், தனக்குள்ளேயே நகைத்துக் கொண்டான்.

''நாலடி அகலச் சுவர் கொண்ட கோட்டையை அடைக்க எத்தனை பெரிய கதவைப் போடுவார்கள்! போதாக் குறைக்கு இருப்புச் சலாகைகள் வேறு பின் புறத்தில் அடைத்து நிற்கின்றன. இதைத் திறக்க முற்படுகிறார்களே! சாளுக்கிய வீரர்களுக்கு மூளை மட்டும் கட்டை போலிருக்கிறது!'' என்று தனக்குள் பேசிக் கொண்டான் கரிகாலன். ஆனால், வெளியேயிருந்த வீரர்கள் தலைவன் இட்ட மற்றோர் உத்தரவு அவனைத் தூக்கிவாரிப் போட்டது.

''அவன் நந்தவனத்திற்குள்தான் எங்கேயோ இருக்கிறான். அவனைத் தப்ப விட்டால் ஒழிந்தோம். வாருங்கள், அரண்மனை வாசல் வழியாகப் புகுந்து வருவோம்,'' என்று உத்தரவிட்டான் வீரர்கள் தலைவன். அடுத்த வினாடி குதிரைகள் வாயுவேகத்தில் பறந்து செல்லும் சப்தம் கேட்டது. மிகுந்த கலவரத்துடன் திரும்பிய கரிகாலன் தனக்கு வெகு அருகே அழகி நின்றிருப்பதையும், அவள் முகத்தில் சொல்லவொண்ணாக் கவலை படர்ந்திருப்பதையும் கண்டான். அடுத்த வினாடி, பெருத்த ஒரு சந்தேகமும் அவனைப் பிடித்து உலுக்கத் தொடங்கியது. 'இத்தனை ராத்திரியில் தன்னந்தனியாகத் தோட்டத்துக்குள் மரக் கிளைகளுக்கிடையே மறைந்துலாவும் இந்த மங்கை யார்? இவள் மானிடப் பெண்தானா! அல்லது மோகினிப் பிசாசா?' என்ற சந்தேகம் தலைக்கேறவே, அவள் கால்களை நோக்கித் தன் கண்களைச் செலுத்தினான்.

அவன் எண்ணங்களை அறிந்த அந்தப் பெண்ணின் வதனத்திலே புன்னகை அரும்பியது. வாயைத் திறந்து இன்னிசையின் ஸ்வர ஜாலங்களைப் போல் உதிர்ந்த வார்த்தைகளால், ''பயப்பட வேண்டாம். நான் பிசாசல்ல, மானிடப் பெண்தான்,'' என்று தைரியமூட்டினாள்.

''அதில் சந்தேகமில்லை. பிசாசுகளின் கால் தரையில் பாவாது. நீங்கள் யார் என்பது தெரியவில்லையே?'' என்றான் கரிகாலன்.

''பிறகு சொல்கிறேன். உன்னைத் துரத்தியது யார்?'' என்று அதிகாரத் தோரணையில் கேட்டாள் அவள்.

'உன்னை' என்று அவள் ஏக வசனத்தில் தன்னை அழைத்ததைக் கரிகாலன் ரசிக்காததால், சற்று கடுப்பாகவே பதில் சொன்னான்: ''யார் துரத்துவார்களோ அவர்கள்தான்.''

''இந்நாட்டு வீரர்களா?''

''ஆமாம்.''

''சரி சரி; அப்படியானால் சீக்கிரம் நீ எங்காவது மறைந்துகொள்ள வேண்டுமே!''

''மறைந்துகொள்ள வேண்டுமென்பது வாஸ்தவம். மார்க்கம்தான் தெரியவில்லை.''

''இப்படி வா,'' என்று சொல்லி விட்டு, அவள் முன் நடந்தாள். கரிகாலன் பின் நடந்தான். வெகு துரிதமாக நடந்து தடாகத்தைச் சுற்றிக்கொண்டு வசந்த மண்டபத்துக்கு அருகில் வந்து சேர்ந்த அவள், மண்டபத்தின் மேலேறி, தளத்தைத் தாங்கி நின்ற தூண் ஒன்றைப் பிடித்துக் கொண்டு திரும்பினாள். அப்படித் திரும்பிக் கரிகாலனைப் பார்த்து ஏதோ சொல்ல வாயெடுத்த அந்த மங்கை, சட்டென்று நின்று தூரத்தேயிருந்த கட்டிடத்தைத் தடுத்து நின்ற இடைச் சுவருக்காகக் கண்களை ஓட்டி, ''கெட்டு விட்டது குடி,'' என்று பதைபதைக்கக் கூறினாள். கரிகாலன் அவள் கண் சென்ற திக்கை நோக்கி, தனக்கு முடிவு காலம் வந்து விட்டதென்று தீர்மானித்துக் கொண்டான். இடைச்சுவரின் கதவுகள் வெகு வேகமாகத் திறக்கப்பட்டன. உருவிய வாள்களை வலக்கையிலும் பெரிய பந்தங்களை இடக் கையிலும் பிடித்த வீரர்கள் பதின்மர், படுவேகமாக வசந்தமண்டபத்தை நோக்கிப் பாய்ந்து வந்தார்கள்.

(தொடரும்)







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 81'ம் பக்கம்

நாடகாசிரியர் ராது கூறுகிறார்:

டி.வி படங்களில் இரட்டை வேடக் காட்சி வந்தால் அதை வீடியோ காமெராவில் எடுக்க முடியாது என்றும், ஆகவே என்னுடைய 'அவரேதான் என் கணவர்' டி.வி. தொடரில், தங்கவேலு இடம் பெற்ற இரட்டை வேடக் காட்சிகளை 35 எம்.எம். நெகட்டிவ்வில் படமாக்கி, பிராசஸ் செய்து, பிரிண்ட் எடுத்து அதை மறுபடியும் வீடியோவில் பதிவு செய்து காட்டியதாகவும் 20.11.86 குமுதம் இதழில் சொல்லியிருந்தேன்.

அந்தச் செய்தி குமுதத்தில் வெளியான அன்று இரவு செவன் சேனல் நாராயணன் என்ற காமெராமேன் எனக்குப் போன் செய்தார். இரட்டை வேடப் பகுதியைத் தான் வீடியோவில் எடுத்துக் காட்டுவதாகச் சொன்னார். எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அவர் அழைப்பை ஏற்றுப் போய்ப் பார்த்தேன். என் கண் முன்னாலேயே, மாலா என்ற பெண்ணை வைத்து என்னை ஒரு பக்கம் வசனம் எழுதித் தரச் சொன்னார். எழுதித் தந்தேன். முதலில் ஒரு பகுதியை படமாக்கினார். அடுத்த பாதியை எடுக்க அந்தப் பெண்ணைச் சேலையை மாற்றிக் கொண்டு உட்கார வைத்தார். முதலில் எடுத்ததை டி.வி.யில் ஓடவிட்டு, 'டைமிங்' பார்த்துக் கொண்டு, அதற்குத் தகுந்தபடி பேச வைத்து எடுத்தார். இவ்வளவும் ஒரே காமெராவில்தான். பதினைந்தாவது நிமிடம், இரட்டை வேடத்தை டி.வி.யில் போட்டுக் காட்டினார். மிகவும் இயற்கையாக இருந்தது.

ராதுவின் பாராட்டைப் பெறும் நாராயணன் ஒரு பி.ஏ. பட்டதாரி. வீடியோவில் இரட்டை வேடம் எடுக்கக் கூடிய கருவி இந்தியாவிலேயே நாலு பேரிடம்தான் இருக்கிறது என்கிறார்.

—செல்லப்பா






நாராயணன்

# என் அம்மாவைக் கொலை செய்யப் போகிறேன்



''சத்தியம் பண்ணித் தரலைன்னா நான் உன்கூட அப்புறம் பேசவே மாட்டேன்.''

வரதன் சட்டென்று அவருடைய வலது உள்ளங்கையைப் பற்றினான். காய்ந்த மேடு களையும், அழுக்கில் ரகசிய மாகிவிட்ட ரேகைகளையும் வருடி விட்டான். நடுக் கையில் கிள்ளி னான்.

''சத்தியமா எங்கம்மாவைப் பிசாசுன்னு சொல்ல மாட்டேன். போதுமா?''

''இன்னொரு சத்தியம் பண்ணித் தா.''

நீலக்கண்ணன் தன் கையை மறுபடியும் விரித்து நீட்டினார். ''அம்மாவைக் கொல்வேன் அது இதுன்னு இனிமே பேசக் கூடாது.''

''போங்க தாத்தா. நான் அந்தச் சத்தியம் பண்ண மாட் டேன்,'' என்று அவரிடமிருந்து திமிறிக் கொண்டு எழுந்தான்.

நீலக்கண்ணன் அவருடைய அறுபத்தேழு வயதை நிமிர்த்தி எழுந்திருக்குமுன் பிடிபடாத தூரத் தில் புள்ளியாகிவிட்டான்.

நீலக்கண்ணனுக்குச் சன்ன மாய் வியர்த்தது. வரதன் முரட்டுப் பையன். சொன்னதைச் செய் தாலும் செய்து விடுவான். அதற்குள் அவன் அம்மாவை எச்சரிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அந்த மரத்தடி மேடையிலிருந்து மெல்ல இறங்கி, வரதனின் வீட்டைப் பார்த்து நடக்கலானார்.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மூன்று நிமிட தூரத்தில் வரதனின் வீடு இருந்தது.

காலிங் பெல்லை விடாமல் வரதன் அடித்தான். 'தாடித் தாத்தா'விடமிருந்து ஓடி வந்ததில் அவனுக்கு மூச்சு இரைத்தது.

கதவு திறந்தது. தூக்கிச் செருகிய புடவையுடன் அவன் அம்மா சுசீலா நின்றாள்.

''ஏண்டா எமன் மாதிரி வேலை செய்ய விடாமல் கழுத்தறுக்கிறே? ப்ளே கிரவுண்டிலே கொண்டு விட்டுட்டு வந்தேன், இல்லே? ஏன் வந்துட்டே?''

''எனக்கு விளையாடப் பிடிக்கலை.''

''சட்டையெல்லாம் எப்படிடா அழுக்காச்சு? அந்தப் பிச்சைக்காரன் கிட்டே போனியா?'' அவனுடைய காதைப் பிடித்துத் திருகினாள்.

''அவர் ஒண்ணும் பிச்சைக்காரர் இல்லை: தாடித் தாத்தா. நல்லவரு.....''

பளாரென்று அவன் கன்னத்தில் அறைந்தாள். ''தாத்தாவா தாத்தா? கோயில் வாசல்லே வியாதி வந்தவங்க ளோட உட்கார்ந்து பிச்சையெடுக்கிற பரதேசி, அவன்கிட்டே போனா உனக்கும் வியாதி வந்து கை காலெல்லாம் சுருங்கிப் போயிடும். போனியா, அங்க போனியா?''

''ஆமாம்,'' என்றான் — கண்களில் இரண்டு நீர் முத்துக்களுடன்.

''இன்னொரு தடவை அந்தப் பிச்சக்காரன் கூட உன்னைப் பார்த்தேன், வீட்டை விட்டே துரத்திடுவேன், ஜாக்கிரதை!''

''அப்பாவைத் துரத்தினியே, அந்த மாதிரியா?''

''என்னது.... என்னடா சொன்னே?'' சுசீலாவின் கண்கள் விரிந்து காளிபோல் வரதனை நெருங்கித் தலைமயிரைப் பற்றி இழுத்தாள்.

''கீழ் வீட்டு அம்மாதான் சொன்னாங்க. விடு, எனக்கு வலிக்குது.''

''கொன்னுடுவேன், இன்னொரு வாட்டி இந்த மாதிரிப் பேசினால். போ,



கை கால் கழுவிட்டு ஹோம் ஒர்க் பண்ணு,'' என்று பாத்ரூம் பக்கம் உந்தித் தள்ளினாள்.

அவன் குழாயில் நிறையத் தண்ணீரை வீணடித்து, சோப்பை வேண்டுமென்றே அதிகமாகக் கரைத்துக் கை கால் கழுவிக் கொண்டான்.

''டேய், என்னடா பண்ணிட்டிருக்கே?'' சமையலறையிலிருந்து சுசீலாவின் குரல் பறந்து வந்தது. ''நான் மார்க்கெட் வரைக்கும் போயிட்டு வரேன். கதவை உள்ள தாப்பாள் போட்டுக்க. நான் திரும்பி வர்றதுக்குள்ளே, ஹோம் ஒர்க்கெல்லாம் முடிச்சிருக்கணும். அங்க இங்க பராக் பார்த்திட்டிருக்காதே, சீவிடுவேன் சீவி.''

நீலக்கண்ணன் அந்தக் கட்டிடத்தை அண்ணாந்து பார்த்தார். இங்கேதான் எங்கேயோ வரதனின் வீடு இருக்கிறது. எந்த வீடு என்று தெரியாமல் மெயின் கேட்டில் கை வைத்தார்.

''யோவ், கையை எடுய்யா. பிச்சையெல்லாம் ரோட்டோட வச்சுக்க.'' கேட்டின் இரும்பில் கழியால் தட்டினான் வாட்ச்மேன்.

''தம்பி, வரதன்னு ஒரு பிள்ளை இருக்கே, எந்த வீடுப்பா?''

''பிச்சையே கிடையாதுன்னு சொல்றேன் இல்லே, அப்புறம் என்ன பேர் சொல்லிக் கேட்கிறது? இடத்தைக் காலி பண்ணுய்யா. வீட்டிலே இருக்கிறவங்க பார்த்தா என்னைப் பிடிச்சுத் திட்டுவாங்க.''

சற்றே ஏமாற்றத்துடன், நீலக்கண்ணன் கேட்டிலிருந்து விலகி, தெருவின் முனையில் நின்று கொண்டு கட்டிடத்தையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

வரதனின் அம்மா, கையில் ஒரு பிளாஸ்டிக் கூடையுடன் கேட்டைத் தள்ளிக்கொண்டு வெளியே வந்து கொண்டிருந்தாள்.

''அம்மா... அம்மா... ஒரு நிமிஷம்.''

சுசீலா அவரை நிமிர்ந்து பார்த்ததும் முகத்தைச் சுருக்கிக் கொண்டாள். கைக்குட்டையால் மூக்கைப் பொத்திக் கொண்டாள்.

''அம்மா, கொஞ்சம் நில்லுங்கம்மா. நான் சொல்றதைக் கேளுங்க.''

சுசீலா நடையில் துரிதம் காட்டி அவரை வேகமாகக் கடந்தாள்.

''அம்மா, உங்க பிள்ளை உங்களை......'' பின்னாலிருந்து குரல் நடுங்கி வந்தது.

சுசீலா சடாரென்று திரும்பிப் பார்த்தாள். கண்களில் நெருப்புப் பறந்தது.

ஆரம்பிச்சிட்டியா? என் பிள்ளையை எப்படி வளர்க்கணும்னு எனக்குத் தெரியும். தினம் ஒருவாட்டி உன்கு அட்வைஸ் எனக்குத் தேவையில்லை. ரோட்டிலே பொறுக்கித் திரியறவங்களெல்லாம் புத்தி சொல்ல வந்துட்டானுங்க.''

அதற்குள் காம்பவுண்டிலிருந்து வாட்ச்மேன் வெளியே ஓடி வந்து நீலக்கண்ணனைப் பிடித்து இழுத்துத் தரதரவென்று தெரு முனையில் கொண்டு தள்ளினான்.

வரதன் ஹாலிலிருந்த அம்மா போட்டோவிற்கு அழகு காட்டினான்.

டி.வி.யை ஆன் செய்தான். இரண்டு நாட்களுக்கு முன் பார்த்த படத்தில், கத்தியால் குத்திக் கொலை செய்த காட்சி அவன் மனத்திரையில் மறுபடியும் ஓடியது.

'அம்மா, நான் உன்னைக் கொல்லப் போறேன். நீ ராட்சஸி என்னை எப்பப் பார்த்தாலும் அடிக்கிறே, ஷூ கிழிஞ்சு போச்சுன்னா, எல்லாம் உன் மூஞ்சிக்கு அது போதும்கறே. என் ஸ்கூல்லே எல்லோரும் என்னைக் கேலி பண்றாங்க. எனக்கு நீ வேண்டாம். நானும் தாடித் தாத்தாவோட கோயில் வாசல்லே உட்கார்ந்து சாப்பிட்டுக்கறேன்.''

டிரெஸ்ஸிங் டேபிளுக்கு எதிரில் இருந்த அம்மா உட்காரும் குட்டி ஸ்டூலைத் தூக்கிக் கொண்டு சமையலறைக்குப் போனான். சமையல் மேடைக்கு அருகில் அதைப் போட்டு ஏறினான். அப்பொழுதுதான் கதவு வைத்த அலமாரி எட்டியது. குமிழைத் திருகி, கதவைத் தள்ளித் திறந்தான்.

அந்த மர அலமாரியில் மேல் தட்டில் வரிசையாய்ப் பீங்கான் கப்கள் கவிழ்ந்திருந்தன. எல்லாம் ஒரே டிஸைன். வீட்டிற்கு எப்போதாவது விருந்து வந்தால் மட்டும்தான் வெளியே வரும் கப்கள்.

அந்த வரிசைக்கு அப்புறம் அவன் எதிர்பார்த்தது இருந்தது.

## சில சமயங்களில்... அன்பு ஒரு குழப்பமான இனிய உணர்ச்சி






• அறிமுகமாகிறது.
புதிய கிரேஸ்
ரோல் - ஆன் பேக்

அன்பு, வெளிப்படையாக காட்டவேண்டியது. அன்பு அதிகரிக்குந் தோறும் அதை வெளிப்படுத்துவதற்கான விருப்பமும் அதிகமாகிறது. அதனால் நாங்கள் ஒரு புதிய கிப்ட் பேக் படைத்தோம். உங்கள் ஆசையை கிளப்பிவிடும் நான்கு இனிய சுவைகளில் எலேச் க்ரிம், ஆரஞ்சு, பைனாப்பிள், சாக்லேட். அது மட்டுமல்ல. உங்கள் குடும்பத்தில் எல்லோரும் விரும்பி சாப்பிட எல்லா சுவைகளும் இணைந்த 'ஒரு பெரிய ஃபேமிலி பேக்கும் நாங்கள் அளிக்கிறோம். அதற்குப் பெயர் 'ஃபேமிலி ஃபியஸ்ட்டா!'

**Craze**
**Biscuits**

கிரேஸ் பிஸ்கோத்துகள்.
அன்பு இனிதாக வெளிப்பட.

REFLECTIONS/CHN

சாண் நீளத்திற்கு பிளாஸ்டிக் கைப்பிடியுடன், எக்ஸிபிஷனில் அம்மா வாங்கிய கத்தி. புதுக் கத்தி.

கத்தியில் அவன் கை வைத்த நேரம், வாசல் அழைப்பு மணி அடித்தது.

வரதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ராட்சசி அதற்குள் வந்துவிட்டாளா?

கத்தியை அவசரமாய் எடுத்துச் சட்டைக்குள் போட்டுக் கொண்டான். அலமாரிக் கதவைச் சாத்தும் போது ஸ்டூல் ஆட்டம் கொடுத்தது. பாலன்ஸுக்காகக் கையை நகர்த்த இரண்டு பீங்கான் கோப்பைகளில் விரல்கள் சிக்கி இருந்தன.

கிளிங் கிளிங் என்று இரண்டும் தரைக்குப் பாய்ந்து, வெடி வைத்ததுபோல் நொறுங்கிப் போயின.

வரதன் கால்கள் பின்னப் பின்ன வாசலுக்கு நடந்தான். தாளை மெதுவாக நீக்கினான். தடாலென்று திறந்தது கதவு.

''என்னடா சத்தம்? என்ன பண்ணிட்டிருந்தே?''

''ஒண்... ஒண்ணும் இல்லை....''

சுசீலா மோப்பம் பிடித்ததுபோல் நேரே சமையலறையில் நுழைந்தாள்.

''வரதா....'' அவள் குரல் தொழிற்சாலைச் சங்குபோலக் கூவியது.

''எதுக்குடா மேலே ஏறினே?''

''பதில் சொல்லுடா.'' அவன் கன்னத்தில் அவள் கை பறந்தது. வலியில் கண்களில் உடன் நீர் துளித்தது.

அவளிடமிருந்து விடுபட்டுப் படுக்கையறைக்குள் ஓடினான். தன் தலையணைக்குக் கீழே கத்தியை ஒளித்தான்.

வானத்தில் நான்காம் பிறை. ராத்திரி நாய்களின் விடாத சொற்பொழிவுகள். மரங்களின் ஹ்ஸ்ஸ்.... எனும் பெருமூச்சு.

நீலக்கண்ணன் கவனமாகப் பார்த்தார்.

கேட் பூட்டப்பட்டிருந்தது. வாட்ச்மேன் கேட்டருகிலேயே கயிற்றுக் கட்டில் போட்டுப் படுத்திருந்தான். அந்த வழியே போவது நடக்காத காரியம்.



## பிரசவிப்பது பெண்கள் பார்ப்பது ஆண்களா?

ஈ ரோட்டில் உள்ள ஒரு தியேட்டரில் 'ஒரு குஞ்ஞ்னு ஜனிக்குன்னு (மலையாளம்) *The Birth of a Child* திரைப்படம் பார்க்க மருத்துவக் கல்லூரி நண்பர் ஒருத்தருடன் சென்றிருந்தேன். அரங்கில் மருந்துக்குக்கூட ஒரு பெண் இல்லை. கர்ப்ப காலத்தில் பெண்களுக்கு வர வாய்ப்புள்ள கோளாறுகள், அதைச் சரி செய்யும் முறைகள், அவை வராமல் தற்காப்பு

காம்பவுண்டைச் சுற்றிக் கொண்டு நடந்தார். சற்று இருளான பகுதி வந்ததும் சுவரில் கைகளை ஊன்றி, மிகுந்த பிரயாசையுடன் எம்பி ஏறி உள்ளே குதித்தார்.

மெல்ல மெல்ல நடந்தார். மாளிகையின் நுழைவாயிலின் வலதுபுறம் படிகள் கிளம்பி மேல் சென்றன. எதிரே மூடிய கதவுகளுடன் லிஃப்ட். படிகளைத் தேர்ந்தெடுத்து பூனைப் பாதம் வைத்து ஏற ஆரம்பித்தார்.

வரதன் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். ஒற்றைக் கண்ணை மட்டும் திறந்து அம்மா தூங்கி விட்டாளா என்று அவ்வப்போது நோட்டமிட்டான். சுசீலாவிடம் மெல்லிய சலனம் வந்தாலும் உடனே கண்களை இறுக்க மூடிக்கொண்டான். இடது கையைத் தலையணைக்கு அடியில் செலுத்திக் கத்தியின் சில்லிப்பைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

நீலக்கண்ணன் மொட்டை மாடிக்கு வந்துவிட்டார். மூன்றாவது மாடியைத் தாண்டும் பொழுது எந்தக் கதவில் சுசீலா என்று பிளாஸ்டிக் பெயர் தொங்கியது என்பதைக் கவனித்திருந்தார்.

அந்தத் திசையை வைத்து மொட்டை மாடியின் அந்த மூலைக்குப் போனார். உடம்பில் சக்தியில்லாதது

செய்யும் வகை முறைகள் போன்ற மிக பயனுள்ள செய்திகளைத் துளிக்கூட ஆபாசம் கலக்காது படம் விளக்குகிறது. இவையெல்லாம் பெண்களுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும். அவர்கள் அறியாத புதிய செய்திகளும் இதில் அறியக் கிடைக்கும். ஆனால் பெண்கள் இத்தகைய படங்களை பார்க்க வருவதே இல்லை. யார் நிச்சயம் பார்த்துப் பயனடைய வேண்டுமோ அவர்களைத் தவிர மீதி அனைவரும் பார்க்கிறார்கள்!

கே.கே.. பழனிசாமி.



போல் இருந்தது. நிறைய வியர்த்து விட்டது. கைப்பிடிச் சுவருக்குக் கீழே எட்டிப் பார்த்தார். ஜன்னலுக்கு மேலே இமை திறந்தாற் போல ஸன்ஷேட் தெரிந்தது. வரதன் வீட்டு ஜன்னலாகத்தான் இருக்கும்.

கால்களைத் தூக்கிப் போட்டுக் குழாயை அணைத்தபடி சறுக்கி இறங்கினார். தண்ணீர்க் குழாய் அஜீரண வயிறு போலச் சப்தம் செய்தது.

உள்ளங்கைகள் எரிந்தன. அந்த ஸன்ஷேடில் இறங்கி உட்கார்ந்து கொண்டார். குழாய் லைனை ஒரு கையால் பிடித்துக் கொண்டு மெல்ல—மிக மெல்லக் குனிந்து பார்த்தார். திடுக்கிட்டார்.

வரதனின் வீட்டு பெட்ரூம் நீல இரவு விளக்கில் தெரிந்தது.

கட்டிலிலிருந்து சின்ன உருவம் இறங்கியது. தலையணையைத் தூக்கி அந்தக் கத்தியை எடுத்து—

''ராஜா!'' என்று ரகசியக் குரலில் கூப்பிட்டார். ''ஷ்ஷ்... இங்கே பாரு...''

வரதன் அப்படியே உறைந்து போனான். தூக்கிய கத்தியோடு மெல்லத் திரும்பி ஜன்னலை நெருங்கி நின்றான்.

''அந்தக் கத்தியை என்கிட்டே கொடு, ராஜா.''

''மாட்டேன்.''

''அப்ப நான் இங்கேயிருந்து கீழே குதிச்சிடுவேன்.''

''என்ன தாத்தா நீங்க!''

''அப்ப கத்தியைக் கொடு.''

வரதன் யோசித்தான். இருட்டில் வெளியே வௌவால் மாதிரி தொங்கும் அவரைப் பார்க்கக் கஷ்டமாயிருந்தது.

கத்தியை அவரிடம் நீட்டினான். கையை ஜன்னலுக்கு வெளியே அவன் நீட்டும்போது, கத்தி ஜன்னல் கம்பியில் பட்டு 'ணங்' என்று சப்தம் கொடுக்க, சுசீலா படக்கென்று விழித்துக் கொண்டாள்.

சுசீலா கத்தினாள். ''வரதா... ஓடி வந்துடு. திருடன்.... திருடன்....'' என்று உச்சக் குரலில் கூவ ஆரம்பித்தாள்.

நீலக்கண்ணன் பதறியதில் கை வழுக்க ஆரம்பித்தது. வரதனின் கையைப் பற்றிக் கொண்டார்.

''ராஜா, சத்தியம் பண்ணிக் கொடு. இனிமே கத்தியெல்லாம் எடுக்க மாட்டேன், அம்மாவை ஒண்ணும் பண்ண மாட்டேன்னு. சத்தியம் பண்ணிக் கொடு.''

''தாத்தா!''

''இல்லாட்டி இங்கேயிருந்து குதிச்சிடுவேன்.''

''சரி தாத்தா. சத்தியமா எங்கம்மாவை நான் ஒண்ணும் பண்ண மாட்டேன்.

சுசீலா வரதனைப் பிடித்து வெடுக் என்று இழுத்தாள்.

அதற்குள் மொட்டை மாடியிலிருந்து ஒரு கை நீண்டு நீலக்கண்ணனை அவருடைய அழுக்குக் கந்தல் வேட்டியைப் பற்றித் தூக்கியது. முதுகில் 'தொம்'மென்று அடி விழுந்தது.

உடம்பெங்கும் ரணமாக்கி அவர்கள் வெளியே வீசிய பின்னர், கையூன்றி எழுந்திருக்கவே நீலக்கண்ணனுக்கு வெகு நேரமாயிற்று. ஆனால் மூன்றாவது மாடி ஜன்னலில் அழுகையோடு பதிந்திருந்த சின்ன முகத்தைப் பார்த்ததும், மனத்தில் தென்றல் வீசியது.

# மன்னன் மகள்



சாண்டில்யன்

19.3.87

## 7. அவள் யார்?

கரிகாலனைக் கபளீகரம் செய்ய வரும் பெரிய கொள்ளிவாய்ப் பிசாசுகளைப்போல் பந்தங்கள் பயங்கரமாக நகர்ந்து வருவதைக் கண்ட அந்த நந்தவனத்து மோகினி, அவனை ஒளிக்க ஏதாவது இடமிருக்கிறதா என்பதைக் கவனிக்கத் தன் மருண்ட விழிகளை நான்கு புறங்களிலும் சுழலவிட்டாள். அந்தச் சமயத்தில் அவள் நின்றிருந்த வெண்மையான வசந்த மண்டபத்தையும் தூரத்தே தெரிந்த நந்தவன மரக் கூட்டத்தையும் தவிர அவனை ஒளித்து வைக்க வேறு இடமில்லையென்பதையும் திட்டமாகத் தெரிந்து கொண்ட அந்த அழகி, மிதமிஞ்சிய கவலைக்கு அடையாளமாகப் பெருமூச்சொன்றையும் விட்டாள். அவள் கண்கள் நாற்புறமும் சுழன்றதையும், கவலையால் அவள் நாசியிலிருந்து வெளிப்பட்ட பெருமூச்சையும் கண்ட கரிகாலன், அனாவசியமாக ஒரு பெண்ணை இத்தகைய இக்கட்டில் சிக்கவைத்து விட்டோமே என்று எண்ணியதால், பரிதாபம் கலந்த குரலில், ''இங்கு இவர்கள் கண்களிலிருந்து சிறிது நேரம் மறைந்திருக்க இடம் எதுவும் கிடையாதா?'' என்று வினவினான்.

''அதோ, நந்தவனத்தில் மரக் கூட்டம் இருக்கிறது. ஆனால் அங்கு நீ ஓடினால், வீரர்கள் கண்ணில் படாதிருக்க முடியாது; இந்த இடத்துக்கும் மரக்கூட்டமிருக்கும் இடத்துக்கும் வெகுதூரம் இருக்கிறது பார்,'' என்றாள் அவள்.

இரண்டு இடங்களுக்கும் இடையே இருந்த தூரத்தைக் கண்களால் அளவெடுத்த கரிகாலனும், அவள் சொல்வது முற்றும் உண்மையென்பதை அறிந்ததோடு, தான் தன்னந்தனியாகப் புல்வெளியில் தடாகத்தைச் சுற்றி ஓடுவதும், நேராக வீரர்கள் கையிலேயே தன்னை ஒப்படைத்துக் கொள்வதும் ஒன்றுதான் என்ற முடிவுக்கும் வந்ததால், என்ன செய்வதென்று அறியாமல், ''ஏன், இந்த மண்டபத்திற்குள் மறைந்திருக்க இடமில்லையா?'' என்று விசாரித்தான்.



''மண்டபம் எப்படியும் சோதனை செய்யப்படும். இத்தனை தூரம் வரும் வீரர்கள் இந்த இடத்தைப் பார்க்காமலா போவார்கள்?'' என்று பதில் சொன்னாள் அவள்.

அவள் பதில் அவனுக்குப் பெரிதும் ஆச்சரியமாக இருந்தது. ''என்ன! இந்த வசந்த மண்டபத்தைப் பார்த்தால் அரச மகளிர் தங்கும் மண்டபம் போல் இருக்கிறது. இதைக் கூடவா வீரர்கள் சோதனை செய்வார்கள்?'' என்று கேட்டான்.

இதைக் கேட்ட அந்தப் பெண் வருத்தம் கலந்த சிரிப்பொன்றை உதிர்த்தாள். அந்த ஆபத்தான சமயத்தில் தான் கேட்ட சர்வ சாதாரணமான கேள்விக்கு, அவள் அப்படிச் சிரிக்க வேண்டிய அவசியமென்ன என்று யோசித்த கரிகாலன், ''ஏன், இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று வாய்விட்டும் கேட்டான்.

''நமக்குள் பரஸ்பரம் பாசாங்கு எதற்கு என்பதற்காகச் சிரித்தேன்.'' என்று அவள் பதில் சொல்லி அர்த்த புஷ்டியுடன் அவனை உற்றும் நோக்கினாள்.

அவள் வார்த்தைகளில் தொனித்த அர்த்தமோ, திருஷ்டியில் கண்ட புஷ்டியோ எதுவுமே கரிகாலனுக்கு விளங்காததால், ''பாசாங்கா...!'' என்று



ஏதோ கேட்க ஆரம்பித்தவனை மேற்கொண்டு எதுவும் பேசவிடாமல் அடக்கிய அந்த அழகி, ''சரி; சரி. அதிகம் பேச அவகாசமில்லை. அதோ வீரர்கள் நெருங்கி விட்டார்கள். உன்னை அவர்கள் இங்கு பார்த்துவிட்டால், நாம் இருவரும் ஒழிந்தோம். சீக்கிரம் எங்காவது உன்னை மறைக்க இடம் தேடுவோம்,'' என்று கூறி விட்டு, வசந்த மண்டபத்தின் உட்புறத்தில் நாலடி எடுத்து வைத்து, ''மாலினி! மாலினி!'' என்று இருமுறை குரல் கொடுத்தாள். அவள் குரல் கொடுத்த மறு விநாடி வெளியே வந்த இளமங்கையை நோக்கிய கரிகாலன், அவள் உடையிலிருந்தும், அவள் நடந்து கொண்ட அடக்கத்திலிருந்தும் அவள் பணிப்பெண்களில் ஒருத்தியாயிருக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். 'அவள் பணிப் பெண்ணானால் இவள் யார்?' என்று யோசித்தான். ஆனால் அத்தகைய தர்க்கத்துக்ோ, வினாவிடைக்கோ அவகாசம் அதிகமில்லையாகையால் அவர்கள் துரிதமாக நடத்திய சம்பாஷணையில் கவனத்தைச் செலுத்தி, தன் விதியை அவர்கள் எந்த விதத்தில் வகுக்கப் போகிறார்கள் என்பதை அறிவதில் நாட்டங் கொண்டு மௌனமாக நின்றான்.

''மாலினி! இவன் வந்துவிட்டான். இவனை எங்காவது மறைக்க வேண்டும்,'' என்றாள் நந்தவனத்து மோகினி.

''ஏன்?'' என்று ஏதுமறியாமல் கேட்ட பணிப்பெண், ஆச்சரியத்தால் கண்களை அகல விரித்தாள்.

''ஏனா? பைத்தியக்காரி! அதோ பார்.'' துரிதமாக மண்டபத்தை அணுகிக் கொண்டிருந்த வீரர்களை நோக்கிக் கையைக் காட்டினாள், கரிகாலனைத் தோட்டத்தில் சந்தித்தவள்.

பணிப்பெண் அப்படியும் இப்படியும் பார்த்தாள். அசைந்தாள், மிரள மிரள விழித்தாள். அவ்வளவுதான். அவள் புத்தியில் யோசனை மட்டும் ஏதும் உதயமாகவில்லை. நல்ல வேளையாக இடைச் சுவருக்கும் வசந்த மண்டபத்துக்கும் தூரம் அதிகமிருக்காது. இல்லாவிட்டால் அந்த இரு பெண்களின் யோசனை முடியுமுன்பாகக் கரிகாலன் கதியும் ஒருவிதமாக முடிந்திருக்கும். வேங்கி நாட்டுச் சிறையில் இரவின் பாக்கி நேரத்தை நிம்மதியாகக் கழிக்கப் போயிருப்பான். ஆகவே, இரண்டு பெண்களும் என்ன செய்வதென்பதை அறியாமல் தத்தளித்தபோது, கரிகாலன் மூளை மிக வேகமாக வேலை செய்து கொண்டிருந்தது. திடீரென்று ஒரு யோசனை தோன்றவே, ''அம்மணி! இந்த வசந்த மண்டபத்தின் பின் பகுதியில் ஒரு குறுகிய தாழ்வாரம் ஓடுகிறதல்லவா?'' என்று வினவினான்.

அந்தத் தாழ்வாரம் இருக்கும் விஷயம் இவனுக்கு எப்படித் தெரிய வந்தது என்று நந்தவனத்து மோகினி ஆச்சரியப்பட்டாளானாலும், அதைப் பற்றி விசாரிக்காமல் எதற்காக அதைப் பற்றிக் கேட்கிறான் என்பதை மட்டும் அறிந்து கொள்ள வினவினாள்: ''ஆமாம், இருக்கிறது. அதற்கென்ன இப்பொழுது?''

''அந்தக் குறுகிய தாழ்வாரத்துக் கோடியிலிருக்கும் கதவைத் திறந்தால், கிருஷ்ணா நதி கோட்டைச் சுவரை ஒட்டிப் பிரவகிக்கிறதல்லவா?'' என்று மீண்டும் கேட்டான் கரிகாலன்.

''ஆமாம்.''

''அது ராஜஸ்திரீகளின் ஸ்நான கட்டம்தானே?''

வெகு நாட்களாக அந்த வசந்த மண்டபத்திலேயே வசித்தவன் போல், அதைப்பற்றி அணு அணுவாக ஆராய்ந்து பேசிய கரிகாலன் மீது சந்தேகம் பலமாகத் தோய்ந்த கண்களை நிலைக்க விட்டாள் அந்த அழகி.

அவள் கண்களில் உதித்த சந்தேகத்திலிருந்து உள்ளத்தே ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட கரிகாலன், ''அம்மணி! சந்தேகப்பட



வாத்தியார்: தினமும் குளிக்கனும்னு சொன்னா, இரண்டு நாளைக்கு ஒருமுறை குளிக்கிறயாமே...?

ராமு: இன்னும் ஒரு மாசம் கழிச்ச மூணு நாளைக்கு ஒரு முறைதான் தண்ணி விடுவாங்களாம். அதான் இப்பவே பிராக்டிஸ் பண்ணறேன் சார்...!

—என்.பி.

வேண்டாம்; நான் இந்த மண்டபத்தை இதற்கு முன்பு பார்த்ததே கிடையாது,'' என்று சொல்லி லேசாகப் புன்முறுவலும் செய்தான்.

''அப்படியானால் ஸ்நான கட்டம் இருப்பது உனக்கெப்படித் தெரியும்?''

''சிற்ப சாஸ்திரம் கற்றிருக்கிறேன்.''

''நீ என்ன சிற்பியா?''

''என்ன என்பது எனக்கே தெரியாது.''

''பின் எதற்காகச் சிற்ப சாஸ்திரம் படித்தாய்?''

''படிப்பு, காரணத்துக்காகவோ காரியத்துக்காகவோ ஏற்பட்டதல்ல; படிப்பு அறிவை விசாலப்படுத்துகிறது. அறிவு விசாலம் மனிதனுக்குத் தேவை.''

''அப்படியானால் எல்லா சாஸ்திரங்களையும் படித்திருக்கிறாயா?''

''ஓரளவு படித்திருக்கிறேன். ஆனால், அதைப்பற்றி இப்பொழுது தர்க்கம் செய்து கொண்டே இங்கு நின்றால் படித்ததெல்லாம் பயனற்று விடும்.''

''ஏன்?''

''வீரர்கள் பிடித்துக் கொண்டு போய்விடுவார்கள். நாளைக்கு நான் தூக்கில் ஆடுவேன். மரணத்துக்குப் பின் அறிவு எதற்கு?''

''இப்பொழுது என்ன செய்ய வேண்டுமென்கிறாய்?''

''ஸ்நான கட்டத்தைத் திறந்து விடுங்கள்.''

''திறந்து விட்டால்?''

''சுவரை ஒட்டியிருக்கும் படித்துறையில் நின்று கொள்கிறேன்.''

''உனக்கென்ன பைத்தியமா? கிருஷ்ணா நதி பூரணப் பிரவாகத்திலிருக்கிறது. படித்துறையில் காலை வைத்தால் இழுத்துக் கொண்டு போய்விடும்.''

''பாதகமில்லை, வீரர்கள் இழுத்துக் கொண்டு போவதைவிட, புனிதமான கிருஷ்ணா நதி தன் நீர்க்கரங்களால் என்னை அணைக்கட்டும்!'' என்றான் கரிகாலன்.

நந்தவனத்து மோகினியின் கண்களில் பயம் பூரணமாகத் தெரிந்தது. அத்துடன் அவன் தைரியத்தைக் கண்டு ஏற்பட்ட ஆச்சரியமும் அந்தப் பார்வையில் கலந்து கொண்டது. அவள் கண்களில் முதன் முதலாகத் தோன்றிய பயத்தைக் கண்ட கரிகாலன், ''பயப்படாதீர்கள்! தப்ப வேறு வழியில்லை! பிரவாகம் என்னை அடித்துக் கொண்டு போகாது. திடமாகக் கால்களை அடிப்படியில் ஊன்றிக் கழுத்தளவு நீரில் நிற்கிறேன். அதுவும் படியின் பக்கவாட்டில் நின்றால், வீரர்கள் பந்தங்களைக் கொண்டு பார்த்தாலும் தெரியாது. அவர்கள் பார்க்கும் போது தலையை நீரில் அமிழ்த்திக் கொள்வேன். உம், வாருங்கள்,'' என்று துரிதப்படுத்தி வசந்த மண்டபத்துக்குள் வேகமாக நடந்தான்.

நந்தவனத்தில் கரிகாலனைச் சந்தித்த அந்த அழகி மட்டும் நகரவில்லை. பணிப்பெண்ணை நோக்கி, ''சரி, அவனிஷ்டப்படி செய்!'' என்று உத்தர விட்டதும், பணிப்பெண்ணே கரிகாலனுடன் மண்டபத்திற்குள் சென்றாள்.

வீரர்கள் அங்குமிங்கும் பல இடங்களில் தேடிவிட்டு, வசந்த மண்டபத்தை நோக்கி விரைந்தார்கள். நந்தவனத்து மோகினியும் சரேலென்று வசந்த மண்டபத்திற்குள் நுழைந்து, கதவைத் தாளிட்டுக்கொண்டு, தன் அறைக்குள் சென்று மஞ்சத்தில் படுத்து நித்திரை செய்வதுபோல் பாசாங்குடன் கண் மூடினாள்.

கரிகாலனைக் கிருஷ்ணா நதியில் இறக்கிவிட்டுத் திரும்ப வந்த பணிப்பெண் மாலினியும், கட்டிலில் உறங்குவது போல் பாவனை செய்து கொண்டிருந்த அழகியின் வழியைக் கடைப் பிடித்துத் தரையில் கிடந்த பட்டு மெத்தையில் சுருட்டிக் கொண்டு படுத்தாள். சில விநாடிகளுக்கெல்லாம் வசந்த மண்டபத்தின் கதவு தடதடவென்று பலமாக இடிக்கப்பட்டது.

கட்டிலில் படுத்திருந்த கட்டழகி கண்களை விழித்துக் கீழே தரையில் கிடந்த பணிப்பெண்ணுக்குக் கண் சாடை காட்டி, அவளை முதலில் வெளியே அனுப்பித் தானும் மெல்ல எழுந்து அப்பொழுதுதான் தூக்கம் கலைந்தவள் போல் அசைந்து அசைந்து நடந்து வாயிலை நோக்கிச் சென்றாள். வாயிற்படியில் நின்றிருந்த வீரர்கள் தலைவனைக் கண்டதும் அவள் கண்கள் நெருப்பைக் கக்கியதன்றி, அவள் அழகிய வாயிலிருந்து சுடு சொற்களும் வெளிவந்தன. ''எதற்காக இந்த நடுராத்திரியில்



பா ரதிராஜா, அறிமுகம் செய்யும் கதாநாயகிகளுக்கும், காதல் திருமணத்துக்கும் மிகவும் பொருத்தம். ராதிகா, ரத்தி அக்னிஹோத்திரி, ரேவதி— இந்த வரிசையில் ரஞ்சனியும் விரைவில் இடம்பெற்று விடுவார் என்கிறார்கள். ரஞ்சனி 'அதெல்லாம் கிடையாது' என்றார்.

சென்ற மாதத்தின் கடைசி வாரத்தில் ஒரு நாள் சென்ட்ரலில் இரவு 9 மணிக்குப் புறப்படும், நீலகிரி எக்ஸ்பிரஸில் ரஞ்சனியையும் அவரது தாயாரையும் வழி அனுப்பிக் கொடுக்க 'அவர்' வந்திருந்தார். வண்டியின் ஓரத்தில், ரஞ்சனி பார்வையில் படும்படி நின்று கொண்டிருந்தார். வண்டி புறப்படும் நேரம் நெருங்கியதும், சட்டென்று உள்ளே வந்து ரஞ்சனியின் பக்கத்தில் அமர்ந்தவர், இரண்டு மூன்று வினாடிகள் நெருக்கமாக உட்கார்ந்து பேசிவிட்டு, புறப்பட்டு விட்டார்!

—செ.

எங்களை எழுப்புகிறாய்? இங்கே வர உங்களுக்கு யார் அதிகாரம் கொடுத்தது?'' என்று விடுவிடு என்று வார்த்தைகளை உதிர்த்தாள் நந்தவனத்து மோகினி.

''நான்கூடச் சொல்லிப் பார்த்தேன். தங்களைப் பார்க்காமல் போக முடியாதென்று பிடிவாதம் பிடித்தார்கள்,'' என்று பணிப்பெண்ணும் அவள் கோபத்துக்குத் தூபம் போட்டாள்.

வீரர்கள் தலைவன் இதற்கெல்லாம் மசிகிற பேர் வழியாயில்லை. வணக்கமும் அதிகாரமும் கலந்து தொனித்த குரலில் கூறினான், ''மன்னிக்க வேண்டும். சேரநாட்டு ஒற்றனையும் அவன் தோழன் ஒருவனையும் இன்று பிடிக்க முயற்சி செய்தோம். இருவரும் தப்பிவிட்டார்கள். ஒருவன் இந்தப் பக்கம் ஓடி வந்தான்,'' என்று.

''இங்கு எப்படி அவன் நுழைய முடியும்?'' என்று கேட்டாள் நந்தவனத்து மோகினி.

''கோட்டைக் கதவின் வழியாகப் புகுந்திருக்க வேண்டும்.''

''கதவைத் திறந்தது யார்?''

''யாரென்று தெரியவில்லை.''

''கதவு நீங்கள் பார்க்கும் போது திறந்திருந்ததா, மூடியிருந்ததா?''

''மூடி இருந்தது.''

அந்தப் பெண் கடகடவென நகைத்து, ''ஒருவேளை அந்த ஒற்றன் ஆகாய மார்க்கமாகப் பறந்து கோட்டைச் சுவரைத் தாண்டி நந்தவனத்துக்குள் குதித்திருக்கலாமென்று அபிப்பிராயப்படுகிறீர்களோ?'' என்று வினவினாள்.

அவள் இகழ்ச்சிச் சிரிப்பை வீரர்கள் தலைவன் லட்சியம் செய்யாமலே சொன்னான்: ''அவன் எப்படி உள்ளே வந்திருப்பானென்பது எனக்குத் தெரியாது. ஆனால் கோட்டைக் கதவுவரை வந்தான். பிறகு மறைந்து விட்டான். அவன் தப்பியோட வேறு வழியும் இல்லை.''

அவன் காரணங்களைக் கேட்ட அந்தப் பெண் சற்று யோசித்துவிட்டு, ''நந்தவனப் பகுதிகளைச் சோதனை செய்து பார்ப்பதுதானே?'' என்றாள்.

''பார்த்தாகி விட்டது.''

''வேறு எங்கு பார்க்க வேண்டும்?''

''மண்டபத்திற்குள்.''

''இங்கு யாரும் வரவில்லையே.''

''எதற்கும் நாங்கள் பார்த்து விடுகிறோமே.''

''என் வார்த்தையில் உங்களுக்கு நம்பிக்கையில்லையா?''

''அப்படியொன்றுமில்லை. வந்திருக்கும் ஒற்றர்கள் மிகச் சாமர்த்தியசாலிகள். தாளிட்டிருக்கும் கோட்டைக் கதவு வழியாக மறையக் கூடியவன், இந்த வசந்த மண்டபத்திற்குள் நுழைவது கஷ்டமல்ல. ஆகவே அனுமதி தரவேண்டும்,'' மேலுக்குக் கெஞ்சலாகவும் வார்த்தைகளைச் சற்று அழுத்திச் சொல்லி உத்தரவாகவும் வற்புறுத்தினான் வீரர்கள் தலைவன்.

பணிப்பெண் தன் தலைவியைப் பார்த்தாள். ''சரி. அவர்களை அழைத்துப் போ. பார்த்துவிட்டுப் போகட்டும்,'' என்றாள் தலைவி.

அந்த உத்தரவிற்குப் பின் வீரர்கள் வசந்த மண்டபத்திற்குள் தடதடவென நுழைந்து, மண்டபத்தைத் துருவியெடுத்தார்கள். வீரர்கள் தலைவன் உத்தரவுப்படி ஸ்நான கட்டத்தையும் பந்தம் கொண்டு பரிசோதித்தார்கள்.

''நதிக்குள் இருக்கப் போகிறான். யாராவது ஒருவர் குதித்துப் பாருங்கள்,'' என்று பணிப்பெண்கூடக் கேலியாகச் சொன்னாள்.

ஆனால், வீரர்கள் அந்தக் கேலியை எல்லாம் லட்சியம் செய்யும் மனப்பக்குவத்தில் இல்லை. தங்கள் சோதனையை முடித்துக் கொண்டு விடுவிடென்று வெளியே நடந்தார்கள்.

அவர்கள் அரவம் அடங்கும்வரை காத்திருந்த நந்தவனத்து மோகினி, பணிப்பெண்ணை நோக்கி, ''மாலினி, சீக்கிரம் அவனை மண்டபத்திற்குள் வரச்சொல்லி வேறு உடைகளை அணிவித்து அழைத்து வா,'' என்று உத்தரவிட்டாள்.

''வேறு உடை ஏது அம்மணி? இங்கு இருக்கும் ஒரே ஆண் பிள்ளையின் உடை உங்கள் சகோதரருடையது,'' என்றாள் பணிப்பெண்.

''சரி, அதைத்தான் கொடு,'' என்ற பதிலைக் கேட்ட பணிப்பெண் பிரமித்தே போனாள். அவள் பிரமிப்பைக் கண்ட தலைவி, ''பாதகமில்லை, கொடு!'' என்று மீண்டும் வற்புறுத்தினாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் புது உடை உடுத்தி ராஜ தோரணையில் வந்து நின்ற கரிகாலனை நோக்கிய தலைவி, ''வீரர்கள் போய்விட்டார்கள். இனித் தைரியமாய்ச் சொல்,'' என்றாள்.

கரிகாலனுக்கு அவள் பேச்சு விளங்காதுபோகவே, ''எதைச் சொல்ல?'' என்று கேட்டான்.

''சந்தேகம் வேண்டாம்! நான்தான் அவள்!'' என்றாள் தலைவி.

கரிகாலனுக்கு என்ன செய்வதென்று விளங்காததால், பணிப்பெண்ணை நோக்கினான். ''பயப்படாமல் சொல்லுங்கள். இவர்தான் அவர்,'' என்றாள் பணிப்பெண்.

மீண்டும் கரிகாலன் முகத்தில் தோன்றிய கலக்கத்தைக் கண்ட பணிப்பெண், ''இனி ரகசியம் தேவையில்லை. தைரியமாகச் சொல்லுங்கள். உங்கள் முன் நிற்பது...'' என்று இழுத்தாள்.

''நிற்பது?'' கரிகாலன் உதடுகளிலிருந்து மெல்ல எழுந்தது கேள்வி.

அதைவிட மெல்லிய குரலிலும், பயபக்தியுடனும் உதிர்ந்தன பணிப்பெண்ணின் சொற்கள். அந்தச் சொற்களில் என்னதான் மந்திர சக்தி இருந்ததோ தெரியாது. சித்தம் எங்கெங்கோ அலைய, கண்கள் அப்படியே வியப்பினால் ஸ்தம்பிக்க, உணர்ச்சிகள் நரம்புகளில் வெகு வேகமாகப் பாய்ந்தோடி இருதயத்தைத் துடிக்க வைக்க, விவரிக்க இயலாத பல உணர்ச்சிகளுக்கு இலக்கான கரிகாலன், ஏதோ சொப்பன தேவதையைப் பார்ப்பது போல் பிரமை கொண்டு எதிரே நின்ற ஏந்திழைமீது தன் விசாலமான விழிகளை ஓட்டினான்.

(தொடரும்)

78

மணக்குமே
கைபட்டதும்!




Savorit
சேமியா

சத்தான சேவரிட் சேமியா!

26-3-87

மன்னன்

# 8. மன்னன் மகள்

மன்னன் மகள்!

மாலினியின் உதடுகளிலிருந்து உதிர்ந்தன அந்த இரண்டே மந்திரச் சொற்கள்! அவற்றில் அடங்கியிருந்ததுதான் எத்தனை பெரிய சரித்திரக் காவியம்!

அவற்றைக் கேட்ட மாத்திரத்தில் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து ஊசலாட, உடலில் எண்ணற்ற உணர்ச்சி அலைகள் உருகியோட, சற்றுநேரம் பிரமை பிடித்துக் கற்சிலையெனச் சமைந்துவிட்ட கரிகாலன் சில விநாடிகளில் பிரமையை உதறித் தள்ளிச் சுய உணர்வை வரவழைத்துக் கொண்டு, எதிரே நின்ற எழிலுருவத்தை ஏறெடுத்து நோக்கினான். அவள் பெயரைக் கேட்ட விநாடியில் பிரமையால் அசைவற்று நிலைத்த அவன் கண்கள், அவள் பேரெழிலைக் கண்டதும் மிதமிஞ்சிய வியப்பால் நன்றாக விகசித்து, அவளை உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் ஆராயவும் தொடங்கின. வீரர்கள் தொடர்ந்து வந்ததால் உயிரைத் தப்புவித்துக் கொள்வதிலே லயித்திருந்த கவனம், எந்த இந்திரியத்தையும் வேறு அலுவல்களுக்கு அனுமதிக்காததால் கோட்டைக்குள் நுழைந்ததிலிருந்து அந்த நிமிஷம்வரை அவன் கண்கள் அவளைச் சரியாகப் பார்க்கக்கூடச் சக்தியற்றிருந்தன. அந்த ஆபத்து நீங்கி விட்டதால் அவளை நன்றாகக் கவனிக்கத் தொடங்கிய கரிகாலன், 'மனத்திற்குத்தான் என்ன மடமை! எதிரே இத்தகைய ஓர் அப்சரஸ் இருக்கும்போது அற்ப உயிருக்காக என் கண்களைக் கட்டிக் குருடாக்கி விட்டதே!' என்று உள்ளூரக் கடிந்து கொண்டான். அடுத்த வினாடி அப்படிக் கடிந்து கொள்வதும் அர்த்தமற்றதாகி விட்டது. உயிரைக் காப்பாற்றிக் கொண்ட அந்தச் சுயநல உள்ளம், உயிர் பத்திரம் என்று தெரிந்ததும் கண்களுடன் சேர்ந்து கொண்டு அவள் அழகிய உடலை நோக்கித் தாவி இணையற்ற இன்ப லாகிரியால் துள்ளி விளையாடவும் தொடங்கியது.

சாண்டில்யன்



வேங்கி நாட்டு மன்னன் மகள், பக்கத்திலிருந்த

# மகள்

கட்டிற்காலின் மேல் பாகத்தில் செதுக்கப்பட்டு தங்கக் கவசம் போடப் பட்டிருந்த சிங்கத்தின் தலையைப் பிடித்துக்கொண்டு நின்றிருந்த திடத்தையும்,, அவள் விரல்கள் சிங்கத்தின் தலையைப் பிடித்திருந்த உறுதியையும் கண்ட கரிகாலன், வேங்கி நாட்டு மன்னன் மகளின் மனம் இரும்புக்குச் சமானம். யாராலும் அசைக்க முடியாதது என்பதைச் சந்தேக மறப் புரிந்து கொண்டான். அவளுடைய ஒவ்வோர் அம்சத்தையும் அளவெடுக்கத் துடித்த அவனுடைய மனப்போக்கைப் புரிந்து தானோ, அல்லது எதிரும் புதிருமாக நின்றுகொண்டு ஏதும் பேசாமல் மௌனம் சாதித்துக்கொண்டிருந்த அந்த இருவரும் அறையில் சிருஷ்டித்துவிட்ட சூழ்நிலையை உடைக்கத்தானோ, அல்லது இந்த இக் கட்டான நிலையிலிருந்து தன்னையாவது விடுவித்துக் கொள்ளத்தானோ தெரியாது, பணிப்பெண் மாலினி, மெள்ள நகர்ந்து அறைக் கோடியிலிருந்த வெண்கலப் பாவை விளக்கின் திரியை நன்றாகத் தூண்டிவிட்டாள்.

சாளரத்திலிருந்து சந்திரனின் வெள்ளிக் கிரணங்கள் ஒரு பக்கத்தில் பட்டதாலும், மற்றொரு பக்கத்திலிருந்த



பாவை விளக்கின் தங்கநிற ஜோதி தழுவி நின்றதாலும், வெள்ளியும் தங்கமும் இணைந்த சித்திரப்பாவை போலும், யமுனையும் கங்கையும் கலந்த திரிவேணியைப் போலும் இணையற்ற அழகுடன் விளங்கினாள் வேங்கி நாட்டு மன்னன் மகள். அத்தகைய பேரழகை யாராவது பார்த்து திருஷ்டி போட்டுவிடப் போகிறார்கள் என்ற அச்சத்தினால், பூரண சந்திரனில் தோன்றும் மெல்லிய களங்கக் கோடுகளைப்போல் விசாலமான அவள் நெற்றியில் கறுத்த தலை மயிர் ஒன்றிரண்டு பறந்து வந்து வளைந்து கிடந்தன. அத்தகைய மயிர்களை அதிக தூரம் அனுமதித்து மற்ற இடங்களையும் ஆக்கிரமிக்க விடக்கூடாதென்ற தீர்மானத்தினால், அவற்றைத் தடுத்து நிறுத்த, காமன் வில்லையும் பழிக்கும் கரிய புருவங்கள் இரண்டு கீழே வளைந்து சித்தமாக நின்றன. அந்தக் கரிய விற்களுக்குக் கீழே அவற்றை விடக் கருமையாக இருந்த இமைகளுக்கிடையே இருந்த இரண்டு விழிகளும், இரவு அத்தனை நேரம் மட்டும் தூக்கமில்லாதிருந்ததற்கு அறிகுறியாகச் சிவந்து கிடந்ததாலும், அந்தச் சிவப்பும், அந்தச் சிவப்புக்குள்ளே பதிந்து கிடந்த கண்ணின் கருமணிகளும் சேர்ந்து தாமரை மலரில் தப்பி விழுந்துவிட்ட நீலோற்பலங்களைப் போல, எவர் மனத்தையும் அரை வினாடியில் கவரும் ஆற்றலைப் பெற்றிருந்தன. நீண்ட நாள் பழகிப் போன தந்தத்தைப் போல் தாழம் பூவின் லேசான மஞ்சள் நிறத்தைப் பெற்றிருந்த வழவழப்பான அவள் கன்னங்களில், உணர்ச்சிகளின் காரணமாகத் தட்டியிருந்த சிவப்பு, பெண்கள் எடுத்துச் செல்லும் கல்யாணத் தட்டிலிருக்கும் சந்தனக் குழம்பில் அகஸ்மாத்தாய்ச் சிந்திவிட்ட குங்குமம் லேசாகப் படர்ந்து விடும் இன்பக் காட்சியை நினைவூட்டியது. அவளுடைய கைகளிலொன்று பக்க வாட்டில் செயலற்றுக் கிடந்தமையால், பூர்ணமாகச் சேலைத் தலைப்பு மறைக்கப் பட்டிருந்தாலும், சிங்கத்தைப் பிடித்திருந்த கையின் அடிப்பாகத்திலிருந்து சேலை வழுக்கி விழுந்து கிடந்ததால், கைகளின் அளவையும் அழகையும் ஓரளவு புரிந்து கொள்ளக் கரிகாலனால் முடிந்தது.

பெருகு மத வேழத்தின் துதிக்கையைத் தடுத்து நிற்கும் தந்தத்தைப் போல் வழவழப்பாக நீண்டிருந்த கையின் முகப்பில், நன்றாக மலர்ந்துவிட்ட செந்தாமரை மலரின் இதழ்களைப் போல் கட்டில் சிங்கத்தின் தலையைப் பற்றியிருந்த விரல்களின் நகங்களில் தீட்டப்பட்டிருந்த மருதாணியைக் கண்ட கரிகாலன், 'மஞ்சளுக்குச் சிவப்பு அழகு செய்வது என்ன விந்தை!' என்று ஆச்சரியப்பட்டான். மென்மையும் உறுதியும் எப்படிக் கலந்திருக்க முடியும் என்பதை, மென்மையான அவள் விரல்கள் சிங்கச் சிலையின் தங்கத்தைப் பிடித்து நின்ற உறுதியிலிருந்து புரிந்துகொண்டாலும், அப்படிப் பிடித்தால் அந்த விரல்கள் இன்னும் சிவந்து கன்றிவிட்டால்

## ஒரு சராசரி மனிதரின்



ராத்திரி பர்ஸில் பதுக்கி
வைத்திருந்த பணம்
காலையில் காணவில்லை.

நேற்று பையனுக்கு
அவசரத்தில் பென்சில் சீவித்
தராததால், இன்று ரேசர்
செட்டையே காணவில்லை.

மாதக் கடைசியில் கடன்
கேட்கலாம் என்றால்,
பக்கத்து வீட்டுக்காரன்
எவனையும் வாசலில் காண
வில்லை.

என்ன செய்வது என்று ஏங்கினான். அப்படிக் கன்றியும் போகலாம் என்பதற்கு அறிகுறியும் இருந்தது. திடமான அவள் சரீரத்தில் பெண்மையின் பலவீனம் கலந்திருப்பதைக் கரிகாலன் கண்டான்.

குப்புற எறியப்பட்ட செம்பருத்தி மலர்கள் போல் தரையில் பதிந்து நின்ற பாதங்கள் திடமாகவே இருந்த போதிலும், பெண்மையின் காரணமாக அவ்வப்பொழுது அவள் புறங்கால்களில் இடப்பட்டிருந்த மருதாணியின் ஹம்ஸ சித்திரங்களின் காரணமாக, பூமியில் இரண்டு அன்னப்பறவைகள் அசைவன போன்ற பிரமை ஏற்படத்தான் செய்தது. பாதங்களுக்கு மேலே ஓடிய கால்கள் சேலையில் புதைந்து கிடந்தாலும், அவ்வப் பொழுது அசைந்து கால்களோடு ஒட்டிய சேலை, தொடைகளின் பரிமாணத் தையும், அழகையும் எடுத்துக் காட்டிய தன்றி இன்னும் பல இன்ப ஊகங்களுக்கும் இடம் கொடுத்ததால், யாரையும் பைத்தியமாக அடிக்கும் தன்மையைப் பெற்றிருந்தன. அவளது அழகிய மேல் பாகத்தையும், கீழ்ப்பாகத்தையும் தொடுத்து நின்ற நுண்ணிடை கம்பன் வியந்தது போல் 'பொய்யோ' என்று தோன்றும்படியாக அவ்வளவு சிறுத்துக் கிடந்தது. அப்படிச் சிறுத்துக் குன்றிப் போயிருந்த இடைக்குமேலே தெரிந்த மார்பகத்தின் செழிப்பு, ஒருவர் வறுமை யாலேயே மற்றொருவர் செழிப்பு ஏற் படுகிறது என்ற உலக உண்மையை வலியுறுத்தியது.

சங்கைப் பழிக்கும் கழுத்துக்குக் கீழும், இல்லையோ என்ற ஐயுறும் இடைக்கு மேலும், உறுதியுடன் எழுந்து பிரமாதமாக நின்ற அவள் மார்பகத்தின் மீது கண்களை ஓட்டிய கரிகாலன் மனம் பெரிதும் சலனமடைந்து, அவன் இதயத் திலே பல இன்ப வேதனைகளைக் கிளப்பி விட்டதன்றி, ஏற்கெனவே படித்திருந்த காவியப் பகுதிகள் பலவற்றையும் கவனத்துக்குக் கொண்டு வந்தது. வண்டுகள் நுனியில் உட்கார்ந்த செந் தாமரை மொட்டுகள் என மகாகவி காளி தாசன், ரகுவம்சத்தில் சுதட்சிணையின் மார்பகத்தைப் பற்றி எழுதிய வர்ணனை அவன் மனத்தே எழுந்து நின்றது. அத்தனை அழகைப் பெற்றதால் பெருமிதத்துடன் அடக்கமின்றி எழுந்து நின்ற அவற்றை அடக்கிவைக்க நன்றாக இறுக்கிக் கட்டப்பட்டிருந்த ரவிக்கை தன் பலவீனத்தையே உணர்ந்தது. மெல்லிய தாக ஓடிய மேலாடைக்குள்ளே தெரிந்த ஒற்றை வைர மாலைகூட ரவிக்கையின் மேடிட்ட பிரதேசங்களில் நெளிந்து, 'சே! உன் சக்தி இவ்வளவுதானா?' என்று நகைப்பதைப் பார்ப்பதற்காகத் தலை நீட்டும் திருடர்களைப் போல, ரவிக்கைக் குள்ளிருந்த பாகங்கள் மார்பின் நடுவில், இருபுறத்திலும் லேசாக வெளிப்பட்டுக் கிடந்தன. அவை இரண்டையும் சேர விடாமல் தடுத்து நின்ற மார்பின் நடுப் பிரதேசம், ரவிக்கையின் மேல்பாகம்

## சில 'காணவில்லை'கள்...

டூர் போயிருந்த கடுவம் பூனை மானேஜர் இன்று திரும்பிவிட்டதால் ஆபீஸில் குறட்டைச் சத்தத்தையே காணவில்லை.

இரண்டு நாளாய் ஓசி டீ வாங்கித் தந்த நண்பன் மூன்றாவது நாளிலிருந்து காண்டீன் பக்கம் காண வில்லை.

காலையில் சண்டை போட்டதால், மத்தியானச் சாப்பாட்டுக் காரியரில் சாப்பாட்டைக் காண வில்லை.

எதிர் வீட்டுக்காரியைப் பார்த்துச் சிரித்து விட்ட தால், ராத்திரி 11 மணிவரை மனைவியைப் பெட்ரூம் பக்கம் காணவில்லை.

—நடேஷ் ஷா




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு

பட்டுக் கயிறுகளாலும் கீழ்ப்பாகம் துணியாலும் இறுக முடியப்பட்டிருந்ததால், நீண்ட தாழை மடலைப் போல காட்சியளித்தது. இத்தனை அழகு அங்கு மண்டிக் கிடந்ததால்தானோ என்னவோ, அவள் அணிந்திருந்த பட்டுக் கொட்டடி ரவிக்கையில் குறுக்கும் நெடுக்குமாகத் தாயக் கட்டம் போல் பின்னப்பட்டிருந்த சரிகை வேலைப்பாடுகள், அந்த எழிலைப் பாதுகாக்கும் சிறைக் கம்பிகள்போல் தோன்றின.

இந்தப் பாதுகாப்பே அவற்றுக்குப் போதும்; ஆனால் அன்று அதிக அலங்காரம் செய்து கொள்ளாததால், கருமையான அவள் நீண்ட குழல் எடுத்துக் கட்டப்படாமல் ஒரே பின்னல் போடப்பட்டிருந்ததாலும், அந்தப் பின்னலையும் அவள் கழுத்துப் பக்கமாக இழுத்து மார்பு மீது தொங்க விட்டிருந்ததாலும், நிதானமாக அவள் விட்ட மூச்சில் அந்தப் பின்னல் எழுந்து எழுந்து தாழ்ந்து தாழ்ந்து உயிருடன் வளையும் கருநாகம் போல், 'ஜாக்கிரதை! கிட்டே வரவேண்டாம்' என்று எச்சரிக்கை செய்தது. அத்துடன் அவள் அழகில் புரண்டு விளையாடத் தனக்குத்தான் உரிமை போல் அந்தப் பெரிய நீண்ட பின்னல் நேராகக் கீழே சென்று, அவளுடைய வலது தொடையையும் தொட்டுக்கொண்டு நின்றதன்றி, அவள் அசைந்த போதெல்லாம் அக்கம்பக்கத்திலிருந்த சுற்றுப் பிரதேசங்களிலும் தாவத் தொடங்கியது.

அந்த அழகையெல்லாம் மாறி மாறிப் பருகிய கரிகாலன் அவள் ஆபரணங்களை அணியாவிட்டாலும், அணிந்திருந்த ஓரிரு ஆபரணங்கள் உயர்ந்த முறையில் செய்யப்பட்டிருந்ததையும், அவற்றில் வேங்கிநாட்டுக் கலை மட்டுமின்றி, தமிழ்நாட்டுக் கலையும், அக்கம் பக்கத்து ராஜ்யங்களின் கலைகளும் கலந்து கிடப்பதையும் கண்டான். அவள் மெல்லிய மேலாடை மூலம் லேசாகத் தெரிந்தாலும், அவள் கழுத்தில் அணிந்திருந்த வைரமாலையின் அமைப்பிலிருந்தும் அதன் முகப்பில் புதைக்கப்பட்டிருந்த பாண்டிய நாட்டு முத்திலிருந்தும் அது முழுக்க முழுக்கத் தமிழ்நாட்டு வேலைப்பாடு என்பதைப் புரிந்து கொள்ளக் கரிகாலனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. அவள் ஒரு கையில் மட்டும் அணிந்திருந்த இரத்தினங்கள் புதைக்கப்பட்ட வங்கி, வேங்கியின் வேலைப்பாட்டுக்கு அறிகுறியாக, சக்கரத்துக்குள் சக்கரமாக அமைந்து பட்டுக்கயிறு முடிச்சுப்போல் இழுத்து விடப்பட்ட தங்கக் கயிறுகள் கொண்ட ஒரு மரகதப் புஷ்பத்துடன் காணப்பட்டது. காதில் தொங்கிய கமலங்கள், நாகத்தின் உருவைப் பெற்று வளைந்து கிடந்ததால், வேங்கி நாட்டை ஒட்டிநின்ற நாகர்கள் நாடாகிய மாசுணி தேசத்தின் காதணிகள் அவை என்பதைக் கரிகாலன் ஊகித்துக் கொண்டான். காலில் அவள் அணிந்திருந்த மெட்டிகள் கூடப் பாம்புகளாகவே அமைக்கப்பட்டிருந்தன. மார்பகத்தே புரண்டு தொங்கிய கருநாகத்தாலும், காதிலும் கால்களிலும் அணிந்து நின்ற நாகர்களின் அணிகளாலும், அனேக நாகங்களால் பாதுகாக்கப்பட்ட நாக கன்னிகை போல் விளங்கிய வேங்கி நாட்டு மன்னன் மகளைக் கண்ட கரிகாலன், 'இவளுக்கு இத்தனை பாதுகாப்பு எதற்கு? கொல்லும் விழிகள் இரண்டே போதாதா?' என்று நினைத்தான்.

அந்த நினைப்பாலும், 'எங்கேயோ புத்த மடாலயத்தில் சன்னியாசிகளோடு சன்னியாசியாய்ப் பிரம்மசாரி




வித்தியாசங்கள் உள்ளன. விடை: அடுத்த பக்கம்

யாக வளர்ந்த நான் ஒரு பெண்ணை இப்படி அணு அணுவாக அலசிப் பார்க்கிறேனே' என்ற சிந்தனையாலும், கரிகாலனின் அழகிய உதடுகளில் புன் முறுவல் ஒன்றும் உதயமாயிற்று. அந்தப் புன்முறுவல் மன்னன் மகளையும் ஓரளவு சுயநிலைக்குக் கொண்டு வந்தது. அவளும் அதுவரை அவனைத் தீவிரமாக ஆராய்ச்சி செய்து கொண்டுதானிருந்தாள். சாதாரண உடையிலிருந்தபோதே, அவனது கம்பீரமான நடையையும், களை சொட்டும் முகத்தையும், வேல்கள் போல் இருட்டிலும் ஜொலித்த அவனது கண்களையும் கண்டு வியந்திருந்த மன்னன் மகள், அவன் தன் சகோதர னுடைய உடையுடன் எதிரே வந்து நின்றதும் அவன் ஓர் அரச குமாரன் போலவே தோன்றுவதைக் கண்டு பிரமிப்பின் மேல் பிரமிப்பை அடைந்தாள். அவள் பிரமிப்பை அவன் புன்முறுவல் உடைக்கவே அவள் கண்கள் பணிப்பெண் மீது பாய்ந்தன.

அதுவரை இருவருடைய மௌனத்திலோ ஆராய்ச்சியிலோ கலந்து கொள்ள இஷ்டப்படாமல் அறைக் கோடியில் நின்ற பணிப்பெண் மாலினி, மன்னன் மகளின் பார்வை தன் மீது திரும்பியதும், தன் தலையீட்டுக்கான சமயம் வந்து விட்டதை அறிந்து, கரிகாலனை நோக்கி, ''இன்னும் ஏன் தாமதம்? கொண்டு வந்த செய்தியைச் சொல், வேங்கி நாட்டு மன்னன் விமலாதித்தன் மகள் நிரஞ்சனாதேவி இவர்தான்; தைரியமாகச் சொல்,'' என்று உத்தரவிட்டாள்.

அவளைத் தொடர்ந்து அதிகார தோரணையில் மன்னன் மகளும் கேட்டாள், ''பிரும்ம மாராயர் என்ன சொல்லி அனுப்பினார்? ஏன் இரண்டு வார காலமாக அரிஞ்சயன் என்னைச் சந்திக்க வில்லை?'' என்று.

கரிகாலன் உடனே பதிலேதும் சொல்லவில்லை. உள்ளநிலை அப்பொழுதுதான் திடீரெனப் பளிச்சிட்டது அவன் புத்தியில். ஆகவே, அவளுக்குப் பதிலேதும் சொல்லாமல் லேசாகச் சிரித்தான். 'நிரஞ்சனாதேவி' என்று இருமுறை அவன் உதடுகள் பயபக்தி யுடன் அந்த வார்த்தைகளை உச்சரித்தன. 'ஆம்; அந்தக் கரிய விழிகளுக்கு அஞ்சனம் எதற்கு? நிரஞ்சனா! சரியான பெயர்தான்' என்று மனமும்கூடச் சேர்ந்து பாடியது.

''ஏன் சிரிக்கிறாய்?'' என்று உஷ்ணமாகக் கேட்டாள் மன்னன் மகள்.

''விதியை நினைத்துச் சிரித்தேன்,'' என்றான் கரிகாலன்.

''விதியா!'' அவள் குரலில் சந்தேகம் தொனித்தது. விழிகள் கேள்வி கேட்பதைப் போல் அவனை நோக்கி உயர்ந்தன.

''ஆம் அரசகுமாரி!'' என்று திடமாகவே பதில் சொன்ன கரிகாலன் கண்கள், வருத்தத்துடன் மன்னன் மகளின் மருண்ட விழிகளுடன் ஒரு வினாடி கலந்தன. அவள் விழிகளைத் தாழ்த்திக்கொண்டாள்.

தான் இருந்த இடத்தைவிட்டு இரண்டடி எடுத்து வைத்த கரிகாலன், கட்டிலின் இன்னொரு கோடியிலிருந்த சிங்கத்தின் தலையொன்றைப் பிடித்துக் கொண்டு, சில வினாடிகள் ஏதோ யோசித்துவிட்டு அரசகுமாரியை மீண்டும் நோக்கி, ''அரசகுமாரி! நீங்கள் எதிர்பார்த்த பேர்வழி நானல்ல, சிறிது தவறு நேர்ந்து விட்டது!'' என்று மெல்ல வார்த்தைகளை உதிரவிட்டான்.

அந்தப் பதிலைக் கேட்ட

ஆறு வித்தியாசம் விடை:



1. வண்டிப் பிச்சைக் காரரின் தாடி
2. பிளாட்பாரம்
3. திருவோடு
4. பழங்கள்
5. மரம்
6. பஸ்

மன்னன் மகளின் விழிகள் திடீரெனச் சலனப்பட்டன. பூரண சந்திரனை ஒரு வினாடி மறைத்துச் செல்லும் சிறு மேகத்தைப்போல், அவன் வதனத்தில் சிறிது நேரம் கவலைக்குறி படர்ந்ததன்றி, அதற்கு அறிகுறியாக அவள் பூவுடலும் சிறிது நெகிழ்ந்து கால் பெருவிரலொன்றும் சிறிது மடிந்து நிலத்தில் ஊன்றியது. சலனப்பட்ட கண்கள் திடீரெனத் திரும்பிப் பணிப்பெண்ணைப் பார்த்தன. பணிப்பெண்ணின் முகத்திலோ விவரிக்க இயலாத கிலி படர்ந்து நின்றது.

அடுத்த வினாடி மன்னன் மகளின் மருண்ட விழிகள் நெருப்பைக் கக்கின. ஏற்கெனவே சிவந்திருந்த அவள் கண்கள் கோபத்தால் அதிகமாகச் சிவந்தன. ''நீ யார்? எதிரிகளின் ஒற்றனா?'' என்று எழுந்தது கேள்வி, துடித்த உதடுகளிலிருந்து.

இந்தக் கேள்விகள் சமீபத்தில் நேரிட்ட பல அனுபவங்களை அவன் உள்ளத்தில் கிளப்பிவிட்டாலும், சந்தர்ப்பத்தை உத்தேசித்து அவற்றையெல்லாம் அடக்கிக் கொண்ட கரிகாலன், ''நான் ஒற்றனல்ல, அரசகுமாரி!'' என்று வினயமாகவே பதில் சொன்னான்.

''அப்படியானால் நீ யார்?'' என்று மன்னன் மகள் மீண்டும் கேட்டாள்.

''அதைக் கண்டுபிடிக்கவே புறப்பட்டேன்.''

''என்ன, நீ யாரென்பது உனக்குத் தெரியாதா?''

''தெரியாது. தெரிந்தால் இந்த இடத்தில் நிற்க வேண்டிய அவசியமோ, உங்களுக்குப் பதில் சொல்ல வேண்டிய தேவையோ ஏற்பட்டிருக்காது.''

''உன்னையே உணராத உனக்கு, இந்தக் கோட்டைக் கதவு திறந்திருப்பது எப்படித் தெரிந்தது?''

# மன்னன் மகள்

## 9. பாய்ந்துவரும் இரு வேல்கள்

கரிகாலன் கடைசியாகச் சொன்ன வார்த்தைகளின் காரணமாக நிரஞ்சனா தேவியின் நீள் விழிகளில் நிலவிய அச்சத்தின் சாயை அரை வினாடி தான் நிலைத்தது. அடுத்த கணம் மின்னல் தோன்றி மறைந்ததைப் போல் அகன்று விட்ட பயத்தின் குறியைக் கண்ட கரிகாலன், மன்னன் மகளின் மன உறுதியை நினைத்துப் பெரிதும் வியந்தான். எப்படிப்பட்ட உணர்ச்சியையும் எண்ணிய மாத்திரத்தில் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து அடக்கக்கூடிய நிரஞ்சனாதேவி சாதாரணப் பெண்ணல்ல என்பதைத் தீர்மானித்துக் கொண்டு, 'இவள் சிக்கியிருக்கும் சதி எத்தன்மையதாயிருக்கும்? காதல் சம்பந்தமானதா? காதலனை



சாண்டில்யன்

எதிர்பார்த்துக் காத்திருந்தாளா? பிரும்மமாராயன் என்பவன் யார்? அரிஞ்சயன் யார்? இவள் தோழன் பிரும்மமாராயனா, அரிஞ்சயனா? ஏதோ செய்தி என்று சொல்லுகிறாளே, எத்தகைய செய்தியை இவள் எதிர்பார்த்து நிற்கிறாள்? இறங்கியுள்ள காரியம் காதல் சம்பந்தமில்லாமல் அரசியல் சம்பந்த மானால் எத்தகைய அரசியல் சிக்கல் வேங்கி நாட்டில் ஏற்பட்டிருக்கக் கூடும்?' என்று எண்ணி விஷயங்களை அலசிப் பார்த்த கரிகாலன் மனத்தில் மெள்ள மெள்ள உண்மை உதயமாகவே, அவன் கண்களில் மிதமிஞ்சிய ஆச்சரியமும், நிரஞ்சனாதேவியின் நலனை உத்தேசித்து ஓரளவு அச்சமும் உதயமாயின.

அவன் தீவிர யோசனையில் ஆழ்ந்ததையும், அவன் புத்தியில் ஓடிய எண்ண அலைகள் முகத்தில் அவ்வப்பொழுது பிரதிபலித்ததையும், கடைசியாக அவனுக்கு ஏதோ உண்மை விளங்கிவிட்டதுபோல் கண்களில் வீசிய ஒளியையும் அவள் கவனிக்கத் தவற வில்லை. தன்னைப் பற்றியும் தன் ரகசியத்தைப் பற்றியும் இவன் புரிந்து கொண்டு விட்டானா? புரிந்து கொண்டால் எத்தனை தூரம் புரிந்து கொண்டிருப்பான் என்பதை நினைத்துப் பார்த்த நிரஞ்சனாதேவியும், அதை அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை யால், கரிகாலனுடன் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்து, ''சதியா? எந்தச் சதியைப் பற்றிக் குறிப்பிடுகிறீர்கள்?'' என்று வினவினாள், உணர்ச்சிகளைச் சிறிதும் வெளியில் காட்டாத மிகச் சாதாரணமான குரலில்.

அவளைச் சந்தித்தது முதல் அதுவரை, 'நீ' என்றும் 'உன்' என்றும் ஒற்றைப் படைச் சொல்லில் மரியாதை இன்றி வந்த சம்பாஷணை சற்றே சுவடு மாறியிருப்பதையும் 'குறிப்பிடுகிறீர்கள்?' என்று மரியாதையுடன் சொல் வெளி வருவதையும் கவனித்த கரிகாலன், மனத்துக்குள் லேசாக நகைத்துக் கொண்டான். இந்த மாற்றத்துக்குக் காரணம் பயமாயிருக்க முடியாது என்பது அவனுக்குத் தெரிந்தேயிருந்தது. வேறு எது காரணமாயிருக்க முடியும் என்பதை மட்டும் அவனால் அறிந்து கொள்ள இயல வில்லை. நிரஞ்சனாதேவியின் சகோதரனு டைய உடையை அணிந்து கொண்ட பிறகே நன்றாக அவனைக் கவனித்த மன்னன் மகள், அவன் முகத்தில் ராஜகளை சொட்டுவதையும்; சிறிதும்



சலனமின்றி நட்சத்திரங்கள் போல் ஜொலித்த அவன் கண்களில் தெரிந்த உறுதியையும் கண்டு, அவன் சதாரண மனிதனாயிருக்க முடியாதென்பதையும், உயர் குடியில் பிறந்தவனென்பதையும் சந்தேகமறப் புரிந்து கொண்டு விட்டாள். இப்படி அவள் தன்னைப் பற்றிப் புரிந்து கொண்டு தன் அந்தஸ்து பற்றி ஒரு முடிவுக்கும் வந்திருக்கிறாள் என்பதை அறிந்துகொள்ளக் கரிகாலனுக்கு வாய்ப்பு ஏதும் இல்லையாகையால், அவள் தொடர்ந்து பேசிய தோரணை அவனுக்குப் பெரிதும் ஆச்சரியத்தையே விளைவித்தது.

''நீங்கள் யாரென்பது எனக்குத் தெரியாது. விதியால் தள்ளப்பட்டு வந்ததாகச் சொன்னீர்கள். இப்பொழுது சதியைப் பற்றிக் குறிப்பிடுகிறீர்கள். விளக்கிச் சொல்லுங்கள்,'' என்று வினவினாள் விமலாதித்தன் மகள்.

''அரசகுமாரி! தெரியாதவர்களுக்கு விளக்க வேண்டும்; தெரிந்த உங்களுக்கு விளக்குவானேன்?'' என்றான் கரிகாலன்.

அவன் பேச்சை மெல்ல மறைக்க முற்படுவதைக் கண்ட அரசகுமாரி, அவனை நோக்கி இரண்டடி எடுத்து வைத்துச் சட்டென்று நின்று, அவன் முகத்தில் தன் கண்களை நன்றாகப் பதிய விட்டு, ''இனி ஒளிவு மறைவுக்கு இடமில்லை. வெளிப்படையாகப் பேசுங்கள்,'' என்றாள்.

கரிகாலன் சிறிது நேரம் ஏதோ யோசித்துவிட்டுச் சொன்னான்: ''அரசகுமாரி! நீங்கள் பயங்கரமான அரசியல் சதியில் சிக்கியிருக்கிறீர்கள் என்பதைத் தெளிவாக அறிந்து கொண்டேன். ஆகவே, உங்கள் நிலை பற்றி அச்சமும் பரிதாபமும் என் மனத்தில் எழுந்து நிற்கின்றன.''

அவன் வார்த்தைகளைக் கேட்ட அரசகுமாரியின் இதழ்களில் அலட்சியப் புன்முறுவலொன்று படர்ந்ததன்றி அவள் முகத்தின் கம்பீரமும் சற்றே உயர்ந்தது. வாளினும் கூர்மையான விழிகளைக் கரிகாலன் மீது ஓட்டிய மன்னன் மகள், ''விமலாதித்தனின் மகள் அச்சம் என்று ஒரு சொல் இருப்பதையே அறிய மாட்டாள், அவளைப்பற்றி யாரும் பரிதாபப்பட வேண்டிய அவசியமும் இல்லை,'' என்றாள்.

அவள் நின்ற தோரணை, பேச்சுக்களில் தொனித்த அச்சமின்மை, இதழ்களில் தவழ்ந்த அலட்சியக் குறுநகை, அனைத்தையும் கவனித்த கரிகாலன், 'இத்தனை துணிவும் அழகும் நிரம்பிய பெண் பெரிய வல்லரசுகளுடன் மோதத் துணிந்து விட்டாளே' என்ற நினைப்பால் பெருமூச்செறிந்தான். அவனது ஆயாசத்தையும் ஆயாசத்தால் ஏற்பட்ட பெருமூச்சையும் கவனித்த மன்னன் மகள், ''எதற்காகப் பெருமூச்சு விடுகிறீர்கள்? இப்பொழுது என்ன ஆபத்து வந்து விட்டது?'' என்று கேட்டாள்.

''ஆபத்து வரவில்லை அரசகுமாரி. ஆபத்தைத்தான் நீங்களே வரவழைத்துக்கொண்டு விட்டீர்களே. ஆபத்துத்தான் உங்களைச் சூழ்ந்து நிற்கிறதே!'' என்றான் கரிகாலன்.

''ஆபத்து சூழ்ந்து நிற்கிறதா?''

''ஆம், அரசகுமாரி! ஒரு பக்கம் சோழப் பேரரசு மோதுகிறது. இன்னொரு பக்கம் மேலைச் சாளுக்கியர்களின் பயங்கரப் படை பாய்ந்து நிற்கிறது. இரண்டுக்குமிடையில் அழகெல்லாம் திரண்ட உங்கள் உடல், இதைவிடப் பயங்கரம் என்ன வேண்டும்?'' என்றான் கரிகாலன்.

''சோழப் பேரரசா! மேலைச் சாளுக்கியர்களின் படை பலமா!'' என்று, ஏதுமறியாதவள் போல் வினவினாள் விமலாதித்தன் மகள்.

''அரசகுமாரி! சோழப் பேரரசு வேங்கி நாட்டை விழுங்கப் பார்க்கிறது. மேலைச் சாளுக்கியர்களுக்கும் இதைக் கபளீகரம் செய்ய ஆசை. இரண்டு பேர் ஆதிக்கமும் இல்லாமல் சுதந்திர நாடாக வைத்திருக்க உங்கள் முயற்சி நடக்கிறது.''

''இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''ஊகம். சரித்திர உண்மைகளை இணைத்துப் பார்க்க எனக்குள்ள சக்தி.''

''தற்புகழ்ச்சி அதிகமாயிருக்கிறதே!''

''தற்புகழ்ச்சியல்ல, உள்ள உண்மை. மனித அறிவுக்கு எட்டாதது உலகத்திலே எதுவும் இல்லை. ஆனால் அந்த அறிவைப் பயன்படுத்தப் பக்குவம் தேவை. அந்தப் பக்குவத்தை அளிக்கிறது சாஸ்திர ஞானம். அத்தகைய பக்குவம், விஷயங்களைப் பாகுபாடு செய்து பார்க்கும் பகுத்தறிவு ஏற்பட்டு விட்டால் எதையும் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். இரண்டுடன் இரண்டைச் சேர்த்

தால் நாலு என்று சொல்லப் பெரும் திறமை வேண்டியதில்லை. ஆனால் எண்களின் தன்மை, எண்களின் தொகுப்பு முறை இவை தெரியவேண்டும். அரசியலிலும் அப்படித்தான் அரசகுமாரி. அதுவும் ஒரு பெரிய கணித சாஸ்திரம்தான். அதில் கணக்குப் போடுவதும் கணக்குத் தீர்ப்பதும் நமக்குள்ள சரித்திர அறிவைப் பொறுத்தவை. அப்படி விளையாடப்படும் அரசியல் சதுரங்கத்தில், கணக்குச் சிறிது பிசகினால் ராணிக்கு ஆபத்துத்தான்!'' என்றான் கரிகாலன்.

அவன் சதுரங்கத்தின் ராணியாகக் குறிப்பிட்டது தன்னைத்தான் என்பதை அரசகுமாரி நிமிஷ நேரத்தில் புரிந்து கொண்டதால், அவள் லேசாகச் சிரித்தாள். அத்துடன், ''இந்தச் சதுரங்கத்தில் ராணி வெட்டப்படுவாள் என்று நினைக்கிறீர்களா?'' என்றும் கேட்டாள்.

''ராணிக்கு ஆபத்து என்றுதான் சொன்னேனே தவிர வெட்டப்படுவாள் என்று சொல்லவில்லை. ராணிக்குச் சரியான காவலாள் இருந்தால், எதிரி கிட்டே வரமுடியாதல்லவா?'' என்றான் கரிகாலன்.

''அத்தகைய காவலாளருக்கு எங்கே போவது?'' என்று சதுரங்க பாஷையிலேயே கேட்டாள் நிரஞ்சனாதேவி.

''உங்களுக்கு ஆட்சேபணையில்லாவிட்டால் இதோ நானிருக்கிறேன்!'' என்று சொல்லிய கரிகாலன், தன் வார்த்தைகளை அவள் எப்படி வரவேற்கிறாள் என்பதை அறிய, அவள் முகத்தை ஏறெடுத்தும் நோக்கினான்.

அந்தப் பதிலைக் கேட்ட நிரஞ்சனாதேவி ஒரு கணம் ஸ்தம்பித்தே போனாள். எங்கிருந்தோ வந்து குதித்த இந்த மனிதன் தன்னைக் காப்பதாகவும் தன் காவலாளாக இருப்பதாகவும் கூறியதைக் கேட்ட அவள், 'யாரோ அரசகுமாரன் திடீரெனத் தோன்றுவதும், அரசகுமாரி ஒருத்திக்கு அவன் உதவுவதும் கதைகளில் நடக்கும். வாழ்க்கையில் நடக்குமா?' என்று எண்ணிச் சிரித்தாள்.

''எதற்காகச் சிரிக்கிறீர்கள்?''

''இன்றைய இரவு நடப்பதெல்லாம் கதையில் நடப்பது போல் இருக்கிறதே என்று நினைத்தேன்.''

''அதனாலென்ன?''

''அதனாலென்னவா! கதையில்

# தூக்குக் கலை





டான்ஸ் மாஸ்டர் டி.கே.எஸ். பாபு சொன்னார்:

வெறும் டூயட் காட்சிகளில் மட்டும் ரசிகர்கள் திருப்தி அடைவதில்லை. ஹீரோயினை அலாக்காக ஹீரோ தூக்க வேண்டும். அதுதான் சந்தோஷம். அதனால்தான் அந்தக் காட்சியை ஸ்லோ மோஷனில் காட்டுகிறார்கள்.

கதாநாயகியை உயரத் தூக்கிவிட்டு, அப்படியே கொஞ்சம் கொஞ்சமாக கீழே இறக்கும்போது, கதாநாயகியின் உடலில் எல்லாப் பகுதிகளும் நாயகனின் உடலில் எல்லாப் பகுதிகளிலும் உரசுகிறது. ரசிகர்களுக்கு மேலும் ஒரு கிளுகிளுப்பு!

கதாநாயகி சுடிதார் போன்ற உடையிலிருந்தால், ஹீரோவுக்குத் தூக்குவது சுலபமாயிருக்கும். வழுவழுப்பான புடவை, பட்டுப் பாவாடை என்றால் கொஞ்சம் கஷ்டம்.

ஹீரோயினைத் தூக்குவது என்பது கஷ்டமான வேலைதான். அந்தக் காட்சியில் கதாநாயகியின் ஒத்துழைப்பு மிக மிக அவசியம். அவர்களின் ஒத்துழைப்பு ஒரு சதவிகிதம் குறைந்தால்கூட, எவ்வளவு பெரிய ஹீரோவும் தடுமாறி விடுவார்.

தூக்கி இறக்கியவுடன் ஹீரோக்களுக்கு உடம்பு வலி ஏற்படத்தான் செய்யும். அதை யாரும் வெளியே காட்டிக் கொள்வதில்லை.

தூக்கப்படும் நடிகைகளுக்குள் நளினி கொஞ்சம் கனமானவர் என்று சில ஹீரோக்கள் சொல்வதுண்டு.

—ஆழ்வார்.





''என்னது, இந்தப் பேச்சாளர் அஞ்சு நிமிஷத்துக்கு முன்னாடி மதுவிலக்கை ஆதரிச்சுப் பேசிட்டிருந் தார். இப்ப திடீர்னு மதுவிலக்கை எதிர்த்துப் பேசறாரே?''

''சோடாவுக்குப் பதில் சாராயத்தைக் கொடுத்து விட்டார் களாம்!''

—கே. ரவி.

நடப்பது வாழ்க்கையில் நடக்க முடியுமா?''

''ஏன் முடியாது? வாழ்க்கையிலிருந்து கதை உண்டாகிறது. ஆகவே கதையைப் பின்பற்றி வாழ்க்கை நிகழ்ச்சிகள் ஏற்படுவதில் விந்தை என்ன இருக்கிறது?''

''விஷயம் தெரியாமல் பேசுகிறீர் கள். நீங்கள் பாதுகாக்க முன்வரும் பெண் யாரென்பதை அறியாமல் பேசுகிறீர்கள். முன்னிருக்கும் ஆபத்தும் எத்தன்மையதென்பது உங்களுக்குத் தெரி யாது.''

''நன்றாகத் தெரியும், அரசகுமாரி.''

''என்ன தெரியும் உங்களுக்கு?''

''சொல்லுகிறேன் கேளுங் கள்...'' என்று துவங்கிய கரிகாலன், வசந்த மண்டபத்தின் அந்த அறைக்குள்ளே சற்று நேரம் உலவிக் கொண்டே சிந்தனை செய்தான். சிந்தனை செய்யச் செய்ய அவன் கண்கள் ஏதோ கனவுலகத்தில் சஞ்சரிப்பதைப்போலத் தோன்றின. அந்த உலகத்திலிருந்தே பேசு பவன் போலும் எதிரே இருக்கும் மாணவிக்குப் போதிக்கும் ஆசான் போலும் உள்ள நிலையை விவரிக்க முற்பட்ட கரிகாலன் வாயிலிருந்து, வார்த் தைகள் ஒரே சீராகவும் திடமாகவும் உதிரத் தொடங்கின. அவன் தரையைப் பார்த்துக் கொண்டும் நடந்துகொண்டுமே பேசத் தொடங்கிக் கூறினான்.

''அரசகுமாரி! தமிழ்நாடு இன்று மகோன்னத நிலையில் நிற்கின்றது. பிறந்த நாட்டுப் பெருமையை எடுத்துப் பறை சாற்றுகிறேன் என்று நினைக்காதீர்கள். பிறந்த அன்னையை நினைத்து மகிழ்ந்து பெருமிதமடையாத மகன் யாரும் இருக்க முடியாதல்லவா! அந்தப் பெருமையால் என் சித்தம் குதூகலிக்க, உள்ளம் உவகை யால் துள்ள, சொல்கிறேன். வட பெண்ணைக்கும் வெள்ளாற்றுக்கும் இடையே குறுகிக் கிடந்த சோழச் சிற்றரசு விஜயாலயன் காலம் முதல் விரிவடையத் தொடங்கி, ராஜராஜ சோழன் வாள் பலத்தால் வடக்கே கிருஷ்ணா நதியையும், மேற்கிலும் கிழக்கிலும் கடலையும் தெற்கே கடலையும் தாண்டிச் சிங்களம் வரையிலும் நீண்டு அகன்று இன்று பாரதத்தின் மிகப் பெரிய பேரரசாகப் பரந்து கிடக்கிறது. ராஜராஜன் காலத்திலேயே முடிசூடிப் பல போர்களில் வாகை சூடிய ராஜராஜன் மகன் ராஜேந்திர சோழ தேவனின் தோள் தினவு இன்னும் அடங்கவில்லை. வடகிழக்கில் கிருஷ்ணா நதியின் அலைகளும் வடமேற்கில் துங்கபத்திரையின் வேகமான நீரோட்டமும் தன் பேரரசைத் தடுத்து நிற்பதைப் பரகேசரி வர்மனான ராஜேந்திர சோழன் விரும்பவில்லை. சோழ மன்னன் கண்கள் கிருஷ்ணாவை அடுத்து நிற்கும் இந்த வேங்கி நாட்டின் மீது நிலைத்து நிற்கிறது. கிருஷ்ணாவின் அலைகளைத் தாண்டி, வேங்கி நாட்டை உடைத்து, வடக்கே தன் பேரரசை விஸ்தரிக்கத் துடித்துக் கொண்டிருக் கிறான் சோழப் பேரரசன். அவன் கண்கள் மட்டும் வேங்கி நாட்டின் மீது விழுந்திருந் தால், இதன் கதி இத்தனை அபாயத் திலிருக்காது. இதை நோக்கி மேலைச் சாளுக்கிய மன்னன் கண்களும் வட்ட மிட்டுக் கொண்டிருக்கின்றன. மேலைச் சாளுக்கிய மன்னனான ஜெயசிம்மனும் அப்படி அற்ப சொற்பமானவனல்ல. பல முறை போர்கள் நடந்தும் மேலைச் சாளுக் கியர்களின் பலம் சிறிதும் குன்றவில்லை. சோழர்கள் தொடுத்த போர்களில் அவர் கள் படைகள் அழிந்தன. ஆனால் அவர் கள் திறன் அழியவில்லை. துங்கபத்ராவைத் தாண்டியுள்ள கல்யாண புரம் இப்பொழுது தலைநகராகிவிட்டது.

அங்குள்ள கோட்டையையும் ஜெயசிம்ம சாளுக்கியன் பலப்படுத்தி விட்டான். எந்தக் காரணத்தைக் கொண்டும் சோழர்களை ஓங்கவிடக் கூடாதென்று திடசித்தம் கொண்ட ஜெயசிம்ம சாளுக்கியன், தனது தாயாதிகள் நாடான வேங்கி நாட்டையும் சோழர்கள் வசத்தில் சிக்கவிடாதிருப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறான். இரண்டு நாடுகளின் உறவு முறை வேறு வேங்கி அரச குடும்பத்தில் கலந்து நிற்கிறது...'' என்று பேசிக் கொண்டே போன கரிகாலன், தன் பேச்சைச் சற்று நிறுத்தி, நிரஞ்சனாதேவியை ஏறெடுத்து நோக்கினான். அதுவரை நின்றிருந்த அவள் கட்டிலின்மீது உட்கார்ந்து விட்டாள். அவள் தலை குனிந்து கிடந்தது. கண்கள் மூடிக் கிடந்தன. தன் பேச்சு அவள் இதயத்தில் ஊறிவிட்டதைக் கண்ட கரிகாலன் மேலும் சொல்லலானான்:

''வேங்கி நாட்டின் தலையெழுத்து விசித்திரமானது அரசகுமாரி! ஏற்கெனவே விவாகமாயிருந்த வேங்கி நாட்டு மன்னன் விமலாதித்தனுக்கு, சோழப் பேரரசுக்கு வடக்கே பிடியிருக்க வேண்டுமென்பதற்காகவே, ராஜராஜ சோழன் தன் மகள் குந்தவையை இரண்டாந்தாரமாகக் கொடுத்தான். ஆனால், மேலைச் சாளுக்கியர்களுக்கும் இந்த வித்தை தெரியாமற் போகவில்லை. அந்த அரச குடும்பப் பெண்ணொருத்தி விமலாதித்தனுக்கு மூன்றாந்தாரமானாள். முதல் மனைவி ஒரு பெண்ணைப் பெற்றுக் கொடுத்து மண்ணுலகை விட்டுச் சென்றாள். அந்தப் பெண்ணான நீங்கள் எழிலெல்லாம் திரண்டு வந்ததுபோல் என் எதிரே நிற்கிறீர்கள்.

''விமலாதித்தனின் இரண்டாம் தாரமும் மூன்றாம்தாரமும் ஆண்மகவுகளைப் பெற்றார்கள். சோழ ராஜகுமாரி குந்தவைக்குப் பிறந்தான் ராஜராஜ நரேந்திரன். சாளுக்கிய அரச மகளுக்குப் பிறந்தான் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் சந்ததிகள் தலையெடுத்தும், இனி இவ்வுலகில் தன் கடமை தீர்ந்ததென விமலாதித்தன் மேல் உலகம் ஏகினான். ஆனால் நாட்டை எப்படி விட்டுச் சென்றான்? வேங்கி நாட்டுச் சிம்மாசனத்துக்கு இரண்டு இளவரசர்கள்! ஒரே நாட்டில் இரு விரோதிகள் சிருஷ்டித்து விட்ட பெரும் வாள்கள்! ஒன்று சோழ நாட்டு இளவல், ராஜராஜ நரேந்திரன்! இன்னொன்று மேலைச் சாளுக்கியர்களின் செல்வன் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன்.

இந்த இடத்தில் மன்னன் மகள் தலையிட்டு, ''சரித்திரத்தை நன்றாக அறிந்திருக்கிறீர்கள்,'' என்றாள்.

''இன்னும் சொல்கிறேன் கேளுங்கள் அரசகுமாரி. சோழப் பேரரசு தன் பலத்தால் ராஜராஜ நரேந்திரனுக்கு வேங்கி நாட்டில் முடி சூட்டிவிட்டது. ஆனால் மேலைச் சாளுக்கியநாடு அருகிலிருப்பதாலும், ஜெயசிம்ம சாளுக்கியன் படைகள் வேங்கிநாட்டை ஆக்கிரமித்து நிற்பதாலும் பெரும் சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. விஜயாதித்தனுடைய மாமன் என்ற முறையில், ஜெயசிம்ம சாளுக்கியன் அடிக்கடி இங்கு வந்தும் தன் படைகளை நிறுத்தியும், வேங்கி நாட்டின் மீது ஆதிக்கத்தை ஏற்படுத்தி விட்டான். ராஜராஜ நரேந்திரன்மீது தனக்கேதும் பகையில்லாதது போல் நடித்து அவனைத் தன் கைப்பொம்மையாகவும் ஆக்கியிருக்கிறான். சோழர்கள் இளவலுக்குத்

## பொ. போ. பொம்மு



சென்னையில் ஆங்காங்கே பூங்காக்கள் அலங்காரமாக (சில அலங்கோலமாக) உள்ளன. மாலை வேளையில் எவ்வளவு பேர் பூங்காவுக்கு வந்து, பூங்காவின் சூழலை அனுபவிக்கிறார்கள்?

மயிலாப்பூர் நாகேஸ்வரராவ் பந்துலு பூங்காவில் மாலை 6.30யிலிருந்து 7.30 வரை ஒரு மணி நேரம் இருந்து கவனித்ததில்—

புல்தரையிலும், சிமெண்ட் பெஞ்சியிலும் 12 ஜோடி ஆணும் பெண்ணுமாக அமர்ந்திருந்தனர் (12× 2= 24)

மூவராக (ஆண்கள்) அமர்ந்து 5 இடங்களில் பேசிக்கொண்டிருந்தார்கள். (3× 5= 15

இருவராக (ஆண்கள்) 11 இடங்களில் (2× 11= 22)

தனியாக சிந்தனையில் மூழ்கியவர்கள் 13

ஓடி ஆடிய குழந்தைகள் 8.

ஆக மொத்தம் 82 பேர் அந்தப் பூங்காவை அனுபவித்துக் கொண்டிருந்தனர்.

—பா. கோ.

# கோடைக்காலம் தொடரட்டும்.

# ரஸ்னா இருக்கையில் எதுவும் சுவையான காலம்தான்.











**இன் சுவை அதிகம்**

இணைசேர்ந்து இனிமைகூட்ட இதிலுள்ள சாரங்கள் இரண்டு : பவுடர், திரவ கான்ஸென்ட்ரேட்.

**ருசி வகைகள் அதிகம்**

நறும் சுவைகள் 10 விதம். இத்தனை விதங்களில் தருவோர் வேறெவரும் இல்லை.

**பானம் கரைக்க எளிது**

உங்கள் சிறு குழந்தைகூட கரைத்துக் காட்டும், அத்தனை எளிது.

**இதன் எதிரே வேறெதுவும் 'ஏனோதானோ' தான் என்பீர்கள், இல்லையா !**

பேக் ஒன்றுக்கு 32 கிளாஸ்கள். சிக்கனத்திலும் சிக்கனம் இது.







**இந்தியாவின் அதிஉன்னத விற்பனை உடைய ஸாஃப்ட் ட்ரின்க் கான்ஸென்ட்ரேட்**

Mudra:A:PI:3407Tam.

துணையாக, அவன் ரொம்பக் கேவலமான பேர்வழிகளை நிறுத்தியிருப்பதாகவும், சூடாமணி விஹாரத்தில் இருக்கும்போதே கேள்விப்பட்டேன். ராஜராஜ நரேந்திரனைக் குடிகாரனாக்கி, அற்ப வழிகளில் அவனை இறக்கிவிட்டு, மக்கள் வெறுக்கும்படியாகச் செய்து, பிறகு விஜயாதித்தனை மன்னனாக்க ஜெயசிம்ம சாளுக்கியன் திட்டமிட்டிருக்கிறான்...'' என்று சொல்லிக்கொண்டு போன கரிகாலனை இடைமறித்த நிரஞ்சனாதேவி, ''ஜெயசிம்மன் நோக்கத்தை எப்படித் தெரிந்து கொண்டீர்?'' என்று வினவினாள்.

கரிகாலன் விளக்கினான்: ''அரசகுமாரி! நான் கல்வி பயின்ற திருக்கூடமான சூடாமணி விஹாரத்தைப் பற்றியும் அந்த மடாலயத்தின் பெரியாரைப் பற்றியும் தெரிந்தால் நீங்கள் இப்படிக் கேள்வி கேட்க மாட்டீர்கள். அந்த விஹாரத்திலிருந்த பொழுது, அவரை நாடி யோசனை கேட்க வராத ராஜதந்திரிகள் கிடையாது. அவர் அறியாத அரசியல் மர்மங்களும் கிடையாது. ஓர் அரசன் ஒரு காரியத்தில் இறங்கினால், அதன் காரணம் என்ன என்பதை விநாடி நேரத்தில் ஊகித்து விடுவார். சரித்திர ஞானம், அன்றாடம் நாட்டில் நிகழும் விஷயங்கள், அவற்றை ஆராயும் தன்மை, இத்தனையும் அவர் சொல்லிக் கொடுத்தவைதான் எனக்கு. ஜெயசிம்ம சாளுக்கியனைப் பற்றியும் அவன் சாமர்த்தியத்தைப் பற்றியும் எத்தனையோ முறை சொல்லியிருக்கிறார். அங்கு அவன் ஆதிக்கம் இருந்தும் விஜயாதித்தனை ஏன் வேங்கி நாட்டு அரியணையில் அமர்த்தவில்லை? இத்தனைக்கும் அவன் மருமகன்! காரணம் வெகு தெளிவு, அரசகுமாரி. விஜயாதித்தனை ஜெயசிம்மன் படை பலத்தைக் கொண்டு அரியணை ஏற்றினால், அடுத்த விநாடி வேங்கி நாட்டின் மீது சோழநாட்டுப் படையெடுப்பு ஏற்படும். தன் மருமகனைக் காக்க ராஜேந்திரன் படை அனுப்பத் தயங்க மாட்டான் என்பது ஜெயசிம்மனுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் நேரடியான போர் முறையில் இறங்கவில்லை. தந்திரத்தை கையாளுகிறான். ராஜராஜ நரேந்திரன் மீது மக்களுக்கு வெறுப்புண்டாக்கப் பார்க்கிறான். மக்கள் வெறுத்த மன்னனை அகற்றினால், ராஜேந்திரன்கூடத் தலையிட முடியாது. மக்கள் பலத்தை எதிர்ப்பதற்கு எந்த மன்னாதி மன்னனாலும் முடியாது என்பதை ராஜேந்திர சோழனைவிட அறிந்தவர்கள் யார் இருக்கிறார்கள்? ஆகையால்தான் மக்களைத் தூண்ட முயல்கிறான் ஜெயசிம்மன். ராஜராஜ நரேந்திரன் ஒழுக்கம் கெட்டால் மக்கள் அவனை வெறுப்பார்கள். மக்கள் வெறுத்தால் அவனை நீக்குவது சுலபம். இது ஜெயசிம்மனின் தந்திரம். இங்குதான் உங்கள் தலையீடு இருக்கிறது. ஒரு பக்கம் சோழப் பேரரசின் படைபலம்; இன்னொரு பக்கம் சாளுக்கியர்களின் ராஜ தந்திரம். வேங்கி நாட்டை நோக்கிப் பாய்ந்து வரும் அந்த இரு வேல்களுக்கிடையே நிற்கின்றன இரு வேல் விழிகள்.''

அதுவரை ஆச்சரியத்தால் உணர்ச்சிகள் பொங்கக் கரிகாலனின் சரித்திர ஆராய்ச்சியைக் கேட்டுக் கொண்டிருந்த நிரஞ்சனாதேவி, ''என் தலையீடா! நானா குறுக்கே நிற்கிறேன்?'' என்றாள் நித்திரையிலிருந்து விழித்தவள் போல, ''எந்த விதத்தில் நான் தலையிடுகிறேன்?'' என்றும் கேட்டாள்.

''ராஜராஜ நரேந்திரனை அரியணையில் பலமாக இருத்தி வைக்க நீங்கள் ஏற்பாடு செய்கிறீர்கள். காரணம் மட்டும் எனக்கு விளங்கவில்லை. ராஜராஜ நரேந்திரன் ஒரு சிறிய தாயின் மகன். விஜயாதித்தன் இன்னொரு சிறிய தாயின் மகன். இந்த இருவரில் உங்களுக்கு ராஜராஜன் மீது அன்பும் விஜயாதித்தன் மிது வெறுப்பும் ஏற்படக் காரணமென்ன?'' என்று வினவினான் கரிகாலன்.

''காரணம் நான் சொல்லுகிறேன்,'' என்றது ஒரு புதுக் குரல். அந்தக் குரலைக் கேட்டு வாயிற்படியை நோக்கிய மூவரும், அடியோடு திடுக்கிட்டுப் போனார்கள். வாயிற்படியில் ராஜராஜ நரேந்திரன் நின்றிருந்தான்.

(தொடரும்)



# இளமைத் தேடல் ஆரம்பமாகிறது



''இளநீரில், நீர் அதிகமாக உள்ள காயையும், முத்தல் காயையும், இளநீர் விற்பவர்கள் எப்படிக் கண்டு பிடிக்கிறார்கள்?'' என்று என் நண்பன் கேட்டான்.

''எப்படி?'' என்றேன், தெரியாதவன்போல்.

''அது வியாபார ரகசியம். நீர் உள்ள காயாக வேண்டும் என்று கேட்டதும், இளநீர் விற்பவர் சீரியஸாகத் தேங்காய்கள் உள்ள குவியலில் தேடுவார். ஒரு காயை எடுப்பார். பிறகு மீண்டும் குவியலில் தூக்கி எறிந்து விடுவார். பிறகு இன்னொன்று... கடைசியில் ஒன்றை எடுத்துச் சீவுவார். அதில் இளநீர் நிறைய இருந்தால் வெற்றிப் பெருமிதத்துடன் ஒரு சிரிப்பை உதிர்ப்பார். இல்லையென்றாலும் நீ கோபித்துக் கொள்ளப் போவதில்லை. அவர் தான் உனக்காகக் கஷ்டப்பட்டுத் தேடினாரே! முத்தல் வேண்டுமென்று நீ கேட்டாலும் அதே கதைதான்!'' என்றான்.

உண்மையில் தேங்காயில் வழுக்கை அதிகம் உண்டா இல்லையா என்றறிய வழி உண்டு. காம்பு உள்ள பக்கத்திற்கு நேர் எதிர்ப்புறத்தில் மூன்று மேடுகள் இருக்கும். இந்த மூன்று மேடுகளும் தனித்தனியே கூராக இல்லாமல் எவ்வளவுக்கெவ்வளவு மட்டமாக இழைந்து போகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு இளநீர் அதிகமாக இருக்கும்.

—நந்தகோபால், சென்னை.

---

கொண்டார். பணம் பெற்றுக்கொண்டு நன்றி கூறிக் கடிதம் எழுதினேன். உடனே அவர், 'பணம் கிடைத்ததே என்று கூடப் பாராமல் எங்களிடம் வம்பளந்துவிட்டுச் செல்வார்கள் சில பயணிகள். நீங்களோ நன்றி கூறியுள்ளீர்கள், என்னையும் நீங்கள் மிஞ்சி விட்டீர்கள்,' என்று கடிதம் எழுதியிருந்ததோடு வேறு ஏதாவது உதவி தேவையிருப்பின் உதவுவதாகவும் கடிதம் எழுதியிருந்தார்.

இவர்களைப் போன்று பொறுப்புள்ள, உதவி செய்யும் குணம் உள்ளவர்களால்தான், அவர்கள் சார்ந்துள்ள நிர்வாகம் பெருமை பெறுகிறது.

—இராஜகுமாரி, செஞ்சி.

## நடு இரவில் சத்தம் போடாதே!

இரவு நேரங்களில் ரோந்து வரும் கூர்காக்கள், கையில் உள்ள கம்பால் சுற்றுப்புற சுவர் மீதோ, கேட் மீதோ தட்டிவிட்டுச் செல்கிறார்கள்.

இதனால் திருடர்கள் உஷாராகி விடுவதால் திருட்டைத் தவிர்க்கவோ, திருடனைப் பிடிக்கவோ முடிவதில்லை. மேலும், திருடர்கள் இவர்கள் எழுப்பும் ஒலியைக் கேட்டுப் பதுங்கிக் கொள்ள இது வாய்ப்பளிக்கிறது.

இதை அவர்களிடம் கேட்டால், ''பலர் 'சரியாக ரோந்து வருவதில்லை', என்று எங்கள்மீது புகார் கூறுகிறார்கள். எனவே, எங்கள் வருகையைத் தெரிவிக்கவே அவ்வாறு ஒலி எழுப்புகிறோம்!'' என்கிறார்கள்.

இவர்கள் தங்கள் வரவைத் தெரிவிக்கச் சுற்றுப்புற சுவர் மீது ஒரு தாளை ஒட்டி, அதில் தினமும் கையொப்பமிட்டு விட்டுச் செல்லலாமே!

—ஏ.எஸ். குமார், சென்னை.



# மன்னன்

## 10. தந்தப் பேழை

9.4.87



நிகழ்ச்சிகள் துரிதமாக நடந்தேறியதால், வானவெளியில் வெள்ளி முளைத்து விடியும் நேரம் நெருங்கிவிட்டதையோ. அதற்கு அறிகுறியாக வெண்மதி வெள்ளலத்திப் புஷ்பம் போல் வெளிறிட்டுத் தன் ஒளியைக் குறைத்துக் கொண்டதையோ விமலாதித்தன் மகள் உணரவில்லை. அன்றிரவில் அடுத்தடுத்து எதிர்பாராத விதமாக ஏற்பட்ட சம்பவங்களால் அவள் மனம் புயலில் சிக்கிய மரக்கலம் போல்

# மகள்




ஆடிக்கொண்டிருந்தது. மனத்தின் அத்தனை அலைச்சலையும் சிந்தனையில் ஏற்பட்ட விவரிக்க முடியாத சிதறல்களையும் அவள் முகம் மாத்திரம் எள்ளளவும் எடுத்துக்காட்டாமல் அமைதியையே பிரதிபலித்துக் கொண்டிருந்தது. ஆகவே, ராஜராஜ நரேந்திரன் திடீரென அங்கு முளைத்து, தனக்கும் தான் இன்னாரென்றறியாத வாலிபனுக்கும் இடையே நிகழ்ந்து கொண்டிருந்த சம்பாஷணையில் குறுக்கிட்டபோது, உணர்ச்சிகளை அவள் அதிகமாக வெளிக்குக் காட்டவில்லை. ஆரம்பத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியைக்கூடக் கண்ணிமைக்கும் நேரத்தில் மறைத்துக் கொண்டாள். ஆச்சரியத்திற்கு அறிகுறியாக அவள் புருவங்கள் சற்றே எழுந்து தாழ்ந்தனவேயொழிய, வேறு உணர்ச்சிகளின் அறிகுறியேதும் அவள் வதனத்தில் தோன்றவேயில்லை. ஆகவே, உறுதியான பார்வையொன்றை ராஜராஜ நரேந்திரன் மீது செலுத்திய நிரஞ்சனாதேவி, திடமான குரலில் கேட்டாள், ''தம்பி, இந்த நேரத்தில் இங்கு எதற்காக வந்தாய்?'' என்று.

ஆட்டம் கண்டிருந்த வேங்கி நாட்டு அரியணையில் அமர்ந்து திண்டாடிக் கொண்டிருந்த ராஜராஜ நரேந்திரன், அந்த அறையிலிருந்த மூவரையும் நோக்கிவிட்டுச் சிறிது நேரம் சிலையென நின்றான். பிறகு கள்ளங் கபடமற்ற குழந்தை போல் சிரிப்பொன்றை உதிர்த்துவிட்டு, ''அரசகுமாரிக்கு வசந்த மண்டபத்தில் துணையேதுமிருக்காதென்று வந்தேன். துணை கிடைத்து விட்டது போலிருக்கிறதே!'' என்று கரிகாலனை நோக்கிப் பார்வையொன்றையும் செலுத்தினான். அந்தப் பார்வையைச் சந்தித்த கரிகாலன் கண்கள், ராஜராஜ நரேந்திரனைச் சுற்றி வந்து எடை போடவும் தொடங்கின. அரசர்கள் மணிமுடி சூடும்போது கையில் கட்டப்படும் மந்திரக் கவசம், பட்டைச் சங்கிலியில் பொருத்தப்பட்டு வட்ட வடிவில் வாசற்படியில் நின்ற வாலிபனின் வலதுகரத்தில் அந்தச் சமயத்திலும் ஆடிக்கொண்டிருந்ததால், 'இவன்தான் ராஜராஜ நரேந்திரனாயிருக்க வேண்டும்', என்று கரிகாலன் ஊகித்துக் கொண்டான். தவிர, அந்த வாலிபன் உதிரவிட்ட சிரிப்பின் ஒலியிலிருந்தும், பார்த்த மருண்ட பார்வையிலிருந்தும், வேங்கி நாட்டு மன்னனுக்குப் புத்தி இன்னும் பக்குவமடையவில்லையென்பதையும், அவன் எடுப்பார் கைப்பிள்ளையாகவே இருக்க முடியுமென்பதையும் கரிகாலன் சந்தேகமறப் புரிந்து கொண்டான். மெல்லியதாகத் துவண்டு வாயிற்படியில் சாய்ந்து நின்ற உடலில் பலமும் அதிகமில்லாததைக் கவனித்த கரிகாலன், மன்னர்களுக்குத் தேவையான உடற்பயிற்சி, வாள் பயிற்சி முதலியன அவனுக்குச் சரிவர அளிக்கப்படவில்லை

யென்பதையும் அறிந்து கொண்டான். வேங்கி நாட்டு மன்னன் கை தன்னை மீறி ஓங்கக்கூடாதென்பதற்காக ஜெயசிம்ம சாளுக்கியன் அதை எத்தனை பலவீனமாக உபயோகமற்றதாக அடித்திருக்கிறான் என்பதை நன்றாகத் தெரிந்துகொண்ட கரிகாலனுக்கு, ராஜராஜ நரேந்திரன் மீது ஓரளவு பரிதாபமும் ஏற்பட்டது. இத்தனைக்கும் ராஜராஜ நரேந்திரன் அடியோடு முட்டாளல்ல என்பதையும் அவன் உடலில் ஊறியிருந்த சோழ நாட்டு ரத்தத்தின் காரணமாகக் கொஞ்சம் விஷமமும் அவன் வார்த்தைகளில் கலந்திருப்பதையும் கரிகாலன் கவனித்தான். ஆகவே, ராஜராஜ நரேந்திரன் தன்னைக் குறிப்பிட்டு அரச குமாரிக்குத் துணை கிடைத்து விட்டதாகச் சொன்ன விஷமப் பேச்சுக்குக் கரிகாலனே பதில் சொல்லத் தொடங்கி, ''மன்னவா! இது அரசகுமாரி எதிர்பார்த்த துணையல்ல; எதிர்பாராத துணை!'' என்றான்.

ராஜராஜ நரேந்திரனின் குழந்தைக் கண்கள் கரிகாலன் முகத்தில் மீண்டும் பதிந்தன. ''எதிர்பாராமல் கிடைக்கும் எதிலும் இன்பம் கலந்திருக்கு மென்று சொல்வார்கள்...'' என்ற நரேந்திரன், வாசகத்தை முடிக்காமல் மென்று விழுங்கினான்.

அதை இடையே வெட்டிய கரிகாலன், ''தவறு மன்னவா! உலகத்தில் இன்பமும் துன்பமும் கலந்தே நிற்கின்றன. என் சம்பந்தப்பட்ட வரையில் இதுவரை எதிர்பாராமல் ஏற்பட்ட நிகழ்ச்சிகளில் மகிழ்ச்சி அளிக்கக் கூடிய அம்சம் மிகச் சொற்பம். என் பெற்றோரைக் கண்டு பிடிக்கக் கிளம்பினேன். எதிர்பாராமல், காவிரிக் கரையில் ஒரு துறவியைச் சந்தித்தேன். அவன் துறவியல்ல; அவனால் இன்னலே நேர்ந்தது. மேற்கே போக வேண்டிய என்னைக் கிழக்கே இழுத்து வந்தான். அதனால், தங்கள் வீரர்களிடம் சிக்கிக் கொள்ள இருந்தேன். அரசகுமாரியின் உதவியில்லாவிட்டால், தங்களை இந்த நேரத்தில் இங்கு சந்திக்கும் பாக்கியம் கிடைத்திருக்காது,'' என்றான்.

''துன்பமான கதை. இதில் இன்பத்தின் கலப்பேயில்லையே!'' கரிகாலனின் தத்துவத்தில் ஏதோ தவறு கண்டு பிடித்துவிட்டதைப் போலப் புன்முறுவல் செய்தான்.

''ஏன் இல்லை மன்னவா? வேங்கி நாட்டு மன்னன் மகள், அழகுக்கும் அறிவுக்கும் பெயர்போன நிரஞ்சனா தேவியவர்களைச் சந்தித்தேன். சம்பிரதாயப் படாடோபங்களின்றி, அரண்மனையில் நாட்கணக்கில் காத்திராமல், மன்னனையும் பேட்டி கண்டுவிட்டேன். இவற்றைவிட என்ன வேறு இன்பம் வேண்டும்? இவையெல்லாம் சாதாரணமாகக் கிடைக்கக் கூடியதா?'' என்று கேட்டான் கரிகாலன்.

அவன் பகிரங்கமாகத் தம்பிமீதும் தன்மீதும் புகழ்ச்சி வலையை எடுத்து வீசுவதைக் கண்ட நிரஞ்சனாதேவி

## அத்தனை பேர் மொட்டை ஏன்? விடை:

'எங்க சின்ன ராஜா' படத்தில் பண்ணையாராக வரும் பாக்கியராஜுக்கு ஒரு வேலைக்காரன். அவன் ஒரு நாள் திடீரென்று மொட்டை அடித்துக் கொண்டு வந்து நிற்கிறான். 'என்னடா இது திடீர் மொட்டை?' என்று பண்ணையார் கேட்க, 'உங்க ஆத்தாளுக்குத் தலைவலின்னு சொன்னாங்க, தலைவலி சரியாகணும்னு காரமடை ரங்கநாதன் கோயிலில் போய் மொட்டை போட்டேங்க,' என்று அவன் சொல்கிறான். அம்மாவிடம் மிகவும் பிரியம் கொண்ட பண்ணையார், மனம் நெகிழ்ந்து அவனுக்கு இரண்டு ரூபாய் சம்பளம் உயர்த்துகிறார்.

அடுத்த நாள் பார்த்தால் பண்ணையிலிருக்கும் அத்தனை ஆட்களும் மொட்டை போட்டுக்கொண்டு நிற்கிறார்கள்! 'உங்க ஆத்தாவுக்கு தலைவலின்னு சொன்னாங்க. அவங்களுக்குச் சரியாகணும்னு மொட்டை போட்டோம்,' என்கிறார்கள்!

பாக்கியராஜ் சொன்னார்: ''இந்தக் காட்சியில் நடிக்க ஐம்பது அறுபது பேராவது மொட்டை போட வேண்டியிருந்தது. துணை நடிகர்கள் மொட்டை போடச் சம்மதிக்க மாட்டார்கள் என்பதால், எங்கள் தோட்டத்தில் வேலை செய்த பத்துப் பதினைந்து பேர், தெரிந்தவர்கள், உறவுக்காரர்கள்—இப்படி அகப்பட்டவர்களையெல்லாம் அழைத்து வந்து இந்தக் காட்சிக்காக மொட்டை அடித்துக் கொள்ள வைத்தேன்.''

—வி. ஸி.

சம்பாஷணையில் குறுக்கிட்டு, மன்னனை நோக்கி, ''சொற் போர் பிறகு நடத்தலாம். இங்கு எதற்காக வந்தாய்? நேரடியாகப் பதில் சொல்,'' என்றாள், சற்றுக் கடினமான குரலில்.

அந்தக் குரலின் கடுமை வேங்கி நாட்டு மன்னனைப் பெரிதும் அடக்கி விடவே, ''இங்கு வீரர்கள் வந்து வசந்த மண்டபத்தைச் சோதனை போட்டதாகக் காவலாளி சொன்னான். உனக்கேதாவது ஆபத்து வரப்போகிறதே என்று பயந்து வந்தேன்,'' என்றான்.

''பயந்து வந்தாயா நரேந்திரா? மன்னன் பேசும் பேச்சா இது? ஆம், வீரர்கள் இங்கு வந்து சோதனைதான் போட்டார்கள். நான் தடுத்தும் கேட்கவில்லை. உன் அரசாட்சியில் வேறென்ன நடக்கும்?'' என்று சீறினாள் மன்னன் மகள்.

''நான் என்ன செய்வேன் அக்கா?''

''என்ன செய்வாயா? உன் அதிகாரத்தை உபயோகி நரேந்திரா. ராஜேந்திர சோழனின் மருமகனாக நடந்து கொள். ஜெயசிம்ம சாளுக்கியனை நாட்டை விட்டுத் துரத்து.''

''துரத்த முடியுமானால் இத்தனைநாள் சும்மாயிருப்பேனா அக்கா? அவன் நம்மைத் துரத்தாமல் இருக்கிறானே என்று சந்தோஷப்பட வேண்டாமா? இந்த அரண்மனையில் இருக்கும் வீரர்களில், மன்னன் சொற்படி நடக்கும் பேர்வழிகளைக் கைவிரல் விட்டு எண்ணிவிடலாமென்பது உனக்குத் தெரியாதா?''

இந்தப் பதிலைக் கேட்ட மன்னன் மகள் ஆயாசங்கலந்த பெருமூச்சு ஒன்றை விட்டாள். ராஜராஜ நரேந்திரன் மெல்ல அவளை அணுகி வந்து, தன் மெல்லிய கரங்களிலொன்றால் அவள் கழுத்தை வளைத்து, ''அக்கா! கலங்காதே ஜெயசிம்மனுக்கு நாம் பாடம் கற்பிக்கும் காலம் வரும்!'' என்றான் ஆறுதலாக.

''என்று வரும்?''

''யார் சொல்ல முடியும்?''

''முயற்சி இருந்தால் நீயே சொல்ல முடியும்.''

''அக்கா! உன் எண்ணம் எனக்குத் தெரியாததல்ல! ஜெயசிம்மனுக்கு எதிராகச் சதி செய்யச் சொல்லுகிறாய். அது பலிக்காது அக்கா.''

''பேடிகளுக்குப் பலிக்காது, ஆனால் நரேந்திரா, உன் அக்காள் உடலில் இன்னும் விமலாதித்தன் ரத்தம் ஓடுகிறது. அது பயத்தினால் இன்னும் உறைந்துபோக வில்லை. சிறிது காலம் பொறுத்திரு. பிறகு கவனி, ஜெயசிம்மன் கதியை!'' என்ற நிரஞ்சனா தேவி, திடீரென மஞ்சத்திலிருந்து எழுந்திருந்து, ''நரேந்திரா, நீ அரண்மனைக்குப் போ. எனக்குத்தான் துணை இருக்கிறது பார். இவர் எனக்கு மிகவும் தெரிந்தவர்,'' என்று, அவனைச் சமாதானப்படுத்தி அனுப்ப முயன்றாள்.

ராஜராஜ நரேந்திரன் மீண்டும் கரிகாலனை ஒருமுறை ஏறெடுத்துப் பார்த்து, நிரஞ்சனாதேவிக்காகக் கண்களைத் திருப்பி, ''இவர் உனக்கு வேண்டியவர் என்பதை வந்தவுடனே தெரிந்து கொண்டேன்,'' என்றான்.

''எப்படித் தெரிந்து கொண்டாய் நரேந்திரா?'' அரசகுமாரியின் வாயிலிருந்து உணர்ச்சியின்றி வார்த்தைகள் உதிர்ந்தன.

''என் உடையையே இவருக்கு அளித்துவிட்டாயே,'' என்றான் மன்னன்.

''காரணத்தை நான் சொல்கிறேன்,'' என்று ராஜராஜ நரேந்திரன் அறைக்கு வந்தபோது சொன்ன வார்த்தைகளையே, கரிகாலன் திருப்பினான் மன்னனை நோக்கி.

''காரணமா? என்ன காரணம்?'' என்று வினவினான் மன்னன்.

''இங்கு வேறு உடையில்லை!'' என்று விளக்கினான் கரிகாலன்.



''உடையில்லை என்பது உனக்கெப்படித் தெரியும்?''

''இந்த உடையைக் கொடுத்ததிலிருந்து.''

இரவில் அரசகுமாரியின் வசந்த மண்டபத்தில் காணப்பட்டதற்கே மரண தண்டனை கிடைக்கும். தவிர வீரர்களுக்குத் தப்பி ஓடி வந்திருக்கிறான். இத்தனைக்கும் போதாதென்று அரச உடையை வேறு தரித்துக் கொண்டிருக்கிறான். இத்தனை குற்றத்தையும் புரிந்துவிட்டுத் தன்னெதிரே நின்று தர்க்கம் பேசும் கரிகாலனை ஆச்சரியம் ததும்பும் விழிகளால் நோக்கிய மன்னன், அவனுடன் சம்பாஷிப்பதில் ஏற்பட்ட கவர்ச்சியால், ''இந்த நேரத்தில் புது உடை தரிக்க வேண்டிய அவசியமென்னவோ?'' என்று விசாரித்தான்.

''நீராடிய பின் பழைய உடையை அணியும் பழக்கம் சோழ நாட்டில் கிடையாது.''

''நீராட்டம் முடிந்து விட்டதோ?''

''முடிந்துவிட்டது.''

''எங்கே?''

''இங்கேதான்.''

''என்ன, இங்கேயா!'' இதைச் சொன்ன நரேந்திரன் கண்களில், ஆச்சரியத்தோடு கோபமும் கலந்து நின்றன.

''ஆம், இங்கேதான், கிருஷ்ணா நதியில்!'' என்றான் கரிகாலன், அவன் சந்தேகத்தை நீக்க.

நம்ப முடியாத விழிகளை நரேந்திரன் அவன்மீது நாட்டி, ''இதை நான் நம்புவேனென்று நினைக்கிறாயா?'' என்று வினவியதோடு, நிரஞ்சனாவையும் பார்த்து, ''அக்கா! இந்த உண்மை விளம்பியை எங்கிருந்து பிடித்தாய்?'' என்று கேட்டான்.

''அவர் சொல்வது உண்மைதான் நரேந்திரா!'' என்றாள் நிரஞ்சனா.

''ஆம் மன்னவா!'' என்றாள், அதுவரையில் ஏதும் பேசாதிருந்த பணிப்பெண்ணும்.

நரேந்திரன் மூவரையும் மாறி மாறிப் பார்த்து, ''கிருஷ்ணாவின் இந்தப் பிரவாகத்தில், அதுவும் இரவில், ஒரு மனிதன் நீராடி என் எதிரில் உயிரோடு நிற்கிறான் என்பதை நம்ப நான் முட்டாளா? இது என்ன கட்டுக் கதை!



மார்க் ட்வெயினைப் போலவே தாங்கள் இருப்பதாகப் பல பேர் மார்க் ட்வெயினுக்குக் கடிதம் எழுதி, தங்களுடைய புகைப்படமும் அனுப்பி வைப்பது வழக்கம். தொல்லை பொறுக்க மாட்டாத மார்க் ட்வெயின் நிரந்தரமாக ஒரு பதில் அச்சடித்து வைத்துக் கொண்டு அவர்களுக்கு அனுப்பி வந்தார்.

'அன்புள்ள நண்பரே,

உங்கள் கடிதமும் புகைப்படமும் கிடைத்தன. என்னைப் போலவே இருப்பதாகப் பல பேர் புகைப்படம் அனுப்பியிருக்கிறார்கள். ஆனால் நீங்கள் ஒருவர்தான் மிக அதிகமாக என்னைப் போல் இருக்கிறீர்கள். சொல்லப் போனால் என்னைப் போல் நான் இருப்பதைக் காட்டிலும் அதிகமாக நீங்கள் என்னைப்போல இருக்கிறீர்கள்.

மார்க் ட்வெயின்'

—முரளி

இந்தக் கதையை எதற்காகச் சிருஷ்டிக்கிறீர்கள்?'' என்று இரைந்தான்.

கரிகாலனே அவனுக்குப் பதில் சொன்னான்: ''பதட்டம் வேண்டாம் மன்னவா. நான் விரும்பி நீராடவில்லை.''

''விரும்பி நீராடவில்லை, யாராவது நீராட்டி வைத்தார்களா?'' என்ற மன்னன் குரலில் இகழ்ச்சி கலந்து நின்றது.

''நீராட்டி வைக்கவில்லை. நீராடத் தூண்டினார்கள்.''

''யார்?''

''ஜெயசிம்மன் வீரர்கள்.''

இந்தப் பதிலைக் கேட்ட ராஜராஜ நரேந்திரன் சிறிது நேரம் யோசித்தான். மெள்ள மெள்ள அவனுக்கு உண்மை உதயமாகவே வருத்தம் கலந்த சிரிப்பொன்றை உதிரவிட்டான். ''அப்படியா? படித்துறையில் மறைந்து கிடந்தாயா? அப்படியா! அதுவும் எவ்வளவு ஆபத்து! எத்தனை ஆபத்தானால் என்ன? ஜெயசிம்மனுக்குப் பயந்து ஓடுபவர்கள் கிருஷ்ணா நதிக்குள் குதித்துப் பிராணனை விட்டாலும் விடுவார்களேயொழிய, ஒருநாளும் அவன் கையில் சிக்கிச் சித்திரவதைக்குள்ளாக இஷ்டப்பட மாட்டார்கள். சரி, போகட்டும்,'' என்று கரிகாலனை நோக்கிச் சொல்லிவிட்டு, ''நான் வருகிறேன் அக்கா. வசந்த மண்டபத்தைச் சோதனை போட்டதாகக் கேள்விப்பட்டு, உனக்கு ஏதாவது ஆபத்து நேரிடப் போகிறதே என்றுதான் ஓடிவந்தேன். ஒரு விஷயம் அக்கா! நீ ஏதோ சதியில் ஈடுபட்டிருப்பதாக ஜெயசிம்ம சாளுக்கியன் பேசிக் கொண்டிருப்பதாகக் கேள்வி. அப்படி எதுவும் செய்து அகப்பட்டுக் கொள்ளாதே. இவனை வீரர்கள் துரத்தியதிலிருந்தும், நீ இவனை மறைத்து வைப்பதிலிருந்தும் ஒருவேளை அது உண்மையாக இருக்கும் போல் தோன்றுகிறது. அப்படி ஏதாவதிருந்தால் இவனை முதலில் துரத்திவிடு. சதியில் சம்பந்தப்பட்ட ஆட்களை உன்னோடு சேர்த்துக் கொள்ளாதே!'' என்று கூறிவிட்டுச் சென்றான் ராஜராஜ நரேந்திரன்.

அவன் சென்றதும், அறையில் சிறிது நேரம் அமைதி நிலவியது. அந்த அமைதியைக் கரிகாலனே உடைத்து, ''அம்மணி! நேரமாகிறது. இனி நான் இங்கு தாமதிப்பது பிசகு,'' என்றான்.

''உண்மை!'' என்றாள் நிரஞ்சனா.

''செய்தி ஏதாவது சொல்கிறீர்களா?''

''யாருக்கு?''

''பிரும்ம மாராயருக்கு.''

''யாரவர் தெரியுமா உங்களுக்கு?''

''பார்த்ததில்லை; அவரைப்பற்றிச் சூடாமணி விஹாரத்தில் பேச்சு நிரம்ப அடிபட்டிருக்கிறது. இங்குள்ள ராஜீய நிலைமையை இணைத்துப் பார்க்கும்போது, அவர் அந்தப் பிரும்ம மாராயராகத்தான் இருக்க வேண்டும்.''

''விளக்கிச் சொல்லுங்கள்.''

''அரசகுமாரி, சோழ நாட்டு பிரும்ம மாராயர் ஒருவர்தான். ராஜேந்திர சோழனின் மிகச் சிறந்த தண்டநாயகர்களில் ஒருவரான பிரும்ம மாராயரை அறியாதவர்கள் யார் இருக்க முடியும்? அவர் இங்கு சோழ நாட்டுத் தூதராக இருப்பதும் எனக்குத் தெரியும். ஜெயசிம்ம சாளுக்கியன் ஆதிக்கத்தை உடைக்க



ராப்பிச்சை: ''கும்பகோணம் கோமதியம்மா ராஜேந்திரன் தம்பதிகளின் ஒரே புதல்வி சாந்தியம்மா தாயே, ஏதானும் பிச்சை போடுங்கம்மா!''

கணவன்: ''உன் பரம்பரையையே ராப்பிச்சைகிட்டே சொல்லித் தொலைச்சிட்டியா?''

—எம். பி.

உங்களுக்கு உதவக் கூடிய நெஞ்சுத் திடமும், வசதியும் உடையவர் இந்நாட்டில் வேறு யார் இருக்க முடியும்?'' என்று வினவினான்.

அவன் விவேகத்தைக் கண்டு வியந்த நிரஞ்சனா தேவி, அவன், விஷயத்தை எத்தனை தூரம் ஊகித்திருக்கிறானென்பதை அறிய விரும்பி, ''வேங்கி நாட்டை நோக்கிப் பாய்ந்து வரும் இரு வேல்களுக்கிடையில் நானிருப்பதாகக் கூறினீர்களே, அவற்றில் ஒரு வேல் சோழநாடு அல்லவா? அத்துடன் நான் உறவாடுவேனா? வேங்கி நாட்டைச் சாளுக்கியர் ஆதிக்கத்திலிருந்து சோழ நாட்டு ஆதிக்கத்திற்கு மாற்றுவதில் எனக்கென்ன லாபமிருக்கிறது?'' என்று வினவினாள்.

''அரசகுமாரி! சோழ தூதரின் ஒத்துழைப்பை ஜெயசிம்ம சாளுக்கியன் பலத்தை முறிப்பதற்கு மட்டும் நீங்கள் விரும்புகிறீர்கள். இல்லாவிட்டால் ரகசியம் எதற்கு? பிரும்ம மாராயரிடம் ஒரு வார்த்தை சொன்னால், சோழப் படைகள் நாளைக்கே வேங்கி நாட்டுக்குள் புகுந்து விடுமே! சோழ நாட்டு உதவி உங்களுக்குத் தேவை; ஆனால் ஓரளவுக்குத்தான் தேவை. என்னைப் பரீட்சை பார்க்கவே, இத்தனையும் கேட்கிறீர்கள். நான் பரீட்சையில் தேறிவிட்டேனா?'' என்று வினவினான் கரிகாலன்.

''நன்றாகத் தேறிவிட்டீர்கள். ஆனால் இத்தனையும் ஊகிப்பதற்கு...'' என்று அரசகுமாரியின் வார்த்தைகளை இடையில் வெட்டிய கரிகாலன், ''ஆதாரமாயிருந்தது பிரும்ம மாராயர் பெயர், வேங்கி நாட்டு நிலை, அவற்றில் உங்கள் சம்பந்தம்—இம்மூன்றையும் இணைத்துப் பார்த்தேன். பிரும்ம மாராயரிடமிருந்து நீங்கள் ஏதோ செய்தியை எதிர்பார்த்திருக்கிறீர்கள். இத்தகைய செய்திகளை வழக்கமாகக் கொண்டு வருபவன் அரிஞ்சயன். அவனை எதிர்பார்த்து அவனுக்காகக் கோட்டைக் கதவைத் திறந்து வைத்துக் காத்திருந்தீர்கள். அவனுக்குப் பதில் நான் வந்ததாக நினைத்து, என்னைக் காப்பாற்றினீர்கள். ஒரு சிறு தவறு ராஜகுமாரி! அதனால் என் தலையே தப்பியது. அது மட்டுமா? என் வாழ்வில் ஒரு புது சகாப்தமும் துவங்குகிறது!'' என்றான்.

''என்ன சகாப்தம் அது?'' என்று வினவினாள் நிரஞ்சனா.

''வேங்கி நாட்டு மன்னன் மகளுக்கு அடிமையாகும் சகாப்தம்,'' என்றான் கரிகாலன்.

''எனக்கே தெரியாது அரசகுமாரி. உங்களுக்கு உதவ, என் உயிரைக் காப்பாற்றிய உங்கள் நலனுக்கு என் உயிரை அர்ப்பணிக்க உள்ளம் தூண்டுகிறது,'' என்றான் கரிகாலன் உணர்ச்சி பொங்க.

''உங்களை உதவும்படி நான் கட்டாயப்படுத்தவில்லை.''

''நீங்கள் கட்டாயம் செய்ய வேண்டாம். ஆனால்...''

''ஆனால்?''

''நான் தமிழன்.''

''இருந்தாலென்ன?''

''தமிழன் நன்றி மறக்காதவன். உங்களுக்குப் பதில் உதவி செய்வது என் கடமை. தயங்காமல் சொல்லுங்கள் அரசகுமாரி, பிரும்ம மாராயரிடம் நான் என்ன சொல்ல வேண்டும்?'' என்று கேட்டான் கரிகாலன்.

நிரஞ்சனா தேவி நீண்ட நேரம் அறையில் உலாவினாள். கடைசியாக ஏதோ முடிவுக்கு வந்தவள்போல, பணிப் பெண்ணை நோக்கி, ''சரி மாலினி, தந்தப் பேழையை எடுத்து வா!'' என்று உத்திரவிட்டாள். தந்தப் பேழையை பணிப்பெண் எடுத்து வந்ததும் அதைத் திறந்த அரசகுமாரி, ''இதோ பார்த்தீர்களா?'' என்று அவனிடம் பேழையை நீட்டினாள்.

அதிலிருந்த பொருளைக் கண்ட கரிகாலன் கண்கள் பிரமை தட்டின. அதுவரை திடமாகத் தரையில் ஊன்றி நின்ற கால்கள் ஆட்டங் கண்டன. தலையும் சுழலும் ஸ்திதிக்கு வந்துவிட்டது.

(தொடரும்)



அவன்: உன் காதலியை உங்கப்பா கிட்டே அழைச்சிட்டுப் போனியே, என்னாச்சு?

இவன்: என் சித்தியைப் பற்றி எதுவும் கேட்காதேடா!

—தாரை. செ. ஆசைத்தம்பி

# "என் கொழந்தைங்க இப்ப நல்லாப் படிக்கிறாங்க. இது ஷார்ப் செஞ்ச உதவி".



முன்னெல்லாம் நான் வீட்டுவேலை செஞ்சு அலுத்துப் போயிருந்தேன். தினமும் பாத்திரங்களைக் கழுவறது; வீட்டை அலம்பி சுத்தம் செய்யறது; தண்ணி நிரப்பறது; இப்படிப் பலவேலை. இவ்வளவுக்கும் தண்ணி போறாம இருந்தது. அதோட என் சொந்த வேலைகளையும் கவனிக்க வழியில்லே.

தவிர, என் கொழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுக்கவும் நேரமில்லே.

ஆனா, இதையெல்லாம் மாத்தி விட்டது ஷார்ப் 0.5 மினி மோனோபிளாக் பம்பு. இப்ப நாள் பூராவும் குழாயிலே தண்ணி கொட்டறது. வீடெல்லாம் சுத்தமா இருக்கு, கொழந்தைகளுக்கு பாடம் சொல்லித்தர நேரம் கெடைக்குது!

அது மட்டுமா? ஷார்ப் பம்பு ஓசையில்லாமே சிக்கனமா வேலை செய்யுது. எடையும் குறைச்சலா இருக்கு!

ஷார்ப்புக்கு என் நன்றி!

*ஷார்ப்—*
*மினி மோனோபிளாக்*
*பம்புகளின் முன்னோடி.*

**Sharp** மோனோபிளாக் பம்புகள்



**ஷார்ப் இன்டஸ்ட்ரீஸ்**
காளப்பட்டி,
கோயம்புத்தூர்-641 035.
தொ.பே: 872796/33854
தந்தி: SHARPTOOLS




JAISONS SI 2486

**ஷார்ப்—எப்போதும் புதுமை புகுத்துவோர்-உங்கள் நன்மைக்காக.**




# மன்னன் மகள்

சாண்டில்யன்

16 4 87

## முன் கதை:

சூடாமணி புத்த விகாரத்தி லிருந்து புறப்பட்ட கரிகாலனுக்குத் தனது பிறப்பின் ரகசியம் தெரியாது. அதை அறிய ஒரு பச்சை கல் மோதிரத்துடன் கும்ப கோண மடாலயத்திற்குப் புறப்படுகிறவன், வழியில் ஒரு சைவத் துறவியைச் சந்தித்து, அவரது நடவடிக்கைகளில் சந்தேகம் கொள் கிறான். சைவத் துறவியிடம் இருந்த 'செங் கதிர் மாலை,' அவர் துறவியல்ல ஒரு சேர ஒற்றன் என்பதை உறுதிப்படுத்துகிறது. கும்பகோண மடாலயத்தில் கரிகாலனைச் சந்தித்த புதுத் துறவி, கரிகாலன் உயிரோடு இருப்பது தெரிந்தால் சோழ சாம்ராஜ் யத்தின் அந்தஸ்து பாதிக்கப்படும் எனத் தெரிந்து, அரையன் ராஜராஜனைச் சந் திக்கும்படி கரிகாலனுக்குக் கட்டளையிடு கிறார். மறுபடி பயணம் தொடங்க, சோழ நாட்டின் வடகிழக்கு எல்லையில் கீழைச் சாளுக்கிய வீரர்களின் தலையீடு காரண மாக, சைவத் துறவியும் கரிகாலனும் பிரிய நேரிடுகிறது. அவனது உயிரைத் தக்க வைத்துக் கொள்ளும் படலத்தில், கரிகால னுக்கு மன்னன் விமலாதித்தனின் மகள் நிரஞ்சனா தேவி உதவுகிறாள். நிரஞ்சனா தேவி ஒரு பயங்கர அரசியல் சதியில் சிக்கி யிருப்பதை அவளுக்கு உணர்த்துகிறான் கரி காலன். மன்னன் மகளின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி விட்டதால், கரிகாலனிடம் ஒரு ரகசியமான தந்தப் பேழையை காட்டத் துணிகிறாள் அவள்.




## 11. சிந்தனைச் சுழல்

செந்தாமரையின் இதழ்களையும் வெட்கச் செய்யும் அழகையும் மென்மையும் படைத்த நிரஞ்சனாவின் செவ்விய விரல்கள் தந்தப் பேழையைத் திறந்து காட்டியதும், அதனுள்ளிருந்த பொருளைக் கண்டு சொல்லவொண்ணா பிரமையையும் கலக்கத்தையும் ஒருங்கே அடைந்த கரிகாலன், பேழையின் உட்புறத்தையே நீண்ட நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்தான், சற்றும் எதிர்பாராத விதமாகத் திடீரெனத் தன் கண் முன்னால் திணிக்கப்பட்ட அந்தப் பொருளைக் கண்ட அவன் உள்ளத்திலே எழுந்த உணர்ச்சி அலைகள் சூறாவளியால் உந்தப்பட்ட கடலலைகளைப் போல பேரிரைச்சலுடன் எழுந்து அவன் புத்தியில் திரும்பத் திரும்பத் தாக்கியதன் காரணமாக, எதற்கும் சலனமடையாத அவன் சித்தமும் சலனப்பட்டு, கண்களைச் சுழலும் ஸ்திதிக்குக் கொண்டு வந்ததால், தன்னைச் சரிப்படுத்திக் கொள்ளக் கட்டிலின் காலை இறுகப் பிடித்துக் கொண்டான் கரிகாலன். எதிரே நின்ற அந்த ஏந்திழை ஏந்திநின்ற தந்தப் பேழைக் குள்ளிருந்த அரும்பொருள், அவன் சிந்தனையைச் சில விநாடிகள் வஸந்த மண்டபத்தின் அந்த அறைச் சூழ்நிலையிலிருந்து சூடாமணி விஹாரத்துக்கு அழைத்துச் சென்று விட்டதால், கரிகாலன்

எதிரே நின்ற எழிலுருவத்தை மறந்தான். வஸந்த மண்டபத்தை மறந்தான்; சற்று முன்பு அவனே அலசிக் கொட்டின சோழ சாளுக்கிய அரசியல் சிக்கல்களை மறந்தான்; சில நாழிகைகளுக்கு முன்பாகத் தன்னைப் பனிக்கும் கேவலமாக உறைய வைத்த கிருஷ்ணா நதி நீரின் குளிர்ச்சியையும் வேகத்தையும் கூட மறந்தான். அதுவரை அவன் சிந்தனைச் சுழலில் வட்டமிட்ட ராஜேந்திர சோழ தேவன், ராஜராஜ நரேந்திரன், ஜெயசிம்ம சாளுக்கியன், பிரும்மமாராயன் அத்தனை பேர் உருவங்களும் மறைந்தன. அந்த விநாடியிலே, அவன் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து நின்றது தந்தப் பேழைக்குள்ளிருந்த ஒரே பொருள். அந்தப் பொருளைக் காட்டத் தந்தப் பேழையின் மூடி திறந்ததை எண்ணிப் பார்த்த கரிகாலன், ''திறந்தது தந்தப் பேழையின் மூடியா அல்லது தனது வாழ்க்கை மர்மத்தின் ரகசியக் கதவா?'' என்று வியந்து நின்றான்.

அவன் மனக் கண்ணில் புதிய சூழ்நிலை மறைந்து பழைய சூழ்நிலை நிலவத் தொடங்கியது. வேங்கி நாட்டு எல்லையைத் துறந்த எண்ணம் தெற்கு நோக்கிப் பறந்தோடியது. மீண்டும் நாகப்பட்டினத்தின் அழகிய கடற்கரையும், அதை அடுத்து மிகக் கம்பீரமாக நின்ற சூடாமணி விஹாரமும் அவன் அகக்கண்ணில் எழுந்து நின்றன. அதோ, புத்த பிக்ஷுக்களின் உதயகால கோஷம். அதோ விஹாரத்தின் நந்தவன மரங்களிலுள்ள பக்ஷி ஜாலங்களின் கிலகிலா சப்தம்! அதோ, விஹாரத்தின் ஸ்தூபியின் பொந்துகளிலிருந்து தலை நீட்டும் புறாக்களின் 'ஹூம் ஹூம்.... ஹூம்' என்ற இன்ப நாதம்! அதோ கேட்கிறதே 'புத்தம் சரணம் கச்சாமி' என்ற பிட்சுக்களின் சரணாகதிக் குரல்! அதோ புத்த பகவான் கருணைக் கண்கள் அமைதி ஒளியை வீசுகின்றன. அவற்றின் ஒளியை நிகர்த்த குத்து விளக்குகளின் சுடர்களோ அதோ அந்த மஹானின் திருவுருவத்தின் பக்கத்தில். அவர் பாதங்களிலே தூவப்பட்ட மலர்கள் என்ன அழகாகச் சிரிக்கின்றன!

புனிதமான அந்தச் சூழ்நிலை சிந்தனையில் உலவ உலவ, கரிகாலன் உள்ளத்தைக் கலக்கி நின்ற பிரமை விலகியது. புத்த பகவானின் அருள் விழிகளின் வீச்சினால் கலக்கமும் கதறியோடி விட்டதால், உடலிலே உணர்ச்சி அலைகள் சாந்தமாகப் பாய்ந்து சென்றன. அவன் மனக்கண் எதிரே நின்ற அந்த மஹான் தலைமைப் பிக்ஷு—அவன் வளர்ப்புத் தந்தையாரின் திருவுருவம்—அவன் சாந்தியை அதிகப்படுத்தியது. துறவிகள் புடைசூழ அவர் நிற்கும் காட்சி அவன் நெஞ்சத்திலே இணையற்ற உறுதியையும் விளைவித்தது. இத்தனை உறுதியிலும் சாந்தியிலும் அவன் புறப்பட்ட தினத்தன்று ஏற்பட்ட நிகழ்ச்சிகளும் அவன் உள்ளத்தில் பவனி வந்தன. அதோ, அப்படித் தலையை அசைத்துத்தான் தலைமைப் பிக்ஷு என்னை அழைத்துச் சென்றார். கூட இருந்த துறவிகளைப் பிரிந்து, நான் எத்தனை அமைதியுடன் அவரைப் பின்தொடர்ந்தேன்! அதோ, தந்தையாரின் தனி அறை. எத்தனை புனிதமான அறை! அதோ, இழுக்கிறாரே வெளியே மரப் பெட்டி, அது எத்தனை எத்தனை சாதாரணம்! ஒரு வேலைப்பாடுமில்லை. ஆனால் எத்தனை எத்தனை ராஜ ரகசியங்கள் அதில் புதைந்து கிடக்கின்றன! தந்தையார் பெட்டியைத் திறக்கிறார்! என்ன, பச்சைக்கல் மோதிரமா! எத்தனை பெரிய பச்சைக்கல்! பச்சைக் கல்லின் விலையே மதிக்க முடியாது போலிருக்கிறதே! அது யார் மோதிரமாயிருக்கும்! அதோ தந்தை யார் அப்படித்தான் கொடுத்தார் மோதிரத்தை! அதோ அந்த மோதிரத்தின் உட்புறத்தில் வெட்டப்பட்ட எழுத்துக்கள்!

இப்படிப் பழைய காட்சிகளெல்லாம் மிக வேகத்தில் புத்தியைச் சுழற்றியதால், அதிலே லயித்த கரிகாலன் மனம்கூடப் பழையபடி அவன் பெயரை, 'கரிகாலன், கரிகாலன்' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் காட்டியது. சூடாமணி விஹாரத்தில் அந்தப் பெயரை முதன் முதலாக உதிர்த்த அவன் உதடுகள், வசந்த மண்டபத்தின் அந்த அறையில் மீண்டும், 'கரிகாலன் கரிகாலன்' என்று முணுமுணுத்ததால், கனவுலகத்திலிருந்து விலகி நனவுலகத்துக்கு வந்த கரிகாலன் சிந்தனை, 'ஆம்! கரிகாலன்தான்! ஆனால் அந்தக் கரிகாலன் யார்? அவன் யார் மகன்?' என்று கேட்டது. அந்தக் கேள்விக்குப் பதிலைப் பேழையிலுள்ள அந்தப் பொருள் சொல்லுமா? இந்தக் கேள்வி தொனிக்க மீண்டும் மீண்டும் பேழையிலிருந்த பொருளை நோக்கினான். பேழையிலிருந்த பச்சைக் கல் மோதிரம் அவன் உள்ளத்தின் வேதனையை உணர்ந்து கொண்டது போல், அறையின் விளக்கு

# தலைப்பாகை இல்லாத பாரதியார் எப்படி இருப்பார்?

''தலைப்பாகை இல்லாமல் பாரதியார் எப்படியிருப்பார்?'' என்று நான் கேட்டபோது, ''தலை வழுக்கையுடன், முண்டாசு இல்லாத பாரதி மிகவும் அழகாயிருப்பார். பாரதி முண்டாசு அணிந்ததே தலை வழுக்கையை மறைக்கத்தான்,'' என்றார் பாவேந்தர் பாரதிதாசன். அத்தகைய தோற்றத்தில் பாரதியின் உருவச்சிலை ஒன்றை அமைத்துவிட வேண்டும் என்று எங்களுக்கு ஓர் ஆசை பிறந்தது.

ரூ. 500 திரட்டி சிற்பி கிருஷ்ண மூர்த்திக்கு முன்பணம் கொடுத்தோம். சிலை வடிக்கும் பணி துவங்கியது. பாவேந்தர் காலையும் மாலையும் கிருஷ்ணமூர்த்தி வீட்டுக்குப் போவார். சிலையின் முன்னேற்றத்தை மிகவும் அக்கறையோடு கவனிப்பார். ஏதாவது மாறுதல் வேண்டுமென்றால் கூறுவார்.

பாரதியின் வழுக்கைத் தலைக்கு ஒரு 'மாதிரி' (*Model*) தேவைப்பட்டது. பாவேந்தரின் நண்பர் குயில் சிவாவின் அண்ணன் திரு. சிவக்கொழுந்து நாயக்க ரின் தலை ஏறக்குறைய பாரதியார் தலை மாதிரிதான் இருக்கும் என்று கூறினார் கவிஞர். அங்கே சென்றோம்.

பாவேந்தர், ''அண்ணே! இந்தத் தம்பி (கிருஷ்ணமூர்த்தியைக் காட்டி) 'திருப்புளிசாமி வாத்தியார் இருந்தாரே, அவர் மகன். சிலை செய்வதில் மிகக் கெட்டிக்காரன். பாரதியார் சிலையைச் செய்துகிட்டிருக்கான். சத்த கொஞ்சம் திரும்பேன். தலையை மட்டும் காட்டேன். வேறெதையும் காட்டாதே! (நகைத்தல்) உன் தலை பாரதியார் தலையாட்டம் இருக்குதாம்,'' என்றார். நாயக்கர் சிரித்துக் கொண்டே திரும்பி உட்கார்ந் தார். கிருஷ்ணமூர்த்தி சில நிமிடங்களில் அவரது தலையின் வழுக்கைப் பகுதியை மிக அழகாகப் படம் பிடித்ததுபோல் எழுதி விட்டான்.

சிலைப் பணி நடந்து கொண்டிருந்தபோது எனக்கு மூன்றாண்டு கள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. 18 மாதங்கள் சிறையில் கழித்துவிட்டு நான் வெளியே வந்தபோது, அந்தச் சிலையைச் சக்தி கோவிந்தனுக்கு விற்றுவிட்டதாகக் கூறினார்கள்.

அண்மையில் விசாரித்ததில், சிலை சக்தி கோவிந்தன் அவர்கள் வீட்டில் இல்லை என்று தெரிந்தது. காரைக்குடியில் யார் வீட்டிலோ பாரதியார் என்று தெரியாமல் ஓர் அலங்காரப் பொருளாக அது இருக்கும் என்று நினைக்கிறேன்.

—'புதுவைக் கல்லறையில்' என்ற தொகுப்பில் எஸ்.ஆர். சுப்பிரமணியம்.

---

வெளிச்சத்தில், தனது பச்சை ஒளியை நன்றாக வீசி அவனை விழித்துப் பார்த் தது.

பேழையிலிருந்த பச்சைக்கல் மோதிரத்தைக் கண்டவுடன் கரிகாலன் ஒரு வினாடி அது தனக்குத் தலைமைப் பிக்ஷு அளித்த மோதிரமாயிருக்குமா என்று நினைத்ததால் பிரமித்துப் போனான். பிரமை நீங்கி அறிவு தெளி வடையவே, தன் கச்சையைத் தடவிப் பார்த்து, அது தன் மோதிரமல்ல என்பதை நிச்சயம் செய்து கொண்டதால், ஓரளவு சாந்தியை அடைந்து, 'அப்படியானால் இந்த மோதிரம் வேங்கிநாட்டு மன்னன் மகளிடம் எங்கிருந்து வந்தது? யார் கொடுத்தார்கள்?' என்று யோசிக்க லானான். தனக்குத் தலைமைப் பிக்ஷு கொடுத்த மோதிரத்துக்கும் பேழையி லிருந்த அந்த மோதிரத்துக்கும் எள்ளளவு வித்தியாசமும் இல்லாதிருந்ததைக் கவனித்த கரிகாலன், 'இரண்டையும் செய்தவன் ஒரே பொற்கொல்லனாகத் தான் இருக்க முடியும்,' என்று தீர்மானித் தான். 'ஒரே அளவுள்ள இரண்டு மரகதக் கற்கள்! இவை இரண்டிலும் புதைந்து கிடப்பதும் ஒரேவித ரகசியமா யிருக்குமோ?' என்று யோசித்த கரிகாலன், பேழையிலிருந்த மோதிரத்தைக் கையிலெடுத்துக் கொண்டு, நிரஞ்சனா விடம் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் நேராக விளக்கிடம் சென்று, மோதிரத் தின் உட்புறத்தை அதன் ஒளியில் பரிசோதித்தான். கும்பகோணம் மடாலயத்தில் தஞ்சைத் துறவியார் தனது மோதிரத்தை விளக்கின் எண்ணெய் கொண்டு காவியால் துடைத்தபோது புலப் பட்ட அந்தச் சிறிய மகுடத்தின் அடை யாளம், பேழையிலிருந்த மோதிரத்திலும் இருந்தது.

ஆனால், கரிகாலன் என்ற

பெயர் மட்டும் வெட்டப்படவில்லை. இரண்டு மோதிரங்களும் ஏதோ ஒரு ராஜ குடும்பத்தின் மோதிரங்கள் என்பதை மகுடத்தின் அடையாளத்திலிருந்து புரிந்து கொண்ட கரிகாலன், ஏதோ காரணத்தை முன்னிட்டே தன் பெயர் மட்டும் ஒரு மோதிரத்தில் வெட்டப்பட்டிருக்கிறது என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்டாலும், தன் பெயரை வெட்ட வேண்டிய அவசியமென்ன என்பதையோ, அது தன் உண்மைப் பெயர்தானா அல்லது தற்காலிகமாக அந்தப் பெயரைத் தனக்கு அளித்துத் தன் பிறப்பு வரலாற்றை மறைத்து வைக்கத் தலைமைப் பிக்ஷு கையாண்ட தந்திரமா என்பதையே தீர்மானிக்க முடியாததால், தந்தத் பேழையின் மோதிரத்தைப் பற்றி மேலும் தகவலறியவும், முடிந்தால் அந்தத் தகவலி லிருந்து தன் பிறப்பு வரலாற்றைப் பற்றி ஆராயவும் எண்ணினான். ஆகவே, விளக்கு வெளிச்சத்தில் பரிசோதனையை முடித்துக் கொண்ட கரிகாலன், மன்னன் மகளை நோக்கித் திரும்பி, ''அரசகுமாரி! இந்த மோதிரம் யாருடையது?'' என்று வினவினான்.

மன்னன் மகள் உடனே பதிலேதும் சொல்லவில்லை. மோதிரத்தைக் கண்டதும் கரிகாலன் பிரமித்த பிரமிப்பையும் அவன் கண்கள் திடீரெனக் கனவுலகில் சஞ்சரித்த விந்தையையும், தன்னைச் சமாளித்துக் கொள்ள அவன் கட்டிற் காலைப் பிடித்துக் கொண்டதையும், பிறகு வெறிபிடித்தவன் போல் மோதிரத்தை எடுத்துக்கொண்டு விளக்கினிடம் ஓடி ஆராய்ந்ததையும் கண்ட நிரஞ்சனாதேவி, அவன் போக்குக்கு எவ்விதக் காரணமும் கற்பிக்க முடியாதவளாய் நின்றாள். அத்துடன் அவள் மனத்தில் மீண்டும் அவனைப் பற்றிச் சந்தேகமும் எழத் தொடங்கியது. 'இவன் அரசியல் விவகாரங்களை நன்றாக அறிந்திருக்கிறான். நாகப்பட்டினத்துச் சூடாமணி விஹாரத்தில் இருந்திருப்பதாகச் சொல்கிறான். இந்த மோதிரத்தைப் பார்த்துப் பிரமிக்கிறான். ஒருவேளை சோழநாட்டு ஒற்றனாயிருப்பானோ?' என்ற சந்தேகங்கள் அவள் மனத்தில் எழுந்து ஊசலாடவே, கரிகாலனை நோக்கிக் கேட்டாள், ''மோதிரம் யாருடையதாயிருந்தால் உங்களுக்கென்ன?'' என்று.

அவள் விழிகளிலும் குரலிலும் உதயமான சந்தேகத்தைக் கரிகாலனும் கவனிக்கத் தவறவில்லை. சந்தேகத்துக்குக் காரணம் இருக்கிறது என்பதையும், கூர்மையான அவன் புத்தியையும் உணரத் தவறவில்லை. ஆகவே, அவள் மனத்திலோடிய எண்ணங்களை ஓரளவு புரிந்து கொண்டே சொன்னான்: ''அரசகுமாரி! நான் சோழ நாட்டவன்; ஆனால் ஒற்றனல்ல. இந்த மோதிரம் யாருடையதாயிருந்தால் எனக்கென்ன என்று கேட்கிறீர்கள். எனக்கும் இந்த மோதிரத்துக்கும் நெருங்கிய சம்பந்தமிருக்கிறது.''



விடை: 88'ம் பக்கம்

''என்ன சம்பந்தம்?'' என்று கேட்டாள் மன்னன் மகள்.

''உங்களுக்குத் தெரிய வேண்டுமா அரசகுமாரி?'' என்று கேட்டான் கரிகாலன், அவளைச் சற்று ஏறெடுத்து நோக்கி.

''ஆம், தெரிய வேண்டும்.''

''நான் சொன்னால் போதுமா? அத்தாட்சியும் வேண்டுமா?''

''அத்தாட்சியா?''

''ஆம், அரசகுமாரி!''

''எங்கே இருக்கிறது அந்த அத்தாட்சி?'' என்று கேட்ட மன்னன் மகள் கரிகாலனைச் சற்று அலட்சியத்துட னேயே நோக்கினாள்.

அடுத்த வினாடி, அலட்சியம் நிரம்பிய கண்களில் ஆச்சரியம் நிரம்பிக் கிடந்தது. அவள் கண் முன்பாக இரண்டு பச்சைக்கல் மோதிரங்கள் ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. கரிகாலன் கச்சையிலிருந்து எடுத்து நீட்டிய இரண்டாவது பச்சைக் கல் மோதிரம், தன் பச்சை ஒளியை அவள் கன்னத்தில் லேசாக விழ வைத்ததால், ஒரு வாலிபனது மோதிரத்தின் ஒளி நம்மீது விழுகின்றதே என்பதாலோ என்னவோ, கன்னம் சிறிதே வெட்கத்தால் சிவந்தது. அந்த வெட்கச் சிவப்பை வெளியில் காட்டாமல், பச்சை ஒளி அவள் கன்னத்திலே திரையிட்டு நின்றது.

இரண்டு மோதிரங்களையும் தன் கையில் வாங்கித் திரும்பத் திரும்பப் பார்த்த மன்னன் மகள் பெரிதும் வியப்படைந்ததால், ''ஒரே அச்சு! என்ன ஒற்றுமை!'' என்று சற்று இரைந்தே சொன்னாள்.

''ஆம் அரசகுமாரி! ஒரே அச்சு. ஒரே பொற்கொல்லன்தான் இவை இரண்டையும் செய்திருக்கிறான். அதுவும் அவன்.....''

''சொல்லுங்கள்..... அவன்?''

''சோழ நாட்டுப் பொற்கொல் லன்.''

''எப்படித் தெரியும் உங்க ளுக்கு?''

''நான் சோழ நாட்டைச் சேர்ந்தவன் என்று என் வளர்ப்புத் தந்தை சொன்னார். ஒரு மோதிரத்தில் என் பெயர் வெட்டப்பட்டிருக்கிறது. ஆகையால் அதைச் சோழநாட்டுப் பொற்கொல்லன் தான் செய்திருக்க வேண்டும். இன்னொரு மோதிரம் அதன் இரட்டைப் பிறப்பு; ஆகவே, அதையும் வேறு யாரும் செய் திருக்க முடியாது.''

மோதிரங்களை மீண்டும் திருப்பிப் பார்த்த நிரஞ்சனாதேவி, ''உண்மைதான்,'' என்றாள்.

சம்பவங்கள் சிருஷ்டித்த உணர்ச்சிகளின் வேகத்தாலும், மோதிரத் தின் தகவலை அறிய ஏற்பட்ட ஆசையா லும், எதிரே நின்று மோதிரங்களைக் கூர்ந்து ஆராய்ந்து கொண்டிருந்தவள் வேங்கி நாட்டு மன்னன் மகள் என்பதை அறவே மறந்த கரிகாலன், அவளுக்கு

---

## பாராட்டு இல்லை!

மதுரை வானொலி நிலையத்துக்கான ஒலிக்கூடங்களைச் சிறந்த முறையில் அமைத்ததற்காகப் பாராட்டும் கேடயமும் பெற்றார் இஞ்சினியரிங் உதவி இயக்குனர் சு. சங்கரன். கேடயம் வழங்கிய மத்திய அமைச்சர் அஜித் பாஞ்சா இரண்டு வார்த்தை சொல்லித் தன்னைப் பாராட்டுவார் என்று எதிர்பார்த்த சங்கரனுக்கு ஏமாற்றம். முதுகில் தட்டிக் கொடுத்து, சைகையினால் பாராட்டினார் அமைச்சர். காரணம்? கல்கத்தா தேர்தல் கூட்டங்களில் பேசிவிட்டுத் திரும்பியிருந்ததால் தொண்டை கட்டிப் பேச முடியவில்லை! _

என்.பி.



வெகு அருகில் வந்து, ''அரசகுமாரி! உங்கள் மோதிரத்தின் தகவலை அறிந்து கொள்ள எனக்கு ஏன் ஆசை எழுகிறது என்று இப்பொழுது புரிகிறதல்லவா?'' என்று வினவினான்.

தன் முகத்துக்கு வெகு அருகிலிருந்த அந்தக் கண்களை நிரஞ்சனாவின் நெடுங் கண்கள் நோக்கின. நான்கு விழிகள் கலந்தன. இரண்டில் ஏக்கம்! இரண்டில் பரிதாபம்! பிறப்பின் வரலாற்றை அறியத் துடிக்கும் ஏக்கக் கண்களும், ஏக்கத்தைக் கவனித்தாலும் ஏக்கத்துக்கு முழுக் காரணத்தையும் அறியாத பரிதாபக் கண்களும் நீண்ட நேரம் பின்னிக் கொண்டு நின்றன. கடைசியாகப் பரிதாபம் காட்டிய கண்கள் வெட்கத்தால் தாழ்ந்தன. ''முழுதும் புரியவில்லை,'' என்ற சொற்கள், நிரஞ்சனாவின் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

கரிகாலன் அவளிடமிருந்து விலகி நின்று, ''அரசகுமாரி! என் வாழ்க்கை விவரம் முழுதும் புரிந்தால், மோதிரத்தின் வரலாற்றை அறிய எனக்குள்ள உள்ளத் துடிப்பும் உங்களுக்குப் புரியும்,'' என்று தன் சரிதையைச் சொல்லத் தொடங்கினான்.

சூடாமணி விஹாரத்தில் வளர்ந்ததிலிருந்து, புறப்பட்ட நாள் முதல் அன்று வரை நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் திரும்ப எண்ணிப் பார்ப்பவன் போலவே, அறையில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டும், நடுநடுவே நின்றும், உணர்ச்சி ததும்பும் சொற்களால் தன் கதையை விவரித்தான். குருவிடம் பாடம் சொல்லும் மாணவன்போல மிகத் தெளிவான வார்த்தைகளில் தன் சோகத்தையே மன்னன் மகளிடம் ஒப்புவித்தான் கரிகாலன். அந்தச் சோகக் கதையைக் கேட்ட மன்னன் மகளின் கண்களில் இணையற்ற சோகம் துளிர்த்து நின்றது.

''இப்போது புரிகிறது,'' என்று கடைசியாக அவள் சொன்ன வார்த்தைகள் கூடச் சற்றுத் தழுதழுத்தே வெளி வந்தன.

அவளுடைய உணர்ச்சிகள் தன்பால் இளகியதால் வருத்தத்துடன் வெளிவந்த வார்த்தைகளைக் கவனித்த கரிகாலன், மீண்டும் கேட்டான், ''அரசகுமாரி! இந்த மோதிரம் ஏது தங்களுக்கு?'' என்று.

கணவன்: ஏண்டி... மெட்ராஸ்லே தெருக் கதவைத் திறந்து வைக்காதேன்னு எத்தனை தடவை சொல்றது? இப்ப பாரு, ஒரு ஆட்டோ தெரு வாசல் வழியா வந்து கொல்லைப்புற வாசல் வழியா போகுது.

—ப. கோபுராஜ்

●● ●●

மனைவி: நீங்க ஆபீசுக்குப் போன பிறகு எனக்கு போரடிக்குது, படிக்க ஒரு வாரப் பத்திரிகை போடச் சொல்லுங்கன்னு சொன்னேன். பத்திரிகை வாங்கினால் பணம் வேஸ்ட் ஆகும்னு ஒவ்வொரு வாரமும் நீங்க ஒவ்வொரு கதை எழுதிக் கொடுத்து என்னைப் படிக்கச் சொல்றது ரொம்ப மோசம்.

—ப. கோ.

●● ●●

சாப்பிடுபவர்: என்னப்பா சர்வர், பில்லில் ஐம்பது காசு அதிகமாயிருக்கே?

சர்வர்: உப்புமாவில் கிடந்த

''என் சிற்றன்னை கொடுத்தாள்.''

''எந்தச் சிற்றன்னை?''

''நரேந்திரனின் அன்னை!''

''யார்? குந்தவைப் பிராட்டியாரா?''

''ஆம்!''

''அப்படியானால் இது......!''

''சோழப் பேரரசர் ராஜராஜ தேவர், குந்தவைப் பிராட்டியாருக்குச் சீதனமாகக் கொடுத்த நகைக் குவியலில் இது ஒன்று.''

''அதை ராஜராஜ தேவரே செய்திருப்பாரா?''

''யார் செய்தார்கள் என்ற விவரம் தெரியாது. அவர் செய்திருக்கலாம் அல்லது அரச குடும்பத்தின் பொக்கிஷத்தில் கலந்து கிடந்ததாயிருக்கலாம்.''

''குந்தவைப் பிராட்டியாரிடம், இதற்கு விளக்கம் கிடைக்குமா?''

''கிடைக்கலாம்.''

''அவர் எங்கே இப்பொழுது?''

''சோழ நாட்டில் இருக்கிறார்கள்.''




கரப்பான் பூச்சியை வெளியே எடுத்துப் போட்டதற்கான சார்ஜ்!

—எஸ். மீனலோசனி

●● ●●

''குழந்தைகள் செய்கிற தவறுக்குப் பெரியவங்க சண்டை போட்டுக்கிறதைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?''

''சுத்த மடத்தனம்! அதுக்கென்ன இப்போ?''

''வேறொண்ணுமில்லை. என்னுடைய 21 வயசுக் குழந்தை உங்க 18 வயசுக் குழந்தையைக் கூட்டிட்டு ஓடிடுச்சு. அவ்வளவுதான்!''

—எஸ்.மீனா.

●● ●●

நிருபர்: குளியலறைக் காட்சிகளில் தாராளமாக நடிப்பேன் என்று கூறுகிறீர்களாமே?

நடிகை: பின்ன என்ன சார் பண்றது! எங்க வீட்டுக் குழாயிலே தண்ணியே வர்ற தில்லையே!

—ஏ. சிவகாமி.

இந்தப் பதில் கரிகாலனைத் திகைக்க வைத்தது. தன் பிறப்பின் வரலாற்றை உணர்த்தக்கூடிய ஒரே ஒருவர், சோழப் பேரரசின் மாளிகையில், அதுவும் கங்கைகொண்ட சோழபுரத்திலோ, காஞ்சியிலோ இருக்கலாம். அங்கு சென்று விவரம் அறிவதும் அத்தனை எளிதல்ல. ஊர் பேர் தெரியாத தன்னை யாரும் அரண்மனைக்குள் அனுமதிக்க மாட்டார்கள் என்பதைக் கரிகாலன் நன்றாக உணர்ந்தான். குந்தவைப் பிராட்டியை நெருங்கி மோதிரத்தைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்றால், வேங்கிநாட்டு மன்னன் மகள் மூலமாகத்தான் அது நடக்க முடியும். நிரஞ்சனாதேவி வேங்கி நாட்டிலிருக்கிறாள்; குந்தவைப் பிராட்டியோ சோழ நாட்டில் இருக்கிறார். இடையே தொலைதூரம்! சாதாரண மக்களா, இஷ்டப்படி இருவரும் பயணம் செய்ய? ராஜ குடும்பப் பெண்மணிகள்! அவர்கள் பெயர்களுடன் சரித்திரம் பிணைந்து கிடக்கிறது!

இத்தகைய நிலையில் தன் பிறப்பு வரலாற்றை அறிவது மிகவும் துர்லபமென்பதை அறிந்து கொண்ட கரிகாலன், தன் ஆசையை அடக்கிக் கொண்டு, முதலில் மன்னன் மகளுக்குத் தேவையான உதவியைச் செய்ய நிச்சயித்து, அவளை நோக்கி, ''அரசகுமாரி! இப்பொழுது நான் என்ன செய்யவேண்டும், சொல்லுங்கள்?'' என்று கேட்டான்.

மன்னன் மகள் நீண்ட நேரம் யோசித்துவிட்டு, ''உங்கள் வாழ்க்கையில் மர்மம் நிரம்பிக் கிடக்கின்றது. அதன் சிக்கலை அவிழ்க்க நீங்கள் முனைந்து நிற்கும்போது, வேறு சிக்கல்களைச் சிருஷ்டிக்க எனக்கு இஷ்டமில்லை,'' என்று சொன்னாள்.

''அரசகுமாரி! என் வாழ்க்கை பிறந்தது முதலே சிக்கலுடன் பிறந்தது. உங்கள் வாழ்க்கையில் சிக்கல் இப்பொழுதுதான் பிறந்திருக்கிறது. சிடுக்குடைய இரு நூற் பந்துகளுக்கு மிடையே பச்சைக்கல் மோதிரமென்ற ஓர் இழையும் கலந்திருக்கிறது பாருங்கள், இந்தக் கலப்பும் விதியின் ஒரு பிணைப்பாயிருக்கலாம். யார் கண்டார்கள்? இந்தக் கலப்பே என் வாழ்க்கை மண்ணை உடைக்கும் கலப்பையாக மாறலாம். ஆகவே சொல்லுங்கள், என் உடல், பொருள், ஆவி மூன்றையும் உங்கள் சேவைக்கு அர்ப்பணிக்கிறேன். பிரும்ம மாராயரிடம் சென்று நான் என்ன சொல்ல

வேண்டும்?'' என்று கேட்டான் சரிகாலன்.

மீண்டும் அரசியல் சதிப்பேச்சு துவங்கியதால், மன்னன் மகளின் கண்களில் உறுதி உதயமாயிற்று. அவள் தோரணை பழையபடி அரச தோரணையாக மாறியது. ''இதோ, உங்கள் மோதிரம். இதை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். இந்த என் மோதிரத்தைப் பிரும்ம மாராயரிடம் காட்டுங்கள். அவர் உங்களுடன் மனம் விட்டுப் பேசுவார். ஏற்பாடு எத்தனை தூரத்திலிருக்கிறது? அரிஞ்சயன் என்ன செய்கிறான்? ஏன் பல நாட்களாக அவனைக் காணவில்லை என்பதை விசாரித்துக் கொண்டு வாருங்கள்,'' என்றாள் நிரஞ்சனாதேவி.

''எப்பொழுது வருவது?'' என்று வினவினான் சரிகாலன்.

''நாளை நள்ளிரவு. இன்று வந்தீர்களே, அதே வழியாக.''

''கோட்டைக் கதவு?''

''திறந்திருக்கும்.''

''தினசரி வசந்த மண்டபத்தில் தனித்துப் படுத்தால் சந்தேகம் வராதா?''

''வராது; வெப்பத்துக்காக அரச மகளிர் கோடை காலத்தில் படுப்பதற்காகவே கட்டப்பட்ட வசந்த மண்டபம் இது.''

''காவலாளிகள் இல்லாமலா?''

''ஆம்! கோட்டைச் சுவரும் அதன் மீது உலாவும் காவலாளிகளும் இருக்கும்போது, வசந்த மண்டபத்திற்குக் காவலாளிகள் அனாவசியமென்று கூறிவிட்டேன்.''

ஒவ்வொன்றையும் ஆராய்ந்து, முன்னேற்பாடாக அலுவல்களைப் புரியும்

ஏதாவது ஒரு நம்பரை நினைத்துக்
கொள்ளுங்கள். அதை
இரண்டால் பெருக்குங்கள்.
பத்தைக் கூட்டுங்கள்.
இரண்டால் வகுங்கள்.
வரும் விடையில் நீங்கள்
நினைத்த நம்பரைக்
கழித்து விடுங்கள்.

விடை 5_சரியா?



இதற்குப் பெயர்
புதிரல்ல. மோசடி!




ஒரு பத்தாம் வகுப்பு விடைத்தாள் திருத்த ரூ. 1/—
ப்ளஸ் 2 பேப்பர் விடைத்தாள் திருத்த ரூ. 1.25.
பி.ஏ., பி.எஸ்ஸி., விடைத்தாள் திருத்த ரூ. 2/—.
எம்.ஏ., எம்.எஸ்ஸி., விடைத்தாள் திருத்த ரூ. 3.50.
எம்.ஃபில். விடைத்தாள் திருத்த ரூ. 4/—.

—பா. கோ.

அந்த அரச மகளைக் கண்ட கரிகாலன், அவள் ஆளப் பிறந்தவள் என்பதில் சந்தேகமில்லை என்பதைத் தீர்மானித்த வண்ணம் அவளிடம் விடையும் பெற்றுக் கொண்டான். புறப்பட்டவுடன், அவள் சொன்னாள், ''கோட்டைக் கதவு திறந்ததும் தலையைக் குனிந்து கொண்டு செல்லுங்கள். மன்னன் உடையைப் பார்த்து, அவர்தான் செல்லுகிறாரென்று காவலாளிகள் விட்டுவிடுவார்கள். பிரும்ம மாராயர் மாளிகை நகரின் தெற்குப் புறத்திலிருக்கிறது. யாரைக் கேட்டாலும் சொல்லுவார்கள்.''

ஏதேதோ யோசனைகள் உள்ளத்தில் விளையாடியதால் பதிலேதும் சொல்லாமல், 'சரி' என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்துவிட்டு, அரசகுமாரியின் கட்டளைப்படியே கோட்டையின் பின்புறக் கதவு வழியாக வெளியே வந்து, துரிதமாக நகரத்தின் பல தெருக்களையும் தாண்டி, பொழுது விடிந்த சில நாழிகைக்கெல்லாம் சோழப் படைத் தலைவரான பிரும்ம மாராயர் மாளிகைக்கு வந்து சேர்ந்தான் கரிகாலன். சோழ தூதரின் மாளிகை பெரிய மதிற் சுவர்களுடன் பெரிய கோட்டை மாதிரியே இருந்ததையும், மாளிகைக்குப் பலமான காவலும் செய்யப்பட்டிருப்பதையும் கரிகாலன் கவனித்தான். மாளிகைச் சுவருக்கு உட்புறத்தில் அளவுக்கு அதிகமான சோழ வீரர்கள் உலவுவதைப் பார்த்த கரிகாலன், பிரும்ம மாராயன் சதியில் ஈடுபட்டிருந்தாலும், சொந்தப் பாதுகாப்பையும் ஓரளவு கவனித்துக் கொண்டிருக்கிறான் என்பதையும் நிச்சயம் செய்து கொண்டான். பெரிய மதில்களுக்குப் பின்னாலிருந்த மாளிகையின் முன்புறத்திலேயே காவலாளியால் தடுக்கப்பட்ட கரிகாலன், தான் அவசியம் பிரும்ம மாராயரைக் காண வேண்டுமென்று இரைந்தான். அவன் இரைச்சலுக்குப் பயப்படாத காவலாளி, ''சரி சரி, போ. படைத் தலைவரைப் பிற்பகல் வரையில் பார்க்க முடியாது,'' என்று திட்டமாக மறுத்து விட்டான்.

எப்படியும் சோழ நாட்டுப் படைத் தலைவனைப் பார்க்காமல் போவதில்லை' என்று திட சித்தத்துடன் கரிகாலனும் வந்திருந்தபடியால், இருவருக்கும் வார்த்தை தடித்தது. கை கலக்கும் கட்டம் நெருங்கிய சமயத்தில், உள்ளே ஓர் அலறல் கேட்டது. அடுத்த வினாடி மாளிகைக் கதவுகள் பெரும் சப்தத்துடன் திறந்தன. இரண்டு வீரர்கள் ஒருவனைக் கட்டித் தூக்கிக் கொண்டு வந்தார்கள். கரிகாலனைக் கண்டதும் கட்டுண்டு வந்தவன், ''அதோ, இருக்கிறான். அவன் என் நண்பன் தான். அவனை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள்,'' என்று கதறினான். வீரர்களிடையே கட்டுண்டு நின்றவனை நோக்கிய கரிகாலன், திகைத்துப் போனான். கடைசியாகச் சைவத் துறவி இந்த இடத்திலா சிக்கிக் கொண்டார் என்று கரிகாலன் திகைத்த அந்த விநாடியில், ''அப்படியா கதை? சரி, அவனையும் பிடித்துக் கட்டிக் கொட்டடியில் அடையுங்கள். இருவரையும் சாட்டையால் செம்மையாகப் புடைத்து உண்மையைக் கக்க வையுங்கள்,'' என்று எழுந்தது ஒரு ராட்சதக் குரல். அந்தக் குரலுக்குத் தக்க தோற்றத்துடனும் யாரையும் கலங்க வைக்கும் பார்வையுடனும் ஒரு மனிதன் உள்ளேயிருந்து வெளியே வந்தான். அவன் உத்தரவை நிறைவேற்ற இரு வீரர்கள் உருவிய வாள்களுடனும் பிணைக் கயிறுகளுடனும் கரிகாலனை நோக்கி நெருங்கி வந்தார்கள்.

(தொடரும்)

பிரார்த்தனை
கிளப்

என் பெண் சாந்திமேரிக்கு, ஒரு வருடம் மூன்று மாதம் ஆகிறது. மேரிக்குப் பிறவியிலேயே மேல் உதட்டில் உள் பகுதி இல்லாமல் இடைவெளியுடன் சிறிது சதையும் தொங்குகிறது. இதனால் பேச முடியாமல் தொங்கும் சதையில் பல் முளைத்திருக்கிறது.

ஒரு வயதிற்குள் ஆபரேஷன் செய்தால் பல் முளைப்பது பாதிக்காது என்று டாக்டர்கள் சொன்னார்கள்.

என் குடும்பத்தில் வசதிக் குறைவாலும் இதனால் ஒன்றும் செய்ய இயலாத நிலையிலும், ஒரு வழியும் தெரியாமல், குழந்தையைப் பார்க்கும் போதெல்லாம் மிகவும் வேதனை அடைகிறேன். ஆதலால் அன்புள்ளம் கொண்ட பிரார்த்தனை கிளப் அங்கத்தினர்கள் ஆபரேஷன் செய்து உதடு சீராக அமைந்து எல்லாக் குழந்தைகளையும் போல சாந்தி மேரி பேச எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்தனை செய்யுமாறும் மிகவும் பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

—ரூபி மார்கிரேட், C/o. ஏ. ஜான் பாஸ்கோ, பழக்கடை மாடி வீட்டு எண். 87-M, பழைய பஸ் ஸ்டாண்ட் எதிர்ப்புறம், பைபாஸ் ரோடு, கரூர் 639 001.

எனது தந்தையார் வெ.பே. கோபாலசாமி அவர்கள் கடந்த நான்கு மாதங்களாக உடல் ஆரோக்கியம் மிகவும் பாதிக்கப்பட்ட நிலையில் இருந்து வருகிறார். எதிர்பாராமல் ஏற்பட்ட ஒரு சிறிய விபத்தில் வலது கால் பெருவிரலில் காயமேற்பட்டு, நீரிழிவு உள்ள உடம்பாதலால் அந்தக் காயம் ஆறாமலேயே இருந்து, அந்த விரலையே எடுக்க வேண்டி வந்தது. இதன் நடுவே சென்ற 10.2.1987 அன்று பாரிச வாயு தாக்குதல் வந்து, இடது கையும் இடது காலும் செயலிழந்த நிலையில் இருக்கிறார். அவருடைய தேகாரோக்கியமும் மனோநிலையும் முன்னேறி, அவர் நன்கு நடமாடும் நிலையை அடைந்து அமைதியான வாழ்க்கை வாழ அன்புள்ளம் கொண்டோர் அனைவரையும் பிரார்த்திக்கும்படி இருகரம் கூப்பி வேண்டுகின்றேன். நன்றி.

—வி.ஜி. மனோகரன், பிளாட் நெ. 119, சாந்திநகர், குரோம்பேட்டை, சென்னை 600 044.

கரூர் குழந்தை சாந்திமேரிக்கு உதட்டு ஆபரேஷன் வெற்றியடைந்து நலம் பெறவும் குரோம்பேட்டை கோபாலசாமி பாரிச வாயுத் தாக்குதலினின்று விடுபட்டு நடமாடவும் பிரார்த்திக்கும்படி பிரார்த்தனை கிளப் உறுப்பினர்களைக் கேட்டுக்கொள்கிறோம். பிரார்த்தனை நேரம்: 12.4.87 ஞாயிற்றுக் கிழமை காலை 7 மணி.

நலம் பெற வேண்டும்

# மன்னன் மகள்

## 12. பிரும்ம மாராயன்

உருவிய வாட்களுடனும் பிணைக் கயிறுகளுடனும் தன்னை நெருங்கிய வீரர்களையும், தன்னைப் பிடித்துக் கொட்டடியிலடைக்கும்படி உத்தரவிட்ட ராட்சச உருவத்தையும் மாறி மாறிப் பார்த்த கரிகாலன் கண்களில் பயத்துக்குப் பதில் வியப்பே மிகுந்து நின்றது. அத்துடன் எதிரே இரண்டு வீரர்களுக்கிடையில் கட்டுண்டு, 'அவன் என் நண்பன்தான். அவனை, வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள்' என்று கூவிவிட்டுத் தன்னையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த சைவத் துறவியைக் கண்டதும், அவன் வியப்பு பன்மடங்கு அதிகமாயிற்று. 'இவன் எப்படி இவர்களிடம் சிக்கிக்கொண்டான்? இவன் செங்கதிர் மாலையை அபகரித்தது ஒரு வேளை பிரும்ம மாராயனுக்குத் தெரிந்திருக்குமோ?' என்று கரிகாலன் தன்னைத் தானே கேட்டுக்கொண்டதுமன்றி, அதே செங்கதிர் மாலை அந்த நேரத்தில் தன் மடியிலிருப்பதைப் பிரும்ம மாராயன் உணர்ந்தால் என்ன ஆகும் என்பதைப் பற்றியும் யோசித்தான். என்ன ஆகும் என்பதில் அதிகச் சந்தேகமும் இல்லை கரிகாலனுக்கும். மாலை தன்னிடமிருப்பது தன்னைத் தோழன் என்று சைவத்துறவி குறிப்பிட்டதை ஊர்ஜிதப்படுத்தும் என்பதிலோ, அப்படி ஊர்ஜிதப்படுத்தும் பட்சத்தில் பிரும்ம மாராயன் சைவத்துறவியோடு தன்னையும் சேர்த்துக்கட்டி வைத்துத் தோலை உரித்து விடுவானென்பதிலோ சிறிதும் சந்தேகப்படாத கரிகாலன், 'இந்நிலையில் இவர்களிடம் சச்சரவு வைத்துக் கொள்வது உசிதமல்ல' என்ற முடிவுக்கு வந்தான். அப்படியே சச்சரவு செய்ய முற்பட்டு வாளை உருவினாலும், முடிவு என்னவாகுமென்பதையும், சுற்றிலும் ஒருமுறை கண்ணைச் சுழலவிட்டபின் புரிந்து கொண்டான். தன்னை நெருங்கிவரும் இரண்டு வீரர்களைத் தான் சமாளித்தாலும், மதில் சுவருக்கும் மாளிகைக்கும் இடையேயுள்ள பிராந்தியத்தில் உலாவும் வீரர்களும், குதிரைகளைத் தேய்த்துவிட்டுக்கொண்டும், வேல்களுக்கு எண்ணெயிட்டுப் பளபளவெனத் துடைத்துக்கொண்டும் ஆங்காங்கு பல பணிகளைப் புரிந்துகொண்டிருந்த வீரர்களும் தன்னைச் சூழ்ந்து கொள்வார்களென்பதையும், குறைந்தபட்சம் நூறு வீரர்களையாவது ஒரே சமயத்தில் தான் சமாளிக்க வேண்டியிருக்குமென்பதையும் சந்தேகமறத் தெரிந்துகொண்ட கரிகாலன் அந்தச் சமயத்தில் சண்டை பயனற்றது என்ற முடிவுக்கு வந்தான்.

உள்ளுக்குள்ளேயே ஏற்பட்ட இத்தகைய நினைப்புக்களாலும் முடிவினாலும், நிதானம் இழக்காமலும் அலட்சியமான பார்வையுடனும் வாயிற்படியில் நின்ற ராட்சச உருவத்தை ஏறெடுத்து நோக்கிய கரிகாலன், ''என்னைப் பிடித்துக் கொட்டடியில் அடைக்கும்படி உத்தரவிட உனக்கு என்ன துணிச்சல்?'' என்று சற்று அதிகாரத்துடனேயே கேட்டான்.

அவன் வீரர்களைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் நின்ற தோரணையையும், தன்னைப் பார்த்துச் சொன்ன வார்த்தைகளிலிருந்த அதிகாரத் தொனியையும் கண்ட ராட்சச உருவத்தின் முகத்திலும் ஆச்சரியத்தின் சாயை சற்றே படர்ந்தது. அந்த மனிதனுடைய விசாலமான முகத்திலிருந்த கரிய புருவங்கள் அந்த ஆச்சரியத்துக்கு அறிகுறியாக லேசாக மேல் நோக்கியும் எழுந்தன.

சாண்டில்யன்



அவன் கேள்விக்குச் சொன்ன பதிலில் இகழ்ச்சியும் ஓரளவு கலந்து நின்றது.

''ஏன், தாங்கள் இந்த ஊர் மகாராஜாவோ? தங்களைச் சிறை செய்ய மிகுந்த துணிச்சல் வேண்டுமாக்கும்!'' என்றான் அந்த ராட்சசப் பிரகிருதி.

அத்தனை இகழ்ச்சியுடன் தன்னைப் பார்த்துப் பேசிய அந்த மனிதனைக் கரிகாலன் மீண்டும் அளவெடுத்தான். அந்த மனிதனுடைய சரீரம் பூதாகாரமாக இருந்தாலும், நல்ல சிவப்புடன் பளபளப்பாகத் தளதளவென்றிருந்தது. இடுப்பில் நல்ல பட்டாடையைப் பஞ்சகச்சமாகக் கட்டியிருந்தாலும், நல்ல தடிப்பான பூணூல் ஒன்று அவன் மார்புக்குக் குறுக்கே பாய்ந்து சென்றதாலும், அவன் கழுத்தில் தங்கத்தில் பதிக்கப்பட்ட பெரிய ருத்திராட்சமொன்று தங்கச் சங்கிலியில் பிணைக்கப்பட்டுத் துலங்கியதாலும், அவன் ஓர் அந்தணன் அல்லது க்ஷத்திரியனாயிருக்க வேண்டுமென்று கரிகாலன் நினைத்தான். அந்தப் பஞ்சகச்சப் பட்டு வேட்டியில் வயிற்றுக்குக் குறுக்கே செருகப்பட்டிருந்தது ஒரு வாள். மேலே அவன் அணிந்திருந்த பட்டுச் சரிகை அங்கவஸ்திரம் உடலின் பெரும்பாகத்தை மறைக்காததால் அவன் உடலெங்கும் இருந்த காயத் தழும்புகளைக் கவனித்த கரிகாலன், அந்த மனிதன் பல போர்க்களங்களைக் கண்ட பெரிய மாவீரன் என்று தீர்மானித்துக் கொண்டான். வாயிற்படியை அடைத்து நின்ற அந்த மனிதன், நெற்றியில் பெரும் விபூதிப் பட்டையுடனும் குங்குமத்துடனும் சிவந்த கண்களுடனும் அசல் ருத்திரமூர்த்தியாகவே காட்சியளித்தான். அவன்



கண்கள் பார்த்த பார்வையிலிருந்து, அவன் பயமென்பதை வாழ்க்கையில் அறியாதவன் என்பதைக் கரிகாலன் சந்தேகமறத் தெரிந்து கொண்டதால், அத்தகைய பேர்வழியோடு அதிக விளையாட்டை வைத்துக் கொள்ளக் கூடாதென்ற நினைப்பு ஒரு பக்கம் ஏற்பட்டாலும், அந்த மனிதன் கேட்ட கேள்வியை முன்னிட்டுத் தானும் இடைவெட்டாகவே பேசத் தொடங்கி, ''தாங்கள் இந்த ஊர் மகாராஜாவைத் தவிர, வேறு யாராயிருந்தாலும் சிறை செய்து விடுவீர்கள் போலிருக்கிறது?'' என்று வினவினான்.

இந்தப் பதிலைக் கேட்ட அந்த மனிதன் முகத்தில், முதலில் ஏற்பட்ட ஆச்சரியம் பதின்மடங்காகவே, ''யாரப்பா நீ? காலையில் பிராணனை விடுவதற்காகவே இங்கு வந்திருக்கிறாயா? நான் யாரென்பது உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''நீ யாராயிருந்தாலும் எனக்குக் கவலையில்லை. நான் சந்திக்க வந்தது சோழநாட்டுப் படைத்தலைவரை. இஷ்டமிருந்தால் அவரிடம் அழைத்துப் போ. இல்லாவிட்டால் என்னைத் தடை செய்த தன் பலனைப் பின்னால் அனுபவிக்க நேரிடும்,'' என்றான் கரிகாலன், அதிகாரம் சிறிதும் தணியாத குரலில்.

''பலனை அனுபவிக்க நேரிடுமா? ஏன் சோழ நாட்டுப் படைத் தலைவருக்கும் உனக்கும் நெருங்கிய உறவோ?''

''ஆமாம்.''

''நீண்ட நாள் உறவோ?''

''இல்லை. சமீபகால உறவு தான்.''

''சமீப காலமென்றால்?''

''சில நாழிகை நேர உறவு.''

''உறவு ஏற்பட்டு எத்தனை நாழிகைகள் இருக்கும்?''

இந்தப் பதிலைக் கேட்ட அந்த மனிதன் முகத்தில் கொடுமை மறைந்தது. இதழ்களில் புன்முறுவல் அரும்பியது. கரிகாலன் மேலும் என்னென்ன சொல்லப் போகிறான் என்பதை அறியும் ஆசையால், ''உறவு எத்தன்மையது? அவர் நீண்ட நாள் பந்துவோ?'' என்று விசாரித்தான்.

''இல்லை. குறுகிய கால நண்பர்.''

''காலம் ரொம்பக் குறுகலோ?''

''அதுதான் எட்டு நாழிகை இருக்குமென்று முன்னமே சொன்னேனே.''

''நண்பர் தங்களைப் பார்த்திருக்கிறாரா?''

''பார்த்ததில்லை.''

''உங்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாரா?''

''அதுவும் இல்லை.''

''அப்படியானால்?''

''நான் அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''நீங்கள் அவரை நண்பராகப் பாவித்து விட்டீர்களாக்கும்?''

''ஆமாம்.''

''என்ன ஒருதலைப்பட்சமான நட்பு!''

''என்னை அவர் பார்த்தால் இருதலைப் பட்சமாகிவிடும்.''

இதைக் கேட்ட அந்த மனிதன் இடியென நகைத்தான். அடுத்த வினாடி நகைப்பு இருந்த இடத்தில் கோபம் குடி கொண்டது. ''அட அயோக்கியப் பயலே! என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்? இரு, உனக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்,'' என்று சொல்லிவிட்டு அதுவரை தங்கள் சம்பாஷணையின் காரணமாகக் கட்டளையை நிறைவேற்றாமல் நின்ற வீரர்களை நோக்கி, ''பிடியுங்கள் இந்தப் போக்கிரியை,'' என்று இடியையொத்த குரலில் கூவினான்.

''என்னைப் பிடித்துக் கட்டு, சிறையில் வேண்டுமானாலும் அடை. ஆனால் நண்பர் பிரும்ம மாராயர் உன்னை ஒருக்காலும் சும்மா விடமாட்டார். உன்னுடைய இந்தச் சதைப் பிண்டத்தை அறுத்து நூறு கழுகுகளுக்காவது இரையாகப் போடுவார். என்னைச் சிறை செய்துவிட்டு அவரிடம் சென்று பச்சைக்கல் மோதிரத்தைப் பற்றி நினைப்பூட்டு; பிறகு தெரியும் உன் கதி?'' என்று கரிகாலன் இரைந்தான்.

எதிரே நின்ற மனிதனுடைய போக்கில், கரிகாலன் சொற்கள் பிரமிக்கத் தக்க மாறுதலை உண்டாக்கின. கரிகாலனை நோக்கிய அவன் கண்களில், பிரமிப்பும் சந்தேகமும் கலந்து நின்றன. முந்திய விநாடி இட்ட உத்தரவை மாற்றத் துடித்த அவன் உதடுகள், ''டேய், சற்றுப் பொறுங்கள்,'' என்று வார்த்தைகளை உதிர்த்து, கரிகாலனை அணுகி வந்த

## சட்டப்படி...



கோர்ட்டு படிக்கட்டுகளிலேயே தமது வாழ்நாளைக் கழித்த ஒரு வழக்கறிஞர் ஆரஞ்சுப்பழம் ஒன்றைத் தம் நண்பருக்குக் கொடுத்துவிட்டுச் சொன்னார்:

நான் உமக்கு இந்த ஆரஞ்சுப் பழத்தை ஒரே சமயத்தில் முழுவதுமாகக் கொடுத்து இருக்கிறேன்.

இந்த ஆரஞ்சுப் பழத்தைப் பயன்படுத்தும் முழு உரிமையையும் அளிக்கிறேன்.

நீங்கள் இதை தோல் உரித்தோ, கொட்டைகளை நீக்கி விட்டோ, கடிக்கவோ, உறிஞ்சிச் சாப்பிடவோ இதனால் உரிமை பெறுகின்றீர்கள்.

நீங்கள் விரும்பினால் நான் உங்களுக்குக் கொடுத்ததைப் போல முழுப் பழமாகவோ அல்லது அதன் ஒரு பகுதியையோ உங்களுக்கு விருப்பமானவர்களுக்குக் கொடுக்கவும் இதனால் உரிமை பெற்று விட்டீர்கள். இனிமேல் இதன்மீது முழுமையாகவோ, அரைகுறையாகவோ உரிமை பாராட்டி வரமாட்டேன் என்றும் உறுதியாகக் கூறுகிறேன்!

—சேலம் சக்தி

வீரர்களைத் தடையும் செய்தன. அந்தப் பிரம்ம ராட்சதன் முகபாவத்தில் ஏற்பட்ட மாறுதல் மற்றொருவன் முகத்திலும் ஏற்பட்டது. பச்சைக்கல் மோதிரத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்த சொற்கள், சைவத் துறவியின் காதிலும் விழுந்ததால், அவனும் தன் கண்களை உயர்த்திக் கரிகாலனையும், வாயிற்படியில் நின்ற ராட்சசப் பிரகிருதியையும் நோக்கினான். பச்சைக்கல் மோதிரத்தைப் பற்றிக் கேட்ட மாத்திரத்தில் வாயிற்படியில் நின்ற மனிதன் முகம் மாறுபட்டதைக் கண்ட சைவத் துறவியின் மனத்தில் பல எண்ணங்கள் எழுந்து பிரவகிக்கத் தொடங்கின. 'அப்படியானால் அவனுக்கும் கரிகாலன் பிறப்பு இரகசியம் தெரியுமா? தெரிந்தால் விவகாரம் விபரீதமாக முடியுமே. இந்த மனிதன் பச்சைக் கல் மோதிரத்தை ஏற்கெனவே பார்த்து விட்டானா? பார்த்திரா விட்டால் அதன் பெயரைக் கேட்டதும் ஏன் மலைக்கிறான்? பார்த்திருந்தால் கரிகாலனை இன்னானென்று ஏன் இவன் புரிந்துகொள்ளவில்லை? கரிகாலனும் இவனை யார் என்று புரிந்து கொண்டதாகத் தெரியவில்லையே. அப்படியானால் இவனை ஏன் பார்க்க வந்தான்? கும்பகோணம் மடாலயத்தில் தஞ்சைத் துறவி இவனைப் பார்க்கச் சொன்னது அரையன் இராஜ ராஜனைத்தானே? அப்படி இருக்க, அவன் பிரும்ம மாராயனிடம் எதற்காக வந்தான். நேற்று இரவு வரை நம்முடனிருந்தவனுக்கு இந்த ஊர் நிலவரமும் பிரும்ம மாராயன் இருப்பிடமும் எப்படித் தெரிய வந்தன? இவனை வீரர்கள் துரத்திச் சென்றார்களே, அவர்களிடமிருந்து எப்படித் தப்பினான்? தவிர உடையும் ராஜ உடையாகத் தெரிகிறதே இதை இவனுக்கு யார் கொடுத்தார்கள்?' என்று பலவாறாக யோசித்து, ஏதும் புரியாமல் துடித்த சைவத்துறவி அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள இஷ்டப்பட்டவனாய், ''அப்பா கரிகாலா, நாம் பார்க்க வந்த பிரும்ம மாராயர் உன் எதிரில் நிற்பவர்தான். அவரிடம் என் பச்சைக்கல் மோதிரத்தோடு உன்னிடமுள்ள செங்கதிர்மாலையையும் கொடுத்துவிடு,'' என்று கூவினான்.

அயோக்கியத்தனமும் பித்த







தொடர்ச்சி: 62'ம் பக்கம்

லாட்டமும் கலந்து நின்ற சைவத் துறவியின் சொற்களைக் கேட்டுக் கரிகாலன் கண நேரம் சொல்லவொண்ணா பிரமிப்பை அடைந்தான். பிறகு அவன் கண்கள் ஒரு முறை எதிரே பிரம்மாண்டமாக நின்ற சோழநாட்டுப் படைத் தலைவனான பிரும்ம மாராயனை ஏற இறங்க நோக்கின. ஒரு முறை சைவத் துறவியை ஊடுருவிப் பார்த்தன. மறுபடியும் பிரும்ம மாராயனை நோக்கிய கரிகாலன் பார்வையில் மிதமிஞ்சிய மதிப்பு நிறைந்து நின்றது.

''சோழநாட்டுப் படைத் தலைவர் இன்னாரென்று அறியாமல் பலவிதமாகப் பேசிவிட்டேன், மன்னிக்க வேண்டும்,'' என்று தலை வணங்கிக் கூறிய கரிகாலன், துறவியின் பக்கமாகக் கண்களைச் செலுத்தி, ''இவன் யார் தெரியவில்லையே! என் பெயரை எப்படியோ தெரிந்து வைத்திருக்கிறான். ஏதோ மாலையைப் பற்றிப் பேசுகிறான்; எதுவும் புரியவில்லையே,'' என்று வினவினான்.

''இவன் சேரநாட்டு ஒற்றன் ஜெயவர்மன். சைவத்துறவியாக வேஷம் போட்டுச் சோழப் பேரரசர் பொக்கிஷத்திலிருந்து செங்கதிர் மாலையை களவாடி விட்டான்,'' என்றான் பிரும்ம மாராயன்.

''செங்கதிர் மாலையா!'' என்று ஏதும் அறியாதது போல் கேட்டான் கரிகாலன்.

இந்தக் கேள்வி சைவத் துறவியின் கோபத்தைக் கிளறி விடவே, ''அட அயோக்கியப் பயலே! என் மாலையை வைத்துக்கொண்டிருப்பதுமல்லாமல் ஏதுமறியாததுபோல் பாசாங்கு செய்கிறாயா?'' என்று கூவினான்.

பிரும்ம மாராயன் தன்னைச் சோதனை செய்ய முற்பட்டால் விவகாரம் எப்படி முடியுமென்பதைக் கரிகாலன் அறிந்தேயிருந்ததால் சைவத்துறவியின் கூச்சலால் அவனுக்கு ஓரளவு அச்சம் ஏற்பட்டாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''படைத் தலைவரே! நானே உம்மைத் தேடி வந்திருக்கிறேன். அதுவும் வெறுங் கையுடன் வரவில்லை— காணிக்கையுடன் வந்திருக்கிறேன். முதலில் இதைப் பிடியுங்கள்,'' என்று கூறிவிட்டுத் தனது கச்சையிலிருந்து, அரச










தொடர்ச்சி: 74'ம் பக்கம்

சந்திரிகாவின் மகிழ்ச்சிகரமான தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துகள்




THE NATURAL CHOICE

CHANDRIKA

AYURVEDIC SOAP

குமாரி அளித்த பச்சைக்கல் மோதிரத்தை எடுத்துக் கொடுத்தான்.

பிரும்ம மாராயனுக்கு அதுவரை கரிகாலன் விஷயத்தில் சந்தேகம் ஏதாவ திருந்தால் அந்தப் பச்சைக் கல் மோதிரம் அதை, அடியோடு பறக்கடித்துவிட்டது. அந்த மோதிரத்தைக் கையில் பய பக்தியோடு வாங்கிக்கொண்ட படைத் தலைவன், ''கரிகாலரே! இவனால் அரை விநாடி உங்கள்மீதுகூடச் சந்தேகம் விழுந் தது எனக்கு. மன்னிக்கவேண்டும். பேச வேண்டியதை உள்ளே போய்ப் பேசுவோம். வாருங்கள்!'' என்று கூறிவிட்டு, சைவத்துறவியைப் பிடித்து நின்ற வீரர்களை நோக்கி, ''இவனைக் கொட்டடியில் அடைத்து வையுங்கள். இன்றிரவு ஊரடங்கியதும் கசையடிக் காரனைச் சித்தமாயிருக்கச் சொல்லுங்கள். நான் வந்து இவன் தோலை உரித்து உண்மையைக் கக்க வைக்கிறேன்,'' என்று உத்தரவிட்டு மாளிகைக்குள் நுழைந்தான்.

மேற்கொண்டு எதுவும் பேசாமல், பிரும்ம மாராயனைப் பின் தொடர்ந்த கரிகாலன், அந்த மாளிகை யின் பலத்த சுவர்களையும் பெருந்தூண் களையும் பார்த்துச் சாளுக்கியர்களின் கட்டிட நிர்மாணத் திறமையை வியந்துகொண்டே சென்றான். இரண்டாவது உப்பரிகையிலிருந்த விசால மான ஓர் அறைக்கு வந்ததும், கரிகாலனை நோக்கித் திடீரெனத் திரும்பிய பிரும்ம மாராயன், ''நிரஞ்சனாதேவி என்ன சொல்லியனுப்பினார்கள்? அதுவும் ராஜ ராஜ நரேந்திரன் உடையில் எதற்காக அனுப்பினார்கள்? அவர்களுக்கென்ன புத்தி பிசகிவிட்டதா?'' என்று கேட்டான்.

''படைத்தலைவரே! அரசகுமாரி, எதையும் யோசித்தே செய்கிறார்கள். விமலாதித்தன் மகளின் அறிவு எத்தகையதென்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். வருஷக் கணக்கில், கூட இருந்து அவர்களை நன்றாக அறிந்தவர் களுக்குத்தான் அவர்கள் செய்கை புலப் படும்,'' என்று கரிகாலன், தான் அரச குமாரியிடம் நீண்டநாள் பழகியவனைப் போல் பேச ஆரம்பித்தான்.

''அப்படியா!'' என்று இகழ்ச்சியாகத் தலையை அசைத்த பிரும்ம மாராயன், ''அத்தனை யோசனையுள்ள அரசகுமாரி உம்மை இந்தச் சமயத்தில் என்னிடம் அனுப்பலாமா? அதுவும் பச்சைக்கல் மோதிரத்தைக் கொடுத்து அனுப்பலாமா?'' என்று வினவினான்.

''அனுப்பினால் என்ன?'' என்று கேட்டான் கரிகாலன்.

''அவர்களிடம் போய் வந்து கொண்டிருந்த அரிஞ்சயன், ஏன் அவர் களிடம் மீண்டும் தலை காட்டவில்லை?'' என்று பதில் கேள்வியொன்றை வீசினான் பிரும்ம மாராயன்.

''காரணம் என்ன? அதைத்தான் முதலில் அரசகுமாரி கேட்கச் சொன் னார்கள்,'' என்று கரிகாலன் பதிலிறுத் தான்.

காரணத்தைச் சொன்னான் பிரும்ம மாராயன். அதைக் கேட்ட கரிகாலன் தலையில் இடியே இறங்கிய மாதிரி இருந்தது!

(தொடரும்)



## ஸ்ரீரங்கம் ஸ்தபதிக்குக் கூலி குறைத்தது ஏன்?

ஸ்ரீரங்கம் ராஜகோபுரம் கட்டிய பிரதம ஸ்தபதி சிவப்பிரகாசம் தனது இளம் வயது அனுபவம் ஒன்றைக் கூறுகிறார்:

''அப்பொழுது எனக்கு வயது பதினாறு இருக்கலாம். சித்தப்பாவுடன் சென்னைக்கு அருகிலுள்ள கோவூர் கோவில் சிற்ப வேலையைச் செய்து கொண்டு இருந்தேன். முதல் நாள் கூலி 5 ரூபாய் கொடுத் தார்கள். முதல் சம்பளத்தைப் பெருமையுடன் சித்தப்பாவிடம் கொடுத்தேன்.

சில நாள் கழித்து ஐந்து ரூபாயாக இருந்த தினக்கூலி ஒன்றரை ரூபாயாக குறைக்கப்பட்டது. இதைப்பற்றிச் சித்தப் பாவிடம் முறையிட்டேன். சித்தப்பா கூறினார்: ''நான்தான் அப்படிக் கொடுக்கச் சொன்னேன். நமக்குத் தரப்படும் கூலி எங்கிருந்து வருகிறது தெரியுமா? கோவில் காணிக்கையிலிருந்து. ஏழை பாழைகள் செலுத்திய காணிக்கை அது. அவர் கள் பணத்திலிருந்து அதிகத் தொகை நாம் கூலி யாகப் பெறுவது நியாயமில்லை.''

—திருவேங்கிமலை சரவணன்.

இருட்டில் பைல்களைத் தேட வேண்டும். வேர்த்து விறுவிறுத்து, குழப்பும் கணக்குகளை ஆராய வேண்டும். லைட்டும் இல்லை, ஃபேனும் இல்லை. கையிலிருக்கும் நேரமோ குறைவு. நினைத்துப் பாருங்கள். மின்சாரத் தட்டுப்பாட்டினால் உங்களுக்கு வியாபாரத்தில் நஷ்டம் கண்கூடு.

இல்லை. இனி இந்த கஷ்டம் இல்லை.

## இதோ! லிட்டில் ஜினி

முடிந்துவிட்டது. இந்த நிச்சயமில்லாத எதிர்பார்ப்பு. மின்சாரம் போகும்போது நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் லிட்டில் ஜினி ஸ்டார்ட்டரை இழுப்பதுதான். மாயாஜாலம் என்பது இதுதான். மின்சார பிரச்னைக்கு பரிகாரம், லிட்டில் ஜினியின் அவதாரம். வீடு, கடைகண்ணி, ஷோரூம், அலுவலகம், தொழிற்சாலை, மருந்தகம், வங்கி எவ்விடமானாலும் எப்பொழுதாகிலும். இதைத் தவிர மொபைல் வேன், காம்ப், திரைப்பட/வீடியோ ஷூட்டிங். இதைப்போல எத்தனையோ...

## லிட்டில் ஜினி—இந்திய சூழ்நிலைக்கேற்ப விசேஷமாக தயாரிக்கப்பட்டது.

லிட்டில் ஜினி இந்திய சூழ்நிலைக்கேற்ப தயாரிக்கப்பட்ட விசேஷமானதொரு ஜென்செட். ஆகவே இது தொடர்ந்து நிறைய மணி நேரம் சத்தம் செய்யாமல் வேலை செய்ய வல்லது. மிக அதிக வெப்பத்திலும் கூட. ஆல்டர்னேட்டருக்கும், என்ஜினுக்கும் தனித்தனி குளிர்ச்சி ஃபான்கள். இதன்திறந்த அமைப்பில் இதைக்கண்கூடாக காணலாம்.

## உங்கள் மதிப்புள்ள கருவிகளுக்கு பாதுகாப்பானது

இதன் பிரஷ்லெஸ் (Brushless) ஜெனரேட்டர் டிஸைன் யாமாஹா எஞ்ஜினியர்களால் உருவாக்கப்பட்டு குறைபாடற்றதாக விளங்குகிறது. ஆகவே உங்களுக்குக் கிடைக்கிறது ஒரே சீரான அவுட்புட். லிட்டில் ஜினியை ஆன் செய்யும்போது உங்களுடைய டிவி, வீடியோ, எலெக்ட்ரானிக் டைப்ரைட்டர் போன்ற எலெக்ட்ரானிக் உபகரணங்களுக்கு ஒரே சீரான வோல்டேஜ் கிடைத்து இவை கெடாமல் பாதுகாக்கிறது. இதிலுள்ள உள்ளமைந்த வோல்ட் மீட்டர் உங்களுடைய எல்லா சந்தேகங்களுக்கும் பதில்.

## உங்கள் எல்லாவித தேவைகளுக்கும்...பலவித மாடல்கள்

உங்கள் தேவைகளுக்கெனவே உள்ளன அனேக வித மாடல்கள். 0.5 KVA விருந்து 2.35 KVA வரை. பராமரிப்பதோ மிக எளிது. நம்பிக்கைக்குகந்த இரண்டு ஸ்ட்ரோக் என்ஜின் அல்லது சக்தி வாய்ந்த நான்கு ஸ்ட்ரோக் என்ஜின் கூடியது. தேர்ந்தெடுங்கள் உங்களுக்கு தேவையானதை.

## ஒரு வருட உத்தரவாதம்—எல்லாவித வசதிகளும் கொண்ட சர்வீஸ் சென்ட்டர்கள்—

பிர்லா யாமாஹா ஜென்செட்டுகள் உங்களுக்கு ஒரு வருட உத்தரவாதத்துடன் கிடைக்கிறது. திறமையான விற்பனைக்குப் பின் சேவை மற்றும் உங்களுக்குத் தேவை என்னும் பொழுது எளிதாகக் கிடைக்கும் உபரி உறுப்புகள். தேசம் முழுவதும் பரவியுள்ள சர்வீஸ் சென்டர்கள் மற்றும் அங்கு நியமிக்கப்பட்டுள்ள திறமைமிக்க ஊழியர்கள் எப்பொழுதும் உங்களுக்குச் சேவைசெய்ய காத்திருக்கிறார்கள்.

## இருட்டும் வரை ஏன் காத்திருக்க வேண்டும்?

ஆயிரக்கணக்கானவர்கள் ஏற்கெனவே பிர்லா யாமாஹா ஜென்செட்டை மகிழ்ச்சியோடு உபயோகிக்கிறார்கள். மின்சாரத் தட்டுப்பட்டுக்கான கவலை இனி இல்லை உங்களுக்கு.

லிட்டில் ஜினி, உங்கள் வியாபாரத்தில் கைகொடுக்கும் நீங்கள் மேலே மேலே உயர வழி செய்யும்.

### ஜப்பானின் யாமாஹா. இந்த கம்பெனியின் பல சாதனைகள்

யாமாஹா மோட்டார் கம்பெனி. ஜப்பானின் ஒரு மிகப்பெரிய கம்பெனியான இது அதிநவீன டெக்னாலஜியை பின்பலமாகக் கொண்டது. பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறது. ரோபோடிக்ஸ், மோட்டார் சைக்கிள், அவுட்போர்ட் மோட்டார், பகு உபயோக எஞ்ஜின்கள், ஃபைபர்கிளாஸ் ரீ-இன்ஃபோர்ஸ்ட் ப்ளாஸ்டிக் போட்டுகள், மற்றும் நிச்சயமாக ஜென்செட்டுகளும் கூடத்தான்:

யாமாஹாவிடம் முதன்மைக்காக ஒரு பட்டியலே உள்ளது.

- ஜென்செட்டுகளுக்கு ஆயில் வார்னிங் ஸிஸ்டத்தை முதன் முறையாக கொண்டுவந்தவர்கள் இவர்களே.
- ஜென்செட்டுகளுக்கு வேண்டிய ஆல்டர்னேட்டர் மற்றும் என்ஜின்களை தாங்களே தயாரிப்பவர்கள் இவர்கள் மட்டுமே.
- எல்லா மாடல்களுக்கும் பிரஷ்லஸ் ஜெனரேட்டர் டிஸைனை உபயோகித்தவர்கள்.

இவை மட்டுமல்ல. ஜப்பானில், முதலில் ஃபைபர்க்ளாஸ் ரீ-இன்ஃபோர்ஸட் ப்ளாஸ்டிக் போட் தயாரித்தவர்கள் இவர்களே. மோட்டார் சைக்கிள், அவுட்போர்ட் மோட்டார் மற்றும் ஸ்னோமோபைல் தயாரிப்பில் உலகிலேயே முதன்மையானவர்கள் இவர்களே.

மேலும் விவரங்களுக்கு அணுகவும்:

Marketing Division
BIRLA YAMAHA LTD.
A-7, South Extn. Part-1,
Ring Road,
New Delhi-110049.



BIRLA YAMAHA

லிட்டில் ஜினி. தயாரிப்போர்: பிர்லா யாமாஹா

இந்திய சூழ்நிலைகளுக்கேற்ப விசேஷமாக தயாரிக்கப்பட்ட போர்ட்டபிள் ஜெனசெட்.

30-4-87




## 13. வேங்கி நாட்டுக் கோதண்டம்

சோழ நாட்டு மாபெரும் படைத் தலைவர்களில் ஒருவனும், சாளுக்கியர்களின் சரித்திர ஏடுகளிலே ராஜராஜ பிரும்ம மகாராஜன் என்று மதிப்புடன் அழைக்கப்பட்டவனும், இறுதியில் வேங்கி நாட்டு அரியணையில் ராஜராஜ நரேந்திரனை இருத்துவதற்காகப் போர்க்களத்தில் தன் உயிரையே துறந்தவனும், அந்தணனுமான பிரும்ம மாராயன், அன்று காலை நேரத்திலே, வேங்கி நாட்டு மாளிகையிலே, அரிஞ்சயன் அரசகுமாரியிடம் தலை காட்டாத காரணத்தைச் சொன்னதும், எதற்கும் கலங்காத கரிகாலனும் ஓரளவு கலங்கத்தான் செய்தான்.

''அரிஞ்சயன் சாளுக்கியர்கள் சிறையில் கிடக்கிறான்!'' என்று நான்கே வார்த்தைகளில், உள்ள நிலையை உடைத்த பிரும்ம மாராயன் முகத்திலும் கவலைக்குறி பெரிதாகப் படர்ந்தே நின்றது. அந்த நேரத்தில் பிரும்ம மாராயனுடைய பெரிய உருவத்தையும் விசாலமான கவலை தோய்ந்த கண்களையும் கண்ட கரிகாலன், பெரிய பெரிய காரியங்களைச் சாதிக்கவல்லவர்கள் கூடச் சின்னஞ்சிறு காரியங்கள் தங்களை மீறி நடந்து விடும்போது, எத்தனை தூரம் நிலைகுலைந்து விடுகிறார்கள் என்பதைக் கவனித்தான். போர்க்களத்தில் பெரும் வேல்களைத் தாங்கி எறிந்து, எத்தனை தூரம் வேண்டுமானாலும் குறிவைத்து எதிரிகளை மாய்க்கவல்ல வல்லமை உடையவனென்றும் கலியுக துரோணனென்றும்

சாண்டில்யன்



சோழர்களால் போற்றப் பெற்றப் பெற்றவனும், பெரும் படைகளை எதிர்த்து நிற்கும் காலங்களில் அச்சமென்பதை அறவே அறியாதவனுமான பிரும்ம மாராயன், அரிஞ்சயன் சிறைப் பட்டதால் ஓரளவு அச்சமும் அடைந் திருக்கிறானென்பதை அவன் முகபாவத்திலிருந்தே அறிந்து கொண்ட கரி காலனுக்கு, அவன் அச்சத் துக்குக் காரணமும் புரிந்துதானி ருந்தது.

''விஷயம் சிறியதுதான். ஆனால் விளைவு எத்தனை பெரிது!'' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான் கரிகாலன். 'அரிஞ்சயன் சிறைப்பட்டிருக் கிறானென்றால் அரசகுமாரியின் சதித் திட்டத்தைப் பற்றிய திட்டமான தகவல் ஏதாவது ஜெயசிம்ம சாளுக்கியனுக்கு எட்டித்தானிருக்கவேண்டுமென் பதிலோ, அப்படி எட்டியிருக்கும் பட்சத்தில் பூராத் தகவல் களையும் கக்க வைக்க வேங்கி நாட்டுச் சிறையில் அரிஞ்சயனுக்குச் சிசுருஷை நடக்குமென்பதிலோ, கரிகாலனுக்குச் சந்தேகம் சிறிது மில்லை. அப்படிப் பூராத் தகவல் கிடைக்கும் பட்சத்தில் தகவல் எத்தன்மை யதாயிருக்கும்? அரசகுமாரிக்கு உதவும் ஜெயசிம்ம சாளுக்கியன் ஆதிக்கத்தை வேங்கி நாட்டி லிருந்து நீக்கவும் என்ன ஏற்பாடுகளைச் சோழ நாட்டுப் படைத்தலைவர் செய்திருப் பார்?' என்று திரும்பத் திரும்ப யோசித்த கரிகாலன், சரியான விடையேதும் கிடைக்காத வனாய் பிரும்ம மாராயரை நோக்கி, ''நிலைமை சங்கட மானதுதான் படைத்தலைவரே!'' என்றான்.

பிரும்ம ராட்சசன் போல் எதிரே

நின்ற பிரும்ம மாராயனும், தன் கண்களை ஒரு வினாடி கரிகாலன் மீது பதியவிட்டு, ''இப்பொழுது புரிகிறதா உங்களுக்கு அரசகுமாரியின் செய்கை எத்தனை அசந்தர்ப்பமானது என்று!'' என வினவினான்.

''புரிகிறது, படைத் தலைவரே! ஆனால் அரிஞ்சயன் சிறைப்பட்ட விஷயம் அரசகுமாரிக்குத் தெரியாதல்லவா?'' என்றான் கரிகாலன்.

''ஜெயசிம்ம சாளுக்கியன் ஆதிக்கம் வேங்கி நாட்டின் மீது இருக்கும் போது எத்தகைய விபரீதத்தையும் எதிர் பார்க்க வேண்டியது அரசகுமாரியின் கடமையல்லவா? கரிகாலரே! சாதாரண நிலையிலுள்ள அரசகுமாரிகளுக்கே ஆபத்துக்கள் பல உண்டு. ஆகவே சதியில் ஈடுபடும் அரசகுமாரியின் நிலை என்னவென்பதைப்பற்றி எதுவும் சொல்லத் தேவையில்லை. ஏற்கெனவே அரசகுமாரியின் செய்கை ஒவ்வொன் றையும் ஜெயசிம்மனின் ஒற்றர்கள் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். போதாக்குறைக்கு உமக்கு வேறு அரச கோலம் போட்டு இங்கு என்னிடம் அனுப்பியிருக்கிறார்கள் அரசகுமாரி,'' என்று வெறுப்பும் கோபமும் கலந்த சொற்களைக் கொட்டிய பிரும்ம மாராயன், கோபத்தைச் சாந்தப்படுத்திக் கொள்ள அறையில் சற்று நேரம் உலாவவும் செய்தான்.

கோபம் மிகுந்த பிரும்ம மாராயன் வார்த்தைகளின் கடைசிப் பகுதி, கரிகாலன் உதடுகளில் சிறிது புன்னகையை வரவழைத்தது. 'போதாக் குறைக்கு உமக்கு வேறு அரசகோலம் போட்டு இங்கு என்னிடம் அனுப்பியிருக் கிறார்கள்' என்ற பிரும்ம மாராயன் சொற் களை எண்ணிப் பார்த்த கரிகாலன், ''ஏன் பிரும்ம மாராயரே! இந்தக் கோலத்துக்கு என்ன? அரசகோலம் எனக்குப் பொருத்த மாயில்லையா?'' என்று வினவினான்.

பிரும்ம மாராயன் ராஜ தோரணையில் நின்ற கரிகாலனையும், அவன் உடையையும் நன்றாக ஆராய்ந் தான். ராஜராஜ நரேந்திரன் உடை அவனுக்குச் சரியாகப் பொருந்தியிருப் பதையும், அந்த உடை ஏதோ அவனுக் காகவே பிரத்தியேகமாகத் தைக்கப் பட்டது போலிருப்பதையும் கண்டான்



எம். ஜி. ஆர். நடித்த —நல்ல நேரம் படத்தில் குழந்தை நட்சத்திரமாக அடியெடுத்து வைத்தவர் இவர். பெயர் நர்மதா!

பிரும்ம மாராயன். கரிகாலன் உயரம், உடை முதலியவற்றை ஆராய்ந்த பிரும்ம மாராயனின் கண்கள், கடைசியாக அவன் முகத்திலும் நிலைத்தபோது, ஏதோ சந்தேகச் சாயை அவன் கண்களில் உதய மானது போலத் தோன்றவே, ''இன்னும் தங்களுக்கு என் மீதுள்ள சந்தேகம் விட வில்லை போலிருக்கிறது?'' என்று இன்னொரு கேள்வியை வீசினான் கரி காலன்.

''சந்தேகம் ஏற்படத்தான் செய்தது. ஆனால் தாங்கள் அரச குமாரியின் தூதுவரா அல்லவா என்பதைப் பற்றியல்ல,'' என்றான் பிரும்ம மாராயன்.

''வேறு எதைப் பற்றி?''

''எதைப் பற்றியதாயிருந் தாலும், அதைப்பற்றி இப்பொழுது பேச வேண்டிய அவசியமில்லை.''

''பின் எப்பொழுது பேசலாம்?''

''எப்பொழுது பேசலாமென்று எனக்குத் தோன்றுகிறதோ அப்பொழுது.''

''தங்களுக்கு எப்பொழுது தோன்றுமோ?''

''நிச்சயமாகச் சொல்ல முடியாது. உங்களைப் பார்த்தவுடன் வேறு சில நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. பல வருடங்களுக்கு முன்பு நடந்த சில அரசியல் நிகழ்ச்சிகள். ஆனால் அவை பழங்கதை. அவை எதற்கு இப்பொழுது?''

பிரும்ம மாராயன் பேசிய பேச்சி லிருந்தும் அவன் முகத்தில் பிரதிபலித்த உணர்ச்சிகளிலிருந்தும் ஏதோ பெரிய ரகசியத்தை அவன் மறைக்கிறான் என்பதைக் கரிகாலன் சந்தேகமறப் புரிந்து கொண்டான். அந்த ரகசியத்தில் தன் பிறப்பு ரகசியமும் ஒருவேளை புதைந்து கிடக்கலாமோ என்ற சந்தேகமும் உண்டாகவே, பிரும்மமாராயனை வற்புறுத்திக் கேட்கவும் தொடங்கினான்.

''படைத் தலைவரே! உம்மை வற்புறுத்தி எதையும் கேட்க எனக்கு இஷ்டமில்லை...'' என்று மெள்ளத் துவங்கினான் கரிகாலன்.

''அப்படியானால் கேட்காமல் இருந்து விடுங்களேன்.''

''அப்படி இருக்க ஆசை இடம் கொடுக்கவில்லை.''




1

தூக்கிப் பிடித்த அட்டையில் இருப்பது என்ன மொழி?

''எதைப் ப்ற்றிய ஆசை?''

''தாங்கள் குறிப்பிட்ட அரசியல நிகழ்ச்சிகளைப் பற்றி அறிய எனக்கு உண்டாகியிருக்கும் ஆசை.''

''அதைப்பற்றி இப்பொழுதென்ன? ஏதோ நடந்து போன கதை.''

''நடந்துபோன கதைகளில் எத்தனை ருசி இருக்கிறது! இல்லையேல் சரித்திரமே ருசிக்காதே.''

''உண்மை, கரிகாலரே! ஆனால் நடந்துபோன அந்தக் கதைக்கும், நம்மை எதிர்நோக்கியிருக்கும் பெரிய சிக்கலுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை.''

''சம்பந்தமில்லாவிட்டாலும், எனக்கு லேசாக அதைப் பற்றித் தெரிவித்தால்தான் என்ன?''

''தெரிவிக்க எனக்கு உரிமை இல்லை. தவிர அதைத் தெரிவிக்க இப்பொழுது அவசியமுமில்லை. உங்களைக் கண்டதும் யார் நினைவோ வந்தது எனக்கு!''

இந்தப் பதிலைக் கேட்ட கரிகாலனின் கண்களில் நம்பிக்கை ஒளி தாண்டவமாடியது. ''யார் நினைவு? சொல்லுங்கள் படைத் தலைவரே, சொல்லுங்கள்!'' என்று கெஞ்சினான் கரிகாலன்.

பிரும்ம மாராயன் அந்தக் கெஞ்சலுக்குச் சிறிதும் மசியாமல் பேச்சை மாற்றத் தொடங்கி, ''கரிகாலரே! இந்த உடை உமக்குப் பொருத்தமாயிருக்கிறதா இல்லையா என்று கேட்டீர்களல்லவா?'' என்று வினவினான்.

பிரும்ம மாராயன் முகத்தில் சில நிமிடங்களே உலாவிய கருணையும் கனிவும் மறைந்து மீண்டும் முகம் கல்லாகி விட்டதையும், அவனிடமிருந்து மேற்கொண்டு தகவல் ஏதும் வராதென்பதையும் தீர்மானித்துக் கொண்ட கரிகாலன், சோகம் கலந்த பெருமூச்சொன்றை விட்டு அவர் கேள்வியின் போக்கிலேயே சம்பாஷணையைத் தொடர்ந்து, ''ஆமாம், கேட்டேன்,'' என்றான்.

''உடை பொருத்தமாகத் தானிருக்கிறது. ஆனால், இதைத் தொடர்ந்து நீர் அணிந்து கொண்டால் வேறொன்றும் பொருத்தமாயிருக்கும்,'' என்றான் பிரும்மா மாராயன்.

''எதுவோ?''

---

2



தலாய்லாமாவின் எதிரில் ஒரு திரைப்படம் ஓடுகிறது. கோடியில் இருப்பவர் வாசன். என்ன படம்?

கவிஞர் கண்ணதாசனுக்கு நெற்றியில் பிளாஸ்திரி— எப்போது?



3

''வேங்கி நாட்டுப் பிணைக் கயிறு.''

''என்னைப் பிடித்துக் கட்டவா?''

''பிடித்துக் கட்டினாலும் உடலுக்குப் பொருத்தமாயிருக்கும். ஆனால், உங்கள் விஷயத்தில் ஜெயசிம்ம சாளுக்கியன் வேறு விதமாக உபயோகிப் பான்.''

''எப்படிப் படைத் தலைவரே?''

''உமது கழுத்துக்கு உபயோகிப்பான். வேங்கி நாட்டில் கொலை பலவிதமாக நடக்கிறது. பிணைக் கயிற்றைக் கழுத்தில் சுற்றி மனிதனை மரத்தில் தொங்கவிடுவது ஒரு முறை. அந்த மாதிரிப் பிணங்கள் சாலையில் ஊசலாடுவது வேங்கி நாட்டில் சர்வ சகஜம்.''

''சாலையில் ஊசலாட விடுவானேன்? கொட்டடி இல்லையா?''

''இருக்கிறது. ஆனால், ஜெயசிம்ம சாளுக்கியன் மக்களை எச்சரிக்க இந்த வைபவங்களைச் சாலையிலேயே நடத்துகிறான். சதியில் யார் இறங்கினாலும் கதி என்னவென் பதை வலியுறுத்தவே இது நடக்கிறது.''

இதைக் கேட்ட கரிகாலன் மனம், வேங்கி நாட்டுக் கொட்டடி யிலிருக்கும் அரிஞ்சயனை நாடியது. ஜெய சிம்மன் அரிஞ்சயனை அச்சுறுத்தத் தூக்குக் கயிற்றைக் காட்டும் பட்சத்தில் அவன் உள்ளதை உளறிவிட்டால் என்ன செய்வது என்ற நினைப்பாலும், அப்படி உளறும் பட்சத்தில் அரசகுமாரியின் கதி யாதாகுமோ என்ற நினைப்பாலும் கவலை மீறிவிட்டவனாய், ''அரிஞ்சயனையும் தூக்கில் மாட்டி விடுவார்களோ?'' என்று பிரும்ம மாராயனைக் கேட்டான்.

''கடைசியில் அந்தச் சிட்சை தான். ஆனால் முதலில் தூக்கில் மாட்ட மாட்டார்கள். அதற்குப் பூர்வாங்கமாகப் பல சிசுருஷைகள் உண்டு.''

''என்னென்ன சிசுருஷை களோ?''

''முதலில் கிட்டி கட்டி அடிப்பார் கள்.''

''உம்.''

''பிறகு மணிக்கயிறுகளை நரம்பு

## பு(கு)த்தகம்

### சங்க இலக்கியத்தில் புறப்பொருள்

(கு.வெ. பாலசுப்பிரமணியன் —பக். 368 —ரூ. 60 —மீரா பதிப்பகம், 6, கணேஷ்நகர் 4ஆம் வீதி, புதுக்கோட்டை 622 001)

வீரம், ஈரம், மானம், கொடை, கல்வி, புகழ், தொழில் ஆகிய பல்வேறு புறப்பொருள்கள் தொல் காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ள தன்மையை ஆராய்கிறது.

### 1. இஸ்லாத்தில் உடலுறவுச் சட்டங்கள்

(ஏழாம் அச்சு —ஜுல்பிகார் —பக். 84 —ரூ. 7 — காஜியார்)

### 2. ஹஸ்ரத் பிலால்(ரலி)

(இரண்டாம் அச்சு —ஏ. அன்வருத்தீன் —பக். 44 —ரூ. 4 —இரண்டு புத்தகங்களும்: காஜியார் புக் டிப்போ, முஸ்லிம் தெரு, எம். சாவடி, தஞ்சாவூர்)

### தமிழில் ஆங்கில இலக்கணம்

(ஆண்ட்ரு ராஜமாணிக்கம் —பக். 272 —ரூ. 12 — ஜகதீசன் பிரதர்ஸ், புதுமண்டபம், மதுரை—625 001)

### 1. ஜோதிடமும் சமையற்கலையும்

(இரண்டாம் அச்சு —கே.என். சரஸ்வதி —பக். 168 ரூ. 8 —கடலங்குடி)

அந்தந்த ராசிக்காரர்களுக்குப் பிடித்தமான இனிப்பு, காரம் எது?

### 2. மகான்களின் வாழ்வும் வாக்கும்

(கே.என். சரஸ்வதி, பா. அர்த்தநாரீசுவரன் —பக். [illegible] —ரூ. 5 —இரண்டு புத்தகங்களும்: கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேசய்யர் தெரு, தி.நகர், சென்னை—600 017)

ரமண மகரிஷி, சத்யசாயி, ஆதிசங்கரர், காஞ்சி பரமாச்சாரியார், கடலங்குடி பெரியவர் ஆகியோரின் வாழ்க்கைச் சரிதைகள், சில அருள்வாக்குகள்.

### காத்திருந்த காற்று

(இரண்டாம் அச்சு —மு. மேத்தா —பக். 88 —ரூ. 7 — நர்மதா பதிப்பகம், 16, ராஜாபாதர் தெரு, தி.நகர், சென்னை 600 017)

இரண்டாம் வனவாசம் என்ற கவிதை நாடகம் உட்படப் பல புதுக் கவிதைகள்.

''இனியாவது
கடந்த காலச் செருப்புக்
களைக்
கழற்றி எறிவோம்
எதிர் காலத்திற்கான
சிறகுகளைச் சேகரிப்போம்.''






''என்னடி இது. அடுப்பங்கரை முழுக்க ஒரே அஞ்சறைப் பெட்டி மயமா இருக்கு?''

''என் கணவரும், மாமியாரும் அஞ்சறைப் பெட்டி சில்லறைகளைத் திருடறாங்க. அவங்க கண்டுபிடிக்க முடியாம இருக்கத்தான் இந்த ஐடியா!''

—எம். பூங்கோதை.

களில் கட்டி அழுத்துவார்கள்.''

''அதற்குப் பிறகு?''

''வேங்கி நாட்டுக் கோதண்டம் இருக்கவே இருக்கிறது.''

''அதென்ன, வேங்கி நாட்டுக் கோதண்டம்?''

''வில்லைப்போல் வளைந்த இருப்புச் சலாகையொன்று பெருந்தூண்களுக்கிடையே கட்டப்பட்டிருக்கும். அதன் இரு முனைகளிலும் சிறைப்பட்டவன் கைகள் உயரத் தூக்கிக் கயிறுகளால் பிணைக்கப்பட்டிருக்கும். அந்நிலையில் மனிதன் மேலேயிருந்து தொங்குவான்.''

''பிறகு?''

''அவன் கால்களிரண்டிலும் பெரிய கயிறுகள் கட்டப்பட்டு மல்லர்களால் இருபுறமும் இழுக்கப்படும்.''

''கால்கள் பிய்ந்து போகுமே.''

''பிய்ந்துதான் போகும். அதுவும் ஒரே அடியாகப் பிய்க்க மாட்டார்கள். சிறிது சிறிதாகக் கயிறு இழுக்கப்படும். ஒவ்வோர் இழுப்பும் கால் நரம்புகளுக்கு மரணவலி கொடுப்பதோடு, இடுப்புப் பக்கத்தில் சுரீல் சுரீலென்று கத்தியைப் பாய்ச்சுவது போன்ற சொல்லவொண்ணா இம்சையையும் அளிக்கும். இந்தக் கோதண்டத்தில் அகப்படும் எவனும், இதுவரை உண்மையைச் சொல்லத் தவறியதில்லை. அரிஞ்சயன் மட்டும் எப்படித் தப்புவான்?''

பிரும்ம மாராயனின் பதில்களைக் கேட்ட கரிகாலன், வேங்கி நாட்டுச் சிறைக் கொடுமைகளைக் கேட்டு வெறுப்பு மேலிட்டவனாய், ''சாளுக்கியர்கள் என்ன ராட்சசர்களா? மனிதர்களா?'' என்று சற்று உரக்கவே சொன்னான். அத்துடன் பிரும்ம மாராயனையும் நோக்கி, ''தங்களுக்கு எப்படி இத்தகவல்கள் தெரியும்? வேங்கி நாட்டுக் கோதண்டம் தெரியுமா? பார்த்திருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

''பார்த்திருக்கிறது மட்டுமா? ஒன்று நானும் செய்து வைத்திருக்கிறேன்!'' என்றான் பிரும்ம மாராயன்.

கரிகாலன் முகத்தில் வியப்பும் வெறுப்பும் கலந்த சாயை பெரிதாகப் படர்ந்தது. 'இவன் அந்தணனா, அல்லது அரக்கனா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். பிரும்ம மாராயன் அடுத்தபடியாகச் சொன்ன வார்த்தைகள் அவன் வெறுப்பை அதிகப்படுத்தின. ''கோதண்டம் இந்த மாளிகையிலேயே இருக்கிறது. அதுவும் பாதாள அறையில் அமைத்திருக்கிறேன். அதில் மாட்டப்படும் மனிதன், என்ன கத்தினாலும் வெளியுலகத்துக்குச் சிறிதும் கேட்காது. இன்றிரவு வேண்டுமானால் நீங்கள் பார்க்கலாம்,'' என்றான் சோழநாட்டுப் படைத் தலைவன்.

''ஏன்? இன்றிரவு அதற்கு வேலை இருக்கிறதா?'' என்று கரிகாலன் வினவினான்.

''இருக்கிறது. இன்று உம்மைக்கூட நண்பன் என்று சொன்னானே சேரநாட்டு ஒற்றன், அவனை அதில் மாட்ட உத்தேசித்திருக்கிறேன்.''



அட்டையில்: ஜெயா சாகர்
வண்ணப்படம்: உத்ரா

''அவனுக்குக் கசையடி கொடுக்கப் போவதாகச் சொன்னீர் களே?''

''முதலில் கசையடிதான். அதற்கு மசியவில்லை என்றால்தான் வேங்கி நாட்டுக் கோதண்டம்,'' என்றான் பிரும்ம மாராயன். அடுத்தபடியாக ஏதோ கேட்க வாயெடுத்த கரிகாலனை, பிரும்ம மாராயன் மேற்கொண்டு பேசவிடாமல், ''கரிகாலரே, நீங்கள் நீராடிவிட்டு உணவருந்தி இளைப்பாறுங்கள். நாம் மீண்டும் இன்றிரவு மீதி விஷயங்களைப் பேசுவோம். இது என் சொந்த அறை. இங்கேயே நீங்கள் தங்கலாம். என்னைக் கவனிக்கும் வேலையாளே உங்களுக்குச் சகல வசதிகளையும் செய்து கொடுப் பான்,'' என்று கூறிவிட்டு, ''டேய் யாரங்கே?'' என்று கூவினான். அடுத்த வினாடி, அறையில் தலைநீட்டிய பணியாளனை நோக்கி, ''இவருக்கு வேண்டிய வசதிகளை செய்து கொடு,'' என்று கூறிவிட்டு, விடுவிடு என்று அறையை விட்டு வெளியேறினான்.

பகல் துரிதமாக ஓடிக்கொண் டிருந்தது. பிரும்ம மாராயனின் அறையில் பெரும் பஞ்சணையில் அமர்ந்திருந்த கரி காலன் மனத்தில் எத்தனை எத்தனையோ கவலை அலைகள் எழுந்து மோதின. இரவில் வேங்கி நாட்டுக் கோதண்டத்தில் சைவத் துறவியான ஜெயவர்மன் உண்மையை உளறிவிட்டால் தன் கதி என்னவென்று கரிகாலன் எண்ணிப் பார்த் தான்.

அரசகுமாரி அளித்த பச்சைக்கல் மோதிரம் தனக்குத் தற்காலிகமாகப் பாது காப்பை அளித்திருந்தாலும், இரவில் கோதண்டத்தில் மாட்டப்படும் சைவத் துறவி கும்பகோணம் காவிரிக்கரையில் தன்னைச் சந்தித்தது முதல் அன்றுவரை நடந்ததையெல்லாம் கோவையாக ஒப்பு வித்தானானால், பிரும்ம மாராயன் மனத்தில் தன்னைப் பற்றி நிச்சயம் சந்தேகம் ஏற்படும் என்பதைக் கரிகாலன் நன்றாக அறிந்து கொண்டான். அப்படிச் சந்தேகம் ஏற்படும் பட்சத்தில் என்ன நேரிடும் என்பது பற்றிய சிந்தனையும் அவன் சித்தத்தில் உதிக்கவே, அவன் நரம்புகளில் லேசாக ஒரு நடுக்கம் ஊடுருவிச் சென்றது. அவன் கண் முன்னே வேங்கி நாட்டுக் கோதண்டம் பயங்கர மாக எழுந்து நின்றது.

(தொடரும்)

வலையப்பட்டி—ஜெயசங்கர். எந்தப் படத்தில் வாசிக்கிறார்கள்?

**4**



பழைய கவர்னர்—பெயர் என்ன?

**5**



படம் பிடிப்பது எந்தச் சிலையின் பின்புறம்?

**6**





சோமுவின் அண்ணன் மகள் வள்ளியின் கலியாண
ஏற்பாடுகள் நடக்கின்றன...
அப்போது அங்கே பெரியசாமி தாத்தா வருகிறார்...













முழு விவரங்களுக்கு, அருகிலுள்ள நியூ இந்தியா ஆபீஸ் அல்லது ஏஜெண்டோடு தொடர்பு கொள்ளுங்கள்.

இன்சூரன்ஸ்—நஷ்ட காலத்தில் நம்பகமான ஆதரவு!



# அச்சமயங்களில் போர்ஹென்ஸ் பல்பராமரிப்பு உங்களைக் கவனிப்பதில் மிகவும் அக்கறை காட்டுகிறது.

அதிகாலையில் நீங்கள் குளியல் அறைக்குச் செல்லும்போது ஈறுகள் சுருக்கத்தையும் பற்காறையைப் பற்றியுமா சிந்திக்கப்போகிறீர்கள். துடிபபான உங்கள் பருவ வயது சிந்தனைகளில் அல்லவா நீங்கள் மூழ்கி விடுகிறீர்கள். வேண்டுமானால் நுரையும் ருசியுமுள்ள டூத் பேஸ்ட்டினால் நீங்கள் அன்றாடம் இருமுறை பல் துலக்கலாம்.

இருந்தும், உடனடியாக இல்லாவிட்டாலும் தாமதமாக பற்சிதைவு ஏற்படும் அபாயம் இருக்கத்தான் செய்கிறது. 'பொக்கிஷம் போன்ற 32 பற்களையும்' என்றும் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டாமா?

வினா: உங்கள் டூதபேஸ்ட் பற்களை மட்டும் சுத்தப்படுத்துகிறதா அல்லது எனாமலையும் கெட்டிப் படுத்துகிறதா? மூச்சிலே புத்துணர்சசியை மட்டும் அளிக்கிறதா அல்லது ஈறுகளையும் உறுதிப்படுத்துகிறதா?

போர்ஹென்ஸ் தன் பல்வகைப் பல் பராமரிபபுகளால் இத்தகைய விஷயங்களைக் கவனிப்பதில் அக்கறை காட்டுகிறது.

உதாரணமாக, போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட் மற்றும் டூத் பவுடர் ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜெண்ட் கொண்டவையாகும். இது பற்களுக்கு உறுதியான அஸ்திவாரம் அளிப்பதற்கு ஈறுகளை வலுப்படுத்துகிறது. ஆகவே அவை நீடித்த ஆயுளைப் பெறுகின்றன. ஈறுகள், பற்களுக்கு பாதுகாப்புப பிடிமானம் அளித்து துர்நாற்றம் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் உருவாக இடமளிப்பதில்லை. அதாவது சுவாசத்தில் துர்நாறறததை தடுக்கிறது.

இதுமட்டுமா, ஸூப்பர் ஃபைட்டர் போர்ஹென்ஸ் ஃப்ளோரைட், அமிலத் தாக்குதலைத் தடுத்திட பல் எனாமலை ஆற்றலுடன் கெட்டிப்படுத்திகிறது.

போர்ஹென்ஸின் டூத்பிரஷ் கூட இரட்டைச் செயல் கொண்டதாகும். பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையூட்டி ஈறுகளையும் தேய்த்துக் கொடுக்கிறது.

நாங்கள் சொல்வதை நீங்கள் அப்படியே ஏற்க வேண்டுமென்பதில்லை. போர்ஹென்ஸை உபயோகித்துப் பார்த்த பின்பே அதன் உண்மை மதிப்பை அறிய முடியும் என்பது உங்களுக்குத் தெரியும்.



**போர்ஹென்ஸ்**
**பராமரிப்பு**
**32 என்றும் பத்திரம்**

போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட்
போர்ஹென்ஸ் ஃப்ளோரைட் டூத்பேஸ்ட்,
போர்ஹென்ஸ் டூத்பவுடர்,
போர்ஹென்ஸ் டூத்பிரஷ்.

## 14. துறவிக்குப் புரிந்தது

மனித சித்தம் எத்தனை எத்தனை பிரமைகளையோ சிருஷ்டிக்கிறது. காலத்தின் வேகத்தைப் பற்றிய நிர்ணயமும் அந்தப் பிரமைகளில் ஒன்று.

காலம் ஒரே சீராகத்தான் ஓடுகிறது. இத்தனை மாத்திரைகள் கொண்டது ஒரு நாழிகை, இத்தனை நாழிகைகள் கொண்டது ஒரு நாள் என்று, கதிரவன் உதித்து மறைந்து மீண்டும் உதிக்கும்வரையில் உள்ள நேரம் ஒரே ஒழுங்காகத்தான் அமைந்திருக்கிறது. யாரும் அறிய இயலாத மாபெரும் சக்தி ஒன்றால், வானவெளியில் சுழன்றும் நிலைத்தும் நிற்கும் எண்ணிக்கையற்ற மண்டலங்களும், கிரகங்களும், ஒளி வீச்சுக்களும்கூட இந்தப் பூமண்டலத்தின் காலகதியை அதிகமாகப் பாதிக்கவில்லை.



ஏதோ சில பருவங்களில் பகல் நீண்டும் இரவு குறைந்தும், இரவு நீண்டும் பகல் குறைந்தும் இருக்குமேயொழிய மாத்திரை, நாழிகை இவற்றின் அளவை எள்ளளவும் பாதிக்க வில்லை. இத்தகைய நாழிகைத் தொகுப்பில் பொதுவாகப் பகலும் இரவும் சரிபாதி நேரத்தையே பெற்றிருக்கின்றன. இந்த உண்மையை வலியுறுத்தித்தான் ஆழ்வார் ஒருவரும், 'பாதியும் உறங்கிப்போகும்' என்று இரவை நாளின் ஒரு பாதியாகக் கணக்கெடுத் திருக்கிறார்.

காலகதியில் பாதி நேரம் பகல், பாதி நேரம் இரவுதான். அவை வேகமாகவும் ஓடுவ தில்லை; அடியோடு ஆமை நடையும் போடுவ தில்லை. ஒரே சீராகத்தான் ஓடுகிறது. ஆனால் மனித சித்தம் இந்த இயற்கை நிலையையும் பல சமயங்களில் மாற்றி விடு கிறது. சிந்தனையில் சுழலும் எண்ணங் களுக்குத் தக்கபடி நேரம் வேகமாக ஓடுவது போலவும், ஆமை வேகத்தில் நகருவது போல வும் பிரமை மனிதனுக்கு உண்டாகிறது. சிந்தித்தால் ஏற்படும் மகிழ்ச்சி, வேதனை, கவலை ஆகிய உணர்ச்சிகளுக்குத் தக்கபடி காலமும் வேகமாகவோ, மெதுவாகவோ நகருவதாக நினைக்கிறோம். வெறும் பிரமைதான்! இருந்தாலும் அந்தப் பிரமையி லிருந்து தப்பியவர் யாருமே இல்லை. கரிகாலன் மட்டும் எப்படித் தப்புவான்?

இரவு நெருங்கி, ஊரடங்கி, சைவத் துறவியை வேங்கி நாட்டுக் கோதண்டத்தில் பிரும்ம மாராயன் மாட்டி உண்மையைக் கக்க வைத்தானானால் ஏற்படக்கூடிய விளைவு களை எண்ணி எண்ணி, வெகுநேரம் ஏதும் புரி யாமல் தவித்துக்கொண்டிருந்த கரி காலனுக்கு, நேரம் அளவுக்கு மீறிய வேகத்துடன் ஓடுவதாகத் தோன்றியது. நேரத்தின் ஓட்டத்துக்குத் தகுந்தபடி சிந்தனை ஓடவில்லையே என்ற நினைப்பால் 'ஒரு வேளை சிந்திக்கும் சக்தியை இழந்து விட்டேனோ' என்று கூட எண்ணினான் கரி காலன். அவன் மனம் உள்ள நிலையைத் திரும்பத் திரும்ப எடை போட்டுப் பார்த்தது. எந்தத் திக்கில் எண்ணம் பாய்ந்தாலும் சுற்றி லும் விடுதலைக்கு வேலியே போடப்பட்டிருப் பதைக் கண்டதால், சற்று நேரம் சிந்தனையி லிருந்து விடுவித்துக் கொள்ளக் கண்களை மூடிப் பஞ்சணையில் படுத்தான். கண் மூட்டம் எண்ணத்துக்கு அதிக ஊட்டத்தைக் கொடுக்கவே பழையபடி, கதாபாத்திரங்கள் அனைவரும் அவன் சிந்தனையில் பவனி வரத் தொடங்கினார்கள்.

மன்னன் மகளின் வருத்தம்





ம.க.வே. 3. நாலு பேர் கூடியிருக்கும்போது கணவன் பாடினாலோ, ஜோக்கடித்தாலோ முகம் சுளிக்காதீர்கள்.

தோய்ந்த மலர்விழிகள் அவனைக் கனிவுடன் நோக்கின. பிரும்ம மாராயனின் ராட்சச விழிகள் ஒருமுறை உருண்டு அவனைப் பயங்கரமாகப் பார்த்தன. சைவத் துறவியின் கள்ளக் கண்கள், 'என்னை இச்சமயத்தில் கைவிட்டு விடாதே' என்று கெஞ்சின. இவற்றுடன் ராஜராஜ நரேந்திரனின் சலனமான நயனங்களும் இருமுறை தோன்றி மறைந்தன. இந்த ஒவ்வொரு பாத்திரத்திலும், தான் பலபடியாகச் சிக்கி நிற்பதை எண்ணிப் பார்த்த கரிகாலன், விதியின் விசித்திர சக்தியை நினைத்துப் பெரிதும் வியந்தான். தர்க்க சாஸ்திரியான அவன் அன்றைய சிக்கலிலிருந்து விடுதலையடையும் மார்க்கங்களைப் பற்றிப் பல முறையாகத் தர்க்கித்துப் பார்த்தும், வழியேதும் அறியாதவனாய்த் தவித்தான். தன்னையும் அரசகுமாரியையும் சுற்றி விதி பெரிய வலையை விரித்துவிட்டதை எண்ணினான் கரிகாலன். 'அரிஞ்சயன் சாளுக்கியர் சிறையில் அகப்பட்டிருப்பதால் அரசகுமாரிக்கு ஆபத்து அவர்கள் சதி வெளியாகிவிடும். பிரும்ம மாராயன் சிறையில் சைவத் துறவி அகப்பட்டிருப்பதால் எனக்கு ஆபத்து. என் குட்டு அம்பலமாகிவிடும்' என்று உள்ள நிலையைச் சுருக்கமாகக் கொண்டுவந்த கரிகாலன், மூடிய கண்களைச் சரேலென விழித்துத் துள்ளியெழுந்து பஞ்சணையில் உட்கார்ந்தான். சிக்கலிலிருந்து விடுதலைப் பாதையொன்றும் மெல்லப் புலப்பட்டது அவனுக்கு. சைவத் துறவிக்கும் அரிஞ்சயனுக்கும் விடுதலை கிடைத்தால்தான் சிக்கலுக்கும் விடுதலை என்பதைத் தீர்மானித்துக்கொண்ட கரிகாலன், இந்த இரண்டு பேர் விடுதலையையும் எப்படிச் சாதிக்கலாம் என்பதைப் பற்றிச் சிந்திக்கலானான்.

நேரம் நடுப்பகலைத் தாண்டிப் பிற்பகலுக்குள் பாய்ந்து மாலையை

---

## புத்தகம்

### சுக்கு—மிளகு—திப்பிலி சுலப வைத்தியம்

(மூன்றாம் அச்சு —திருமலை நடராசன் —பக். 68 —ரூ. 5 —தமிழ்ச்செல்வி நிலையம், 43, சித்திரைக்குளம் வடக்குத் தெரு, மயிலாப்பூர், சென்னை 600 004)

### 1. ஸாமுத்திரிகா லட்சண சாஸ்திரம்

(இரண்டாம் அச்சு —என். ஜனார்த்தனன் —பக். 112 —ரூ. 8 —நர்மதா)

### 2. அசைவ (உணவு) மருத்துவம்

(இரண்டாம் அச்சு —என். ஜனார்த்தனன் —பக். 80 —ரூ. 6 இரண்டு புத்தகங்களும்: —நர்மதா, 16, ராஜாபாதர் தெரு. சென்னை—13)

### தெலுங்கு இலக்கிய வரலாறு

(டி.எஸ். கிரிபிரகாஷ், பா. ஆனந்தகுமார் —பக். 278 —ரூ. 20 —12, கமாண்டிங் ஆபீசர் லேன், 11, மேற்கு மாசித் தெரு, மதுரை 625 001)

நன்னயா காலம், ஸ்ரீநாதர் காலம் என, முன்னோடிகளாக விளங்கிய கவிஞர்களுடைய அடிப்படையிலும்; தெலுங்கு இலக்கியத்தை ஆதரித்த மன்னர்களின் அடிப்படையிலும்; புராண இதிகாசங்கள், காப்பியங்கள், நாடகம், நாவல், சிறுகதை என இலக்கிய வகைகளின் அடிப்படையிலும் தெலுங்கு இலக்கிய வரலாறு முழுமையாக ஆராயப்படுகிறது.

### 1. ஸாராவளி —முதற் பாகம்

(தொகுப்பு: கே.என். சரஸ்வதி —பக். 108 —ரூ. 9 —கடலங்குடி)

சோதிட நூல்.

### 2. ஜாதக துவாதச பாவ பலன்கள்

(இரண்டாம் பாகம் —நான்காம் அச்சு —தொகுப்பு: கே.என். சரஸ்வதி —பக். 216 —ரூ. 30 இரண்டு புத்தகங்களும்: —கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேசய்யர் தெரு, தி.நகர், சென்னை 600 017)

### 1. ஆசாரிய சுவாமிகள் அருள்வாக்கு

(ஐந்தாம் அச்சு —ஏ.எஸ். இராமன் —தமிழாக்கம் —ஏ.ஆர். அரங்கநாதன் —பக். 48 —ரூ. 3 —வானதி)

சுவையான கேள்விகளும், பயனுள்ள பதில்களும்.

### 2. ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் பொன்மொழிகள்

(நான்காம் அச்சு —பக். 120 —ரூ. 7 —இரண்டு புத்தகங்களும்: வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை 600 017)

பல்வேறு உரைகளிலிருந்து தொகுப்பு.



## கல்லை அகற்றுவோம் வாரீர்!

சமீபத்தில் கிருஷ்ணகிரியில் நண்பர் ஒருவரின் திருமணத்திற்காக ஸ்கூட்டரில் சென்றுவிட்டு இரவு திரும்பிக் கொண்டிருந்தேன். எனக்கு முன்னால் சுமார் 30 அடி தூரத்தில் சென்று கொண்டிருந்த மோட்டார் பைக் ஒன்று திடீரென்று தட்டுத் தடுமாறிக் குலுங்கிக் கீழே விழுந்து விடுவது போன்ற நிலைக்குச் சென்று, பின் சாலையோரம் சென்று நின்றது. லாரி முதலிய வாகனங்கள் பிரேக் டவுன் ஆகும்பொழுது அதைச் சுற்றிச் சிறிதும் பெருதுமான கற்களை வைக்கிறார்கள். ரிப்பேர் முடிந்து வாகனங்களை மறுபடி கிளப்பும்போது வைக்கப்பட்டிருக்கும் கற்களை எடுக்கச் சோம்பல் பட்டுக் கொண்டு கவனிக்காமல் விட்டு விடுகிறார்கள். அவை அப்படியே கிடந்து மேற்சொன்னது போன்ற அசம்பாவிதங்கள் நடக்கின்றன. இனிமேலாவது சம்பந்தப்பட்டவர்கள் பொறுப்புடன் நடந்து கொள்வார்களா?

—எஸ். வெங்கட்குமார், ஓசூர்.

### விசிறி எப்படி இருக்க வேண்டும்?

கனமற்ற விசிறியில் தான் காற்று நிறைய வரும். கையும் வலிக்காது. அதோடு விசிறியின் மீது இரண்டு மணிக்கு ஒரு முறை தண்ணீர் தெளிக்க வேண்டும். தண்ணீர் தெளித்தால்தான் குளுமையான காற்றும் வரும். விசிறியும் நீண்ட நாள் உழைக்கும்.

—சேது. சுந்தரம், விருத்தாசலம்.



எங்களுக்காக

எட்டிப் பிடிக்க ஓடிக்கொண்டிருந்தது. அந்த ஓட்டத்துடன் போட்டி போடுவது போல் கரிகாலன் சிந்தனை வெள்ளமும் ஓடிக்கொண்டிருந்தது. அந்த வெள்ளத்துக்கு அணை போடவோ அல்லது ஆக்கம் கொடுக்கவோ சொல்ல முடியாது. கரிகாலன் இரண்டாவது உப்பரிகையிலிருந்த பிரும்ம மாராயனுடைய அறையின் சாளரத்தின் வழியாகத் தலையை வெளியே நீட்டி, கண் கண்ட தூரம் மட்டும் பார்வையை ஓட விட்டான். அந்த அறையிலிருந்து வேங்கி நாட்டின் முக்கியப் பகுதிகள் எல்லாமே தெளிவாகத் தெரிந்தன. ராஜராஜ நரேந்திரன் மாளிகையும் அதைச் சூழ்ந்து நின்ற பிரம்மாண்டமான கோட்டைச் சுவரும் அவன் கண்கள் முன்பாகப் பிரம் மாண்டமாக எழுந்து நின்றன. கோட்டைச் சுவரை ஒரு பக்கத்தில் மட்டுமே அணைத்துச் சென்ற கிருஷ்ணா நதி பூர்ணப் பிரவாகத்திலிருந்தது. கோட்டைக்குச் சற்றுத் தள்ளி ஊருக்கு வடகிழக்கில் பல கட்டிடங்களை உள்ளடக்கிக் கொண்டு நின்றது ஒரு கருங்கல் மதில். அந்த மதிலின் உயரத்திலிருந்தும் அமைப்பிலிருந்தும் வேங்கி நாட்டுச் சிறைக்கூடம் அந்த மதிலுக்குள் தான் இருக்கவேண்டுமென்றும் கரிகாலன் ஊகித்துக்கொண்டான். அவன் ஊகம் சரியென்பதைப் பின்னாலிருந்து எழுந்த ஒரு குரலும் ஊர்ஜிதம் செய்தது.

''என்ன அப்படிச் சிறைக் கூடத்தை உற்றுப் பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்!'' என்று பிரும்ம மாராயன் கேட்டான்.

சிந்தனை எங்கெங்கோ திரிந்து கொண்டிருந்ததால், பிரும்ம மாராயன் உள்ளே வந்ததையோ தன்னை வெகு



ம.க.வே. 4. வெளியில் சென்ற கணவன் திரும்பும்போது நீங்கள் வீட்டில் இருங்கள்.

எந்தப் பழக்கமும் பழகப் பழகச் சுலபமாகிவிடும்—விடிகாலையில் எழுந்திருப்பதைத் தவிர.

—ஈஸ்ட்மேன்

நம்பிக்கை என்பது சூரியனைப் போல. அதை நோக்கி நாம் செல்லச் செல்ல, மனச் சுமை என்ற நிழல் நம் பின்னாலே போய்விடும்.

—சாமுவேல் ஸ்மைல்ஸ்

சோம்பேறித்தனம் என்பது பணம் மாதிரி. உங்களிடம் அது நிறைய இருக்க இருக்க மேலும் மேலும் வேண்டும் என்று தோன்றிக் கொண்டே இருக்கும்.

—வால்ட்டேர்

உலகின் மிகப் பெரிய மூன்று சக்திகள்: சமுத்திரம், மலை, சிரத்தையுடன் வேலை செய்யும் மனிதன். இந்த மூன்றினுக்குள்ளும் மறைந்துள்ள சக்தி அளவிட முடியாதது.

—எட்வர்டு பாக்

நேரம் உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றதையோ கவனிக்காத கரிகாலன், சாளரத்திலிருந்து திரும்பிப் பிரும்ம மாராயனைப் பார்த்தான். தன் கவலையில் ஒரு பகுதியாவது பிரும்ம மாராயனுக்கும் இருக்கும் என்றெண்ணிய கரிகாலன், அவன் முகத்தில் காலையிலிருந்த கவலைக்குறி அடியோடு மாறிவிட்டதையும் எல்லையற்ற ஆனந்தம் குடிகொண்டிருப்பதையும் கண்டு வியப்புடன் அவனை நோக்கினான்.

அவன் பார்வையில் தொக்கி நின்ற வியப்பு, பிரும்ம மாராயன் உதடுகளில் புன்முறுவலையே வரவழைத்தது. ''என்ன அப்படிப் பார்க்கிறீர்களே?'' என்று மீண்டும் கரிகாலனை நோக்கிக் கேட்டான் பிரும்ம மாராயன்.

''எப்படிப் பார்க்கிறேன்?'' என்று வினவினான் கரிகாலன்.

''ஏதோ ஆச்சரியத்தைக் கண்டுவிட்டவர் போல் பார்க்கிறீர்களே?''

''ஆச்சரியமாகத்தான் இருக்கிறது!''

''எது?''

''தங்கள் போக்கு.''

''ஏன், என் போக்குக்கு என்ன?''

இதைக் கேட்ட கரிகாலன், படைத்தலைவன் முகத்தில் மீண்டும் தன் கண்களைப் பதியவிட்டு, ''போக்குக்கு என்னவா! தங்களைப் பார்த்தால் ஏதோ மிதமிஞ்சிய ஆனந்தத்தில் அமிழ்ந்திருப்பதாகத் தெரிகிறதே!''

பிரும்ம மாராயன் மெள்ள நகைத்துத் தன் பெரிய விழிகளால் கரிகாலனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கேட்டான். ''ஏன்? வருத்தப்பட எனக்கு என்ன வந்துவிட்டது இப்பொழுது?''

''என்ன வரவில்லை படைத்தலைவரே? அரிஞ்சயன் சாளுக்கியர் சிறையில் சிக்கி விட்டான். விஷயம் அம்பலமானால் அரசகுமாரிக்கு ஆபத்து; தவிர உமது தலைக்கும் தீம்பு வரும். இவற்றையெல்லாம் யோசிக்கவில்லையா நீங்கள்?'' என்று வினவினான் கரிகாலன்.

''அரசகுமாரியின் தூதுவருக்குக் கவலை அளவுக்கு மிஞ்சித்தான் இருக்கிறது,'' என்று கூறிப் புன்முறுவலும்

செய்த பிரும்ம மாராயன், ''அதற்காகத் தான் அந்தச் சிறைக்கூடத்தை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந் தீரா? கவலையை விடும் கரிகாலரே. இன்னும் இரண்டு நாட்களுக்கு அரிஞ்சயனைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டியதில்லை,'' என்றான்.

''ஏன்?''

''ஜெயசிம்மன் வேங்கிநாட்டுக்கு வர இன்னும் இரண்டு நாட்கள் பிடிக்கும்.''

''அதற்கும் அரிஞ்சயனிடமிருந்து விஷயத்தைக் கக்க வைப்பதற்கும் என்ன சம்பந்தம்?''

''நிரம்பச் சம்பந்தமிருக்கிறது. தன் ஆதிக்கத்தை வேங்கி நாட்டிலிருந்து நீக்க, விமாலதித்தன் மகள் சதி செய் கிறாள் என்பதற்குத் தீர்மானமான அத்தாட்சி இருப்பதாலேயே, அரிஞ்சயனைச் சிறையிலடைத்திருக் கிறான் ஜெயசிம்மன். அரசகுமாரியின் பெயர் இதில் பிணைந்து கிடப்பதால், எதையும் தானே நேரிடையாக அறிய ஜெய சிம்மன் விரும்புகிறான்.''

''அவன் விருப்பம் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''அரிஞ்சயன் சிறைப்பட்டு இப்பொழுது நான்கு நாட்களாகின்றன. ஆனால், அரிஞ்சயனை விசாரிக்க எந்த ஏற் பாடும் நடக்கவில்லை. தன் ஆதிக்கத்தை உடைக்க, அரிஞ்சயனால் தூண்டப்பட்ட இன்னும் மூன்று படைத்தலைவர்களும் முன் வந்திருக்கிறார்களென்பதையும் ஜெய சிம்மன் நன்றாக அறிந்து கொண்டிருக் கிறான். இருப்பினும், அரிஞ்சயனைத் தவிர அவன் யாரையும் சிறை செய்ய வில்லை. அரிஞ்சயன் சிறைப்பட்டு நாட்கள் நான்கு ஆகியும் அவனைச் சித்திர வதை செய்து உள்ளதைக் கக்க வைக்க எந்த முயற்சியும் அடியோடு நடக்க வில்லை. ஏன் தெரியுமா?'' என்று பிரும்ம மாராயன் கேட்டான்.

''ஏன்?'' என்று சந்தேகம் ததும்பும் கண்களை உயர்த்தினான் கரி காலனும்.

''தான் வரும்வரை அரிஞ்சயனை ஏதும் செய்ய வேண்டாமென்று ஜெய சிம்மன் உத்தரவு அனுப்பியிருக்கவேண்

## அட, கதையின் படியே நடக்கிறதே!



நான் 2.4.87 தேதியிட்ட குமுதத்தைத் தாமதமாக வாங்கிப் படிக்க நேர்ந்தது. குமுதத்துடன் இன்னும் சில வாரப் பத்திரிகையும் சேர்த்து கொல்லத் தில் வாங்கிக் கொண்டு கொல்லத்தி லிருந்து சென்னை செல்லும் கொல்லம் மெயிலில் மதுரைக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு புறப்பட்டேன். வேடிக்கை பார்த்துக் கொண்டே குமுதத்தையும் படித்துக் கொண்டே வந்தேன். ரயில் தென்மலையருகே நெருங்கிக் கொண்டிருந் தது. அப்போது 'இருட்டே சாட்சி' என்ற சிறுகதையைப் படித்துக் கொண்டிருந் தேன். அந்தக் கதையில் வந்த பாதாள ரயில் பாதை என்ற வாக்கியம் படிக்கும்போது அந்தப் பாதாள ரயில் பாதையே வந்தது. எனக்கு ஒரே ஆச்சரியம். அந்தக் கதைக்கும் நான் செல்லும் ரயிலுக்கும் என்ன பொருத்தம்! அருகிலிருந்த பயண நண்பர்களிடம் சொல்லிச் சிரித்து மகிழ்ந்து கொண்டோம். இது ஒரு மறக்க முடியாத சம்பவம்.

—அ. காதர் ஷா, மதுரை.

### தயார்! தனயார்!

ஏப்ரல் மாதத்திற்கான ரேஷனில் பாமாலின் வாங்கிக் கொண்டு வந்தேன். தற்செயலாக அது பாக் செய்யப் பட்ட தேதியைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தேன். அதன் மேல் '*Pkg Date: May 87*' என்று இருந்தது!

—வி. பத்மாவதி, ஹைதராபாத்.

## எங்களுக்காக



இருவருக்கும்
பொதுவாக:

1. இருவருக்குமிடையே பிரசினை ஏற்பட்டால் அதை நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று ஒத்திப் போடாதீர்கள்: தீர்ப்பதற்கு முயலுங்கள்.

டும். இங்குள்ள் சிறைச்சாலைத் தலைவன் அவசரப்பட்டு விட்டால், சதி மர்மம் அடியோடு மறைந்துவிடுமென்று ஜெயசிம்மன் அஞ்சுகிறான்.''

''அந்த அச்சத்திற்கு அத்தாட்சி?''

''ஒன்று, அரிஞ்சயன் இன்னும் நிம்மதியாகச் சிறையில் படுத்துறங்குவது; இரண்டாவது, இந்தச் சதியில் சம்பந்தப்பட்டிருக்கும் மற்ற மூன்று படைத் தலைவர்களும் இன்னும் சுதந்திரமாக உலாவுவது.''

''அந்தப் படைத் தலைவர்கள் யார் என்று ஜெயசிம்மனுக்குத் தெரியுமா?''

''நன்றாகத் தெரியும்!''

''தெரிந்தும் ஏன் அவர்களை இத்தனை நாள் விட்டு வைத்திருக்கிறான்?''

''சதியில் கிளைகளை வெட்டித் தள்ள விரும்பவில்லை ஜெயசிம்மன். ஆணிவேரைக் கிளறி எறிய முயலுகிறான். அரசகுமாரிதான் அந்த ஆணிவேர். அவர் இந்தச் சதியிலீடுபட்டிருப்பதற்கான அத்தாட்சியை அரிஞ்சயன் அளிக்க முடியும். ஆகவே, அவனைத்தானே நேரில் விசாரிக்க முடிவு செய்திருக்கிறான். எப்படியும் ஜெயசிம்மன் இங்கு வந்து சேர இரண்டு நாட்கள் இருக்கின்றன,'' எனப் பிரும்ம மாராயன் விளக்கிவிட்டு, ''இரண்டு நாட்களுக்கிடையில் பல காரியங்கள் நடக்கலாம். கவலைப்படாதீர்கள்,'' என்று கரிகாலனுக்குத் தைரியமும் சொல்லிவிட்டுத் தன் அலுவல்களைக் கவனிக்கச் சென்றான்.

மாலை தோன்றி மணி விளக்குகள் அந்த மாளிகை முழுவதிலும் எரியத் தொடங்கின. அரிஞ்சயனைப் பற்றிப் பிரும்ம மாராயன் கூறிய தகவல்களால், அரசகுமாரியைப் பற்றி ஓரளவு நிம்மதியடைந்த மனத்துடன் மாளிகையைச் சுற்றிலும் உலாவிய கரிகாலன், தோட்டத்தின் ஒரு

கோடியிலிருந்த சிறைக்கூடத்தை அடைந்து அதையும் சுற்றிப் பார்க்கலானான். சிறைக்குள் புகும் தாழ்வாரம் மிகக் குறுகலாகவும் நீண்டும் வெளிச்சமில்லாமலும் கிடந்தது. சிறையைக் காண வந்த கரிகாலனைச் சிறைக்காவலன் தலை தாழ்த்தி வணங்கி உள்ளே செல்ல அனுமதித்தான். அவன் தன்னிடம் நடந்து கொண்ட மாதிரியிலிருந்து, தன்னைப் பற்றிய விவரம் மாளிகை பூராவும் பரவியிருக்கிறதென்று, தனக்கு எத்தகைய தடங்கலும் விதிக்கலாகாதென்று பிரும்ம மாராயன் உத்தரவிட்டிருக்கவேண்டுமென்றும் கரிகாலன் நிச்சயித்துக்கொண்டதாலும், சோழ நாட்டுப் படைத்தலைவன் தன்னிடம் பரிபூர்ண நம்பிக்கை கொண்டதற்குக் காரணம் எதுவாயிருக்குமென்று யோசித்துப் பார்த்தான். அத்தனை சலுகைக்கு அரசகுமாரியின் மோதிரம் மட்டும் காரணமாயிருக்க முடியாதென்றும், வேறு ஏதோ அபிப்பிராயம் பிரும்ம மாராயன் மனத்தில் விழுந்திருக்கவேண்டுமென்றும் கரிகாலன் தீர்மானித்துக் கொண்டான். தன்னை அன்று காலையில் பிரும்ம மாராயன் கூர்ந்து நோக்கி ஏதோ அரசியல் நிகழ்ச்சிகளைப் பற்றிப் பிரஸ்தாபித்தது அவன் நினைவுக்கு வந்ததன்றி, பிறகு அந்த நிகழ்ச்சிகளைப்பற்றிப் பிரும்ம மாராயன் மழுப்பிவிட்டதும் அவன் சிந்தையில் எழுந்தது. ''என் பிறப்பைப் பற்றிய ரகசியமொன்று படைத்தலைவனுக்குத் தெரியும்; அதனால்தான் இத்தனை சலுகைகளை எனக்கு அளிக்கிறான்' என்று சொல்லிக் கொண்டே, சிறைக்கூடத்துக்குள் சென்ற கரிகாலன் சைவத் துறவி இருந்த அறையை நோக்கினான். சிறைக்குள் அதுவரை முடங்கிக் கிடந்த சைவத்துறவியும் அவனை நோக்கி ஓடிவந்தான். அவனைப் பேசாதிருக்கும்படி எச்சரித்த கரிகாலன் கண்கள், அறைக்குள்ளிருந்த ஒரு பொருளின் மீது அரை வினாடி நிலைத்தன. அடுத்த கணம் கரிகாலன் உடையிலிருந்த சிறுவாள் கம்பிகளின் மூலமாக, சைவத்துறவியின் கைகளுக்கு மாறி, அவன் உடைக்குள் மறைந்தது. பரஸ்பரம் வெறுப்புள்ள அந்த இருவர் கண்களும் ஒருமுறை சந்தித்தன. இருவரும் ஒருவர் எண்ணத்தை மற்றொருவர் நன்றாகப் புரிந்து கொண்டனர். கரிகாலன் கண்கள் கடைசியாக ஒரு திக்கில் பாய்ந்ததைக் கவனித்த சைவத்துறவியும், ''சரி,'' என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஒரு முறை அசைத்தான்.

(தொடரும்)



## சரும பாதுகாப்பில் சிறப்பான பலனளிக்க உங்களுக்கு தேவை மருந்துப் பொருள் கலந்த சோப்பு.

சாதாரண சரும நோய்கள் மற்றும் உடல் துர்நாற்றத்திலிருந்து பாதுகாப்பளிக்க உங்களுக்கு ஒரு மருந்துப்பொருள் கலந்த சோப்பு அன்றாடம் தேவை. நீகோவின் பாக்டீரியா எதிர்ப்பு சக்தி, சரும நோய்கள் மற்றும் உடல் துர்நாற்றத்தை உண்டாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது. தவறாமல் நீகோ சோப்பினால் குளிப்பது சாதாரண சரும நோய்கள் மற்றும் உடல் துர்நாற்றத்திலிருந்து உங்களுக்கு பாதுகாப்பளிக்கிறது. பொழுதெல்லாம் புத்துணர்ச்சியும் தன்நம்பிக்கையும் தருவது நீகோ.

**NEKO®**

மருந்துப்பொருள் கலந்த
சரும பாதுகாப்பு சோப்பு.




**புத்துணர்ச்சியூட்டும் நீகோ நீராடலுடன் உங்கள் நாட்கள் தொடங்கட்டும்.**

**PARKE-DAVIS**





சாண்டில்யன்

# மன்னன் மகள்

14.5.87

## 15. எங்கே அந்த வாள்?

சிறைக் கூடத்தின் குறுகிய தாழ்வாரச் சுவரில் பதிக்கப் பெற்றிருந்த சிறு விளக்கு அந்த இரவின் மையிருளை அடியோடு கிழிக்கச் சக்தியற்று மங்கலான வெளிச்சத்தையே வீசிக்கொண்டிருந்ததால், பக்கத்திலிருந்த அறைகளில் இருளே

பெரிதும் படர்ந்திருந்தது. இருள் படராத அறைப் பகுதிகளிலும் குறுக்கே கம்பிகள் வெளிச்சத்தைத் தடுத்து நின்றதன் காரண மாக, கம்பிகளின் நிழல்கள் பட்டை பட்டையாக அறைக்குள் பாய்ந்து, சிறைக்குள் இன்னொரு சிறையிருப்பது போன்ற பிரமையை உண்டாக்கியிருந்தன. இத்தனையும் போதாதென்று, கிருஷ்ணா நதிப் பக்கத்திலிருந்து வந்து கொண்டிருந்த காற்று வேறு விளக்கின் சுடரை அலைக்கழித்ததால் சிறைக் கம்பிகளின் நிழல்கள் அப்படியும் இப்படியும் அலேந்தும், எழுந்தும், நின்றும் வெவ்வேறு கோணங்களில் பாய்ந்தும், இந்திர ஜால வித்தை செய்துகொண்டிருந்தன. இப்படி அலைந்து அலைந்து நின்ற கம்பிகளின் நிழற்பட்டைகள் தன்மீது விழ உடலில் வரியிட்ட பெரும் புலிபோல் பளிச்சிட்ட திருட்டுக் கண்களுடன் நின்ற சைவத் துறவி, அத்தனை மங்கலான வெளிச் சத்திலும் நிழலாட்டத்திலும் கரிகாலன் காட்டிய குறிப்பை வினாடி நேரத்தில் புரிந்து கொண்டான். கரிகாலன் கண்கள் பாய்ந்த திக்கையும் அதைத் தொடர்ந்து அவன் தன் கைகளில் சிறுவாளைத் திணித்ததையும் எண்ணிப் பார்த்த சைவத் துறவிக்கு, தான் பெரிய திருடனா அல்லது கரிகாலன் பெரிய திருடனா என்பதில் பெரிதும் சந்தேகமுண்டாயிற்று. சுவரில் நல்ல வலுவான முறுக்குக் கயிறு ஒன்று சுருணையாக ஆணியில் மாட்டப்பட்டி ருந்ததைக் கவனித்த' சைவத்துறவி, அடுத்தபடியாகக் கரிகாலன் கண்கள் சிறைச்சுவரின் மேல்பாகத்திலிருந்த சிறு சாளரத்தின் மீது பாய்வதையும் பார்த்து, அவன் மனத்திலோடிய எண்ணங்களைத் திண்ணமாகப் புரிந்து கொண்டான்.

சிறையில் படுப்பதற்காகப் போடப்பட்டிருந்த மரப் பலகையைச் சாளரத்துக்காக இழுத்துப் போட்டுக் கொண்டு ஏறி நின்றால் சாளரம் கைக்குத் திட்டமாக எட்டுமென்பதையும், தேவை யான அளவுக்கு முறுக்குக் கயிற்றை அறுத்து இரண்டு கம்பிகளில் கட்டி இருபுற மும் பலமாக இழுத்தால் கம்பி வளைந்து ஆள் நுழையும் அளவுக்கு வழியும் ஏற்படு மென்பதையும் உணர்ந்துகொள்ளப் பல நாள் திருடனான சைவத் துறவிக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. கயிற்றை அவசிய மான அளவுக்குத் துண்டிக்கவும். அதற்குப் பின் தப்பியோடும்போது தற்காப்புக் காகவும் தன்னிடம் சிறு வாளும் கொடுக்கப்பட்டதென்பதையும் சைவத் துறவி சந்தேகமறப் புரிந்து கொண்டான்.

இத்தனையும் புரிந்துகொண்ட சைவத் துறவிக்குக் கரிகாலன் தன்னைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் என்ன என்பது மட்டும் சற்றும் விளங்காததால், சந்தேகமான பார்வையொன்றைக் கரி காலன் மீது வீசினான். கரிகாலன் இதழ் களில் புன்முறுவலொன்று லேசாக ஒரு வினாடி அரும்பி நின்றது. பிறகு எச்சரிக்கைக்கு அறிகுறியாக அவன் இதழ் கள் மீண்டும் மூடியதன்றிக் கண்களி லிருந்து பார்வையும் 'காரணம் கேட் காதே. தப்பிவிடு' என்று எச்சரித்தது. ஆனால் சைவத் துறவி அந்த எச்சரிக்கையைப் பொருட்படுத்தாமல், மெல்லக் கேட்டான். ''நாம் மீண்டும் எங்கு சந்திப்பது?'' என்று.

கரிகாலன் கண்கள் ஒருமுறை தாழ்வாரத்தின் கோடிப்பக்கமாகப் பாய்ந் தன. பிறகு மிக மெதுவான குரலில், ''வேங்கி நாட்டில் அரைக் கணமும் தாமதிக்காதே. ஓடிவிடு. சந்தர்ப்பம் வரும் போது சந்திப்போம்,'' என்று கரிகாலன் கூறினான்.

சைவத் துறவி ஏதோ யோசிக்க ஆரம்பித்தான். அந்த யோசனையைக் கண்ட கரிகாலன் கண்களில் மிதமிஞ்சிய இகழ்ச்சி உதயமானதன்றி, வெறுப்புக் கலந்த உஷ்ணமான சொற்களும் அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தன. ''இரவில் உனக்குக் கோதண்டம் சித்தமாயிருக் கிறது. வேண்டுமானால் இங்கேயே இரு. துறவிகள் கோரும் இறைவனடி இன்றிரவே உனக்குக் கிட்டிவிடும்,'' என்று சொல்லிவிட்டு இரண்டடி எடுத்து வைத்த கரிகாலனை, ''உஷ்!'' என்று சப்தம் செய்து தடுத்த சைவத் துறவி, ''செங்கதிர் மாலையை என்னிடம் திருப்பிக் கொடுக்க வில்லையே!'' என்று கேட்டான்.

''அதைப்பற்றிக் கவலைப் படாதே. என்னிடம் பத்திரமாயிருக் கிறது,'' என்றான் கரிகாலன்.

''கரிகாலா! அதை மாத்திரம் கொடுத்துவிடு. பிறகு நான் உன் வாழ்க் கையில் தலையிட மாட்டேன். அது சேர மான் குடும்பத்துக்குச் சொந்தம். சேர மானிடம் சேர்த்து விடுகிறேன். அதற் காகவே இத்தனை அவதிகளுக்கு உள்ளாகி யிருக்கிறேன். தயவு செய்,'' என்று சைவத் துறவி கெஞ்சினான்.

''ஜெயவர்மா! அந்த மாலையை மட்டும் மறந்துவிடு. இப்பொழுது செங்கதிர் மாலையுடன் சரித்திரம் பிணைந்து கிடக்கிறது. சோழப்பேரரசன் யுத்தத்தில் வெற்றிவாகை சூடிப் பெற்ற பரிசு இது. அதைப்பற்றிச் சோழ நாட்டில் ராஜேந்திர சோழ தேவர் எவ்வளவோ கல் வெட்டுக்களையும் அமைத்திருக்கிறார். அது தேவையானாலும், அதைப் பெறச் சேரமானுக்கு ஒரே ஒரு வழிதானுண்டு,'' என்று கரிகாலன் மெள்ளச் சொன்னான்.

''என்ன வழி?'' என்று துறவி ஆத்திரத்துடன் கேட்டான்.

''சேரமான், ராஜேந்திர சோழ தேவரிடம் அதைத் தரும்படி நேரில் வந்து கேட்க வேண்டும். ராஜேந்திர சோழ தேவர் வள்ளல் என்பதை உலகம் அறியும். எதிரி யாசித்தாலும் இல்லையென்று சொல்லமாட்டார்.'' என்று விளக்கினான் கரிகாலன்.

''யாசகம் செய்வது மன்னர் களுக்குப் பெருமை தரக்கூடியதா?'' என்று துறவி விசாரித்தான் கோபத்துடன்.

கரிகாலன் இதழ்களில் மீண்டும் புன்னகை அரும்பியது. ''இல்லை; அது பெருமை இல்லை. திருடர்களை விட்டுத் திருடச் சொல்வதுதான் பெருமை!'' என்று இகழ்ச்சி ததும்பிய குரலில் மெது வாகக் கூறிவிட்டு மேற்கொண்டு அங்கு பேசிக்கொண்டு நிற்பது ஆபத்தென்ற காரணத்தால் சைவத் துறவியைக் கண் களால் எச்சரித்துவிட்டு மெள்ள வெளியே நடந்தான். போகும்போது ஏதோ யோசனை வரவே, அப்புறமும் இப்புறமும் பார்த்துவிட்டு சிறைத் தாழ்வாரத்தி லிருந்த விளக்கை வாயால் ஊதி அணைத்துவிட்டு வெளியே வந்தான்.

வெளியே வந்த கரிகாலன் முகத்தில் மீண்டும் கவலையே பெரிதும் பாய்ந்து நின்றது. சைவத் துறவி அடை பட்டிருந்த அறை, சிறைத் தாழ்வாரத்தின் கோடியிலிருந்தபடியாலும் தாங்க ளிருவரும் மிக மெதுவாகவே சம்பாஷித்த படியாலும் தங்கள் சம்பாஷணை எதுவும் காவலாளியின் காதில் விழக் காரண மில்லை என்பதைக் கரிகாலன் நன்றாக அறிந்திருந்ததாலும், தன் நடவடிக்கை களை அவன் ஓரளவு கவனித்திருந்தால் பின்னால் ஆபத்தாக முடியுமே என்ற நினைப்பால் அந்தக் காவலாளியுடன் பேச்சுக் கொடுக்கத் தொடங்கி, ''உன் பெயர் என்னப்பா?'' என்று விசாரித்தான்.

---

## ஈரம் இல்லையே...

சில நாட்களுக்கு முன் கொள்ளிடக் கரையிலிருக்கும் ஸ்ரீமத் ஆண்டவன் ஆசிரமத்திற்குச் சென்று அவரைச் சேவித்துவிட்டு மத்தியானம் திரும்பினோம். நாங்கள் பத்து பேர் பாதை யில் தாங்க முடியாத வெய்யிலில் 'உஸ்.... உஸ்....' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு நடந்து கொண்டிருந்தோம். மூன்று வயதான பாட்டிகளும் இரண்டு குழந்தைக்காரர்களும் இருந்தனர்.

அப்போது சுவாமிகளைச் சேவித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த பக்தர் ஒருவர் தனது மனைவியுடன் காரில் எங்களைக் கடந்து சென்றார். நினைத் திருந்தால் அவர் காரை நிறுத்தி அந்த வயதான பாட்டிகளையும் குழந்தைகளை யும் காரில் ஏற்றிக் கொண்டு போய் பஸ் ஸ்டாண்டில் விட்டிருக்கலாம். பரோபகாரம் என்பது அவருடைய அகராதியில் இல்லை போலும்.

—எம்.கே. நாராயணன், ஸ்ரீரங்கம்.

மக்களுக்குப் பயன்படும் வகையில் சுற்றுலாப் பொருட்காட்சி அரங்கை அமைத்து, பார்வையாளர்கள் தங்களுடைய கருத்துக்கள் மற்றும் ஆலோசனையைத் தெரிவிப்பதற்காக வைத்திருக்கும் புத்தகத்தில் சிலர் வக்கிரத் தனமாகக் கிறுக்கி வைத்திருப்பதைக் கண்டு வருந்தினேன்.

—மாதேஸ்வரன், அத்தனூர்.

## சில குப்பை மனசுகள்

## எல்லாம் கோஷ்டி மயம்

சமீபத்தில் கும்பகோணம் வருவதற்காகத் தஞ்சாவூர் பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸினுள் உட்கார்ந் திருந்தேன். ''ஃபாரின் சட்டைத் துணி இருக்கு. வாங்கிக்கிறீங்களா சார்?'' என்று ஒவ்வொருவரிடமும் கேட்டார் ஒருவர் ஒருவரும் ஆர்வம் காட்டவில்லை. என் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் அந்த ஆளைக் கூப்பிட்டார். ''துணியைக் காட்டுப்பா, பார்க்கிறேன். நான் டெய்லரா இருக்கேன். இப்போதெல்லாம் ஃபாரின் துணின்னு கண்டதையும் கொடுத்து ஏமாத்திடறாங்க,'' என்று சொல்லிக் கொண்டே துணிகளைப் பட்பட்டென்று தட்டிப் பார்த்தார். ''பரவாயில்லப்பா! துணி நல்லாத்தான் இருக்கு. ஒரிஜினல். ஃபாரின் துணிதான். நாற்பது ரூபாய்க்கு ரொம்ப மலிவுதான். கையிலே பணமில்லைப்பா,'' என்று சொல்லிக் கொண்டே மற்றப் பயணிகளைப் பார்த்தார். பின்பு தெரிந்தது: அவர் ''அவர் டெய்லரும் இல்லை ஒண்ணுமில்லை. இருவரும் ஒரே கோஷ்டிதான்.''

—எஸ். ஜெயந்தன், கும்பகோணம்.

## யார் வழி காட்டியது?

'ரூபாய் நோட்டுக்களின் வெள்ளைப் பகுதியில் எதையும் எழுதக் கூடாது. மீறி எழுதினால் நோட்டு செல்லாது' என்று ரிசர்வ் வங்கி எச்சரித்துள்ளது. ரூபாய் நோட்டின் வெள்ளைப் பகுதியில் எழுது வதற்கு வழிகாட்டியதே வங்கிகள்தான். ரூபாய் நோட்டுக் கற்றைகளின் மேற்பகுதி யில் உள்ள நோட்டில் தொகை இவ்வளவு என்று வங்கிகள் எழுதத் தொடங்கிய பிறகுதான் மக்களும் எழுத ஆரம்பித்தார் கள்.

—இரா. துரையப்பன், விருத்தாசலம்.

வீரன் தலை தாழ்த்தி வணங்கி, ''வீரன், எசமான்,'' என்று மிக மரியாதை யாகப் பதில் சொன்னான்.

''வீரா! நீ தமிழ் நாட்டைச் சேர்ந்தவன் போலிருக்கிறதே,'' என்று விசாரித்தான் கரிகாலன்.

''ஆம், எசமான்! அதுவும் சோழநாடு. வேறு நாட்டவர் எவரையும் படைத் தலைவர் தன்னிடம் சேர்க்க மாட்டார்.''

''அப்படியா வீரா? மிகவும் சந்தோஷம். நானும் சோழநாடுதான்.''

''அது முன்பே தெரியும் எசமான்!''

இதைக் கேட்ட கரிகாலன் சற்று ஆச்சரியத்துடனேயே வீரனைப் பார்த் தான். ''முன்பே தெரியுமா? எப்படித் தெரியும் வீரா?'' என்று வினவினான்.

''நீங்கள் சோழ நாட்டவராய் இல்லாவிட்டால், படைத்தலைவர், இந்த மாளிகைக்குள் உங்களை அனுமதித்திருக்க மாட்டார். தவிர முகத்தைப் பார்த்தாலே தெரியுமே எசமான்,'' என்றான் வீரன்.

''முகத்தைப் பார்த்தாலே தெரியுமா?''

''ஆமாம் எசமான். சோழ நாட்டவருக்கு இருக்கும் களை வேறு யாருக்கு இருக்கிறது? அந்த நாட்டார் கண் களில் புத்திசாலித்தனமும் விஷமமும் சொட்டுமே எசமான்!'' என்று சொன்ன வீரன் முகத்தில் பெருமைக் குறி பெரிதாகப் படர்ந்தது.

மண்ணாலும் தண்ணீராலும் ஏற் படும் பிணைப்பு எத்தன்மையதென்பதை அறிந்த கரிகாலன், பிரகிருதி விசித் திரத்தை எண்ணி வியந்தான். ஒரே நாட்டில் பிறந்த இருவர் வேறு நாட்டில் சந்திக்கும்போது எத்தனை பந்தம் ஏற்பட்டு விடுகிறது என்பதைச் சிந்தித்துப் பார்த்தான் கரிகாலன். சோழநாட்டில் பிறந்தவன், காவிரி நீரைக் குடித்தவன், என்பனவற்றால் ஏற்படும் உணர்ச்சியும், உள்ளக் கிளர்ச்சியும் எத்தனை அற்புத மானது, எத்தகைய நெருங்கிய உறவைச் சிருஷ்டித்து விடுகிறது என்பதை நினைத்துப் பார்த்த கரிகாலன் உள்ளத் திலும், அந்த நாட்டுப் பற்றுப் பெருக் கெடுக்கவே அவன் விழிகள் வீரன் மீது மிகுந்த அன்புடன் லயித்தன. அவன் பார்வையை அடுத்து வந்த சொற்களும் தேனில் தோய்ந்தே உதிர்ந்தன.

‘‘வீரா! உனக்கு மனைவி குழந்தைகள் இருக்கிறார்களா?’’

‘‘இருக்கிறார்கள் எசமான்.’’

‘‘எங்கு?’’

‘‘சோழ நாட்டில்தான்.’’

‘‘அவர்களை விட்டுத் தொலை தூரம் வந்துவிட்டாயே?’’

‘‘தாய்நாட்டுக் கடமைக்காக வேலையும் வாளையும் ஏந்தும் வீரன், வீட்டை நினைத்தால் முடியுமா?’’

அவன் நாட்டுப்பற்றையும் அவன் நெஞ்சில் ஆழப்பதிந்துள்ள கடமை உணர்ச்சியையும் கவனித்த கரிகாலன், ராஜராஜன் காலத்திலிருந்து சோழ சாம்ராஜ்யம் விரிவடைந்த காரணத்தை எளிதில் புரிந்துகொண்டான். நாட்டுக்காக எதையும் தியாகம் செய்ய வீரன் போன்ற பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் எழுந்ததே, சோழப்பேரரசின் பெருவெற்றிக்கும் விரிவுக்கும் காரணம் என்பதை அறிந்துகொண்ட கரிகாலன், அதனால் ஓரளவு பெருமையும் அடைந்தான். நாட்டுப்பற்றிலும் மக்களின் வீர உணர்ச்சியிலும் மனத்தை ஒரு வினாடி லயிக்கவிட்ட அவன் அகக்கண் முன்பாகச் சோழப் பேரரசு பெரிதாக எழுந்து நின்று, வட எல்லைகளில் பாய்ந்த கிருஷ்ணா நதியின் அலைகளும், தெற்கு எல்லையில் அடித்த சமுத்திர அலைகளும் கூட, அவன் சித்தத்தில் எழுந்து சிறிது நேரம் மோதின. அந்தச் சித்த மயக்கத்தில் வீரனுடன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் ஓர் அடி எடுத்து வைத்த கரிகாலன், எதையோ நினைத்துக்கொண்டு மீண்டும் திரும்பினான்.

அவன் முகத்தில் தொக்கி நின்ற கேள்வியைப் புரிந்துகொள்ள முடியாத வீரன், ‘‘என்ன எசமான்?’’ என்று விசாரித்தான்.

‘‘வீரா! அந்தக் கோடி அறையில் ஒரு துறவியை அடைத்திருக்கிறீர்களே, அவன் யார்?’’ என்று ஏதுமறியாததுபோல் கேட்டான் கரிகாலன்.

‘‘யாரோ தெரியாது எசமான். ஆனால் அவனை மிக ஜாக்கிரதையாகப் பாதுகாக்கும்படி உத்தரவு. உங்களைத் தவிர வேறு யாராவது வந்திருந்தால் உள்ளே அனுமதித்திருக்க மாட்டேன்.’’

‘‘நான் மட்டும் என்ன விதிவிலக்கு?’’



## அதை விட சிக்கனம்

**23.4.87** இதழில் ‘எங்களுக்காக’ பகுதியில் ஒரு வாசகர் ரூபாய் இருநூற்றைம்பது அனுப்ப ஐந்து மணியார்டர் வாங்கி அதனால் இரண்டு ரூபாய் மிச்சப்படுத்தியதாகப் பெருமையடித்துக் கொண்டார்.

நான் அதேபோல ரூபாய் இருநூற்றைம்பது ஊருக்கு அனுப்ப வேண்டியிருந்தது. எங்கள் ஊருக்குப் பக்கத்தில் ஒரு வங்கி இருக்கிறது. நான் பணம் அனுப்பவேண்டிய ஊருக்குப் பக்கத்து ஊரிலும் அதே வங்கி இருக்கிறது. நான் பணம் அனுப்ப வேண்டிய நபரின் பெயருக்கு ‘டிமாண்ட் டிராஃப்ட்’ எடுத்தேன். அதற்கான வங்கி செலவு ரூ. 2. எழுபது பைசாவுக்குத் தபால் கவர் வாங்கி அதில் டி.டி.யை அனுப்பி விட்டேன். இதுவரை இரண்டு முறை அப்படி அனுப்பிவிட்டேன். தடையின்றிப் பணமும் கிடைத்து வருகிறது என்று தெரிந்து கொண்டேன். ரூபாய் இருநூற்றைம்பது அனுப்ப எனக்கு ரூ. 2.70தான் செலவாயிற்று.

—எஸ். நவநீதக்கண்ணன், புட்பவனம்.

## பூ ஃபார் பூமாதேவி

மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த கிராமப் பெண்கள் வயலில் இறங்கி நாற்று நடும்போது கட்டாயம் தலையில் பூ வைத்துக் கொள்ள வேண்டும். அதே போன்று ஆடவர்கள் ஏர் உழும்போதும், விதைக்கும் போதும் சிறிய மஞ்சளை இடுப்புத் துணியில் முடிந்து வைத்துக் கொள்ள வேண்டும். மங்களச் சின்னங்களோடு வயலில் இறங்கினால் பூமாதேவி மனம் குளிர்ந்து அமோக விளைச்சலைத் தருவாள் என்ற நம்பிக்கை அங்கு இருந்து வருகிறது.

—சிவ. வசந்த், புதுக்கோட்டை—4.

புதுமுகம் கௌசல்யா, நதியாவுடன் நடித்து வருகிறார். தஞ்சாவூரைச் சேர்ந்த இவரைக் கோவைத் தம்பி 'மங்கை ஒரு கங்கை'யில் அறிமுகப்படுத்துகிறார். (இடப் பஞ்சம்.)

—ராம்சந்த்

---

''விலக்கு என்றுதான் உத்தரவு.''

''யார் உத்தரவு?''

''படைத்தலைவர் உத்தரவு தான். இங்குள்ள சிறைக்கூடத் தலைவர் பிற்பகலில் வந்து என்னை எச்சரித்துச் சென்றார், பிரும்ம மாராயரை நடத்துவது போல் உங்களையும் நடத்த வேண்டும் என்று.''

''அப்படி என்ன நான் உயர்வு?''

''தெரியாது எசமான். ஆனால் படைத்தலைவர் அந்த மாதிரி உத்தர விடுவது இதுதான் முதல் தடவை.''

''ஓகோ!'' என்று கரிகாலன் உதடுகள் வார்த்தைகளை உதிர்த்தனவே யொழிய, சிந்தனை பிரும்ம மாராயனைத் தேடிச் சென்றது. தான் வந்தது முதல் தன்னைப் பிரும்ம மாராயன் நடத்தும் முறை மிக விசித்திரமாயிருந்தது கரி காலனுக்கு. அப்படித் தன்னிடம் மித மிஞ்சிய மரியாதையையும் நம்பிக் கையையும் காட்டிவரும் பிரும்ம மாராயனுக்குத் தான் துரோகம் செய்வது சரியாகுமா என்றுகூட யோசித்தான் கரி காலன். 'நம்பிக்கைத் துரோகம் செய்து, சைவத் துறவியைத் தப்புவித்தால்தான் தப்பலாம். ஆனால் அது நாணயமா?' என்று எண்ணிப் பார்த்தான். நாணய மில்லை என்று அவன் புத்திக்குத் திட்டமாகப் பட்டாலும், அப்படிச் சைவத் துறவியைத் தப்புவிக்காத பட்சத்தில் ஏற்படக் கூடிய விளைவுகளையும் மனம் எண்ணிப் பார்த்தது. சைவத் துறவியைத் தப்புவிக்காவிட்டால் இன்றிரவு நம் சாயம் வெளுத்துவிடும். வெளுத்துவிட்டால் பிரும்ம மாராயன் நம்பிக்கை உடைந்து விடும். அப்படி நம்பிக்கை உடைந்து விட்டால் அரசகுமாரியின் சதி விஷயத்தில் தன்மூலமாகத் தலையிடவும் பிரும்ம மாராயன் இணங்கமாட்டான். அரச குமாரியோ பேராபத்தில் சிக்கியிருக் கிறாள். அவளைக் காப்பாற்ற என்னைப் போன்ற ஒரு நண்பன் அவளுக்கு அவசியம். ஆனால் பிரும்ம மாராயன் உதவியின்றி எதையும் சாதிப்பதும் கஷ்டம். ஆகவே, தற்சமயம் படைத்தலைவனுக்கு என்னிட

முள்ள நம்பிக்கையை உடைக்கக் கூடாது. 'பெரிய நன்மையை முன்னிட்டு இந்தச் சிறு குற்றத்தைப் புரிந்ததில் தவறில்லை' என்று தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்ட கரிகாலன், அதற்கான ஏற்பாடுகளைப் பூர்த்தி செய்ய நினைத்து, வீரனை நோக்கி, "வீரா! அந்தத் துறவியைப் பார்த்தால் பெரிய திருடனாகத் தெரிகிறதே!" என்றான்.

"அப்படித்தான் சிறைக்கூடத் தலைவரும் சொன்னார்!" என்றான் வீரன்.

"நான் சென்று பார்த்தபோது அவன் ஏதோ முணு முணுத்துக்கொண்டிருந்தான். எதற்கும் எல்லாம் சரியா இருக்கிறதாவென்று நீ ஒருமுறை போய்ப் பார்த்துவா!" என்று கரிகாலன் ஆணையிட்டான்.

அந்த ஆணையைச் சிரமேற் கொண்டு உள்ளே சென்று சில வினாடிகளில் திரும்பிய வீரன், "கவலை வேண்டாம் எசமான்! எல்லாம் சரியாகவே இருக்கிறது. பூட்டை இழுத்துப் பார்த்து விட்டேன். துறவியும் மரப்பலகையில் சுருண்டு படுத்திருக்கிறான்," என்றான்.

"உள்ளே ஒரே இருட்டாயிருக்கிறதே. துறவி படுத்திருப்பது எப்படித் தெரிந்தது?" என்று கரிகாலன் வினவினான்.

"சாளரத்திலிருந்து வெளிச்சம் வருகிறதல்லவா?"

"சரி, சரி! விளக்கு அணைந்து விட்டதே. ஏற்ற வேண்டாமா?"

"வேண்டாம் எசமான். இந்த விளக்கு எப்பொழுதும் இப்படித்தான். கிருஷ்ணா நதிக் காற்றில் அடிக்கடி அணைந்துவிடும். இதைக் கொளுத்த வேண்டுமானால், மாளிகைப் பக்கம் போய்த்தான் பந்தம் கொண்டுவர வேண்டும். காவலை விட்டுப் போக முடியாது."

"வேண்டுமானால் போய் வா; நான் பார்த்துக் கொள்கிறேன்."

"நன்றாயிருக்கிறது! தங்களைக் காவல் வைப்பதாவது. படைத் தலைவருக்குத் தெரிந்தால், இந்தத் துறவிக்குப் பதில் கோதண்டத்தில் என்னை மாட்டுவார். அந்த அறையிலிருந்து இவன் தப்ப முடியாது. அதுவும் இன்னும் சிறிது நேரம். பிறகு அவனைப்



எப்படியெல்லாம் வரைகிறார்கள்!

## அசோக வனத்துச் சீதை

ஓவியர் ஜி. ராமனின் அசோகவனத்துச் சீதை. (லலித கலா அகாதமி ஓவியக் கூடத்தில் தமிழ்நாடு ஓவிய நுண்கலைக் குழு நடத்திய கலைக் காட்சியிலிருந்து.)

—சாயி

பாதாளச் சிறைக்குக் கொண்டு போய் விடுவார்கள்.''

வீரனுடன் இவ்வண்ணம் பேச்சுக் கொடுத்துப் பின்னால் தன்மேல் எத்தகைய குற்றமும் சாட்டமுடியாத நிலையை சிருஷ்டித்துக் கொண்ட கரிகாலன், துறவியை மிகுந்த ஜாக்கிரதையுடன் கவனித்துக் கொள்ளும்படி வீரனிடம் கூறிவிட்டு மாளிகையை நோக்கி நடந்தான். மாளிகைக்குள் நுழைந்தவன், நேராக இரண்டாவது உப்பரிகைக்குச் சென்று, பிரும்ம மாராயன் அறையில் உட்கார்ந்து மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி ஆலோசிக்கலானான். 'சைவத்துறவி தப்பிவிடுவான். என் அபாயம் தீர்ந்தது. என்மேல் சந்தேகமும் உண்டாக வழியில்லை' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

ஆனாலும் விஷயம் அவன் நினைத்தபடி அத்தனை எளிதில் முடியவில்லை. சைவத்துறவி தப்பிவிட்டதை அறிந்ததும், மாளிகை அமளி துமளிப்பட்டது. காவலாளர்களையெல்லாம் கண்டபடி கடிந்துகொண்டு தனது அறைக்குள் கடுங்கோபத்துடன் நுழைந்த பிரும்ம மாராயன், கரிகாலனிடம் விஷயத்தை அறிவிக்கத் தொடங்கி, ''ஜெயவர்மன் தப்பிவிட்டான்!'' என்றான்.

''தப்பி விட்டானா!'' கரிகாலன் புருவங்கள் சற்றே உயர்ந்தன.

''ஆம் கரிகாலரே!''

''எப்படித் தப்பி விட்டான்?''

''குற்றவாளிகளைக் கட்டி அடிக்கச் சிறையில் வைக்கப்பட்டிருக்கும் முறுக்குக் கயிற்றால் கம்பிகளை வளைத்து, மரப் பலகை மீது ஏறி, சாளரத்தின் வழியாகக் குதித்தோடி விட்டான்.''

''அப்படியா!''

''ஆமாம். ஆனால், அதுமட்டுமல்ல; வேறு விஷயமும் இருக்கிறது.''

''என்ன அது?''

''ஜெயவர்மன் போக்கிரிதான். ஆனால் அவனை விட ஒரு பெரிய போக்கிரி அவனுக்கு உதவி செய்திருக்கிறான்.''

''அப்படியா!''

''ஆமாம் கரிகாலரே! முறுக்குக் கயிறு அதிக நீளமுள்ளது. அப்படியே கம்பிகளை வளைக்க முடியாது. கயிற்றின் ஒரு பாகம் வெட்டப்பட்டு இரண்டாகத் துண்டிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் தான் இருபுறங்களிலும் கம்பிகளை இழுத்து வளைக்க முடிந்திருக்கிறது.''

கரிகாலன் கண்கள் பிரும்ம மாராயனை ஏறெடுத்துப் பார்த்தன. அவன் எதிரே ராட்சசனைப் போல் நின்ற பிரும்ம மாராயன் கண்களில் ஏதோ ஒரு விபரீதப் பார்வை துளிர்த்தது. சிறிது நேரம் கரிகாலன் முகத்தில் நிலைத்த கண்கள் சற்றுத் தாழ்ந்து பெரியனவாக உருண்டு அவனது இடுப்பிலிருந்த கச்சையை நோக்கின.

அடுத்த வினாடி பிரும்ம மாராயன் குரல் கோடை இடிபோல் ஒலித்தது.

''கரிகாலரே! தங்கள் கச்சையிலிருந்த சிறு வாள் எங்கே?'' என்று கட்டிடமே அதிரும்படியாக இரைந்தான், சோழநாட்டுப் படைத்தலைவனான பிரும்ம மாராயன்.

(தொடரும்)




பாண்டி பஜார் போஸ்ட் ஆபீசிற்கு பக்கத்தில் நிற்கும் இஸ்திரி வண்டியின் சொந்தக்காரரான பூபதியை 'முக்கோண பூபதி' என்கிறார்கள். காரணம்?

''என்னோடு பிறந்தவர்கள் ஒன்பது பேர். எங்களை ஆளாக்க எங்கப்பா ரொம்பக் கஷ்டப்பட்டார். நான் நடமாடும் லாண்டிரிக் கடை நடத்தி, தொழிலையும் கவனித்துக் கொண்டு குடும்பக் கட்டுப்பாடு பிரசாரமும் செய்து வந்தேன். என்கிறார்.

மூன்றாண்டுகளாக கு.க. கவுரவப் பிரசாரத் தலைவராக இருந்தார். இப்போது விலகிவிட்டார். முழுநேரமும் இஸ்திரி கடைதான். சமயம் ஒழியும் போது பிரசாரம். (பாவம் ஸ்திரீ.)

—சேத்தி

# மன்னன் மகள்

## 16. இருளில் இறங்கிய இடி

சாதாரண சமயத்தில் கரகரப்புத் தட்டிக் கடுமையாக ஒலிக்கும் தன்மை வாய்ந்த பிரும்ம மாராயன் குரல், கோபமும் கலந்து விட்டதன் காரணமாக மிகப் பயங்கரமாகச் சப்திக்கத் தொடங்கி விட்டதையும், இயற்கையாகவே பெரிதாகக் கோவைப்பழம் போலிருந்த கொடூர விழிகளிலும், செவ்வரி சற்று அதிகமாகவே படர்ந்து விட்டதையும் கவனித்த கரிகாலன், தான் பேராபத்தில் சிக்கி விட்டதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான். சிறைக் கூடத்தில் வீரனை எச்சரித்ததன் மூலம் தன் குற்றத்துக்கு ஓரளவு பாதுகாப்பை ஏற்படுத்திக் கொண்டதால், சைவத்துறவி தப்பியோடியது தெரிந்தாலும், குற்றத்தின் சாயை தன் மீது பாயாது என்று திட்டமாக நம்பியிருந்த கரிகாலன், தன் இடையிலிருந்து வாள் மறைந்துவிட்டதைப் பிரும்ம மாராயன் அத்தனை உன்னிப்பாகக் கவனிப்பானென்று எதிர்பார்க்கவில்லை. ஆகவே, எதிர்பாராதவிதமாக அந்தத் திக்கில் தாக்குதல் ஏற்படவே, என்ன பதில் சொல்வதென்று விளங்காததால், பஞ்சணையில் சற்று அசைந்து உட்கார்ந்து தான் அணிந்திருந்த அரச அங்கியின் வலது பக்கத்தைச் சற்று இறுக்கவும் பிடித்துக் கொண்டான். அடுத்த வினாடி அவன் முகத்தில் ஏதோ சிந்தனைகள் ஓடியதற்கான அறிகுறிகள் மாத்திரமின்றி, மனம் பெரிய புயலிலிருந்து மீண்டு ஓரளவு சாந்தியை அடைந்து விட்டதற்கான சாயை படரலாயிற்று.

எதையும் ஊடுருவிப் பார்க்கும் சக்தி வாய்ந்த படைத்தலைவன் கண்கள் கரிகாலன் முகத்தில் தோன்றிய பலதரப்பட்ட உணர்ச்சிக் குறிகளைக் கவனிக்கத் தவறவில்லை. தான் வாளைப் பற்றிக் கேட்டதும், அவன் முகத்தில் திகில் லேசாகத் தோன்றியதையும், பிறகு ஏதோ சிந்தனை நிலவியதையும், அடுத்த வினாடி சாந்தி படர்ந்துவிட்டதையும் கண்ட படைத் தலைவனுக்கு, எதிரே பஞ்சணையில் உட்கார்ந்திருந்த கரிகாலன் பெரிய புதிராயிருந்தான். முதலில் ஏற்பட்ட திகிலுக்குக் காரணத்தைப் படைத் தலைவன் திட்டமாக அறிந்து கொண்டிருந்தான். ஆனால், அந்தத் திகிலை ஒட்டி ஓடிய சிந்தனைகள் என்னவாயிருக்கலாம்? திகில் மறைவதற்குக் காரணம் எதுவாயிருக்கும்? என்ற கேள்விகளுக்கு விடை கண்டுபிடிக்க முடியாமல் திணறிய பிரும்ம மாராயன், எதற்கும் விஷயத்தைப் பூராவும் விசாரித்துப் பார்ப்போம் என்ற எண்ணத்தால், ''கரிகாலரே! நான் கேட்ட கேள்வி காதில் விழுந்ததா இல்லையா?'' என்று மீண்டும் கேட்டான். கடுமை சிறிதும் தணியாத குரலில்.

கரிகாலன் இதழ்களில் லேசாகப் புன்னகை படர்ந்தது. ''காதில் விழாமல் எப்படியிருக்கமுடியும் படைத் தலைவரே! இடி இடித்தால் காதில் விழாதிருக்குமா?'' என்று பதில் சொன்னான் கரிகாலன்.

பிரும்ம மாராயன் மிதமிஞ்சிய ஆச்சரியத்துடன் கரிகாலனை நோக்கினான். மன்னிக்க முடியாத குற்றத்தைச் செய்த அவன், தன் முன்பாகப் பஞ்சணையில் ராஜ தோரணையில் உட்கார்ந்துகொண்டு, தன் குரலைப்பற்றி ஏளனமாகவும் பேசத் தொடங்கியதைக் கண்ட பிரும்ம மாராயன், கரிகாலனுடைய நெஞ்சுரத்தை உள்ளுக்

சாண்டில்யன்

குள்ளேயே மெச்சிக் கொண்டான். இருப்பினும் வெளியில் கடுமையைக் குறைக்காமலேயே, விசாரணையைத் தொடர்ந்து, ''கரிகாலரே! இடி காதில் மட்டுமல்ல, சில வேளைகளில் தலையிலும் இறங்குவதுண்டு,'' என்றான்.

''எல்லாம் விதியைப் பொறுத்தது,'' என்று கரிகாலன் பதில் சொன்னான்.

''உமது தலைவிதி தற்சமயம் எப்படி இருக்கிறது?'' என்று விசாரித்தான் பிரும்ம மாராயன்.

''ஏன்? நன்றாகத்தானிருக்கிறது. நான் வேங்கி நாட்டு அரசகுமாரியின் தூதுவன். சோழ நாட்டுப் படைத்தலைவரின் பாதுகாப்பிலிருக்கிறேன். எனக்கென்ன குறைச்சல்?''

''உமக்கென்ன குறைச்சலா? நான் கேட்ட கேள்விக்குப் பதில் சரியாகக் கிடைக்காவிட்டால் உமக்கென்ன குறைச்சல் ஏற்படுமென்பதைச் சீக்கிரம் புரிந்து கொள்வீர்.''

''என்ன குறைச்சல் ஏற்படுமோ?''

''அவயவங்களில் ஏதாவது இரண்டொன்றுக்குக் குறைவு ஏற்படலாம். சில வேளைகளில் உடலிலிருந்து உயிர் குறைவதும் உண்டு,'' என்று தன் நகைச்சுவையைக் காட்டிப் பெரிதாக நகைத்தான் பிரும்ம மாராயன்.

கொடூரமான காரியங்களில் சோழநாட்டுப் படைத் தலைவனுக்கு இருக்கும் உற்சாகத்தைக் கவனித்த கரிகாலன் உடல், ஒரு வினாடி வெறுப்பால் சிலிர்த்தது. அவசியமானால் கை காலை வெட்டவோ அல்லது தலையையே சீவி எறியவோ பிரும்ம மாராயன் தயங்க மாட்டான் என்பதையும், அத்தகைய பணிகளில் அவனுக்கு ஓரளவு உவகையும் உண்டென்பதையும் கண்ட கரிகாலன், அரசகுமாரி தன் சதிக்கு உதவியாகச் சரியான பேர்வழியைத்தான் பிடித்தாள் என்று தீர்மானித்துக் கொண்டான்.

கரிகாலன், தான் கேட்ட கேள்விக்கு நேரிடையான பதில் சொல்லாமல் ஏதோ யோசிப்பதைக் கண்ட பிரும்ம மாராயன், ''கரிகாலரே! நான் கேட்ட கேள்விக்கு இன்னும் உம்மிடமிருந்து பதில் வரவில்லை,'' என்று நினைவுபடுத்தினான்.




91 வயதான மொரார்ஜி தேசாய் இன்னும் அப்படியேதான் இருக்கிறார். அதே எரிச்சல், அதே கோபம், அதே அலட்சியம்.

அண்மையில் 'ஆன்லுக்கரு'க்கு அவர் கொடுத்திருந்த பேட்டியிலிருந்து சில பகுதிகள்:

- ராஜீவா? அவர் நல்ல மனிதராக இருக்கலாம். ஆனால் புத்திசாலி இல்லை.
- அவர் பள்ளி இறுதிப் பரீட்சை கூடப் பாஸ் பண்ணாதவர். ஏன்? பைலட் பரீட்சையைக்கூட அவர் அம்மா இந்திராவின் செல்வாக்கை வைத்துத் தானே பாஸ் பண்ணினார்.
- நான் சினிமா பார்ப்பதில்லை. அமிதாப்போ, ராஜேஷ் கன்னாவோ யாரையும் எனக்கு தெரியாது. 'காந்தி' படம் கூட நான் பார்க்கவில்லை.
- இந்த சினிமாக்காரர்கள் எல்லாம் என்னிடம் வர மாட்டார்கள். ஒரே ஒரு முறை ராஜ்கபூர், நர்கீசை அழைத்துக் கொண்டு என்னிடம் வந்தார். நர்கீசைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன் என்றார். 'உனக்குத்தான் ஏற்கனவே கல்யாணம் ஆகிவிட்டதே? இரண்டாம் கல்யாணம் தவறு. போய் உன் அப்பாவிடம் பேசு,' என்று அனுப்பி வைத்து விட்டேன்.





''என்ன பதிலை எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று கரிகாலன் வினவினான்.

''உமது கச்சையிலிருந்த சிறு வாள் எங்கேயென்று கேட்டேன். அதற்குப் பதில் எதிர்பார்க்கிறேன்.''

''அந்த வாளைப்பற்றி என்ன அத்தனை கவலை உங்களுக்கு?''

''கரிகாலரே! சேர நாட்டு ஒற்றனான ஜெயவர்மன் சிறையிலிருந்து தப்பியிருக்கிறான். இன்னொருவன் உதவியுடன் தப்பி இருக்கிறான். இன்று சிறைக் கூடத்திற்கு உம்மைத் தவிர வேறு யாரும் போகவில்லை...''

''ஆகையால் நான் அவனைத் தப்புவித்து விட்டேனென்று முடிவு கட்டுகிறீரா?''

''நான் ஒரு முடிவும் கட்டவில்லை. முடிவு கட்டியிருந்தால், உமக்கும் இதற்குள் ஒரு முடிவு கட்டியிருப்பேன். உமக்குச் சாதகமான அம்சங்களும் இதிலிருப்பதால்தான் விசாரிக்க வேண்டியிருக்கிறது.''

''அப்படியா?''

''ஆமாம் கரிகாலரே! சிறைக்கூடக் காவலனான வீரனை விசாரித்து விட்டேன். நீர் சிறையைப் பார்த்துத் திரும்பி வந்ததன்றி, ஜெயவர்மனை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும்படி எச்சரித்ததாகவும், அணைந்த விளக்கைக்கூட ஏற்றும்படி கூறியதாகவும் வீரன் சொன்னான்.''

''இருந்தும் உமது சந்தேகம் விடவில்லை போலிருக்கிறது?''

''இல்லை!''

''ஏன்?''

''குற்றத்தை மறைக்க இந்தத் தந்திரங்களை நீர் கையாண்டிருக்கலாம். ஜெயவர்மன் உம்மை நண்பனென்று காலையில் அழைத்திருக்கிறான். அப்படி நீர் நண்பனாயிருந்தால் அவனை விடுவிக்க முயன்றிருக்கலாம். அவன் தப்பிச் செல்வதற்கு வேண்டிய உதவியைச் செய்த பின்பு, உம்மீது சந்தேகம் விழாதிருப்பதற்காக, வீரனை எச்சரித்து விட்டு வந்திருக்கலாம்,'' என்றான் பிரும்ம மாராயன்.

உள்ளதை உள்ளபடி தினையளவும் சந்தேகத்துக்கு இடமின்றிப் படைத் தலைவன் உடைத்துவிட்டதைக் கவனித்த கரிகாலன், பிரும்ம மாராயனுடைய கூரிய அறிவை எண்ணிப் பெரிதும் வியந்தான். ஆனால், வியப்புக்கோ பிரும்ம மாராயனைப் பாராட்டுவதற்கோ அப்பொழுது சமயமில்லை யாகையால், பிரும்ம மாராயனின் சந்தேகத்தை நிவர்த்தி செய்யும் பணியில் இறங்கி, ''பிரும்ம மாராயரே! என்னைக் குற்றவாளி ஸ்தானத்தில் நிறுத்திவிட்டீர். இதிலிருந்து நான் விலகிக் கொள்ள எத்தகைய அத்தாட்சியை எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''உங்கள் அங்கிக் கச்சையிலிருந்த வாளைக் காட்டினால் போதும்,'' என்றான் படைத்தலைவன்.

''அது எப்படி உள்ள சிக்கலை அவிழ்க்கும்?'' என்று கரிகாலன் வினவினான்.

''சிறையிலிருந்த கயிற்றைத் துண்டிக்க ஜெயவர்மனுக்குக் கத்திதான் உபயோகப்பட்டிருக்கிறது. கத்தி ஒன்றின் உதவி இல்லாவிட்டால் அவன் தப்பியிருக்க முடியாது என்பதுதான் கேள்வி,'' என்று பிரும்ம மாராயன் விளக்கினான்.

கரிகாலன் பஞ்சணையிலிருந்து சிறிது நேரம் எழுந்து அறையில் அங்குமிங்குமாய் உலாவினான். பிறகு பிரும்ம மாராயனை நோக்கிய கண்களில் அசட்டையோடு அதிகாரமும் கலந்திருந்தது. ''படைத்தலைவரே! நீர் யாரை விசாரணை செய்கிறீர் என்பதைப் புரிந்துகொண்டிருக்கிறீரா?'' என்று கேட்டான் கரிகாலன்.

''ஏன்?உம்மைத்தான்.''

''நான் அரசகுமாரியின் அந்தரங்கத் தூதுவன்.''

''அதனாலென்ன?''

''அவர் என்மீது நம்பிக்கை வைப்பதற்கு அடையாளமாக அவருடைய மோதிரத்தையே கொண்டு வந்திருக்கிறேன்.''



—திருவையாறு
ஆர். குருமூர்த்தி

''இருக்கட்டுமே.''

''அப்படியிருந்தும் ஏதோ சாதாரணக் குற்றவாளியைப் போல் என்னை விசாரிக்கிறீர்.''

''கரிகாலரே! குற்றவாளிகளில் சாதாரணக் குற்றவாளி, அசாதாரணக் குற்றவாளி என்றெல்லாம் வித்தியாசம் கிடையாது. குற்றம் செய்பவன் யாராயிருந்தாலும் குற்றவாளிதான். அரசகுமாரியின் தூதுவர் குற்றம் செய்தாலும் குற்றம் குற்றம்தானே தவிர வேறொன்றையும் நீர் மறந்து விட்டீர்.''

''என்ன படைத்தலைவரே?''

''நான் சோழநாட்டுப் படைத்தலைவன்.''

''அதனால்?''

''வேங்கி நாட்டு மன்னன் மகளைவிடச் சோழநாட்டுப் பணி எனக்கு முக்கியம்.''

''நியாயம்தான்.''

''ஜெயவர்மன் சோழ மன்னருக்குச் சொந்தமான செங்கதிர் மாலையைக் களவாடி விட்டான். அவன் தப்பாதிருந்தால், அது இருக்கும் இடத்தை இன்றிரவு அவனை கக்க வைத்திருப்பேன். அவன் தப்பி விட்டான். அவனைத் தப்ப வைத்த யாரும் சோழ நாட்டுக்குத் துரோகம் செய்தவர்தான். வேங்கி நாட்டு மன்னன் மகள் தூதராயிருந்தாலும் அவரை இந்த ஒரு விஷயத்தில் மன்னிப்பது மிகவும் கஷ்டம்.''

''நீங்கள் சொல்வதில் நியாயமிருக்கிறது படைத்தலைவரே. உம்மைத் தவிர வேறு யாராவது இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால் நான் பதில் சொல்லியிருக்க மாட்டேன். ஆனால் நம்மிருவர் நாட்டு நலமும் இதில் அடங்கியிருக்கிறது. நானும் சோழ நாடுதான். நம்மிடையே பரஸ்பரம் அவநம்பிக்கை ஏற்படுவதில் அர்த்தமில்லை. தவிர இருவரும் சதியில் சிக்கியிருக்கிறோம். உமது சந்தேகம் இத்துடனாவது உடைகிறதா என்று பாரும்,'' என்று, அங்கியின் பக்கவாட்டுப் பையிலிருந்து ஒரு சிறு வாளை உறையுடன் எடுத்துப் பஞ்சணைமீது விட்டெறிந்தான் கரிகாலன்.

பஞ்சணைமீது 'தட்' என்ற சத்தத்துடன் விழுந்த சிறுவாளைக் கண்ட பிரும்ம மாராயனின் பெருவிழிகள் சற்று நேரம் மலைத்து நின்றன. அந்த வாளை

எடுத்து உறையை விலக்கிக் கத்தியை இரண்டு வினாடிகள் பரிசோதித்த படைத் தலைவன் முகத்தில் குழப்பம் தாண்டவமாடத் தொடங்கியது. மீண்டும், கரிகாலன் முகத்தில் நிலைத்த கண்களிலிருந்த கோபம் அடியோடு மறைந்து விட்டாலும், குழப்பம் மட்டும் எஞ்சி நின்றது.

அவன் குழப்பத்துக்குக் காரணத்தைப் புரிந்து கொண்ட கரிகாலன், அவன் உள்ளத்தில் ஏதாவது சந்தேகம் மிஞ்சியிருந்தால் அதையும் தொலைக்க உறுதி கொண்டவனாய், "ஏன் படைத்தலைவரே, என்ன யோசிக்கிறீர்கள்? என் அவயவங்களை வெட்டித் தள்ளவோ, தலையைச் சீவவோ சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே என்று யோசிக்கிறீர்களா?'' என்று கேட்டான் லேசாகச் சிரித்துக் கொண்டே.

ஏளனம் தொக்கி நின்ற அந்தச் சிரிப்பையும் அவன் வாயிலிருந்து உதிர்ந்த வார்த்தைகளையும் கேட்ட பிரும்ம மாராயன் போக்கில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. ''மன்னித்து விடுங்கள் கரிகாலரே! காரணமின்றி உங்களைக் கண்டபடி பேசி விட்டேன்.'' என்றான் படைத்தலைவன்.

''இதில் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது படைத்தலைவரே! சேர நாட்டின் பெரிய ஒற்றன் தப்பிவிட்டான். சந்தர்ப்ப சாட்சியங்கள் என்னைக் குற்றவாளியாகச் சுட்டிக் காட்டின. நீங்கள் சந்தேகித்தீர்கள். அதில் தவறேதுமில்லை. உம்முடைய நிலையில் நான் இருந்தால் இப்படித்தான் நடந்து கொண்டிருப்பேன்.'' என்று சமாதானப் படுத்தினான் கரிகாலன்.

பிரும்ம மாராயனுக்கு ஓரளவு தான் சமாதானமேற்பட்டது. கரிகாலன் விஷயத்தில் உண்டான சந்தேகம் மறைந்ததேயொழிய, ஜெயவர்மனுக்கு உதவிய பேர்வழி யார் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லையே என்ற கோபம் மட்டும் தணியவில்லை. மாளிகையிலிருந்த அத்தனை வீரர்களையும் விசாரித்தும் நிலைமை தெளிவுபடவில்லை. இதனால் வெகுண்டிருந்த படைத்தலைவனுக்கு



பிச்சை கேட்கும் குழந்தைகளை விரட்டி அனுப்பாதீர்கள். நானும் நீங்களும் அவன் நிலையில் இருந்திருக்கக் கூடும். எப்படியோ தப்பினோம். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொள்ளாதீர்கள். தருமமும் தயையுமே நிரந்தரச் செல்வம். கடவுளுடைய பாங்கியில் நல்ல வட்டியுடன் பெருகிப் பத்திரமாக இருக்கும்.

யார் சொன்னது?
ராஜாஜி!

இரவு வெகு நேரம் வரையில் மனம் நிம்மதி யில்லாமலே கிடந்தது. இரவு முற்றி வருவதைக் குறிப்பிட்டுக் கரிகாலன் கேட்ட கேள்விகளுக்குச் சரியான பதில் சொல்லக்கூடப் பிரும்ம மாராயனுக்கு அப்போதிருந்த மனோநிலை இடம் கொடுக்கவில்லை. இரவு பெரிதும் முற்றிவிட்டதைக் கண்ட கரிகாலன், ''படைத் தலைவரே! நான் போக வேண்டிய நேரம் வந்து விட்டதே!'' என்றான்.

அப்பொழுது தோட்டத்தில் ஆழ்ந்த சிந்தனையுடன் உலவிக் கொண்டிருந்த பிரும்ம மாராயனுக்குக் கரிகாலன் பேச்சு பெரும் தலை வேதனை யாயிருந்தது. ''எங்கு போக வேண்டும்?'' என்று கேட்டான் படைத் தலைவன் அதிக சலிப்புடன்.

''அரசகுமாரியிடம் போக வேண்டாமா?'' என்று கரிகாலன் வினவினான்.

''என்ன அவசரமோ?''

''அரசகுமாரி வரச் சொல்லியிருக் கிறார்கள்.''

''எதற்கு?''

''தங்கள் பதிலை அறிய.''

''எதற்குப் பதில்?''

''சதித்திட்ட ஏற்பாடுகள் எத்தனை தூரம் முன்னேறி இருக்கின்றன என்பதை அறிந்துவரச் சொல்லியிருக் கிறார்கள். தவிர அரிஞ்சயன் ஏன் வரவில்லையென்றும் கேட்கச் சொன்னார் கள். அரிஞ்சயன் வராத காரணத்தைத் தெரிந்து கொண்டு விட்டேன். ஏற்பாடுகள் எந்த நிலையில் இருக்கின்றன என்பது தெரியவில்லையே.''

''ஏற்பாடுகள் சரியாகத்தான் நடந்து வருகின்றன.''

''என்ன ஏற்பாடுகளோ? விவரம் சொன்னால் அரசகுமாரியிடம் சொல் கிறேன்.''

''விவரம் சொல்லும் அளவில் ஏற்பாடுகள் உருவாகவில்லை.''

''எப்பொழுது உருவாகும்?''

''ஜெயசிம்ம சாளுக்கியன் தலைநகர் வந்த பிறகுதான்.''

''ஏற்பாட்டின் தன்மை எப்பேர்ப்பட்டதென்று சொல்ல முடியுமா?''

---

●● ஆர். எஸ். இராஜ், சீர்காழி.

இந்திரா கொலை முயற்சியில் கலைஞர் நிரபராதி என்று தீர்ப்பாகியுள்ளது பற்றி?

அன்புள்ள ப.உ.ச. அவர்களுக்கு. நலம். நலமறிய அவா. இப்படிக்கு, அரசு.

●● பி. இராமகிருஷ்ணன், பள்ளம்.

விசுவின் படங்களின் வெற்றிக்குக் காரணம் கதையா? வசனமா?

ஆர்வம். விசுவின் வாயைத் தைத்துக் கை காலைக் கட்டிப் பூட்டி வைத்தாலும், அவரது மயிர்க்கால் ஒவ்வொன்றும் ஒரு புதிய திரைக்கதை வசனத்தைச் சொல்லிக் கொண் டிருக்கும்.

●● க. சிவா, திருச்சி.

பேச்சுத் திறன், எழுத்தாற்றல், கவர்ச்சி—இவை அனைத்தும் கமலஹாசனிடம் இருந்தும், 'அரசியலில் சேர எனக்கு அருகதை இல்லை,' என்கிறாரே, ஏன்?

பொறுங்கள். பெரியவர்கள் மண்டையைப் போடட்டும்.





●● எல். அய்யப்பன், கூடலூர்.

பஞ்சாபில் ஓர் அமைச்சருக்கும் போலீஸ் ரிபைரோவுக்கும் மோதல். என்ன ஆகும்?

மோதலில் யார் ஜெயித்தாலும் சரி, ரிபைரோ போன்ற ஒரு துணிவுள்ள, சுத்தமான போலீஸ் அதிகாரி வாழும் காலத்தில் நானும் வாழ்ந்து கொண்டிருப்பது பற்றிப் பெருமைப்படுகிறேன்.

அரசு பதில்கள்:

''தற்சமயம் சொல்ல முடியாது.''

''ஏன்?''

''சொல்ல எனக்கு உரிமையில்லை.''

''யாருக்கு உரிமை இருக்கிறது?''

''இந்தச் சதியில் கலந்து கொண்டுள்ள வேங்கிநாட்டுப் படைத் தலைவர் மூவர், அரிஞ்சயன், இவர்கள் அனுமதியில்லாமல் நான் எதையும் சொல்ல முடியாது.''

''அரசகுமாரி ஆணையிட்டால் கூடவா?''

''ஆம்.''

''விசித்திரமாயிருக்கிறது படைத் தலைவரே.''

''இதில் விசித்திரம் ஏதுமில்லை கரிகாலரே. ஜெயசிம்ம சாளுக்கியனுக்கு எதிராகச் சதி செய்து, அவன் பலத்தை உடைப்பதென்பது அவ்வளவு சுலபமல்ல. விஷயம் அம்பலமானால் அரசகுமாரி உட்பட எல்லோரையும் ஒழித்து விடுவான் ஜெயசிம்மன். இந்த விஷயத்தில் அரச குமாரிக்குக் கவலை வேண்டாம் என்று சொல்லிவிடுங்கள். ஜெயசிம்மனை ஒடுக்கவும் நரேந்திரன் அரியணை ஆடாமல் திடப்படுத்தவும் ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன என்று சொல்லுங்கள் இது ஆண்கள் சம்பந்தப் பட்ட விவகாரம். பெண்கள் தலையீடு இருந்தால் காரியம் நடவாது,'' என்றான் பிரும்ம மாராயன்.

பிரும்ம மாராயன் திட்டம் எத்தன்மையது என்பதை அறிய, கரிகாலன் எவ்வளவோ முயன்றும் பலன் எதுவும் ஏற்படவில்லை. அதற்குள் நள்ளிரவும் நெருங்கத் தொடங்கி விட்டதால், பிரும்ம மாராயனிடம் விடைபெற்றுக் கொண்டு அரசகுமாரியைச் சந்திக்கக் கிளம்பினான் கரிகாலன். கிளம்பும் முன்பாகப் பிரும்ம மாராயனை நோக்கி, ''படைத்தலைவரே! அரிஞ்சயன் சிறையிலிருப்பது நமக்கு அபாயமல்லவா?'' என்று கேட்டான்.

''ஆமாம்.''

''அப்படியானால் அவனை விடுதலை செய்ய முயற்சி எடுக்க வேண்டாமா?''

இந்த கேட்ட பிரும்ம மாராயன்

---

●● தொ. பாப்பாய், சேலம்.

ஊறுகாயைத் தொட்டுக் கொள்ளப் பிடிக்குமா அல்லது சாதத்தோடு பிசைந்து சாப்பிடப் பிடிக்குமா?

அது ஊறுகாய் சாமி, சாம்பார் அல்ல.

●● வசந்தா குமார், திருச்சி.

சிவசங்கரி சிறுகதைகளைக் கேசட்டில் பதிவு செய்து வெளியிட்டிருக்கிறார்களே?

புதுமை முயற்சி.

**ஊறுகாய் எப்படிச் சாப்பிடப் பிடிக்கும்?**

●● நா. ரவி, நாகப்பட்டினம்.

கடைசியாகப் படித்த ஆங்கில நாவல்?

நயினா, இப்போது நான் படித்துக் கொண்டிருப்பது நாவல் அல்ல. *'Shakspeare's Division of Experience.'* மாரிலின் பிரெஞ்ச் என்ற பெண்மணி செய்துள்ள இலக்கிய ஆராய்ச்சி. மனித குணங்களில் சில—உடல் வலிமை, வீரம், சுதந்திர உணர்வு போன்ற இவை—ஆண்களுக்குரிய குணங்களாகவும், ஈவு, இரக்கம், உணர்ச்சிப் பெருக்கு போன்றவை பெண்களுக்குரிய தன்மைகளாகவும் கருதப் படுகின்றன. ஆரம்ப காலத்தில் ஷேக்ஸ்பியர் ஆண்மைக்கு அதிக மதிப்புக் கொடுத்துப் பெண்மையைச் சந்தேகக் கண்ணுடன் பார்த்திருக்கிறார் என்றும், போகப் போக மனம் மாறி, ஆண்மையின் வெறிமிக்க பலத்தைக் கண்டு பின்வாங்கி, பெண்மையின் சில அம்சங்களை உயர்த்திருக்கிறார் என்றும் ஆதாரங்களுடன் நிரூபித்திருக்கும் விதம், சுவையானது. டக்கரான புத்தகம்.

இடிஇடியென்று பலமாகச் சிரித்தான். ''கரிகாலரே! ஜெயசிம்மன் சிறையிலிருந்து அரிஞ்சயனை விடுவிப்பதா? நல்ல யோசனை. சாளுக்கியர் சிறைகூடத்தை நீர் பார்த்ததில்லை போலிருக்கிறது. எமன் கையிலிருந்த உயிரை மீட்டாலும் மீட்க லாம். சாளுக்கியர் சிறையிலிருந்து யாரையும் மீட்க முடியாது,'' என்றான் பிரும்ம மாராயன்.

'அப்படிச் சிறை மீட்காவிட்டால் அரசகுமாரிக்குப் பேராபத்தாயிற்றே,' என்ற கவலையுடன் பிரும்ம மாராயனின் மாளிகையை விட்டு வெளியேறிய கரி காலன், பல வீதிகளைச் சுற்றிக்கொண்டு கோட்டைச் சுவரின் பெரும் கதவிடம் வந்து நின்று, கதவை அழுத்தித் திறந்தான். அரசகுமாரி கூறியது போலக் கதவு திறந்தேயிருந்தது. உள்ளே சென்று மிகுந்த ஜாக்கிரதையுடன் இரும்புத் தாழ்ப் பாளைப் போட்டுக் கதவை அடைத்து விட்டு, வசந்த மண்டபம் நோக்கி நடந்தான்.

எங்கும் காரிருள் சூழ்ந்து நின்றது. இருப்பினும் கோட்டைச் சுவர் மீது நடமாடிக் கொண்டிருந்த காவலாளி களின் கண்களில் படக்கூடாதென்பதற் காக மிகுந்த எச்சரிக்கையுடன் மரங்களின் நிழல்களில் ஒதுங்கி நடந்து வசந்த மண்டபத்தையடைந்த கரிகாலன், மண்டபத்தின் வாயிற் கதவு அடைக்கப் படாமல் ஒருக்களித்து வைக்கப் பட்டிருந்ததைக் கவனித்து, உள்ளே புகுமுன் ஒரு கணம் தாமதித்தான். அங்கிருந்த சூழ்நிலை அவன் மனத்தில் பற்பல சந்தேகங்களைக் கிளப்பிவிட்டது. 'முதல் நாள் அரிஞ்சயனுக்காக நந்தவனத்தில் காத்திருந்த அரசகுமாரி, இன்று ஏன் எனக்காகக் காத்திருக்க வில்லை? மிகுந்த எச்சரிக்கையுடன் அரச குமாரி அன்று தாழிட்ட வசந்த மண்டபக் கதவை, இன்று ஏன் திறந்து வைத்திருக் கிறாள்?' என்றெல்லாம் யோசித்தான். இத்தனையும் போதாதென்று வசந்த மண்டபம் பூராவிலும் இருள் சூழ்ந்து கிடந்தது. அரசகுமாரி ஒரு வேளை உறங்கி விட்டாளோ என்று நினைத்த கரிகாலன் எதற்கும் எச்சரிக்கையாக இருப்போ மென்று, தன் நீண்ட வாளை உறையிலி ருந்து உருவிக் கையில் பிடித்துக்கொண்டு, கதவை மெள்ளத் திறந்து உள்ளே நுழைந்து ஓர் அடி நடந்ததும், கதவு பட்டென்று சாத்தப்பட்டது. என்ன நடக் கிறது என்பதை அவன் நினைத்துப் பார்க்கும் முன்பு அவன் கையிலிருந்த வாள் சரேலென்று பிடுங்கப்பட்டது. தலையிலும் பலமான அடியொன்று இடிபோல் விழுந்தது. கரிகாலன் ஒருமுறை தள்ளாடி னான். அடுத்த வினாடி அவன் கால்கள் சுரணையற்றுப் போயின. கண்கள் சுழன்றது. பிரக்ஞை பறந்தோடிவிட்டது.

(தொடரும்)




மேற்கு மாம்பலத்தில் ஒரு தேசியமயமாக்கப்பட்ட வங்கிக்குச் சென் றிருந்தேன். அங்கு வந்த ஒருவர் கவுன்ட்டரின் அருகில் நின்றுகொண் டிருந்த இன்னொரு வாடிக்கையாளரிடம் பேனா கடன் கேட்க அவர் உடனே கொடுத்தார். பேனாவை அவர் திரும்பப் பெற்ற சமயம் இன்னொருவர் வந்து கேட்க, அவருக்கும் இரவல் தந்தார்.

ரேஷன் கடை, மளிகைக் கடை, விறகுக்கடை என்றால் பரவாயில்லை. ஸ்கூட்டர், ஹெல்மேட் சகிதம் வங்கிக்கு வருபவர்கள் ஒரு ரூபாய் பேனா வுடனாவது வரவேண்டாமா?

—வி.எஸ். ஸ்ரீதரன் சென்னை—83.

# இதுவா சிக்கனம்?

வங்கி டிராப்ட் எடுத்து 70 பைசா கவரில் அனுப்பினால் சிக்கனம் என்று ஓர் அன்பர் எழுதியிருக்கிறார். நான் ரிஜிஸ்தர் செய்யாமல் அதை சாதாரணக் கவரில் வைத்து அனுப்பிய டிராப்ட் தொலைந்து அதற்காக 5 ரூபாய் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு, அதற்கு ஜாமீன் ஒருவர் போட்டு, 200 ரூபாய் பணத்தை வாங்க ஒரு மாதத்திற்கு மேல் ஆகிவிட்டது! தவிர எல்லா ஊரிலும் வங்கி இல்லை. சிக்கனம் செலவு ஆகி விட்டது!

தி. நாச்சியப்பன், சென்னை —8.

# மன்னன்

சாண்டில்யன்

## 17. எதிர்பாராத சந்திப்பு

28-5-87

வேங்கி நாட்டு மன்னன் மாளிகையின் உதயதாரைகள் பலமாக முழங்கியதால், சுரணை வந்து விழித்துக் கொண்ட கரிகாலன் கண்களுக்கு, எதிரே கிருஷ்ணா நதியின் ஜலப் பிரவாகம் மிக ரம்மியமாகக் காட்சியளித்தது. அதன் நீர் மட்டத்தைக் காலை கதிரவனின் இளம் கதிர்கள் தழுவிச் சென்றதால், பிரவாகத்தில் வட்டமிட்டு நின்ற நீர்ச்சுழல்களின் ஒளி ஊடுருவிப் பளபளத்ததன்றி, கரையோரச் சிற்றலைகளும் பல கண்ணாடிகள் போல் ஜொலித்துக் கொண்டிருந்தன. பிரவாகம் பலமாக இருந்ததால் செக்கச் செவேலென்றிருந்த அந்தத் தங்க நிற நீரில் ஸ்நானம் செய்து, இடுப்பளவு ஜலத்தில் நின்ற அந்தணர்கள் இரு கரங்களிலும் நீரை உயர ஏந்தி மந்திரங்களை ஓதி அர்க்கியம் விட்டுக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர் நீரோட்டத்தை முடித்துக் கொண்டு, வெண்கலச் செம்புகளை நன்றாகத் துலக்கி, கிருஷ்ணா நதியின் புனித நீரை மொண்டு கொண்டு, வேத மோதிக் கொண்டே இல்லம் நோக்கி விரைந்து கொண்டிருந்தனர். பொழுது விடிந்து விட்டதால், தங்கள் தொழிலை நடத்த விரைந்த மீனவர்கள் தங்கள் படகுகளை ஆற்றுக்குக் குறுக்கே செலுத்திக் கொண்டே வலைகளை விசிறி மீன்களைத் தேடலாயினர். உழவர்களும் தோள்களில் கலப்பையுடன் சாரி சாரியாக ஆற்றின் கரையோரமாகச் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களை விட வேலையில் அதிக ஊக்கத்தைக் காட்டுவன போல் ஜோடிக் காளைகள் பல கழுத்துக்களிலிருந்த வெண்கல மணிகள் இன்னொலி எழுப்ப, உழவர்களுக்கு முன்னால் ஒன்றோடு ஒன்று இடித்துக் கொண்டு ஓடிக்கொண்டிருந்தன. இடையே நின்று ஒன்றை ஒன்று முட்டத் தொடங்கிய ஓரிரு காளைகளை உழவர்கள் அடிக்கடி விலக்கி ஓட்டினர். கிருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்துவிட்டுக் கரைமீது நடந்து சென்ற காரிகையரின் இன்ப மேனிகளிலும், அவர்கள் கழுத்திலிருந்த

## 'ஏன் ரூ. 6—10'

7.5.87 அன்று நான் அதோனியிலிருந்து குண்டக்கல்லுக்குத் தாதர்—சென்னை—எக்ஸ்பிரஸில் வந்து கொண்டிருந்தேன். அப்பொழுது கடப்பையில் சாப்பாட்டிற்காக டிக்கெட் விற்றுக் கொண்டிருந்தார் ரயில்வே சிப்பந்தி ஒருவர். என் அருகிலிருந்த நபர் ஒரு சைவச் சாப்பாடு டிக்கெட்டைப் பெற்றுக்

# மகள்

ஆபரணங்களிலும் கதிரவனின் கதிர்கள் பாய்ந்து பிரமை தட்டும் மெருகை அளித்து, அவர்களை ஏதோ தேவ கன்னிகள் போலத் துலங்கச் செய்தன.

ஆதவன் எழுந்து விட்டதால் உயிர்களும் எழுந்து விட்டன. அவன் கிரணங்கள் தாக்கத்தாக்க உயிர்களின் நடமாட்டமும் வேகம் பெற்றது. பஞ்ச பூதங்களிலும் உயிர் கலந்திருப்பதாகத்தான் சாஸ்திரங்கள் போஷிக்கின்றன. ஆனால், நித்தம் உயிர்களைத் தட்டி எழுப்பும் பணியை மாத்திரம் தீப் பிழம்பான கதிரவனே ஏற்று உலகை ஆட்டும் மர்மம் என்ன? ஆதவன் மறைந்ததும் உயிர்கள் படுப்பானேன்? அவன் எழுந்ததும் உயிர்கள் எழுந்திருப்பானேன்? காற்றுக்கும் நீருக்கும் ஆகாசத்துக்கும் இல்லாத இந்த மாபெரும் சக்தியை அவன் மட்டும் அடைவானேன்?

கிருஷ்ணா நதியின் இன்பத் தோற்றமும் உயிர்களின் அசைவும் தர்க்க சாஸ்திரியான கரிகாலன் மனத்திலே இந்த மாதிரி பலப்பல எண்ணங்களை எழுப்பவே, அவன் முந்திய நாளிரவுதான் தலையில் அடிபட்டு விழுந்ததைப் பற்றியோ தன் வாழ்க்கையில் ஏற்பட்ட இதர நிகழ்ச்சிகளைப் பற்றியோ சிறிதும் சிந்திக்காமல், கிருஷ்ணா நதி தீரத்தையே நீண்ட நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு மெள்ள அருகேயிருந்த இடங்களில் அவன் கண்களை ஓட்டவே, அவன் நினைப்பு உயிர்த் தத்துவங்களை எண்ணுவதிலிருந்து சற்று விலகி, அரசியல் விவகாரங்களிலும் வட்டமிடலாயிற்று.

தான் இருந்த இடத்துக்கு வெகு அருகே தெரிந்த இடைச் சுவரையும் அதை அடுத்து நின்ற வசந்த மண்டபத்தையும் நோக்கிய கரிகாலன், தான் இருக்குமிடம் மன்னன் மாளிகையாகத்தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். அத்துடன் பூமி மட்டம் மிகவும் கீழே இருந்ததாலும் வெகு தூரம் வரை தனது கண்ணோட்டம் செல்வது சாத்தியமாயிருந்ததாலும், அரண்மனையின் மேல் உப்பரிகை அறையொன்றில் தான் இருப்பதையும் உணர்ந்தான். இல்லாவிட்டால் எதிரேயிருந்த அந்தப் பெரிய சாளரத்தின் மூலம் தான் கண்ட அத்தனை இன்பக் காட்சிகளைக் காணுவது சாத்தியமல்லவென்று புரிந்துகொண்ட அவன், தான் படுத்திருந்த இடத்தில் சற்றே புரண்டான்.

படுக்கை மெத்தென்றிருந்தது. சாளரத்தின் மரச் சட்டத்தின் மட்டத்தையொட்டிப் படுக்கை கிடந்ததால் உயர்ந்த ஒரு மஞ்சத்தின் மீது தான் படுத்திருந்தது தெரிந்தது கரிகாலனுக்கு. முந்திய இரவில் வசந்த மாளிகையில் தன்னை மண்டையிலடித்தவன் யாராயிருந்தாலும் தனக்குப் படுக்கும் வசதியை மட்டும் நன்றாகச் செய்திருந்ததை அறிந்த கரிகாலன் 'மண்டையில் அடிப்பானேன்? பின்னர் மலர்ப் படுக்கையில் கிடத்துவானேன்?' என்று எண்ணித் தனக்குள்ளேயே லேசாக நகைத்துக் கொண்டான். பிறகு மெள்ளத் தலையில் அடிபட்ட இடத்தைத் தடவிப் பார்த்துக்





கொண்டு என்னருகிலிருந்தவர் அவர் கேட்ட ரூ. 6.10ம் கொடுத்தார்.

நான் எப்பொழுதும் டூரிலேயே இருப்பதால் லேட்டஸ்ட் ரயில்வே—கால அட்டவணை வைத்திருப்பேன்.

அதில் ரயிலுக்குள் சப்ளை செய்யும் உணவிற்கு ரூ. 5/— மட்டும் என்று எழுதியிருந்தது.

நான் திடுக்கிட்டு அந்தச் சிப்பந்தியிடம் கேட்டதற்கு அவர் சரியான விளக்கம் கொடுக்கவில்லை.

—சு. சங்கரன், சென்னை—4.

காயம் ஏதும் ஏற்படவில்லையென்பதையும், அடித்தவன் மயக்கம் வரும் தினுசில் இடம் பார்த்து அடித்திருக்கிறானேயொழிய, தன்னைக் கொல்லும் நோக்கம் அவனுக்கில்லையென்பதையும் ஊகித்துக் கொண்டான். அடிபட்ட இடத்தில் லேசாக எழும்பியிருந்தது, அவ்வளவுதான். அவனுடைய சுருண்டயிருண்ட மயிர்களும் அதை மறைத்து நின்றதால், எழும்பி இருந்த இடமும் வெளியில் தெரியவில்லை.

மெள்ளச் சமாளித்துக் கொண்டு படுக்கையில் எழுந்து உட்கார்ந்த கரிகாலன், அந்த அறையைச் சுற்றுமுற்றும் நோக்கினான். அறைச் சுவர்களிலிருந்த சித்திர வேலைப்பாடுகளும், ஆங்காங்கு போடப்பட்டிருந்த மஞ்சங்களும், அந்த அறை மன்னருக்காகவோ அல்லது அவரைச் சேர்ந்த உறவினர்களுக்காகவோ ஏற்பட்டிருக்க வேண்டுமென்பதை நிருபித்தன. மஞ்சங்களின் கைகளின் முகப்புகளிலிருந்த சிங்கத் தலைகளையும், மஞ்சங்களின் பிற்பகுதியில் உடல் சாயும் இடங்களுக்கு மேலே செதுக்கப்பட்டிருந்த வேங்கிநாட்டு ராஜ முத்திரைகளையும் கவனித்த கரிகாலன், இது மன்னர் தங்கும் அறையாகத்தான் இருக்குமென்று தீர்மானித்தான். தன்னை மண்டையிலடித்தவன் மன்னர் அறையில் தன்னைக் கிடத்த வேண்டிய அவசியமென்ன என்று யோசித்துப் பார்த்தான். அவனுக்கு ஏதுமே விளங்கவில்லை. அறையின் ஒரு மூலையில் தொங்கிக் கொண்டிருந்த திரைச்சீலையில் நெய்யப்பட்டிருந்த சித்திரமொன்றும், திரைச்சீலை காற்றில் ஆடியதால் அசைந்து அசைந்து அவன் குழப்பத்தைக் கண்டு நகையாடியது.

கரிகாலன் மெள்ளப் பஞ்சணையிலிருந்து கீழே இறங்கி அறையில் தீவிர யோசனையுடன் நீண்ட நேரம் உலாவினான். அதிர்ஷ்டத்தைத் தொடர்ந்து துரதிர்ஷ்டம் எப்படி வருகிறது என்பதை நினைத்து பெரிதும் வியப்பும் அடைந்தான். 'சைவத் துறவியிடம் கத்தியைக் கொடுத்துவிட்டு வந்த நான், பிரும்ம மாராயன் என் கச்சையைக் கவனித்ததும் எனக்கு முடிவு காலம் வந்து விட்டதென்றே நினைத்தேன். ஆனால், அங்கி, ராஜராஜ நரேந்திரனுடைய அங்கி

என்ன காரணமோ தெரியவில்லை, மூன்றெழுத்துக் கட்சியின் திருக்குவளைத் தலைவர் கட்சி ஊழியர்களின் கூட்டத்தில் ரகசியமாக, முதலமைச்சர், வீரமானவர், முத்தானவர் இவர்களை அதிகம் குறை கூறிக் கூட்டங்களில் பேச வேண்டாமென்றும், அதற்குப் பதிலாக, அமைச்சர்களாக உள்ள பனைமரத்துப்பட்டிக்காரர், பலாப்பழ ஊர்க்காரர், திருவண்ணாமலை மூன்றெழுத்துக்காரர் ஆகியோரைக் காட்டமாகத் தாக்கிப் பேசும்படியும் சொல்லியிருக்கிறாராம்.

கட்சியிலிருந்து சில காலம் நீக்கி வைக்கப்பட்டுச் சுயேச்சை எம்.எல்.ஏ.க்களாக இருந்த இருவரையும் முதலமைச்சர் மீண்டும் கட்சிக்குள் சேர்த்துக் கொண்டுவிட்டதற்கு, ஜனாதிபதி தேர்தல் வரும் சமயத்தில் தன் கட்சியைச் சேர்ந்த இரு எம்.எல்.ஏக்களைச் சுதந்திரமாக விட்டு வைக்கக் கூடாது என்பது காரணமாம்.

—லிப்ரன்

## சத்தம் போட்டுப் பேசாதீர்கள்



யாகையாலும், அரசர்கள் அங்கியில் எப்பொழுதும் பாதுகாப்புக்கு வாள் ஒன்றும் இருப்பது வழக்கமானதாலும் நரேந்திரனுடைய சிறுவாள் எனக்குக் கிடைத்தது. அதைக் காட்டித் தப்பினேன். ஆனால் வசந்த மண்டபத்தில் மன்னன் மகள் என்னை எதிர்பார்த்திருப்பாளென்று நினைத்து வந்தேன். காரிகையைக் காணப் போன இடத்தில், கட்டாரி தலையில் இறங்கியதுதான் மிச்சம். அப்பா! ஒரு கண்டத்திலிருந்து தப்பினால் அதைவிடப் பெரிய கண்டத்திலா அகப்பட்டுக் கொள்ள வேண்டும்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

'மறுநாள் நள்ளிரவில் வசந்த மண்டபத்துக்கு என்னை வரச்சொன்ன மன்னன் மகள், ஏன் அங்கு இல்லை? அவள் இல்லாதிருக்க, அவள் சொன்ன நேரத்தில் கோட்டைக் கதவைத் திறந்து வைத்தவர்கள் யார்? அரசகுமாரி என்னிடம் செய்தி சொல்லியனுப்பிய போது பணிப்பெண் மாலினியைத் தவிர வேறு யாருமில்லையே! அப்படியிருக்க நான் நள்ளிரவில் வரப்போகும் விஷயம் மற்றவர்களுக்கு எப்படித் தெரிந்தது?' என்று ஏதேதோ யோசித்துப் பார்த்தான்.

விடையேதும் கிடைக்காததால் உலாவுவதை நிறுத்திக்கொண்டு தன் கச்சையைச் சோதித்துப் பார்த்தான். கச்சையிலிருந்த இரண்டு மோதிரங்களும், செங்கதிர் மாலையும் தஞ்சைத் துறவி கொடுத்த ஓலையும் அப்படியே இருந்ததைக் கவனித்தான். கரிகாலன் மித மிஞ்சிய வியப்பால் பிரமித்தான். தன்னைத் தலையிலடித்துக் கொண்டு வந்தவன், தன்னைச் சிறிதும் சோதனை செய்யவே இல்லையென்பதையும்கூட உணர்ந்தும். தன்னைக் கொணர்ந்தவன்

நோக்கம் தான் எதுவாயிருக்கும் என்பதைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் சமயத்தில், அறைக் கதவு திறந்து காவலாளி ஒருவன் உள்ளே நுழைந்து கரிகாலனை மிகவும் பயபக்தியுடன் வணங்கி நின்றான்.

''யாரப்பா நீ?'' என்று விசாரித்தான் கரிகாலன்.

''தங்கள் அடிமை!'' என்றான் காவலாளி.

''காவலில் வைக்கப்படுகிறவர்களுக்கு அடிமைகள் உண்டா?''

''ஆகா, உண்டு. யார் காவலில் இருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தது. பதவிக்குத் தகுந்த மரியாதை.''

''எனக்கு அப்படி என்ன உயர் பதவி இருக்கிறது?''

''எனக்குத் தெரியாது எசமான். ஆனால் தங்களை மிகவும் மரியாதையாக நடத்துமாறு எனக்கு உத்தரவு. தங்களுக்கு எந்தப் பணிவிடையும் செய்ய வேண்டுமென்பது கட்டளை.''

''யார் கட்டளை?''

''நீங்கள் பல் துலக்கிக் குளித்துச் சாப்பிட்டதும் அழைத்துவர உத்திரவிட்டிருக்கிறார்கள்.''

''உத்தரவிட்டது யார் என்று கேட்கிறேன்,'' என்று சற்றுக் கோபத்துடன் கேட்டான் கரிகாலன். ஆனால் காவலாளி சிறிதும் மசியாமலே பதில் சொன்னான்.

''புரிந்தது எசமான். ஆனால் யார் என்பது எனக்குத் தெரியாது, மேலிடத்திலிருந்து உத்தரவு வந்திருப்பதாக அரண்மனைத் தலைமைக் காவலாளி சொன்னார். அதிகமாகத் தங்களிடம் பேசவேண்டாமென்றும் உத்தரவிருக்கிறது. குளியலுக்குத் தயார் செய்து விட்டேன். புறப்படுங்கள்.''

''வேறு ஆடையில்லையே

ஆறு வித்தியாசங்கள் விடை:



1. படம்
2. மேஜை விளக்கு
3. கேள்விக்குறி
4. டீப்பாய்
5. இழுப்பறை
6. கதவு நிலை

# மேலாளர்

19.3.87 தேதி குமுதம் இதழில் வெளிவந்த புதிர் இது:

ஓர் ஓட்டலில் முத்துசாமி, ராமகிருஷ்ணன், ஜம்புலிங்கம் என்று மூன்று பேர் வேலை செய்கிறார்கள். அவர்களில் யாரோ ஒருவர் சர்வர். யாரோ ஒருவர் சரக்கு மாஸ்டர். யாரோ ஒருவர் மேலாளர். அந்த ஓட்டலில் திரு. முத்துசாமி, திரு. ராமகிருஷ்ணன், திரு. ஜம்புலிங்கம் என்ற அதே பெயருடைய மூவர் வாடிக்கையாகச் சாப்பிட வருவதுண்டு.

1. திரு. ராமகிருஷ்ணன் தாம்பரத்தில் வசிக்கிறார்.
2. சரக்கு மாஸ்டர் காஞ்சிபுரத்துக்கும் தாம்பரத்துக்கும் இடையில் வசிக்கிறார்.
3. திரு. ஜம்புலிங்கம் வருடத்துக்கு ரூ. 20,000 சம்பாதிக்கிறார்.
4. சரக்கு மாஸ்டரின் அண்டை வீட்டுக்காரர்—வாடிக்கையாளர்களில் ஒருவர் —சரக்கு மாஸ்டரைப் போல் சரியாக மூன்று மடங்கு சம்பாதிக்கிறார்.
5. முத்துசாமி சீட்டாட்டத்தில் சர்வரைத் தோற்கடிக்கிறார்.
6. சரக்கு மாஸ்டரின் பெயர் கொண்ட வாடிக்கையாளர் காஞ்சிபுரத்தில் வசிக்கிறார்.

மேலாளர் யார்?

விடை:

சரக்கு மாஸ்டர், காஞ்சிபுரத்திற்கும் தாம்பரத்திற்கும் நடுவே வசிக்கிறார். சரக்கு மாஸ்டரின் அண்டை வீட்டுக்காரர் சரக்கு மாஸ்டரைப் போல் சரியாக மூன்று மடங்கு சம்பாதிக்கிறார்.









சரக்கு மாஸ்டர், திரு. ராமகிருஷ்ணனாக இருக்க முடியாது. காரணம், திரு. ராம கிருஷ்ணன் தாம்பரத்தில் வசிக்கிறார்.

சரக்கு மாஸ்டர் திரு. ஜம்பு லிங்கமாக வீட்டுக்காரராக கமுடியாது. காரணம் ஜம்புலிங்கத்தின் சம்பளமான 20,000 ரூபாயை மூன்றால் வகுக்க முடியாது.

எனவே சரக்கு மாஸ்டரின் அண்டை வீட்டுக்காரர் திரு. முத்துசாமி யாகத்தான் இருக்க வேண்டும்.

சரக்கு மாஸ்டரின் பெயர் கொண்ட வாடிக்கையாளர் காஞ்சிபுரத்தில் வசிக்கிறார்.

அவர் திரு. ராமகிருஷ்ணனாக இருக்க முடியாது. காரணம், திரு. ராம கிருஷ்ணன் தாம்பரத்தில் வசிக்கிறார்.

அந்த வாடிக்கையாளர் திரு. முத்துசாமியாக இருக்க முடியாது. காரணம் திரு. முத்துசாமியின் அண்டை வீட்டுக்காரரான சரக்கு மாஸ்டர் காஞ்சி புரத்திற்கும் தாம்பரத்திற்கும் நடுவே வசிக் கிறார். எனவே அந்த வாடிக்கையாளர் திரு. ஜம்புலிங்கமாகத்தான் இருக்க வேண்டும். எனவே சரக்கு மாஸ்டரின் பெயரும் ஜம்புலிங்கம்தான்.

முத்துசாமி சீட்டாட்டத்தில் சர்வரைத் தோற்கடிக்கிறார். எனவே சர்வர் ராம கிருஷ்ணனாகத்தான் இருக்க முடியும்.

எனவே முத்துசாமிதான் மேலாளர்.

சரியான விடை எழுதியவர்கள் எத்தனை பேர்? பரிசுக்குரியவர் யார்? 83'ம் பக்கம்.

# யார்?

எனக்கு,'' என்றான் கரிகாலன்.

''அதற்கெல்லாம் ஏற்பாடா யிருக்கிறது,'' என்ற காவலாளி, தன்னைத் தொடரும்படி கரிகாலனுக்குச் சமிக்ஞை செய்தான். அவனைத் தொடர்ந்து சென்ற கரிகாலனுக்கு ஆச்சரியத்தின் மேல் ஆச்சரியம் காத்திருந்தது. ஓர் அரசன் ஸ்நானம் செய்வதற்கு வேண்டிய சகல வசதிகளும் ஸ்நான அறையில் இருந்தன. ஸ்நானத்தை முடித்ததும் அவனுக்குக் கொடுக்கப்பட்ட உடை, முந்திய நாளன்று வசந்த மண்டபத்தில் மன்னன் மகள் தனக்கு அளித்தது போன்ற உடையாக இருக்கக் கண்டு, 'ராஜராஜ நரேந்திரனின் உடையை நமக்கு அளிக்கக்கூடியது யாரா யிருக்கும்? அரசகுமாரிதான் இங்கு நம்மைக்கொண்டு வந்திருக்கிறாளோ? அப்படியானால்—மண்டையிலடித்து, கொண்டு வருவானேன்? அழைத்தால் நானாக வரமாட்டேனா?' என்று நினைத்துக் கொண்டு, உடையை அணிந்து கொண்டு மோதிரங்களையும் செங்கதிர் மாலையையும் தஞ்சைத் துறவியார் சோழர் படைத் தலைவனான ராஜராஜ அரையனுக்குக் கொடுத்த ஓலையையும் கச்சையில் பத்திரப்படுத்திக் கொண்டு, மீண்டும் பழைய அறைக்கு வந்தான். அங்கு வந்ததும் காலை போஜனமும் அளிக்கப்பட்டது.

நிம்மதியாக ஸ்நானமும் சுவை யான சிற்றுண்டியும் கிடைத்ததன் காரண மாகப் பழைய நிலையை அடைந்துவிட்ட கரிகாலன், தன்னை அரண்மனைக்குக் கொண்டு வந்தவரைச் சந்திக்கும் நேரத்தை எதிர்பார்த்து நின்றான். ஒரு ஜாம நேரத்திற்கெல்லாம் அரண்மனை ஆலாட்சி மணி முழங்கியது. அதன் சப்தத்தோடு குதிரை வீரர்கள் படு வேகத்தில் பாய்ந்து வந்து அரண்மனை இராக் காவலரை அனுப்பி வைத்ததால் உண்டான கோஷமும் கலந்து கொள்ளவே, மன்னர் குடிகளுக்குப் பேட்டி கொடுக்கும் நேரம் வந்து விட்டதென்பதைக் கரிகாலன் அறிந்து கொண்டான். ஆலாட்சி மணி ஒலித்த அடுத்த சில வினாடிகளுக்கெல்லாம் அவனுக்கு அழைப்பு வந்தது.

பாதம் வரையில் தொங்கும் நீண்ட கத்தியுடன், அறைக்குள் நுழைந்த கம்பீரமான வீரன் ஒருவன், ''தாங்கள் புறப்படச் சித்தமா?'' என்று விசாரித் தான்.

''எங்கு போக வேண்டும்?''

# புத்தகம்

## கண்ணன் காட்டிய வழி

(ஒன்பதாம் அச்சு —ராஜாஜி —பக்.176 —ரூ.10 — வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, சென்னை 600 017)

கீதையில் சொல்லப்பட்டுள்ள தத்துவத்தின் விளக்கம். ''வேதத்தில் வேள்வி செய்யப்பட வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. பற்றற்றுச் செய்யப்பட ஒரு தொழில் வேள்வியாகும்.''

## மாமறை ஒளியில் மானிட இனவிருத்தியும் தாய்ப்பாலும்

(கே.கே. முஹம்மது ஹனிபா —பக். 82 —ரூ.6 —ஹனீப் பப்ளிஷர்ஸ், 22ஏ, ஹவுத் அம்பலம் தெரு, இளையான்குடி 623 702)

சிசு வளரும் விதம்; தாய்ப்பாலின் அவசியம் இவைபற்றிக் குரானில் சொல்லப்பட்டிருப்பவை.

## நண்பர்களுக்கு அண்ணா

(சி.என். அண்ணாதுரை —பக்.60 —ரூ.4.50 —பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, சென்னை 600 017)

தனித் திராவிட நாடு வேண்டுமென்ற கோரிக்கை கைவிடப்பட்டபோது, தி.மு.கழகத்தவர் மனத்தில் எழுந்த சில கேள்விகளுக்கு அண்ணா தந்த பதில்கள்.

## கவிஞர் கம்பதாசன் வாழ்வும் பணியும்

(சிலோன் விஜயேந்திரன் —பக்.174 —ரூ.15 அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை 600 004)

திரைப் பாடலாசிரியர் கம்பதாசனின் வரலாறு.

## உருவப் படங்கள் வரைவது எப்படி?

(ஓவியர் ஆழி —பக்.50 —ரூ.7 —சித்தகலா பதிப்பகம் அகரக்கட்டம்பனூர், ஆழியூர், கீழ்வேளூர், தஞ்சை மாவட்டம்)

## செல்வம் தரும் தென்னை

(வா.செ. செல்வம் —பக்.110 —ரூ.15 —கோகோம் அண்டு கோ, புஷ்பமண்டபத் தெரு, திருவையாறு 613 204)

அனுபவம், ஆராய்ச்சி, ஆலோசனை —தென்னை மரம் வளர்ப்பது பற்றி.

## 1. சிறுவர் அறிவியல் களஞ்சியம்

(இரண்டாம் அச்சு — ஞானமூர்த்தி —பக்.80 — ரூ.5.50 —அனுராகம்).

## 2. அறிவியல் சிந்தனைகள்

(இரண்டாம் அச்சு — ராமமூர்த்தி —பக்.96 —ரூ.7 —இரண்டு புத்தகங்களும்: அனுராகம், 10, கண்ணதாசன் சாலை, சென்னை 600 017)




என்று கேட்டான் கரிகாலன்.

வந்தவன் மிகுந்த பணிவைக் காட்டினாலும், அவன் குரல் மட்டும் சற்றுக் கண்டிப்பாகவே இருந்தது. ''என்னைத் தொடர்ந்து வரவேண்டும்,'' என்றான் வீரன் பதிலுக்கு.

அவனை மேற்கொண்டு எந்தக் கேள்வியும் கேட்பதில் அர்த்தமில்லை என்பதைத் திட்டமாகத் தெரிந்து கொண்ட கரிகாலன் பதிலேதும் சொல்லாமல், அவனைப் பின் தொடர்ந்தான். அரண்மனை உப்பரிகையின் நீண்ட தாழ்வாரங்களின் வழியாகவும், வளைந்து வளைந்து கீழே இறங்கிய படிகளின் வழியாகவும், கரிகாலனை அழைத்துச் சென்ற வீரன் அரண்மனைக்கு முன்புறமிருந்த பசும் புற்றரையையும் கடந்து, எதிரேயிருந்த பிரம்மாண்டமான மற்றொரு மாளிகையை நோக்கி நடந்தான்.

மாளிகையின் மூன்று வாயில்களிலும் காவல் பலமாயிருந்தது. குதிரைகளில் அமர்ந்து பெரும் வேல்களைத் தாங்கி நின்ற வீரர்கள் பலர் சிலைகள் போல் நின்றிருந்தார்கள். ராஜ உடைகளை அணிந்த பலர் வாகனங்களில் வந்திறங்கி, மாளிகைக்குள் போய்க் கொண்டும் வந்து கொண்டுமிருந்தார்கள். சாதாரணக் குடிமக்கள் தங்கள் குறைகளைத் தெரிவித்துக்கொள்ள வாசலில் குவிந்து கிடந்தார்கள். இந்தக் கூட்டங்களையெல்லாம் தாண்டிக் கரிகாலனை அழைத்துச் சென்ற வீரன் மாளிகைக்குள் எந்தவிதத் தடையுமின்றிச் சென்றான். மாளிகையின் முன் மண்டபத்தில் பேட்டிக்குக் காத்துக் கொண்டிருந்த பல பிரபுக்களைக்கூட லட்சியம் செய்யாமல் அவன் உள்ளே தன்னை அழைத்துச் சென்றதைக் கண்ட கரிகாலன், மன்னன் சன்னிதானத்துக்குத் தான் செல்வதாகவே நினைத்தான். மாளிகையின் முதல் உப்பரிகையில் சென்றதும், ஓர் அறை வாசலில் அவனைச் சற்று நேரம் நிற்க வைத்த வீரன் அங்கிருந்த காவலாளியின் காதில் ஏதோ கிசுகிசுவென்று சொன்னான். அதைக் கேட்டதும், ஏதோ புரிந்து கொண்டது போல் தலையசைத்த அந்தக் காவலாளி, உள்ளே சென்று விலையுயர்ந்த ஆடைகளைத் தரித்துக் கொண்டிருந்த ஒரு பெரிய மனிதருடன் திரும்பி வந்தான். அவருடைய உடையிலிருந்தும், இடுப்பில் பட்டையாக வளைத்துக் கட்டப்பட்டிருந்த சரிகைப் பட்டையிலிருந்தும்,

அவர் அரண்மனை ஸ்தானீகராயிருக்க வேண்டுமென்று தீர்மானித்தான். கரிகாலனைச் சிறிது நேரம் அவர் கூர்ந்து நோக்கினார். பின்னர் தம்முடன் உள்ளே வரும்படி தலையை அசைத்து வழிகாட்டிச் சென்றார். அறை மிக நீளமாயிருந்தது. அதன் விஸ்தீரணத்தையும், உயரத்தையும், அழகையும் கண்டு, இது அறையா, மண்டபமா என்று பிரமித்துக்கொண்டே நடந்த கரிகாலன், அந்த விஸ்தீர்ணமான அறைக்கு உள்ளேயிருந்த மற்றோர் அறை வாசலில் சிறிது நேரம் நிற்க வைக்கப்பட்டான். அந்த உள் அறைக்குள் சென்று, கண்ணிமைக்கும் நேரத்தில் திரும்பி வந்த ஸ்தானிகர், ''மன்னர் உங்களைக் காண்பார், வாருங்கள்!'' என்று கூறி அழைத்துக் கொண்டு அறைக்குள் நுழைந்தார். மன்னர் என்றதும் ராஜராஜ நரேந்திரனைக் காணப் போவதாக எண்ணி அறைக்குள் நுழைந்து தலை தூக்கிப் பார்த்த கரிகாலன், அந்த அறையிலிருந்து மகராசனத்தில், நடுத்தர வயதுள்ள திடகாத்திரசாலியான ஒரு மனிதன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு பிரமித்துப் போனான். அப்படி அவன் பிரமையடைந்து நிற்பதைக் கண்ட ஸ்தானிகர் நடுங்கும் குரலில், ''ஜெயசிம்ம சாளுக்கிய மன்னர் இவர்தான். சீக்கிரம் தலை தாழ்த்துங்கள்,'' என்று காதருகே முணுமுணுத்தார் ஸ்தானிகர்.

கரிகாலன் தலை வணங்கி, மீண்டும் தலை தூக்கி ஜெயசிம்ம சாளுக்கியனை நோக்கினான். வல்லூறின் கண்களைப் போல் ஜொலித்த இரண்டு கூர் விழிகள் அவன் இதயத்தையே ஊடுருவினபோல் நோக்கிக் கொண்டிருந்தன. மேற்குத் திசையில் சோழ நாட்டை ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருந்தவனும், வேங்கி நாட்டு அரசியலில் தலைவிதியை நிர்ணயிக்க முனைந்தவனும், நிரஞ்சனாதேவியின் பரம எதிரியுமான ஜெயசிம்ம சாளுக்கியன் எதிரில் தான் நிற்பதை உணர்ந்து கொண்ட கரிகாலன், பலதரப்பட்ட உணர்ச்சிகளுக்கு வசமானான். மிகத் திறமைசாலியும், ஏராளமான ஒற்றர்களை வைத்திருப்பவனும் சோழர் படைத் தலைவனுமான பிரம்மமாராயனுக்கும் தெரியாமல் வேங்கி நாட்டுத் தலைநகருக்குள் நுழைந்துவிட்ட ஜெயசிம்ம சாளுக்கியனின் இணையற்ற திறமையை எண்ணிப் பிரமித்துப்போன கரிகாலனை, ஜெயசிம்ம சாளுக்கியனின் இதழ்களில் தோன்றிய புன்முறுவலொன்று இன்னும் அதிகமாகப் பிரமிக்க வைத்தது. ஜெயசிம்மன் வாயிலிருந்து அடுத்தபடி உதிர்ந்த வார்த்தைகள் அந்தப் பிரமிப்பை உச்ச நிலைக்குக் கொண்டு போய் விடவே, கற்சிலையெனச் சமைந்து நின்றான் கரிகாலன்.

(தொடரும்)

---

# பு(த்)தகம்

## அரதன மாலை

(மு. முத்து வேங்கடாசலம் —பக். 144 —ரூ. 11 —செல்வி பதிப்பகம், காரைக்குடி 623 001)

'ரத்னாவளி' என்ற புகழ்பெற்ற வடமொழி காதல் நாடகத்தின் தமிழாக்கம்.

## நாடக மேதை பெர்னாட்ஷா

(சாமி பழனியப்பன் —பக். 88 —ரூ. 8 —கமலாலயம், ஏ3, பூபதி நகர், சென்னை 600 024)

ஷாவின் வாழ்க்கைச் சுருக்கம்: அவர் எழுதிய பல்வேறு நாடகங்களின் மையக் கருத்து; அவருடைய வாழ்க்கையில் நடந்த சில சம்பவங்கள்.

## ஸ்ரீ சாரதா தேவியின் அன்பு மொழிகள்

(தொகுப்பு —பக். 460 —ரூ. 20 —ஸ்ரீராம கிருஷ்ண மடம், 16, ராமகிருஷ்ணமடம் சாலை, சென்னை 600 004)

சுவாமி விவேகானந்தர் போன்ற பெரியோர்களுக்கு வழிகாட்டிய ராமகிருஷ்ண பரமஹம்சரின் துணைவியாரின் வரலாறு. பக்தர்களுடனும் சீடர்களுடனும் அவர் நடத்திய உரையாடல்களுடன்.

## திருவரங்க் ராஜகோபுரம்

(ப. சுப்பிரமணியன் —பக். 126 —ரூ. 15 —இசையரசி பதிப்பகம், 25, பெரியார் நகர், திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி 5)

திருவரங்க வரலாறும், கோவில் அமைப்பும், இராஜகோபுரம் பற்றிய விவரங்களும் படங்களுடன்.

## 1. ஸ்ரீரங்க புராணம்

(ஏ.எஸ். வழித்துணை ராமன் —பக். 100 —ரூ. 5 —பாரதி)

தலபுராணம், கோவில் வரலாறு, விழாக்கள், துதிப்பாடல்கள்.

## 2. வீரத்தின் பன்மை தீர்ப்பான்

தி.அ. சொக்கலிங்கம் —பக். 132 —ரூ. 9.50 —இரண்டு புத்தகங்களும்: பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, சென்னை 600 017)

பதின்மூன்று இலக்கியக் கட்டுரைகள்.

வீரன் என்றால் இராமன். இராமன் என்றால் வீரன். அவனுக்குச் சமமான இரண்டாவது வீரன் கிடையாது. அதைத்தான், 'வீரத்தின் பன்மை தீர்ப்பான்,' என்று குறிப்பிட்டார் கம்பர். இராமன், இந்திரசித்தன், கும்பகர்ணன் இவர்களது வீரத்தை ஆராயும் முதல் கட்டுரையின் தலைப்பே தொகுப்புக்குத் தரப்பட்டிருக்கிறது.

# மன்னன் மகள்



## 18. இரண்டு வைரங்கள்

ஐந்தாவது விக்கிரமாதித்தன் மகனும், பாரத நாட்டின் சரித்திரத்திலே அழியாத இடம் பெற்றவனுமான ஜெயசிம்ம சாளுக்கியனை எதிர்பாராது சந்திக்க நேர்ந்தபடியாலும், அதைவிட எதிர்பாராத விதமாக அவனிடமிருந்து எழுந்த கேள்வியாலும், கல்லெனச் சமைந்து நின்ற கரிகாலன் சில விநாடிகளில் சாளுக்கிய மன்னன் மீது தனது ஆராய்ச்சி விழிகளை ஓட்டினான்.

ஆறடிக்கும் மேலாக நல்ல உயரத்துடன் இருந்த ஜெயசிம்மன், அப்புறமோ இப்புறமோ சாயாமல் மகராசனத்தின் நடுவே திடமாக உட்கார்ந்திருந்தான். எந்த இடத்திலும் அதிகப் பருமனோ இளைப்போ இல்லாமல் ஒரே சீராக இருந்த அவனுடைய தங்கநிற மேனியில், சதை அழுத்தமாகப் பிடித்துத் திடகாத்திரமான உருவத் தோற்றத்தை அவனுக்கு அளித்திருந்தது. திண்மையான அவன் கைகள் முழுவதும் அங்கியால் மூடப்படாததால் முழங்கைக்குக் கீழேயிருந்த பகுதியில், வெட்டுக் காயங்கள் பல தெரிந்து, அவன் பல போர்களைக் கண்ட மாபெரும் வீரன் என்பதைப் பறை சாற்றின. கம்பீரமான அந்த முகத்தில் காணப்பட்ட பெரும் மீசைகூட அவன் அழகைக் குறைக்கச் சக்தியற்றிருந்தது. அவனுடைய விசாலமான நெற்றியும் கூர்மையான நீண்ட நாசியும் அவன் பழைய ஆரிய வமிச பரம்பரையில் வந்தவன் என்பதை நிரூபித்தன. பருந்தின் கண்களைவிடக் கூர்மையாகப் பார்க்கும் சக்தி வாய்ந்த அவன் கண்களில் ஏதோ ஒரு புதிய ஒளி இருந்து கொண்டே இருந்தது. அந்த ஒளி கண்ணுக்கு அழகைவிடச் சூழ்ச்சி நிரம்பிய பார்வையை அளித்ததால், ஜெயசிம்ம சாளுக்கியனிடம் பேசும்போது ஓரளவு எச்சரிக்கையுடனேயே பேச வேண்டுமென்பதைக் கரிகாலன் தீர்மானித்துக் கொண்டான்.

சாண்டில்யன்

கரிகாலன் தன்னைக் கண்டு கல்லாய்ச் சமைந்துவிட்டதையும், பிறகு சமாளித்துக் கொண்டு தன்னை ஆராய முற்பட்டதையும் கவனித்த ஜெயசிம்ம னின் இதழ்களில் குரூரமான புன்முறுவல் ஒன்று படர்ந்தது. எதிரே தன்னைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்த கரிகாலன் முக ஜாடையைப் பார்த்த ஜெய சிம்ம சாளுக்கியன் முகத்தில் திடீரென அந்தப் புன்முறுவல் மறைந்து, ஒருவிதச் சந்தேகச் சாயை படரலாயிற்று. ஆனால் எந்த உணர்ச்சிகளையும் நிமிஷ நேரத்தில் மறைத்துக் கொள்ளக்கூடிய ஆற்றல் வாய்ந்த ஜெயசிம்ம சாளுக்கியன், அந்தச் சந்தேகக் குறியையும் வெளியில் காட்டா மல் உள்ளடக்கிக் கொண்டு, ''கரிகாலா! விமலாதித்தன் மகள் நேற்றிரவு வசந்த மண்டபத்திற்கு உன்னை எதற்காக வரச் சொன்னாள்?'' என்று மீண்டுமொரு முறை தன் கேள்வியை வீசினான்.

ஜெயசிம்மனை ஏறெடுத்துப் பார்த்து, அவனை ஓரளவு எடை போட்டுக் கொண்டதால் அதிகப் பொய் அவனிடம் பலிக்காதென்பதைக் கவனித்த கரிகாலன் பொய்யையும் உண்மையையும் கலந்து பேச ஆரம்பித்தான். மன்னன் மகள் சதியில் சிக்கியிருக்கிறாளென்பதற் குச் சரியான சாட்சியம் மட்டும் கிடைக்கு மானால், ஜெயசிம்ம சாளுக்கியன் அவளை ஒழித்து விடுவானென்பதையும், தன் மூலம் அந்தச் சாட்சியத்தைச் சிருஷ்டிக்கவே அவன் முயல்கிறானென்பதையும் லவலேசமும் சந்தேகமில்லாமல் புரிந்து கொண்ட கரிகாலன் மிகுந்த எச்சரிக்கை யுடனேயே பதில் சொல்லத் துவங்கி, ''விமலாதித்தன் மகளா! நிரஞ்சனா தேவியைத்தானே தாங்கள் குறிப்பிடு கிறீர்கள்?'' என்று வினவினான்.

''ஆம்!'' ஒரே வார்த்தையில் வந்தது ஜெயசிம்ம சாளுக்கியனின் பதில், மிகக் கண்டிப்பான குரலில். அவன் பார்வை அவன் மேற்கொண்டு பேச இஷ்டப்படவில்லையென்பதையும், தகவலைக் கரிகாலனிடமிருந்து எதிர்பார்ப்பதையும் வலியுறுத்தியது.

''மன்னவா! தங்கள் கேள்வி தவறாயிருக்கிறது. திருத்திப் பதில் சொல்ல அனுமதி உண்டா?'' என்று மிகப் பணிவுடன் கேட்டான் கரிகாலன்.

இந்தப் பதில் ஜெயசிம்மனுக்கு வியப்பைக் கொடுத்திருந்தாலும், அதை அவன் முகம் வெளிக் காட்டவில்லை.

''கேள்வி தவறா?'' என்ற கேள்வி மிகச் சாதாரணமாகவே ஒலித்தது. குரலில் முதலிருந்த கடுமைகூட இல்லை.

மிக அபாயமான மனிதனிடம் தான் சிக்கியிருப்பதைக் கரிகாலன் உணர்ந்து கொண்டான். மன்னன் தன்னைச் சரியானபடி சோதிக்கத் தீர்மானித்திருக்கி றானென்பதையும் தான் மிகுந்த எச்சரிகையுடன் நடந்து கொண்டா லொழியத் தலை தப்புவது தம்பிரான் புண்ணியம்தானென்பதையும் திட்டமாகத் தெரிந்து கொண்ட கரிகாலன், ''ஆமாம், மன்னவா! கேள்வியில் ஒரு சிறு தவறு இருக்கிறது!'' என்றான்.

''என்ன தவறு?''

''மன்னன் மகள் என்னை வசந்த மண்டபத்திற்கு வரச் சொன்னதாகக் குறிப்பிட்டீர்கள்.....''

''ஆமாம். உண்மை அது தானே?''

''அதல்ல மன்னவா!''

''அப்படியா! உண்மை சற்று மாறுபட்டிருக்கிறதோ?''

''ஆமாம், மன்னவா!''

''உன்னை வசந்த மண்டபத் துக்கு வரச் சொல்லி நிரஞ்சனா தேவியிட மிருந்து ஆணையில்லை?''

''இல்லை.''

''அரச மகளிர் வேனிற் காலத் தில் உறங்கும் வசந்த மண்டபத்தை வேடிக்கை பார்க்கப் போயிருக்கிறாய்....?''

''வேடிக்கை பார்க்கப் போக வில்லை மன்னவா.''

''திருடவா?''

இந்தக் கேள்வி கரிகாலனுடைய நிதானத்தையும் ஓரளவு குலுக்கவே, அவன் கண்களில் கோபம் லேசாகத் துளிர்த்தது. தான் சமாளிக்க வேண்டிய மனிதனை உத்தேசித்துக் கோபத்தை



அடக்கிக் கொண்டு புன்முறுவலை வரவழைத்துக் கொண்டான். ''சாளுக்கிய மன்னர்களுக்குத் திருடர்களிடம் பழக்கமுண்டென்று இதுவரை கேள்விப் பட்டதில்லை,'' என்ற அவன் பதிலில், பரிகாசமும் கலந்திருந்தது.

''எனக்குத் திருடர்களிடம் சம்பந்தமா?'' என்று கேட்ட ஜெயசிம்ம சாளுக்கியன் குரலில், ஆச்சரியம் தொனித்ததே தவிரக் கோபச் சாயை இம்மிகூட இல்லாததைக் கண்ட கரிகாலனே வியப்பினால் அசந்து போனான். இருந்தாலும் உணர்ச்சிகளை வெளியில் காட்டாமல், ''சம்பந்தம் மட்டுமல்ல மகாராஜா! அவர்களிடம் தங்களுக்குள்ள மதிப்பும் அளவற்றதாயிருக்கிறது,'' என்றான்.

''திருடர்களிடம் எனக்கு மதிப்பா!''

''ஆம் மகாராஜா! திருடனுக்கு நேற்றிரவு படுக்க மலர்ப் படுக்கை அளித்திருக்கிறீர்கள். காலையில் ராஜ ஸ்நானமும், அரச போஜனமும், விலை உயர்ந்த பட்டாடையும் கிடைத்திருக்கிறது. என்னைப் போன்ற திருடனிடத்தில் தங்களுக்கு எத்தனை மதிப்பு!'' என்றான் கரிகாலன்.

ஜெயசிம்ம சாளுக்கியனுக்குக் கரிகாலன் வார்த்தைகளால் கோபம் இம்மியளவும் ஏற்படவில்லை. ''உன்னைத் திருடன் என்று சொல்லவில்லை கரிகாலா! மன்னன் மகள் உன்னை வரச் சொல்லவில்லையென்று சொன்னாய்; நீயாகப் போனதாகக் கூறினாய்,'' என்று வார்த்தைகளை முடிக்காமல் விட்ட ஜெயசிம்மனை இடைமறித்த கரிகாலன், ''மன்னவா! நானாகப் போனால் திருடத்தான் போக வேண்டுமா?'' என்று வினவினான்.

''சந்தர்ப்ப சாட்சியங்கள் அப்படித்தான் சுட்டிக் காட்டுகின்றன,'' என்றான் ஜெயசிம்மன் சாவதானமாக.

> டிரைவர் 1: என் முதலாளி ரொம்ப மரியாதை எதிர்பார்ப்பார்.
>
> டிரைவர் 2: அதனாலே என்ன?
>
> டிரைவர் 1: கார் ஓட்டும்போது கூட நின்னுக்குனுதான் ஓட்டணும் என்கிறார்.
>
> —மு. சுதாகர்.

''சந்தர்ப்ப சாட்சியங்களா?''

''ஆமாம் கரிகாலா! உன்னுடைய நண்பனாக இந் நகருக்குள் வந்த சேர நாட்டு ஒற்றனான ஜெயவர்மன் பெரிய திருடன், சோழ மன்னன் போக்கிஷத்திலிருந்தே சரித்திரப் பிரசித்தி பெற்ற செங்கதிர் மாலையைக் களவாடி விட்டவன். உன்னையும் உன் தோழனையும் என் வீரர்கள் சுற்றிக் கொண்டதும், எப்படியோ தப்பியோடி விட்டீர்கள். ஜெயவர்மன் மறைந்துவிட்டான்; நீயோ நள்ளிரவில் மன்னன் மகள் வசந்த மண்டபத்துக்குள் நுழைந்திருக்கிறாய். நீயோ திருடனுடைய நண்பன்.....'' என்று வாசகத்தை முடிக்காமலே விட்டான் ஜெயசிம்ம சாளுக்கியன்.

தன் உண்மை நிலை கரிகாலனுக்கு அப்பொழுதுதான் நன்றாகப் புரியலாயிற்று. இந்த நாட்டில் காலடி வைத்ததிலிருந்து ஜெயசிம்மனுடைய ஒற்றர்கள் தன்னைக் கவனித்து வந்திருக்கிறார்கள் என்பதையும், தன்னுடைய ஒவ்வொரு நடவடிக்கையையும் அவ்வப்பொழுது ஜெயசிம்மனுக்கு அறிவிக்கப் பட்டிருக்கிறதென்பதையும் சந்தேகத்துக்கு சிறிதும் இடமின்றித் தெரிந்து கொண்டான் கரிகாலன். ஜெயசிம்மன் நோக்கப்படி தான் நடக்கவில்லை, தன்னைத் திருடனென்று தூக்கில் மாட்டிவிட ஜெயசிம்மனிடம் தகுந்த அத்தாட்சியிருப்பதையும், அதையே ஜெயசிம்மன் சுட்டிக் காட்டுகிறானென்பதையும் புரிந்து கொண்ட கரிகாலன் கேட்டான், ''மன்னவா! என்னைத் திருடனென்று தாங்கள் நம்புகிறீர்களா?'' என்று.

''நான் எதையும் நம்பவில்லை. அரச மகளிர் தனித்திருக்கும் வசந்த மண்டபத்தில் நீ நள்ளிரவில் நுழைந்திருக்கிறாய். அத்தனை ரகசியமாக நுழையக் கூடியவர்கள் இருவர். ஒன்று, நீ மன்னன் மகளிடம் வந்த ரகசிய தூதனாயிருக்க வேண்டும் அல்லது திருடனாய் இருக்க வேண்டும். இருவரில் நீ யார்?'' என்று கேட்டான் ஜெயசிம்மன்.

இந்த இடத்தில் கொஞ்சம் உண்மையைக் கலந்து கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்த கரிகாலன், ''தூதன் மகாராஜா!'' என்று பதில் சொன்னான்.

''யாருடைய தூதன்?''

''சோழ நாட்டுத் தூதருடைய தூதன்!''

*7.5.87 & 21.5.87* இதழ்களில் **100** கிராம் சோப்பின் உச்ச விலை ரூ. **3.25** என்று அச்சாகி உள்ளதை ரூ. **3.35** என்று திருத்திப் படிக்கக் கோரப்படுகிறது.



சென்னை மாம்பலத்தில் கிருஷ்ணவேணி தியேட்டருக்கருகில் ஓர் ஓட்டலில் இது நடக்கிறது.

சர்வரிடம் நாம் சாப்பிட வேண்டியதைக் கூறியவுடன், சர்வர் சிறிது தூரத்தில் நின்று கொண்டிருக்கும் வேறு ஒருவரிடம், நாம் கூறிய பலகாரத்தின் பெயரைச் சொல்கிறார். அந்த நபரின் அருகில் ஒரு மைக் போன்ற கருவி இருக்கிறது. ஒரு போர்டில் பல ஸ்விட்சுகளும் இருக்கின்றன. அவர் உடனே சர்வர் சொன்ன அயிட்டத்திற்குரிய சுவிட்சைப் போட்டு மைக்கில், அந்த அயிட்டம் தயார் செய்கிறவரிடம், தயார் செய்யச் சொல்கிறார். சிறிது நேரத்தில் நாம் கூறிய அயிட்டம் தயாராகி நம் மேசைக்கு வந்து விடுகிறது.

—மடிப்பாக்கம் வி. ஆவுடைநம்பி.

''யார், பிரும்ம மாராயரின் தூதனா?''

''ஆம் மகாராஜா!''

''யாரிடம் தூது அனுப்பினார்?''

''அது தங்களுக்குத் தெரிந்தது தானே?''

''இருக்கட்டும், கேட்பதற்குப் பதில் சொல்.''

''மன்னன் மகளிடம்தான்.''

''எதற்காகா?''

''அவர்கள் அபிப்பிராயத்தை அறிந்து வருவதற்காக.''

''எதைப் பற்றி அபிப்பிராயம்?''

''தங்கள் ஆதிக்கத்தை வேங்கி நாட்டிலிருந்து அகற்றப் பிரும்ம மாராயன் முயற்சி செய்கிறார்.'' இந்தப் பதிலைச் சொன்ன கரிகாலன் ஜெயசிம்மனைக் கூர்ந்து நோக்கினான். ஜெயசிம்மன் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் தோன்றவில்லை. ஏதோ நண்பனுடன் பேசுவது போன்ற சாதாரணக் குரலிலேயே ஜெயசிம்மன் கேள்விகளைத் தொடர்ந்து கேட்டான்.

''அது சகஜம்தான். பிரும்ம மாராயன் சோழ நாட்டுத் தூதர். சோழ நாடும் மேலைச் சாளுக்கிய நாடும் போரில் இறங்கியிருக்கின்றன. மேலைச் சாளுக்கியர்களின் கையை வேங்கி நாட்டில் ஓங்கிவிடாதிருப்பது சோழர் தூதர் கடமைதான். அதைப் பற்றி நான் கேட்கவில்லை. அவர் முயற்சிக்கு மன்னன் மகள் பதில் எப்படியிருக்கிறது?'' என்று வினவினான் ஜெயசிம்மன்.

''மன்னவா! தங்களிடம் அதைப் பற்றிச் சொல்வது நம்பிக்கைத் துரோகமல்லவா?'' என்று ஏக்கத்தைக் காட்டினான் கரிகாலன்.

ஜெயசிம்மன் புருவங்கள் இலேசாக ஒன்று கூடின. கரிகாலனை அருகில் வரும்படி அவன் கை சைகை செய்தது. கிட்டே நெருங்கி வந்த கரிகாலனை நோக்கிய ஜெயசிம்மன், ''கரிகாலா! உண்மையைச் சொல். வேங்கி நாட்டில் யாருக்கும் கிடைத்தற்கரிய பதவியை உனக்குத் தருகிறேன்,'' என்றான்.

இந்தப் பதிலைக் கேட்ட கரிகாலன், உள்ளுக்குள் நகைத்துக் கொண்டாலும், வெளியே காட்டாமல், ''மன்னவா! பதவி எதற்கு? தங்கள் தயவிருந்தால் போதும். பிரும்ம மாராயர் தங்களைத் தீர்த்துக் கட்டச் சதியிலிறங்கியிருக்கிறார். அவருடன் இந்த நாட்டின் மூன்று படைத் தலைவர்களும் சேர்ந்திருக்கிறார்கள். அத்துடன் யாரோ அரிஞ்சயனாம். அவனும் சேர்ந்திருக்கிறதாகக் கேள்வி,'' என்றான்.

இந்தத் தகவல்கள் ஜெயசிம்மனுக்கு இம்மியளவு வியப்பையும் அளிக்கவில்லை. இந்தத் தகவல்களை அவன் ஏற்கனவே அறிந்திருப்பானென்ற நம்பிக்கையிலேயே இவற்றைக் கரிகாலன் அரசனிடம் சொன்னான். ஒன்றரை நாளுக்கு முன் வந்த தன் நடவடிக்கைகளையே கவனித்திருக்கும் ஜெயசிம்மனின் ஒற்றர்கள், பிரும்ம மாராயன் நடவடிக்கைகளை நிச்சயம் கவனித்திருப்பார்கள் என்பதில் கரிகாலனுக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. தான் அன்றிரவு வசந்த மண்டபத்துக்கு வரப் போவது தன்னைத் தவிர பிரும்ம மாராயனுக்கும் மன்னன் மகளுக்குமே தெரியுமென்பதையும், மன்னன் மகளோ பிரும்ம மாராயனோ இந்த விஷயத்தை வெளியிடக் காரணமில்லையாகையால், இந்த மர்மத்தில் இன்னொருவனும் கலந்திருக்க வேண்டுமென்பதையும் கரிகாலன் தீர்மானித்துக் கொண்டான். அப்படி கலந்திருப்பவன் ஒருவன், சதி செய்பவர்களில்

ஒருவனாயிருக்க வேண்டுமென்றும் நிர்ண யித்துக் கொண்டான். 'அவன் யார்?' என்ற கேள்வி கரிகாலன் உள்ளத்தே எழுந்து திரும்பத் திரும்ப ஒலித்தது. அதற்கு விடையேதும் காணாது தத்தளித்த கரிகாலனை நோக்கி, ஜெய சிம்ம சாளுக்கியன் கேட்டான், ''அது கிடக்கட்டும் கரிகாலா! சதியிலிறங்கும் பிரும்ம மாராயர் நிரஞ்சனா தேவியைக் கேட்டாரா?'' என்று.

''பிரும்ம மாராயர் தான் கேட்டார்.''

''உனக்கெப்படித் தெரியும் அது?''

''நான் நிரஞ்சனா தேவியைத் தேடி வருவது இது இரண்டாம் தடவை.''

''முதல் தடவை எப்போது பார்த்தாய்?''

''நேற்றுக்கு முந்திய நாள் இரவு.''

''நேற்றுக்கு முன் தினம்தானே இந்த ஊருக்கு வந்தாய்?''

''ஆமாம் மகாராஜா! நேற்று முன்தினம் வந்தேன். தங்கள் வீரர்கள் துரத்தினார்கள். நான் தப்பிப் பிரும்ம மாராயன் மாளிகைக்குள் ஓடிவிட்டேன். நான் சோழ நாட்டவனென்று தெரிந்த தும், பிரும்ம மாராயர் என்னை மறைத்து விட்டார். பிறகு, மன்னன் மகளிடம் தூது போய் வரவும் அனுப்பினார்.''

''உன்னைப் பிரும்ம மாராய ருக்கு முன்பே தெரியுமா?''

''தெரியாது.''

''முன்பின் தெரியாத ஒருவனை எப்படி இந்த விஷயமாக தூதனுப்பினார்?''

இந்தக் கேள்வி கரிகாலனை அயர வைக்குமென்று ஜெயசிம்மன் எதிர் பார்த்திருந்தால் அவன் ஏமாந்துதான் போனான். மன்னனை மிகவும் நெருங்கி வந்த கரிகாலன், தன் மடியிலிருந்த ஓர் ஓலையை எடுத்து ஜெயசிம்ம சாளுக்கியனிடம் கொடுத்தான். ஓலையி லிருந்த விலாசத்தைக் கண்டு, அதுவரை எதற்கும் அசையாத ஜெயசிம்ம சாளுக்கி யன் உணர்ச்சிகளும் அசைந்து கொடுத்தன. ''அரையன் ராஜராஜன்,'' என்று அவன் பெரிய இதழ்கள் முணுமுணுக்க, அவற்றுக்கு மேலேயிருந்த மீசையும் பயங்கரமாக அசைந்தது.

''ஆம் மகாராஜா! அது என் தந்தையின் பெயர்தான். நாகப்பட்டணத்துச் சூடாமணி விஹாரத் தில் கல்வி பயின்று விட்டு, அவரிடம் போகிறவன், வழியில் இங்கு அகப்பட்டுக் கொண்டேன். அவசியமானால், ஓலையைப் பிரித்துப் படித்துப் பாருங்கள்,'' என்றான் கரிகாலன்.

ஓலையின் முத்திரைகளை ஜாக்கிரதையாக உடைத்து ஓலையைப் படித்த ஜெயசிம்மனின் கண்களில் ஆச்சரிய மும் குழப்பமும் ஒருங்கே படர்ந்தன. ''பல வருஷங்களுக்கு முன்னால் நீங்கள் விட்டுப் போன குழந்தை இவன். பல கல்விகளும் பயின்று மீண்டும் உங்களிடம் வரு கின்றான். தஞ்சை புத்தாலயத்துத் தலைவன் பிரும்மானந்தன்,'' என்று இரண்டு வரிகளே இருந்தன. ஓலையின் கீழே பொறிக்கப்பட்டிருந்த முத்திரையில் புத்த மடாலயச் சின்னம் நன்றாகப் பொறிக்கப்பட்டிருந்தது.

''இதிலிருந்து நீ அரையன் ராஜராஜன் புதல்வனென்று திட்டமாகத் தெரியவில்லை,'' என்றான் ஜெயசிம்மன்.

''வேண்டாம். வளர்ப்புப் பிள்ளை என்றாவது வைத்துக் கொள்ளலாமல்லவா?'' என்று கரிகாலன் கேட்டான்.

''அது சாத்தியம்,'' என்றான் ஜெயசிம்மன்.

''எது சாத்தியமாயிருந்தாலும் இல்லாவிட்டாலும், என்னைத் தூது அனுப்புவதற்கு வேண்டிய நம்பிக்கையை இந்த ஓலை ஊட்டியது. தூது சென் றேன்.''

''நிரஞ்சனா தேவி என்ன சொன்னாள்?''

''சதிக்குத் தான் உடன்பட முடியாதென்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார். கிழக்குச் சாளுக்கியர் களான வேங்கி நாட்டு ராஜ பரம்பரைக்கும் மேலைச் சாளுக்கியர்கள் பரம்பரைக்கும் ரத்த சம்பந்த மிருக்கிறதென்றும், எதிரிகளான சோழர் களுடன் தான் எந்தவிதச் சம்பந்தமும் வைத்துக் கொள்ள முடியாதென்றும் கூறி விட்டார்.''

இந்தக் கோட்டைப் புளு கைக் கேட்ட ஜெயசிம்மன் கூட அயர்ந்துபோய், ஆசனத்திலிருந்து எழுந்து அறையில் நீண்ட நேரம்

உலாவினான். கரிகாலன் மேற்கொண்டு பேச்சைத் துவக்கி, ''அந்தப் பதிலைப் பிரும்ம மாராயரிடம் சொன்னேன். அவர் கோபத்தால் துடித்தார். தங்கள் சதித் திட்டத்திற்கு இசையாவிடில் நிரஞ்சனா தேவியையும் அகற்றிவிடத் திட்டம் தயாரிக்கப்படுமென்று எச்சரிக்க, என்னை நேற்றிரவு அனுப்பினார். பிறகுதான், தாங்கள் எனக்குத் தலையில் பிரசாதம் கொடுத்துப் பஞ்சணையில் கிடத்தி விட்டீர்கள்,'' என்றான்.

கரிகாலன் பேசியதை ஜெய சிம்மன் காதில் வாங்கிக் கொள்ளாமலே, வெகு நேரம் அறையில் உலாவினான். பிறகு கரிகாலனை நோக்கி, ''கரிகாலா! நிரஞ்சனா தேவி உன்னிடம் சொல்லி யனுப்பிய பதிலிலிருந்து உன்னை அவள் நம்பவில்லையென்று தெரிகிறது. இன்னுமொரு முறை முயன்று பார். அவள் மனம் மிக ஆழமானது. அளப்பது மிகவும் கஷ்டம். அதை மட்டும் அளந்துவிடு. உண்மையைக் கண்டுபிடி. பிறகு ஜெய சிம்ம சாளுக்கியன் கர்ணன் என்பதை அறிந்து கொள்வாய். நிரஞ்சனா தேவி இந்தச் சதியில் தீவிரமாக ஈடுபட்டி ருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அத்தாட்சி இல்லை. அத்தாட்சியை நீ கண்டுபிடிக்க வேண்டும். நிரஞ்சனா தேவியுடன் நெருங்கிப் பழகு,'' என்றான் ஜெயசிம்மன்.

''அவர்களை எப்படி அணுகுவது?''

''அணுகுவதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்.''

''என்ன ஏற்பாடு?''

''நீ அரையன் ராஜராஜனுடைய மகன் என்று சொல்கிறாய். அது பொய்யோ நிஜமோ, அவன் மகனாக உன்னை நான் ஏற்றுக் கொள்கிறேன். எதிரியின் மகனானாலும், பெரிய படைத் தலைவன் மகன் என்ற முறையில், உனக்கு அரண்மனையில் சகல வசதிகளும் அளிக்கப்படும். நானே உன்னை அரையன் ராஜராஜன் மகனாக ஏற்றுக் கொண்ட பிறகு, அரண்மனையில் உலவ உனக்கு எத்தடையுமிருக்காது. அரசகுமாரியை எத்தனை தடவை வேண்டுமானாலும் சந்திக்கலாம். புரிகிறதா?'' என்று சொல்லிய ஜெயசிம்மன், கரிகாலனைக் கூர்ந்து நோக்கினான். கரிகாலனும் அவனை நோக்கினான். இருவரும் ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்து கொண்டனர். ''மன்னவா! தாங்கள் என்னிடம் இத்தனை நம்பிக்கை வைக்கும் காரணம்?'' என்று, கடைசியாக வினவினான் கரிகாலன்.

''காரணம் இருக்கிறது. இப்பொழுது கேட்காதே. பிறகு ஒருமுறை சொல்லுகிறேன்,'' என்று சொல்லிய ஜெய சிம்மன் பேட்டி அத்துடன் முடிந்து விட்டது என்பதற்கு அறிகுறியாகக் கைகளைத் தட்டி ஸ்தானீகரை அழைத் தான். வைரமும் வைரமும் ஒன்றையொன்று அறுக்க முயல்வது போல், சொற்களால் பரஸ்பரம் ஆழம் பார்த்துக் கொண்ட அவ்விருவரும் அன்று அத்துடன் பிரிந்தனர்.

ஜெயசிம்ம சாளுக்கியன் தன் வார்த்தைப்படி நடந்து கொண்டான். அரையன் ராஜராஜன் மகன் வந்திருக்கிறான் என்ற பேச்சு, அரண்மனையெங்கும் காட்டுத் தீப் போலப் பரவிற்று. எதிரியின் மகனுக்குப் பெரிய விருந்தும் அளித்தான் ஜெயசிம்மன். விருந்து முடிந்தாலும், கவலை முடிவுறாத மனத்துடன், எல்லோரையும் பிரிந்து அரண்மனைத் தோட்டத்துக்குள் நுழைந்த கரிகாலன், எங்கெங்கோ சிந்தனைகள் பறந்தோட மெள்ள நடந்து சென்றான். இப்படி யோசித்துக்கொண்டே நடந்த அவன் பக்கத்திலிருந்த நந்தியாவட்டைச் செடிகளின் மறைவில், யாரோ இருவர் பேசுவதைக் கேட்டுச் சட்டென்று நின்றான். ஒன்று நிரஞ்சனா தேவியின் குரலென்று நிச்சயமாகத் தெரிந்தது. இன்னொன்று யார் குரலென்று நிச்சய மாகத் தெரியவில்லை. ஆனால் அரச குமாரி, அடுத்த இன்னொருவனைப் பெயரிட்டு அழைத்ததும் திக்பிரமை அடைந்தான் கரிகாலன். 'என்ன விந்தை இது! இவன் இங்கு எப்படி வந்தான்?' என்ற கேள்வியும், தொடர்ந்து பல எண்ணங்களும் அலைபோல் எழுந்து தாக்கவே, மன்னன் மகளின் கதி அதோகதியாகி விடுமோ என்ற நினைப்பால், அவன் உடலில் திகிலும் ஊடுருவிச் சென்றது.

(தொடரும்)



ஆறு வித்தியாசங்கள் விடை:

ஆறுதான் வித்தியாசம்

# மன்னன் மகள்

## 19. பஞ்சணையில் ஓர் அஞ்சுகம்

அரண்மனையை அடுத்து நின்ற செடிக் கும்பல்களின் மறைவில், அரசகுமாரியுடன் பேசியவன் யாரென்பதை அறிந்தவுடன் ஓரளவு திகைப்பும், அந்தத் திகைப்பைத் தொடர்ந்து எண்ணங்களின் அலைமோதலும் சித்தத்தில் ஏற்பட்டதால், செடிகளில் வெள்ளை வெளேரென்று நூற்றுக் கணக்கில் புஷ்பித்துக் கிடந்த நந்தியாவட்டை மலர்களின் நறுமணம்கூடக் கரிகாலன் உணர்ச்சிகளைத் தொடச் சக்தியற்றதாயிற்று. காவியங்களை நன்றாகப் படித்ததால் இயற்கையின் இன்பக் காட்சிகளின் சூட்சுமங்களை உணர்ந்து அவற்றை அனுபவிக்கக் கூடிய பரம ரசிகனான கரிகாலன், செடிகளின் மறைவில் நடந்த சம்பாஷணையின் காரணமாகத் தன்னைச் சூழ்ந்து நின்று இணையற்ற இன்ப ஜாலங்களை அள்ளி வீசிக் கொண்டிருந்த இயற்கைமீது கண்களைச் சிறிதும் ஓட்டாமல், பூதலத்தைப் பீடிக்கும் அரசியல் சிக்கல்களிலும், அரசகுமாரியின் கதி என்ன ஆகுமோ என்ற பீதியிலும் மனதைச் சிக்கவிட்டுத் தீர்க்காலோசனையில் இறங்கினான். அந்தத் தீர்க்காலோசனையைச் செடி மறைவிலிருந்து இரண்டாம் முறையாக எழுந்த அரசகுமாரியின் குரல் துண்டித்துவிடவே, அலைந்து கொண்டிருந்த தன் எண்ணங்களை ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து சம்பாஷணையை உற்றுக் கேட்கத் தொடங்கினான் கரிகாலன்.

''அரிஞ்சயா!'' என்று இரண்டாம் முறை ஒலித்தது அரசகுமாரியின் குரல். அதில் எல்லையற்ற கவலையும் கலந்திருந்தது.

''அரசகுமாரி!'' என்று எழுந்தது மிகக் குழைவான ஒரு குரல். இனிமை மிகுந்த குரல்தான். ஆனால் குழைவு அளவுக்கு அதிகமாக இருந்ததால், இந்தக் குரலை உடைய அரிஞ்சயன்மீது கரிகாலனுக்கு ஓரளவு நம்பிக்கை குறையத்தான் செய்தது. ஆனால் அரிஞ்சயனைப் பூராவும் எடை போடும் முன்பு, சம்பாஷணையைக் கவனிப்போமென்று அதில் நாட்டத்தைச் செலுத்தினான் கரிகாலன்.

''அரிஞ்சயா! நீ இத்தனை நேரம் சொல்லியதெல்லாம் நான் அறிந்ததுதானே? பிரும்ம மாராயர் என்னிடமும், என் தம்பியிடமும் கொண்டிருக்கும் அக்கறை எத்தனை என்பது எனக்குத் தெரியாதா? நான் கேட்பது அவருடைய அபிப்பிராயங்களைப் பற்றியல்ல; அந்த அபிப்பிராயங்களை நிறைவேற்ற என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார் என்பதை அறியவே ஆசைப்படுகிறேன்,'' என்றாள் அரசகுமாரி.

''தங்கள் ஆசையைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்பதுதான் என் ஆசையும். ஆனால், பிரும்ம மாராயர் குணம் உங்களுக்குத் தெரியாததல்ல. சொல்ல இஷ்டமில்லாததை ஆயிரம் தடவை கேட்டாலும் சொல்ல மாட்டார். நானும் எவ்வளவோ முயன்று பார்த்தேன், அவருடைய திட்டம் என்னவாயிருக்குமென்பதை அறிய. மனிதன் கல்லுப் பிள்ளையாராயிருக்கிறான். வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட உதிர மாட்டேனென்கிறது,'' என்றான் அரிஞ்சயன். அரிஞ்சயன் பேச்சுத் தடைப்பட்டுத் தடைப்பட்டு வந்ததைக் கரிகாலன் கவனித்தான். ஏதோ யோசித்து அளந்து பேசுபவனாகவே அவன் காணப்பட்டானேயொழிய, உண்மையை உள்ளது உள்ளபடி பேசுபவனாகத் தெரியவில்லை.

இந்தப் பதிலுக்குப் பிறகு ஏதும் பேசாமல் சற்று நேரம் யோசனையிலாழ்ந்த விமலாதித்தன் மகள், கடைசி

சாண்டில்யன்

காவியங்கள் உயிரோடு உலவுகின்றன—இந்தியக் காடுகளின் இதயத்தில் அங்கே ... ஆனையின் மதநடையில், மானோடும் வேக கதியில், மயிலாடும் ஜதியில், அரிது அரிதான விலங்கு, பறவை ஜாலங்களில்—காவியங்கள் வாழ்வது கண்கண்ட உண்மை. இதன் சுடர் பட்டது அந்த நிலத்து நெசவாளர் நெஞ்சங்களில். தலத்துக் கதை, புராண, லீலை, மாலைகள் மெட்டமைத்தன. அவர்களின் கரங்களின் பிறந்தன—பற்பல வகைக் கோலங்கள், அற்புத வண்ண ஜாலங்கள்: பட்டோலா, கின்காப், பாந்தினி போன்ற பலப் பல. கற்பனைகளுக்குப் பின்னணிச் சீலையாய், கணக்கில்லாக் கோலங்களின் கதம்பச் சோலையாய் நம் இந்திய நாடு முழுதுமே விளங்கும்போது, இதனிலும் சிறந்த நவீனக் கலைக்கூடம் ஏது!

கைத்தறிகளின் தனியருமையே கருக்காக இதுதான் பிறப்பித்த பொன்னுடே இவற்றின் ஆக்கத் தறி.

ஊக்கத் தூண்டுகோல், சூழ்நில மண்ணும் காற்றும் மணக்குது ஊடும் பாவுமாய்: குலவழிக் கதைகளின், பாடல்களின், சாதனைச் சரிதைகளின் சாரம் இவற்றுக்கு ஆதாரம்.

கோல வகைகளில், நெசவு நயங்களில் பல வர்ணக் களஞ்சியமாம் நம் கைத்தறிச் செல்வம்—இதன் அணிவரிசையில் உமக்கென்றே உண்டு உங்கள் பாணிக்கு உரித்தான ரகம், கண்டது எதையும் அணிவானேன், காவியப் பெருமை அணிவீர், கைத்தறி அணிவீர்!

**இந்தியக் கைத்தறிகள்—**
**தந்தறியா விந்தைகளை**
**சொந்தமெனத் தந்திடுமே**

எல்லா மாநில கைத்தறி நிலையங்களிலும் கிடைக்கும்.

**காவிய அற்புதங்களை இன்றும் வாழவைத்தே ஜீவிய வடிவமைக்கும் கலைக்கூடம் இதுவே.**





யாக ஆயாசம் கலந்த பெருமூச்சொன்றை விட்டாள். அதைக் கவனித்த அரிஞ்சயன், அவளைத் தேற்றத் தொடங்கி, ''ஆயாசத்துக்குக் காரணமில்லை அரசகுமாரி. தாங்கள் நினைப்பதைவிடத் துரிதமாகவே காரியங்கள் நடைபெற்று வருகின்றன. சில நாட்களுக்குப் பொறுத்துக் கொண்டிருங்கள்,'' என்றான்.

''பொறுமையை யாரும் எனக்குப் போதிக்கத் தேவையில்லை.

விமலாதித்தனுக்குப் பிறந்த வேங்கி நாட்டுப் பெண்ணுக்குத் தைரியத்துக்கும் குறைவில்லை. ஆனால் ஜெயசிம்மனுடைய ஆதிக்கத்திலிருந்து வேங்கி நாட்டை மீட்க நீங்கள் செய்து வரும் ஏற்பாடுகள் என்ன என்பது திட்டமாகத் தெரியவில்லை. ஏதாவது ஏற்பாடு நடக்கிறதா என்பதே சந்தேகத்திலிருக்கிறது!''

''பிரும்ம மாராயரிடமும், என்னிடமும் உங்களுக்காக அபாயமான சதியிலிறங்கியிருக்கும் வேங்கி நாட்டுப் படைத் தலைவர் மூவரிடமும் உங்களுக்கு நம்பிக்கையில்லையா?''

''நம்பிக்கையிருக்கிறது அரிஞ்சயா, நம்பிக்கையிருக்கிறது. ஆனால் வெறும் நம்பிக்கையால் ஜெயசிம்மனை ஜெயித்து விட முடியுமா? மேலை சாளுக்கியத்தில் பூரண வெற்றியடைய முடியாமல், அரையன் ராஜராஜனையே ஆட்டி வைத்துக் கொண்டிருக்கும் மன்னன் ஜெயசிம்மனுடைய பிடியிலிருந்து வேங்கி நாட்டையும், அதன் மன்னனும், என் தம்பியுமான ராஜராஜ நரேந்திரனையும் விடுவிக்க, வெறும் நம்பிக்கையும், கூடிக்கூடி நடத்தப்படும் கவைக்குதவாத பேச்சும் பயன்தர முடியாது. திட்டம் வேண்டும்; அதை நிறைவேற்றும் திறன் வேண்டும்; செயல்கள் வேண்டும்.''

''உண்மைதான் அரசகுமாரி! எதற்கும் காலம் வர வேண்டுமல்லவா?''

''காலம் நம்மைத் தேடி வராது; காலத்தைத் தேடி நாம் செல்ல வேண்டும். சந்தர்ப்பம் நம்மை நாடி வராது. சந்தர்ப்பத்தைத் தேடி நாம் செல்ல வேண்டும். அதற்குத்தான் முயற்சி என்று பெயர். அந்த முயற்சி ஏதாவது நடந்திருக்கிறதா?''

''அதிக அவசரம் அபாயத்தில் இறக்கிவிடும் அரசகுமாரி.''

''அபாயத்திற்கு அஞ்சுபவர்கள் சதியிலிறங்கக் கூடாது. சுகமாகக் குழந்தை குட்டிகளுடன் வீட்டிலிருக்க வேண்டும். இது வீரர்கள் சம்பந்தப்பட வேண்டிய விஷயம். அபாயம் வீரனுக்கு விருந்து.''

''போர்க்களத்தில் தாங்கள் சொல்வது சரி.''

''வேங்கி நாடே இப்பொழுது போர்க்களம்தான். வாட்கள் உராயவில்லை; வேல்கள் எறியப்படவில்லை. இருந்தாலென்ன? வாட்களையும் வேல்களையும்விடக் கூரிய ஆயுதங்களை



# எந்தெந்த நாடுகள்

●● பி.எ. மர்டாக்கண்ணு, பாப்பாங்குளம்.

உங்கள் மனைவி உங்களை ஓகோவென்று புகழ்வது எப்போது?

மகிழ்ச்சியுடன் ஹெல்மெட் அணிந்து கொள்ளும் ஸ்கூட்டர் ஓட்டி; புளிக்காத எலுமிச்சம் பழம்; கூண்டுக்குள் அசையாமல் உட்கார்ந்திருக்கும் கரடி; கணவனைப் புகழும் மனைவி – இவையெல்லாம் கற்பனையில் மட்டுமே உதிக்கக்கூடிய சமாசாரங்கள்.

●● பி.எஸ். பாலசுப்பிரமணியன், பரக்கலக்கோட்டை.

நாட்டின் ஒற்றுமையைச் சீர்குலைக்கச் சில வெளிநாடுகள் செயல்படுகின்றன என்று ராஜீவ் அடிக்கடி கூறி வருகிறாரே. எந்தெந்த நாடுகள் நயினா?

இரண்டும் ஐந்தெழுத்து நாடுகள். இரண்டு பெயருக்கும் பொதுவான எழுத்து ஏதுமில்லை. ஒன்றின் பிற்பகுதியைச் சாம்பாரிலும் மற்றதன் கடைசி எழுத்தை ஒரு கரிய பறவை போடும் சத்தத்திலும் சந்திக்கலாம்.

●● வி. அகிலன், மேலப்பனையூர்.

பூ ஒன்று புயலானது விஜயசாந்தி; புரட்சிப் பூக்கள் விஜயசாந்தி. ஒப்பிடுக.

குறைவான முக மாறுதல்களால் அதிகமான உணர்ச்சிகளைக் காட்டக் கூடிய இளம் நடிகைகளில் டாப்டக்கர் யார் என்ற கேள்வி எழுந்தால், அநேகமாக அதிக ஓட்டு விஜயசாந்திக்கு விழக் கூடும். இரண்டு படத்திலும் கிட்டத்தட்ட ஒரே மாதிரி தீப்பொறி பாகம் தான். ஆனால் கதை? புயலின் வலு– அதில் கால் பங்குகூட–புரட்சியில் இல்லை என்று சொன்னால் டைரக்டர்



கிருஷ்ணா கூட, ஏன், அவரது ஆவிகூட—அடிக்க வராது.

●● எம்.எஸ். தாசன், சின்னமனூர்.

தொலைபேசியில் இரண்டு மூன்று முறை எண்களைச் சுழற்றிச் சரியான என் கிடைக்காமல் ராங் நம்பரே கிடைத்துச் சரியாக வாங்கிக் கட்டிக்கொண்ட அனுபவம் உண்டா?

உண்டு. ஆனால் கண்ணீர் விட்டதில்லை. செத்துப்போன போனைக் காட்டிலும் ராங் நம்பர் மேல் அல்லவா?

●● எஸ். வெங்கடேசன், கும்பகோணம்.

உமக்கு மொரார்ஜியைப் பிடிக்குமா?

அவரிடம் பிடிக்காததைவிடப் பிடித்தது அதிகம். எண்ணிக்கையில்.

●● சு. இராமச்சந்திரன், கூடுவாஞ்சேரி.

குறை சொன்ன அரசுவே! ஓர் உண்மையான கம்யூனிஸ்டுக்குத் தாய்நாடே ரஷ்யாதான். அங்கு தொழிலாளர்களின் உண்மையான தொண்டன் வி.பி. சிந்தன் உயிர்நீத்தது பெருமைக்குரிய விஷயமென்பதை உணருவீரா?

மூன்று ஆட்சேபம். 1. நான் குறை காணவில்லையே? வருத்தப் பட்டேன். 2. உண்மையான கம்யூனிஸ்டுக்கு உலகமே தாய்நாடு. ரஷ்யா அல்லவே? 3. ஒரு கம்யூனிஸ்டு ரஷ்யாவில் உயிர் நீத்தால் பெருமை என்பதற்கும் ஓர் இந்து காசியில் இறந்தால் மோட்சம் என்பதற்குப் ஒற்றுமை தெரிகிறதே, தெரியவாமா?

ஜெயசிம்மன் பிரயோகித்துக் கொண்டிருக்கிறான்.''

''அது என்ன ஆயுதம்?''

''சொல்.''

''சொல்லா?''

''ஆமாம், அரிஞ்சயா! 'ராஜராஜ நரேந்திரன் அரச பீடத்தில் இருக்கத் தகுதியற்றவன்' என்ற சொற்களை மக்களிடம் பரப்பி விட்டிருக்கிறான் ஜெய சிம்ம சாளுக்கியன். மனிதர்களை ஆளவேண்டிய நரேந்திரனுக்கு வாட் பயிற்சி இல்லை. அவனைச் சுற்றி ஜெய சிம்ம சாளுக்கியன் வீரர்களை நிறுத்த வில்லை. பெண்களை நிறுத்தி யிருக்கிறான். மன்னனுக்கு சிலம்பக் கூட மில்லை; நாட்டியக் கூடமிருக்கிறது. இந்த நாட்டு மன்னன் கேளிக்கையிலும், வேடிக்கையிலும், மதுவிலும், மங்கையர் உறவிலும் காலத்தைக் கழிக்கிறானென்ற பேச்சு நாடெங்கும் பரவி வருகிறது. இதில் தனக்குப் பொறுப்பேதுமில்லை போல் நடிக்கிறான் ஜெயசிம்மன். இந்த நாட்டு அரியணை விஷயத்தில் தனக்குச் சொந்தச் சிரத்தை ஏதுமில்லை என்பதை நிரூபிக்க, தன் மருமகனான விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனையும் மேலைச் சாளுக்கிய நாட்டுக்கு அழைத்துச் சென்று விட்டான். அங்கு அவனுக்குப் போர்ப் பயிற்சி அளிக்கப்படுகிறது. அங்கு அவன் நல்ல பயிற்சி பெற்றுத் திரும்புவதற்கும், மக்க ளின் வெறுப்பு நரேந்திரன் மீது பூர்த்தியாவதற்கும் சரியாயிருக்கும். அந்த நிலையில், நரேந்திரனை ஜெயசிம்மன் அரியணையிலிருந்து அகற்றாவிட்டாலும், மக்கள் அகற்றி விடுவார்கள். அவர்களைச் சித்தம் செய்யும் பிரசாரம் நன்றாக நடக்கிறது. ஜெயசிம்மன் போடும் அஸ்திவாரம் பலமானது. அதை அவன் போட்டுவிட்டால், அவன் மேலே நிர்மாணிக்க உத்தேசித்திருக்கும் கோட்டையை உங்களால் தகர்க்கவே முடியாது. புரிகிறதா?''

''புரிகிறது அரசகுமாரி! அதற்கு என்ன செய்ய வேண்டுமென்கிறீர்கள்?''

''அஸ்திவாரத்தை உடைக்க வேண்டும்.''

''எப்படி?''

''அதைத்தான் அப்பொழுதி லிருந்து நான் கேட்கிறேன் எப்படி உடைக்க உத்தேசம்? அதற்கு என்ன ஏற்பாடு நடக்கிறது?''

அரிஞ்சயன் பதிலேதும் சொல்ல முடியாமல் திணறினான். ''ஏன் விழிக்கிறாய்? ஏற்பாடு ஏதும் இல்லையா? திட்டம் ஏதுமின்றித் தினம் கூடிக்கூடிப் பிரும்ம மாராயரிடம் பேசுகிறீர்களா?'' என்று கேட்டாள் அரசகுமாரி. வெறுப்பு பூரணமாகக் கலந்த குரலில்.

அரிஞ்சயன் மெள்ள மென்று விழுங்கினான். ''ஏற்பாடு ஏதோ நடந்திருக்க வேண்டும் அரசகுமாரி. பிரும்ம மாராயர் திட்டமில்லாமல் வேலை செய்வாரா?'' என்றான்.

கீழே உதிர்ந்த சருகுகள் சலசலவென்று அசைந்ததிலிருந்து அரசகுமாரி அதிர்ச்சியடைந்து திரும்புகிறாளென்பதைக் கரிகாலன் ஊகித்தான். அந்த அதிர்ச்சி அவள் அடுத்துக் கேட்ட கேள்வியிலும் உதித்தது. ''ஏற்பாடு ஏதோ நடந்திருக்க வேண்டுமென்றால் உனக்கு அதைப் பற்றி எதுவும் தெரியாதா?'' என்று கேட்டாள் மன்னன் மகள்.

''தெரியாது அரசகுமாரி.''

''ஏன் தெரியாது?''

''நான் பிரும்ம மாராயரைப் பார்த்துப் பல நாட்கள் ஆகின்றன.''

''இங்கு வந்தும் பல நாட்கள் ஆகின்றனவே!''

''முன்பு உங்களைப் பார்த்த போதுதான் அவரையும் பார்த்தேன்.''

''ஏன் எங்களைப் பார்க்கவில்லை?''

''பார்க்க முடியவில்லை.''

''ஏன்?''

''சிறையிலிருந்தேன்.''

அரசகுமாரி மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள். ''சிறையிலிருந்தாயா? இந்த ஊர்ச் சிறையிலா?''

''ஆம், அரசகுமாரி!''

''எனக்குத் தெரியாதே?''

''யாருக்கும் தெரியும்படியாகக் காரியம் செய்யும் பழக்கம் ஜெயசிம்மனுக்குக் கிடையாதல்லவா?''

> அறிவாளி போல் சிந்தனை செய்யுங்கள்.
>
> அந்தச் சிந்தனையை எந்தப் பாமரனும் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் எளிதாகச் சொல்லுங்கள்.
>
> —அரிஸ்டாட்டில்.

''ஜெயசிம்மனா சிறையிலடைத்தான்? அப்படியானால் சதி விஷயம்....''

''அவருக்குத் தெரியாது.''

''தெரியாமல் எப்படி இருக்க முடியும்? உன்னைக் கோதண்டத்தில் மாட்டி உண்மையைக் கக்க வைத்திருப்பார்களே!''

''கோதண்டத்தில் மாட்டினால் கக்கி இருப்பேன்; ஆனால் அதற்கு அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.''

''ஏன்?''

''சிறையிலிருந்து தப்பி விட்டேன்.''

''சாளுக்கியர் சிறையிலிருந்து தப்புவதா? நல்ல கதை இது!'' அரிஞ்சயன் சொன்னதை அரசகுமாரி நம்பவில்லையென்பதை அவள் குரல் எடுத்துக் காட்டியது.

அந்த அவநம்பிக்கையை அரிஞ்சயன் கவனிக்காமலே சொன்னான்: ''உண்மைதான் அரசகுமாரி. கதை போலத்தான் தோன்றும் உங்களுக்கு. சாளுக்கியர் சிறையிலிருந்து ஒருவன் தப்பியதாகச் சொன்னால் கட்டுக் கதையைப் போலத்தான் இருக்கும். ஆனால் இதைவிடப் பெரிய கடுமையான சிறைகளிலிருந்து பலர் தப்பியதற்குச் சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. அவை கூடத் தேவையில்லை! நாளைக் காலையில் ஏன் இன்னும் சில நாழிகையில் இந்தத் தலைநகரில் ஏற்படக்கூடிய பரபரப்பே நான் தப்பியதற்குச் சரியான சான்றாகும்.''

''பரபரப்பு ஏற்படக் காரணம்!''

''சிறைக் காவலாளிகள்

**ஆறு வித்தியாசங்கள் விடை:**

1. தலையில் பூ
2. டி.வி. ஒயர்
3. கூடை டிசைன்
4. ஏறுகிறவரின் கால்
5. தள்ளு வண்டியின் சக்கரம்
6. டாடா காட்டுகிறவரின் சட்டை



சென்னையில் பல மத்திய அரசு அலுவலகங்கள் அமைத்துள்ள பல மாடிக் கட்டிடத்துக்குப் போயிருந்தேன். லிஃப்டை நெருங்கி, லிஃப்ட் ஆளிடம் ''மாடிக்குப் போகணும்,'' என்றேன். இரண்டாவது மாடிக்கெல்லாம் லிஃப்ட் போக முடியாது. படியில்தான் ஏறிப் போக வேண்டும். மூன்றாவது மாடிக்கு மேல்தான் லிஃப்ட் போகும்,'' என்றார்.

'சரி, மூன்றாவது மாடிக்குப் போங்கள்,' என்று சொன்னேன். வேறு வழியின்றி அவர் என்னை மூன்றாவது மாடியில் இறக்கிவிட நான் படிகளில் இறங்கி இரண்டாவது மாடிக்கு வந்தேன். படிகளில் ஏறுவதைக் காட்டிலும் இறங்குவது எளிது!

—ஏ.எஸ். ராம்குமார், சென்னை—6.

இருவரைக் கொன்று விட்டேன்.''

''கொன்றாலும் சிறையைச் சுற்றியிருக்கும் மதில் வாசல்களில் காவலிருக்கிறதே!''

''என் சொந்த உடையில் வந்தால் வெளியே விட மாட்டார்கள். இந்த உடையைப் பாருங்கள்.''

சற்று நேரம் மௌனம் நிலவியது. அரசகுமாரி அவன் உடையை அப்பொழுதுதான் கவனித்ததாகத் தோன்றியது. ''இது சிறைக் காவலர் உடையல்லவா?'' என்றாள் அரசகுமாரி.

''ஆம், அரசகுமாரி!''

''இறந்த சிறைக் காவலன் ஒருவனின் உடையை அணிந்து வந்தாயா அரிஞ்சயா?''

''வேறு வழியில்லை. பாருங்கள்.''

அடுத்தபடி, அரசகுமாரியின் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களில் அனுதாபம் மண்டிக் கிடந்தது. ''அரிஞ்சயா, உன் நிலைமை அபாயமானதல்லவா?'' என்றாள் அரசகுமாரி.

''அபாயம் வீரனுக்கு விருந்தென்று தாங்கள்தானே சொன்னீர்கள்?'' என்றான் அரிஞ்சயன்.

''ஆமாம் அரிஞ்சயா! உன் மனத்தைப் புண்படுத்தும்படி ஏதாவது நான் சொல்லியிருந்தால் என்னை மன்னித்து விடு.''

''மன்னிப்பதற்கு ஏதுமில்லை, அரசகுமாரி. கவலையால் கருத்தைச் சிறிது அலைய விட்டீர்கள், அதனாலென்ன, உங்களுக்குப் பணி செய்வது என் கடமை.''

''இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்? மீண்டும் நாம் எப்போது சந்திப்பது?''

''நாளை வசந்த மண்டபத்தில் சந்திக்கிறேன். அதற்குள் நீங்கள் என்னை உங்கள் பிரதிநிதியாக அங்கீகரித்து அத்தாட்சி ஓலை ஒன்று எழுதி வையுங்கள்; உங்கள் முத்திரையும் சேர்ந்திருந்தால் நல்லது,'' என்றான் அரிஞ்சயன்.

''எதற்கு அத்தாட்சி ஓலை?'' என்று கேட்டாள் மன்னன் மகள்.

''ஜெயசிம்மன் தன் ஏற்பாடுகளைச் செய்து கொண்டு போகும்போது நாமும் ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று நீங்கள்தானே சொன்னீர்கள்?''

''ஆமாம்.''

''இப்பொழுது மூன்று படைத்தலைவர்களே நம்முடன் சேர்ந்திருக்கிறார்கள். மற்றவர்களையும் சேர்க்க வேண்டும். தங்கள் பக்கத்துக்கு வீரர்களைத் திரட்ட வேண்டும். அத்தாட்சியின்றி நான் போய்ச் சதியில் சேர் என்று சொன்னால் யார் சேருவார்கள்? தங்கள் அனுமதி எனக்கு




படத்தில்:
செஞ்சிகிருஷ்ணன்,
திடீர் கன்னையா

படங்கள்: வி.பி. மணி

இருக்கிறது என்று சொன்னால் வீரர்கள் சேருவார்கள். தங்களை மக்கள் தெய்வம் போல் நினைக்கிறார்கள் என்பது தங்களுக்குத் தெரியாதா?''

அரசகுமாரி சிறிது நேரம் யோசித்தாள்; அரிஞ்சயன் சற்று சலிப்பான குரலில் கேட்டான். ''ஏன், அரசகுமாரி! என்னிடம் நம்பிக்கையில்லையா உங்களுக்கு?''

''நம்பிக்கையில்லாமலென்ன? ஓலை ஜெயசிம்மன் கையில் சிக்கினால் ஆபத்தாயிற்றே என்று யோசிக்கிறேன்.''

''ஆபத்துக்குப் பயப்படுகிறீர்களா?''

அரசகுமாரியின் குரல் மிகக் கடுமையாக ஒலித்தது. ''விமலாதித்தன் மகளிடம் பயத்தைப் பற்றிப் பேச உனக்கு என்ன துணிச்சல்? ஆபத்தைப் பற்றிப் பயமில்லை அரிஞ்சயா. ஓலை எதிராளி கையில் விழுந்தால் நாட்டில் ஏற்படக் கூடிய விளைவுகளைப் பற்றித்தான் யோசிக்கிறேன். ஓலையை ஆதாரமாகக் கொண்டு, சதி நடக்கிறதென்று பகிரங்கப் படுத்தி என் தம்பியை ஒழித்துவிடுவான் ஜெயசிம்மன்,'' என்றாள் நிரஞ்சனாதேவி.

''அரசகுமாரி! இந்த அரிஞ்சயன் உடலில் உயிர் இருக்கும் வரை, ஓலை எதிரியிடம் சேராதென்பது தங்களுக்குத் தெரியாதா? தவிர அத்தாட்சியில்லாவிட்டால் என் சொல்லை மட்டும் நம்பிச் சதியில் யார் சேருவார்கள்?''

அரசகுமாரி மீண்டும் ஒரு விநாடிதான் யோசித்தாள். அந்த விநாடியில் ஒரு முடிவுக்கு வந்து, ''சரி, அரிஞ்சயா! ஓலை எழுதி வைக்கிறேன். நாளை இரவு வசந்த மண்டபத்தில் சந்திப்போம்,'' என்று சொல்லிவிட்டுச் செடி மறைவிலிருந்து கிளம்பினாள். சற்றுத் தள்ளி நின்ற செடிகளின் மறைவில் கரிகாலன் மறைந்து கொண்டான்.

செடி மறைவை விட்டு வெளியே வந்த அரசகுமாரி, சுற்று முற்றும் பார்த்து விட்டு, ''யாரும் இல்லை அரிஞ்சயா! வெளியே வா,'' என்றாள். அரிஞ்சயன் பூனை போல் நடந்து வெளியே வந்து அரசகுமாரியிடம் விடை பெற்றுச் செல்ல முயன்றவன் மீண்டும் திரும்பி வந்து, ''அரசகுமாரி! நீங்கள் கரிகாலன் என்பவனைப் பிரும்ம மாராயரிடம் அனுப்பினீர்களா?'' என்று விசாரித்தான்.

''ஆமாம் அனுப்பினேன். ஆனால், அவன் ஜெயசிம்மன் பக்கம் திரும்பி விட்டானே!'' என்றாள் அரசகுமாரி.

''இல்லை, அரசகுமாரி, இல்லை. அவன் பூரணமாக நம்பத் தகுந்தவன். பிரும்ம மாராயரே என்னிடம் சொன்னார்.''

''அவனுக்கு ஜெயசிம்மன் இன்று விருந்து நடத்தினான், தெரியுமா?''

''தெரியும். அதைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். காரணமாகத்தான் அவன் ஜெயசிம்மனிடம் சேர்ந்திருக்கிறான். அதற்கும் பிரும்ம மாராயர் தான் ஏற்பாடு செய்தார். அவன் சொல்கிறபடி நடங்கள்,'' என்று சொல்லிவிட்டு அரசகுமாரியைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டுச் சென்றான் அரிஞ்சயன்.

அவன் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அரண்மனைக்குள்ளிருந்து பணிப் பெண் மாலினி அரசகுமாரியைத் தேடிக் கொண்டு வந்தாள். அரசகுமாரி நடுப் பாதையில் நந்தியாவட்டைச் செடிகளுக்கருகில் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டு நிற்பதைக் கண்ட மாலினி, ''நட்சத்திரங்களை எண்ணுகிறீர்களா?'' என்று கேலியாகக் கேட்டாள்.

''ஆமாம் மாலினி,'' என்ற நிரஞ்சனாதேவியின் குரலில் கவலை

மேனியின் ஆப்த நண்பன்
மார்கோ சோப்




கல்கத்தா கெமிக்கலின் தயாரிப்பு

நிரம்பத் தோய்ந்திருந்தது.

''ஏன் அரசகுமாரி!''

''ஜெயசிம்மனை ஜெயிப்பதை விட நட்சத்திரங்களை எண்ணுவது எளிதாக இருக்கும்போல் தோன்றுகிறது.''

அரசகுமாரியின் கவலை இன்னதென்பதைப் புரிந்து கொண்ட மாலினி, அவள் நோக்கத்தை வேறு திசையில் திருப்ப இஷ்டப்பட்டு, ''நேரமாகிறது தேவி. எங்கே படுக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

நிரஞ்சனா தேவி, சிறிது நேரம் யோசித்து விட்டுக் கேட்டாள், ''இன்று வசந்த மண்டபத்துக்குப் போவதில் ஏதேனும் தடை இருக்கிறதா?'' என்று.

''இல்லை அரசகுமாரி. அவசியமானால் தாங்கள் அங்கும் படுக்கலாம்.''

''எப்படித் தெரியும் உனக்கு?''

''அரண்மனை ஸ்தானிகரே வந்து சொன்னார்.''

''அப்படியா! நேற்று ஏன் படுக்கக் கூடாதென்று சொன்னார்கள்?''

''காரணம் சொல்ல மறுக்கிறார், ஸ்தானிகர்.''

அரசகுமாரி பெருமூச்செறிந்தாள். ''வேங்கி நாட்டு மன்னன் மகள் நான். ஆனால் இந்த அரண்மனைக்குள் இஷ்டப்படி உலாவவும் படுக்கவுமே சுதந்திரமில்லையே மாலினி..... உம்!'' என்று அலுத்துக் கொண்ட அரசகுமாரி, ''சரி.... வசந்த மண்டபத்துக்கே போவோம் வா,'' என்று சொல்லி, அரண்மனைக்கும் தோட்டத்துக்கும் இடையேயிருந்த கதவை நோக்கி நடந்தாள்.

அவர்கள் கண்ணுக்கு மறைந்ததும் மறைவிடத்தை விட்டு வெளியே வந்த கரிகாலன் முகத்திலே கவலையும் திகிலும் கலந்து படர்ந்து கிடந்தன. சற்று அப்பாலிருந்த ஒரு பாறை மீது உட்கார்ந்து, தலையை இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு நீண்ட நேரம் யோசித்துக் கொண்டிருந்தான் கரிகாலன். அவனது கூரிய அறிவுக்கு உண்மை தெள்ளெனப் புலப்பட்டது. அரசகுமாரியின் புத்தியில் ஊகிக்க முடியாத விஷயங்கள் அவனுடைய ஆராய்ச்சி அறிவு அரங்கத்திலே எழுந்து தாண்டவமாடின. அரிஞ்சயன் எத்தனை அயோக்கியன் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்ட கரிகாலன், அரிஞ்சயன் திட்டத்தைத் தவிடு பொடியாக்கி, அவன் வீசும் வலையிலிருந்து மன்னன் மகளை மீட்கத் தீர்மானித்துக் கொண்டான். அந்தத் தீர்மானத்தின் ஆரம்ப நடவடிக்கையை அந்த விநாடியே தொடங்க நிச்சயித்த அவனும், இடைக் கதவைத் தாண்டி வசந்த மண்டபத்தை நோக்கி விரைந்தான்.

'இது என்ன?' புதிருக்கு விடை:

E

வசந்த மண்டபத்தின் வாயிற் கதவு முந்திய நாள் போல் திறந்தேயிருந்தது. ஆனால் முந்திய நாள் இருந்த இருள் இல்லை. அரசகுமாரியின் அறையிலிருந்த விளக்கின் மங்கிய ஒளி வாயிலை அடுத்த கூடத்திலும் வீசிக் கொண்டிருந்தது. கூடத்தைக் கடந்து அறையை அணுகிய கரிகாலன் கதவை மெல்லத் திறந்தான். பஞ்சணையில் குப்புறப் படுத்துக் கொண்டிருந்த நிரஞ்சனா தேவி கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டதும் சற்றே பஞ்சணையில் நெளிந்து திரும்பித் தன் அஞ்சன விழிகளைக் கரிகாலன் மீது திருப்பினாள். காந்தத்தின் சக்தி அற்புதமானது என்பதைச் சாஸ்திரம் படித்த கரிகாலன் அறிந்திருந்தான். கண்களுக்கும் அந்தச் சக்தி உண்டு என்பதை அந்தக் கணத்தில் அவன் உணர்ந்தான். அவன் படித்த சாஸ்திரங்கள் பல; ஆனால் நிரஞ்சனா பஞ்சணையில் கிடந்த கோலத்தைக் கண்ட கரிகாலன் படிப்பிற்கு அப்பாற்பட்ட சாஸ்திரமும் ஒன்று இருக்கிறதென்பதை அறிந்தான். அந்த அனுபவ சாஸ்திரத்தை அளந்தறியும் எண்ணத்துடன், அவன் ஆராய்ச்சி விழிகள் பஞ்சணையில் கிடந்த அந்த அஞ்சுகத்தின் எழிலலைகள் மீது கடலலைகளைத் தாவிச் செல்லும் கடற் பறவைகளைப் போலத் தாவிச் சென்றன.

(தொடரும்)

# நலம் பெற வேண்டும்

பிரார்த்தனை கிளப்

எனது மனைவி ச. ராதாவை வலது காலில் ஒருவித நோய் உள்ள நாய் 13.5.87 அன்று கடித்து விட்டது. அருகிலுள்ள டாக்டரிடம் காண்பித்து ஊசி போட்டு, சரியான சிகிச்சை உடனடியாக அளிக்கத் திருவனந்தபுரம் பெரிய (நாய்) மருத்துவ மனைக்குப் போகச் சொல்லி விட்டார். 17.5.87 முதல் சிகிச்சைக்காகப் போய் 30.5.87 வரை ஊசி போட்டு, 90 நாட்கள் பத்தியமாக இருக்க வேண்டும். அதாவது ஆகஸ்ட் 10'ம் தேதி திங்கள் கிழமை வரை. இரண்டு சிறிய குழந்தைகளாகிய காயத்ரி 4 வயது, மகாதேவன் 3 வயது—இவர்களைக் காப்பாற்றத் தாய் நலமுடன் இருக்க வேண்டுமெனக் குமுதம் பிரார்த்தனை கிளப் உறுப்பினர்களைப் பிரார்த்திக்கும்படி பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

—வை.ரா. சங்கர சர்மா, அர்ச்சகர், திருவிக்கிரமபுரம் தேவஸம், கோட்டைக்ககம், சிதறால் போஸ்ட், குமரி மாவட்டம்.

எனது ஒரே அக்கா எம்.பி. சுஜாதா சமீபத்தில் எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை சமயத்தில் மொட்டை மாடியில் படித்து வந்தாள். முதல் நாள் கணக்குப் பரீட்சையில் நன்றாகவே எழுதினாள். அடுத்த நாள் விஞ்ஞானப் பரீட்சை இருந்தது. அதற்காக இரவு 2 மணி வரை படித்தாள். மீண்டும் காலை 6.30 மணிக்கு அவளை எழுப்பினோம். மொட்டை மாடியில் வைத்திருந்த புத்தகத்தை எடுக்கத் தூக்கக் கலக்கத்தோடு சென்ற அவள் தவறிச் சுமார் 10 அடி உயரத்திலிருந்து கீழே விழுந்து விட்டாள். பெங்களூரில் உள்ள ஆஸ்பத்திரியில் இப்போது சிகிச்சை பெற்று வருகிறாள். நடக்கவே கஷ்டப்படுகிறாள். பரீட்சையும் தொடர்ந்து எழுத முடியாமல் போயிற்று. அவள் பழையபடி நன்றாகி நடக்க வேண்டுமென்றும் இரவும் பகலும் பாராமல் படித்தது வீண் போகாமல் மீண்டும் பரீட்சை எழுதித் தேர்வடைய வேண்டும் என்றும் குமுதம் பிரார்த்தனை கிளப் அங்கத்தினர்கள் பிரார்த்தனை செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

—*M.B. Padmapriya, No. 2, N2 Street, Kamaraj Road Cross, Bangalore-560 042.*



கோட்டைக்ககம் ச. ராதா குணமடையவும் பெங்களூர் எம்.பி. சுஜாதாவுக்குக் கால் நலம் பெறவும் பிரார்த்திக்கும்படி குமுதம் பிரார்த்தனை கிளப் உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

பிரார்த்தனை நேரம்: 14.6.87 ஞாயிறு [illegible] மணி.

18.6.87

# மன்னன் மகள்

## 20. பள்ளியறையில் பஞ்சபாணங்கள்

மன்மதன் யாருக்காவது பயந்து வில்லையும் பஞ்ச பாணங்களையும் அந்தப் பஞ்சணையில் உதறிவிட்டு ஓடிவிட்டானா? ஆம், அப்படித்தானிருக்க வேண்டும்!

கதவு திறந்த ஓசை கேட்டதும் சற்றே திரும்பி, தன்னைக் கண்டதும் உடலை வளைத்துக் குறுக்கிக் கொண்டு பஞ்சணையில் நெளிந்து படுத்த பைங்கிளியாளைப் பார்த்ததும், அப்படித்தான் நினைத்தான் கரிகாலன்.

ஆண்பிள்ளை யாரும் இல்லையென்ற சுதந்திரப் புத்தியால் உடலை இஷ்டப்படி அலையவிட்டு, நன்றாக மலர்ந்த செந்தாமரை போல் உள்ளழகுகளும் ஓரளவு தெரியப் படுத்துக் கிடந்த அந்தப் பேரழகி, கரிகாலனைக் கண்டதும், சட்டென்று கால்களை மடக்கியும், இடையிலிருந்த கழுத்து வரை பூவுடலை வளைத்துப் பிடுத்து, சரேலென இதழ்களைக் குவித்துக் கொண்ட பங்கஜம்போல் மாறினாள். இதென்ன அதிசயம் என்று வியந்தான் கரிகாலன்.

'இரவில் தாமரை மலர்ந்து கிடக்காது. அட, மலர்ந்துதான் கிடந்தது; இன்னும் சற்று நேரம் அப்படியே இருக்கக் கூடாதா? மலர்ந்த தாமரை இத்தனை அவசர அவசரமாக மூடிக் கொள்ளவா வேண்டும்? கண்ணுக்குத் தெரிந்த இன்பக் காட்சிகள் இத்தனை சீக்கிரமாக மறையவா வேண்டும்? இன்பம் மின்னல்போல் மறையக் கூடியது என்ற தத்துவத்திற்கும் விளக்கம் இதுதானா?'' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்.

எழிலெல்லாம் ஒருங்கே திரண்டதுபோல் வளைந்து பஞ்சணையில் கிடந்த நிரஞ்சனா தேவியின் உடலமைப்பைப் பார்த்த கரிகாலன், மன்மதன் தன் கரும்பு வில்லை அந்தப் பஞ்சணையில் எறிந்து விட்டுத்தான் ஓடியிருக்க வேண்டும் என்றே நினைத்தான். வளைந்து கிடந்த அந்தக் கரும்பினியாளின் கன்னிப் பூவுடலிலும் கணுக்கள் பல இருக்கத்தான் செய்தன. கழுத்து, இடை, முழங்கால், இன்னும் எத்தனை எத்தனையோ கணுக்கள்! ஒவ்வொரு கணுவையும் அடுத்து இன்பரசம் சொட்ட வல்ல எத்தனை புஷ்டிப் பிரதேசங்கள்!

கரும்பு வில்லுக்கு வண்டுகளான

சாண்டில்யன்



மானேஜர் முன்பு அழுதபடி லேடி டைப்பிஸ்ட்: ''உங்களிடம் லேடி டைப்பிஸ்டா இருந்து என்ன சுகத்தைக் கண்டேன். ஒரு இன்க்ரிமெண்ட் உண்டா.... ஒரு போனஸ் உண்டா?''

—உ. ராஜாஜி.



''அம்மா! காஸெட்டிலே பாட்டைக் கேட்கிறது ரொம்பப் போரடிக்குது. நிறுத்தும்மா.''

''ஏண்டா?''

''நடுவுல விளம்பரமே இல்லாம பாட்டாவே இருக்குதும்மா!''

—த. ஜெயக்குமார்.



''என் மனைவி பூரி செய்யறப்போ மட்டும் எது சொன்னாலும் சரின்னுடுவேன்.''

''ஏன் அப்படி?''

''பூரிக் கட்டையாலே நீங்க ஒரு தடவை அடி வாங்கியிருந்தாத்தான் உங்களுக்குத் தெரியும்.''

—ஜா ரவி.



''நீயெல்லாம் ஒரு பத்தினியா?''

''பெரிய வார்த்தையெல்லாம் சொல்லாதீங்க. நீங்க சொன்ன ஜோக்கைக் கேட்டுட்டு நான் சிரிக்கலேங்கிறதுக்காக!''

—உ. ரா.

நாண் வேண்டுமே! ஆ, அதுவும்தான் அதோ துவண்டு கிடக்கிறதே! அலை அலையாகத் தலையிலிருந்த சுருண்ட மயிர்கள் பின்னால் விரிந்தோடி பின்னப் பட்டதால் நீளமாகக் கிடந்த அவள் ஜடை பல வண்டுகள் ஒன்றை ஒன்று கவ்விக் கொண்டு மாரன் வில்லின் நாணைப்போல் காட்சியளித்தன. ஆனால், வளைந்து படுத்த அவள் உடலுக்குப் பின்புறத்தில் கிடந்த பின்னலைப் பார்த்த கரிகாலன், 'நாண் வில்லின் பின்புறம் கிடக்குமா?'' என்று யோசித்தான். 'சாதாரணமாக இருக்காது தான். ஆனால் அந்தப் பயங்கொள்ளி மன்மதன் வில்லைப் போட்டு ஓடிய வேகத்தில் நாணையும் பூட்டாது தாறுமாறாக எறிந்துவிட்டுப் போயிருக்க வேண்டும்,' என்று கரிகாலன் தன் கவி மனத்தால் சமாதானப்படுத்திக் கொண்டான். இது மட்டுமா, அதோ மாரனின் பஞ்ச பாணங்கள்! அவனுடைய தாழை மலர்க் கத்தி வேறு! எல்லாம் அந்தப் பஞ்சணையில் அவன் கண்முன்னே கிடந்தன.

அரவிந்தம், அசோகம், மாம்பூ, முல்லை, நீலோற்பலம் ஆகிய ஐந்து மலர்க் கணைகளும் அங்கே சிதறிக் கிடந்தன. நிரஞ்சனா தேவியின் முகம் அரவிந்தம், அசோகத்தை வெல்லும் நீண்ட தளிர் விரல்கள், மாம்பூவைப் பழிக்கும் விரல் நகங்கள், முல்லையை எள்ளி நகையாட வல்ல தந்த வரிசைகள், நீலோற்பலத்தைவிட ஜாஜ்வல்லியமாகப் பிரகாசிக்கும் அழகிய கண்கள், அத்தனையும் கண்ட கரிகாலன் தன் கண்களின் மூலம் இதயத்தையே அந்தப் பஞ்சணையில் அலையவிட்டான். பஞ்ச பாணங்கள்தான் இப்படிச் சிதறிக் கிடந்தன. ஆனால் மாரன் வாளான தாழை மலர் மட்டும் நிரஞ்சனாவின் உடல் பூராவும் பரவிக் கிடந்தது. தாழம்பூவின் மஞ்சள் நிறத்தையும் வழவழப்பையும் பெற்ற அவள் தங்க நிற மேனியின் திறந்த பாகங்களைக் கண்ட கரிகாலன் ஏதோ சொர்ண பூமியில் தானிருப்பதாகவே நினைத்தான். அந்தப் பஞ்சணையிலிருந்து எழுந்த நறுமணம் அவள் தலையில் குடியிருந்த மலர்களிலிருந்து எழுந்ததா அல்லது அவள் தாழம்பூ மேனியிலிருந்து எழுந்ததா என்பதை அவனால் ஊகிக்க முடியவில்லை.

இரவு நடுச் சாமத்தை எட்டிக் கொண்டிருந்தாலும் கிருஷ்ண பக்ஷம் நன்றாக முற்றிவிட்டது காரணமாக, நிலவு வரும் நேரம் தள்ளிப் போயிருந்தபடியால், அறையிலிருந்த வெண்கலப் பாவை விளக்கின் வெளிச்சத்தைத் தவிர வேறு வெளிச்சம் அந்த அறையில் கிடையாது. திறந்த சாளரங்களுக்கு வெளியே கும்மிருட்டாகவே இருந்தது. வானில் பிரமாதமாக ஜொலித்துக் கொண்டிருந்த நட்சத்திரங்கள், பூமியில் எந்த வெளிச்சத்தையும் வீச முடியாமல் தவித்துக் கொண்டிருந்தன. நிரஞ்சனாவின் பள்ளியறையிலிருந்த வெண்கல விளக்கு மிக மங்கலாகவே இருந்தாலும், அறையில் அது தனி அரசு புரிந்து கொண்டு அற்பமான நட்சத்திர வெளிச்சத்தை உள்ளே அணுகவொட்டாமல் தடுத்துவிட்ட படியால், சாளரத்துக்கு வெளியே ஏற்கனவே இருந்த மையிருட்டு இன்னும் அதிகமாகக் கறுத்து விட்டது போல் தோன்றியது.

அந்தச் சூழ்நிலையில் அறை மூலையில் நிறுத்தப்பட்டிருந்த வெண்கலப் பாவையின் மங்கலான வெளிச்சம் அந்த அறை முழுவதும் பரவி அறையை ஏதோ சொப்பன உலகம்போல் செய்திருந்தது. அதன் ஒளி, கட்டில்கால்களின் தங்கச் சிங்கத் தலைகளில் பாய்ந்து, சிங்கத் தலைகளின் சோபையைப் பன்மடங்கு அதிகப்படுத்தியதுமல்லாமல், பஞ்சணை மீது விரிக்கப்பட்டிருந்த மஞ்சள் நிறப் பட்டு விரிப்புக்களின் மீதும் பிரவேசித்து, அவற்றிற்கும் தங்க மூலாம் பூசிவிடவே, தங்கத் தகடுகளின் மீது சயனிக்கும் தேவ கன்னியைப்போலக் கிடந்தாள் நிரஞ்சனா தேவி. மிகுந்த வழவழப்புடனும் பூரிப்புடனுமிருந்த அவள் மாம் பழக் கன்னங்களிலொன்றை விளக்கொளி தடவிச் சென்றதால் மினுமினுப்புடன் ஜொலித்த அந்த மஞ்சள் நிறக் கதுப்பில் சற்று வெட்கச் சிவப்பும் சேர்ந்து கொண்டு, தங்கத்தில் பதிப்பிக்கப் பட்ட விலையுயர்ந்த கெம்புக் குவியல் போல் காட்சியளித்தது. விளக்கொளி அத்துடன் விட்டிருந்தாலும் கரிகாலன் கொஞ்சம் நிதானத்திலிருந்திருப்பான். ஆனால் அந்தப் பொல்லாத சுடரின் ஒளி வீச்சுக்கள் அவள் மெல்லிய புடவையையும் சில இடங்களில் ஊடுருவியிருந்தது.

அவளது அழகிய மார்பகத்தைத் தழுவிச் சென்ற புடவையின் மேல் தலைப்பு முன்புறத்தில் மட்டுமின்றிப் பின்புறத்திலும் நழுவிக் கிடந்ததால் அந்தப் பிரதேசங்களில் பாய்ந்த விளக்கொளி

அ[illegible]ந்தை அப்படியே குலைத்துவிடக் கூடிய கா[illegible]சியைச் சிருஷ்டித்திருந்தது. இனி படுத்துறங்குவதைத் தவிர வேறு அலுவல் இல்லையென்ற எண்ணத்தால் ரவிக்கையின் மேல் .பாகத்திலிருந்த பட்டுக் கயிறுகளைக்கூட நிரஞ்சனா தேவி சரியாகவே முடியாததால், அவள் மார்பகத்தின் ஓரங்கள் பருவத்தின் வெறியைக் காட்டிக்கொண்டு, நன்றாக எழுந்து நின்ற விளக்கொளியில் பளபளத்தன. கீழ்ப் பாகங்கள் துணிக்குள் மறைந்து தான் கிடந்தன. ஆனால் மனித ஊகம் கண்களில் கண்டதோடு திருப்தியடைகிறதா? தெரிந்ததைவிடத் தெரியாத விஷயங்களில் கற்பனை அதிகமாக ஓடுகிறது. கற்பனை ஓட்டத்திலே காணும் இன்பக் கனவுகள் பல. பாதி திறந்தும் பாதி மறைந்தும் இருக்கும் அம்சங்களில் கற்பனை வெறிபிடித்து ஓடுகிறது. மறைத்து நிற்கும் திரைச் சீலையைக் கிழித்தெறிய மனம் துடிதுடிக்கிறது.

இயற்கையின் இந்த வெறியிலே துடித்த கரிகாலனை அவளுடைய இதர எழிலம்சங்களும் படாத பாடு படுத்தின. அவள் கால்களை வளைத்து முழங்கால்களை வயிற்றுக்காக மடித்துப் படுத்திருந்ததால், பின்புறத்தில் பெரிதாக எழுந்த அழகிய பகுதிகளின் மீது ஓடிய கரிகாலன் கண்கள், தாமரை மலர்களால் சிருஷ்டிக்கப்பட்ட குன்றுகளைக் கண்டு விட்டன போல் பிரமை பிடித்து நின்றன. அலங்கோலமாகச் சேலை நெகிழ்ந்ததால் சற்று அளவுக்கு அதிகமாகவே தெரிந்த கால்கள், நன்றாகக் கடையப்பட்ட இரு பெரும் தந்தங்கள் போல் கிடந்தாலும், அவற்றுக்கு மேற்புறத்திலிருந்த சேலை தொடைகளில் பாய்ந்து பதுங்கிய காரணத்தால், மனம் செய்த ஊகத்தாலும் கரிகாலன் நிலைகொள்ளாது தவித்தான். இந்தத் தவிப்பு, ஓரளவு நிரஞ்சனாதேவிக்கும் இருக்கத்தான் செய்தது.

திடீரென்று கரிகாலன் உள்ளே நுழைந்ததால், தான் இருந்த அலங்கோல நிலையை மிகத் துரிதமாகத்தான் சரி செய்து கொண்டாள் நிரஞ்சனா தேவி. ஆனால், அந்தச் சில விநாடிகளுக்குள்ளாகவே கரிகாலனின் கண்கள் பாயக் கூடாத இடங்களிலெல்லாம் பாய்ந்து விட்டதையும், அதன் காரணமாக அவன் நிலைகுலைந்து நிற்பதையும் கண்டுகொண்ட அரசகுமாரி, 'அப்பா! இந்த ஆண்பிள்ளைகளுக்குத்தான்




இந்தப் படம் எதைக் குறிப்பதாகக் கொள்ளலாம்? பத்திரிகைகள் மீது அமிதாப் பச்சனுக்கு உள்ள கோபத்தையா? இந்திய விமானப் படைமீது ஜெயவர்த்தனாவுக்கு உள்ள வயிற்றெரிச்சலையா? லக்கி பிரைஸ் பண்ருட்டி ராமச்சந்திரன்மீது அவருடைய எதிரிகளுக்கு உள்ள ஆத்திரத்தையா?

எத்தனை துடுக்குக் கண்கள்!' என்று அலுத்துக் கொள்ள முயன்றாள். ஆனால், உள்ளம் அந்த அலுப்புக்கு இடந்தராமல், கரிகாலன் பிரமை பிடித்து நிற்பதைக் கண்டு பெருமிதமே கொண்டது.

பெண் உள்ளமே ஓர் அலாதி. ஆண் பிள்ளைகள் தங்கள் அங்க லாவண்யங்களைப் பார்த்துவிடப் போகிறார்களே என்ற பயம் உண்டு. ஆனால், பார்க்க வேண்டும் என்ற ஆசையும் உண்டு. பார்த்துவிட்டால் வெளியில் கோபம் உண்டு! பார்த்து மலைப்பது கண்டு உள்ளே மகிழ்ச்சி உண்டு. நாணமுண்டு, அந்த நாணத்தை உடைக்க ஓர் ஆண் மகன் வரமாட்டானாவென்ற ஏக்கமும் உண்டு. இத்தகைய பயம், ஆசை, கோபம், நாணம், ஏக்கம் ஆகிய வேறுபட்ட உணர்ச்சிகளின் அலை மோதல்தான் காதலின்பம். அந்த இன்பத்திற்கு வசப்படாத பெண், உலகத்தில் என்றும் பிறந்ததில்லை; இனி பிறக்கப் போவதுமில்லை. உணர்ச்சிகள் எல்லோருக்கும் சமம். இந்த உணர்ச்சிகளை அந்தஸ்தோ, சாதியோ, சமயமோ, எதுவுமே கட்டுப்படுத்த முடியாது. அந்தஸ்தும் சமயமும் சாதியும் கடலையும் காற்றையும் கட்டுப்படுத்த முடியுமா? இயற்கையின் இந்தச் சக்திகளைப் போலத்தான் உணர்ச்சிகளும். செயற்கைச் சிருஷ்டிகள் இயற்கைகளைக் கட்டுப்படுத்த முடிவதே இல்லை.

அந்தச் சக்தியினால் சிக்கித் தவித்தாள் வேங்கி நாட்டு மன்னன் மகளும். அந்தக் கிருஷ்ண பட்சத்து இரவிலே, மங்கலான வெளிச்சமும் மலர்களின் நறுமணமும் சூழ்ந்து கிடந்த அந்தப் பள்ளியறைப் பஞ்சணையிலே, கதவைத் திறந்து கொண்டு வாயிற் படியிலே நின்ற கரிகாலனை அவளும் தன் மலர் விழிகளால் நோக்கினாள். ஆனால், அன்று அவள் பார்த்த முறை வேறு. முதல் நாள் சந்தித்தபோது நிர்ப்பயமாயிருந்த பார்வையல்ல அது. தூதனை எதிர்பார்த்திருந்ததால் சதி நிரம்பிய உள்ளத்தோடு பார்த்த பார்வையல்ல அது. ஆண்மகனொருவன் தன்னை அலங்கோலமாகப் பார்த்துவிட்டானே என்ற சங்கடப் பார்வை அது. தன் உடலின் மர்மப் பகுதிகளிலெல்லாம் கண்களை ஓட்டி மகிழ்ந்து விட்டானே என்ற எண்ணத்தினால் ஏற்பட்ட வெட்கப் பார்வை அது. அந்த வெட்கத்தினால் உடல் பூராவும் மின்சாரம் போல் ஊடுருவிச் சென்ற மகிழ்ச்சி வெள்ளத்தின் அலைகள், அந்தப் பார்வையில் திரும்பத் திரும்ப மோதின.

வெட்கத்தினால் ஓரப் பார்வையாகக் கரிகாலனைப் பார்த்ததால், அவன் எத்தனை அழகாயிருக்கிறான் என்பதை அன்றுதான் நன்றாகக் கவனித்தாள் மன்னன் மகள். அந்த வாயிற் படியின் உயரம் போதாமையால், தலையைச் சற்றே சாய்த்தும் கால்களை வளைத்தும் நின்றிருந்த கரிகாலனுடைய கை, கால்கள் எத்தனை மெல்லியதாக அழகாயிருக்கின்றன என்பதைக் கவனித்த நிரஞ்சனா தேவி, நல்ல உயரமான அவன் உடல் மெல்லியதாக இருந்தாலும் எத்தனை கம்பீரமாயிருக்கிறதென்பதையும் அவன் தலையில் சுருண்டு தொங்கிய கரு மயிர்கள் அவன் முகத்தைச் சூழ்ந்து நின்றதால் இயற்கையாக இருந்த முகத்தின் எழில் எவ்வளவு தூரம் அதிகப்பட்டு விட்டதென்பதையும் கவனித்தாள். பார்ப்பதற்குக் குழந்தை முகம் போலிருந்தாலும், ஈட்டிகளைவிடக் கூர்மையாக இருந்த விழிகளில் வீரமும், ஆராய்ச்சி

## பொழுது போகாத பொம்மு



ஒரு கிலோ எடையில், ஆங்கில, தமிழ் செய்திப் பத்திரிகைகளில் எவ்வளவு தாள்கள் இருக்கும்?

மே மாதத்திய தாள்களை நிறுத்துப் பார்த்ததில்—

ஆங்கிலம் (இந்து) 128 ஒற்றைத்தாள்கள்.

தமிழ் (தினமணி) 100 ஒற்றைத்தாள்கள்

தமிழ் (தினத்தந்தி) 146 ஒற்றைத்தாள்கள்.

ஆங்கிலம் (இந்தியன் எக்ஸ்பிரஸ்) 84 ஒற்றைத் தாள்கள்.

—பா. கோ.

# கலைஞருக்கு டி. ஆர். எதிரியா?

டி. ராஜேந்தருக்கு இரண்டு பேர் பாடம் கற்பித்திருக்கிறார்களாம். 'தன்னால்தான் இயக்கத்துக்குப் பெயர்' என்று இவருக்கு இருந்த அகம்பாவத்தைக் குறைப்பதற்காக ஒருவர் வசனம் எழுதினாராம். இன்னொருவர் தன் படத்துக்கு இசையமைக்கச் சொன்னபோது மறுத்ததோடு, அவமதித்தும் அனுப்பியதற்காக முதலாமவரோடு கூட்டுச் சேர்ந்து கொண்டு பழி வாங்கி விட்டாராம். டைரக்டர் சந்திரசேகருக்கு ராஜேந்தரிடம் பகை இருக்கலாம். கலைஞர் கூட ராஜேந்தருக்கு எதிரியாய் மாற முடியுமா என்ன?

இதுவரை கதை, வசனம், பாடல்கள், தயாரிப்பாளர் என்று இருந்த பஞ்சு அருணாசலம் திடீரென்று டைரக்ஷனில் இறங்கிவிட்டதற்குக் காரணம்? அவர் டைரக்ட் செய்யும் படத்தின் பெயர் 'கோதண்டராம ரெட்டி.' நடிகர் பிரபு—ராதிகா. டைரக்டர்கள்கூடச் சில்லறை நடிகை, நடிகரைப் போல் ஐந்தைக் கொடு, பத்தைக் கொடு என்று ஆளனுப்ப



மனப்பான்மையும் கலந்து வீசுவதைக் கண்ட நிரஞ்சனாதேவி, காலக் கிரமத்தில் கரிகாலன் பெரும் வீரனாக மாறுவான் என்று சந்தேகமறத் தீர்மானித்துக் கொண்டாள். வீரமும், அழகும் கலந்து தோன்றிய அந்த முகத்துக்கு, அவன் இதழ்களின் ஓரத்தில் சதா தொக்கி நின்ற ஒரு விஷமப் புன்முறுவல் தனிச் சோபையை அளித்துக் கொண்டிருந்தது. பெண்களின் இடுப்புப் போல் குறுகிக் கிடந்த இடுப்பில் கட்டப்பட்ட கச்சையிலிருந்து பாதம் வரையில் தொங்கிக் கொண்டிருந்த மிக நீளமான வாளைப் பார்த்த நிரஞ்சனா தேவி, 'இவ்வளவு பெரிய வாளை இந்த மெல்லிய கரம் சுழற்ற முடியுமா?' என்று நினைத்துப் புன்முறுவலும் கூட்டினாள்.

அவள் மனத்தே ஓடிய நினைவுகளை வினாடி நேரத்தில் புரிந்து கொண்டு, ''அரசகுமாரி! வாளைச் சுழற்றக் கை பருமனாயிருக்க வேண்டியதில்லை. கையில் உரம் வேண்டும். லாகவம் வேண்டும், அவ்வளவுதான்,'' என்றான் கரிகாலன்.

''மன்னிக்க வேண்டும். உங்கள் வீரத்தைப் பற்றி நான் சந்தேகிக்கவில்லை.''

''கை வலுவைப் பற்றிச் சந்தேகித்தீர்களாக்கும்?'' இதைச் சொன்ன கரிகாலன் குரலில் ஏளனம் தொனித்தது.

''ஆமாம்.''

''இயற்கையை அரசகுமாரி சரியாகக் கவனிக்கவில்லை, போலிருக்கிறது.''

''அளவுக்கு மீறிய கவனிப்புத் தங்களிடம் இருப்பதைக் கவனித்தேன்,'' என்றாள் அரசகுமாரி. அவள் வார்த்தைகளின் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொண்ட கரிகாலன், சிறிது திணறினாலும், பிறகு சமாளித்துக் கொண்டு சொன்னான்: ''எதிர்பாராத விதமாகப் பொக்கிஷம் திறந்து கிடந்தால் அங்குள்ள வைர வைடூரியங்களில் கவனம் செல்லத்தானே செல்லும்.''

''பொக்கிஷம் பிறருடையதாயிருந்தாலுமா?''

''பொக்கிஷத்தைப் பார்த்து மலைப்பது மனித இயற்கை. உடையவன் ஒருவன் உண்டு என்று தெரிந்தாலே அப்படி. யாரும் இல்லையென்றால் கைப்பற்ற முயலுவதும் மனித இயற்கை.''

### ஆறு வித்தியாசங்கள்

1. எதிரே இருப்பவரின் நாற்காலி
2. டெலிபோன் இணைப்பு
3. தலையணை
4. தடுப்பு
5. படுக்கை விரிப்பு
6. இழுப்பறை அலமாரி.



ஆரம்பித்துவிட்டதால் பல டைரக்டர்களை உருவாக்கியவர் தானே கோதாவில் இறங்கி விட்டதாகச் சொல் கிறார்கள்.

அண்மையில் 'பூவுக்குள் பூகம்பம்' படத்தில் நடிக்க வந்திருந்த சரோஜாதேவி சொன்னார். யாரோ ஒரு நிருபர் தான் காங்கிரஸ் ஆட்சியை விட ஜனதா ஆட்சியே மேல் என்று சொன்ன தாக எழுதி விட்டாராம். 'எனக்கு ஹெக்டேயும் வேண்டும், ராஜீவ் காந்தியும் வேண்டும். ராஜ்குமாரும் வேண்டும்; என்.டி.ஆரும் வேண்டும், எம்.ஜி.ஆரும் வேண்டும். நானா இப்படிச் சொன்னேன்? இப்படித் தப்புத்தண்டாவாக எழுதுவதற்காக, நான் ஏன் பேட்டி கொடுக்க வேண்டும்?' என்று பொருமினாராம்.



தகவல்கள்: துரை ராமச்சந்திரன், செல்லப்பா



''கைப்பற்றுவதா, களவாடுவதா? எது மனித இயற்கை!''

''இரண்டும்தான். கைப்பற்று வதற்குக் களவும் ஒரு வழி.''

''அந்த வழியையும் கற்றி ருக்கிறீர்களோ?''

''எல்லாவற்றையும் கற்க வேண்டிய அவசியமில்லை. சில இயற்கையாகவே வரும்.''

''களவு தங்களுக்கு இயற்கையாக வரும் போலிருக்கிறது!''

''எனக்கென்ன! என்னைவிடப் பெரியவர்களுக்கெல்லாம் வந்திருக்கிறதே?''

''யாரது?''

''ஓர் உதாரணம்—கிருஷ்ண பகவான்.''

''அவன் திருடினானா?''

''ஆம்.''

''எதை?''

''யாரை என்று கேளுங்கள்.''

''சரி, யாரை?''

''ருக்மணியை.''

கலகலவென்று நகைத்தாள் நிரஞ்சனா தேவி. அந்தச் சமயத்தில், அவள் உள்ளத்தில் சதி மறைந்தது தம்பி மறைந்தான். வேங்கு நாடு மறைந்தது. ஜெயசிம்மனைப் பற்றிய பயம் மறைந்தது. அரிஞ்சயன். பிரும்ம மாராயன் அத்தனை பேரும் மறைந்தார்கள். நின்றவன் எதிரே யிருந்த கரிகாலன் மட்டும்தான். ஆறடி உயரத்துக்குக் குழந்தை முகத்துடனும் கவர்ச்சிக் கண்களுடனும் நின்ற அந்த ஆண்மகன் ஒருவன்தான். அரசகுமாரி மெள்ளப் பஞ்சணையிலிருந்து எழுந்து. சாளரத்தை நோக்கிச் சென்று வெளியே எட்டிப் பார்த்தாள். இருட்டும் அன்று அழகாகத் தெரிந்தது அவளுக்கு. புராணம் பேசும் அந்தத் தர்க்க சாஸ்திரியை நினைத்து மீண்டும் சிரித்தாள் அவள்.

'ஏன் சிரிக்கிறீர்கள் அரசகுமாரி?' அவள் காதருகில் ரகசியமாக ஒலித்தன அந்த வார்த்தைகள்.

சற்றுத் திரும்பினாள் நிரஞ்சனா தேவி. வேல் விழிகளைக் கவ்வி நின்றன. மற்றுமிரண்டு வேல்கள். கரிகாலன் அவளுக்கு வெகு அருகில் நின்று கொண்டிருந்தான். அவள் கண்கள் அவன் கண்களை நோக்கி மிரண்டு விழித்தன. அவள் கன்னங்களை அவன் நாசியிலிருந்து வந்து கொண்டிருந்த உஷ்ணக் காற்று தடவிச் சென்றது. அவள் உடலில் அனல் வாரிக் கொட்டிக் கொண்டிருந்தது. அதற்கு அறிகுறியாக அவள் கன்னங்கள் தீக்குழம்பைப் போல் சிவந்து ஜொலித்தன. இன்னும் சற்றுத் திரும்பினாலும், தன் உடல் அவன் மீது உராயும் என்பதை அறிந்த நிரஞ்சனா, நெளியக்கூட முடியாமல் தவியாய்த் தவித்தாள்.

(தொடரும்)



# மன்னன் மகள்

சாண்டில்யன்

## 21. இந்த வாள் உங்கள் அடிமை

இயற்கை தூண்டிவிட்ட உணர்ச்சிகளின் வசப்பட்டு இவ்வுலகையே மறந்து நின்ற அந்த இருவரின் மனப்போக்குக்கு, சாளரத்துக்கு வெளியே இருந்த காரிருளும், அறைக்கு உள்ளேயிருந்த வெண்கலப் பாவையின் சிறு சுடரொளியும் பெரிதும் துணை செய்தன. வெளியேயிருந்த காரிருளைவிடக் கருமையான நிரஞ்சனா தேவியின் கண்கள், வானத்தில் கண்களைச் சிமிட்டிப் பரிகசித்துக் கொண்டிருந்த விண்மீன்களை ஆராய முயன்றாலும், அவள் மனக்கண் மட்டும் பின்னாலிருக்கும் அந்தப் புருஷன் என்ன செய்கிறான் என்பதை அறிவதிலேயே நாட்டம் கொண்டு நின்றதால், அவளுடைய விழிகளின் பார்வையில் மயக்கமே தேங்கி நின்றது. அந்த மயக்கத்துக்கு இன்னும் ஆக்கம் தர முயன்ற தென்றலும், நந்த வனத்தில் சற்றுத் தூரத்தேயிருந்த செண்பக மலர்களின் நறுமணத்தைத் தாங்கி வந்து அவளைத் தழுவிச் சென்றது மணம் நிறைந்த அந்தத் தென்றல் விளைவித்த இன்பத்தாலும், மனம் நிறைந்த உணர்ச்சிகளின் பிராவாகத்தாலும், நிரஞ்சனாதேவி லேசாக நெளிந்து

''இதென்ன? எல்கேஜி வகுப்பிலே எல்லாக் குழந்தைகளும் ஒரேயடியா அழுதுக்கிட்டிருக்காங்களே! அவங்க டீச்சர் எங்கே?''

''அவங்களும் புதுசாம். அதனாலே, தனியா ஒரு ரூம்லே உக்காந்து அழுது கிட்டிருக்காங்க.''

—ஜலஜா.

ஒரு பெருமூச்சும் விட்டாள்.

அவளுக்கு வெகு அருகில் பின்னால் நின்ற கரிகாலனும், அவள் நெளிவையும் பெருமூச்சையும் கவனிக்கத் தான் செய்தான். அவற்றைத் தொடர்ந்து அவள் தன் வலக்கரத்தைச் சற்றே உயர்த்திச் சாளரத்தின் நடு மரக்கட்டையைப் பிடித்துக் கொண்டதையும் பார்த் தான். அந்த அழகியின் உள்ளம் அடியோடு பலவீனப்பட்டிருக்கிறதென்பதையும் நொடிப் பொழுதில் உணர்ந்துகொண்ட கரிகாலன், அவள்மீது அன்பும் பரிதாபமும் கலந்த பார்வையொன்றை ஓடவிட்டான். அறைக்குள்ளேயிருந்த விளக்கின் மங்கிய ஒளியில்கூட, சேலை நெகிழ்ந்து கிடந்த தால் நன்றாகத் தெரிந்த அவள் கழுத்தின் பின்புறம், தந்தம்போல் வெளேரென்று காட்சியளித்தது. அந்தத் தந்தத்தின் வெண்மையை அதிகப்படுத்திக் காட்டவோ என்னவோ கழுத்துக்குச் சற்று மேலிருந்த அடர்த்தியான கறுத்த மயிர்களில் ஓரிரண்டு குறுக்கே விழுந்து கிடந்தன. முன்புறத்தில் பட்டுக் கயிறுகள் கட்டப்பட்டதால், பின் புறத்திலிருந்த கழுத்து மட்டுமின்றி அதற்குக் கீழுள்ள முதுகின் ஒரு சிறு பாகமும் கரிகாலன் கண் களுக்கு விருந்தளித்தன. அவள் தலையில் சூடியிருந்த முல்லைச்சரம் சற்றே அவிழ்ந்து கிடந்ததால், அதன் நுனி தலையிலிருந்து நேராகத் தொங்கிச் சற்றே தெரிந்த வெண்மையான அவள் முதுகின் மேல்பாகத்தை முத்தமிட்டுக் கொண் டிருந்தது. அந்த முல்லை செய்த பாக்கியத்தை எந்த ஆடவன் செய்திருக் கிறானோ என்று எண்ணிய கரிகாலன் இதயத்திலிருந்தும் பெருமூச்சொன்று கிளம்பி, அவள் கழுத்தையும் அதை அடுத்துச் சற்று மேலேயிருந்த கன்னத்தை யும் தடவிச் சென்றது.

பின்னால் நிற்கும் அந்த வாலிபன் தன்னை அக்கக்காக அலசிக் கொண்டிருக்கிறான் என்பதை நிரஞ்சனா

---

## கைராட்டினமா? காந்திக்குத் தெரியுமா?

காந்திஜி தென் ஆப்பிரிக்காவி லிருந்தபோது (1908) எழுதினார் தமது நூலில்: ''இந்தியாவின் வறுமையைப் போக்கச் சரியான மருந்து கைராட்டினம் தான்,'' என்று.

ஆனால் அப்போதும் சரி, ஏழு வருடம் கழித்து அவர் 1915'ல் இந்தியா திரும்பிய போதும் சரி, கைராட்டையை நேரிலே அவர் பார்த்ததில்லை.

'ராட்டையால் நூல் நூற்பது எப்படி? அந்தக் கைராட்டையை எப்படியாவது உபயோகப்படுத்த வேண்டும்' என்று தவித்தார். ஆசிரமத்துக்கு வருகிறவர் களிடமெல்லாம் 'ராட்டையால் நூல் நூற்கத் தெரிந்தவர்கள் உங்களில் யாருக் காவது தெரியுமா?' என்று ஆவலோடு விசாரித்தார்.

இரண்டு வருடங்கள் இப்படி அவர் விசாரித்தபின் ஒரு பலன் ஏற்பட்டது. கங்காபென் என்ற சமூக சேவகி குஜராத் முழுவதும் சல்லடைபோட்டுத் தேடி, பரோடா சமஸ்தானத்தில் விஜாப்பூர் என்னுமிடத்தில் சில குடும்பத்தாரிடம் இருப்பதாக அறிந்து அங்கு சென்றார்.

சில கைராட்டைகள் பரணில் போடப்பட் டிருந்தன. அவர்களது முன்னோர்கள் நூல் நூற்றவர்களாம். பஞ்சைப் பட்டை போட்டுத் தந்தால் தாங்கள் நூல் நூற்றுத்தர முயற்சி செய்வதாகச் சொன் னார்கள். கூலியும் எக்கச் சக்கமாகக் கேட்டார்கள்.

காந்திஜி சம்மதித்தார். விஜாப்பூர் பெண்மணிகள் ஆசிரமம் வந்தாயிற்று.

அப்போது காந்தியடிகள் கடுமையான ஜுரத்தோடு ஆசிரமத்தில் படுத்திருந்தார்.

காந்திஜி சொல்கிறார்: ''என் அறையில் ராட்டினம் ஆனந்தமாகச் சுழன்று இனிய கீதத்தை எழுப்பிக் கொண்டிருந்தது. நான் நோயினின்று குணம் அடைவதற்கு அந்தக் கீதம் பெருமளவு துணை செய்தது.''

தேவி சந்தேகமறப் புரிந்துகொண்டி தானிருந்தாள். அதில் அவளுக்கு ஓரளவு ஆனந்தமும் இருக்கத்தான் செய்தது. பெண்களின் இயற்கை அது. ஆண்மக்கள் தங்கள் அழகில் சிக்கி அடிமையாகிறார்கள் என்ற நினைப்பைவிட அவர்களுக்கு ஆனந்தம் அளிக்கவல்லது உலகத்தில் எதுவுமே இல்லை. கரிகாலன் மட்டும் அந்த வினாடியில் நிரஞ்சனாதேவியின் முகத்தைப் பார்க்க முடிந்திருந்தால், அந்த ஆனந்தத்தின் சாயை அவள் முகம் பூராவும் பரவிக் கிடந்ததைப் பார்த்திருப் பான். அதன் விளைவாக அவள் பவள இதழ்கள் சிறிது குறுநகை காட்டியதையும் கவனித்திருப்பான். கவனித்திருந்தால் அடுத்த வினாடி உணர்ச்சிகளின் பிரவாகம் அந்த இருவரையும் எங்கு இழுத்துச் சென்றிருக்குமோ என்று சொல்ல முடியாது. நீர்ச்சுழல் போன்றதுதானே உணர்ச்சிச் சுழலும். அதில் சிக்குபவர்கள் அமிழ்ந்து போவதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?

கரிகாலனுடைய உணர்ச்சிகளை நிரஞ்சனாதேவியின் பின்னழகே பெரிதும் ஆட்டி வைத்ததால், அவன் அவள் முதுகுப் புறத்தில் மேலும் கீழும் கண்களை ஓட்டிய தோடு நின்றுவிட்டானே தவிர, அவள் முகத்தைப் பார்க்க இஷ்டமோ தைரியமோ அற்றவனாகத் திண்டாடி னான். அந்தத் திண்டாட்டத்துடன் தனக்கும் அரசகுமாரிக்கும் இருந்த அந்தஸ்தின் வித்தியாசமும் அவன் உள்ளத்தில் மெல்ல மெல்ல வேர்விடவே, மெள்ள அவன் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டதன்றி, தான் அங்கு வந்த காரியத்தைப் பற்றியும், அரச குமாரியை எதிர்நோக்கியிருந்த பேராபத்தைப் பற்றியும் யோசிக்க லானான்.



சில நாழிகைகளுக்கு முன்பாக அரிஞ்சயன் நந்தியாவட்டைச் செடிகளின் மறைவில் அரசகுமாரியுடன் பேசிய விஷயங்கள் அவன் சித்தத்தே ஊழுந்து நின்றன. அரிஞ்சயன் முன்னுக்குப் பின் முரணாக உளறியதையும் அதை அரச குமாரி கவனிக்காமலே அவன் கேட்டபடி ஓலை எழுதிக் கொடுக்க ஒப்புக்கொண்ட தையும் எண்ணிப் பார்த்த கரிகாலன், அரசகுமாரியின் தலைமீது பேரிடியை இறக்கி, அவளையும் அவள் தம்பியையும் அழித்துவிடவே அரிஞ்சயன் ஏற்பாடு செய் திருக்கிறான் என்பதை சந்தேகமறப் புரிந்துகொண்டான். ஆகவே அரிஞ்சய னுடைய நடவடிக்கைக்கு ஒரு முடிவு கட்டித் தீருவதென்று தீர்மானித்துக் கொண்டு மெல்ல அது விஷயமாக அரச குமாரியுடன் பேச்சுக் கொடுக்கவும் தொடங்கி, ''அரசகுமாரி!'' என்று அழைக்கவும் செய்தான்.

திரும்பி அவனைப் பார்க்கச் சக்தி யற்றிருந்த அரசகுமாரி பதிலேதும் சொல் லாமல் ஒரு 'ஹூம்' கொட்டினாள்.

''ஏன் அரசகுமாரி மௌன மாயிருக்கிறீர்கள்?''

மீண்டும் கேட்ட கரிகாலன், அவள் திரும்புவதற்கு வசதியளிப்பதற்காக இரண்டடி பின் நகர்ந்தான்.

அவன் நகர்ந்ததால் ஏற்பட்ட காலடி அவள் காதிலும் விழுந்திருக்க வேண்டும். அதனால் ஏற்பட்ட சுதந்திரத் தால் உணர்ச்சிகளின் வேகமும் ஓரளவு தடைபட்டிருக்க
வேண்டும். அரசகுமாரி சற்றே ஓரளவு திரும்பிக் கரிகாலனைப் பார்த்துப் புன் முறுவல் செய்தாள். அவள் முகத்தில் மறு படியும் பழைய கம்பீரமும் உறுதியும்

# டயனோரா குவின்ட்ரிக்ஸ் கலர் டிவி.
# நீங்கள் அதைத் தேர்ந்தெடுப்பீர்கள்,
# ஒரே ஒரு காரணத்திற்காக: அப்பழுக்கற்ற தரம்!




வடிவமைப்பு பதிவிற்கு மனு செய்யப்பட்டுள்ளது

புதிய டயனோரா குவின்ட்ரிக்ஸ் கலர் டிவி. ஆரம்ப முதல் முடிவு வரை துல்லியமான சிறப்புடன் தயாரிக்கப்படுகிறது.

## அப்பழுக்கற்ற தயாரிப்பு

மிகத் துல்லியமாகத் தயாரிக்கும் இயந்திரங்களைக்கொண்டு உருவாக்கப் படுகிறது இந்த டிவி. உதாரணமாக, தயாரிப்பில் எவ்வித தவறும் ஏற்படாதிருக்க கம்ப்யூட்டர் உதவியால் இயங்கும் இயந்திரங்களால் பாகங்கள் தானாகவே பொருத்தப்படுகின்றன. புரோகிராம் செய்யப்பட்ட தானியங்கி இயந்திரங்கள், முழுக்க முழுக்க குறைபாடற்ற சர்க்யூட்டை அமைக்கின்றன.

## அப்பழுக்கற்ற செயல்பாடு

இதன் தனித்தன்மை வாய்ந்த அம்சங்கள் சிறப்பான செயல்பாட்டிற்கு வழி வகுக்கின்றன. பிக்சர் கண்ட்ரோல் சாதனத்தின் உதவியால் மிகத் தெளிவான காட்சிகளைப் பெற முடிகிறது. இதில் ஹை-கெய்ன் ஆர்.எஃப். ட்யூனர் இருப்பதால் பிக்சர் சின்க்ரோனஸ் டிடக்டர் சர்க்யூட் படங்களை மிகவும் தத்ரூபமாகத் தருகிறது. எல்லா சேனலிலும் இயங்கும் வீடியோ அமைப்பு இதில் உள்ளது. வோல்டேஜ் ஏற்ற இறக்கங்கள், மின்னல், மின் சப்ளையில் ஏற்படும் சலனங்கள் ஆகியவற்றிலிருந்து டிவியை பாதுகாக்க, உள்ளடங்கிய பாதுகாப்பு சர்க்யூட் உள்ளது.

அப்பழுக்கற்ற தயாரிப்பே உங்களுக்குத் தேவையெனில், டயனோரா டீலரிடம் சென்று குவின்ட்ரிக்ஸ் டிவியைக் காட்டச் சொல்லுங்கள்.

புதியது

**டயனோரா®**

**Dyanora®**



**குவின்ட்ரிக்ஸ் கலர் டிவி**



தயாரிப்பாளர்கள்: **டயனவிஷன் லிமிடெட்**, டாக்டர் விக்ரம் சாராபாய் இன்ஸ்ட்ரானிக்ஸ் எஸ்டேட் அருகில், கொட்டிவாக்கம், சென்னை 600 041

இதன் சிறப்பான செயல்பாட்டைப் பார்க்க டயனோரா ஷோ ரூமிற்கு விஜயம் செய்யுங்கள், விலாசம்: ஜாவர் பிளாசா 1A நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை 600034

HTA 7067

குடிகொண்டு விட்டதைக் கவனித்த கரிகாலனுக்கு ஓரளவு மன நிம்மதி ஏற்படத்தான் செய்தது. அவள் கண்கள் அவனைத் தைரியமாக ஏறெடுத்துப் பார்த்தன. பவள இதழ்களும் லேசாக விரிந்து வார்த்தைகளை உதிர்த்தன.

''மௌனம் சிந்தனைக்கு இடம் தருகிறதல்லவா?'' என்றாள் அரசகுமாரி.

''எதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தீர்கள்?'' என்று கரிகாலன் கேட்டான்.

பதில் சொல்ல வெட்கமாயிருந்தது அவளுக்கு. 'உன்னைப் பற்றித்தான் எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன்' என்று எப்படித்தான் சொல்லுவாள் அவள்? அவன் கேள்வியின் காரணமாகவும், அதற்குப் பதில் சொல்ல முடியாததால் ஏற்பட்ட சங்கடம் காரணமாகவும், அவள் கண்களில் வெட்கச் சிரிப்பு சற்றே தட்டியது. இருந்தாலும் மெள்ளச் சமாளித்துக் கொண்டு பேச்சை மாற்றினாள் அவள்.

''எதைப் பற்றிச் சிந்திப்பேன் கரிகாலரே! என் நாட்டின் கதியைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். வேறு சிந்திப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று கேட்டாள் அரசகுமாரி.

கரிகாலன் இதழ்களில் புன்முறுவல் அரும்பியது. 'மனோதத்துவ சாஸ்திரத்தைத் தலைகீழாகப் படித்திருக்கும் என்னையே ஏமாற்றப் பார்க்கிறாயே அரசகுமாரி!' என்று மனத்திற்குள் நினைத்தாலும், அதை வெளியில் காட்டாமல் அவள் சென்ற பாதையையே தானும் பின்பற்றி, ''ஆமாம் அரசகுமாரி! சிந்திப்பதற்கு வேறு என்ன இருக்கிறது? நானும் அதைப்பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன்,'' என்றான் கரிகாலனும்.

''மிகவும் நன்றி.''

''நன்றி எதற்கு அரசகுமாரி?''

''எங்கள் நாட்டின் விஷயத்தில் நீங்கள் எடுத்துக் கொள்ளும் சிரத்தைக்கு.''

''நாட்டின் விஷயத்தில் அல்ல அரசகுமாரி, உங்கள் விஷயத்தில் என்று சொல்லுங்கள்.''

''என் விஷயத்திலா?''

''ஆமாம் அரசகுமாரி! நீங்கள் என்னை வீரர்களிடமிருந்து காப்பாற்றினீர்கள். அந்த நன்றிக்கு நான் கைம்மாறு செலுத்த வேண்டாமா?''

''கைம்மாறு நான் கோரவில்லையே!''

''நீங்கள் கோராவிட்டால் என்ன? என் கடமையை நான் செலுத்த வேண்டாமா? நன்றி மறப்பது தமிழன் பண்பல்லவே.''



நாஞ்சில் மனோகரன் ரொம்பவும் மகிழ்ச்சியாக இருக்கிறார். அண்மையில் அவர் தாத்தாவாகி இருக்கிறார். அவருடைய மகளுக்கு ஆண் குழந்தை பிறந்துள்ளது. (மே 28) குழந்தைக்கு என்ன பெயர் வைப்பது என்று பட்டியல் தயாரிக்கிறார்கள். ''அரசியலில் தாத்தாக்களுக்குத்தான் மவுசு அதிகம் என்றாலும், என்னை ஒரு தாத்தா என்று கூப்பிடுவதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்,'' என்கிறார் மனோகரன்.

—லிப்ரன்

அரசர்: ''நமது அரண்மனை ஆராய்ச்சி மணி அடிக்கும் சத்தம் கேட்டதே! யாரது?''

மந்திரி: ''நமது குடி மக்களில் ஒருவர் தான் அடித்தது. அரசே!''

அரசர்: ''ஏன்? என்ன விஷயம்?''

மந்திரி: ''கையால் மணியடிக்கக் கஷ்டமாக உள்ளதாம். பஸ்ஸர் வைத்து கொடுத்தால் சௌகரியமாக இருக்குமாம்.''

—புஷ்பா சந்திரன்.



''செய்த உதவிக்குக் கைம்மாறு கேட்பதும் வேங்கி நாட்டுப் பண்பல்ல, கரிகாலரே.''

''அவரவர் பண்பு அவரவர்களுக்கு. கைம்மாறு கோராதிருப்பது உங்கள் பண்பு. நன்றி மறக்காதிருப்பது எங்கள் பண்பு. அந்தப் பண்பை உத்தேசித்து நான் உங்களுக்கு அடிமையானேன், அரசகுமாரி! இந்த வேங்கி நாடு உங்கள் எதிரியின் பிடியிலிருந்து முழுதும் விடுபட்டு உங்கள் தம்பி ராஜராஜ நரேந்திரன் உறுதியாக அரியணையில் அமரும் வரை இந்த வாள் உங்களுக்கு அடிமையாயிருக்கும்,'' என்று உணர்ச்சியுடன் தன் வாளை வலது கையால் தட்டிக் காட்டிய கரிகாலன், ஓர் அடி முன்னுக்கு நடந்து அரசகுமாரியின் வலக்கரத்தைத் தைரியமாக எடுத்துத் தன் இடக்கரத்தில் வைத்துக் கொண்டு, தனது வலது கையை அவள் உள்ளங்கையில் வைத்து அழுத்தி, ''இது சத்தியம்!'' என்று ஆணையுமிட்டான்.

அப்படித் திடீரென அவன் தன் கையைப் பற்றியதால் ஒரு வினாடி அசந்து போன அரசகுமாரி, அவன் ஆணையிடவே அந்தத் துணிகரச் செயலில் ஈடுபட்டானென்பதை அறிந்ததும், மெள்ளச் சமாளித்து, கையை இழுத்துக் கொண்டு, ''வீரர்கள் வாளின் மேல் ஆணையிட்டாலே போதுமே கரிகாலரே!'' என்றாள்.

அவள் வார்த்தைகளில் தொனித்த எச்சரிக்கையையும் கண்டிப்பையும் கவனித்த கரிகாலன், நன்றாகப் பின்னால் நகர்ந்து, அவளுக்கும் தனக்குமிருந்த இடைவெளியை அதிகப்படுத்திக் கொண்டான். சிறிது நேரம் ஏதோ யோசித்துக் கொண்டே உலாவிவிட்டுச் சட்டென்று அறை நடுவே நின்று அரசகுமாரியை நோக்கி, ''அரசகுமாரி, என்னிடம் உங்களுக்குப் பூர்ண நம்பிக்கை இருக்கிறதா?'' என்றான்.

''ஏன், நம்பிக்கையில்லாமலென்ன?'' என்று அரசகுமாரி கேட்டாள்.

''நம்பிக்கையை உடைத்தெறியக்கூடிய விஷயங்கள் நடந்திருக்கின்றன.''

''ஆமாம்!''

''உங்கள் பரம விரோதி ஜெயசிம்ம சாளுக்கியனை அணுகியிருக்கிறேன்.''

''நீங்களாக அணுகவில்லையே?''

''அது எப்படி உங்களுக்குத் தெரியும்?''

''உங்களை நேற்றிரவு இங்கு வரச்சொல்லியிருந்தேன் அல்லவா?''

''ஆமாம்.''

''நானும் வர முயன்றேன். ஜெயசிம்ம சாளுக்கியன் உத்தரவால் நான் மாளிகையைவிட்டு நகர முடியவில்லை.''

''உங்களைக் கட்டுப்படுத்த அவருக்கு என்ன உரிமை?''

''அவருக்கில்லாத உரிமை எங்கள் அரண்மனையில் யாருக்கு இருக்கிறது? பெயருக்குத்தான் என் தம்பி அரசன். ஆள்பவன் ஜெயசிம்மன்தான். நேற்று வசந்த மண்டபத்தில் ஜெயசிம்மன் சில தூதர்களை அந்தரங்கமாகச் சந்தித்துப் பேசுவதாகவும், நாங்கள் அங்கு போகக்கூடாதென்றும் அரண்மனை ஸ்தானிகர் கூறிவிட்டார். காரணத்தை உணர்ந்து கொண்டேன். உங்களை எச்சரிக்கவும் துடித்தேன். முடியவில்லை. என் மீதும் மாலினி மீதும் ஒற்றர்கள் கண்ணோட்டம் இருந்தது. ஆகவே பேசாமலிருந்து விட்டேன். நீங்கள் அரண்மனைக்குக் கொண்டு வரப்பட்டதைக் காலையில்தான் அறிந்தேன்.''

''பிறகு நடந்தது தெரியுமா?''

''தெரியும். ஆனால் விளங்கவில்லை.''

''ஏன்?''

''ஜெயசிம்மன் உங்களை ஏன்

''என்னிடம் நடந்து கொள்கிற மாதிரி என் அம்மாவிடமும் நடந்து கொள் என்று என் மனைவியிடம் சொன்னது தப்பாப் போச்சு.''

''ஏன்?''

''நேற்று நான் ஊரில் இல்லாத போது என் அம்மா பக்கத்தில் படுத்துக் கொண்டு தன் காலைத் தூக்கி அம்மா மேல் போட்டிருக்கிறாள்!''

—நல்லாலம் காசிநாதன்

சிறையிலடைக்காமல் அரண்மனையில் இருத்தினான்? பிறகு எப்படி உங்களை அரையன் ராஜராஜன் மகனென்று ஒப்புக் கொண்டான்? யோசித்துப் பார்த்தேன்...''

''உம், சொல்லுங்கள் அரசகுமாரி.''

''உங்களைச் சந்தேகிக்கக்கூடச் சந்தேகித்தேன். ஒரு வேளை நீங்கள் ஜெய சிம்மன் பக்கம் திரும்பி விட்டீர்களோ என்றுகூட நினைத்தேன்.''

''பிறகு எப்படிச் சந்தேகம் விலகியது?''

''அரிஞ்சயன் சொன்னான், உங்களைச் சந்தேகிக்க வேண்டா மென்று.''

''அரிஞ்சயனிடம் உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கையா?''

''அசையா நம்பிக்கை இருக்கிறது.''

மீண்டும் யோசனையிலாழ்ந் தான் கரிகாலன். நிலைமை மிகச் சங்கட மாகி வருவதை உணர்ந்தான். விஷப் பூச்சி யான அரிஞ்சயனிடம் அரசகுமாரிக்குள்ள அசையா நம்பிக்கையை உடைப்பது சாத்தியமல்லவென்பதை அறிந்த கரி காலன் தான் காலை எந்தப் பக்கம் வைத் தாலும் கிடுகிடு பாதாளம் இருப்பதை உணர்ந்து கொண்டான். ஆகவே, அபாய மான குறுகிய பாதையில் தான் வெகு ஜாக்கிரதையாக நடந்து செல்ல வேண்டு மென்ற எண்ணத்துடன், ''அரசகுமாரி, நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்,'' என்று பேச்சை மீண்டும் துவக்கினான்.

''அப்படி என்ன குற்றத்தைச் செய்து விட்டீர்கள்?''?''

''ஒட்டுக் கேட்பது குற்ற மல்லவா?''

''எதை ஒட்டுக் கேட்டீர்கள்?''

''சற்று முன்பு நீங்களும் அரிஞ்சயனும் பேசியதை ஒட்டுக் கேட்டேன்.''

நிரஞ்சனா தேவியின் மை விழிகள் சரேலென அவன் முகத்தை நோக்கின. ''ஒட்டுக் கேட்டீர்களா?'' என்று கேட்டு, மேலும் ஏதோ சொல்ல முயன்று முடியாமல் வார்த்தைகளை உள்ளே விழுங்கினாள்.

''ஆமாம்.''







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 91'ம் பக்கம்

''நீங்கள் அப்பொழுது எங்கிருந்தீர்கள்?''

''தற்செயலாக அந்தப் பக்கம் வந்தேன். உங்கள் குரல் கேட்டது. சிறிது நேரம் பாதையிலே நின்றேன். பேச்சு சுவாரஸ்யத்தில் நீங்கள் என்னைக் கவனிக்கவில்லை. பேச்சு முடியும் சமயத்தில், நான் பக்கத்திலிருந்த செடியில் மறைந்து கொண்டேன்.''

''ஏன்?''

''அரிஞ்சயன் பேச்சு எனக்கு ரசிக்கவில்லை. சில விஷயங்கள் புரியவில்லை.''

''எது ரசிக்கவில்லை? எது புரியவில்லை?''

''ரசிக்காததற்கு அவனைப் பற்றிய என் அபிப்பிராயம் காரணமாயிருக்கலாம். அதை நீங்கள் ஒப்புக்கொள்ள மாட்டீர்கள். ஆனால், புரியாததற்கு மட்டும் விளக்கம் தருகிறேன்.''

''எதற்கு விளக்கம் தேவை?''

''பேச்சை நடந்தபடி நான் திருப்பிச் சொல்கிறேன். நன்றாகத் தொகுத்துப் பாருங்கள். முதலில் உங்களை அவன் ஏன் பார்க்கவில்லையென்று கேட்டீர்களா?''

''ஆமாம்.''

''சிறையிலிருந்ததால் பார்க்க முடியவில்லை, என்றான்...''

''ஆமாம்.''

''பிரும்ம மாராயர் என்ன திட்டமிட்டிருக்கிறார் என்று கேட்டீர்கள்...''

''கேட்டேன்.''

''பிரும்ம மாராயரையும் தான் பார்க்கவில்லையென்றும் உங்களைப் பல நாட்களுக்கு முன்பு பார்த்த போதுதான், அவரைப் பார்த்ததாகவும் சொன்னான்.''

''அப்படித்தான் சொன்னான்.''

''அப்படி அவன் பிரும்ம மாராயரைப் பார்க்கவில்லையென்றால், என்னைப் பற்றிய விவரங்களை எப்படி யார் மூலம் அறிந்தான்? என்னை நம்பச் சொல்லி உங்களுக்கு உபதேசம் செய்தானே, எப்படிச் செய்தான்? என்னை நம்பலாமென்று பிரம்ம மாராயரே தன்னிடம் சொல்லியதாக அரிஞ்சயன் சொன்னானல்லவா...?''

அரசகுமாரியின் முகத்தில் பிரமையும் கலவரமும் ஏறிக்கொண்டிருந்தன.

''ஆமாம், சொன்னான்,'' என்று

## எங்களுக்காக

●● மூன்று வயது நிரம்பிய பின்னும் புட்டியில்தான் பால் குடிப்பேன் என்று அடம் பிடித்தான் என் நண்பனின் குழந்தை. ஒரு ரப்பர் பல்லியை வாங்கி வந்து குழந்தை பால் குடிக்கும் புட்டியின் மேல் ஒட்டி வைத்து விட்டார் நண்பர். பையன் புட்டியின் பக்கமே போவதில்லை. —ஒய். கே. சங்கர், சென்னை—4.



●● ஊட்டியிலிருந்து தொட்டபெட்டா சிகரம் சென்றேன். 49 பேர் செல்ல வேண்டிய பஸ்ஸில் நூற்றுக்கும் அதிகமான நபர்களை ஏற்றியதால், பஸ் திக்கித் திணறியது மலை வளைவுகளில் திரும்பும்போதெல்லாம் உயிரை ஒரு கையிலும் கம்பியை மறு கையிலும் பிடித்துக் கொண்டு சென்றோம். விபத்து நேரிடும் முன்பே கவனம் செலுத்துவார்களா அதிகாரிகள்? —சி.ப. ஸ்ரீதர், சிதம்பரம் ●● நானும் எனது கணவரும் சமீபத்தில் சென்னை அண்ணா சாலையில் உள்ள ஒரு தியேட்டரில் டிக்கெட் கிடைக்காமல் நின்றிருந்த போது ஒருவர், ''என்னிடம் 2 டிக்கெட் உள்ளது. அதே விலைதான்,'' என்று என் கணவரிடம் கொடுத்தார். வாங்கிக் கொண்டு அவசரமாக உள்ளே போனால், ஒரு டிக்கெட் 'கே' வரிசை, மற்றொரு டிக்கெட் 'என்' வரிசை. இருவரும் சேர்ந்து உட்காருவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. இனிமேல் டிக்கெட்டை வெளியில் வாங்கும்போது இரண்டு டிக்கெட்டும் பக்கத்தில் இருக்கிறதா என்று பார்த்து வாங்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டோம். —லதா சங்கர், சென்னை—4. ●● சென்னை—மகாபலிபுரம் சாலையில் உள்ள ஒரு கடற்கரை ஓட்டலுக்குச் சென்றிருந்தேன். திரும்புகையில் நல்ல வெய்யில். என்னைப் போல் பலரும் மண்டை பிளக்கும் வெய்யிலில் பஸ்ஸுக்காக நின்றிருந்தனர். ஓட்டல் வாசலில் அழகான அலங்காரம் செய்து வைத்திருக்கும் ஓட்டல்காரர்கள், மக்களுக்காக ஒரு நிழற்குடை கட்டக் கூடாதா? —ஜி. தாஷ்கண்ட், சென்னை—40.

# டாம்ப்கால்

## கூந்தல் மூலிகைத் தைலம்






குளிர்ச்சியான
மூலிகைத் தைலத்தால்
வளர்ச்சியான
கூந்தலைப் பெறவேண்டுமா!

அருமையான
மூலிகைத் தைலத்தால்
அடர்த்தியான
கூந்தல் வேண்டுமா!

தலைமுடி உதிர்கிறதா!
தடுத்து நிறுத்தும்
மூலிகைத் தைலம்

இள நரையா!
பொடுகா!! இதோ!!!
மூலிகைத் தைலம்

**டாம்ப்கால்**

DIPR/1006/MS/87/NAS

(இது ஒரு தமிழ்நாடு அரசு நிறுவனத்தின் தயாரிப்பு)

தழுதழுத்த குரலில் பதில் சொன்னாள் அரசகுமாரி.

''இவன் பிரும்ம மாராயரைப் பார்க்கவேயில்லையென்றால் பிரும்ம மாராயர் என்னைப்பற்றி இவனிடம் எப்படிப் பேசியிருக்க முடியும்?'' என்று வினவிய கரிகாலன் குரலில் - சந்தேகம் பலமாயிருந்தது.

''ஆமாம்! அரிஞ்சயன் பேச்சு முன்னுக்குப் பின் முரணாகத்தான் இருக்கிறது. நான் இதைக் கவனிக்க வில்லையே!'' என்றாள் அரசகுமாரி.

கரிகாலன் அவளுக்கருகில் மீண்டும் சென்று, அவள் கைகள் இரண்டையும் தன் கைகளால் பற்றிக்கொண்டு, அவள் கண்களை உற்று நோக்கிக் கொண்டே சொன்னான்: ''அரசகுமாரி! வேங்கிநாட்டு அரசியல் சதுரங்கத்தில் பல காய்கள் நகர்ந்து வருகின்றன. நகர்த்துபவன் மிகச் சாமர்த்தியசாலியாயிருக்கிறான். இந்த ஆட்டத்திலிருந்து நீங்கள் தள்ளி நில்லுங்கள். என்னை ஆடவிடுங்கள். வெட்டுக் கொடுக்க வேண்டிய காய்களை நான் வெட்டுக் கொடுத்து ஆட்டத்தை ஜெயித்துத் தருகிறேன். இது பெண்கள் சம்பந்தப்படக்கூடிய விஷயமல்ல. என்னை நம்புங்கள். எனக்கெதிரே என்ன அத்தாட்சிகள் உங்கள் கண் முன்பாக எழுந்தாலும் நம்பாதீர்கள். இந்த உடலில் உயிர் இருக்கும்வரையில், நான் படித்த கௌடில்யனின் அர்த்தசாஸ்திர அறிவு என் மூளையை விட்டு அகலாதவரையில், இந்த நிலைமையை நான் சமாளிக்கிறேன். என்ன! சொல்லுங்கள் அரசகுமாரி, என்னைப் பூரணமாக நம்புவீர்களா? இரண்டு நாட்களுக்கு முன்புதான் நான் தங்களுக்கு அறிமுகமானேன், ஆனால் இருபது வருஷங்களாக அறிமுகமானால் கூட ஏற்படாத அத்தனை பாசம், என்னுடைய ரத்தத்தில் இன்று ஓடுகிறது. உங்களுக்கு உதவ என் இதயம் துடிக் கிறது.''

அவன் ஆவேசத்தையும் கண் களில் ஏற்பட்ட ஒளியையும் அவள் கண்டாள். அரிஞ்சயன் சொன்ன தகவலில் இருந்த முரண்பாடும் அவள் மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தது. அவள் இதயம் மட்டும் 'எதிரே நிற்கும் இந்த வாலிபனை நம்பு' என்று உந்தியது. இதயத்தின் சொல்லுக்கே இறுதியில் இடங்கொடுத்த அரசகுமாரி, ''கரிகாலரே! எனக்கு என்ன

---

அரசு

# திருடரைக் காவலராக

●● கே. ஆதில், ஆம்பூர்.

*வீட்டிற்கு வாட்ச்மேனை வைப்பதை விடத் திருடனைக் காவல் வைத்தால் என்ன?*

முகவரி தப்பு தலைவரே. அரசியல் சம்பந்தப்பட்ட இந்த மாதிரிக் கேள்வி கள் அனுப்பப்பட வேண்டிய இடம்: துக்ளக்.

●● கே. வேலுசாமி, கிச்சிப்பாளையம்.

*'ஆர்த்தி' என்ற பெயரின் அர்த்தம்? அது தமிழ்நாட்டுப் பெயரா?*

கோவிலுக்குப் போங்கள். வாசலில் உள்ள கடையில் ஒரு கற்பூரப் பொட்டலம் வாங்கிக் கொள்ளுங்கள். சாமி சன்னிதியில், தட்டில் வையுங்கள். அர்ச்சகர் பொட்டலத்தைப் பிரித்து, ஏற்றி, சாமிக்குக் காட்டுவார். அது தான் ஆரத்தி. (கொஞ்சம் ஸ்டைலாக ஆர்த்தி.) கமலா, மீனாட்சி, காமாட்சி, விசாலாட்சி — இதெல்லாம் தமிழ்நாட்டுப் பெயரா? 'ஊம்' என்றால் இதுவும் 'ஊம்' தான்.

●● கே.என். வெங்கடாசலம், அத்தாணி.

*கமலஹாசனைப் பிரிந்த வாணி பற்றிக் கூறுவீர்களா?*

ஐயோ பாவம். இந்தக் கிருஷ்ணசாமி ரெட்டியார் அப்போது எங்கே போயிருந்தாராம்?

●● எல்.ஆர். சுந்தரராஜன், சென்னை.

*'வி.பி.சிங் ஊழல் பேர்வழி,' என்று மத்திய மந்திரி கே.கே. திவாரி அறிக்கை வெளி யிட்டுள்ளது பற்றி?*

1. வி.பி. சிங், ஊழல் பேர்வழி. 2. சோப் போட்டுத் துவைத்தால் துணி அழுக்காகிறது. 3. விளக்கை ஏற்றினால், வீடு இருளடைந்து போகிறது.

சொல்வதென்று விளங்கவில்லை. ஆனால் உங்களை நம்புகிறேன். உங்களிஷ்டம் போல் செய்யுங்கள். வேங்கி நாட்டின் கதியை உங்கள் கரங்களில் ஒப்படைக்கிறேன்,'' என்று கூறி மெள்ளக் கட்டிலுக்காக நகர்ந்தாள்.

''அப்படியானால் நான் வருகிறேன் அரசகுமாரி! இனி நீங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம். நிம்மதியாகத் தூங்குங்கள்,'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பிய கரிகாலன், ஏதோ நினைத்துக்கொண்டு, ''ஏன் அரசகுமாரி, மாலினி எங்கே?'' என்றான்.

''பக்கத்து அறையில் படுத்திருக்கிறாள், ஏன்?''

''இல்லை, நீங்கள் தனித்திருக்கிறீர்களே என்று பார்த்தேன்.''

''தனிமையை நாடித்தான் அவளைப் பக்கத்து அறைக்கு அனுப்பினேன்.''

''கூப்பிட்டுத் துணைக்குப் படுத்துக் கொள்ளச் சொல்லுங்கள்,'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான் கரிகாலன்.

''இப்பொழுது எங்கே போகிறீர்கள்?'' என்று வினவினாள் அரசகுமாரி.

''சதுரங்கத்தில் சில காய்களை வெட்டுக் கொடுக்க,'' என்று கூறிவிட்டுச் சிரித்துக் கொண்டே வெளியேறிய கரிகாலன், அரண்மனையைக் கடந்து, பல தெருக்களையும் தாண்டி, பிரும்ம மாராயன் மாளிகைக்கு வந்து சேர்ந்தான்.

இரவு மூன்றாம் ஜாமத்தை எட்டிக் கொண்டிருந்தாலும், மாளிகை விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. வாயிற் காவலரும் அவனைத் தடை செய்யாமலே உள்ளே விட்டார்கள். உள்ளே அவன் நுழைந்து முதற்கூடத்துக்கு வந்ததும் திடீரென இரண்டு பேர் அவன்மீது பாய்ந்து கீழே தள்ளினார்கள். அவன் எழுந்து தப்பியோட முடியாதபடி, இன்னுமிரண்டு பேர் அவன் கைகள் மீதும் கால்கள் மீதும் உட்கார்ந்து கொண்டார்கள். ''சரி, அந்தத் துரோகியை ஒழித்து விடுங்கள்,'' என்றது கடுமையான பிரும்ம மாராயன் குரல். அந்த ஆணையை நிறைவேற்றச் சித்தமாக எதிரே நின்ற ஒருவன் கையிலிருந்த கட்டாரியைக் கரிகாலன் மார்புக்காகக் குறி வைத்து ஓங்கினான்.

(தொடரும்)

# நியமித்தால் என்ன?

பதில்கள்

●● தங்க. ராஜா, விருத்தாசலம்.

பொன்—பெண். ஒப்பிடுக.

1. பெண்ணாண்ட இரக்கம் கீது. பொன் விசயத்தில் இறக்கமே கெடையாது. (எப்போதுமே ஏத்தம்தான்.)

2. இத்தால அதுக்கு அயகு. பொன்: பெண்ணுக்கு ஏங்கி. பெண்: பொன்னுக்கு வீங்கி.

3. பிஸ்கட்டா இருந்து கள்ளப் பணத்துக்குத் துணை நிக்கிறது பொன் வாத்யாரே. சாக்லட்டா இருந்து அதைக் காட்டிக் கொடுப்பது பெண். (அம்பானி?)

4. ''ஆண்களோடு பழகுவது, குடிப் பழக்கம் இல்லாத ஒருவன் அகலமான நடைபாதையில் நடப்பது போன்றது. பெண்களோடு பழகுவது அதே மனிதன் சில நூறு மில்லி அடித்த பிறகு, இல்லாத ஒரு படிக்கட்டில் ஏற முயல்வது போன்றது.'' இன்னாரு ஒரு கதாசிரியர். பொன்னுடன் பயகிறதும் சுளுவில்லை. (நகை செய்யக் குடுத்துப் பாரு.)

5. பெண்ணை அன்னிக்கு நகை ஸ்டாண்டாக ஆக்கியது பொன். இன்னிக்கு அடக்கமாக, கூட்டத்தில் போர்த்திக்கினு நடக்கச் செய்றதும் அதே பொன். (சங்கிலித் திருடன், ஜாக்கிரதை!)

6. பொன் இல்லாவிட்டால் நஸ்டம் இன்னா? அது ஓர் உலோகம். பெண் இல்லாக்காட்டி எதுவும் இல்லை. அவளே உலகம்.





சாண்டில்யன்

# மன்னன் மகள்

## 22. இருட்டில் நகர்ந்த உருவம்

2-7-87

சற்றும் எதிர்பாராதவிதமாகப் பிரம்ம மாராயனுடைய மாளிகையின் முதற்கூடத்திலே தனக்குக் கிடைத்த மரியாதையாலும், இரண்டு முரட்டு ஆட்களும் தன்மீது பலமாக உட்கார்ந்து அழுத்தியபடியாலும் ஒரு வினாடி திக்பிரமையடைந்த கரிகாலன், ''இந்தத் துரோகியைத் தொலைத்துவிடு,'' என்று பிரம்ம மாராயன் கூவிய மாத்திரத்தில் சுயநிலையைப் பூர்ணமாக அடைந்துவிட்டபடியால் எதிரேயிருந்த வீரன் தன்னை விண்ணுலகத்துக்கு அனுப்பக் கட்டாரியை ஓங்கியபொழுது, இம்மியளவும் அச்சத்தைக் காட்டாமலும், மிகத் திடமான குரலிலும், பிரம்ம மாராயனைப் பார்த்து, ''படைத்தலைவரே! இந்தக் கொலைத் தொழிலை ஒரு வினாடி தள்ளிப்போட முடியுமா?'' என்று கேட்டான்.

பிரும்ம மாராயன் தன் பெரிய கண்களை உருட்டி ஒரு முறை கரிகாலனை நோக்கிவிட்டுக் கட்டாரியை ஓங்கிய வீரனைப் பார்த்து, ''சற்றுப் பொறு அரிஞ்சயா! இவன் என்ன சொல்கிறானென்று விசாரிப்போம்,'' என்றான்.

''விசாரிப்பதற்கு என்ன இருக்கிறது படைத்தலைவரே? எல்லாம் வெட்ட வெளிச்சமாக நமக்குத் தெரிந்ததுதானே?'' என்று பிடிவாதம் பிடித்த அரிஞ்சயன் மீ[illegible]ம் கட்டாரியை ஓங்கினான்.

இப்படி இரண்டாந்தடவையாக அரிஞ்சயன் கட்டாரியை ஓங்கியபொழுது, கரிகாலன் லவலேசங்கூடக் கவலைப்படாமல் புன்முறுவலே செய்தான். முதலில் பிரும்ம மாராயன் தன்னைத் தொலைத்துவிடும்படி உத்தரவிட்டது முதல், அரிஞ்சயனுடைய ஒவ்வொரு நடவடிக்கையையும் கவனித்துக் கொண்ட கரிகாலன், அரிஞ்சயனுடைய மனப்போக்கைப் பூரணமாகப் புரிந்து கொண்டான். பிரம்ம மாராயன் தன்னைக் கொல்லும்படி உத்தரவிட்டவுடனேயே அரிஞ்சயன் கட்டாரியை ஓங்கினாலும், ஓங்கிய வேகத்தில் கட்டாரி கீழே இறங்கவில்லையென்பதையும், சற்று நேரம் அனாவசியமாக மேலேயே நின்றுவிட்டதையும் கவனித்த கரிகாலன், அரிஞ்சயன் தன் மரணத்தை அடியோடு விரும்பவில்லையென்பதைப் புரிந்து கொண்டான். அரிஞ்சயன் இரண்டாம் முறையாகக் கொலை செய்துதான் தீருவேனென்று பிடிவாதம் பிடித்துக் கட்டாரியை ஓங்கியதும், அங்குள்ள மற்றச் சதிகாரர்களைத் திருப்தி செய்யவே ஒழியத் தன்னைக் கொலை செய்யும் நோக்கம் அவனுக்கு அடியோடு கிடையாதென்றும் தீர்மானித்துக் கொண்டான். அரிஞ்சயனுடைய நடத்தைக்குக் காரணமும் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது கரிகாலனுக்கு. 'அரிஞ்சயன் உண்மையில் ஜெயசிம்மனுடைய ஒற்றன்; இந்தச் சதிகாரர்களின் நடவடிக்கைகளை கவனித்து அடிக்கடி தனக்கு தகவல் கொடுக்கவும், மன்னன் மகள் சதி செய்யும் விஷயத்தைப் பற்றிச் சரியான சாட்சியும் தயாரிக்கவுமே ஜெயசிம்மன் இவனை நியமித்திருக்கிறான். நம்மையும் ஜெயசிம்மன் இதே பணிக்கு ஏவியிருக்கிற விஷயம்



அரிஞ்சயனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஒற்றன் சகோதர ஒற்றனைக் கொல்லுவானா? ஆகையால் தான் தாமதிக்கிறான்,' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான் கரிகாலன். அவன் ஊகம் சரியென்பதை அரிஞ்சயனின் அடுத்த நடத்தை தெளிவாக்கியது. ஊகத்துக்கு அத்தாட்சிகளும் ஏராளமாகக் குவிந்து கிடப்பதை நினைத்துப் பார்த்தான்.

இரண்டாம் முறையாக அரிஞ்சயன் கட்டாரியை ஓங்கியபோதும், பெரிதும் நிதானித்து பிரும்ம மாராயன் உத்தரவை எதிர்பார்ப்பதுபோல் படைத் தலைவனை நோக்கிக் கண்களை ஓட விட்டான். அரிஞ்சயனின் நிதானத்துக்குக்

காரணத்தை அறிந்து கொண்ட கரிகாலன், மெள்ளப் புன்சிரிப்பொன்றை உதிர்த்தான். மரணம் எதிர்நோக்கியிருந்த அந்தச் சமயத்திலும் அவன் சிரித்தது பிரும்ம மாராயனுக்குப் பெரும் கோபத்தை விளைவிக்கவே, ''எதற்காகச் சிரிக்கிறாய்?'' என்று கத்தினான்.

''சோழ நாட்டுப் படைத் தலைவருக்கும் அவரது சகாக்களுக்குமுள்ள ரத்தவெறியைக் கண்டு சிரித்தேன்,'' என்றான் கரிகாலன்.

''ரத்தவெறியல்ல கரிகாலா! உனக்கு நீதி வழங்கப்படுகிறது,'' என்று சொல்லிய பிரும்ம மாராயன், தன் பெரும் கண்களால் கரிகாலனை உற்று நோக்கி, அவன் மனத்திலோடும் எண்ணங்களை ஆராய முயன்றான்.

கரிகாலன் புருவங்கள் ஆச்சரியத்தால் சற்றே உயர்ந்தன. ''என்ன! நீதி வழங்கப்படுகின்றதா?'' என்று விசாரித்தான் குரலில் வியப்புத் தொனிக்க.

''ஆம்,'' என்றான் பிரும்ம மாராயன் உறுதியுடன்.

''தாங்கள் சோழநாட்டுப் படைத் தலைவர்தானே?''

''அதிலென்ன சந்தேகம்?''

''நேற்று வரையில் சந்தேகமில்லை.''

''இன்று சந்தேகம் ஏற்பட்டு விட்டதோ?''

''ஆமாம்.''

''காரணம்?''

''சோழ நாட்டில் நீதி வழங்கும் முறை வேறு.''

கரிகாலனுடைய இந்தச் சொற்களைக் கேட்ட பிரும்ம மாராயன் ஒரு கணம் ஸ்தம்பித்துப் போனான். கரிகாலனின் வார்த்தைகளிலிருந்த நியாயம் அவனுக்கு நன்றாக விளங்கியது. எப்பேர்ப்பட்ட குற்றவாளியாயிருந்தாலும் அவன் கட்சியைக் கேட்காமல் நீதி வழங்கும் வழக்கம் தமிழ் மன்னர்களின் ஆட்சியில் கிடையாது. அதுவும் இராஜேந்திர சோழதேவன் ஆட்சியில் கிடையாது. அப்படியிருக்க, தான் கரிகாலனை அடியோடு விசாரிக்காமல், ஒருதலைப்பட்சமாகக் கிடைத்த செய்திகளைக் கொண்டு அவனைக்




கிரானைட் கற்களை மெருகேற்றி பத்ரிநாத்தை விட மலிவாக யாரும் விற்க முடியாது என்று கேள்விப்பட்டுத்தான் அவரைப் பார்க்க வந்திருந்தனர் கோபால்ராம் தம்பதி.

ஏ.சி. செய்த அறை. ரொம்ப நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதிலும் அவர் இருக்கைக்கு இடது பக்கத்தில் தரையோடு தாழப் போட்டிருந்த அந்தக் கண்ணாடி வட்ட மேசை, அதைத் தாங்கிக் கொண்டிருந்த அலங்காரப் பீட அமைப்பு— கோபால்ராமின் மனைவி கிருத்திகாவை மிகவும் கவர்ந்தது.

பத்ரிநாத் ஷோ கேஸில் பரப்பப்பட்டிருந்த மெருகேற்றிய பல நிறத்துக் கற்களைக் காட்டி, ''உங்க மிஸஸ்ஸையும் பார்க்கச் சொல்லுங்க. எது மேட்ச் ஆகுதோ சொன்னா கொடேஷன் தரேன்...'' என்றவர் அந்த அம்மாளைக் கவனித்து, ''நீங்க கேட்டது இந்தப் பக்கம் இருக்கு. அங்கே என்னத்தை அப்படிப் பார்க்கிறீங்க?'' என்றார்.

''இல்லே. இந்த மேசை ரொம்ப நல்லா இருக்கு. இது மாதிரி நான் பார்த்ததே இல்லை. எங்க ஹாலுக்கும் இது மாதிரி ஒரு பீஸ் கிடைக்குமா?'' என்றாள் அவள்.

பத்ரிநாத் லேசாகச்

222



கொன்றுவிடுவது சரியாகாது என்ற ஞானோதயம் படைத் தலைவனுக்கு மெள்ள மெள்ள ஏற்படவே, அரிஞ்சயனை நோக்கி, ''அரிஞ்சயா! இவன் சொல்லுவதிலும் நியாயம் இருக்கிறது. இவன் என்னதான் சொல்லுகிறானென்று கேட்போமே,'' என்றான்.

''நம்மிடம்தான் அப்பழுக்கில்லாத அத்தாட்சிகள் இருக்கின்றனவே,'' என்று முரண்டினான் அரிஞ்சயன்.

கரிகாலன் மீது உட்கார்ந்து கொண்டிருந்த இருவரும்கூட, ''ஆமாம் படைத்தலைவரே! அனாவசியமாக நாம் ஏன் பொழுதை ஓட்ட வேண்டும்?'' என்று அரிஞ்சயனுடன் சேர்ந்து கொண்டார்கள்.

''தங்களிடம் அத்தாட்சிகள் பலமாயிருக்கலாம். ஆனால் 'இருவர் தம் சொல்லையும் ஏழுதரம் கேட்டு' நீதி செலுத்துவது சோழ நாட்டுப் பழக்கம்; படைத்தலைவர் கூட எங்கள் நாட்டில் இஷ்டப்படி கொலை செய்துவிட முடியாது. ஆனால் பிரும்ம மாராயர் சாளுக்கியர்கள் நாட்டில் நீண்ட காலம் இருந்திருக்கிறார். இப்பொழுது அவர் பழக்கம் எப்படியோ?'' என்று இழுத்தான் கரிகாலன்.

சாதாரணமாகவே நிமிட நேரத்தில் கோபம் தலைக்கேறக்கூடிய சுபாவம் வாய்ந்த பிரும்ம மாராயன் சினத்தின் உச்சியை அடைந்தான். அவன் கண்கள் கரிகாலனை எரித்துவிடுவது போல் பார்த்தன. ''டேய்! உனக்கு ஏதாவது சமாதானம் சொல்ல முடியுமானால் சொல். வீண் விஷயங்களைப் பேசாதே!'' என்று இரைந்தான் பிரும்ம மாராயன், கீழே கிடந்த கரிகாலனை நோக்கி.

''இந்த இரண்டு பிரமுகர்களையும் தூக்கிக் கொண்டு பேசுவது கஷ்டமாயிருக்கிறது. இவர்களைச் சற்று இறங்கச் சொல்லுங்கள்; அவசியமானால் பிறகு சவாரி செய்யலாம்,'' என்று, தன்மீது உட்கார்ந்திருந்த இரண்டு வீரர்களையும் கண்களால் குறிப்பிட்டான் கரிகாலன்.

அவன் வார்த்தைகளை உபயோகித்த முறையிலிருந்தும், அவன் குரலில் இருந்த ஏளனத்திலிருந்தும், அவன் தங்களைப் பார்த்து நகைக்

---

சிரித்துக்கொண்டார். ''இது நாங்க ஸேல் பண்றதில்லை மேடம். யாரோ பரிசாகக் கொடுத்தது. நான் விசாரிக்கிறேன்.''

கோபிநாத் ஷோகேஸ் பக்கம் சென்றார். ''கிருத்தி, இதப் பாரு. இந்த லைட் க்ரீன் ஸூட்டபிளா இருக்கும் இல்லை?''

''நானும் அதேதான் நினைச்சேன். இது சதுர அடி என்ன ஆகும்?''

பத்ரிநாத் பைலைப் புரட்டி விலை சொன்னார். மலைப்பாக இருந்தது.

''சார், விலை அதிகமா இருக்கே...''

''இந்த ஸ்பெசிமன் உங்களுக்கு வேறு எங்கேயும் கிடைக்காது.'' அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

கேட்ட தொகைக்கு ஆர்டர் கொடுத்துவிட்டுத் திரும்பினார்கள்.

காரில் மனசு தாங்காமல் கிருத்திகா கேட்டாள்: ''என்னங்க, இங்கேதான் சீப்பா இருக்கும்னாங்க. வச்சுத் தீட்டிப்பிட்டாரே?''

''இங்கே சீப்பா இருக்கும்கிறது உண்மைதான். ஆனா நமக்கு அவர் வேணும்னே தான் அதிகமா பில் போட்டிருக்கிறார். எல்லாம் உன்னாலேதான்.''

கிருத்திகாவுக்கு அதிர்ச்சி. ''நான் என்னங்க செய்தேன்?''

''அதான் அவர் ஆபீசிலே ஓவராப் புகழ்ந்தியே... ஞாபகம் இல்லையா?''

''அவர் பக்கத்திலே இருந்த அந்த ரவுண்ட் டேபிள் நல்லா இருந்ததுன்னு சொன்னேன்.''

''அதேதான். நாம அவர் தயாரிப்பைப் புகழ்ந்தா அவருக்குப் பெருமையா இருக்கும். அதை விட்டுட்டு எவனோ செய்ததைப் போய் புகழ்ந்தா? நான் அப்பவே கவனிச்சேன். அந்த ஆளுக்கு மூஞ்சி ஜிவுஜிவுன்னு ஆச்சு. மறைச்சிட்டார். அதான் அந்தக் கோவத்தைப் பில்லிலேயே வச்சுத் தீட்டிட்டார்.''

வெற்றிநடை போடுகிறது!

ராஜ்கமலின்...

# கடமை கண்ணியம் கட்டுப்பாடு

இப்பொழுது
நடைபெறுகிறது!

ஆனந்த் A/C.
வசந்தி A/C.
4 காட்சிகள்
பிரபாத்
3 காட்சிகள்
சந்திரன் A/C.
பகல் காட்சி
மற்றும் தமிழகமெங்கும்



கிறானென்பதை அறிந்து கொண்ட இரண்டு வீரர்களும், பிரும்ம மாராயன் உத்தரவுக்குக் காத்திராமல் தாங்களாகவே எழுந்து விட்டார்கள். இதனால் கைகால்கள் சுவாதீனத்திற்கு வந்த கரிகாலனும் மெல்ல எழுந்திருந்து வீரர்களின் முரட்டுத்தனத்தின் விளைவாகக் கசங்கியிருந்த ஆடைகளைச் சரிபடுத்திக் கொண்டு, கலைந்திருந்த தலை மயிரையும் கோதிவிட்டுக் கொண்டான். அவன் ஏற்பாடுகளைக் கண்ட பிரும்ம மாராயனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டது. 'ஏதோ கல்யாணப் பந்தலுக்குப் போவது போல் எதற்காகச் சிங்காரித்துக் கொள்கிறான்,' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்ட பிரும்ம மாராயன், ''கரிகாலா, உன் நடவடிக்கைக்கு நீ சொல்ல வேண்டிய சமாதானம் ஏதாவது இருந்தால் உடனே சொல்லிவிடு,'' என்று ஆணையிட்டான்.

''உடனே சொல்லிவிட வேண்டுமா? ஆமாம்; கொலை செய்வதில் தாமதம் கூடாதல்லவா? சொல்லிவிடுகிறேன். ஆனால் அதற்கு முன்பாக இங்கிருப்பவர்கள் எல்லோரும் யார் யார் என்று தெரிந்து கொள்வது அவசியமல்லவா?'' என்று கேட்ட கரிகாலன், அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் மீது கண்களை ஓடவிட்டான்.

அரிஞ்சயனையும் பிரும்ம மாராயனையும் தவிர மூன்று பேர்தான் அந்தக் கூட்டத்திலிருந்தார்கள். அந்த மூன்று பேர்களில் இருவர் தன்மீது உட்கார்ந்திருந்தவர்கள். அந்த மூன்று பேர்களுடைய உடைகளைக் கவனித்த கரிகாலன், அவர்கள் சாதாரண வீரர்களாயிருக்க முடியாதென்றும், சதியில் சேர்ந்திருப்பதாகப் பிரும்ம மாராயன் முன்பு தன்னிடம் சொன்ன மூன்று படைத் தலைவர்களாகவே இருக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டான்.

கரிகாலன் கண்களின் ஆராய்ச்சியைக் கண்ட அரிஞ்சயன், ''கரிகாலரே! இவர்கள் மூவரும் வேங்கி நாட்டுப் படைத் தலைவர்கள். அரசகுமாரிக்காக உயிரை விடச் சித்தமாயிருக்கிறார்கள்,'' என்று அறிமுகம் செய்வித்தான்.

''சித்தமாயிருக்க வேண்டியது தான்,'' என்ற கரிகாலன் இதழ்களில், இளநகையொன்று படர்ந்தது.

''என்ன! உயிர் விடச்



''இந்தத் தண்ணிக் காப்பிக்கா இத்தனை விலை?''

''தண்ணிக்குத்தாங்க விலை.''

சித்தமாயிருக்க வேண்டுமா?'' என்று கேட்டான், வேங்கி நாட்டுப் படைத் தலைவன் ஒருவன்.

''ஆமாம் படைத் தலைவரே! நாம் எல்லோரும் சித்தமாயிருக்க வேண்டியதுதான். என்னை வேண்டுமானால் முதலில் நீங்கள் கொல்லலாம். ஆனால் நாளைக்குள் நீங்களும் உயிரை ஜெயசிம்மன் சிறையில் அர்ப்பணிக்க வேண்டியதாயிருக்கும். ஆகவே, நீங்களும் நானும் மேல் உலகத்தில் சந்திக்க இருக்கும் இடைவெளி பன்னிரண்டு நாழிகைகள்தான்,'' என்றான் கரிகாலன்.

கரிகாலன் பேச்சுப் படைத் தலைவர்களிடையே பெரும் திகிலை உண்டாக்கி விட்டபடியால், அவர்கள் பிரும்ம மாராயனை நோக்கினார்கள். பயம் என்பதை அறவே அறியாத பிரும்ம மாராயன் மட்டும் கரிகாலன் பேச்சைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அவனைப் பார்த்துக் கேட்டான்: ''அப்படியானால் உன் குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா கரிகாலா?''

''குற்றச்சாட்டு என்னவென்று தெரிந்தாலல்லவா பதில் சொல்லலாம்?''

''நீ இப்பொழுது எங்கிருந்து வருகிறாய்?''

''ஏன்? அரண்மனையிலிருந்து தான்.''

''அரண்மனையில் யாரைப் பார்க்கச் சென்றாய்?''

''அரசகுமாரியைப் பார்க்கப் போயிருந்தேன்.''

''பார்த்தாயா?''

''இல்லை.''

''வேறு யாரைச் சந்தித்தாய்?''

''மேலைச் சாளுக்கிய மன்னரை.''

''யார்? ஜெயசிம்ம சாளுக்கியனையா?''

''ஆமாம்.''

இந்தப் பதிலைக் கேட்ட படைத்தலைவர் மூவரும் மீண்டும் கரிகாலனை நோக்கி நகர ஆரம்பித்தார்கள். கரிகாலன் அவர்கள் முன்பு மிகக் கம்பீரமாக நின்று இகழ்ச்சி ததும்பும் பார்வையொன்றையும் அவர்கள் மீது வீசி, அவர்களை மேற்கொண்டு நகர வேண்டாமென்பதற்கு அறிகுறியாகக் கையை நீட்டி எச்சரிக்கவும் செய்தான். ''என்ன அவசரம் படைத் தலைவர்களே! கொலை ஆவலைச் சற்றுத் தணித்துக் கொள்ளுங்கள். நான் எங்கும் போய் விட மாட்டேன். உண்மையைத் தெரிந்து கொண்டு, பிறகு உங்கள் கைங்கரியத்தை நிறைவேற்றுங்கள்,'' என்று கூறினான்.

''உண்மைதான் தெரிந்து விட்டதே!'' என்றான் ஒரு படைத் தலைவன்.

''என்ன உண்மை தெரிந்து விட்டது உங்களுக்கு?'' என்று கேட்டான் கரிகாலன்.

''அரண்மனைக்குப் போனதாகவும், ஜெயசிம்மனைப் பார்த்ததாகவும் நீயே ஒப்புக்கொண்டிருக்கிறாய்,'' என்றான் இன்னொரு படைத் தலைவன்.

''அதைத் தவிர வேறு தகவல்களும் எங்களிடம் சிக்கியிருக்கின்றன,'' என்று அதுவரை மௌனம் சாதித்த அரிஞ்சயனும் இடையே புகுந்து பேசினான்.

கரிகாலன் தன் கண்களை அரிஞ்சயன் மீது ஓட்டி, ''வேறு என்ன தகவல் கிடைத்திருக்கின்றன?'' என்று கேட்டான்.

''உங்களுக்கு மன்னர் விருந்தளித்திருக்கிறார்.''

''பிறகு?''

''நீங்கள் அரையன் ராஜராஜன் மகனென்றும், உங்களை மிகக் கௌரவத்துடன் நடத்த வேண்டுமென்றும் பறை சாற்றியிருக்கிறார்.''

''அதனாலென்ன?''

''அதனாலென்னவா?'' ஆச்சரியத்துடன் கேட்டான் பிரும்மமாராயன். ''உன்னிடம் ஜெயசிம்மன் ஏன்

இத்தனை கருணை காட்டினான்?'' என்று வினவினான்.

''அரையன் ராஜராஜன் மகனை வேறு எப்படி நடத்த முடியும்?'' என்று கரிகாலன் வினவினான்.

பிரும்ம மாராயனுடைய விழிகளில் ஆச்சரியமும் கோபமும் கலந்து நின்றன. ''நீ அரையன் ராஜராஜன் மகனா?'' என்று அடக்கத்தைப் பறக்க விட்டுப் பதட்டத்துடன் இரைந்தான், சோழ நாட்டுப் படைத்தலைவன்.

கரிகாலன் அவனை நன்றாக ஏறெடுத்துப் பார்த்து விட்டு, ''பதட்டம் எதற்குப் படைத் தலைவரே! சந்தேகமிருந்தால் இதைப் பாருங்கள்,'' என்று தன் மடியிலிருந்த ஓலையை எடுத்து, பிரும்ம மாராயனிடம் நீட்டினான்.

விளக்கொளியில் பிரும்ம மாராயன் ஓலையைப் படித்ததும் பெருங்குழப்பத்திற்கு உள்ளானான். ''அரிஞ்சயா! இதென்ன, எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே,'' என்று அரிஞ்சயனிடம் ஓலையை நீட்டினான் சோழ நாட்டுப் படைத்தலைவன்.

ஓலையைப் படித்த அரிஞ்சயன் முகத்தில் மட்டும் எந்தவிதக் குழப்பமும் ஏற்படவில்லை. ஓலையைப் பழையபடி சுருட்டிக் கரிகாலனிடம் கொடுத்துவிட்டு, ''கரிகாலரே! நீங்கள் யார் மகன் என்பதைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை. முதலில் அரசகுமாரியின் தூதராக இங்கு வந்தீர். இங்குள்ள சதி விவகாரங்கள், இதில் ஈடுபட்டிருப்பவர்களின் பெயர்கள், அனைத்தும் உங்களுக்குத் தெரியும். அப்பேர்ப்பட்ட நீங்கள் ஜெயசிம்மனைச் சந்தித்திருக்கிறீர்கள். அவனோ உங்களிடம் பூரண நம்பிக்கை வைத்து, உங்களை இஷ்டப்படி நடமாட விட்டிருக்கிறான். காரணமில்லாமல் அப்படிச் செய்ய மாட்டான் ஜெயசிம்மன்,'' என்றான் அரிஞ்சயன்.

''காரணம் எதுவாயிருக்குமென்று ஊகிக்கிறீர்கள்?''

''ஒரே காரணம்தான். சதியைப் பற்றியும், சதியில் ஈடுபட்டிருப்பவர்களைப் பற்றியும் நீர் அவனிடம் கூறியிருக்க வேண்டும்.''

65'ம் பக்கத்திலுள்ள இது ஒரு சாதாரண மரமல்ல. விடை: உச்சிக்கிளையில் இரண்டை

# சுவர் கிடைத்தது
# சித்திரம் வரைந்தேன்

கல்லூரி மாணவி கவிதாவின் வீட்டிற்குச் சென்றால் சுவரில் அழகாக வால் பேப்பர் ஒட்டியதுபோல் டிஸ்னியின் மிக்கி மவுஸ் டானல்டக் படங்கள்.

கவிதாவே வரைந்தது. புதுமையான இந்த எண்ணம் எப்படி வந்தது என்று கேட்டபோது—

''சுவர் அழுக்காக இருந்தது. ஏதாவது படம் வரைந்தால் நன்றாக இருக்குமே என்று வரைந்தேன். வரையும்போது வீட்டில் ஒன்றும் சொல்லவில்லை. நன்றாக இல்லையென்றால் வெள்ளை அடித்துவிடலாம் என்று எண்ணிக் கொண்டேன். எல்லாரும் நன்றாக இருக்கிறது என்றதால் அதை அப்படியே விட்டு வைத்து விட்டோம்.''

அட்டையில் கவிதாவுடன் இருப்பவர் சங்கீதா.



தகவல்: ஏ.எஸ். திவாகர்
வண்ணப்படம் ஏ.வி. பாஸ்கர்.

# இரண்டும் ஒரே தோற்றம் தான்







கலவை : 70% காப்பி 30% சிக்கரி      கலவை : 80% காப்பி 20% சிக்கரி

# ஒன்றில் காட்டம் குறைவு

இரண்டு இன்ஸ்டன்ட் காப்பி—சிக்கரி கலவைகளில் உள்ள வித்தியாசத்தைக் காட்டுவது எளிதல்ல. ஆனால் கலவையை பொறுத்துத்தான் சுவை என்பதை நீங்கள் ஒப்புகொள்வீர்கள். சிக்கரி அளவுக்கு அதிகமானல் கசப்பாக இருக்கும். எனவேதான் ஸன்ரைஸ் தரும் கூடுதல் காப்பி சுவையும் ஸ்ட்ராங்கும் உங்களுக்கு சிறப்பாக இருக்கிறது. ஏனெனில், ஸன்ரைஸில் காப்பியும் சிக்கரியும் 80:20 என்ற விகிதத்தில் கலந்திருக்கிறது. மற்ற சாதாரண இன்ஸ்டன்ட் கலவை யிலோ 70:30 என்ற விகிதம். ஸன்ரைஸ் கசப்பாக இல்லாமல் சிறப்பாக ருசிப்பதற்கு இதுவே காரணம்.

நாங்கள் சொல்வதை நம்புவதைவிட நீங்களே சுவைத்துப் பாருங்கள்.




Nestlé
## ஸன்ரைஸ்
இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி கலவை

## கூடுதலான காப்பி கலவை

HTA 5118A TAM

## லவ் என்றால் என்ன? விடை:

1. 'L'oeuv' என்ற பிரெஞ்சுச் சொல்லிலிருந்து 'லவ்' வந்தது. பொருள்: முட்டை. அதாவது, பூஜ்யம்.

2. கொதிக்க வைத்து ஆறப் பண்ணிய தண்ணீர் தான் முதலில் உறையும். கொதிக்க வைக்கும்போது தண்ணீரில் உள்ள காற்றுக் குமிழ்கள் அழிந்து விடுவதே காரணம்.

3. குறைந்த தூர ஓட்டப் பந்தயமானால் குதிரை ஜெயிக்கும். நீண்ட தூரம் என்றால் மனிதன் ஜெயிப்பான்.

4. பிப்ரவரி 28.

5. ஐந்து நிமிடம் ஓடினால் அதிகமாகவும், ஐந்து நிமிடம் நடந்து போனால் குறைவாகவும், ஐந்து நிமிடம் நின்றிருந்தால் இன்னும் குறைவாகவும் நனைவீர்கள்.

6. இது இங்கிலாந்து நாட்டின் மூலம் நமக்கு வந்த பழக்கம். சில நூற்றாண்டுகளுக்கு முன்னால் வரையில் இங்கிலாந்தில் மக்கள் தனியாகக் குதிரையில் சென்று வந்தார்கள். எதிரே எந்த எதிரியும் வந்து தாக்கக் கூடிய அபாயம் இருந்தது. அப்படித் தாக்கினால் சட்டென்று வலது கையினால் இடுப்பிலிருந்து வாளையோ கைத்துப்பாக்கியையோ எடுத்துத் தாக்குவதற்கு வசதியாக, சாலையில் இடது புறமாகச், சென்றார்கள். பிறகு இதுவே எல்லா வாகனங்களுக்கும் பொதுவான விதியாக வந்து விட்டது.

ஆதாரம்: 'ஆன்ஸர் மேன்.'

---

அரிஞ்சயன் பேச்சைக் கேட்ட கரிகாலன், அன்றைய இரவில் முதன் முதலாக வாய்விட்டுச் சிரித்தான். அத்துடன் பிரும்ம மாராயனைப் பார்த்தும் சொன்னான்: ''படைத் தலைவரே! முட்டாள்தனத்துக்கும் ஓர் அளவு இருக்க வேண்டும்!'' என்று.

''எது முட்டாள்தனம் கரிகாலா?'' என்று வினவினான் பிரும்ம மாராயன்.

''படைத் தலைவரே! ஜெயசிம்மனிடம் சதி விவரங்களை நான் அறிவித்து விட்டேனல்லவா?''

''ஆம்.''

''அறிவித்துவிட்டு, தலையைக் காவு கொடுப்பதற்காக உங்களிடம் அவசரம் அவசரமாக வந்திருக்கிறேன்; இது தானே உங்கள் ஊகம்?''

மெள்ள மெள்ள உண்மை பிரும்ம மாராயன் மனத்திலும் உதயமாயிற்று: ''ஆமாம் இவன் நம்மைக் காட்டிக் கொடுத்திருந்தால் இங்கு வருவானா?'' என்று யோசித்தான் பிரும்ம மாராயன்.

கரிகாலன் பிரும்ம மாராயனையும் மற்றவர்களையும் நோக்கி மீண்டும் சொன்னான்: ''அன்பர்களே! ஜெயசிம்மனிடம் உங்களைக் காட்டிக் கொடுத்திருந்தால், இங்கு நான் வந்திருக்க மாட்டேன். எனக்குப் பதில், வேங்கி நாட்டுப் படைத்தலைவன் வந்திருப்பான், வீரர்களுடன் உங்களைக் கட்டிக்கொண்டு போய்க் கோதண்டத்தில் மாட்ட.''

''ஆம். சந்தேகமில்லை. இதை நாம் யோசிக்கவில்லையே,'' என்றான் அரிஞ்சயன் மற்றவர்களை நோக்கி.

கரிகாலன் மேலும் சொன்னான்: ''இன்னும் யோசித்துப் பாருங்கள். நான் ஜெயசிம்மனைப் பார்க்க ரகசியமாகப் போகவில்லை. ஊரறியப் பகிரங்கமாகப் போயிருக்கிறேன். ஜெயசிம்மன் பகிரங்கமாக எனக்கு விருந்தளித்திருக்கிறான். இந்த விஷயம் ஊர் பூராவும் தெரியும். ஆகவே, உங்களுக்கு மட்டும் தெரியாது என்று நான் மனப்பால் குடிப்பேனென்று நினைக்கிறீர்களா? அப்படித் தெரிந்து கொண்ட நான், உங்களிடம் உயிரைக் கொடுக்க ஓடிவர அத்தனை முட்டாளா?''

கரிகாலன் வார்த்தைகளும், அவன் விஷயங்களைத் தெளிவாக்கிய முறையும், பேசிய தோரணையும் பிரும்ம மாராயனையும் மற்றவர்களையும் சிந்தனையில் ஆழ்த்தின. அவன் சொல்லிய விஷயங்களில் உண்மை நிரம்பிக் கிடப்பதைக் கிலிபிடித்த வேங்கி நாட்டுப் படைத்தலைவர்கள் கூட உணர்ந்து கொண்டார்கள். பிரும்ம மாராயன் மட்டும் நீண்ட நேரம் அந்தக்

## யாருடைய கண்?


காளிமுத்து


குமரி அனந்தன்


திண்டிவனம் ராமமூர்த்தி


பண்ருட்டி ராமச்சந்திரன்

விடை: 82'ம் பக்கம்.

கூடத்தில் உலாவிக்கொண்டே யோசித்தான். கடைசியாக, ஏதோ முடிவுக்கு வந்தவன்போல், மற்றவர்களை நோக்கி, ''இதைப்பற்றித் தீர விசாரித்த பின் ஒரு முடிவிற்கு வருவோம். அதுவரை இவன் கை கால்களைக் கட்டிக் மேல்மாடி அறையில் போட்டு வையுங்கள்,'' என்று உத்தரவிட்டான்.

வேங்கி நாட்டுப் படைத் தலைவர் மூவரும் அவன் கைகளை மாத்திரமின்றிக் கால்களையும் கயிறுகளையும் கொண்டு பிணைத்தார்கள்.

தூக்கிக்கொண்டு போய், மாளிகையின் மேல் மாடியிலிருந்த சிறு அறையில் போட்டுப் பூட்டிவிட்டுச் சென்றார்கள்.

இரவு மெல்ல நகர்ந்து மூன்றாம் ஜாமத்தை எட்டிக் கொண்டிருந்தது. பிரும்ம மாராயன் மாளிகையில் நிசப்தம் குடிகொண்டது. கயிறுகளால் பிணைக்கப்பட்டுத் தரையில் கிடந்ததால், கரிகாலன் மட்டும் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். அந்த அறையிலிருந்த சிறு விளக்குக் கூட கிருஷ்ணா நதியிலிருந்து வந்த காற்றில் அணைந்து விட்டபடியால், அறையில் காரிருள் சூழ்ந்து கிடந்தது. இப்படி எத்தனை நேரம் சென்றிருக்குமோ தெரியாது. கரிகாலன் நினைவு, நாகப்பட்டினத்தில் சூடாமணி விஹாரத்திலிருந்து அன்றைய இரவு வரை நடந்த நிகழ்ச்சிகளில் சுற்றிச் சுற்றி வந்து சுழன்று கொண்டிருந்தது. கடைசியாக அவன் நினைப்பு, அரசகுமாரியின் மீது நிலைத்தது.

உலகை மறந்து அந்தக் காரிருளில் கிடந்த கரிகாலன், திடீரென்று சிந்தனைகளை அடக்கிப் புலன்களை அறை வட்டாரத்தில் உலவ விட்டான். அந்தக் காரிருளில் அதே அறையில் யாரோ இருப்பதை அவன் உணர்ந்தான். தான் படுத்திருந்த இடத்துக்கு வெகு அருகில் யாரோ அசையும் சப்தம் அவன் காதுகளில் விழுந்தது. அறையின் சுவர் ஓரத்தில் ஓர் உருவம் பதுங்கிப் பதுங்கிச் சென்றது.

(தொடரும்)

மன்னன் மகன் IV 230



கும்! கும்! கும்! ஒரு 17 நிமிட சண்டைக்கு மைக் டைசன் பெற்ற தொகை: ரூ. 30 கோடி! உலகக் குத்துச்சண்டை வீரரா, பணம் பண்ணும் மிஷினா!

எல்லோரும் சந்தோஷமா இருங்கடா. எங்கம்மா செத்துப் போயிட்டா! எங்கம்மா செத்துப் போயிட்டா!''

பிதற்றியபடி தரையில் மடிந்து உட்கார்ந்து முகத்தில் அறைந்து கொண்டு அழ ஆரம்பித்தான் கிருஷ்ண மூர்த்தி.

பாரிஸ் பஸ் நிலையத்துக்கு நால்வரும் வந்து சேர்ந்தபோது மணி பத்து இருபது. அழுது முடித்து ஓய்ந்த பிறகும் சரி, பரபரவென்று துணி மணிகளை சூட்கேஸில் அடைத்துக் கொண்டு கிளம்பிய பிறகும் சரி, கிருஷ்ணமூர்த்தி பேசவேயில்லை.

பஸ்ஸுக்கும் இதர செலவுகளுக்கும் ஞானசேகரன் வாசுவிட மிருந்து முன்னூறு ரூபாய் கடன் வாங்கிக் கொண்டுவந்து கொடுத்தான். பஸ் ஸ்டாண்டில் திலீப் ஓடிப்போய் எங்கெங்கோ விசாரித்துவிட்டு 10.45'க்கு மதுரைக்குப் போகும் டி.டி.ஸி.யில் சீட் கேட்டு கண்டக்டரின் காலில் விழுந்து எழுந்து கொண்டிருந்தான்.

பரபரவென்று ஓடி வந்தான் திலீப். ''சீட் கிடைச்சுடுச்சுடா.'' எதுவும் பேசாமல் பஸ்ஸில் ஏறப்போன கிருஷ்ணமூர்த்தியைத் தியாகராஜன் தோளைத் தொட்டு நிறுத்தினான்.

''தபாரு வாத்தியாரே. நாங்க தப்புதான் செஞ்சுட்டோம். யோசிக்காம அல்பத்தனமான ஒரு ஆசைக்காகத் தப்புப் பண்ணிட்டோம். யாருக்கும் கெடுதி நினைச்சு செய்யலை. உனக்குக் கோவமா இருந்தா எங்களைக் கன்னம் பழுக்க அடிச்சிடு. தயவுசெய்து, பேசாமல் போயிடாதே,'' சொல்லும் போதே, குரல் கம்மி, கண்கள் கலங்கின.

''தியாகு, எனக்குச் செய்தியைக் கேட்டு மனசு மரத்துப் போயிருக்கு. எது சரி, எது தப்பு தெரியலை. இந்த நேரத்துல என்ன பேசறதுன்னு புரியல.''

''மன்னிச்சுட்டேன்னு ஒரு வார்த்தை சொல்லிருடா, போதும்,'' திலீப் கர்ச்சீப்பில் முகம் புதைத்துக் கொண்டான்.

''என்னடா இது. எனக்கு இப்பத் தைரியம் சொல்லாமல் நீங்க ஆளாளுக்கு அழுதால் எப்படி?''

தியாகராஜன் தன் விரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றிக் கொண்டிருந்தான்.

''கிருஷ்ணமூர்த்தி, ஊரிலே செலவுக்கு என்ன பண்ணப் போறே? இந்த மோதிரத்தை வச்சுக்க. இதை வித்து, செலவைச் சமாளிச்சுக்க.''

''எதுக்கு இதெல்லாம். சேச்சே!''

''வறட்டுக் கௌரவம் பார்க்காதேடா. நான் மனசுல ரொம்பக் கூசிப் போயிருக்கேன். நடந்ததுக்கெல்லாம் மன்னிப்புக் கேட்டுக்கறேன். இதை ஒரு உதவியாக் கூட இல்லை, ஒரு பிராயச்சித்தமா ஏத்துக்கிட்டின்னா, எனக்கு ஆறுதலா இருக்கும்டா,'' மோதிரத்தைக் கிருஷ்ணமூர்த்தியின் கையில் திணித்தான் தியாகராஜன்.

பஸ்ஸின் ஹாரன் பிளிறியது.

கிருஷ்ணமூர்த்தி எங்கோ வெறிக்க, திலீப்பும் தியாகராஜனும் கலங்கிய கண்களுடன் நின்றிருக்க, ஞானசேகரன் உண்மையிலேயே தியாகராஜனின் தோளில் முகம் புதைத்துக்கொண்டு கதறி அழ, பஸ் மெல்ல ஊர்ந்து டெர்மினஸைத் தாண்டி வேகம் பிடிக்கத் தொடங்கியது.



# மன்னன் மகள்

—சாண்டில்யன்—

## 23. உனக்குத் தெரியுமா?

கைகளும் கால்களும் நன்றாகச் சேர்த்து இறுகப்பட்டிருந்ததால், நகரக்கூட முடியாமல் அந்த மேல் உப்பரிகை அறையின் தரையில் கிடந்த கரிகாலன், அதே அறையில் இந்த அர்த்த ராத்திரியில் தன்னைத் தவிர வேறு ஓர் உருவும் இருப்பதையும், அது சுவர் ஓரமாக அசைவதையும் கண்டதும், மிகவும் சிரமப்பட்டு ஒருமுறை புரண்டு, அந்த அறையின் மற்றொரு சுவரின் ஓரமாகச் சாய்ந்து கொண்டு, அந்த உருவத்தின் ஒவ்வொரு நடவடிக்கையையும் கவனிக்க முற்பட்டான். அறையில் காரிருள் கவ்விக் கிடந்ததால் கண்ணுக்கு எதுவும் திட்டமாகத் தெரியாவிட்டாலும், நிழல் போல் அந்த உருவம் நகர்ந்து நகர்ந்து எதையோ பரிசோதிப்பதையும், திடீர் திடீரென அது நின்று எதையோ உற்றுக் கேட்க முயலுவதையும் கண்ட கரிகாலனுக்கு, மெள்ள மெள்ள உண்மை உதயமாயிற்று. ‘சீ! இத்தனை யோசனை கூடவா எனக்கு இல்லாமல் போய்விட்டது? அவனைத் தவிர வேறு யார் இந்த அறைக்கு வர முடியும்? எதற்காக வரவேண்டும்? படித்த லட்சணம் வர வர எனக்குப் புத்தி மந்தமாகிக் கொண்டு வருகிறது. நல்ல வேளை இப்பொழுதாவது தெரிந்து கொண்டேனே உண்மையை!’ என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டே கரிகாலன், அதி ஜாக்கிரதையாக, ‘‘இதோ பார் அரிஞ்சயா! இந்த மூலையில் இருக்கிறேன்!’’ என்று, அறை



யின் மற்றொரு கோடியில் நகர்ந்து கொண்டிருந்த உருவத்தை, மிக மெல்லிய குரலில் அழைத்தான்.

அந்த உருவம் மெள்ளச் சுவர்களைத் தடவிக் கொண்டு, கரிகாலன் இருக்கும் பக்கமாக வந்து, த்ரையை இரண்டு மூன்று முறை தடவிக் கரிகாலன் உடல் மேல் கையை வைத்து, ''கரிகாலரே! வந்தது நான்தானென்று உமக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டது.

''வேறு யாருக்கு என்மீது அக்கறையிருக்க முடியும் அரிஞ்சயா?''

''கரிகாலரே!''



''உஷ்.....''

''ஏன், யாராவது வருகிறார்களா?'' என்று அரிஞ்சயன் சம்பாஷணையைச் சற்றே நிறுத்தி, சுதவுப்புறம் கண்களை ஓடவிட்டான்.

''யாரும் வரவில்லை அரிஞ்சயா!'' என்று அவனைச் சமாதானப்படுத்தினான் கரிகாலன்.

''பின் எதற்காக 'உஷ்' என்று எச்சரிக்கை செய்தீர்கள்?'' என்று வினவினான் அரிஞ்சயன்.

''எச்சரிக்கைச் சத்தமல்ல அது; ஆட்சேபணைச் சத்தம்.''

''எதற்கு ஆட்சேபணை?''

''கரிகாலரே, கரிகாலரே என்று எதற்கு மரியாதையாக அழைக்கிறாய் அரிஞ்சயா? நாம் இருவரும் ஜெயசிம்ம சாளுக்கியனுடைய ஊழியர்கள். இருவரும் ஒரே பணியில் ஈடுபட்டிருக்கிறோம்,'' என்று கரிகாலன் பதில் சொன்னதைக் கேட்ட அரிஞ்சயன்கூடச் சற்று நிலை தடுமாறி விட்டான். அடுத்தபடி அவன் பேசியபோது, அவன் குரலில் சகோதர பாவம் எல்லை கடந்து நின்றது. ''கரிகாலா! அப்பா! இப்படிக் கூப்பிட இன்னும்கூட எனது நாவு அஞ்சுகின்றது. உன்னை முதன் முதலாக இந்தச் சதிகாரர்கள் கூட்டத்தில் இன்று தான் கண்டேன். ஆனால் அவர்களைப் பார்த்த பார்வையையும், அவர்களை நோக்கி நீ இகழ்ச்சியாகப் பேசிய பேச்சையும் யார் பார்த்தாலும், நீ பெரிய அரச வம்சத்தில் பிறந்ததாகச் சொல்வார்களேயொழியக் கேவலம் என்னைப்போல சாதாரணக் குலத்தில் பிறந்தவனாக மதிக்க மாட்டார்கள். உன் தோரணையைக் கண்டு நானே அயர்ந்து விட்டேன். இன்னும்கூட உன்னைப் பெயர் சொல்லி அழைக்க நெஞ்சு துணியவில்லை,'' என்ற அரிஞ்சயன் குரலில், சற்றுப் பயத்தோடு சந்துஷ்டியும் கலந்து நின்றது.

அவனுடைய அந்த உவகையை இன்னும் அதிகப்படுத்தி அவனைக் கைப்பொம்மையாக்கிக் கொள்ளத் திட்டமிட்ட கரிகாலன், மேலும் சம்பாஷணையைத் தொடர்ந்து, ''குலத்தில் என்ன இருக்கிறது அரிஞ்சயா? 'குலத்தளவே ஆகுமாம் குணம்' என்ற பழமொழிக்கும் உண்மைக்கும் எத்தனை

தூரம்! குலத்துக்கும் குணத்துக்கும் சம்பந்தமிருப்பதாகச் சொல்வது, அனுபவத்துக்கு ஒத்ததல்ல. உதாரண மாக நீ இருக்கிறாய்; உன் உயிரையும் அற்பமாக மதித்து என்னைக் காப்பாற்ற வந்திருக்கிறாய். இந்த மாளிகையிலுள்ள சோழ நாட்டுத் தடியன் பிரும்ம மாராயன் இருக்கிறானே, அவன் மேற்குலத்தான். உன் குணம் சிறந்ததா, அவன் குணம் சிறந்ததா என்று யோசித்துப் பார்,'' என்றான்.

காரணங்களை அடுக்கிக் காட்டி, கரிகாலன் தன்மீது தூவிய புகழ்ச்சி மலர்களால் சுய நிலையை அறவே மறந்த அரிஞ்சயன், ''கரிகாலா! உன்னைப் போன்ற ஒற்றனைப் பெற்றிருப்பதற்கு ஜெயசிம்ம சாளுக்கி யன் பெரும் புண்ணியம் செய்திருக்க வேண்டும்,'' என்றான்.

''உண்மைதான், சந்தேகமில்லை!'' என்று கரிகாலனும் ஒப்புக் கொண்டான். அரிஞ்சயன் மட்டும் புத்திக்கூர்மை உடையவனானால் கரிகாலனுடைய குரலிலிருந்த ஏளனத்தைக் கவனித்திருப் பான். புத்திக் கூர்மையில்லாததோடு யாராவது வந்துவிட்டால் என்ன செய்வது என்ற அச்சமும் கலந்திருந்த அரிஞ்சயன் அறிவுக்கு, கரிகாலன் பேச்சின் போக்கையோ அவன் குரலில் தொக்கி நின்ற கேலியையோ கவனிக்கத் திராணியில்லாததால், அவன் மேற்கொண்டு ஏதும் பேசாமல், ''கரிகாலா, சீக்கிரம் ஒரு முறை புரண்டு குப்புறப் படு!'' என்று சொல்லியதல்லாமல், அவன் புரளு முன்பாகத் தன் இரு கைகளையும் கொடுத்துக் கரிகாலனைப் புரட்டவும் செய்தான். பிறகு மடியிலிருந்த கத்தியை எடுத்துக் கரிகாலன் கைகளிலும் கால்களி லும் கட்டப்பட்டிருந்த கயிறுகளைச் சரசரவென்று அறுத்தான்.

கட்டுகள் அறுபட்டதால் கைகால்கள் சுதந்திர மடைந்து விட்டா லும், வெகு நேரமாகக் கட்டுண்டு கிடந்தது காரணமாக அடியோடு சுவாதீனத்துக்கு வராமல் இம்சை கொடுத்தன. கரிகாலன் மணிக்கட்டுகள் உடைந்து விடுவனபோல் விண்விண் ணென்று தெறித்தன. கால்கள் மரத்துக் கிடந்தபடியால் எழுந்து நின்று சற்று ஊன்றியதும், முதலில் அவை

---

# புதுப்பெண்டாட்டி



''என்னதான் புதுப் பெண்டாட்டியாக இருந்தாலும் இப்படியா மணிக்கு ஒரு தடவை ஓடிவருவது? அசிங்கம்!'' என்று சிடுசிடுத் தாள் கமலா.

கேசவன் இதைக் கேட்டுக் கொண்டே சைக்கிளிலிருந்து இறங்கி வீட்டின் உள்ளே போய் விட்டான்.

கேசவன் வேலை செய்யும் அலுவலகம் நான்கு தெருக்கள் தள்ளி இருந்தது. போன வாரம்தான் கைப்பிடித்த கோகிலாவுடன் எதிர்வீட்டுப் போர்ஷனை வாடகைக்கு எடுத்துக் குடியேறினான், அவன். ஒரு மணியில் வீட்டுக்குத் திரும்பி விடுவான். அரை மணி நேரம் கழித்துச் சைக்கிளில் அலுவலகம் கிளம்புவான்.

மரக்கட்டைபோல் தோன்றி, பிறகு ஆயிரக்கணக்கான முட்கள் குத்துவது போன்ற, வேதனையை அளித்தன. இயற்கை சிருஷ்டித்த இந்த உபாதைகளிலிருந்து விடுபடச் சற்று நேரம் கரிகாலன் அறையிலேயே உலாவினான். கைகளைச் சொடுக்கெடுத்து மணிக்கட்டுகளை முறித்து விட்டுக் கொண்டான். கால்களை மீண்டும் மீண்டும் உதறினான். கரிகாலன் நிதானத்தையும் ஏற்பாடுகளையும் கண்ட அரிஞ்சயனுக்கு மாத்திரம் உள்ளூர கிலி பிடித்துக் கொண்டது. யாராவது வந்து விட்டால் கரிகாலன் உயிரோடு தன் உயிரும் சேர்ந்து விண்ணுலகப் பயணம் செய்யுமென்பதை உணர்ந்து கொண்டிருந்த அரிஞ்சயன், ''கரிகாலா! தாமதிக்க நேரமில்லை. அந்தக் கொலைகாரப் படுபாவிகள் விழித்துக் கொண்டால் நம் இருவரையும் சேர்த்து ஒழித்து விடுவார்கள். இந்தா, இதை வைத்துக் கொள்,'' என்று எச்சரித்துக் கரிகாலனிடம் ஒரு கட்டாரியையும் கொடுத்தான். பிறகு கதவை மெள்ளத் திறந்து வெளியே எட்டிப் பார்த்து, ''சரி, வா,'' என்று மெதுவாகச் சொல்லிவிட்டு, அடிமேலடி வைத்துப் பூனை போல் நடந்தான்.

கரிகால[illegible]ந்த எச்சரிக்கையுடன் அவனை[illegible]ன்தொடர்ந்து சென்றான். இரண[illegible]பரும் சுவர்கள் பக்கமாகச் சாய்ந்து சாய்ந்து பதுங்கியும், இடையிடையே சுவர்களில் எரிந்து கொண்டிருந்த விளக்குகளை அணைத்து ஆங்காங்கு இருட்டைப் பூரணமாகச் சிருஷ்டித்துக் கொண்டும் உப்பரிகைப் படிகளில் இறங்கி வந்து, மாளிகையில் முதல் தளத்துக்கு வந்து சேர்ந்ததும், அரிஞ்சயன் தளத்தின் கோடியிலிருந்த ஓர் அறைக்குக் கரிகாலனை அழைத்துச் சென்றான்.

''கரிகாலா! கதவைத் தாளிடு!'' என்று சொல்லிய அரிஞ்சயன், அறையின் ஒரு மூலையிலிருந்த கட்டிலிலிருந்து ஒரு பெரிய பனைநார்க் கயிற்றுச் சுருளை எடுத்து வந்தான். கரிகாலன் அரிஞ்சயன் உத்தரவுப்படி கதவைத் தாழிட்டு அறைச் சாளரத்தை நோக்கினான். சாளரத்தின் கம்பிகளிரண்டு அறுக்கப்பட்டு விட்டதையும், அரிஞ்சயன் பனை நார்க் கயிற்றுச் சுருளை எடுத்ததையும் கண்ட கரிகாலன், அந்த ஏற்பாடுகளின்

---

மதிய உணவிற்குள் அவன் இரண்டு மூன்று முறை வருவதையும், போவதையும் ஒரு வாரமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள்.கமலா.

அவளைப் போலவே தெருவில் இருந்த பெண்களுக்கெல்லாம் இவர்கள் மீதே கண். 'கோகிலாவுக்கு எப்பவும் உள்ளேதானே வேலை?' என்று அவளைக் கிண்டல் செய்வார்கள்.

ஒரு மாதம் ஆயிற்று. இப்போதெல்லாம் கேசவன் காலையில் அலுவலகம் சென்றால் பகல் சாப்பாட்டிற்குத்தான் வருகிறான்.

இதைக் கவனித்துக் கொண்டிருந்தாள் கமலா.

குப்பை கொட்ட வாசலுக்கு வந்த கோகிலாவிடம், ''என்ன கோகிலா, மோகம் முப்பது நாள்தானா? மணிக்கு ஒரு தடவை வந்து உன்னைப் பார்த்துவிட்டுப் போகும் உன் புருஷன் இப்போதெல்லாம் காலையில் போனால், மதியம்தானே வருகிறார்?'' என்று கேட்டுத் தன் ஆதங்கத்தைத் தீர்த்துக் கொண்டு விட்டாள்.

கோகிலாவின் முகம் வெட்கத்தால் சிவந்தது.

''அது வேறு ஒன்றுமில்லை. கல்யாணமான புதிதில் எனக்குச் சமைக்கத் தெரியாது. பாவம், அதனால் அவரே அரிசி களைந்து உலையில் போட்டுவிட்டு போவார். மறுபடி அரை மணியில் ஆபீஸிலிருந்து வந்து பொரியல், குழம்பு என்று ஒவ்வொன்றாகச் செய்து வைத்துவிட்டு மதியம் வந்து சாப்பிடுவார். இந்த ஒரு மாதத்தில் நான் சுமாராக சமைக்கக் கற்றுக் கொண்டேன். அதனால்தான் அவர் இப்போது அடிக்கடி வருவதில்லை,'' என்று கூறிவிட்டு, வெட்கத்துடன் அறைக்குள் ஓடினாள்.

வேணு. சீனிவாசன்.

காரணத்தைப் புரிந்து கொண்டான். இருப்பினும், ''ஏன் அரிஞ்சயா! வாயில் வழியாகச் செல்ல மார்க்கமில்லையா?'' என்று வினவினான்.

''போவது அபாயம்.'

''இப்படிச் சாளரத்தின் வழியாக இறங்கினால் அபாயமில்லையா?''

''இல்லை.''

''காவல்காரர்கள்?''

''இந்தப் பக்கம் காவல் கிடையாது.''

''இறங்கியபின் யாராவது பிடித்துக் கொண்டால்?''

''அதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறேன். கட்டிலில் என் தலையணைக்குக் கீழ் வேங்கி நாட்டுப் படைத் தலைவர் அணியும் உடை ஒன்று இருக்கிறது! அதை அணிந்து கொள்.''

அவனுடைய முன்னேற்பாடுகளைக் கவனித்த கரிகாலன், ஒரு வினாடி பிரமித்தானானாலும், 'இதில் என்ன ஆச்சரியமிருக்கிறது! எந்த ஒற்றன் சகோதர ஒற்றனைத் தியாகம் செய்ய ஒப்புக்கொள்வான்?' என்று தன்னைத் தானே சமாதானப்படுத்திக் கொண்டு, அரிஞ்சயன் கூறிய வண்ணமே உடையை மாற்றிக் கொண்டான். அதற்குள் அரிஞ்சயனும் பனை நார்ச் சுருளின் ஒரு நுனியை சாளரத்தின் கம்பியில் வலிய இழுத்துக் கட்டி, மீதிப் பாகத்தை மெள்ள மெள்ளத் தரையை நோக்கித் தொங்க விட்டான். இவ்விதம் ஏற்பாடுகளைப் பூர்த்தி செய்த அரிஞ்சயன் கரிகாலனை நோக்கி, ''கரிகாலா! நான் முன்னால் இறங்கிக் கீழே ஏதாவது காவல் வருகிறதா என்று கவனிக்கிறேன். வராத பட்சத்தில் இப்படிச் சைகை செய்கிறேன்,'' என்று அடையாளம் காட்டிவிட்டுக் குரங்குபோல் சாளரத்தில் தொற்றி ஏறிக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு சரசரவென்று இறங்கிப் பூமியில் குதித்து அப்புறமும் இப்புறமும் நோட்டம் பார்த்துவிட்டுக் கையை ஆட்டிக் கரிகாலனுக்குச் சைகை செய்தான்.

---



*இளையான்குடி டாக்டர் ஜாகிர் உசேன் கல்லூரியில் 'அறிவியல் இலக்கியச் செல்வர்' என்ற பட்டத்தைக் குன்றக்குடி அடிகளாரிடமிருந்து ஏற்றுக் கொண்டு சுஜாதா சொன்னது:*

யோசித்துப் பார்த்ததில் இதுவரை 250 சிறுகதைகளும் 50 நாவல்களும் எழுதியிருக்கிறேன். மேடையில் நான் பெறும் முதல் பாராட்டு இதுதான். இதற்கு முன் எனக்குக் கிடைத்த சில பாராட்டுக்களைப் பற்றி மேடையில் இருக்கும்போது யோசித்துப் பார்த்தேன்.

எனக்கு ஒன்பது வயது இருக்கும்போது, என் மாமா, 'நீ நன்றாக ஓடுகிறாய். அந்தக் கடை வரை போய் ஒரு சோடா வாங்கிக் கொண்டு வா. ஒரு பென்சில் தருகிறேன்,' என்றார். அது எனக்குக் கிடைத்த முதல் பாராட்டு.

நான் பிருந்தாவன் எக்ஸ்பிரஸில் சென்று கொண்டிருக்கும்போது ஒருவர் தூரத்தில் இருந்து என்னையே பார்த்துக் கொண்டிருந்தார் ஓர் அரை மணி நேரம். அதன் பின் என் அருகே வந்து, 'பாலை என்று ஒரு சிறுகதை நீங்கள்தான் எழுதினீர்களா?' என்று கேட்டார். 'ஆமாம்,' என்றேன். சற்று பயந்து கொண்டு. என் கையை ஓர் அழுத்து அழுத்திவிட்டுப் போய் விட்டார். அது இரண்டாவது பாராட்டு!

தகவல்: திருமதி எஸ். மலர்க்கொடி

கரிகாலனும் அரிஞ்சயனுடைய முறையைப் பின்பற்றி இறங்கிக் கால்களைத் தரையில் ஊன்றி, 'அப்பாடி' என்று ஆயாசம் விலகியதற்கு அறிகுறியாகப் பெருமூச்சு விட்டான்.

''சரி சரி, வா,'' என்று கரிகாலனை அவசரப்படுத்திய அரிஞ்சயன், அவனை அழைத்துக் கொண்டு மாளிகையின் மதில் சுவருக்காகச் சென்றான். அவன் உத்தரவைப் பிரும்ம மாராயன் வீரர்கள் சிரசால் வகித்து நடப்பதைக் கண்ட கரிகாலன் பிரும்ம மாராயனை அந்த நேரத்தில் மனமாரச் சபித்தான். 'சோழ நாட்டுப் படைத் தலைவனுக்கு உடல் பருமனாயிருக்கிறதேயொழிய மூளை சுத்தக் களிமண்; அரிஞ்சயனைப் போன்ற ஓர் அபாயமான ஒற்றனை மடியில் கட்டிக் கொண்டு அரசகுமாரிக்கு உதவச் சதி செய்கிறானே, மடையன்!' என்று மனத்துக்குள்ளேயே தூற்றிக் கொண்டான். 'நல்லவேளை! சமயத்தில் நானாவது விஷயத்தைப் புரிந்து கொண்டேன்; இல்லாவிட்டால், விமலாதித்தன் மகள் கதி என்னவாகியிருக்கும்?' என்று ஓரளவு சமாதானப்படுத்திக் கொண்டான்.

அரிஞ்சயனைக் கண்ட மாத்திரத்தில், பிரும்ம மாராயன் மாளிகைக் கதவுகள் தாமாகவே திறந்தன. வீரர்கள் தலை வணங்கி, அரிஞ்சயனுக்கும் கரிகாலனுக்கும் வழி விட்டார்கள். மாளிகை மதிலைத் தாண்டி, சிறிது தூரம் இருவரும் மௌனமாகவே நடந்தார்கள். அப்படி நடந்த இருவர் மனங்களும், இருவித பிராந்தியங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. ஊர் முழுவதும் உறங்கித்தான் கிடந்தது. ஆனால் அந்த இருவர் உள்ளங்கள் மட்டும் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல், பற்பல சிந்தனைகளை எழுப்பிக் கொண்டிருந்தன. 'நல்ல வேளை. கரிகாலனைக் காப்பாற்றி விட்டோம். இல்லாவிட்டால் ஜெயசிம்ம சாளுக்கியன் நம்மைச் சும்மா விடமாட்டான். எந்த நேரத்தில், 'கரிகாலனும் நம்மைச் சேர்ந்தவன்தான், அவன் மீதும் ஒரு கண் வைத்துக் கொள்,' என்று உத்தர விட்டாரோ அந்த நேரத்திலிருந்து, இவனைக் காக்கும் பொறுப்பு நமக்கேற்பட்டு விட்டது. நேற்று அந்த ராட்சச பிரும்ம மாராயனுக்கு இருந்த




படப்பிடிப்பு ஒன்றிற்காகச் சமீபத்தில் ஈரோடு வந்திருந்த நடிகர் ராமராஜன், தன் மனைவி நளினியையும் அழைத்து வந்திருந்தார். பஸ் நிலையம் அருகில் உள்ள லாட்ஜ் ஒன்றில் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டு அவர்கள் கிளம்பும்போது ரசிகர்கள் கூடி விட்டார்கள். அவர்கள் இருவரும் காருக்குள் ஏறுவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. போக்குவரத்துநெரிசலான பகுதியில் கூட்டம் ஏராளமாகக் கூடியதால் காரை அவர்களால் எடுக்கவே முடியவில்லை. வீதிகளின் இரண்டு பக்கமும் பஸ், கார் போன்ற வாகனங்கள் 'ஜாம்' ஆகிவிட்டது. பதினைந்து நிமிடங்களுக்கும் மேலாகி விட்டபோது ரசிகர்கள் ராமராஜனைத் தொடுவதும், நளினியைத் தொடுவதும், கண்டபடி கோஷங்கள் போடுவதுமாகவும் இருந்தார்கள். கோபமடைந்த ராமராஜன், ''நாங்களும் உங்களைப் போல மனுஷங்கதானே? ஏன் இப்படிக் காணாததைக் கண்டதுபோல் கலாட்டா செய்யறீங்க?'' என்று கத்தினார். உடனே ரோஷம் வந்த ரசிகர்கள் வசைமாரி பொழிந்தபடியே வழி விட்டார்கள். இதுவா ரசிகத்தனம்?

மேஜர்தாசன், ஈரோடு—10

# "அதிக அளவு நெய், அதிக மணம் தருகிறது ஆவின் வெண்ணெய்"




ஆம். இந்த இல்லத்தரசி கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. அனுபவத்தில் கண்ட உண்மை! ஆவின் வெண்ணெய் புதிய, சுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்படுகிறது. நவீனமான முறையில் தானியங்கி இயந்திரங்கள் மூலம் வெண்ணெயிலிருந்து தண்ணீர் முழுமையாக அகற்றப்பட்டு, பேக் செய்யப்படுகிறது. இதனால் வெண்ணெய் காய்ச்சும்போது அதிக அளவு நெய் கிடைக்கிறது.

ஆகவே ஆவின் வெண்ணெய் சிக்கனமானதாக அமைகிறது.

புதுத்தன்மை மற்றும் உயர்ந்த தரம் காரணமாக நெய் மிகுந்த மணமுள்ளதாகவும் இருக்கிறது. ஆவின் வெண்ணெய் நிகரற்று விளங்குகிறது... அதன் தரம், தூய்மை, புதுத்தன்மை காரணமாக! இன்றே வாங்கிப் பாருங்கள். உண்மை உங்களுக்கு விளங்கும்.

## ஆவின்

### வெண்ணெய்

**வெண்மையானது · தரமானது · சிக்கனமானது.**

வெறியைப் பார்த்தால், கரிகாலனை ஒழித்துக் கட்டி விடுவானென்று நினைத்தேன். பாதகமில்லை, கரிகாலனும் எமப் பயல்தான். விஷயங்களைத் திரித்துச் சொல்லித் தப்பிவிட்டான்,' என்று நடந்த விஷயங்களைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டு நடந்தான் அரிஞ்சயன்.

ஆனால், கரிகாலன் உள்ளத்தில் வேறு பல எண்ணங்கள் பிரவகித்துக் கொண்டிருந்தன. 'மரணத்தின் வாயிலிலிருந்து மீண்டு விட்டேன். ஆனால் நான் மீண்டு என்ன பயன்? இந்த அரிஞ்சயனை ஒழிக்காத வரையில் நிரஞ்சனா தேவியையும் ராஜராஜ நரேந்திரனையும் சதா ஆபத்துச் சூழ்ந்துதானே நிற்கும்? இவனை ஒழிப்பது அத்தனை சுலபமல்லவே. வாட் போருக்கு அழைத்து தீர்த்து விடலாமென்றால், கத்தி ஓசை கேட்டதும் பாராக்காரர்கள் ஓடிவந்து பிடித்துக் கொண்டால் என்ன செய்வது? உண்மை ஜெயசிம்மனுக்குத் தெரிந்து விட்டால், நம்மைக் கோதண்டத்தில் மாட்டித் தோலை உரித்து விடுவானே! ஆகவே, அடுத்தபடி என்ன செய்யலாம்!' என்ற யோசனை பலமாக ஏற்படவே, ஏதும் பேசாமல் நடந்த கரிகாலனுக்கு இறுதியாக ஒரு வழி புலப்பட்டது. அந்த வழி புலப்பட்டதற்கு அடையாளமாக அவன் முகத்தில் ஒரு புத்தொளியும் பிறந்தது. அதன் விளைவாகச் சற்றுத் தைரியத்துடன் பேச்சைத் துவக்கினான் கரிகாலன்.

''அரிஞ்சயா!''

''ஹூம்.''

''நாம் அடுத்தபடி செய்ய வேண்டியது என்ன?''

''அதைத்தான் நானும் யோசித்துக்கொண்டிருக்கிறேன்.''

''யோசிக்க வேண்டியதில்லை அரிஞ்சயா!''

''ஏன் யோசிக்க வேண்டியதில்லை?''

''மன்னரே உத்தரவிடுவதாகச் சொல்லியிருக்கிறார்.''

''யார்? ஜெயசிம்ம சாளுக்கியரா?''



'பாலைவன ரோஜாக்கள் 100'வது நாள் விழாவில் நடிகை லட்சுமி கலைஞர் கருணாநிதியைப் பாராட்டிப் பேசியதைப் பொறுக்க மாட்டாத எம்.ஜி.ஆர்., போன் பண்ணி 150'வது நாளைக் கடந்து ஓடிக் கொண்டிருந்த 'சம்சாரம் அது மின்சாரம்' படத்தின் 100'வது நாள் விழாவை வைக்கச் சொன்னார். எம்.ஜி.ஆர். பேச்சைத் தட்ட முடியாமல் விழாவுக்கு ஏற்பாடு செய்தார்கள். டைரக்டர் விசுவுக்கு எம்.ஜி.ஆர். கையால் ஷீல்டு கொடுக்கவும் முடிவு செய்தார்கள்.

ஆனால் விசு, ''சிறந்த கதை–வசனகர்த்தாவான கலைஞரிடம்தான் நான் ஷீல்டு வாங்குவேனே தவிர வேறு யாரிடமும் வாங்கமாட்டேன்,'' என்று மறுத்துவிட்டார். இந்த மாதிரி துணிச்சலுக்குப் பெயர் பெற்ற ஒரே டைரக்டர் விசு மட்டும்தான்!

–கடந்த 14.6.87 அன்று மதுரையில் நடைபெற்ற நடிகர் பாண்டியன் பாராட்டு **விழாவில்** நடிகர் எஸ்.எஸ். சந்திரன் சொல்லக் கேட்டவர்: திசை. முத்து.

''ஆமாம்.''

''எப்பொழுது சொன்னார்?''

''நான் பிரும்ம மாராயன் மாளிகைக்கு வருவதற்கு முன்பு.''

அரிஞ்சயன் சட்டென்று திரும்பி நின்று கரிகாலனை நோக்கினான். அவன் முகத்தில் சந்தேகச் சாயைப் பெரிதும் படர்ந்து நின்றது. ''என்ன! மன்னர் சொன்னாரா? என்னிடம் எதுவும் சொல்லவில்லையே?'' என்றான் அரிஞ்சயன், முகத்தில் உதயமான சந்தேகம் குரலிலும் தொனிக்க.

''உனக்குப் பிறகுதானே நான் வந்தேன் அரிஞ்சயர்?''

''ஆமாம், அதனாலென்ன?''

''கடைசியாக அவரிடம் விடை பெற்றுக் கொண்டவன் நான். அவர் சொல்லாவிட்டால் அந்த அரக்கர்களிடம் வந்து சிக்கிக் கொள்ள நான் என்ன முட்டாளா?''

''அவரா வரச் சொன்னார் உன்னிடம்?''

''ஆமாம். இல்லாவிட்டால், எல்லோரும் அறியும் படியாக அரண்மனையில் நுழைந்து மன்னருடன் உறவாடிவிட்டு, அவரைத் தொலைக்கத் திட்டமிடும் சதிகாரர்களிடம் தலைநீட்டுவேனா?''

இந்தப் பதில் அரிஞ்சயனுக்குப் பெருத்த அதிர்ச்சியை விளைவித்தது. பெரும் ரகசியமெனச் சதிகாரர்கள் மறைத்து வைத்திருந்த கொலைத் திட்டம் இவனுக்கு எப்படித் தெரிந்தது என்று பிரமித்துப் போனான், அரிஞ்சயன். ''என்ன! ஜெயசிம்ம அரசரை வேங்கி நாட்டுப் படைத் தலைவர்கள் கொல்ல உத்தேசித்திருப்பது உனக்குத் தெரியுமா?'' என்று வியப்பும் அச்சமும் கலந்து தொனித்த சொற்கள், அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

(தொடரும்)



## பரீட்சை பெரிதா பாடல் பெரிதா?

இசையில் பி.ஏ. மாணவியான சித்ரா, தன்னுடைய தேர்வு எழுதத் திருவனந்தபுரம் புறப்பட்டுக் கொண்டிருந்த போது இளையராஜாவிடமிருந்து ஒரு போன் கால்: ஒரு பாடல் உடனடியாய் ஒலிப்பதிவு செய்ய வேண்டியிருக்கிறது; வர வேண்டும். வேறு வழியில்லாமல் ரிகார்டிங் அறைக்கு வந்தார். பாடல் ஒத்திகை பார்க்கப்பட்டது. உடனே ஒரே டேக்கில் பாடி முடித்தார். இளையராஜாவிடம், 'சார், என்னுடைய பரீட்சையைத் தியாகம் செய்து, இந்தப் பாடலைப் பாடியுள்ளேன்,' என்றார் சித்ரா. இளையராஜா சிரித்துக் கொண்டே, 'டிகிரி வாங்கி என்ன செய்யப் போகிறாய்? இந்தப் பாடல், உனக்கு அதை விடப் பெரிய பெயர் வாங்கித் தரும்,' என்று உறுதியளித்தார்.

மெய்தான். அந்தப் பாடல் அவருக்குத் தேசிய அவார்டையே வாங்கித் தந்தது.

பாடல்: 'பாடறியேன், படிப்பறியேன், பள்ளிக்கூடம் நான் அறியேன்'.

படம்: சிந்து பைரவி.

கொஞ்சம் கொசுறு விஷயம்!

சித்ரா, திருமணத்திற்குப் பிறகு பூசினாற் போல் காட்சி அளிக்கிறார்.

கணவர் திருவனந்தபுரத்தில் ஓர் இஞ்சினீயரிங் கம்பெனியில் விற்பனைப் பிரிவில் வேலை செய்கிறார் வேலை விஷயமாகச் சென்னையைத் தாண்டிச் செல்லும்போது சித்ராவை வந்து பார்த்துவிட்டுப் போகிறார்.

தொகுப்பு: நீலா, செல்லா, துரை.

திராவிடப் போராட்டம் என்பதெல்லாம் தவறு. நேரு சொன்னதை என்று சொல்லுவதைவிட, இன்னமும் மேலேயே போய்ச் சொல்லலாம். எந்தப் பொருளும் வடக்கேயிருந்து தெற்குதான் வந்திருக்கிறது. தென்னாட்டுக்காரர்கள் எந்தக் காலத்திலும், வெளிநாட்டுப் படையெடுப்பாளர்களிடம் பயந்து கொண்டிருந்ததாகச் சரித்திரமே கிடையாது. மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருக்கிற நாடு இது. நமக்கு எந்தக் கவலையும் கிடையாது. வட நாட்டிலிருந்து வந்த படையெடுப்பாளர்களையெல்லாம் மத்திய இந்தியப் பகுதியினர் நன்றாக மடக்கிக் கொண்டு, நம்மை அமைதியாகத்தான் வாழ விட்டுக் கொண்டிருக்கிறார்கள். இராவணன் தான் ஆரியன் என்று சொல்லப்படுகிறான். பிரும்மாவின் பரம்பரையினன், புலத்தியன் புதல்வன் என்று சொல்லப்படுகிறான். அதுதான் ஆதாரம். நீங்கள் ஆரியன் இராவணனை திராவிட இராவணனாக ஆக்கி எதற்காக உரிமை கொண்டாடுகிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

தங்க: இராமாயணம் அக்காலத்திய ஆரிய திராவிட மக்களுக்கு இடையே நடைபெற்ற ஒரு போராட்டத்தை அடிப்படையாகக் கொண்டு வரையப்பட்ட, கற்பிக்கப்பட்ட, எழுதப்பட்ட, இட்டுக்கட்டப்பட்ட ஒரு நூல் என்பதற்கு உங்களை அறியாமலேயே பல ஆதாரங்களைச் சொன்னதற்கு மிக்க நன்றி.

தொகுப்பு: பால்யூ



'சிறந்த இலக்கியம் எது? பலரால் புகழப்படுவதும் யாராலுமே படிக்கப் படாததும்தான்!''

–மார்க் ட்வெயின்

–அனிதா ராமச்சந்திரன்



## எங்களுக்காக

சமீபத்தில் நான் வைத்தீஸ்வரன் கோவில் முருகப் பெருமானின் திருத்தலத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு நவக்கிரக அமைப்பில் ஒரு புதுமையைக் கண்டேன். மற்ற கோவில்களில் நவக்கிரகம் மூன்று மூன்றாகச் சுற்றி வருவதற்குத் தகுந்தாற்போல் இருக்கும். ஆனால் இங்கு ஒரே வரிசையில் இருக்கின்றன. காரணம் தெரியவில்லை.

–டி. ரத்தினா, ராணிப்பேட்டை

மதுரையில் ஓடும் ஆட்டோவில் மீட்டர் அவசியம் பொருத்தப்பட வேண்டும் என்று கடந்த மே மாதம் போக்குவரத்துக் காவல் துறையினர் அறிக்கைவிட்டு, மீட்டர் பொருத்தாத ஆட்டோ டிரைவர்கள் மீது நடவடிக்கை எடுத்தனர். இப்போது மறுபடியும் ஆட்டோ டிரைவர்கள் யாரும் மீட்டர் பொருத்துவதில்லை. சென்னையைப் போல் மீட்டருக்கு மேல் பணம் கேட்டாலும் கொடுக்கலாம். ஆனால் மீட்டர் பொருத்தாமல் வாய்க்கு வந்த பணத்தைக் கேட்டுத் தகராறு செய்வதால் நடுத்தர வர்க்கத்தினர் அவசரத்துக்கு ஆட்டோ உபயோகிக்க முடியாத கட்டத்தில் உள்ளனர். ஹெல்மெட் அணியாமல் செல்பவர்களைப் பிடித்துக் கட்டணம் வசூலிக்கும் காவல் துறையினர், நடுத்தர மக்களின் நன்மையை மனத்தில் கொண்டு ஆட்டோவில் மீட்டர் பொருத்துவதைக் கட்டாயப் படுத்துவார்களா?

–சுதர்சன்பாபு, மதுரை




## 24. கரிகாலன் இட்ட தீ

சொற்களுக்கே வலிமை உண்டு. அதிலும் பிற மொழிச் சொற்களைவிடச் செந்தமிழ்ச் சொற்களுக்கு ஒரு தனிப்பட்ட வலிமை உண்டு. ஒரே சொல் பல சந்தர்ப்பங்களில் உபயோகப்படும்போது வெவ்வேறு பொருள் தரும். ஒரே சந்தர்ப்பத்தில் உபயோகப்படுத்தப்படும் ஒரு குறிப்பிட்ட சொல்கூடச் சொல்பவனுக்கு ஒரு பொருளையும் கேட்பவனுக்கு ஒரு பொருளையும் தரக் கூடியதாயிருக்கும். எண்ணங்களுக்கேற்பச் சொல்லின் பொருள் மாறுபடுவதைத் தமிழ்க் கவிதைகளில் நாம் சகஜமாகக் காண்கிறோம். தமிழ்ச் சொற்களின் இந்தப் பல்வகைப் பெருமையால் இலக்கியத்தில் விளைந்திருக்கும் விந்தைகள் பல. அத்தகைய விந்தையொன்று அரிஞ்சயன் பேச்சினால் கரிகாலனுக்கு விளைந்தது.

''ஜெயசிம்மனைத் தொலைக்கத் திட்டமிடும் சதிகாரர்களிடம் தலையை நீட்டுவேனா?'' என்று கரிகாலன்

அரிஞ்சயனிடம் சாதாரணமாகத்தான் சொன்னான். 'தொலைக்க' என்ற சொல்லை, 'ஜெயசிம்மனுடைய ஆதிக்கத்தைத் தொலைக்க' என்ற பொருளில்தான் கரிகாலன் உபயோகித்தான். ஆனால், கரிகாலனை விடச் சதிகாரர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அரிஞ்சயனின் சதி உள்ளத்துக்கு அது மிகக் கடுமையான பொருளைக் கற்பித்தது. 'ஜெயசிம்மனைத் தொலைத்துவிட' என்ற சொற்களில், 'கொன்றுவிட' என்ற பொருளே அவன் உள்ளத்தில் திடீரென எழுந்ததால், ''ஜெயசிம்ம மன்னரை வேங்கி நாட்டுப் படைத் தலைவர்கள் கொல்ல உத்தேசித்திருப்பது உனக்குத் தெரியுமா?'' என்று திடீரென உளறியும் விட்டான்.

மாறுபட்ட பொருள்களைக் கொடுத்த அந்த ஒரு சொல்லால், திடீரெனத் தனக்குள் கிடைத்த தகவலைக் கண்டு ஒரு விநாடி அசந்தே போனான் கரிகாலன். சதிகாரர்களின் மனப்போக்கும் அவர்கள் ஜெயசிம்மனை வெற்றி கொள்ளக் கடைப்பிடிக்க உத்தேசித்துள்ள அற்புதத் திட்டமும் அவனை அடியோடு கலங்க வைத்தன.

ஏதோ பெரிய ரகசியத் திட்டம் என்றும், வேங்கி நாட்டுப் படைத் தலைவர் மூவர் அனுமதியில்லாமல் தன்னிடம் சொல்ல முடியாதென்றும் பிரும்ம மாராயன் மறைத்து வைத்த திட்டம் இந்தக் கொலத் திட்டமே என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்ட கரிகாலன், சதிகாரர்களின் முட்டாள்தனத்தைப் பற்றிப் பெரிதும் வியந்தான். 'ஜெயசிம்மனைக் கொலை செய்ய முயன்று அது திட்டப்படி நடந்தேறாவிட்டால் வேங்கி நாட்டில் பெருங்கிளர்ச்சி ஏற்படும். அந்தக் கொலைத் திட்டத்தின் பொறுப்பை ஜெயசிம்மன் நிரஞ்சனா தேவி மீதுதான் போடுவான். அப்படி நிரஞ்சனா தேவி மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டால் விமலாதித்தன் வம்சம் வேங்கி நாட்டு அரியணையில் அரை நிமிடம் தங்கியிருக்க முடியாது. ஏன்? பிழைத்திருக்கவும் முடியாது. ஜெயசிம்மனை மறைவிலிருந்து அம்பெய்து கொன்று விடலாம். ஆனால், அதனால் ஏற்படும் விளைவை லக்ஷம் அம்புகள் கூடத் தடுக்க முடியாதே.' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்ட கரிகாலன் உள்ளத்திலே, வள்ளுவரின் அருள்வாக்கு மலர்ந்து நின்றது. 'அறவினை யாதெனில் கொல்லாமை; கோறல் (கொல்லுதல்) பிறவினையெல்லாம் தரும்' என்ற குறளை உள்ளத்திலேயே உச்சரித்த கரிகாலன் அறவழியாலும் ராஜதந்திரத்தாலுமே ஜெயசிம்மனை ஜெயிக்க வேண்டுமே ஒழிய, பலத்தால் ஜெயிக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தான். சதிகாரர்களின் கொலைத் திட்டத்தை உடைக்கவும் தீர்மானித்தான். இந்தக் காரியத்துக்குச் சிறிது பொய் சொல்வது சாஸ்திர சம்மதம் என்று தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொண்டு அரிஞ்சயனை ஏறெடுத்து நோக்கி, ''அரிஞ்சயா! கொலைத் திட்டத்தை மிக ரகசியமாக நீங்கள் வைத்திருக்கிறீர்கள். ஆனால் அது மன்னருக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது. அவர் சொல்லித்தான் எனக்குத்



''நம்ம கோபிக்கு அல்ஸர் வந்திருக்கு.''

(ஏதோ நினைவாக) ''எந்த ஊருக்கு?''

—வேலுத்தம்பி.

தெரியும்.. என்று இதுவரை சொல்லிவந்த பொய்களோடு. மற்றொரு பொய்யையும் கலந்து கொண்டான்.

''நாம் இருவர்தானே ஒற்றர்கள்? மன்னருக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான் அரிஞ்சயன்.

''அவருக்குத் தெரியாதது என்ன இருக்கிறது அரிஞ்சயா?'' என்று கரிகாலன் ஜெயசிம்ம சாளுக்கியனைச் சிலாகித்துவிட்டு, ''அரிஞ்சயா! எப்படித் தெரிந்தால் நமக்கென்ன? நாம் நமது கடமையைச் செய்வோம்,'' என்று அந்தப் பேச்சுக்கு ஒரு முடிவு கட்டி விடவே, மேற்கொண்டு எந்தத் தகவலையும் கரிகாலனிடமிருந்து பெற முடியாதென்பதை உணர்ந்து கொண்ட அரிஞ்சயன், ''இனி நாம் என்ன செய்ய வேண்டும்?'' என்று வினவினான்.

''மன்னரைத்தான் கேட்க வேண்டும்,'' என்று பதிலிறுத்தான் கரிகாலன்.

''மூன்றாவது ஜாமம் நெருங்கி வருகிறது. மன்னர் உறங்கிக் கொண்டிருப்பார். அவரை எப்படிப் பார்ப்பது?''

''மன்னருக்கு உறக்கமேது அரிஞ்சயா? சாதாரண மக்களாவது நிம்மதியாக உறங்கலாம். மன்னன் உறங்க முடியாது. அதுவும் ஜெயசிம்ம சாளுக்கியரைப் போல் வேங்கி நாட்டை விழுங்கத் திட்டமிடும் மன்னனுக்கு உறக்கமேது? இன்றிரவு எத்தனை நேரமானாலும் என்னை வசந்த மண்டபத்துக்கு வரச் சொல்லியிருக்கிறார் மன்னர்.''

''வசந்த மண்டபத்துக்கா?''

''ஆமாம்.''

''அங்கு அரசகுமாரியல்லவா படுக்கிறாள்?''

''ஜெயசிம்ம மன்னருக்கு வசந்த மண்டபம் தேவையில்லாத போதுதான், மன்னன் மகள் அங்கு படுக்கலாம்.''

''அப்படியா?''

''ஆமாம். நேற்றைக்கு முந்திய தின இரவில் மன்னன் மகளுக்கு அங்கு படுக்க உத்தரவில்லை.''

அரிஞ்சயன் சற்று இரைந்தே நகைத்தான். ''கரிகாலரே! மன்னன் மகளின் கதி எப்படியிருக்கிறது பார்த்திரா! சொந்த அரண்மனை வட்டாரத்திலேயே இஷ்டப்படி உலாவ வகையில்லை; படுக்கவும் வேறு மனிதன் உத்தரவு வேண்டியிருக்கிறது!'' என்று கூறினான்.

''அவர்கள் அதிர்ஷ்டம் அரிஞ்சயா! நாமென்ன செய்யலாம்?'' என்று கரிகாலனும் சிரித்துவிட்டு, ''அரிஞ்சயா! நீ வசந்த மண்டபத்தின் அடைபட்ட பெருங்கதவு இருக்கின்றதே, அதன் வாயிலில் காத்திரு. நான் மன்னனைப் பார்த்துவிட்டு, என்ன செய்ய வேண்டுமென்பதற்கு உத்தரவு பெற்று வருகிறேன்,'' என்று கூறவே இருவரும் வெவ்வேறு மார்க்கத்தில் பிரிந்து சென்றனர்.

## ஸ்ரீவித்யாவின் மர்மம்

ஸ்ரீ வித்யா—திருமணத்திற்குப் பிறகு கொஞ்ச வருடங்களாக, மலையாளப் படவுலகில் நடித்துக் கொண்டிருந்தார். மீண்டும் தமிழுக்கு வந்த நேரம், நல்ல நேரம். நிறையத் தமிழ்ப் படங்கள் அவரைத் தமிழில் பிஸியாக்கியது. ஆனால்... குடும்ப வாழ்க்கையில் பெரிய கீறல்—

பென்ஸ் காரிலும், ஸ்டாண்டர்டு காரிலுமாக வந்து கொண்டிருந்த ஸ்ரீவித்யா சாதாரண கம்பெனிக் காரில்தான் இப்போதெல்லாம் படப்பிடிப்புக்கு வருகிறார்—தன் கணவர் ஜார்ஜிடம் கார், பங்களா, எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு அம்மா வீட்டுக்குப் போய் விட்டார். படப்பிடிப்புக்கு அம்மாவுடன் சில வேளைகளில் வருகிறார்—தன் உணர்ச்சிகளைச் சிறிதும் யாரிடமும் காட்டிக் கொள்ளாமல் சிரிக்க முகத்துடன் இருக்க முயலுகிறார்.



'ஊர்க் குருவி' படத்தில் கதாநாயகியாக நடித்து வரும் புதுமுகம் சிந்து தன் உள்ளங்கையைக் காட்டினார். ஒரு ரூபாய் நாணய அளவுக்குச் செக்கச் செவேலென கோவைப் பழம்போல உள்ளங்கையில் தீப்புண். எங்கே சுட்டுக் கொண்டார்? சிந்து சொன்னார்: ''ஊர்க் குருவி கதையில் காதலனைத் திருமணம் செய்து கொள்வதற்குப் பிரார்த்தனையாக (படத்தில்தான்) பிள்ளையாரப்பனுக்கு உள்ளங்கையில் கற்பூரம் வைத்துத் தீபாராதனை செய்யும் காட்சி.

டைரக்டர், ''ரெடி அம்மா, ஆக்ஷன்,'' என்றதும் உண்மையிலேயே உள்ளங் கையில் கற்பூரத்தை வைத்துக் கொளுத்தி ஆராதனை காட்டிவிட்டேன்.

கை சூடு தாங்காமல் நான் அவஸ்தைப்பட்டதும் டைரக்டர் 'கட்', என்றார். தீப்புண் வலி தாளாமல் நான் 'ஐயோ, அம்மா' என்று கத்தி மயக்கம் போட்டு விட்டேன். ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போய்ச் சிகிச்சை தந்தார்கள்.

''சினிமாவுக்கு நான் புதுசு. என் மனசுக்குள் நான் நன்றாக நடிக்க வேண்டும் என்ற ஏக்கமிருந்ததால் அசலாக உள்ளங்கையில் ஏந்திவிட்டேன். டைரக்டர் இதைச் சற்றும் எதிர் பார்க்காததால் நான் கத்தியபிறகே, 'கட்' சொன்னார்.''

—துரை ராமச்சந்திரன்

மனோ வேகத்தையும்விடக் கடுகி நடந்த கரிகாலன், வசந்த மண்டபத்தை நாடு முன்பாகவே தனது திட்டத்தை ஒரு வழியாக வகுத்துக் கொண்டான். அரசகுமாரி உறக்கத்திலிருந்தாலும், அவளை எழுப்பிச் சதிகாரர்களின் கொலைத் திட்டத்தையும் அவளிடம் கூறி எச்சரிப்பதோடு, அரிஞ்சயன் வேடத்தையும் கலைத்து விடுவதென்ற தீர்மானத்துடன், விடுவிடு என்று அரண்மனைக்குள் நுழைந்து, வசந்த மண்டபத்துக்குச் சென்ற கரிகாலனைக் காவலாளிகள் பாரும் தடை செய்யவில்லை. ஜெயசிம்மன் தன்னைப் பற்றி மிகத் திட்டமான உத்தரவுகளைப் பிறப்பித்திருக்கிறானென்பதையும், தன் மீது மிதமிஞ்சிய நம்பிக்கை வைத்திருக்கிறான் என்பதையும் காவலாளிகள் தனக்குக் காட்டிய மரியாதையிலிருந்து ஊகித்துக் கொண்டு, மிகத் துரிதமாக வசந்த மண்டபத்தை அடைந்த கரிகாலன், முதல் கூடத்தைத் தாண்டி அரசகுமாரியின் அறையை அடைந்து, சிறிதும் சப்தம் செய்யாமல் கதவைத் திறந்தான்.

''உள்ளே வா,'' என்று ஒரு குரல் அழைத்தது.

உள்ளே நுழைய ஒரு காலை எடுத்து வைத்த கரிகாலன் மார்பு குதிரையைவிட அதிவேகமாக ஓடத் தொடங்கியது. கால்கள் அசையக்கூட மறுத்தன. எதற்கும் குழப்பமடையாத அவன் புத்தியுங்கூட அடியோடு நிலைகுலைந்து போகவே பிரமை பிடித்தவன் போல் நின்றான் கரிகாலன். எதிரேயிருந்த கட்டிலில் அரசகுமாரியின் அழகிய உடலுக்குப் பதில் ஜெயசிம்ம சாளுக்கியனின் திடகாத்திரமான சரீரம் அமர்ந்திருந்தது.

''ஏன் தயக்கம்? வா உள்ளே,' என்று மிகக் கடுமையான இரண்டாம் முறை ஒலித்தது, ஜெயசிம்ம சாளுக்கியனின் குரல்.

அரசகுமாரியைப் பார்க்கப் போன இடத்தில் ஜெயசிம்மன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தவன் கரிகாலனைத் தவிர வேறு ஒருவனாயிருந்தால், அந்தக் கணமே மயக்கம் போட்டாவது விழுந்திருப்பான்; அல்லது ஒன்றுக்கொன்று ஏதாவது உளறியிருப்பான். ஆனால் சூடாமணி விஹாரத்தில் எத்தனையோ தர்க்கங்களில் கலந்து கொண்டதால், எந்த



''தாலிச் சரடு நீளம் கொஞ்சம் ஜாஸ்தி இருந்தது தப்பாப் போச்சு.''

''ஏன்?''

''பொண்ணோட தங்கச்சிக்கும் சேர்த்துத் தாலி கட்டிட்டார், மாப்பிள்ளை!''

—ஒய்.கே. சங்கர்



''என்ன எல்லோரும் கல்யாணத்துக்கு குடத்தை 'ப்ரெஸன்ட்' பண்ண எடுத்துக்கிட்டுப் போறாங்க?''

''வர்றவங்க ஆளுக்கொரு குடம் தண்ணி எடுத்துக்கிட்டு வரச் சொல்லி கல்யாணப் பத்திரிகைலே போட்டிருந்தாங்களாம்!''

நிலையையும் சமாளித்துக் கொள்ளக் கூடிய கூரிய புத்தியுடைய கரிகாலன், தனக்கேற்பட்ட பிரமையையும் கலவரத்தையும் விநாடி நேரத்தில் சமாளித்துக் கொண்டு, அரசகுமாரியின் அறைக்குள்ளே நுழைந்தான். ஜெயசிம்ம சாளுக்கியனின் கழுகுப் பார்வையால் கூட அவன் உள்ளத்தே ஓடிய எண்ணங்களை ஊகிக்க முடியாத அளவுக்கு அவன் முகம் கல்லாய்ச் சமைந்து நின்றது.

நிஷ்களங்கமான வதனத்துடன் உள்ளே நுழைந்த கரிகாலனை ஏற இறங்க ஆராய்ந்த ஜெயசிம்மன், ''கரிகாலா! இது எதிர்பாராத சந்திப்பல்லவா?'' என்று கேட்டான்.

''ஆமாம் மன்னவா!'' என்று ஒப்புக் கொண்டான் கரிகாலனும்.

''இங்கு அரசகுமாரியைப் பார்க்க வந்தாய்.''

''ஆமாம்.''

''எதற்காகப் பார்க்க வந்தாய்?''

''இந்தச் சதியை உடைத்தெறியக் கூடிய தகவல் கிடைத்தது.''

''என்ன தகவல்?''

''தங்களைக் கொலை செய்துவிட்ச் சதிகாரர்கள் திட்டமிட்டிருக்கிறார்கள்.''

ஜெயசிம்மன் புருவங்கள் சட்டென்று உயர்ந்தன. ''என்ன! இது உண்மையா?''

''முக்காலும் உண்மை!''

''இதை ஏன் அரிஞ்சயன் என்னிடம் சொல்லவில்லை?''

இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொண்ட கரிகாலன், மெள்ள ஜெயசிம்மன் மனத்தில் சந்தேக விஷத்தைப் புகுத்தத் தொடங்கி, ''அசந்தர்ப்பமான கேள்வி மகாராஜா!'' என்றான்.

ஜெயசிம்மன் கட்டிலிலிருந்து எழுந்து அடிபட்ட சிங்கம் போல அறையில் உலாவிக் கொண்டே, ''இதில் அசந்தர்ப்பம் என்ன இருக்கிறது?'' என்றான்.

''அரிஞ்சயன் தங்களுக்கு வேண்டியவன். நீண்ட நாட்களாக உழைப்பவன். தங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவன். நானோ புதியவன்....'' என்று இழுத்தான்.

கரிகாலன் மனத்திலோடிய எண்ணங்களைப் புரிந்து கொண்ட ஜெயசிம்மன், ''நீ நினைப்பது நியாயம், கரிகாலா! ஆனால், அவன் இந்த விஷயத்தை இதுவரை என்னிடம் சொல்லவில்லையே!'' என்றான்.

செய்யலாமே இது



பாட்டரி போடு ஒருமுறை:

டிரான்ஸிஸ்டர், மற்றும் டார்ச் விளக்குகளுக்கு பாட்டரி போடும் தேதியைக் குறித்து வைத்துக் கொண்டு பத்து அல்லது பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை, ஒரு பாட்டரியை மட்டும் மாற்றிக் கொண்டே வந்தால் வெளிச்சமும், சப்தமும் ஒரே சீராக இருந்து கொண்டு வரும்.

—பி. ஜெயவேல்

''பம்பைப் போட்டு எதுக்கு அடிக்கிறீங்க?'

''பின்னே பாருங்க. இருந்த ரெண்டு பக்கெட்டு தண்ணியையும் முழுங்கிட்டு, ஒரு 'ட்ராப்' கூடத் திருப்பிக் குடுக்க மாட்டங்குது!''



அரிஞ்சயன் மன்னனுக்கு விஷயத்தைச் சொல்லாததன் காரணத்தைக் கரிகாலன் ஓரளவு ஊகித்துக் கொண்டான். திட்டம் சரியாக உருவாகவில்லையென்றும், ஏற்பாடுகள் பூர்த்தியான பின்பு மன்னனிடம் சொல்லிக் கொள்ளலாமென்றே அரிஞ்சயன் இருந்திருக்க வேண்டுமென்றும் கரிகாலன் ஊகிக்க முடிந்தாலும், அதை வெளியில் காட்டாமல், மித்திர பேதத்தைச் சரியாகச் செய்துவிடத் தீர்மானித்து, ''மன்னவா! இந்த விஷயத்தைப் பற்றி அரிஞ்சயனை எதுவும் கேட்காதீர்கள்,'' என்று கெஞ்சுவது போல் நடித்தான்.

''ஏன்?''

''நீங்களே என்னிடம் இந்தத் தகவலைச் சொன்னதாக அவனிடம் பொய் சொல்லி இருக்கிறேன்.''

''எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்?''

''தங்களிடம் அரிஞ்சயன் இந்த முக்கிய விஷயத்தைச் சொல்லவில்லை. நான் அவனிடம் கூறியபோது, 'உனக்கெப்படித் தெரியும்?' என்று இரைந்தான். ஆகையால் அவனிடமிருந்து தப்ப, நீங்கள் சொன்னதாகவும், உங்களுக்கு முன்பே இத் தகவல் தெரியும் என்றும் கூறிவிட்டேன்.''

''அதற்கு என்ன சொன்னான்?''

''நாம் இருவர்தானே ஒற்றர்கள்? மன்னனுக்கு இது எப்படித் தெரியும்?'' என்று சீறினான்.''

ஜெய்சிம்மன் கோபமும் எல்லை மீறியது. ''அரிஞ்சயன் அயோக்கியன். சதிகாரர்களில் இவனும் ஒருவனாக இருக்க வேண்டும். அவன் எங்கே இப்பொழுது?'' என்று கூச்சலிட்டான்.

''இந்தக் கோட்டைப் பின்புறப் பெருங் கதவுக்கருகில் காத்துக் கொண்டிருக்கிறான்.'

கரிகாலன் வைத்த சந்தேகத் தீ வெகு உக்கிரமாகப் பிடித்துக் கொண்டது. உள்ளே உதயமான கோபம் திடீரென எரிமலைபோல் வெடிக்கத் தொடங்கவே, ''அந்த அயோக்கியனை இப்பொழுதே ஒழித்துக் கட்டுகிறேன்,'' என்று இடியென வார்த்தைகளை உதிர்த்த ஜெயசிம்மன், அறையைவிட்டு வெளியே சரசரவென்று நடந்து சென்றான்.

(தொடரும்)

## யோசனை

உபயோகமான முடிச்சு



படுக்கையில் விரிக்கும் பெட்ஷீட்டிலோ போர்வையிலோ தலைபுறம் எது என்று தெரிந்து கொள்ள தலைப் பக்கம் இரண்டு மூலைகளிலும் இரண்டு சிறு முடிச்சுக்கள் போட்டு வைத்துக் கொண்டால் உபயோகமாக இருக்கும். கால்புறம் உபயோகித்த பகுதியோ என்று அருவருப்பு அடைய வேண்டாம்.

—எம். மாரிமுத்து

சென்னை போயஸ் கார்டனில் வசித்துவரும் 38 வயதான ராமன், விசிறி ஒன்றை கண்டுபிடித்திருக்கிறார். இது சுழலும்போது இதன் கீழே வைக்கப்படும் ஃபைல்கள் 'மடேர் மடேர்' என்று தூக்கி எறியப்பட்டுக் காணாமல் போய்விடும். 'அரசு அதிகாரிகளுக்கு இது ஒரு வரப் பிரசாதம்' என்று நிருபர்கள் கூட்டத்தில் பேசினார் ராமன் பெருமிதத்துடன்.







சென்னை கீழ்ப்பாக்கத்தைச் சேர்ந்த நாராயணசாமி தனக்கு ஒரு பிரத்தியேகக் காற்று புக முடியாத அறை ஒன்றைக் கட்டினார். அந்த அறைக்குள் நான்கு குழாய்களை வைத்து மெயின் குழாயுடன் தொடர்பு கொடுத்தார். அறைக்குள் உள்ள எல்லாக் குழாய்களையும் திறந்து விட்டபோது, நான்கு குழாய்களிலிருந்தும் ஜிலுஜிலுவென்று காற்று வீசத் தொடங்கியது. ''வெய்யில் காலத்தில் இதைத்தான் நான் ஏ.சி. அறையாகப் பயன்படுத்தினேன்,'' என்று மகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார் கீழ்ப்பாக்கம் நாராயணசாமி.

சென்னை கோடம்பாக்கத்தைச் சேர்ந்த துணை நடிகை ஒருவர், அசடு வழிவதைத் தடுக்கும் புது டாய்லெட் சோப் ஒன்றைக் கண்டுபிடித்துள்ளார்.

''கன்னங்களின் உட்பகுதியில் அசடு சுரக்கும் 'அசடோ ஹார்மோன்' என்று ஒரு சுரப்பி உள்ளது. இது செயல்படும்போது, அசடு வழிகிறது. அப்படிப்பட்ட இக்கட்டான நேரத்தில், நான் கண்டுபிடித்திருக்கும் சோப்பை யாருக்கும் தெரியாமல் உபயோகித்து குளிர்ந்த நீரில் முகம் கழுவினால் அசடு வழிவது நிற்கும்.''




# ண்டுபிடிப்புகள்

# மன்னன் மகள்

மன்னன் மகள்
மன்னன் மகள்



சாண்டில்யன்

## 25. மந்திரச் சொற்கள்

தனது உயிர்மேல் ஆசையில்லாதவன் உலகத்தில் யாருமே கிடையாது. கூன், குருடு, நொண்டி, முடவன் பிறர் காணச் சகிக்காத ரோகமுடையவன், தள்ளாடும் கிழவன் ஆகியவர்கள் கூட உலகில் தத்தித் திரிந்தாவது ஜீவிக்க இஷ்டப்படுகிறார்களேயொழிய, பிராணனை விட யாருக்கும் மனம் வருவதில்லை. இந்தப் பிராண பயமும் அதனால் உயிர்மீது ஏற்படும் தீவிரப் பற்றுதலும் மனித சமுதாயத்துக்கு மட்டும் பிரத்தியேகமானதல்ல. எப்படியாவது பிழைத்திருக்க வேண்டுமென்ற முயற்சியால்தான், செடி கொடிகள் கூடத்



தங்கள் வேர்களை நிலத்தின் ஆழத்துக்கு அனுப்பி நீர் நிலைகளை ஆராய்ந்து ஆகாரத்தை உறிஞ்சுகின்றன. சற்றே அடிபட்ட நாகம் சரசரவென்று பிலத்தை நோக்கி விரைவதும், வேங்கையும் சிங்கமும் மனிதர்களை நோக்கிப் பாய்ந்து கொல்ல முயல்வதும், உயிரை எப்படியாவது காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தால்தான்.

உயிர் அகன்றால் உலகம் இருண்டு போகிறது. அதைப் பார்க்க ஒளி அளிக்கும் உயிரை ஆண்டவன் படைப்பிலுள்ள எந்த ஜீவராசியும் இழக்க இஷ்டப்படுவதில்லை. இந்த உயிரால் யாருக்கு என்ன பிரயோசனம் என்ற தத்துவ ஆராய்ச்சிகள் கூட அநேகமாக ஏட்டளவில் நிற்கின்றனவேயொழிய, அந்த எண்ணம் ஊர்வது துர்லபமென்பதைச் சரித்திரம் நிரூபித்திருக்கிறது. சமுதாயத்துக்குச் சுமையாயிருப்பவனும், தன் உயிரை மிக அபூர்வமென்றும், அது அவசியம் தன் உடலில் தங்கியிருக்க வேண்டும் என்றும் நினைக்கிறான். உணவுக்கு அடியோடு வழியில்லாதவர்கள் கூடப் பிச்சையெடுத்தோ திருடியோ உண்டு, தங்கள் அற்புத உயிரைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள்.

இவர்களுக்கே உயிர்மேல் இத்தனை ஆசையிருக்குமென்றால், சகல சுகபோகங்களையும் அனுபவித்து வந்தவனும் மேலைச் சாளுக்கிய நாட்டையே பரிபாலனம் செய்து வந்தவனுமான ஜெயசிம்மனுக்கு உயிர்மீது ஆசையிருந்ததிலோ, அதற்கு அபாயம் நேரிடுமென்று கேட்ட மாத்திரத்தில் அவன் கோபத்தில் வசப்பட்டதிலோ என்ன ஆச்சரியமிருக்க முடியும்! ஆகவே, கரிகாலன் இட்ட தீ அவன் சித்தத்திலே வெகு சீக்கிரமாகப் பற்றி உணர்ச்சிப் புயலால் வெகு வேகமாக விசிறப்பட்டு ஜ்வாலையாக அடித்துவிடவே, இந்த முக்கிய விஷயத்தைத் தன்னிடம் சொல்லாமல் மறைத்து வைத்த அரிஞ்சயனை ஒரு வழியாக ஒழித்துவிடக் கங்கணம் கட்டிக்கொண்டு, வெகு வேகமாக வசந்த மண்டபத்தை விட்டு வெளியே வந்தான்.

எந்தச் சமயத்திலும் நிதானத்தை இழக்காதவனென்றும் கோபத்திற்கு எந்த நிலையிலும் இடங்

கொடுக்காதவனென்றும், எந்த மனிதனையும் தீவிரமாக ஆராய்ந்து நோக்கவல்ல பார்வையுடையவ னென்றும் பிரசித்தி பெற்ற ஜெயசிம்ம சாளுக்கியன், சதிகாரர்களின் கொலைத் திட்டத்தைப் பற்றிக் கேட்ட மாத்திரத்தில் நிதானத்தைக் காற்றில் பறக்கவிட்டு, அப்படி வெகுண்டு ஓடினதைக் கண்ட கரிகாலன் உள்ளத்தில் சற்றே பயம் உதயமாயிற்று. ஜெயசிம்ம சாளுக்கியன் அவசரப்பட்டு அரிஞ்சயனைக் கோதண்டத்தில் மாட்டினால் தன் குட்டும் ஓரளவு வெளிப்பட்டு விடும் என்பதையும், அப்படி வெளிப்பட்டால் கோதண்டத்தில் தனக்கும் இடம் ஒதுக்கப்படுமென்பதையும் கரிகாலன் சந்தேகமறப் புரிந்து கொண்டிருந்தான்.

நடந்த நிகழ்ச்சிகளைத் தர்க்க ரீதியாக அவன் மனம் ஆராய்ந்ததில், வேறு பல சிக்கல்களும் இருப்பது திட்டமாகத் தெரிய வந்தது.

ஜெயசிம்ம சாளுக்கியன் அன்று அரசகுமாரிக்குப் பதில் வசந்த மண்டபத்தில் உட்கார்ந்தது தன்னைச் சோதிக்கவே என்பதில் கரிகாலனுக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

'நான் அரசகுமாரியின் பக்கத்திலிருக்கும் பட்சத்தில் அவளை நாடி வசந்த மண்டபத்துக்கு எப்படியும் வருவேன் என்பதை ஜெயசிம்மன் ஊகித்திருக்க வேண்டும். அந்தச் சந்தர்ப் பத்தில், எதிர்பாராத விதமாகத் தன்னை சந்தித்தால் நான் திடுக்கிட்டு உண்மையை உளறிவிடுவேன் என்று நினைத்திருக்கிறான். ஆனால், அரச குமாரியைப் பார்க்கவே நான் வந்த தாகச் சொன்னது இவனுக்குத் திக் பிரமையை அளித்து விட்டது. ஆனால், மன்னனைக் காணவே நான் வசந்த மண்டபத்துக்கு வருவதாக அரிஞ்ச யனிடம் சொல்லியிருக்கிறேனே அந்த விஷயத்தை அவன் ஜெயசிம்மனிடம் சொன்னால் என் பேச்சு முன்னுக்குப்பின் முரணாகிவிடுமே. இப்படி நான் பித்த லாட்டம் செய்கிறேனென்று ஜெய சிம்மன் அறிந்தால் கழுத்தைத் திருகி விடுவானே' என்று பலவிதமாக மனத்திற் குள்ளேயே நிலைமையை ஆராய்ந்த கரிகாலன், எந்தக் காரணத்தை முன்னிட்டும் அரிஞ்சயனையும் ஜெய சிம்ம சாளுக்கியனையும் கலந்து



பேசவிடக் கூடாதென்று தீர்மானித்த வண்ணம், ஜெயசிம்ம சாளுக்கியனைத் தொடர்ந்து நந்தவனத்துக்குள் சென்றான். சிறிது நேரம் மன்னனை மௌனமாகவே பின் தொடர்ந்த கரிகாலன், நந்தவனத்தின் நடுவிலிருந்த தடாகத்தினிடம் வந்ததும், மெள்ளப் பேச்சுக் கொடுக்க முற்பட்டு, ''மன்னவா!'' என்று ஆரம்பித்தான். ஜெயசிம்மன் தன் வேகத்தைச் சிறிது தளர்த்தி நின்று திரும்பிக் கரிகாலனை நோக்கினான். 'என்ன? என்று அவன் உதடுகள் கேட்காவிட்டாலும் முகத்தில் அந்தக் கேள்வி தொக்கியே நின்றது.

''மன்னவா, ஏதோ நான் சொல்கிறேனென்று கோபிக்க வேண் டாம். எதிலும் நிதானம் நல்லது; அரசியல் விஷயங்களில் அது மிக அவசியம் என்று அறிவாளிகள் சொல் கிறார்கள்...'' என்று லேசாக இழுத் தான்.

ஜெயசிம்ம சாளுக்கியனின் வல் லூறு விழிகள் கரிகாலனை நன்றாக ஊடுருவிப் பார்த்தன. தன் உள்ளத்தை அரசன் அக்கக்காக அலசுவதைக் கவனித்து, மனத்தில் ஓரளவு அச்சமே உதயமானாலும், கரிகாலன் அதை வெளியில் காட்டாமல், அரசன் கண்களை நோக்கித் தன் கண்களையும் எழுப்பினான். கண்களைக் கண்கள் தாக்கி நின்றன. அந்த இருவர் பார் வையை அந்தச் சமயத்தில் யாராவது பாரத்திருந்தால் ஒரு ஜோடி ஈட்டிகள் இன்னொரு ஜோடி ஈட்டிகளுடன் போரிடும் நினைப்பே ஏற்படுமே யொழிய, ஏதோ இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நிற்கிறார்கள் என்ற எண்ணம் ஏற் படாது. கரிகாலன் கண்களை நன்றாக ஊடுருவிப் பார்த்த ஜெயசிம்மன் கண்கள், கடைசியாகச் சற்றே தாழ்ந்து வேறு புறம் திரும்பின. ஜெயசிம்மன்

ஒருவர்: ஏய்யா! தண்ணிக் கஷ்டமா இருக்கிறதாலே, மஞ்சள் நீராட்டு விழா நடத்த முடியாது தான். அட்லீஸ்ட் மஞ்சள் நீர்த் தெளிப்பு விழான்னாவது பத்திரிகையிலே போடக் கூடாதா? அதுக்குன்னு மஞ்சள் தாள் தெளிப்பு விழான்னு போட்டி ருக்கியே?

ப. கோபுராஜ்

வாயிலிருந்து வெளிவந்த சொற்களில், உறுதியும் லேசாகக் கோபமும் கலந்திருந்தன.

''ஜெயசிம்மனுக்கு இந்த விதம் புத்திமதி சொன்னவர்களின் கதி என்ன ஆகியிருக்கிறது தெரியுமா கரிகாலா?'' என்று கேட்டான் ஜெயசிம்மன்.

''பதவி உயர்ந்திருக்கும்,'' என்றான் கரிகாலன், ஜெயசிம்மன் கேள்வியின் சூட்சுமத்தைப் புரிந்து கொள்ளாதவன் போல.

''ஆம், இந்த உலகத்திலிருந்து மேல் உலகத்துக்கு உயர்ந்துவிட்டது.''

''மன்னவா! கடவுளுக்கு அடுத்தபடி தங்களைத்தான் சொல்ல வேண்டும்!''

''என்ன!''

''ஆம் மன்னவா! தங்களுக்குச் சேவை செய்பவர்களுக்கு கடவுள் மோட்சம் கொடுப்பதாகச் சொல் கிறார்கள். நீங்களும் அதைத்தான் செய்வதாகச் சொல்கிறீர்கள்.''

''கரிகாலா! உன்னிடம் நகைச்சுவை நிரம்ப இருக்கிறது.''

''அது தமிழனின் பிரத்தியேகச் சொத்து மன்னவா.''

''அது அதிகமானால் சங்கடங்கள் பல உண்டு தெரியுமா?''

''தெரியும் மன்னவா! தங்களைப் போன்றவர்களிடம் கை யாண்டால் உயிருக்கும் கேடு வரலாம்.''

''தெரிந்துமா உன் சாமர்த்தியத்தை என்னிடம் காட்டு கிறாய்?''

''மன்னவா! நீங்கள் தமிழர் களோடு போரிட்டிருக்கிறீர்களே தவிர, கலந்து பழகியதில்லை. அவர்கள் வாள் பலம், வேல் பலம் உங்களுக்குத் தெரியும். ஆனால் வார்த்தை பல தெரியாது. தெவிட்டாத அந்தத் தே மொழியில் துளிர்த்துத் தெளிக்கு பன்னீரைவிட இன்பம் தரும் நகை சுவையை நீங்கள் அறியமாட்டீர்கள் எங்கள் மொழியில் வசையிலும் நகை சுவை உண்டு மன்னவா! அது மொ யோடு பிறந்த குணம். அந்த மொ யோடு கலந்திருப்பது எங்கள் ரத்தப ஆகவே, எனக்கு மட்டும் நகைச்சுவை எங்கிருந்து போய்விடும்? உயி வாழ்வதற்கு, மன்னவா, சிரித் மகிழ்ந்து வாழ, நகைச்சுவை தேவை அதில்லாமல் இந்த உயிர் எதற்கு?''

''நகைச்சுவைக்கும் இடம் உ டல்லவா?''

''ஆம், மன்னவா!''

''இது தகுந்த இடமா?''

''ஆம் மகாராஜா! இங் அதைப் பேசியதால்தான் தர்க்க வளர்ந்தது. கொஞ்சம் நிதானத்துக் வந்திருக்கிறீர்கள். மகாராஜா யோசனை சொல்லுகிறவர்களுக் மோட்சம் கொடுத்துப் பயனில்லை அப்படியானால் உங்கள் மந்திரிகளை யெல்லாம் நீங்கள் வெட்டிச் சாய்க் வேண்டியதுதான். அரசனுக் யோசனை சொல்லத்தக்க மந்திரிகள

குழந்தைகளுடன் விருந்தின ராக வரும் பெற்றோரில் சிலர், அவர்களது குழந்தைகள், நம் வீட்டில் வைத்திருக்கும் கண்ணாடிச் சாமான்கள், அழகுச் சாமான்கள் முதலிய பொருட்களை எடுத்து விளையாட முற்படும்போது கண்டும் காணாதது போல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சாமான் உடைந்து விடப் போகிறதே என்று நாம் அவர்கள் குழந்தைகளை அதட்ட வேண்டியுள்ளது. அதற்கும் இந்தப் பெற்றோர்கள் கோபித்துக் கொள்கிறார்கள். இன்னொரு அநியாயம்—சில பெற்றோர்கள் தாங்களாகவே உரிமையோடு நம் வீட்டுப் பொருட்களை எடுத்துத் தங்கள் குழந்தைக்கு விளையாடக் கொடுத்து விடுகிறார்கள்!

—எஸ். செல்வராணி, சிவகாசி.

# நாளை உங்களுக்கு ஓர் பொன்னான நாள்
# காலை 9.30 மணிக்கும் பகல் 1 மணிக்கும்
## ஓர் அரிய வாய்ப்பு

# ராம ஆஞ்சநேயர் கார்டன்

(அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள்)

1. வண்டலூர் ரயில் நிலையத்திலிருந்து 10 நிமிட பஸ் பயணம்
2. படப்பை பஜாரை ஒட்டி ட்ரங்க் ரோட்டில் அமைந்தது. உடனே வீடு கட்ட சிறந்த இடம்.
3. சுவையான குடிநீரும் அழகிய தோட்டமும் அருகிலேயே அமையப் பெற்றது.
4. பாரிஸிலிருந்தும், தாம்பரத்திலிருந்தும் நகரப் பேருந்து கட்டணத்துடன் கூடிய பஸ் வசதி

**வீட்டு மனைகள், வீடுகள், Fப்ளாட்டுகள் வாங்க கைராசியான இடம்**




# முரளிஸ்

MURALIS ESTAT 12, ராமசாமி தெரு.

பஸ் நெ. 55L, 55M, 55N, 55P, 79, 79A, 79B, 110.

5. மழைக் காலத்தில் தண்ணீர் தேங்காத மேடான நிலம்.

6. அரசு வழக்கறிஞர் நற்சான்றிதழ் (லீகல் ஒபினியன்) பெற்றது.

தேவை என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன.''

''இருக்கலாம். ஆனால், நீ மந்திரியா?'' என்று இரைந்தான் ஜெயசிம்மன்.

''இல்லை. மன்னவா. உங்கள் ஒற்றன். உங்களைக் காப்பாற்றுவதில் அக்கறையுள்ளவன்!'' என்றான் கரிகாலன்.

ஜெயசிம்ம சாளுக்கியன் கண்கள் மீண்டும் அவனை ஆராய்ந்தன. மன்னன் முகத்தில் கோபம் மறைந்து இகழ்ச்சிக்குறி உதயமாயிற்று.

''என்னிடம் அவ்வளவு அக்கறையா உனக்கு?'' என்று வினவினான் ஜெயசிம்மன்.

''ஆம், மன்னவா! தங்களுக்குப் பணிபுரிய ஒப்புக்கொண்டு விட்டேன். அதை அறிவுடனும் ஆற்றலுடனும் நிறைவேற்ற வேண்டியது என் கடமை.''

''இப்பொழுது என்னதான் செய்யவேண்டுமென்கிறாய்?''

''இந்தக் கொலைத் திட்டத்தைப் பற்றி நீங்கள் அரிஞ்சயனிடம் பேசக்கூடாது; அவனுக்கு எந்தவிதத் தீங்கையும் விளைவிக்கக் கூடாது. கோபமிருப்பதாகக்கூடக் காட்டிவிடாதீர்கள்.''

''ஏன்?''

''எதிரிகள் தங்களைக் கொலை செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்ற தகவல்தான் இதுவரை தெரியும். அந்தத் திட்டத்தை எப்படி வகுத்திருக்கிறார்கள், எப்படி நிறைவேற்றப் போகிறார்கள் என்கிற விவகாரங்கள் தெரியாது. அதை நமக்குச் சம்பாதித்துக் கொடுக்கக் கூடியவன் அரிஞ்சயன் ஒருவன்தான். அவனிடம்தான் சதிகாரர்களுக்கு நம்பிக்கையிருக்கிறது. என்னிடம் நம்பிக்கையில்லை.''

''உன்னிடம் நம்பிக்கையில்லையா?''

''இல்லை! என்னை ஆண்டவனிடம் அனுப்பிவிடக்கூட ஏற்பாடு நடந்தது. அரிஞ்சயன் என்னைத் தப்புவித்திராவிட்டால், உங்களிடம் இங்கு பேசும் வாய்ப்புக் கிடைத்திருக்காது. உங்களுக்குப் பதில் எமனிடம் பேசிக் கொண்டிருப்பேன்,'' என்றான் கரிகாலன்.

ஜெயசிம்ம சாளுக்கியன் அடியோடு குழம்பிப் போனான். 'வாழ்க்கையில் என்றுமே குழம்பாத என்னைக் குழப்பிக் குட்டிச்சுவராக அடிக்க இந்தத் தடியன் எங்கிருந்து வந்தான்?' என்று மனத்துக்குள்ளேயே கரிகாலனைச் சபித்துவிட்டு, ''நாம் மேற்கொண்டு செய்ய வேண்டியது என்ன?'' என்று வினவினான்.

''மன்னவா! தங்களை எப்படிக் கொல்லச் சதிகாரர்கள் யோசித்திருக்கிறார்கள் என்று கண்டுபிடிக்க வேண்டும். சாப்பாட்டில் விஷம் வைத்துக் கொல்லப் போகிறார்களா? அல்லது நீங்கள் பவனி வரும்போது அம்பெய்து கொல்ல உத்தேசமா? அல்லது தனியாக வேங்கி நாட்டு வீரர்களைத் திரட்டிச் சமயம் பார்த்து உங்களைப் பிடித்து வெட்டிவிட உத்தேசமா? இவற்றில் எந்த முறையைக் கையாள உத்தேசித்திருக்கிறார்கள் என்பது தெரியவேண்டும்,'' என்ற கரிகாலன் வார்த்தைகள், ஜெயசிம்ம சாளுக்கியன் மனத்தில் சுருக் சுருக்கென்று பாய்ந்தன. மரணத்தின் மார்க்கங்களைக் கரிகாலன் விவரிக்க விவரிக்க, ஜெயசிம்மனின் முகம் பெரிதும் விகாரமடைந்து வந்தது.

---




சமீபத்தில் அண்ணாசாலையில் உள்ள தேவநேயப்பாவாணர் நூலகத்தில் நடந்த அமரர் கவிஞர் கண்ணதாசனின் 60'ம் ஆண்டு மணி விழாவில், கவிஞர் புலமைப்பித்தன்; ''இந்த மணி விழாவில் மட்டும்தான் கடவுள் வாழ்த்துப் பாடலை நீண்ட நேரம் பாடுவதைக் கேட்டு ஆச்சரியப்பட்டேன். பிறகுதான் காரணம் புரிந்தது. கவிஞர் கண்ணதாசன் எந்த நிகழ்ச்சிக்கும் தாமதமாக வரும் பழக்கம் உள்ளவர் என்பதால் நீளமான வாழ்த்துப் பாடலைப் பாடினார்களோ என்று நினைக்கிறேன்.''

—மல்லியம் கல்யாணம்

இந்தச் சனியன் பிடித்த தமிழன் கிளப்பிவிட்ட இந்தச் சந்தேகங்களால், இனிமேல் தான் சரியாகச் சாப்பிடவோ உறங்கவோ முடியாதென்பதை அறிந்த ஜெயசிம்மன் மனத்தில் கோபம் உக்கிரமாகப் பொங்கி எழுந்தாலும், அதை அதிகமாக வெளியில் காட்டாமல் மௌனமாகவே இருந்தான். மன்னன் மனத்தே எழுந்த பயங்கர அலைகளை அவன் முகபாவத்திலிருந்து விநாடி நேரத்தில் ஊகித்துக் கொண்ட கரிகாலன், உள்ளுக்குள் நகைத்துக் கொண்டாலும், முகத்தில் கவலைக்குறியே அதிகமாகத் தெரியும்படி பாசாங்கு செய்துகொண்டு, ''மன்னவா! நான் இருக்கும் வரையில் நீங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம். இந்த அரிஞ்சயனை ஆயுதமாக உபயோகித்துச் சதிகாரர்களால் திட்டத்தைப் பூரணமாக உடைத்து, அவர்களை உங்களிடம் ஒப்படைக்கிறேன். இதற்கு நீங்கள் செய்யவேண்டியதும் ஒன்றிருக்கிறது,'' என்றான்.

''என்ன செய்ய வேண்டும்?''

''நான் சொல்கிறபடி நடக்குமாறு அரிஞ்சயனிடம் சொல்ல வேண்டும். நான் எதைச் சொன்னாலும், அவன் உங்கள் ஆணையாகப் பாவிக்க வேண்டும்.''

ஜெயசிம்ம சாளுக்கியன் ஒரு விநாடி யோசித்து விட்டுச் சந்தேகம் ததும்பும் கண்களுடன் கரிகாலனை நோக்கினான். கடைசியாக ஏதோ தீர்மானித்துக் கொண்டு கோட்டையின் ரகசியப் பெருங்கதவை நோக்கி விடுவிடுவென்று கரிகாலன் பின் தொடர நடந்தான்.

கதவை ஜெயசிம்மன் நாடும் காரணத்தை அறிந்துகொண்ட கரிகாலன், மன்னனுக்கு முன்பாக ஓடி அக் கதவின் பெரும் தாள்களை மிகச் சிரமப்பட்டு அகற்றிக் கதவையும் திறந்துவிட்டான். கதவு திறந்ததும், ''கரிகாலா!'' என்று அழைத்துக் கொண்டு, உள்ளே ஓடி வந்த அரிஞ்சயன், கரிகாலனுடன் மன்னனும் இருப்பதைப் பார்த்து, ஒரு கணம் அசைவற்று நின்றான். பிறகு மிரள மிரள விழித்தான்.

கரிகாலன் தன்னை நாடி வருவான் என்று அரிஞ்சயன்

# பு(து)த்தகம்

## 1. காத்திருக்கிறாள் கண்ணகி

(கோகிலா தங்கசாமி –பக். 112 –ரூ. 8 –விஜயா)

வசன கவிதைகள்.

## 2. குறள் புல்லாங்குழல் ஊதுகிறது

(கோகிலா தங்கசாமி –பக். 108 –ரூ. 8 –இரண்டு புத்தகங்களும்: விஜயா பதிப்பகம், 20, இராஜ வீதி, கோயம்புத்தூர் 641 001)

நூறு குறள்களுக்கு அவற்றின் புதுக் கவிதை வடிவம். உதாரணக் குறள்: தீயினாற் சுட்ட புண்.

புதுக் கவிதை:
தீயே!
நீ சுட்டால்
நான் அஞ்சமாட்டேன்!
நீ சுட்ட புண்ணுக்கும்
கடையில் மருந்து உண்டு.
நாவே!
நீ சுட்டால்
நான் அஞ்சுவேன்.
நீ சுட்ட புண்ணுக்கு
எந்தக் கடையிலும்
மருந்து இல்லை.

## 1. அண்ணா போற்றிய அறிஞர்கள்

(தொகுப்பு: அ. மறைமலையான் –பக். 128 –ரூ. 10 –குமரி)

எம்.ஜி. ராமச்சந்திரன் முதல் ஆல்பர்ட் டி. பிராங்க்லின்வரை, 32 பிரமுகர்களைப் பற்றிய அண்ணா கூறியது என்ன? தொகுப்பு.

## 2. கம்ப்யூட்டரின் ரகசியம்

(தமிழினியன் –பக். 88 –ரூ. 6.50 –இரண்டு புத்தகங்களும்: குமரிப் பதிப்பகம், 15, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் 611 001)

## வழிகாட்டும் சாதனையாளர்கள்

(க.க. இராமலிங்கம் –பக். 164 –ரூ. 11 –கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, சென்னை 600 017)

அண்மைக் காலத்தில் மறைந்த சிலர், இப்போது நம்முடன் வாழ்ந்து கொண்டிருக்கும் பலர்– இவர்களது வாழ்க்கை பற்றிய உற்சாகமூட்டும் குறிப்புக்கள்.

## பூவுக்குள் புயல்

(ரதிராமன் –பக். 112 –ரூ. 11.60 –நாகு பதிப்பகம், 10/13, கவிதாலயா, நங்கநல்லூர், சென்னை 600 061)

கவிதைகள்.
'உனது மூச்சிலும் பேச்சிலும்
தேசிய வாசமே;
பாரதி, உன் முகம் பாரத தேசமே!

## கௌரவம் தேவை

'பாஸ்போர்ட்' வேண்டி விண்ணப்பித்தவர்களைப் பற்றி சாதாரணமாக விசாரிக்க அவர்கள் வீடு தேடிப் போலீஸ்காரர்கள் வருவார். இப்படி வருபவர்கள் காவலர் சீருடையில் வருவதால் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் விண்ணப்பதாரரை ஒருவித சந்தேகக் கண் கொண்டு பார்க்க நேரிடுகிறது. இதைத் தவிர்க்க, காவல்காரர் சாதாரண உடையிலே விண்ணப்பதாரரைச் சந்தித்தால் என்ன?

—வி. ஸ்ரீதரன்

## திடீர் ராஜமரியாதை!

மதுரையில் லாரியில் போட்ட சரக்கு இரண்டு தினங்களாக வராமல் போகவே, நான் மதுரைக்குச் சென்று லாரி ஆபீஸ் வெளியே டீக்கடையில் நின்று கொண்டிருந்த புரோக்கரைப் பார்த்து ஒரு பேப்பரில் லாரி நம்பர், பில், சுச்சாத்து முதலானவற்றை விசாரணை செய்து குறித்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரத்தில் என்னைச் சுற்றி மற்ற லாரி டிரைவர்கள், கிளீனர்கள், லோடுமேன்கள் எனக்கு ராஜமரியாதை செய்ய ஆரம்பித்து விட்டதை உணர்ந்தேன். காரணம், நான் செக் பண்ண வந்துவிட்டேன் என்று பயந்திருக்கிறார்கள்!

—எஸ். டி. ஆர். மனோகரன்.
உசிலம்பட்டி.

## தூக்கி எறியாதீர்!

நான் சமீபத்தில் பழனிக்குச் சென்றிருந்தேன். அங்கே சுவாமிக்குச் சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியம் செய்து விநியோகம் செய்தார்கள். ஒரே கூட்டம். முண்டியடித்துக் கொண்டு எல்லோரும் பிரசாதம் வாங்கிக் கொண்டார்கள். எனக்கு முன்னால் நின்ற ஓர் அன்பர் பிரசாதத்தை வாங்கிக் கொண்டு தானும் உண்ணாமல், மற்றொரு ஏழைக்கும் கொடுக்காமல் ஒரு ஓரத்தில் போட்டுவிட்டுப் போய் விட்டார். இறைவனின் பிரசாதத்தை அலட்சியமாகத் தூரப் போட்டுவிட்டுச் செல்லலாமா?

ஆர். மீனாட்சி, திருநெல்வேலி—6.

நினைத்தானேயொழிய, மன்னனும் வருவானென்று நினைக்காததாலேயே அரிஞ்சயனுக்கு அத்தனை கலவரம் ஏற்பட்டது. ஆனால், கரிகாலன் செய்த மித்திர பேதத்தில் கலைந்து கிடந்த ஜெயசிம்மன் உள்ளத்தில், அரிஞ்சயனுடைய குற்றமுள்ள நெஞ்சுதான் முகத்திலுள்ள குழப்பத்துக்குக் காரணமென்று தீர்மானித்த ஜெயசிம்மன், அந்த அபிப்பிராயத்தை வெளியில் காட்டாமல், ''அரிஞ்சயா! கரிகாலன் அனைத்தும் சொன்னான். நீ செய்யும் சேவை மகத்தானது. அதற்கும் பரிசில்லாமல் போகாது,'' என்று இதழ்களில் புன்முறுவல் அரும்பக் கூறினான்.

''அது தெரிந்ததுதானே மகாராஜா,'' என்று பதில் இறுத்தான் அரிஞ்சயன்.

''அரிஞ்சயா, மேற்கொண்டு செய்ய வேண்டியது என்னவென்பதைக் கரிகாலனிடம் சொல்லியிருக்கிறேன். கேட்டுக்கொள். அவன் சொல்வதை என் ஆணையென்று நினைத்து நட; புரிகிறதா?'' என்றான் மன்னன்.

உண்மையில் அரிஞ்சயனுக்கு எதுவும் புரியவில்லை ஆச்சரியத்தால் அவன் கண்கள் மலர்ந்து, ஜெயசிம்மனையும் கரிகாலனையும் மாறி மாறி நோக்கின. நேற்று வந்த இவன், மன்னனுடைய நம்பிக்கைக்கு இத்தனை தூரம் எப்படிப் பாத்திரமானான் என்று உள்ளுக்குள்ளேயே யோசித்தான். இருப்பினும், அதை ஆமோதிக்கும் முறையில் மன்னனுக்குத் தலை வணங்கினான். ஜெயசிம்மன் மேற்கொண்டு எதுவும் பேசாமலும் ஆழ்ந்த யோசனையுடனும் அரண்மனையை நோக்கி மெள்ள நடந்தான். அவன் போவதைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்த கரிகாலன், கதவை நோக்கித் திரும்பி, ''அரிஞ்சயா! வா போகலாம்,'' என்று அழைத்தான்.

மன்னன் போக்கைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் தவித்த அரிஞ்சயன் கரிகாலனை நோக்கி, ''எங்கு போக வேண்டும்?'' என்று வினவினான்.

''வா சொல்கிறேன். முதலில் கதவை மூடுவோம்,'' என்று சொல்லிவிட்டு, அந்தப் பெருங்கதவின் தாள்களை மீண்டும் போட்டான். பிறகு தாள்கள் இருந்த இடத்திலிருந்து

தரையில் குதித்து, ''அரிஞ்சயா! அரண்மனை எனக்கு அதிகமாகப் பழக்க மில்லை. குதிரைக் கொட்டடி எங்கே இருக்கிறது?'' என்று கேட்டான்.

''எதற்கு?''

''இரண்டு புரவிகள் வேண்டும். உனக்கும் எனக்கும்.''

''இந்த நேரத்திலா?''

''ஆமாம்.''

''எங்கு போக?''

''சொல்கிறேன். முதலில் புரவிகளை வாங்கிக் கொள்வோம்,'' என்றான் கரிகாலன்.

அரிஞ்சயன் பதிலேதும் பேசாமல் நடந்து, அரண்மனையிலிருந்து சிறிது தூரத்திலிருந்த குதிரைக் கொட்டடிக்குக் கரிகாலனை அழைத்துச் சென்றான். அங்கெல்லாம் அரிஞ்சயன் வாக்கு அரச கட்டளையாயிருந்தது. இரண்டு புரவிகளுக்குச் சேணம் போட்டு ஏறிக்கொண்டு, வேங்கி நாட்டுத் தலைநகர வீதிகளில் மிக மெதுவாகச் சென்ற அவ்விருவரும் ஊர் எல்லையைக் கடக்கும் வரையில் பேசவேயில்லை. ஊரின் எல்லையைக் கடந்ததும், விண்ணை ஒரு முறை நோக்கிய கரிகாலன், நட்சத்திரங்களைப் பார்த்து மேற்குத் திக்கில் குதிரையைத் திருப்பினான்.

''எதற்கு இந்தப் பக்கம் போகிறோம்?'' என்று சந்தேகத்துடன் கேட்டான் அரிஞ்சயன்.

''அரசர் கட்டளையை நிறைவேற்ற.''

''எங்கே போகிறோம்?''

''மேலைச் சாளுக்கிய நாட்டிற்கு.''

''அங்கு ஏன் போக வேண்டும்?''

''என்னைக் கேள்விகள் கேட்காதே. அரசர் ஆணைப்படி நட.''

''அப்படி என்னிடம் சொல்லக் கூடாத ரகசியமா அது?''

இந்தக் கேள்வியைக் கேட்டதும், கரிகாலன் ஒரு விநாடி யோசித்தான். பிறகு சுற்றும் முற்றும் நோக்கிவிட்டு, ''அரிஞ்சயா! இப்படி வா,'' என்று அவனை அருகில் அழைத்துக் காதுக்கருகே ரகசியமாக



## நிஜமுங்களா?

செந்தில் மடியில் கோவை சரளா படுத்திருப்பதுபோல் எடுக்கப்பட்ட படம் ஒன்றைத் தனது வீட்டு அலமாரியில் (மிக மிகச் சிறிய படம்) வைத்திருக்கிறார். யார்? கோவை சரளா.

–ராம்சந்த்

எதையோ சொன்னான். அதைக் கேட்ட அரிஞ்சயன் கண்கள் மித மிஞ்சிய ஆச்சரியத்தால் மலர்ந்தன. ''மன்னர் யோசனை முதல் தரமானது கரிகாலா! இதை ஏன் அவர் என்னிடம் சொல்ல வில்லை?'' என்று வினவினான்.

''என்னையே சொல்லச் சொன்னார். அரிஞ்சயா! உன்னிடம் மன்னர் எத்தனை நம்பிக்கை வைத்திருக்கிறார் தெரியுமா?'' என்று பதில் சொன்னான் கரிகாலன். ''சரி, வா செல்வோம்,'' என்று குதிரையை நடத்தினான். அதற்கு மேல் பதிலேதும் பேசாமல் அரிஞ்சயனும் குதிரையைத் தட்டி விட்டான். கரிகாலன் தன் காதில் சொன்ன அந்த மந்திரச் சொற்கள் அரிஞ்சயனது அவநம்பிக்கையை அடியோடு உடைத்தெறிந்து விட்டதால் சொல்லவொண்ணா மகிழ்ச்சி அவன் முகத்திலே தாண்டவமாடத் தொடங் கியது. அவன் முகபாவத்தைப் பார்க்காததுபோல் பக்கவாட்டில் பார்த்த கரிகாலன், 'இப்படியும் ஒரு முட்டாள் உலகத்தில் இருக்கிறானே!' என்று உள்ளூர நகைத்துக் கொண்டான்.

(தொடரும்)




26. வளையயல் கரமும்
வாள் வீச்சும்

30-7-87

**கா**தோடு காதாகக் கரிகாலன் ஓதிவிட்ட மந்திரச் சொற்களால் அவநம்பிக்கை அடியோடு உடைந்து விட்டாலும், அத்தனை பெரிய




**கொடுக்கிற தெய்வம் கூரையைப் பொத்துக்கொண்டு கொடுக்கும் என்பது 'எங்க சின்ன ராசா' படத்தில் நடித்த யாருக்குப் பொருந்தும்.**

**கோபிசெட்டிபாளையத்தில் படப்பிடிப்பு நடந்த போது, சின்னராசுவின் அப்பாவாக நடித்தவர், தேங்காய் சீனிவாசனுக்கு உடல்நிலை சரியில்லாமல் போகவே,— சின்ன வேடம் செய்ய வந்திருந்த இடிச்சபுளி செல்வராஜ்க்கு, அந்தப் பாத்திரம் கிடைத்து அதிர்ஷ்டம் அடித்தது.**

**சின்னராசுவின் அம்மாவாக நடிக்கப் பெரிய இடத்தின் சிபாரிசுகளுடன் வந்திருந்தார் பத்மப்ரியா. அம்மா வேடம் என்பதால் அவர் நடிக்க மறுக்கவே, மன்ற வேலையாகப் பாக்யராஜைப் பார்க்க வந்திருந்த 'பாக்யராஜ் பெண்கள் ரசிகர் மன்றத் தலைவி' சி.ஆர். சரஸ்வதிக்கு அந்த வேடம் கொடுக்கப்பட்டதாம்.**

**மண்ணுங்கட்டி வேடத்தில் செந்தில் நடிப்பதாக இருந்தது. அவருடைய கால்ஷீட் மொத்தமாகக் கிடைக்காததால், ரசிகர்மன்ற பொதுச்செயலாளர் ஏ.ஆர். சுப்ரமணியம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.**

**ராதாவின் முறை மாப்பிள்ளையாக ஸ்டண்ட் நடிகர் ஒருவரை நடிக்க வைக்க முயன்றார் பாக்யராஜ். அது சரியாக வாராததால், நாகராஜ சோழனுக்கு அந்தச் சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டது.**

---

அலுவலை அரசர் தன்னிடம் ஒப்படைத்து விட்டாரே என்பதால் மிகுந்த மனத்தாங்கலை அடைந்த அரிஞ்சயன், பொழுது விடிந்த பிறகும்கூட மௌனமாகவே தன் குதிரையை நடத்திச் சென்றான். அவன் மனத்திலோடிய எண்ணங்களைப் பூரணமாக அறிந்து கொண்ட கரிகாலனும், அவனுடன் பேச்சுக் கொடுக்காமல் தன் சுயசிந்தனைகளில் மனத்தை அலையவிட்டு மௌனமாகவே பிரயாணம் செய்தான். ஆனால் இருவர் மௌனமும் கதிரவன் உதித்த சிறிது நேரம் வரைக்குமே நிலைத்தது. வேங்கி நாட்டு அரசியல் சிக்கல்களைப் பற்றிப் பலவிதமாக அலசிக்கொண்டு வந்த அரிஞ்சயன் மனத்தில், அரசர் திட்டம் ஒழுங்கானதுதானா என்ற சந்தேகமும் சற்று ஏற்படவே, தனது மௌன விரதத்தைக் கலைத்துக் கரிகாலனை நோக்கி, ''கரிகாலா! அரசர் உன்னிடம் சொல்லியுள்ள திட்டம் முதல் தரமானதுதான். ஆனால் அது அவ்வளவு சுலபமாக நிறைவேறக் கூடியதா?'' என்று விசாரித்தான்.

''அதைப் பற்றி நாம் ஏன் கவலைப் பட வேண்டும், அரிஞ்சயா? அரசர் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை மேலைச்சாளுக்கிய நாட்டிலிருந்து அழைத்து வர உத்தரவிட்டிருக்கிறார். அதைச் செய்து முடித்தவுடன் நமது கடமை தீர்ந்து விட்டது. மேற்கொண்டு காரியத்தைச் சாதிக்க வேண்டியது மன்னர் பொறுப்பு,'' என்றான் கரிகாலன்.

''விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை அரியணையில் ஏற்றி விட்டால், மக்கள் சும்மாயிருப்பார்களா கரிகாலா?'' என்று மீண்டும் வினவினான் அரிஞ்சயன்.

''மன்னர் அப்படித்தான் நினைக்கிறார். நினைப்பதில் தவறுமில்லை. ராஜராஜ் நரேந்திரன் பலமில்லாதவன்; வாட் போரிலும் அதிகப் பரிச்சயமில்லாதவன்; மாதர்கள் உறவிலேயே காலத்தைக் கழிப்பவன் என்றும் பெயர் இருக்கிறது. ஆனால் ராஜராஜ நரேந்திரனின் ஒன்றுவிட்ட தம்பியும் சாளுக்கிய ரத்த ஓட்டம் உடலில் பூரணமாக [illegible]வனுமான விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் பெரிய வீரன் என்று பிரசித்தி பெற்றவன். வாட் போரில் நிகரற்றவன். மாசு மறு இல்லாத நடத்தை உள்ளவனென்று

# மீசையை எடுத்தால்



'வண்ணக்கனவுகள்' படத்தில் கார்த்திக்கின் தம்பியாக நடித்திருக்கும் புதுமுகம் ஆனந்த் கிரிக்கெட் வீரர் பாரத் அருணின் சொந்தத்தம்பி.

நடிக்க ஆசைப்பட்டு 'பாலசந்தரைப் போய்ப் பார்த்தேன். அவர் அமீர் ஜானிடம் என்னை அனுப்பி வைத்தார்.

'மீசையை எடுத்துவிட்டு வா. பார்க்கலாம்,' என்றார் அமீர்ஜான். அவர் வீட்டுக்கு அருகிலிருந்த சலூனுக்குப் போய் மீசையை எடுத்துவிட்டுத் திரும்பி வந்து நின்றேன்.

ஐந்தே நிமிடத்தில் தேர்வு செய்யப்பட்டுவிட்டேன் என்கிறார் ஆனந்த்.

சார்லி எங்கே போயிருக்கிறார். எப்போது வருவார் என்பதை அறியக் கஷ்டப்பட வேண்டாம். அவருடைய அறைக்கதவில் 'புரோக்ராம்' ஒட்டியிருக்கிறது.

'காலை எட்டு மணிமுதல் மதியம் ஒரு மணி வரை பி.எஸ்.வி. கம்பெனியில் படப்பிடிப்பு. மதியம் ஒன்று முதல் மூன்று வரை ஏவி.எம்.மில் டப்பிங்க, மூன்றரை மணி முதல் ஐந்து வரை என் அறையில். ஐந்தே கால் முதல் ஆறேகால் வரை நாயர் டீக்கடை. ஆறரை முதல் ஏழரை வரை தெருச் சுற்றல். ஏழேமுக்காலுக்குப் பிறகு அறையில்'

— என்று அதில் எழுதப்பட்டிருக்கிறது.

—ராம்சந்த்

டூ! டூ! டூ! கமலஹாசன் குடும்பத்தினருக்கும் சாருஹாசன் குடும்பத்தினருக்கும் மாபெரும் டூ! இருவருக்கும் இடையில் பேச்சு வார்த்தையே நின்றுவிட்டது. அப்பா பரமக்குடி சீனிவாசன் மட்டும், இரண்டு வீட்டிற்கும் போய்வந்து கொண்டிருக்கிறார்.

ஒரு வேடிக்கை; சாருஹாசன் தம்பி சந்திரஹாசன் கமலஹாசன் பக்கம்!

---

பெயர் வாங்கியவன். இவர்கள் இருவரில் யாரை மக்கள் விரும்புவார்கள்? கண்டிப்பாய், சாளுக்கியர் இளவலைத்தான்,'' என்று கரிகாலன் பதில் சொன்னான்.

''தவறு கரிகாலா! இடையில் ஒரு முக்கிய விஷயத்தை நீ மறந்து விட்டாய்,'' என்று அரிஞ்சயன் குதிரை ஓட்டத்தைச் சற்றுத் தளர்த்திக் கரிகாலனை ஏறெடுத்துப் பார்த்தான்.

அரிஞ்சயன் எதைக் குறிப்பிடுகிறானென்பதைக் கரிகாலன் உணர்ந்து கொண்டிருந்தாலும் அதை வெளியில் காட்டாமல், ''என்ன அத்தனை முக்கிய விஷயம் அரிஞ்சயா?'' என்று கேட்டான்.

''மன்னன் மகளைப் பற்றி நீயும் மறந்து விட்டாய். மன்னரும் மறந்து விட்டார்.''

''யார்? நிரஞ்சனா தேவியா?''

''ஆம்.''

''இதில் அவர்கள் என்ன செய்ய முடியும்?''

''நீயும் மன்னரும் நினைப்பது போல் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை வேங்கி நாட்டு அரியணையில் உட்கார வைப்பது சுலபமென்றால், இத்தனை நாள் நான் அதை ஏன் செய்யவில்லை?''

''ஏன்?''

''நிரஞ்சனா தேவியிடம் மக்களுக்குள்ள எல்லையற்ற அன்புதான் அதற்குப் பெருந் தடையாயிருந்திருக்கிறது. அவள் கரம் இன்னும் ராஜாராஜ நரேந்திரனைக் காத்து நிற்கிறது. நாளையே அவள், மக்கள் முன்பாக வந்து ஜெயசிம்ம சாளுக்கியன் வேங்கி நாட்டு அரியணையில் தன் கைப் பொம்மையை அமர்த்தச் சூழ்ச்சி செய்கிறான் என்பதைச் சொன்னால் மக்கள் அவளைத்தான் நம்புவார்கள். பிறகு மக்கள் எழுச்சி நிச்சயம்! அந்த நிலைமை ஏற்படாமலிருக்கத்தான்; மன்னர் நிரஞ்சனா தேவியின் சதித் திட்டத்தை அம்பலமாக்கி மக்களிடம் அவளுக்குள்ள செல்வாக்கை உடைக்கப் பார்க்கிறார்.''

''அப்படியா விஷயம்?'' என்று ஏதுமறியாதது போல் கேட்டான் கரிகாலன்.

''ஆம் கரிகாலா! ஜெயசிம்மன் திட்டத்தில் மூன்று படிகளுண்டு.

ராஜராஜ நரேந்திரனை உபயோக மற்றவனாக அடிப்பது திட்டத்தின் முதல் படி; அது நிறைவேறி விட்டது. விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனைப் பெரிய வீரனாக்குவது இரண்டாவது படி; அந்தப் படியையும் தாண்டி விட்டோம். ஜனங்கள் தெய்வம்போல் பாவிக்கும் நிரஞ்சனா தேவியை மிகக் கேவலமான சதிகாரியென்றும் கொலைகாரியென்றும் நிரூபித்து, மக்கள் அவளை வெறுக்கும்படி செய்வது மூன்றாவது படி; அதை ஜெயசிம்மன் இன்னும் தாண்டவில்லை. அதைத் தாண்டாத வரையில் மேலைச் சாளுக்கியர்கள் ஆதிக்கம் வேங்கி நாட்டில் ஏற்படவே முடியாது. அப்படி யிருக்க, மன்னர் திடீரென்று விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை ஏன் வரவழைத்து முடிசூட்ட இஷ்டப்படு கிறார்?'' என்று கவலை தோய்ந்த குரலில் கேட்டான் அரிஞ்சயன்.

''மன்னன் மகள் சதியில் ஈடு பட்டுள்ளதற்கு அத்தாட்சி உன்னிட மில்லையா அரிஞ்சயா?'' என்று வினவினான் கரிகாலன்.

''இன்னும் பூரணமாக இல்லை. வேங்கி நாட்டுப் படைத் தலைவர்களைச் சதியில் சேர்க்க எனக்கு அனுமதியளித்து, ஓலை எழுதிக் கொடுக்கும்படி அவளைக் கேட்டேன். அவள் கொடுக்கவில்லை. கொடுத்தால் அதை அத்தாட்சியாக வைத்துக் கொண்டு பிரும்ம மாராயன் முதலானவர்களையும் விசாரணைக்குக் கொண்டு வந்து, நிரஞ்சனா தேவியின் முகத்தில் கரியைப் பூசிவிடலாமென்று தான் திட்டம் போட்டேன். ஆனால், திட்டம் பூர்த்தியாகு முன்புதான் அரசர் இப்படிக் கட்டளையிட்டு விட்டாரே!'' என்றான் அரிஞ்சயன்.

கரிகாலன் மேற்கொண்டு சம்பாஷணையை வளர்த்த இஷ்டப் படாததால், ''இதெல்லாம் பெரிய ராஜ தந்திரமாயிருக்கிறது அரிஞ்சயா! இதில் எனக்குப் பழக்கமேது? எது எப்படியாவது போகட்டும்; அரசர் கட்டளையை நாம் நிறைவேற்றுவோம்,'' என்று ஒருவித மாகச் சம்பாஷணையை முடித்துவிட்டுக் கரிகாலன் தன் எண்ணங்களை எங்கெங்கோ பறக்க விட்டான்.

உண்மையில் ஜெயசிம்ம சாளுக்கியன் தங்களை மேலைச்



சாளுக்கிய நாட்டுக்குப் போகச் சொல்லவில்லை என்பதையும் விஷ்ணுவர்தன விஜயாதித்தனை அழைத்து வரச் சொன்னதும் முழுப் பொய்யென்பதையும் அரிஞ்சயன் அறிந்தால் விவகாரம் எத்தனை விபரீதத்தில் போய் முடியும் என்பதை எண்ணிப் பார்த்த கரிகாலன், உள்ளுக்குள்ளேயே நகைத்துக் கொண்டான். ஜெயசிம்ம சாளுக்கியனும் அரிஞ்சயனும் விரித்த அபாய அரசியல் வலையிலிருந்து அரசகுமாரியைத் தான் காப்பாற்றி விட்டதை நினைத்ததால் எல்லையற்ற ஆனந்தமும் அவன் உடலில் ஊடுருவிச் சென்றது. அப்படி அரசகுமாரியைத் தான் காப்பாற்றியிருந்தாலும், தான் திடீரென வேங்கி நாட்டிலிருந்து மறைந்து விட்டதால், தன் மீது அரசகுமாரி என்ன அபிப்பிராயம் கொள்ளுவாளோ என்ற நினைப்பு அந்த ஆனந்தத்தில் சிறிதளவு துக்கத்தையும் கலந்து விட்டது. ‘‘பிரும்ம மாராயனோடு சேர்ந்து சதி செய்து ஜெயசிம்ம சாளுக்கியன் ஆதிக்கத்தை வேங்கி நாட்டில் உடைத்து விடுவேன் என்று என்னை நம்பியிருந்தாளே அரசகுமாரி. அப்பேர்ப்பட்டவன், சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விட்டானே என்று நினைக்க மாட்டாளா? அந்த நினைப்பு ஏற்படும்போது என்னைச் சதிக்குப் பயந்த பேடியென்று நினைப்பாளோ? ஜெயசிம்மன், கையாளான சுத்த அயோக்கியன் என்று நினைப்பாளோ?’ என்றெல்லாம் யோசித்த கரிகாலன், ‘‘இதற்கெல்லாம் காலந்தான் பதில் சொல்லவேண்டும்; அரசகுமாரிக்கு என் கடமையைச் செய்கிறேன்,’’ என்று தன்னைத்தானே தேற்றிக் கொண்டான்.

அந்தக் கடமை எங்கிருந்து எழுந்தது? அபலையான ஒரு பெண்ணின் அபாய நிலையினால் ஏற்பட்ட அனுதாபத்திலிருந்தா? அல்லது சதா துயரம் தோய்ந்து நின்ற அவள் அம்புஜ விழிகளிலிருந்தா? இந்தக் கேள்விகளுக்கு உண்மையான பதிலைச் சொல்லக் கரிகாலன் மனம் மறுத்தது. அவனை எப்படியோ சொக்கி மயங்கச் செய்து விட்ட அரசமகளின் சொர்ண பிம்பம் இந்தக் கடமையைத் தூண்டி விட்டதென்பதுதான் உண்மை. ஆனால், கரிகாலன் மனம் உண்மையை மறுத்தே பேசியது. ‘இல்லை, இல்லை!







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 57'ம் பக்கம்



'ரேகா' படத்தில் நடிக்கும் சந்தியா, 'புதிர்' படத்தில் அறிமுகமானார். 'அம்மன் கோயில் கிழக்காலே' படத்தில் விஜயகாந்தின் தங்கையாக நடித்த பிறகு, சந்தியாவுக்கு தமிழில் படங்கள் வரத் தொடங்கியது.

இவர் அப்பாவுக்கும் நதியாவின் அப்பாவுக்கும் ஒரு ஒற்றுமை. மகளின் படப்பிடிப்பின் போது இருவரும் கூடவே இருப்பார்கள் — மகளை 'செக்ஸி'யாகப் படம் எடுத்து விடுவார்களோ என்ற பயம்தான் காரணம்.

---

அவள் அழகின் மயக்கமல்ல கடமையைத் தூண்டியது; நிர்க்கதியிலிருக்கும் ஓர் அபலைக்கு வீரன் செய்ய வேண்டிய கடமையையே நான் செய்கிறேன்,' என்று கரிகாலன் தனக்குள்ளே சொல்லிக் கொண்டாலும், அவன் சித்தமென்னவோ அந்தச் சித்தினிப் பெண்ணின் சிற்றிடையையும் மாம்பழக் கன்னங்களையும், அவற்றையும் தோற்கடிக்கும் இதர கவர்ச்சிப் பிரதேசங்களையும் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. அடுத்த இரண்டு நாள் பயணத்திற்குள்ளாக, அரசகுமாரியின் உருவம் தத்ரூபமாக அழிக்க முடியாதபடி தன் இதயத்தில் பதிவாகி விட்டதென்பதைக் கரிகாலன் உணர்ந்து கொண்டான். அந்த உணர்ச்சியால் ஏற்பட்ட இன்ப அலைகள் உடலெங்கும் மோத, பயணத்தைச் சிறிதும் களைப்பின்றிச் செய்தான்.

மேற்குச் சாளுக்கிய நாட்டெல்லையைப் பற்றிய விவரங்கள் கரிகாலனுக்கு நிச்சயமாகத் தெரியாவிட்டாலும், சூடாமணி விஹாரத்தில் தான் கற்ற சரித்திரப் பாடங்களைக் கொண்டே அந்த எல்லையையும் போக வேண்டிய திசையையும் ஒருவிதமாக ஊகித்துக் கொண்டு, கிருஷ்ணா நதியின் கரையோரமாக, மேற்கு நோக்கிப் பயணம் செய்தான். மேற்கே செல்லச் செல்லக் கிருஷ்ணாவின் இடை குறுகி மெலிந்தாலும், பயணம் செய்த பிராந்தியங்கள் மிகத் தெய்வீகமாகக் காட்சி அளித்தன. சில இடங்களில் சாலை வெட்டும் பாறைகள், மற்றும் சில இடங்களில் கண்ணுக்கெட்டும் தூரம் பெரிய சமவெளி. இப்படிப் பலவிதமாகக்

ரூ. 25 மட்டுமே*
ஏக்கர் ஒன்றுக்கு
# நெற்பயிர் பாதுகாப்பு!

# டிமெக்ரான்

**குருத்துப் பூச்சி, கதிர் ஈ மற்றும் தத்துப்பூச்சி போன்ற உறிஞ்சும் பூச்சிகளுக்கான இணையற்றபூச்சிக் கொல்லி.**

| ஒப்பிட்டு பார்க்கவும் | டிமெக்ரான் | மற்ற பூச்சிக்கொல்லி | |
|---|---|---|---|
| | | திரவம் | குருணை |
| • குறைந்த செலவு என்பதால் இலாபகரமானது | பிரதி ஏக்கர் ரூ. 25 மட்டுமே | பிரதி ஏக்கர் ரூ. 28 முதல் ரூ. 36 | பிரதி ஏக்கர் ரூ. 100 முதல் ரூ. 250 |
| • புகையான் பல்கி பெருகுவதை முழுமையாக த்தடுக்கிறது. | ✓ | × | × |
| • பயிர்ச் சாற்றுடன் கலக்கிறது (ஸிஸ்டமிக்) மற்றும் மழைக்காலத்திலும் செயலாற்றுகிறது. | ✓ | × | × |
| • நெற்பயிரின் நாற்றுகள் செழித்து வளர உதவுகிறது. | ✓ | × | × |
| அசல் டிமெக்ரான் தனிப்பட்ட விற்பனையாளர்களின் கடைகளில் மட்டும் கிடைக்கிறது. | | | |

டிமெக்ரானையே தெளியுங்கள்

★ உள்ளூர் வரிகள் தனி




ULKA-HCGA-1-87-TAM-R



'சூரியகாந்தி' யின் சின்னம், வீரிய மிக்க பூச்சிக்கொல்லி என்பது திண்ணம். —
ஹிந்துஸ்தான் ஸிபா-காய்கி லிமிடெட

கண்ணுக்கு விருந்தளித்த தக்ஷிணத்துப் பீடபூமியில் பிரயாணம் செய்த கரிகாலனும் அரிஞ்சயனும் சரித்திரப் பிரசித்தி பெற்ற கூடல் சங்கமத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

புண்ணிய நதிகளான துங்கபத்திராவும், கிருஷ்ணாவும் ஒன்று கூடும் இடந்தான் கூடல் சங்கமம். கூடல் என்றால் இணைவதுதான்; சங்கமம் என்றாலும் இணைவதுதான். ஒன்று வடமொழி, இன்னொன்று தமிழ் மொழி. ஆனால் இரண்டு புண்ணிய நதிகள் கலப்பது போலவே இரண்டு தெய்வீக மொழிகளும் கலந்து, அந்த இடத்துக்குக் கூடல் சங்கமம் என்ற பெயர் உலவலாயிற்று.

பிற்காலத்தில் வீரராஜேந்திர சோழன் சாளுக்கியர்களை முறியடித்த அந்தக் கூடல் சங்கமத்தில் கிருஷ்ணா சற்று வடமேற்காகப் பிரிந்து விட்டதால் துங்கபத்ராவின் கரை மேல் நின்று வெகு நேரம் அந்த இணைப்பைப் பார்த்துப் பிரமித்து நின்றான் கரிகாலன். அப்பொழுது சூரியன் மலை வாயிலில் விழும் நேரம். துங்கபத்ராவின் தெள்ளிய நீர் கிருஷ்ணாவின் கலங்கிய செந்நீரில் இணைந்தாலும், அவற்றின் மீது கதிரவன் தங்கநிறப் பாளங்கள் பாய்ந்து மின்னியதாலும் ஏற்பட்ட இந்திர ஜாலத்தைக் கண்டு அதிசயத்து நின்ற கரிகாலனை நோக்கிய அரிஞ்சயன், ''கரிகாலா! நேரமாகிறது. மேலைச் சாளுக்கிய நாட்டுக்குப் போக வேண்டுமானால், நாம் சற்று மேற்கே சென்று, துங்கபத்ராவைப் படகின்மூலம் தாண்ட வேண்டும்,'' என்றான்.

கரிகாலன் சற்று நேரம் ஏதோ யோசித்துவிட்டு, ''அரிஞ்சயா! இன்று இனிமேல் பயணம் செய்ய என்னால் முடியாது. இங்கு பக்கத்து ஊரில் சத்திரம் இருந்தால் தங்குவோம்,'' என்றான்.

''இங்கு பக்கத்தில் ஊர் கிடையாது. அதோ, அந்தக் காடு தெரிகிறது பார். அது சாளுக்கிய அரச குடும்பத்தினர் வேட்டையாடும் இடம். அதற்கு அருகில் அரச குடும்பத்தினர் தங்க ஒரு சத்திரம் உண்டு. அதில் நம்மைத் தங்க அனுமதிக்க மாட்டார்கள்,'' என்றான் அரிஞ்சயன், சற்றுத் தூரத்திலிருந்த ஒரு காட்டைச் சுட்டிக்காட்டி.

''ஜெயசிம்ம சாளுக்கியனுடைய ஊழியர்களுக்கு இடமில்லை என்று யார் சொல்ல




ரேவதி ரமணி

பிலஹரியைப் பிரமாதமாகப் பொழிந்து தள்ளிக் கொண்டிருந்தார் நாயனக்காரர்.

''நாழியாகிக் கொண்டிருக்கிறது. பெண்ணைச் சீக்கிரம் வரச் சொல்லுங்கள்,'' என்று அவசரப் படுத்தினார் சாஸ்திரிகள்.

''இதோ வந்துவிடுவாள். புடவை கட்டிக் கொள்வதில் கொஞ்சம் தாமதம்,'' என்றார் மணப் பெண்ணின் பாட்டி.

''முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டேயிருக்கிறது. இதற்கே இவ்வளவு நேரம் எடுத்துக் கொண்டால் எப்படி?'' என்று சிடுசிடுத்தார் மணப் பெண்ணின் தந்தை.

''இதோ வந்து கொண்டேயிருக்கிறாள். என் பெண் காமேஸ்வரி தான் உடுத்திவிடப் போயிருக்கிறாள். அவள் கொசுவம் வைத்து, ஒன்பது கெஜம் புடவை உடுத்தி விடுவதில் கை தேர்ந்தவள் ஆயிற்றே?'' என்று உள்ளே சென்று ஒரு நோட்டம் விட்டுவிட்டு வந்த ராஜம்மா—மணப் பெண்ணின் தந்தை வழிப் பாட்டி—சற்றுப் பெருமையுடன் கூறினாள்.

''இதற்குத்தான், இதையெல்லாம் முன்னமேயே உடுத்திப்

பார்த்துப் பழகிக் கொண்டிருந்தால், இவ்வளவு கால ... தமே ஆகாது. ரோகிணிக்கு இதெல்லாம் போதாது,'' என்று குறை கூறினர் அவளது தோழிகள்.

நிமிடங்கள் கரைந்தன.

''நேரமாகிவிட்டது. **விரதத்தை இப்போது ஆரம்பித்தால்தானே, பிறகு காசி யாத்திரை, ஊஞ்சல் முடிந்து, தாலி முகூர்த்தத்திற்கு நேரம் சரியாக இருக்கும்,'' என்று உரிமையோடு கடிந்து கொண்டு பரபரத்தார் அவர்களுக்குப் பழக்கமான சாஸ்திரிகள்.**

''இதோ, இதோ வந்து விட்டாள்,'' எல்லோர் கண்களும் அவளுடன் நோக்க, உடன் பிறந்த சகோதரிகள், நாத்தனார் புடைசூழ மடிசார் புடவையில் தன் கணவர் பக்கத்தில் ஒருவித நாணத்துடன் வந்தமர்ந்தாள் மணப் பெண் சோபனாவின் தாய் ரோகிணி.

''நன்றாயிருக்குடியம்மா, கல்யாணத்திற்குப் பெண் இருக்கும் **போது அம்மாக்காரிக்கு மடிசார் வைத்துப் புடவை கட்டிக்கொள்ள தெரியவில்லையே! இந்த அதிசயத்தை நான் பார்த்ததேயில்லை!" என்று நொடித்தாள் கிராமத்திலிருந்து வந்திருந்த ஒரு வயதானப் பாட்டி!**




**உங்க மனைவி நீங்க சாப்பிட்ட பிறகுதானே சாப்பிடுவாங்க!**

**ஆமாம் சார். இரண்டாவது முறையாக.**

**—டி. ராமகிருஷ்ணன்**

முடியும்? வா, அரிஞ்சயா!'' என்று அவனை அழைத்துக் கொண்டு, அந்தக் காட்டின் முகப்பிலிருந்த சத்திரத்துக்குச் சென்றான் கரிகாலன்.

கரிகாலன் ஊகம் சரியாகவே இருந்தது. ஜெயசிம்மன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் சத்திரக்காரன் நடுங்கினான். கீழேயிருந்த அறைகளில் நல்ல அறையொன்றும் அவர்களுக்கு ஒழித்து விடப் பட்டது. குதிரைகளைக் கவனிக்கச் சத்திரக்காரன் சகல ஏற்பாடுகளையும் செய்தான். நன்றாக நீராடி உணவருந்திய கரிகாலன், சத்திரத்து நடுமுற்றத்தை அடுத்திருந்த கூடத்திலிருந்த மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டு, ''அரிஞ்சயா! இத்தனை நாளைக்குப் பின் இன்று நிம்மதியாகத் தூங்கலாம்,'' என்று சொல்லிவிட்டு மஞ்சத்தில் படுத்துக் கொண்டான். அரிஞ்சயனும் பக்கத்திலிருந்த அறைக்குச் சென்று சயனித்துக் கொண்டான்.

இரவு மெள்ள மெள்ள ஏறத் **தொடங்கியது. எங்கும் அமைதி நிலவத் தொடங்கியது. ஆனால் வேங்கி நாட்டிலிருந்து பல காதங்களுக்கு அப்பாலிருந்த அந்தச் சத்திரத்திலும் கரிகாலனுக்கு நிம்மதி** கிடைக்கவில்லை. கரிகாலன் படுத்து உறங்கிய சில நாழிகைகளுக்கெல்லாம், மாடியிலிருந்து நாலைந்து பேர் தடதடவென்று இறங்கி முற்றத்துக்காக வந்து வெளியே செல்ல முயன்றனர். வெளியேயிருந்து மிகுந்த வேகத்துடன் பத்துப் பதினைந்து பேர் உள்ளே நுழைந்து அவர்களை வழிமறித்தார்கள்.

''விலகி நில், இல்லையேல் வெட்டிப் **போடுவேன்!" என்ற ஒரு** குரலைக் கேட்டுத் திடுக்கிட்ட கரிகாலன் கூடத்துத் தூண்களில் மறைந்த வண்ணம் முற்றத்தருகில் வந்தான். அங்கே கண்ட காட்சி அவனைத் திக்பிரமையடையச் செய்தது. இரண்டு வாள்கள் சரேலென்று மோதின. ஒரு வாளைப் பிடித்திருந்த கையில் வளையல்கள் பல கலகலவென ஒலித்து அமிருதகீதம் பொழிந்தன. மெல்லிய அந்தப் பெண் கரத்தில் வீரர்களையும் நடுங்கச் செய்யும் வேகமிருந்ததையும், எதிராளியின் வாள் அவள் வாளின் உராய்விலிருந்து தப்ப முடியாமல் திணறுவதையும் கண்ட கரிகாலன், ஆச்சரியத்தால் அடியோடு செயலற்று நின்றான்.

(தொடரும்)

# மன்னன் மகள்

சாண்டில்யன்

## 27 இணையற்ற எழில் வரையற்ற உணர்ச்சிகள்

பெண் வாடை சிறிதும் படாமல், துறவிகளோடு ஒரு துறவியாய் நாகப்பட்டினத்துப் புத்த விஹாரத்தில் வளர்ந்துவிட்ட கரிகாலனுக்குக் கூடல் சங்கமத்தின் அந்தச் சத்திரத்தில் திடீரெனத் தோன்றிய அந்தப் பெண்ணின் அஞ்சா நெஞ்சமும், சாகசச் செய்கையும், சொல்லால் விவரிக்க முடியாத பெரும் விசித்திரமாயிருந்தது. அவளைத் தடுத்து நிறுத்தியவனைக் கண்டதும், அவள் கண்களில் வீசிய



கோப ஜுவாலையையும், சரேலென வாளை உருவி மின்னல் வேகத்தில் அவள் வீச முற்பட்டபோது அவள் வலக்கரம் அசைந்த உறுதியையும் பார்த்த கரிகாலன், 'இப்படியும் ஒரு பெண் இருக்க முடியுமா?' என்று பிரமித்தே போனான். பாரத நாட்டு வீரப் பெண்மணிகளைப் பற்றிச் சூடாமணி விஹாரத்தின் தலைமைப் பிக்ஷு அவனுக்கு நிரம்பப் போதித்திருந்தாலும், அந்த மாதிரி ஒரு பெண் உண்மையிலேயே இருப்பாளென்றோ, அவள் தன் கண்முன் வந்து நிற்பாளென்றோ அவன் கனவில்கூட நினைக்கவில்லையாகையால், 'ஒரு பெண் ஆபத்திலிருக்கிறாளே, அவளை நாம் காப்பாற்ற வேண்டுமே' என்ற உணர்ச்சிகூட இல்லாமல், மேலே நடப்பனவற்றைப் பார்த்துக்கொண்டு நின்றான்

அந்தப் பெண்ணின் துடிகரத்தைத் தடுத்து நின்ற வாளுக்குடையவனும் அதிக வயதானவனல்ல என்பதையும், வாலிபத்தின் வசந்தத்தில் பிரவேசித்திருந்த அவனுடைய கையும் நல்ல உறுதியுடனேயே வாளைப் பிடித்திருந்ததையும் பார்த்த கரிகாலன், அந்த இருவர் போரும் எந்தவிதத்தில் முடியுமென்பதைத் தீர்மானிக்க மாட்டாதவனாய் அடுத்த நிகழ்ச்சிகளை எதிர்பார்த்து நின்றான். அடுத்த நிகழ்ச்சிகளும் திடீரெனத் துவங்கின. அந்த அழகியின் வாள் குறுக்கே பாய்ந்து நின்றதால் தன் வாளை இழுக்க மாட்டாமல் சில விநாடிகள் தத்தளித்த அந்த வாலிபன், தன் பலம் முழுவதையும் உபயோகித்து வாளைத் திடீரென இழுத்துக் கொண்டான். அடுத்த விநாடி வாளுடன் வாள் மோதியது. வாலிபனுடன் வந்த வீரர்களும் வாளை உருவ முற்பட்டதை அந்த வாலிபன் வேண்டாமென்று சைகை செய்து அடக்கி, தன் வாளால் அவளுடைய வாளைத் தாக்கினான். அழகியின் வாள் நாலா பக்கத்திலும் கனவேகத்தில் சுழன்றதால், ஏதோ விஷ்ணு சக்கரம் சுழல்வது போன்ற பிரமையை அளித்தது கரிகாலனுக்கு. அவளுடைய வாளின் நுனி பல முறை எதிரியின் கழுத்தைத் தடவிக் கொடுத்ததன்றி, சில சமயங்களில் அவன் கண் முன்னாலும் திடீர் திடீரெனக் காட்சியளித்து மறைந்தது. அவள் வாளின் எல்லையிலிருந்து தப்ப அந்த வாலிபன் பல தடவைகள் அப்புறமும் இப்புறமும் துள்ளித் துள்ளிக் குதித்தான். சண்டை மும்முரம் ஆக அந்த வாலிபனின் அமைதி கலைந்து முகத்திலே ஆத்திரம் துளிர்த்தது. மிகக் கடுமையாகத் தாக்கத் தொடங்கிய அவனுடைய வாள் நெடுவாக்கில் அவளுடைய அழகிய மார்பகத்தை நோக்கிப் பலமுறை பாய்ந்தும் பயனற்றே போயிற்று. ஒவ்வொரு முறையும் அந்த அழகியின் குரூரமான வாள் எதிரியின் வாளைத் தடுத்து ஒரு சுழற்றுச் சுழற்றி அப்பால் தள்ளியது.

இந்தப் போரைப் பார்க்கப் பார்க்க ஆச்சரியத்துக்கே தன்னைப் பூரணமாகப் பறிகொடுத்துவிட்ட கரிகாலனுக்கு, அவளது வாள் குரூரமானதா, அல்லது வாளைவிடக் கூர்மையான அவள் விழிகள் குரூரமானவையா என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மனத்தை மயக்கும் அந்தப் பருவ மங்கையின் எழிலிலும் வீரத்திலும் மனத்தைப் பறிகொடுத்து ஏதோ




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு

சொப்பன உலகத்தில் நின்ற அவனைப் பின்னாலிருந்து காதில் ஒலித்த அரிஞ்சயன் சொற்கள் இந்த உலகத்திற்குக் கொண்டுவந்தன. வாட்களின் உராய்வால் கண்ணை விழித்துக் கொண்டு அறையிலிருந்து கூடத்துக்கு ஓடிவந்த அரிஞ்சயன் முற்றத்தில் நடந்துகொண்டிருந்த போரைக் கண்டு பிரமித்ததல்லாமல், அதைக் கண்டு வியந்த வண்ணம் தூண் மறைவில் நின்று கொண்டிருந்த கரிகாலனைக் கண்டதும் கோபமும் கொண்டு, அவனருகில் வந்து, ''கரிகாலா! என்ன பார்த்துக்கொண்டு சும்மா நிற்கிறாயே,'' என்று காதருகில் மெல்லச் சொன்னான்.

இருளின் மறைவில் நின்ற கரிகாலன், மெள்ளத் திரும்பி, ''இதில் நமக்கென்ன சம்பந்தம் இருக்கிறது அரிஞ்சயா?'' என்று வினவினான்.

அரிஞ்சயன் உதடுகள் இகழ்ச்சியாக மடிந்தன. ''நமக்குச் சம்பந்தமில்லாவிட்டால் வேறு யாருக்குச் சம்பந்தம்?'' என்று கேட்டான்.

விஷயம் புரியாமல் விழித்த கரிகாலனைத் துரிதப்படுத்திய அரிஞ்சயன், ''உம்! சீக்கிரம் இந்தச் சண்டையை நிறுத்து கரிகாலா! அந்த 'வாலிபன்தான்' விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன்! ஜெயசிம்ம சாளுக்கியன் மருமகன்!'' என்றான்.

எதற்கும் அசையாத கரிகாலன் உணர்ச்சிகளும் திடீரெனச் சாட்டையால் அடிக்கப்பட்ட குதிரையைப் போல் துள்ளியெழுந்தமையால், ''சரி அரிஞ்சயா! இந்தப் போரை முதலில் நிறுத்துவோம். ஆனால், இந்தப் பெண் யார் தெரியுமா உனக்கு?'' என்று விசாரித்துக்கொண்டே, தூண் மறைவிலிருந்து ஓர் அடி எடுத்து முற்றத்துக்காக வைத்தான்.

''தெரியாது. ஆனால், அவள் போர்க் கோலத்தையும் அவள் போராடும் திறமையையும் பார்த்தால் அவள் அரையன் ராஜராஜன் மகளாயிருக்க வேண்டும்,'' என்றான் அரிஞ்சயன்.

கரிகாலன் உணர்ச்சிகள் ஒருமுறை கொந்தளித்தன. மறுமுறை ஸ்தம்பித்தன. ''அரையன் ராஜராஜன் மகள்!'' என்று உதடுகள் முணுமுணுத்தன. ஏதோ காட்டு முகப்பிலிருக்கும் அந்தச் சத்திரத்தில் தன் கடமை விநாடிக்கு விநாடி அதிகப்பட்டு வருவதை எண்ணிப் பார்த்த கரிகாலன், ஈசுவர மாயையை நினைத்துப் பெரிதும் வியந்து, பெருமூச்சும் விட்டான். பிறகு ஏதோ நினைத்துக்கொண்டு உணர்ச்சிகளைத் தன் வசப்படுத்திக் கொண்டவனாய் முற்றத்தின் முகப்பில் வந்து நின்று, ''நிறுத்துங்கள் சண்டையை!'' என்று ஆணையும் இட்டான். மிகக் கம்பீரமாகச் சுத்தியால் தட்டப்பட்ட இரும்புச் சலாகையிலிருந்து எழும் ஒலிபோல் எழுந்து ஒலித்த அந்த இரு சொற்களின் சக்தி அற்புதமாகத் தானிருக்க வேண்டும். தன்னை அத்தனை துணிவுடன் ஆணையிடக் கூடியவன் யாராயிருக்க முடியும் என்பதைப் பார்க்க வாளைத் தாழ்த்தித் திருப்பினான் விஜயாதித்தன். அதுவரை சலிப்பின்றிப் போரிட்ட அந்தப் பெண்ணும் வாளைத் தாழ்த்தி, குரல் வந்த திசையை நோக்கினாள்.




வித்தியாசங்கள் உள்ளன. விடை: 44'ம் பக்கம்



''இந்தக் குழாயடியில, தினமும் நாலைந்து பேர் சண்டையிலே மண்டையை உடைச்சுக்குவாங்க.''

''அப்படியா?''

''ஆமாம். அதை நம்பியே எதிரில் ஒரு டாக்டர் 'நர்ஸிங் ஹோம்' ஆரம்பிச்சிருக்காருன்னா பாரேன்.''

—படுதலம் சுகுமாரன்

---

முற்றத்தின் முகப்பில் எதிரேயிருந்த தூணில் பொருத்தப் பெற்றிருந்த விளக்கின் ஒளி முகத்தில் பட்டதால், ஏதோ வெண்கலச் சிலை நிற்பது போல் குழந்தை முகத்துடன் நின்று கொண்டிருந்த கரிகாலனைப் பார்த்ததும், 'இந்தச் சிறுவனுக்குத்தான் எத்தனை துணிச்சல்!' என்று வியந்தாள். அத்தனை வியப்பிலும் அவள் கடைக்கண் மட்டும் எதிராளி திடீரெனத் தாக்கினால் என்ன செய்வது என்ற யோசனையில், அவனைக் கவனித்துக் கொண்டே இருந்தது.

விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் கண்களில் அந்த அழகியின் கண்களில் துளிர்த்த வியப்பு இல்லை. அதற்குப் பதில் உக்கிராகாரமான கோபமே தாண்டவமாடியது. கண்கள் சிவப்பேற, கடினமான குரலில் கேட்டான் விஜயாதித்தன், ''நீ யார் இதில் தலையிட?'' என்று.

''நான் ஒரு வீரன்,'' என்றான் கரிகாலன்.

''அப்படியா!'' என்ற விஜயாதித்தன் குரலில் இகழ்ச்சி கலந்திருந்தது. கரிகாலனின் குழந்தை முகத்தைப் பார்த்த அவன் கண்களிலும், அந்த இகழ்ச்சி பிரதிபலித்தது.

அந்த இகழ்ச்சியைக் கண்ட கரிகாலன் இதழ்களும், இகழ்ச்சியால் சற்றே புன்முறுவல் கொண்டன. ''ஆம். நான் வீரன்தான். ஆனால், இடைதுறை நாட்டு இளவலைப் போல அவ்வளவு பெரிய வீரனல்ல; பெண்களிடம் போரிட்டு எனக்குப் பழக்கமில்லை,'' என்றான் கரிகாலன்.

கரிகாலன் தன்னைப் பார்த்துக் கேலி செய்கிறானென்பதைப் புரிந்து கொண்ட விஜயாதித்தனுக்கு அவன் தன்னை இன்னாரென்று அறிந்து கொண்டது இன்னும் அதிக வியப்பாயிருந்தபடியால், ''நான் இன்னாரென்பது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான்.

''உங்களை அடையாளம் கண்டுபிடிக்க ஆளை அழைத்து வந்திருக்கிறேன். அரிஞ்சயா! இப்படி வா!'' என்று அரிஞ்சயனையும் முற்றத்து முகப்புக்கு அழைத்தான். கரிகாலன்.

அரிஞ்சயனைக் கண்ட மாத்திரத்தில் பிரமித்துப் போன விஜயாதித்தன், ''அரிஞ்சயா! நீ எங்கு வந்தாய்? இவன் யார்?'' என்று வினவினான்.

''இளவரசே! இவர் நமது மன்னரின் தூதர். இவர் சொற்படி நடக்கும்படி மன்னர் கட்டளையிட்டிருக்கிறார். தங்களை நாடித்தான் நாங்கள் வருகிறோம்,'' என்றான் அரிஞ்சயன்.

''அப்படியானால் இந்த வேட்டுவச் சத்திரத்துக்குள் ஏன் வந்தீர்கள்?''

''இவர் இளைப்பாற விரும்பினார்.''

''எதற்கெடுத்தாலும் இவர் இவர்! இவரென்ன பெரிய பிரபுவா?''

''இவர் யார் என்பதைப்பற்றிக்

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. குரங்காட்டி கால்
2. கறுப்புச் சட்டை
3. நிழல்
4. ஆட்கள்
5. விளக்கு
6. கட்டிடம்



கவலையில்லை இளவரசே! இவர் சொன்னபடி நாம் நடக்கவேண்டும் என்பது மன்னர் கட்டளை!''

''நாம் நடக்க வேண்டுமா! பொதுப்படையாகப் பேசுகிறாயே அரிஞ்சயா? நான்கூட இவன் கட்டளைக்கும் கீழ்ப்படிய வேண்டுமா?''

''ஆம் இளவரசே! மன்னர் கட்டளையை நிறைவேற்றவே இவர் வந்திருக்கிறார். இவர் ஆணையைத் தம் சொந்த ஆணையாகப் பாவிக்கும்படி மன்னர் என்னிடம் நேரில் சொன்னார்.''

இந்த விளக்கத்தைக் கேட்ட விஜயாதித்தன் என்ன செய்வது என்று தெரியாமல் சிறிது நேரம் விழித்ததன்றி, மனம் ஒரு நிதானத்துக்கு வராததால், காலை இப்படியும் அப்படியும் தரையில் லேசாக அசைக்கவும் செய்தான். அவன் சங்கடத்தைப் புரிந்துகொண்ட கரிகாலன், ''இளவரசே! ஆத்திரப்படாதீர்கள். மன்னர் எதையும் உங்கள் நன்மைக்காகவே செய்கிறார்; இதோ நிற்கும் இந்தப் பெண்ணின் எதிரிலும், அவளுடன் வந்திருக்கும் மற்றவர்கள் எதிரிலும், நான் எதுவும் பேச விரும்பவில்லை. நீங்கள் இப்பொழுதே துங்கபத்திரையைத் தாண்டி உங்கள் இருப்பிடம் செல்லுங்கள்; நாளைக் காலையில் தங்களை அரண்மனையில் சந்திக்கிறேன். ஏதோ நான் கட்டளையிடுகிறேன் என்று நினைக்காதீர்கள். நான் ஜெயசிம்ம சாளுக்கியனின் கருவி; அவருடைய வாளுக்கு நீங்கள் வைக்கும் மரியாதையை எனக்கு வைத்தால் போதும்,'' என்று பாதி சமாதானமாகப் பேசினாலும், அவன் குரலில் கண்டிப்பு நிறைந்திருப்பதை விஜயாதித்தன் கண்டான்.

இந்தச் சம்பாஷணையில் அரிஞ்சயனும் புகுந்து, ''இளவரசே! யோசிக்க வேண்டாம். இவர் சொல்கிறபடி செய்யுங்கள்,'' என்று வற்புறுத்தினான்.

விஜயாதித்தன் ஒரு விநாடி யோசித்துவிட்டு, ''அப்படியானால் இவள்...'' என்று முற்றத்தில் உருவிய வாளுடன் நின்று கொண்டிருந்த அழகி மீது கண்களை வீசினான்.

''அவளைப் பாதுகாத்துக்

(தொடர்ச்சி 66'ம் பக்கம்)





## யாருக்கு மதிப்பு அதிகம்?

எம். ஜி. ஆருக்கா? ஜெயலலிதாவுக்கா? சந்தேகமில்லாமல் ஜெயலலிதாவுக்குத்தான்!

எம்.ஜி.ஆர். ஓட்டுப் போட்டார். அதன் மதிப்பு 176. ஆனால் ஜெயலலிதாவின் மதிப்பு 702! ஜனாதிபதி தேர்தலுக்கு ஓட்டுப் போட்ட ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஓட்டு மதிப்பு உண்டு. அதன்படி தமிழக எம்.எல்.ஏ.க்களுக்கான ஒரு ஓட்டு மதிப்பு 176. ஒவ்வொரு எம்.பி.யின் ஓட்டு மதிப்பு 702!



ஒரு பத்து வயது

# சின்னதாய் ஒரு கொலை

பொன். அருணாசலம்

மீண்டும் அவனையே உன்னிப்பாய்ப் பார்த்தார். நல்ல உடல்வாகு. முகத்தில் நிறையக் கவர்ச்சி. கண்களில் ஆர்வம். அதன் சுழற்சியில் ஓர் இனந்தெரியாத கவர்ச்சி. ஈர்ப்பு என்று சொல்லலாமா? அதன் ஈர்ப்பில் அகப்பட்டுத்தானே அந்தப் பெண் இவனோடு ஓடி வந்திருக்க வேண்டும்?

ஓடி வருகையில் எத்தனை ஆர்வமாய் ஓடி வந்திருப்பாள்! இதோ இப்போது பக்கத்து அறையில் பிணமாய்க் கிடக்கிறாள்... உறவுகள் அற்ற அனாதை போல...

கூடாது. இவள் அனாதை யாகப் போய்விடக் கூடாது.

''இவளோட உறவுகாரங்க அட்ரஸ் கொடுங்க. அதாவது இவங்க தாய் தகப்பன் பெயர்... ஊர்...''

''சாரி சார்... நான் அந்த முகவரிகளைக் கொடுக்க முடியாது. அவள் அடிக்கடி சொல்லுவா, என்னிக்கு ஆனாலும் நான் திடீர்னு செத்துப் போனாக்கூட என்னோட முகத்துல அவங்க விழிக்கக் கூடாதுன்னு...''

''பரவாயில்லை. நீங்க முதல்ல அவங்க அட்ரஸ் கொடுங்க.''

கதிர்வேல் உள்ள போய்ச் சில காகிதங்களை எடுத்துக்கொண்டு வந்து அவரிடம் கொடுத்தான்.

இன்ஸ்பெக்டர் அதை வாங்கிக் கொண்டார் மீண்டும் உள்ளே போய், இறந்துபோய்க் கிடந்த அந்தப் பெண்ணை ஒரு தடவை பார்த்தார்.

தலைமுடி கலைந்துபோய்



# இனிய நல்லிசையைக் கேட்டு இணைந்து பாடத்தூண்டும்...

நியூ

# மெல்ட்ராக்

## கேசட்டுகள்

### அலை ஒலிக்கு உயிரூட்டுகின்றன

இப்போது ஜப்பானிய தரத்திற்கு ஈடான இந்திய கேசட் டேப். அதனால்தான் ஒவ்வொரு முறையும் நீங்கள் பதிவு செய்யும் போது உன்னதமான ஒலிநயப்பாடு கிடைக்கின்றது...

- ♫ ஒருசீராகப் பரப்பப்பட்ட காந்தத் துகள்கள் முழுமையான ஒலிக்கு உறுதியளிக்கின்றன.
- ♫ மிக உயர்ந்த விறைப்பாற்றலுள்ள பாலியெஸ்டர் பிலிம் பேஸ் (அடித்தளம்) உள்ளதால், இது நீளாது; அறுந்து போகாது.
- ♫ விசேட பொருட்களால் காந்தத் துகள்கள் பிணைக்கப்பட்டிருப்பதால், அது உரிந்து போகாது; ரெகார்டிங் இயந்திரத்தில் சிக்கிப் பழுதடையாது.
- ♫ துல்லியமான ஷெல் மற்றும் உறுப்புகள் டேப்பின் உராய்வைக் குறைத்து, அது சிக்கிக் கொள்வதைத் தடுக்கின்றன.
- ♫ கடுமையான தரப் பரிசோதனைகள் உன்னத கேசட்டுக்கு உறுதியளிக்கின்றன.

இவையனைத்தும் சகாய விலையில் நாடெங்கும் கிடைக்கின்றன: உங்கள் அபிமான கலைஞர்களின் குரலைப் பதிவு செய்யுங்கள். இன்னிசையின் அசலான ஒலிநயத்தைக் கண்டுகொள்ளுங்கள்!




**ஜப்பானியத் தொழில் நுட்பத்தால் உருவானவை**




**MURUGAPPA ELECTRONICS LTD.**

முருகப்பா எலக்ட்ரானிக்ஸ் லிட்
பாரி ஹவுஸ், 3வது மாடி
43-மூர்தெரு, சென்னை 600 001

LINTAS M MLT 5 1913 TM

(47'ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டு வரவேண்டியது என் பொறுப்பு,'' என்றான் கரிகாலன்.

விஜயாதித்தன் முகத்தில் நம்பிக்கை சிறிதும் உதிக்கவில்லை. நன்றாக நீண்ட முகவாயுடனும் மிகக் கூரிய நாசியுடனும் அறிவுக் களை சொட்டிய அவன் முகத்தில் குழப்பமும் அதிகமாக ஏறிக்கொண்டது. ''பதினைந்து வீரர்களுடன் வந்திருக்கும் என்னையே லட்சியம் செய்யவில்லை இவள்! உன்னை ஒரு பொருட்டாகக் கருதுவாளா!'' என்று கேட்டான் விஜயாதித்தன்.

''இளவரசே! நீங்கள் போரிட்டீர்கள். பெண்களைக் கோபத்தால் வசப்படுத்த முடியாது. அன்பினால் வசப்படுத்தலாம். நீங்கள் பயப்படாமல் போய் வாருங்கள். இந்தப் பெண்மணியை நான் கவனித்துக் கொள்கிறேன்,'' என்று உறுதி கூறினான் கரிகாலன்.

கரிகாலன் எந்தத் தைரியத்தில் அவ்விதம் உறுதியளிக்கிறான் என்பதைப் புரிந்து கொள்ளாததால், அரிஞ்சயன் மிரண்டு விழித்தான். அவன் வாயைத் திறக்குமுன்பாக விஜயாதித்தன் பேசத் தொடங்கி, ''அப்படியானால் இப்பொழுதே இவளை அன்பினால் வசப்படுத்தி அழைத்துக் கொண்டு என்னுடன் வா,'' என்றான்.

''இன்றிரவு நாங்கள் சத்திரத்தை விட்டு நகர முடியாது இளவரசே! நாங்கள் வேங்கி நாட்டிலிருந்து இடைவிடாது பயணம் செய்து களைத்திருக்கிறோம். உங்கள் வீரர்களில் நால்வரை மட்டும் என்னுடன் நிறுத்திவிட்டு மீதிப் பேரை அழைத்துக் கொண்டு நீங்கள் செல்லுங்கள். மீதி விஷயத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்,'' என்ற கரிகாலன், விஜயாதித்தன் மீண்டும் ஏதோ வாயைத் திறக்க முற்பட்டதைக் கண்டு, ''இளவரசே! மேற்கொண்டு தர்க்கம் செய்ய வேண்டாம். இரவு முழுவதும் இந்த முற்றத்திலேயே நின்று காலம் கழிக்க முடியாது,'' என்று சற்றே அதட்டலாகச் சொல்லிவிட்டு, ''அரிஞ்சயா! அந்தப் பெண்ணின் வாள் அவளிடமே இருக்கட்டும்; அவளுடன் வந்திருக்கும் நால்வரின் வாட்களையும் எடுத்துக் கொள்,'' என்று உத்தர விட்டான்.

அந்தக் குரலிலும் அந்தத் தோரணையிலும் கீழ்படியச் செய்யவல்ல ஏதோ ஒரு மாபெரும் சக்தி இருந்திருக்க வேண்டும். அந்த வீரப் பெண்மணியுடன் வந்த வீரர்கள் மறுவார்த்தை பேசாமல் வாட்களை அரிஞ்சயனிடம் கொடுத்தார்கள். யாருக்கும் கீழ்ப்படிந்து அறியாத விஜயாதித்தன்கூடக் கரிகாலன் சொன்னபடி நான்கு வீரர்களைச் சத்திரத்தில் காவலுக்கு இருக்கச் சொல்லிவிட்டு, மற்றவர்களுடன் வாயிலை நோக்கி விரைந்து சென்றான்.

விஜயாதித்தன் சென்றதும், கரிகாலன் முற்றத்திலே நின்ற அந்த அழகிக்காகக் கண்களைத் திருப்பி, ''அம்மணி, நீங்கள் மாடியில் உள்ள அறைக்குச் செல்லுங்கள். இன்னும் சில விநாடிகளில் தங்களைச் சந்திக்கிறேன்,'' என்று கூறிவிட்டு, மாடிப்படிகளுக்காகக் கையைக் காட்டினான்.

''நீ யார் எனக்குக் கட்டளையிட?'' என்று உக்கிரமாகக் கேட்டாள் அவள்.

''இதைத்தான் இளவரசரும் சற்று முன்பாகக் கேட்டார். அவரே நான் சொன்னதற்குக் கீழ்ப்படிய வில்லையா? தயவு செய்து மாடிக்குச் செல்லுங்கள். இது கட்டளையல்ல அடியவன் கோரிக்கை!'' என்றான் கரிகாலன்.

அவன் உண்மையாகத்தான் பேசுகிறானா, அல்லது தன்னைப் பார்த்துக் கேலி செய்கிறானா என்பதை அறியாததால் ஒரு கணம் கூர்ந்து அவனை நோக்கிய அந்தப் பெண்,



"என்ன இன்ஸ்பெக்டர் பிரேதத்தோடு பேசிட்டு இருக்கார்?"

"பிரேத விசாரணை செய்றாராம்!"

—கடுவை கோபால்சாமி

அடுத்த விநாடி மறுமொழி பேசாமல் மாடிப் படிகளின் மீது மெல்ல ஏறி நடந்தாள்.

அடுத்தபடியாக எழுந்த கரிகாலன் சொற்களில் திட்டமான உத்தரவு இருந்தது. ''அரிஞ்சயா! நமது வீரர்களில் இருவர் சத்திரத்து வாயிலையும், இருவர் புழக்கடைக் கதவையும் காக்கட்டும். நீ கூட்டத்திலே படுத்துக்கொள். நான் சென்று அந்தப் பெண்ணை எச்சரித்து, அவள் வாளையும் வாங்கி வருகிறேன்,'' என்று கூறிவிட்டு மாடிப் படிகளில் ஏறிச் சென்றான்.

சத்திரத்து மாடியில் அறைகள் இரண்டே இருந்தன. அவற்றிலொன்று பூட்டப்பட்டிருந்ததால் மற்றொன்றில் அப்பெண் இருப்பாளென்று தீர் மானித்துக் கொண்டு கரிகாலன் அந்த அறையின் கதவைத் தொட்டான். கதவு தாளிடப்படாததால் சுலபமாகவே திறந்தது. உள்ளே நுழைந்து இரண்டு அடிகள் எடுத்து வைத்த கரிகாலன், சற்றுத் தூரத்திலிருந்த தோற்றத்தைக் கண்டு பிரமை தட்டி நின்றான். முற்றத்திலே நடந்த சண்டையாலும், அங்கு ஏற்பட்ட சிக்கலை அவிழ்க்க முற்பட்டதால் சித்தம் வேறு அலுவல் களில் சிக்கிக் கிடந்ததாலும், கரிகாலன் அந்தப் பெண்ணைச் சரிவரக் கவனிக்கவில்லை. ஆனால் அந்த அறையின் தனிமையில் உலாவிய அமைதியில், அவள் இருந்த நிலை அவன் மனத்தைச் சுக்கல் சுக்கலாகப் பெயர்த்தெடுக்கத் தொடங்கியது. அவள் அப்பொழுதுதான் தன் காலிலிருந்த மான்தோல் கச்சையை அவிழ்க்க ஒரு காலைத் தரையில் ஊன்றி, மற்றொரு காலைக் கட்டிலின்மேல் வைத்திருந்தாள். அதுவரை அவள் தோளைத் தழுவியிருந்த புலித் தோல் அங்கியும் கழற்றி விடப்பட்டிருந்தது. அந்தப் பெண்ணின் இந்தத் தோற்றத்தைக் கண்ட கரிகாலன் உள்ளம் எங்கோ வானில் பறந்து கொண்டிருந்தது. அவளுடைய இணையற்ற எழில் அதுவரை தேங்கி நின்ற அவன் உணர்ச்சிகளின் கரையை உடைத்து வரையற்றுப் பிரவாகிக்கச் செய்யவே, எந்த உலகத்தில் இருக்கிறோம் என்பதை அறியாமல், திணற ஆரம்பித்தான் கரிகாலன்.

(தொடரும்)

## சோழன் அனுப்பிய மணி ஆர்டர்



### சோழனின் பெருந்தன்மை

நான் வெளியூர் சென்றிருந்த சமயம் சோழன் பஸ்ஸில் பயணம் செய்தேன். டிக்கெட் வாங்கும் போது மீதி 5 ரூபாய் தராமல் கண்டக்டர் டிக்கெட்டில் எழுதிக் கொடுத்தார். ஆனால் நான் மறந்து வீட்டுக்கு வந்துவிட்டேன். ஆனாலும் அந்த டிக்கெட்டைச் சோழன் நிர் வாகத்திற்கு (குடந்தை) அனுப்பிப் பணம் கேட்டிருந்தேன். அந்தப் பணத்தை நானே மறந்துவிட்ட போது 5 ரூபாயை சோழன் M.O. வில் அனுப்பிவிட்டது. வாங்கியது 5 ரூபாய்தான் என்றாலும் சோழனின் நன்னடத்தையை நினைத்தபோது எனக்கும்கூட அதில் பெருமையாக இருந்தது.

சுந்தரம், அரியலூர்,

### வாழ்விலே ஒரு நாள்

ஒரு முக்கிய நிகழ்ச்சியைப் படம் பிடிக்க வேண்டியிருந்தது. சென்னை பர்மா பஜாரில் ஜப்பான் ஃபிலிமான 'சகூரா கலர் ஃபிலிம்' ஒன்று 45 ரூபாய்க்கு வாங்கினேன்.

நிகழ்ச்சியைப் படம் பிடித்துப் பிரிண்ட் போட்டுப் பார்த்தால் படங்கள் மிக மோசமாக இருந்தன. 'சகூரா'வின் படங்கள் அப்படி இருக்காது. ஃபிலிமைப் பார்த்தபோது உண்மை விளங்கியது. அது 'சகூராவின் படச்சுருள் அல்ல! இந்தியாவின் தயாரிப்பான ஒரு மட்டமான ஃபிலிம்! ஃபாரின் படச்சுருள் குப்பிக்குள் இந்தியப் படச்சுருளை எப்படித் திணித்தார்களோ!

திருமணம், சடங்கு போன்ற மிக முக்கியமான நிகழ்ச்சி களை—வாழ்க்கையில் மீண்டும் ஒரு முறை நிகழ முடியாத சம்ப வங்களைத்தான் படம் பிடிக்கின் றோம். அதில் இப்ப டித் துரோகம் செய்ய லாமா?



ப.மு. யூசுப், சென்னை—12

# நலம்பெற

என்னுடைய வயது 37. கடந்த 17 வருடங்களாய் ஆஸ்த்மா வினால் மிகவும் கஷ்டப்படுகிறேன். வருடம் முழுவதும் தினமும் வருகிறது. எனக்கு 3 குழந்தைகள். என்னுடைய கணவர் முனிசிபல் பள்ளி ஆசிரியர். நான் பார்க்காத வைத்தியமில்லை. ஒன்றுக்கும் கட்டுப்படாமல் புரியாத புதிராய் உள்ளது. என் கணவரும் சக்திக்கு மீறிச் செலவு செய்தும் நிம்மதியில்லை. 82'ம் வருடம் ஸ்டேடஸ் ஆஸ்த்மா ஆகி மறுபிழைப்பு பிழைத்து எழுந்தேன். திரும்ப இந்த வருடம் கடந்த மே மாதம் முதல் ரொம்ப ஜாஸ்தியாகிக் கஷ்டப்படுகி றேன். நரம்பு ஊசி போட்டுப் போட்டுக் கையெல்லாம் காய்த்து விட்டது. ஒரு நாளைக்கு இத்தனை ஊசி என்று கணக்கே கிடையாது. என் குழந்தைகள் என் நிலைமைப் பார்த்து மிகவும் பயந்து இருக்கிறார்கள். ஒவ்வொரு அட்டாக் வரும்போது ஒரு கண்டமாய் உள்ளது. என் உடல்நிலை நன்கு குணமடையப் பிரார்த்திக்குமாறு பிரார்த்தனை கிளப் அங்கத்தினர்களை இரு கை குவித்து வேண்டிக் கொள்கிறேன்.

—வி. மஹாலக்ஷ்மி, 4-9-12/1, IInd Marata Street, Greamspet, Chittor (AP).

முப்பது தினங்கட்கு முன் என் கணவர் சுகுமாரன் நாலு ரோடு சாலையில் சைக்கிளில் சென்று கொண்டிருந்தபோது சோழன் போக்குவரத்து பஸ்ஸில் அடிபட்டு விழுந்துவிட்டார். மண்டையில் அடிபட்டு நினைவிழந்த நிலையில் அரசு பொது மருத்துவ மனையின் மருத்துவர்கள் தஞ்சை மெடிக்கல் காலேஜுக்குச் சிபாரிசு செய்தனர். மண்டையில் தையல் போடப் பட்டுள்ளது. தன் நினைவு சிறிதும் இன்றி, கண்ணைத் திறக்காமல் ஆகாரம் மூக்கின் வழியாக டியூப் மூலம் இறங்கும்படியாக இருக்கிறார். எனக்கு நண்டும் சிண்டுமாக நான்கு குழந்தைகள். லாட்டரி சீட்டு விற்பனை மூலம் அன்றாட வாழ்க்கை நடத்தி வந்த நாங்கள், செய்வதறியாமல் இருக்கிறோம். டாக்டர்கள் அவருக்குச் சுயநினைவு தரப் பாடுபடுகின்றனர். அவர் உடல் குணமாகித் தன் சுய நினைவு திரும்பி முன்போல் எழுந்து நடமாடப் பிரார்த்தனை செய்யுமாறு குமுதம் பிரார்த்தனை கிளப் உறுப்பினர்களைப் பிரார்த்திக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

—மல்லிகா சுகுமாரன், 4, நாட்டு வைத்தியர் சந்து, பாணுதுறை வீதி, கும்பகோணம்.

பிரார்த்தனை கிளப்

# வேண்டும்



சித்தூர் கிரீம்ஸ்பேட் மகாலக்ஷ்மிக்கு ஆஸ்த்மா குணம் அடையவும், கும்பகோணம் சுகுமாரனுக்குச் சுய நினைவு திரும்பி நலம் பெறவும் பிரார்த்திக்குமாறு குமுதம் பிரார்த்தனை கிளப் உறுப்பினர்களைக் கேட்டுக்கொள்கிறோம். பிரார்த் தனை நேரம்: 2.8.87 ஞாயிறு காலை 7 மணி.




13.8.87

## 28. செங்கமலச் செல்வி

அரச பரம்பரையினர் வேட்டையாடுவதற்காக மேலைச் சாளுக்கிய மன்னர்கள் துங்கபத்ராவின் காட்டு முகப்பிலே கட்டிவைத்த அந்த வேட்டுவ மாளிகையின் மாடியறையிலே, முதன் முதலாக அந்தக் கட்டழகியைக் கண்ணெடுத்து ஆராய்ந்த கரிகாலனின் மனம் படாதபாடு பட ஆரம்பித்தது. அவள் ஒரு காலை எடுத்துக் கட்டிலின் மேல் ஊன்றி, முழங்காலுக்குக் கீழும் கணுக்காலுக்கு மேலும் கட்டப்பட்டிருந்த மான்தோல் கச்சையை அவிழ்க்க முற்பட்டுக் குனிந்து நின்றிருந்ததால், அவள் உடல் வானவில்லைப் போல் வளைந்திருந்தது. 'ஆனால் சிறு தூற்றல் ஏற்படும்போது சூரியக் கிரணங்களால் உதயமாகும் அந்த வானவில்லில் இத்தனை வர்ண ஜாலங்கள் எங்கேயிருக்கின்றன,' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்ட கரிகாலன், 'ஒருகாலும் இல்லை,' என்ற முடிவுக்கே வந்தான். தான் உள்ளே வந்த

சத்தம் கேட்டுத் திடீரெனத் திரும்பிப் பார்த்ததால், அவள் விழிகளில் தெரிந்த பிரகாசத்தில் ஓர் இம்மிகூட வான வில்லில் என்ன, இயற்கையின் எந்தச் சிருஷ்டியிலும் இருக்க முடியாது என்று கரிகாலன் நினைத்தான்.

கட்டிலின்மேல் வைத்த ஒற்றைக்காலை எடுக்காமலே, அவள் அவனைப் பக்கவாட்டில் பார்த்த படியாலும் அறையின் தூங்காவிளக்குச் சற்று அவளைத் தள்ளியே தொங்கிக் கொண்டிருந்தபடியாலும், விளக்கின் வெளிச்சம் அவள் முகத்தின் ஒரு பாகத்தில் மட்டும் அடித்தது காரணமாக, ஏதோ செடிகளில் மறைந்து ஒளிந்து விளையாடி ஒரு பாதி முகத்தைக் காட்டும் வனமோகினி போல் விளங்கினாள் அந்தக் கட்டழகி. செண்பகப் பூவின் மஞ்சள் நிறத்தையே தோற்கடிக்கவல்ல அவளுடைய கன்னத்தைத் தடவிய விளக்கொளிகூட அந்தக் கன்னத்தின் மினுமினுப்புக்கு முன்னால் பளபளக்கமாட்டாமல் சற்று மங்கியே கிடந்ததாகத் தோன்றியது கரிகாலனுக்கு. கருமை பாய்ந்த இமைகளாலும் இமைகளுடன் இணைந்து நின்ற சின்னஞ்சிறு பட்டுச் சருமக் குழிகளாலும் பாதுகாக்கப்பட்ட அவளுக்கு இரு விசால விழிகளும் சிப்பியால் பாதுகாக்கப்பட்ட பாண்டி நாட்டின் பெருமுத்துக்களைப் போல் பளபளப்பதைக் கண்ட கரிகாலன், 'முத்தினிடையே கரும் புள்ளி இருந்தால் குறைபாடு என்று சொல்வார்களே, அது என்ன முட்டாள்தனம்! அதோ அவள் இமைக்குள்ளே பதுங்கிக் கிடக்கும் இரண்டு பெரும் முத்துக்கள் எத்தனை அழகாக இருக்கின்றன!' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். இப்படி ஒரு முறை பார்த்த பார்வையிலேயே அவள் கண்களால் பலவந்தமாக இழுக்கப்பட்ட கரிகாலனின் விழிகள், பெரிய சமுத்திரத்தில் விழுந்துவிட்ட துரும்புகள் போல அவளுடைய சௌந்தரிய சாகரத்தின் சுழல்களில் சிக்குண்டும் அலைகளால் தூக்கி எறியப்பட்டும் திணறின.

அவள் விசாலமான நெற்றியில் இட்டிருந்த திலகம் வேட்டையாடிய காரணமாகச் சிறிது அழிந்து கிடந்தாலும் அதிலும் ஒரு தனிச்சிறப்பு



''யார் வந்தாலும் வாலை ஆட்டாதேன்னு சொன்னால் கேட்கிறதில்லை. இப்ப வந்து வாலை வலிக்கிறதுன்னு சொன்னால் என்ன அர்த்தம்? அமிர்தாஞ்சனம் எடுத்திட்டு வா, தேய்ச்சு விடறேன்.''

இருந்ததையும், அது அழிந்து சற்றுக் கீழே இறங்கியிருந்த வகையே முகத்துக்கு இணையற்ற கம்பீரத்தைக் கொடுக்க முற்பட்டதையும் கண்டான் கரிகாலன். அந்த நெற்றிக்குமேலே அவள் எடுத்துக் கட்டியிருந்த கார்மேகக் குழல் தன்னை வளைத்து நின்ற கதம்ப மலர்ச் சரத்தைப் பல இடங்களில் ஊடுருவி உதிரி உதிரியாகத் தொங்கிக் கொண்டிருந்ததால், சிவபிரானுடன் நாட்டியமாடிக் களைத்துவிட்ட சக்தியே இந்த உலகத்தில் வந்து குதித்து விட்டாளோ என்ற பிரமையை ஏற்படுத்தியது. வழவழப்பும் செழுமையும் நிரம்பிய அவள் கன்னங்களின் ஓரங்களைத் தொட்டவண்ணம், செண்பக மொட்டையும் பழிக்கும் நாசிக்கும் கீழே அமைந்திருந்த செவ்விய உதடுகள் இருக்கவேண்டிய அளவுக்கு மேல் கொஞ்சம் பெரிதாயிருந்தபடியாலும் அவற்றின் அசாத்தியச் சிவப்பை அவற்றிலிருந்த நீரோட்டம் இன்னும் அதிகமாகக் காட்டியபடியாலும் இரண்டு உதடுகளும் பிரமாத நீரோட்டமுள்ள கெம்புக் கற்களின் வரிசையைப்போல் பிரகாசிப்பதைக் கரிகாலன் கண்டான்.

உறுதியாக அழகாகக் கீழ்நோக்கி இறங்கிய கழுத்தில், அவள் அதிக நகைகளை அணியாமல் ஒரே ஒரு முத்து மாலையை மட்டுமே அணிந்திருந்தாள். அதைக் கண்ணுற்ற கரிகாலன், அவை செய்த பாக்கியத்தை எந்தப் புருஷன் செய்திருக்கிறானோ என்று நினைத்து, அந்த நினைப்பின் காரணமாக ஒருமுறை பெருமூச்சும் விட்டான்.

வளைந்த அவள் உடலின் விலாப்புறத்தில் தெரிந்த அவளுடைய இடையின் உறுதியைக் கவனித்த கரிகாலன் அந்தப் பெண் சதா போர்ப் பயிற்சியிலும் வேட்டையிலும் காலத்தைச் செலவிட்டிருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டதோடு, அத்தனை திண்மையிலும் அந்த இடை மிகவும் குறுகிக் கிடந்ததைப் பார்த்து, ‘நல்ல வேளை! இத்தனை போர்ப் பயிற்சியிலும் பெண்மை குன்றவில்லையே,’ என்று சந்தோஷப் பட்டுக் கொண்டான்.

ஆனால், குறுகிப் போன இடையை இயற்கை வேறு இடங்களில் ஈடு செய்திருந்ததையும், இடையை அடுத்து இலங்கிய பிரதேசங்களில் அளவோ அழகோ இம்மியும்






● பாராட்டுங்கள். யாருக்கும் பாராட்டுப் பிடிக்கும். திருப்பி உங்களைப் பாராட்டுவார்கள்.

மரியாதை கொடுங்கள். திருப்பி மரியாதை கொடுப்பார்கள். வாழ்க்கை சுலபமாக இருக்கும்.

உதவுங்கள். வெற்றிக்கு முதல்படி அது.

உற்சாகமாயிருங்கள். உலகத்தில் ஏற்கெனவே இருக்கும் உம்மணாமூஞ்சிகள் போதும்.

பொறாமைப் படாதீர்கள். மற்றவரைக் காட்டிலும் —அல்லது அவருக்கு சமமாகவேணும்—உங்களாலும் செயலாற்ற முடியும்.

—பெர்னால்டு பரூக்

● நீச்சல் உடைக்கும் அரசாங்கத்துக்கும் உள்ள ஒற்றுமை: எது அதைப் பிடித்துக்கொண்டிருக்கிறது என்று சில பேருக்கு ஆச்சரியம். எப்படி அது விழாமல் இருக்கிறது என்று சில பேருக்கு ஆச்சரியம்.

—லிபான்ஸ்

● ஞாபக சக்தி என்பது இதயத்தைப் பொறுத்தது. ஒரு பெண்ணுக்கு, அவளுடைய வாழ்க்கையில் நிகழ்த மகத்தான சம்பவங்கள் நினைவிருக்காது. ஆனால் இருதயத்தைத் தொட்ட சின்ன நிகழ்ச்சிகளை ஆயுள் உள்ளவரையில் நினைவில் வைத்திருப்பாள்.

—பால்ஸாக்

குறையாமல் எதேஷ்டமாக மண்டிக் கிடந்ததையும் கண்ட கரிகாலன், இயற்கையைவிடச் சிறந்த வள்ளல் யாரும் இருக்க முடியாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

இயற்கை செப்பனிடும் எதிலும் மர்மமும் புதைந்து கிடக்கிறது. வெளிப்படையாகச் சிலவற்றையும் மர்ம மாகச் சிலவற்றையும் தோற்று விக்கின்றன இயற்கையின் காட்சிகள். மேகத்தைச் சிருஷ்டிக்கும் இயற்கை அதன் கருமையைக் கண்ணுக்குக் காட்டுகிறதேயொழிய, அதில் கர்ப்ப மாயிருக்கும் நீரைக் கண்ணுக்கு தோற்று விப்பதில்லை. உலகத்தின் சிருஷ்டி எதிலும் தெரிவது பாதி, தெரியாதது பாதி. தெரிந்ததை மட்டும் அறிந்து திருப்தி அடைகிறான் அறிவு குறைந்தவன்; ஆராய்ச்சிக்காரன் தெரியாததிலும் ஊகத்தைச் செலுத்த முற்படுகிறான். அந்த ஊகத்திலும் ஆராய்ச்சியிலும் விளையும் இன்ப துன்பங்கள் அனந்தம். சில ஆராய்ச்சிகளில் துன்பமும் இன்ப மாயிருக்கும். இன்பமும் துன்ப மாயிருக்கும். இணையற்ற இன்பத்தையும் வேதனையையும் கலந்து தருவது எழில் ஆராய்ச்சி. அதுவும் பெண்ணின் எழிலில் ஓர் ஆண்மகன் ஊகத்தைச் செலுத்தும்போது; எத்தனை மனவேதனைகள்! எத்தனை இன்ப அலைமோதல்! எத்தனை கொந்தளிப்பு! சொல்லுக்கே அடங்காத மகா விசித்திரம் அது!



''என்னது, உங்க மானேஜர் முண்டாசு கட்டியிருக்கிறார்?''

''அவர் காதிலே மாட்டியிருக்கிற ஹியரிங் எய்டை யாரும் பார்க்காமல் இருக்கத்தான்!''

-எம். பூங்கோதை.

வேட்டையாடும் யானைகளின் துதிக்கையைப் பழிக்கும் அவள் அழகிய தொடைகளுக்குக் கீழேயிருந்த முழங்காலையும், முழங்காலுக்குக் கீழேயிருந்த ஆடு சதை அமைந்து இறங்கிய மாதிரியையும் கவனித்த கரிகாலன், இவற்றுக்கெல்லாம் கவிகள் சொன்ன உவமை சரியா என்றுகூட யோசித்தான். 'யானைத் துதிக்கையின் கடினம் எங்கே? இவற்றின் வழவழப்பு எங்கே? கவிகள் எத்தனை குருடர்களா யிருந்திருக்கிறார்கள்!' என்று கவிகளைக் கண்டிக்கவும் தொடங்கினான். இந்தக் கண்டிப்புடன் ஓடிய கரிகாலன் கண்கள், அவள் இடையில் வரிந்து கட்டப்பட்டிருந்த சேலையைக் கண்டன. மனமோ 'எதற்காக இவ்வளவு வரிந்து கட்டவேண்டும்? பூவைவிட மென்மையான இடை கன்றிப் போகாதா?' என்று கோபத்தால் கொந்தளித்தது. இப்படி எழிலை ரசிக்க அக்கக்காக அலசியதால் அவன் உணர்ச்சிகள் கனவேகத்தில் சுழன்றன. உயிர் அணுக்கள் ஊசி முனையில் நின்றன.

கால் கச்சையை அவிழ்க்க முயன்று அவனை நோக்கித் திரும்பிய அந்தப் பெண், அவன் கலக்கத்தை ஒரு நொடிப் பொழுதில் கண்டு கொண்டாளானாலும், அதைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல் கால் கச்சைகளை நிதானமாகவே அவிழ்த்து முடித்தாள். தோளிலிருந்த புலிக்கச்சை யையும் எடுத்துவிட்டுச் சேலையைப் பிரித்து உடலை மூடிக் கொண்டதால், முழுப் பெண் உருவம் கரிகாலன் கண்ணுக்கெதிரே எழுந்தது. அவள் நிதானமாகத் தன் வேட்டுவக் கோலத்தைக் களைந்து, அவனை நோக்கி ஒருமுறை புன்முறுவல் செய்துவிட்டுக் கட்டிலில் உட்கார்ந்து கொண்டவள் எதிரே ஓர் ஆண்மகன் நிற்கிறானே என்ற நினைப்புச் சிறிதும் இல்லாமலும், அவனை உட்காரக்கூடச் சொல்லாமலும், ''சரி, வந்த விஷயத்தைச் சொல்லுங்கள்,'' என்று கட்டளையிடும் தோரணையில் பேசினாள்.

304

கவிஞரின்
நெஞ்சக் கற்பனை
காகித மீது:
டிசைன் கலைஞரின்
நெசவுக் கற்பனை
நிகரிலா நேர்த்திப்
பருத்தித்
துணிமீது.

பருத்தி
பேண்ட்டீஸ்
மாதர் ஜட்டி
படைப்பு:
விஐபி

VIP

feelings

Avenues HH 524 87R

306

அவள் தன் கையில் பூரணமாகச் சிக்கியிருந்த நேரத்திலும், அத்தனை தைரியமாகத் தன்னை ஓர் அடிமைபோல் பாவித்துப் பேசியதைக் கண்ட கரிகாலன் இதழ்களில் புன்முறுவலொன்று அரும்பியது. அவன் அப்படிப் புன்முறுவல் செய்யும் நேரங்களில் அவன் முகத்தில் உதயமாகும் விஷமம் அந்தச் சமயத்திலும் உதயமாகியதைக் கண்ட அந்தப் பெண் சற்றுக் கோபமே அடைந்து, ''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள், நான் பெண்தான்,'' என்று கூறினாள் குரலில் லேசாகக் கோபம் தொனிக்க.

''உடை மாற்றத்துக்குப்பின் அந்த உண்மை தெளிவாகப் புலப்படுகிறது...'' என்று இழுத்தான் கரிகாலன்.

''அதற்கு முன்பு ஆண் பிள்ளையென்று நினைத்தீர்களோ?''

''இல்லை; அப்படி நினைக்கவில்லை.''

''ஏன்?''

''எந்த ஆண் பிள்ளைகளுக்கும் இத்தனை துணிவு கிடையாது. சற்று முன்பு ஓர் ஆண்மகன் தங்களிடம் அகப்பட்டுத் திணறியதைக் கவனித்தேன்.''

''அப்படியானால் என்னை யாரென்றுதான் நினைத்தீர்கள்?''

''எதுவும் நினைக்க முடியவில்லை. புரியாத பெரும் புதிராய் இருக்கிறீர்கள் நீங்கள். நான் ஏதோ இந்தச் சத்திரத்தில் இராப்பொழுதைக் கழிக்கலாமென்று வந்தேன். இங்கு நீங்கள் ஓடிவருவதும், உங்களை மடக்க விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் படையைத் திரட்டிக் கொண்டு வருவதும் எல்லாமே ஏதோ புராணக் கதை போலிருக்கிறதேயொழிய உண்மைச் சம்பவமாகத் தெரியவில்லை,'' என்று கூறிய கரிகாலன், உள்ளுக்குள்ளே மெள்ள நடந்து, அவள் உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி வந்தான். ''சரி, இனி என்ன செய்வதாக உத்தேசம்? சொல்லுங்கள்,'' என்று கடைசியாக ஒரு கேள்வியையும் அவளை நோக்கி வீசினான்.

அவள் விழிகள் அவனை ஆச்சரியத்துடன் நோக்கின. ''சொல்வதற்கு என்ன இருக்கிறது?



ஒரு வயலின் பேசுகிறது

'ஒரு வயலின் பேசுகிறது' என்ற தலைப்பில் ஒரு படம் தயாரிக்கிற குன்னக்குடி வைத்யநாதன் இசையமைப்புடன் டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றுள்ளார்.

கர்நாடக சங்கீதம் சம்பந்தப்பட்டதென்றாலும் மசாலாக்கள் நிறைந்த படம் என்கிறார்.

ஓர் இசைக் கலைஞருக்கு வரவேற்புத் தருவதாகக் காட்டப்படும் ஒரு காட்சியில் 51 நாதஸ்வர வித்வான்களும் 51 தவில் கலைஞர்களும் கலந்து கொள்ளுகிறார்களாம்.

தமிழ்நாட்டு சங்கீத வித்வான்கள் அவ்வளவு பேரும் இந்தப் படத்தில் தோன்றப் போகிறார்கள் என்கிறார் குன்னக்குடி.

நல்ல ஆசைதான். ஆனால் நடக்கக் கூடியதா என்ன?

—எஸ்.ஜி.

படுத்து உறங்க வேண்டியதுதான்,' என்று உதடுகளும் முணுமுணுத்தன.

''உறங்குவதா? உங்களுக்குச் சித்தப் பிரமை ஏதுமில்லையே?'' என்று தொடர்ந்து கேட்டான் கரிகாலன்.

''என்னைப் பார்த்தால் உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது?''

''நிதான புத்தியோடு இருப்பதாகத்தான் தோன்றுகிறது.''

''அப்படியே வைத்துக் கொள்ளுங்கள்.''

இந்தப் பதிலைக் கேட்டதும், இந்த இடக்குப் பெண்ணை எப்படிச் சமாளிப்பது என்பதை அறியாமல் சங்கடப்பட்ட கரிகாலனுக்கு ஓரளவு கோபமும் ஏற்படவே, ''அடுத்து நடக்க



'கூட்டுப் புழுக்கள்'
படத்தில்
ரகுவரன்—அமலா

வேண்டியதைக் கவனிக்க வேண்டாமா?'' என்று அதட்டலாகக் கேட்டான்.

''கவனிக்க வேண்டியது நீங்கள்!''

''நானா?''

''ஆமாம். நீங்கள்தானே என்னை அன்பினால் வசப்படுத்தி



இவர் ஒரு பிரபல சினிமா நட்சத்திரத்தின் கணவர்.

யாரென்று தெரியாவிட்டால் 52'ம் பக்கம் பாருங்கள்.

1வது வாரம்



4வது வாரம்



# இதோ!
# 6 வாரங்களுக்குள் உங்கள் எழில்வண்ணம் மேலோங்குகிறது

6வது வாரம்



இதுவன்றோ சமயம், க்ளியர்-டோன் எழில் வண்ணத்தை நீங்களும் கண்டுகொள்வதற்கு?

## க்ளியர்-டோன் எழில்வண்ண திட்டம்

நினைத்துப் பாருங்கள், உங்கள் தோற்றத்தின் எழில் வண்ணமும் பொலிவும் எப்படி இருக்க வேண்டும்?

க்ளியர்•டோன் ஃபேர்னெஸ் க்ரீம் மூலம் அது அவ்வண்ணமே ஆக முடியும்.

தினம் இருமுறை மென்மையாக க்ளியர்•டோன் தடவவும். அதன் க்ரீம் போன்ற வழவழப்பு சருமத்தில் ஊடுருவுவதை உணருவீர்கள். மிஞ்சுவதோ அருமையான ஃப்ரெஞ்சு மணம்தான். க்ளியர்•டோனின் 4-வழி செயல் தொடங்குகிறது :

இணையற்ற ஒரு எழில்வண்ண உட்பொருள் (வேறெந்த க்ரீமிலும் இல்லாதது) ஆழமாக ஊடுருவிச் சென்று உங்கள் எழில் வண்ணத்தைப் புதுப்பிக்கிறது.

விசேஷமான ஒரு தடுப்புத் திரையிட்டு சூரியனின் கருமையூட்டும் கிரணங்களிலிருந்து நாள் முழுதும் பாதுகாக்கிறது.

செழுமையான 'மாய்ஸ்ச்சரைஸர்' சருமத்தை மிருதுவாக்கி, இளமையின் செழிப்பை வெளிக் கொணருகிறது.

வாரங்கள் செல்லச் செல்ல சுருக்கங்கள் மறைகின்றன.

ஆறே வாரங்களுக்குப்பின், க்ளியர்•டோன் ஏற்படுத்திய மாறுதலைக் காண்பீர்கள்... இந்தியாவெங்கும் ஆயிரக்கணக்கான பெண்கள் கண்டதுபோல்.




லண்டன் • பாரிஸ் • நியூயார்க்

நாளைக் காலையில் அந்த மடையனிடம் ஒப்படைப்பதாகச் சொல்லியிருக்கிறீர்கள்?''

''நீ பேசுவதைப் பார்த்தால் ஒப்படைக்க மாட்டேன் என்ற நம்பிக்கை உனக்கிருப்பதாகத் தோன்றுகிறது.''

''ஆம்; அந்த நம்பிக்கை இருக்கிறது.''

''எதிலிருந்து அந்த நம்பிக்கை உண்டாயிற்று?''

''உங்கள் முகத்திலிருந்து. உங்களைப் பார்த்ததும் நீங்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது தெரிந்தது. எந்தத் தமிழனும் அரையன் இராஜராஜன் மகளைச் சாளுக்கியர்களிடம் ஒப்படைக்க மாட்டான் என்ற உறுதி எனக்கு உண்டு.''

''அரிஞ்சயன் சொன்னது சரியாகப் போய்விட்டது. நீ அரையன் ராஜராஜன் மகளா?''

''ஆம்!''

''எதற்காக இப்படித் தனிமையில் வேட்டையாட வந்து விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனிடம் சிக்கிக் கொண்டாய்?''

இதற்கு அவள் உடனே பதிலேதும் சொல்லவில்லை. கட்டிலிருந்து எழுந்து அறையில் சிறிதுநேரம் உலாவினாள். பிறகு, கரிகாலனைப் பார்த்துச் சொன்னாள்: ''இதோ நாமிருக்கும் இந்த வேட்டுவச் சத்திரமும் இந்தக் காடும் ஒரு காலத்தில் மேலைச் சாளுக்கியருக்குச் சொந்தமாயிருந்தன. என் தந்தை துங்கபத்திரையின் அக்கரைக்கு அவர்களை விரட்டிய பிறகு, இங்கு யாரும் வருவதில்லை. இந்தக் காட்டுக்கு அப்புறத்தில் தந்தை தங்கியிருக்கிறார். அதனால் வேட்டையாட நான் இங்கே அடிக்கடி வருவேன். இந்தச் சத்திரத்தில் சில நாட்கள் தங்குவேன். இதை ஒற்றர்கள் மூலம் அறிந்த விஜயாதித்தன் இருமுறை என்னை இங்கு வந்து மடக்கினான். இருமுறையும் என்னிடம் வீரர்கள் அதிகமாயிருந்ததால் அவனை விரட்டிவிட்டேன். இனி அவன் வரமாட்டானென்ற தைரியத்தில் நான்கு வீரர்களை மட்டுமே இம்முறை அழைத்து வந்தேன். அவனுக்கு இது எப்படியோ தெரிந்திருக்கிறது. இம்முறை பதினைந்து பேருடன் மடக்கிக்

## திருக்குறள் முத்து

(இரண்டாம் பாகம் –ஆ.வே. இராமசாமி –பக். 42 –ரூ. 2.25 –ஆ.வே. இராமசாமி –'தமிழகம்' வைரிசெட்டிப்பாளையம் –திருச்சி மாவட்டம் 621012)

மனிதனது தலை என்ற பொருளில் 'தலை' என்ற சொல் பயன்படுத்தப்படும் மூன்று குறட்பாக்கள் எவை?

எத்தனை விதங்களான ஆண்மைகளை எந்தெந்தக் குறட்பாக்கள் பேசுகின்றன?

காலும் கொம்பும் வராத குறட்பாக்கள் எவை?

–இப்படிச் சுமார் எழுபத்தைந்து குறட்பாக்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன.

## 1. மு. மேத்தா கவிதைகளில் சமுதாயப் பார்வை

(க. ராமச்சந்திரன் –பக். 144 –ரூ. 10 –நர்மதா)

மேத்தாவின் கவிதைகளில் காதல், மகளிர் அரசியல் பிற துறைகள் அலசப்படுகின்றன.

## 2. சொந்த தேசத்து அகதிகள்

(கோ. வசந்தகுமாரன் –பக். 104 –ரூ. 7.50 –இரண்டு புத்தகங்களும்: நர்மதா பதிப்பகம், 16, ராஜாபாதர் தெரு, சென்னை 600 017)

புதுக் கவிதைகள்.

''நான்

மீன் உண்ணுவதில்லை.

அவை–

உன் விழிகளைப் போலிருப்பதால்.''

## சிந்திக்க வைப்பவை.

(மு. முத்துக்காளத்தி –பக். 100 –ரூ. 10 –பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை, 600 108)

சிந்தனைத் தொகுப்பு.

## நம்பமுடியாத அதிசய உண்மைகள்

(பி.சி. கணேசன் –பக். 104 –ரூ. 7.50 –திருமகள் நிலையம், 55, வெங்கட்நாராயணா சாலை, சென்னை 600 017)

பேரா சைக்காலஜி துறையில் சில மேல்நாட்டுச் சம்பவங்கள்.

## மணவாழ்வில் மகிழ்வீர்

(மு. சாயபு மரைக்காயர் –பக். 48 –ரூ. 4 –காஜியார் புக் டிப்போ, முஸ்லிம் தெரு, எம். சாவடி, தஞ்சாவூர்)

'இஸ்லாத்தில் இல்லறம்,' 'அருமைக் குழந்தைகளுக்கான அழகிய பெயர்கள்' 'மாநபி வழங்கும் மருத்துவக் குறிப்புகள்' போன்ற தலைப்புக்களில் பல செய்திகள்.

புத்(து)தகம்

கொண்டான். நீங்கள் தடுத்திரா விட்டால் என்னை இன்றிரவு கொண்டு போயிருப்பான். என்னை என்ன, இடைதுறை நாட்டுக்கு அழிவைக் கொண்டு போயிருப்பான். என் தந்தை இதை அறிந்த அடுத்த நிமிடம், சோழ நாட்டுப் படைகள் துங்கபத்திராவைத் தாண்டிவிடும்.''

மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த கரிகாலனை நோக்கிக் கடைசியாகக் கூறினாள்: ''உங்கள் சம்பாஷணையிலிருந்து நீங்கள் ஜெய சிம்மனுடைய தூதனென்று அறிந்து கொண்டேன். அப்படியிருந்தாலும் என்னை விஜயாதித்தனிடம் ஒப்படைப்பது உமது மன்னனுக்கோ அவன் நாட்டுக்கோ எந்தவிதத்திலும் நன்மை பயக்காது.''

''பெண்ணே! உன் பெயரென்ன?'' என்று கரிகாலன் வினவினான்.

''செங்கமலச் செல்வி,'' என்றாள் அவள்.

''செங்கமலச் செல்வி, இப்படி வா!'' என்று அழைத்தான் அவன்.

அவள் முகத்தில் சந்தேகச் சாயை பலமாகப் படர்ந்தது. உணர்ச்சியால் திடீரெனத் தூண்டப் பட்ட கரிகாலன், ''சந்தேகப்படாதே; இப்படி வா!'' என்று அவள் கையைப் பிடித்துத் தனக்காக இழுத்து அப்புறம் இப்புறம் பார்த்துவிட்டு, அவள் காதுக்கருகில் ஏதோ விடுவிடுவென்று வார்த்தைகளை உதிர்த்தான். அவள் விழிகளிலிருந்த சந்தேகம் மறைந்தது. ''இது உண்மையா?'' என்று வினவினாள் அவள்.

''உண்மைதான்.''

''தெரியாமல் ஏதேதோ பேசி விட்டேன். மன்னிக்கவும்...'' என்று மேலே ஏதோ சொல்லப்போனாள் செங்கமலச் செல்வி. அவள் வாயை சட்டென்று பொத்திய கரிகாலன், ''உஸ்! சும்மா இரு. கதவுக்கருகில் யாரோ ஒண்டிக் கேட்கிறார்கள்,'' என்றான். கதவுக்கருகிலிருந்த அந்த உருவமும் உள்ளேயிருந்தவர்கள் தன்னைக் கவனிக்கிறார்களென்பதை அறிந்ததும், மெள்ள அப்புறம் நகரலாயிற்று.

(தொடரும்)

## எங்களுக்காக

**பாவம், அந்தப் போர்டு!**

தஞ்சை பெரிய கோவில் முன் ஒரு போர்டு: ''அசிங்கப்படுத்துபவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.''

இருந்தும் அகழியைச் சுற்றி 'டூரிஸ்ட் அட்ராக்ஷ'னாகப் பல நபர்கள், காண்பவர்கள் முகம் சுளிக்கக் காட்சி தருகின்றனர்.

—டி. சௌந்தரராஜன், ஈரோடு–10.






**தேனுக்கு வயது உண்டா?**

சமீபத்தில் எங்கள் ஊரில் உள்ள காதி சர்வோதய சங்கத்தில் 500 மி.லி. கொண்ட ஒரு பாட்டில் தேன் வாங்கினேன். பாட்டிலை வாங்கிப் பார்த்ததும் தூக்கிவாரிப் போட்டது. ஏனென்றால் அந்தப் பாட்டிலில் Packing Date 2.2.87 என்றும் Expiry Date 1.8.88 என்றும் இருந்ததுதான்! உண்மையான தேன் கூட்டிலிருந்து எடுக்கப்பட்ட தேன் என்றால் [illegible] ஆண்டுகள் ஆனாலும் கெடாது என்று சொல்வார்கள். ஆனால் இதில் காலக் கெடு விதித்திருந்தனர்!

—இ. ராமகுமார், கமுதி.

சாண்டில்யன்

20.8.87

## 29. அறிவும் ஆபத்தும்

மென்மையும் திண்மையும் கலந்து நிரவப்பட்ட இணையற்ற எழிலைப் பெற்ற செங்கமலச் செல்வியின் செவ்விய இதழ்களைத் திடீரெனத் தன் வலக்கையால் பொத்தி அவள் பேச்சை அடக்கிய கரிகாலன், பாதி திறந்திருந்த கதவை நோக்கிச் சில விநாடி தன் கண்களை ஓடவிட்டுக் கொண்டு நின்றான். பிறகு தன் இடது கையில் சிறைப்பட்டுக் கிடந்த அவள் கரத்தையும் வலது கையால் மறைக்கப்பட்ட அவள் இதழ்களையும் விடுதலை செய்துவிட்டு, கதவுக்காக விடுவிடு என்று நடந்து, அறைக்கு வெளிப்புறம் எட்டிப் பார்த்துவிட்டு, மீண்டும் அவளருகே வந்து நின்று கொண்டு, பேச்சை மேற்கொண்டு தொடராமல் சற்று நேரம் தீவிர சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான்.

இப்படி ஆழ்ந்து சிந்தனையின் வசப்பட்டு ஏதும் பேசாமல் தன் எதிரே சிலைபோல் நின்றிருந்த கரிகாலன் மீது ஆச்சரியம் ததும்பிய விழிகளை நாட்டிய செங்கமலச் செல்வி, ''சிந்தனை தீவிரமா



# மன்னன் மகள்

யிருக்கிறதே....'' என்று பேச்சைத் துவக்கியதன்றி அவனைப் பார்த்து மெள்ளச் சிரிக்கவும் சிரித்தாள்.

பாதுகாப்புக்குப் போதவே போதாத நாலைந்து வீரர்களுடன் ஒரு வேட்டுவச் சத்திரத்தில் அரையன் ராஜராஜனின் பரம வைரியான ஜெயசிம்மனின் மருமகனுடைய காவலாட்களிடம் சிக்கிக் கொண்டு பேராபத்திலிருக்கும் அந்தச் சமயத்திலும், அவள் அலட்சியமாகச் சிரித்ததைக் கண்ட கரிகாலனின் சிந்தனைகளும் சற்றே உடைபட்டதன்றி அவன் கண்களிலும் ஆச்சரியம் ததும்பியது. அந்த ஆச்சரியத்தின் காரணமாகவும் அவள் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியத்தாலும் கண்களை உயர்த்தி, அவளை ஏறிட்டு நோக்கிய கரிகாலன், ''செல்வி! நம்மைச் சூழ்ந்திருக்கும் சந்தர்ப்பங்கள் தீவிரமாகும் போது, சிந்தனை தீவிரமாகிறது,'' என்று சொன்னான்.

அவன் அவளை அழைத்த தோரணையால், அவள் முகம் அந்தி வானமெனச் சிவந்தது. அந்த அறையில் சந்தித்த கொஞ்ச நாழிகைக்குள் அவன் தன்னை 'நீங்கள்' என்பதிலிருந்து 'நீ' என்று அழைக்க முற்பட்டதையும், 'செங்கமலச் செல்வி' என்ற முழுப் பெயரைச் 'செல்வி' என்று குறைத்துக் கொண்டதையும் கவனித்த அந்த அழகியின் இதயத்தில் கோபம் துளிர்க்கவில்லை; தாபமே துளிர்த்தது. அவள் ரத்தத்தில் ஆத்திரம் சுழலவில்லை; ஆனந்தமே சுழன்றது. உணர்ச்சிகளை வெறுப்புக் கவ்வவில்லை; வெட்கம் கவ்வியது. எந்த ஆண்மகனையும் அது வரை சட்டை செய்யாமல் தூக்கியெறிந்த அந்தச் சுதந்திரப் பெண்ணின் சீரிய உள்ளத்திலே சற்று முன்பாகச் சந்தித்த இந்தக் குழந்தை முக வாலிபனிடம் எல்லையற்ற அன்பு எங்கிருந்தோ பிரவகிக்கத் தொடங்கியது.

செங்கமலச் செல்வியைக் கண்ட நேரத்திலிருந்து, கரிகாலன் உள்ளமும் பலவிதக் குழப்பங்களுக்கு இரையாகியிருந்ததால், தான் அவளுக்குக் கொடுக்க வேண்டிய மரியாதையிலிருந்து வழுவி விட்டோமே என்ற நினைப்பே சிறிதும் இல்லாமல், அவன் அவளிடம் வெகு சொந்தமாகவே பேசத் தொடங்கினாலும், இடையிடையே தனக்கும் அவளுக்குமுள்ள தாரதம்மியம் குறுக்கே வந்ததால், சிற்சில சமயங்களில் மரியாதையாகவும் பேச முற்பட்டான். இப்படி உறவை எட்ட வைக்கும் மரியாதையையும் கிட்டச் சேர்க்கும் சமத்துவ பாஷையையும் மாறி மாறி அவன் கையாண்டதைக் கண்ட செங்கமலச் செல்வி அவன் குழப்பத்தின் காரணத்தைப் புரிந்து கொண்டாளாதலால் உள்ளுக்குள்ளேயே நகைத்துக் கொண்டாள். அவனுக்கு ஏற்பட்ட குழப்பமும் சங்கடமும் சொல்லவொண்ணா ஆனந்தத்தை விளைவித்தன அவளுக்கு.

## முன்

**வே**ங்கி நாட்டு மன்னன் மகள் நிரஞ்சனா தேவி. அவளுடைய சகோதரன் நரேந்திரன். அவன் அரசு புரிய லாயக்கு இல்லாதவன். கேளிக்கைப் பிரியன். அரசகுமாரியின் தந்தை இறந்ததும் தளபதி ஜெயசிம்மன் அவளைக் கவிழ்த்து, ஆட்சியைப் பிடிக்கச் சதிகள் செய்கிறான். இன்னொரு தளபதியான பிரும்ம மாராயன் நல்லவர். அரசகுமாரிக்கு விசுவாசமாக இருப்பவர்.

தளபதி ஜெயசிம்மனுக்கு அரசகுமாரிக்கோ, அவள் சகோதரனுக்கோ, ஆட்சியை விட்டுத்தர விருப்பமில்லை. மாறாக, தன் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டவனும், அரசகுமாரியின் ஒன்றுவிட்ட தம்பியும், மேலை சாளுக்கியத்தில் உள்ளவனுமான விஜயாதித்தனை வேங்கி நாட்டு மன்னனாக அமர்த்தத் திட்டமிடுகிறான். இந்தச் சூழ்நிலையில்—,

சோழ நாட்டு வாலிபனான கரிகாலன் அரசகுமாரியைச் சந்திக்கிறான். நிரஞ்சனாதேவி, எத்தகைய பயங்கர அரசியல் சதிகளில் சிக்கியிருக்கிறாள் என்பதைத் தன்

ஆனால், அவன் மனத்திலே ஆனந்தமில்லை. இந்தப் பெண்ணை எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டுமே என்ற கவலையே அவன் உள்ளத்திலே மிகப் பெரிய சுமையாக எழுந்து நின்றது.

ஆகவே அவள் தான் முதலில் சொன்ன பதிலைக் கேலி செய்யும் முறையில், ''சந்தர்ப்பம் தீவிரமாகும்போது சிந்தனை தீவிரமாகி என்ன பயன்? தைரியமல்லவா தீவிரமாக வேண்டும்? யோசனையால் என்ன பயன்? செயலல்லவா பயனளிக்கும்?'' என்று கேட்ட கேள்வியைக் கூட அவன் சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவன் எங்கோ யோசித்துக் கொண்டிருப்பதைக் கண்ட அவள், அதே கேள்வியை இரண்டாம் முறை திருப்பியதும், அவன் பதிலும் திட்டமாக வெளிவந்தது.

''எந்தத் திட்டத்துக்கும் சிந்தனைதான் சரியான அஸ்திவாரம், செல்வி! சிந்தனை தைரியத்தைத் தூண்டுகிறது. செயலுக்கும் அதுதான் பூர்வாங்கம். சிந்தனையற்ற செயல் பயன் தருவதில்லை. அவசரப்பட்ட காரியம் அள்ளித் தெளித்த கோலம் என்று தமிழ்நாட்டில் பழமொழியிருக்கிறதே; தமிழர்கள் செல்வியான நீ அதைக் கேள்விப்பட்டதில்லையா?'' என்று பதில் கூறினான் கரிகாலன்.

''சிந்தனைக்கும் எல்லை உண்டல்லவா?'' என்றாள் அவள், விஷமமாகச் சிரித்துக் கொண்டு.

''உண்டு செல்வி! சிந்தனைக்கு என்ன, எதற்குமே எல்லை உண்டு.''

''அந்த எல்லைக்குள் அடங்கியதுதானா உங்கள் சிந்தனை?''

''எல்லையைச் சில வேளைகளில் எல்லோருமே மீறுகிறோம்.''

செல்வியின் செங்கமல விழிகள் மீண்டும் ஒரு முறை அவன் முகத்துக்காக எழுந்தன. அவன் எதைக் குறிக்கிறான் என்பதைத் திட்டமாகப் புரிந்து கொள்ள, ''என்ன! எல்லையை மீறுகிறோமா?'' என்ற அவள் உதடுகள் உதிர்த்த வார்த்தைகளில் வியப்பும் பெரிதும் கலந்திருந்தது.

''ஆமாம் செல்வி! பெண்கள் வாயிற்படியைத் தாண்டக் கூடாது என வரையறை இருக்கிறது. ஆனால், அந்த எல்லைக்குள் எல்லோரும் நின்றுவிட முடிகிறதா? வீட்டுக்காக ஏற்பட்டவர்கள் பெண்கள் என்ற வரையறை இருக்கிறது. அந்த எல்லைக்குள் எத்தனை பேர் அடங்கியிருக்கிறார்கள்?'' என்ற கரிகாலன், பரிகாசம் ததும்பும் தன் விழிகளை அவள் மீது ஓடவிட்டான்.

செங்கமலச் செல்வி சற்று இரைந்தே சிரித்து விட்டாள். அவள் சிரிப்பை அர்த்தம் செய்து கொள்ள முடியாத கரிகாலன் கேட்டான், ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று.

''நீங்கள் இப்பொழுது

கதை

**புத்தி நுட்பத்தால் அறிந்து, அதை அவளுக்கு உணர்த்துகிறான், கரிகாலன் மீது அவளுக்கு நம்பிக்கையும், காதலும் ஏற்படுகிறது.**

**கரிகாலன் தன் சாமர்த்தியத்தால் தளபதி ஜெயசிம்மனின் நம்பிக்கைக்கும் பாத்திரமாகி அவனுடைய சதிகளையும் புரிந்து கொள்கிறான். ஜெயசிம்மனின் ஒற்றனான அரிஞ்சயனைத் தன் அதிகாரத்துக்கு உட்பட்டவனாக்கிக் கொள்கிறான். அந்த ஒற்றனுடன், கரிகாலன், மேலைச் சாளுக்கியத்திற்குப் புறப்படுகிறான். அங்கு ஏற்பட்ட ஒரு கலவரத்தில்—**

**மேலை சாளுக்கிய விஜயாதித்தனையும், சோழன் அரையன் ராஜராஜனின் மகளான செங்கமலவல்லியையும் சந்திக்கிறான். வேட்டையாட வந்த இடத்தில், விஜயாதித்தனிடம் சிக்கிக் கொண்ட தன்னைச் சமயத்தில் காப்பாற்றிய கரிகாலனிடத்தில் ஈடுபாடும் மதிப்பும் செங்கமலச்செல்விக்கு ஏற்படுகின்றன. அச்சமயத்தில் கரிகாலன் ரகசியமாக அவள் காதில் சொன்ன சில சொற்கள் அவளைத் திகைக்க வைக்கின்றன.**




பெண்களைப் பற்றிச் செய்த உபதேசத்தை என் தந்தையிடம் செய்து பாருங்கள்!'' என்றாள் செல்வி.

''ஏன்? தந்தை இதை ஒப்புக்கொள்ள மாட்டாரா?''

''ஒப்புக் கொள்ள மாட்டார்! அதை ஏற்கனவே சுட்டிக் காட்டிய இருவர் தோலையை உரித்துவிட இருந்தார்.''

''ஏன், பெண்கள் அடங்கியிருப்பது அவருக்குப் பிடிக்காதோ?''

''பிடிக்காமலில்லை. பெண்கள் அடக்கத்தைப் பற்றிப் பிரஸ்தாபிப்பவர்கள் உண்மையில் என்னைத்தான் சுட்டிக் காட்டுகிறார்கள் என்பது அவருக்குத் நன்றாகத் தெரியும். என் தந்தையிடம் என்னைப் பற்றி ஏதாவது மறைமுகமாகச் சொன்னால் கூடப் போதும்.....!'' என்று முடிக்காமலே விட்டாள் செங்கமலச் செல்வி. அவள் வார்த்தையைப் புரிந்து கொண்ட கரிகாலன், அரையன் ராஜராஜன் தன் மகளிடம் எத்தனை பிரியம் வைத்திருக்கிறான் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான். அப்படி விஷயத்தைத் தெளிவாக புரிந்து கொண்டதால், அவன் இதழ்களில் புன்முறுவலொன்றும் உதயம் ஆயிற்று. ''செல்வி! அப்படியானால் பெண்களைப் பற்றிப் பெரியோர் சொல்லியுள்ள தத்துவங்களை என் மட்டிலேயே வைத்துக் கொள்கிறேன்,'' என்றும் கூறினான்.

''ஏன்?'' என்று கேட்டாள் அவள்.

''தத்துவம் அபாயமானது என்பதைப் புரிந்து கொண்டேன்.''

''அப்படியா!''

''ஆமாம். பெண்கள் இருக்க வேண்டிய முறையைச் சொன்னால்தான் உன் தந்தை என் தோலை உரித்து விடுவாரே.''

செல்வி வெட்கம் ததும்பும் விழிகளால் அவனை நோக்கி, ''உங்கள் விஷயத்தில் அப்படியொன்றும் நேரிடாது,'' என்றாள்.

''ஏன்? நான் எப்படி விலக்கு?''

''உங்களைக் கவனித்துக் கொள்ள நான் இருக்கிறேனல்லவா?''

ஒரு பெண் தன்னைப் பாதுகாப்பதாகச் சொன்னதைக் கேட்ட கரிகாலன் இதழ்களில் இளநகை ஒன்று உதயமானதைக் கண்ட செங்கமலச் செல்வி, ''என்ன, பெண்ணின் பாதுகாப்பு அவசியமா என்று நினைக்கிறீர்களா? தந்தையிடம் வந்தால், அதன் அவசியத்தை நன்றாகப் புரிந்து கொள்வீர்கள்,'' என்று விளக்கினாள்.

சூழ்நிலையும் சந்தர்ப்பங்களும் மட்டும் சாதாரணமானவையாக இருந்தால், கரிகாலன் வேடிக்கையாக மேலும் மேலும் பேச்சை வளர்த்துக் கொண்டு போயிருப்பான். தர்க்க சாஸ்திரியான அவனுக்குப் பேசுவதென்றால் மிகவும் பிரியம்தான். ஆனால், சந்தர்ப்பம் அவன் இயற்கையை வெட்டியது. சூழ்நிலை உள்ள அபாயத்தை நினைவூட்டியது. ஆகவே அவளை நோக்கிச் சொன்னான், ''செல்வி, நீ எனக்குப் பாதுகாப்பு அளிப்பது உன் தந்தையிடம் சென்ற பின். ஆனால் உன்னை இந்த இக்கட்டிலிருந்து பாதுகாத்துக் கொண்டு செல்ல வேண்டிய பொறுப்பு எனக்கிருக்கிறது,'' என்று.

''அதைத்தான் முன்பே காதோடு காதாகச் சொன்னீர்களே?''

''ஆமாம், சொன்னேன், அப்படி நான் உன் கையைப் பிடித்துக் கொண்டு, காதுக்கருகில் அந்தரங்கமாகப் பேசுகையில் அரிஞ்சயன் கவனித்திருக்கிறான் என்பதை மறவாதே.''

''யாரது அரிஞ்சயன்?''

''என்னுடன் கூட வந்திருப்பவன். சற்று முன்பாக முற்றத்தில் நீயும் விஜயாதித்தனும் போரிட்ட பின்பு என் சொற்படி கேட்க வேண்டுமென்று விஜயாதித்தனுக்குப் போதித்தானே அவன்தான். ஜெயசிம்ம சாளுக்கியனின் அந்தரங்க ஒற்றன்.''

''அப்படியானால் உங்கள் சொற்படி கேட்கும்படி ஜெயசிம்மன் விஜயாதித்தனுக்குப் போதிப்பானேன்? அந்தச் சர்வாதிகாரத்தை அரிஞ்சயனுக் கல்லவா கொடுத்திருக்க வேண்டும்?''

செங்கமலச் செல்வியின் இந்தக் கேள்விகளுக்குக் கரிகாலன் உடனே பதில் சொல்லவில்லை. சற்று யோசித்துவிட்டு, ''செல்வி! அது ஒரு பெருங்கதை. பிறகு ஒரு நாள் சொல்கிறேன். இப்பொழுது அதை விவரிக்க அவகாசமில்லை. முதலில் நீ தப்ப வழி பார்க்க வேண்டும்,'' என்றான்.

''என்ன வழியிருக்கிறது? என் வீரர்கள் மொத்தம் ஐந்து பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வாட்களை வாங்கிக் கட்டி விஜயாதித்தன் வீரர் களிடம் ஒப்படைத்து விட்டார்கள்,'' என்றாள் செல்வி.

''அத்துடன் உன் வாளையும் இப்பொழுது நான் எடுத்துச் செல்லப் போகிறேன்.''

''சரி, நாங்கள் அனைவரும் நிராயுதபாணிகளாகி விட்டோம், தப்புவது எளிதுதான்.''

''எளிதல்லாமல் என்ன?''

''ஆயுதம் பறிபோன பின் தப்புவது.....''

''எளிது! அறிவு இருக்கும்வரை எளிதுதான். ஆயுதம் பறிபோகலாம் செல்வி! அறிவுதான் பறிபோகக் கூடாது. அறிவு இருக்கும் வரை மனிதன் எந்த ஆபத்தையும் சமாளிக்கலாம்.''

செல்வி ஏதும் புரியாமல் அவனை நோக்கினாள். அவன் அவளை ஒருமுறை பார்த்துவிட்டுக் கதவுப் பக்கத்தையும் ஒரு முறை நோக்கினான்.

''அங்கு யாருமில்லை,'' என்று அவனை நெருங்கி மிக இரகசியமாகச் சொன்னாள் செல்வி.

''செல்வி! இரவில் நீ நன்றாகத் தூங்கிவிடுவாயா?'', என்று வினவினான் கரிகாலன்.

''எதற்காகக் கேட்கிறீர்கள்?'' என்றாள் அவள், அவன் பேச்சைப் புரிந்து கொள்ள முடியாத நிலையில்.

''நான் தூங்கிவிடுவேன்.''

''அதனாலென்ன?''

''வீரர்களும் தூங்குவார்கள்.''

''ஓகோ!''

''உன் வாள் மட்டுமென்ன, உன் வீரர்கள் வாளும் என்னிடம்தான்

## பயப்படுத்தியவர் சி. ச!







துபாயில் நடைபெற்ற ஒரு கலை நிகழ்ச்சியை வீடியோவில் பார்த்தேன். சிவசந்திரனை கங்கை அமரன் பேட்டி கண்டார்:

கங்கை அமரன்: தாங்கள் இதுவரை நடித்த படங்கள் எத்தனை?

சிவசந்திரன்: 85.

க.அ.: இதில் வில்லனாக எத்தனை கற்பழிப்புகள் செய்தீர்கள்?

சி.ச.: 80.

க.அ.: அடேயப்பா! கொடுத்து வைத்த வில்லன். சரி உங்களிடம் அதிகமாக ரேப் சீனில் மாட்டிக்கொண்டவர் யார்?

சி.ச.: வேறு யார்? இதோ வந்திருக்கும் அம்பிகாதான்.

க.அ.: கதாநாயகர்களில் உங்களை அதிக மாக அடித்து உதைத்தவர்?

சி.ச.: அண்ணன். மதிப்பிற்குரிய பிரபு தான்.

அடைக்கலம்.''

அவன் யோசனை மெள்ள மெள்ள அவளுக்குப் புரியலாயிற்று. அவன் மேலும் சொன்னான். ''செல்வி! அரிஞ்சயன் மட்டுமல்ல, நானும் உன் விரோதி என்பதை மறவாதே,'' என்று.

''அப்படியானால்....'' என்று அவள் ஏதோ கேட்க ஆரம்பித்தாள்.

''சுயபலத்தில் செருக்குள்ளவன் எதிராளியின் பலாபலத்தை ஆராய்வதில்லை. நீயும் உன் வீரர்களும் எங்கள் கைதிகள். உங்கள் வாட்களையும் பறித்து விட்டோம். நாங்கள் நிம்மதியாக உறங்குவோம். நீயோ வலையில் சிக்கியிருப்பவள். உனக்கு உறக்கம் வராது பார்!'' என்று சொல்லிவிட்டு, மேற்கொண்டு ஏதும் பேசாமல் வேகமாக அறையைவிட்டு வெளியேறி மாடியை விட்டுக் கீழே வந்தான் கரிகாலன்.

மாடிப் படியின் கடைசிப் படியில் இறங்கும்போதே, முற்றத்தின் அருகாமையில் கூடத்தின் முகப்பில் படுத்திருந்த அரிஞ்சயன் மீது கண்ணைச் செலுத்தினான் கரிகாலன். அரிஞ்சயன் ஆழ்ந்த உறக்கத்திலிருந்ததாகப் பாசாங்கு செய்வதைக் கண்ட கரிகாலன், தான் ஏமாந்ததாகவே காட்டிக் கொண்டு போலிக் கோபத்துடன் அவனை நெருங்கிக் கையால் அவனைப் புரட்டி எழுப்பி, ''அரிஞ்சயா! என்ன தூக்கம்! எழுந்திரு.'' என்று அதட்டினான்.

அப்பொழுதுதான் கண்ணை விழிப்பதைப் போல் பாசாங்கு செய்து அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்த அரிஞ்சயன், ''ஏன்? என்ன விசேஷம் கரிகாலா!'' என்று கேட்டுக் கொண்டே, கண்ணைக் கசக்கிக் கொண்டு மஞ்சத்தில் உட்கார்ந்தான்.

''அரிஞ்சயா! தூங்கினால் இந்தப் பெண்ணை நாம் கொண்டுபோய் விஜயாதித்தனிடம் சேர்க்க முடியாது. மகா முரட்டுப் பெண். கத்தியை அவளிடமிருந்து வாங்குவதற்குள் என் பிராணன் போய்விட்டது. இதுவரையில் எந்தப் பெண்ணையும் தொட்டறியாத நானே அவள் கையைப் பலவந்தமாகப் பிடித்து மிரட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இனி நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அரையன் ராஜராஜன் மகளை நாம் கைநழுவ விடக் கூடாது. வா, நமது வீரர்களை கவனித்துவிட்டு வருவோம்,'' என்று அரிஞ்சயன் கரத்தைப் பிடித்துக் கொண்டு வாயிலுக்குச் சென்று, அங்கு







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 108'ம் பக்கம்

காவல் புரிந்து கொண்டிருந்த வீரர்களை எச்சரித்தான்: ''எதிரிகளின் வாட்கள் உங்களிடம் இருக்க வேண்டாம்; என்னிடமிருக்கட்டும்,'' என்று அவர்களிடமிருந்த எதிரிகளின் வாட்களையும் வாங்கிக் கொண்டு, அரிஞ்சயனுடன் கூடத்துக்கு வந்து வாட்களைத் தன் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு, மஞ்சத்தில் படுத்தான்.

ஆனால் அரிஞ்சயன் தூங்கவில்லை. வெகு நேரம் கூடத்துக்கும் வாயிலுக்குமாக உலாவினான். மீண்டும் ஒருமுறை தனிப்பட்ட முறையில் காவலாளரை எச்சரித்தான். மாடிக்கும் ஏறிச் சென்று சாளரத்தின் மூலமாகச் செல்வியைக் கவனித்தான். செல்வி கட்டிலில் படுத்து நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்ததைக் கண்டு, அவனும் ஓரளவு நிம்மதியுற்றுக் கீழே வந்து, கூடத்தில் படுத்தான். நேரம் ஏறியது. நித்திராதேவி அரிஞ்சயனையும் மெள்ள மெள்ள ஆக்கிரமித்துக் கொண்டாள்.

எத்தனை நேரம் தூங்கினோமென்று அரிஞ்சயனாலேயே உணர முடியவில்லை. நீண்ட தூரம் செய்த பிரயாணத்தின் களைப்பு அவனை நன்றாக அயர வைத்து விட்டதால், சொரணையற்றுக் கிடந்தான் அரிஞ்சயன். அத்தகைய ஆழ்ந்த உறக்கத்திலிருந்த அவனை யாரோ தட்டி எழுப்பினார்கள். தட்டியது கையல்ல என்பதையும் நீளமான வாள் என்பதையும் அறிந்துகொண்ட அரிஞ்சயன், சரேலென எழுந்திருக்க முயன்றான். அந்த வாள் மின்னல் வேகத்தில் அவன் கழுத்தைத் தடவியது. ''அசையாதே! அப்படியே படுத்திரு!'' என்றது செங்கமலச் செல்வியின் குரல். அடுத்த நிமிடம் அரிஞ்சயன் கைகள் சில முரட்டுக் கரங்களால் கயிறு கொண்டு பலமாகப் பிணைக்கப்பட்டன. சற்றே திரும்பினான் அரிஞ்சயன். இது கரிகாலன் வேலையாகத்தான் இருக்க வேண்டுமென்ற நினைப்புடன். ஆனால் அந்த நினைப்பு அடுத்த விநாடி பறந்தது. அங்கு அவன் கண்ட காட்சி அவனை அடியோடு பிரமிக்க வைத்தது. சற்றுத் தூரத்தில் அவனைப் போலவே கரிகாலனும் கயிறுகளால் பிணைக்கப்பட்டு உருட்டி விடப்பட்டிருந்தான். செங்கமலச் செல்வியின் வீரர்கள் இருவர், உருவிய வாட்களுடன் அவனையும் காத்து நின்றனர்.

(தொடரும்)

'இருபதாம் நூற்றாண்டில் ஜெர்மன் கலை' என்ற கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்த சிற்பம் இது. வில்ஹெம் லாம்ப்ரக் செதுக்கிய இந்தச் சிற்பத்தின் பெயர்: 'வீழ்ந்த மனிதன்.'





பின்னணியிலுள்ள ஓவியங்கள் மாக்ஸ் பெக்மான் தீட்டியவை.

நன்றி: ஜெர்மன் ஃபீசர்ஸ்




சாண்டில்யன்

## 30. விஷயம் புரிந்தது

அரையன் ராஜராஜன் மகளின் கூரிய வாள் தன் கழுத்தைத் தடவி நின்றாலும், தன் கைகளும் அவள் வீரர்களால் பலமாகப் பிணைக்கப்பட்டதாலும், ஏற்கனவே மாடியறை முன்பாக மறைந்து நின்று தான் கண்ட காட்சியின் காரணமாகவும், 'ஒரு' வேளை இது கரிகாலன் சதியாயிருக்குமோ' என்று சந்தேகித்த அரிஞ்சயன், பக்கவாட்டில் கண்களைச் செலுத்திக் கரிகாலன் நிலையைக் கண்டதும் சந்தேகத்தை அடியோடு உதறி எறிந்ததன்றி, 'இந்த இக்கட்டிலிருந்து தப்பப் புத்திசாலியான கரிகாலன் ஏதாவது ஒரு வழியைக் கண்டு

**எம்.** ஜி.ஆர். ரசிகர் மன்றத் தலைமைப் பதவிக்கு சேடப்பட்டி முத்தையா, அல்லது கருப்பசாமிப் பாண்டியன் இருவரில் ஒருவரை நியமிக்க வேண்டும் என்று தலைவரிடம் கோரிக்கை விடுத்தாராம் செல்வி. முன்னாள் அமைச்சரான ப்கூபூ, நாயகம் இருவருக்கும் கூட ரசிகர் மன்றத் தலைமை மீது ஒரு கண்ணாம். தற்சமயத்துக்குப் புத்தனே தொடர்ந்து இருக்கட்டும் என்று சொல்லி விட்டாராம் தோட்டத்துக்காரர்.



பிடிப்பான்' என்று நம்பிக்கையும் கொண்டான். ஆனால் அந்த நம்பிக்கையில் அடியோடு மண்ணைப் போடும் முறையில் செங்கமலச் செல்வி அடுத்த வினாடி உத்தரவுகளைப் போட்டாள்.

''விஜயாதித்தன் ஆட்களைக் கட்டிப் போட்டீர்களா?'' என்று செங்கமலச்செல்வி, உருவிய வாளும் கையுமாக நின்றிருந்த தன் வீரர்களில் ஒருவனைக் கேட்டாள்.

''கட்டிப்போட்டு விட்டோம்,'' என்று பதில் சொன்னான் அவன்.

''சரி! அவர்கள் எல்லோரையும் சத்திரத்துப் பின்புறத்து அறையில் அடைத்து அறைக் 'கதவைப் பூட்டி விடுங்கள். சத்திரத்துக் காவல்காரன் கையையும் காலையும் கட்டி இந்தக் கூடத்திலேயே உருட்டுங்கள். ஓர் ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வாருங்கள்,'' என்று மளமளவென உத்தரவுகளை வீசினாள் செங்கமலச் செல்வி.

அவள் வீரர்கள் கட்டளைகளை நிறைவேற்ற நாற்புறமும் பறந்தார்கள். அவள் இட்ட உத்தரவுகளைக் கேட்டுக் கொண்டும், மிதமிஞ்சிய வியப்புடன் அவளைப் பார்த்துக் கொண்டு உருண்டு கிடந்தான் கரிகாலன். கைகள் பின்னால் பிணைக்கப்பட்டிருந்ததன் காரணமாக, முதுகுப் பக்கம் திரும்பிப் படுக்க முடியாமல் ஒருக்களித்தே படுத்திருந்தாலும், பக்கவாட்டில் கண்களைச் செலுத்தி அவளை நன்றாகப் பார்த்தான் கரிகாலன். 'இவள் ஒரு பெரிய தளபதியின் மகள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை,' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். அழகும் கம்பீரமும் நிறைந்த அவள் தோரணையும், அவள் அந்தச் சமயத்தில் கொண்டிருந்த வேட்டுவக் கோலமும் அவன் சித்தத்திலே பலப்பல காவியங்களையும் புராணங்களையும் புரள வைத்தன.

''அதோ அவள் தோளைத் தழுவி நிற்கும் அந்தப் புலித் தோல் அங்கியும், காலை அணைத்துக் கிடக்கும் மான் தோல் கச்சையும், முன்னால் எடுத்துப் போடப்பட்டிருக்கும் கொண்டையும், தினைப்புனம் காத்த குறவள்ளியைத் தான் நினைப்பூட்டுகின்றன. ஆனால் அவள் கையிலிருந்தது ஆலோலத்தின் கவண் கல்; இவள் கையிலிருப்பது உயிரையே ஓட்டக்கூடிய வீரவாள். அவள் பயந்தவள். இவள் அச்சத்தையே அறியாதவள். அவள் விழிகள் அருள் விழிகள். இந்த விழிகளோ அக்கினியைக் கக்கும் அபாய விழிகள்,' என்று கரிகாலன் அவளைப் புராண மங்கையருக்கு ஒப்பிட்டுச் சர்ச்சை செய்து கொண்டிருந்த சமயத்தில் அவள் வீரர்கள் தங்கள் கடமைகளைச் சரசரவென்று செய்து கொண்டிருந்தார்கள்.

கைகள் மாத்திரமின்றிக் கால்களும் பிணைக்கப்பட்ட விஜயாதித்தன் வீரர்கள், அவன் கண்ணுக்கெதிராகவே சரசரவென்று முற்றத்தில் இழுத்துச் செல்லப்பட்டு, பின்புறத்து அறையில் திணிக்கப்பட்டார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் சத்திரக்காரனும் செங்கமலச் செல்வியின் முன்பாகக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டான்.

## ஏன்?

'பொற்காலம்' என்று தற்காலத்தை யாருமே சொல்வதில்லை.

—பெஞ்சமின் பிராங்க்ளின்



ராஜீவ் காந்தி சென்னை வருவதற்கு முன்தினம் முன்னாள் அமைச்சர் வீரமணி பெயரில் நாளேடுகளில், ராஜீவ் காந்தியை ஆதரித்து ஓர் அறிக்கை வெளிவந்தது. தலைமைக் கழகத்திலிருந்து தானே இம்மாதிரி அறிக்கைகளை, பொதுச் செயலாளரோ செ.ப.செ.வோ வெளியிடுவார்கள்? வழக்கத்துக்கு மாறாக, [illegible] பெயரில் அறிக்கை வருவானேன்? நட்டுவாக்கிளி நாச்சிமுத்து கேட்கிறார்.

காளிமுத்து மற்றும் சிலரைப்போல வீரமானவர் மத்திய அரசைத் தாக்குகிறவர் அல்ல என்று காங்கிரஸ் வட்டாரத்தில் ஒரு நம்பிக்கையைத் தோற்றுவிக்க, தலைவரே யோசனை சொல்லி இம்மாதிரி அறிக்கை வெளிவரச் செய்தாராம்.



மெடிகல் 'செக்கப்'புக்காக அமெரிக்கா சென்றிருக்கும் முதல்வரின் பல இலாகா பொறுப்புகளை நெடிய அமைச்சரிடம் தந்துவிட்டுப் போயிருக்கிறார். நிகழ்ச்சிகளை முன்னின்று நடத்துவது, தலைமை தாங்குவது எல்லாம் நெடிய அமைச்சரே. ஆனால் நட்டுவாக்கிளி நாச்சிமுத்து கருத்து. முக்கியமான கோப்புகளின் மீது முடிவு எடுக்க வேண்டியவர் என்று முதல்வர் போட்ட உத்தரவுப் பிரகாரம் கோப்புகளை வேகமாக நகர்த்தி வருகிறார் பலாப்பழ ஊர்க்காரர்.

—பிரான்.

---

சத்திரக்காரன் கணக்குப் பெட்டி உடைக்கப்பட்டு ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வரப்பட்டன. பக்கத்திலிருந்த ஒரு வீரனைப் பந்தத்தைப் பிடிக்கச் சொல்லி, மற்றொரு வீரனை ஓலையில் எழுதும்படி உத்தரவிட்டு, என்ன எழுதுவதென்பதை நின்று கொண்டே அதிகாரத் தோரணையில் சொல்லிக் கொண்டு போனாள் சோழர் படைத் தலைவன் மகள்: ''மேலைச் சாளுக்கிய நாட்டில் உறையும் கீழைச் சாளுக்கிய நாட்டு இளவரசர் விஷ்ணுவர்த்தன விஜயாதித்த பூபதி அவர்களுக்கு மதுராந்தகனான இராஜேந்திர சோழதேவனின் பிரதம படைத் தலைவர் அரையன் ராஜராஜன் மகள் செங்கமலச் செல்வி எழுதிக் கொள்வது.

''நீர், பெண் மானென்று நினைத்துப் பெண் வேங்கையை வேட்டையாட வந்தது முதல் முட்டாள்தனம். அப்படி நேர்ப்பட வந்தும் கையாலாகாத இரண்டு அறிவிலிகளிடம் அந்த வேங்கையை ஒப்படைத்துப் போனது இரண்டாவது முட்டாள்தனம்.

''உம்முடைய அறிவீனத்துக்காக உமது வீரர்களை நான் கொல்ல விரும்பவில்லை. ஆனால், என்னை உம்மிடம் ஒப்படைப்பதாகச் சொன்ன அறிவிலியையும், அவன் தோழனையும் மாத்திரம் என்னுடன் அழைத்துச் செல்கிறேன். மற்ற வீரர்கள் பின்புறத்து அறையில் பத்திரமாக இருக்கிறார்கள். அந்த அறைச் சாவியும் இந்த ஓலையுடனிருக்கிறது. என் நடவடிக்கை எதற்கும் சத்திரக்காரன் பொறுப்பாளி அல்ல. அவனை ஒன்றும் செய்ய வேண்டாம். இன்னொரு முறை நாம் வேட்டுவச் சத்திரத்திலல்ல; போர்க்களத்திலேயே சந்திப்போம்,'' என்று கூறி முடித்த செங்கமலச் செல்வி, அந்த ஓலையை வாங்கித் தன் கையெழுத்தையும் பொறித்துவிட்டு, ''இதை அந்த முற்றத்துத் தாழ்வாரத்தின் ஓரத்தில் வைத்து, அதன் மீது ஒரு கல்லையும், அதன் பக்கத்தில் அறைச் சாவியையும் வையுங்கள். ஓர் அகல் விளக்குச் சற்றுத் தூரத்தில் எரியட்டும். இனிச் சத்திரக்காரனைக் கட்டுங்கள்,'' என்று தனது வீரர்களுக்கு உத்தரவிட்டாள்.

அவள் சொன்னபடி அலுவல்கள் படு துரிதமாக நடந்தேறின.

''இனி இவர்களை இவர்கள் புரவிகள் மீது வைத்துப் பிணையுங்கள்,'' என்று உத்தரவிட்டாள் அரையன் இராஜராஜன் மகள், அரிஞ்சயனையும், கரிகாலனையும் சுட்டிக் காட்டி. அவள் உத்தரவுப்படியே வீரர்கள் அரிஞ்சயனையும் கரிகாலனையும் எழுந்திருக்கச் செய்து, வாயிலுக்காக நடத்திச் சென்று, அங்கு தயாராக நிறுத்தப்பட்டிருந்த குதிரைகள்மீது அவர்களை ஏற்றி, இடுப்புகளில் கயிறு எறிந்து கால்களைக் குதிரைகள் வயிற்றில் சேர்த்து நன்றாக அசைய முடியாதபடி கட்டினார்கள். குதிரைகளின் சேணங்கள் அவற்றின் கழுத்துக்களிலேயே சுற்றப்பட்டன. அடுத்தபடியாக, செல்வியின் உத்தரவுப்படி பிரயாணத்தை உத்தேசித்துப் பந்தங்கள் கொளுத்தப்பட்டன. இரண்டு

வீரர்கள் பந்தங்களைப் பிடித்துக் கொண்டு முன்னே குதிரைகளில் செல்ல, பின்னே இரு குதிரை வீரர்கள் உருவிய வாட்களுடன் காவல் வர, இடையே அரிஞ்சயன் புரவியும் கரிகாலன் புரவியும் நடந்து செல்ல, சற்றுத் தள்ளி மாசுமறு இல்லாத முழு வெள்ளைப் புரவியொன்றன் மீது அமர்ந்து, சிறைப் பட்ட இருவர் மீதும் ஒரு கண்ணை வைத்துக் கொண்டு சென்றாள் செங்கமலச் செல்வி.

இரவு அர்த்த ஜாமத்தைச் சிறிதே தாண்டியிருந்ததால் வெள்ளிகூட முளைக்கவில்லை. நல்ல இருட்டின் காரணமாக ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தாலும், காடு அடர்த்தியாயிருந்ததால், அந்த வெளிச்சம் கூடச் சரியாகத் தெரியவில்லை. அடிக்கடி சாளுக்கியப் படையினரால் உபயோகப் படுத்தப்பட்டிருந்தாலும், காட்டின் பாதைகள்கூட ஒழுங்காக அமையவில்லை. குறுக்கும் நெடுக்குமாகச் சில ஒற்றையடிப் பாதைகள் சென்றன. அந்தப் பாதையில்கூட மழைக் காலத்தில் துளிர்விட்ட சந்தனச் செடிகள் இடுப்பளவு வளர்ந்து குறுக்கே தடை செய்து நின்றன. பிரம்மாண்டமாக வளர்ந்திருந்த சந்தன மரங்களின் நல்ல வாசனை, காடு முழுவதும் பரவிக் கிடந்தாலும், அந்த இன்பத்தை யாரும் அனுபவிக்க விடாமல் தடுத்த துஷ்ட மிருகங்கள் பலவித ஓலங்களைக் கிளப்பிக் கொண்டிருந்தன. இரை தேடி இரவிலே காட்டில் நடமாடிய ஓரிரண்டு சிறுத்தைகள் வீரர்களின் பந்தங்களைப் பார்த்ததும் நெருப்புக்குப் பயப்பட்டு அலறி ஓடின. தொலை தூரத்தில் சிம்மத்தின் கர்ஜனை ஒன்று பலமாகக் கேட்டது. நரிகள் ஏதோ மூலைகளில் ஊளையிட்டுக் கொண்டிருந்தன. இவற்றுடன் போட்டி போட்டுக் கொண்டு மரங்களிலிருந்து பட்சி ஜாலங்களும் சப்தித்துக் கொண்டிருந்தன.



''உள்ளே நுழையும்போது ஏன் நாய் இப்படிக் குரைக்கிறது?''
''வருகிறவர்களுக்கு 'வள்' கம் சொல்கிறது. வேறொன்றுமில்லை.''
—திருமலை கோவிந்தன்

காவிய ரசனையுள்ள கரிகாலன், காட்டின் இந்த அற்புதங்களில் மனத்தைப் பறிகொடுத்து கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். அவன் சிந்தனையில் தீவிரமாக ஈடுபட்டிருந்ததைக் கண்ட அரிஞ்சயன் மனத்தில் நம்பிக்கை சற்று உதயமாகவே, ''ஏதாவது வழியிருக்கிறதா?'' என்று மெள்ளக் கேட்டான்.

''வழியா! எதற்கு?'' என்றான் கரிகாலன், அரிஞ்சயனுக்கு மட்டும் கேட்கும் குரலில்.

''எதற்கு? தப்புவதற்குத் தான்!''

''அதைப் பற்றி நான் யோசிக்கவில்லையே!''

''பின் எதைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்தாய்?''

''சிருஷ்டி விசித்திரத்தைப் பற்றி.''

இந்தப் பதிலைக் கேட்ட அரிஞ்சயனுக்கு எரிச்சல் தாங்க முடியாததால், ''ஓகோ! தாங்கள் காவியங்களைப் படித்தவர்களல்லவா!'' என்று ஏளனமாகப் பேசினான்.

''ஆம், அரிஞ்சயா! அதனால் தான் சிந்தனைக்கு இடமிருக்கிறது. வள்ளுவர் என்ன சொல்கிறார் தெரியுமா?'' என்று கரிகாலன் வினவினான்.

அரிஞ்சயன் படித்தவனல்ல. அதுவும் வேங்கி நாட்டைச் சேர்ந்தவன். தமிழ் மொழியைச் சரியாக அறியாதவன். ஆகவே கேட்டான், ''யார் அது வள்ளுவர்?'' என்று.

''தமிழர்களின் தெய்வீகப் புலவர். வாழும் வழிநூல் வகுத்தவர்.''

''ஓகோ! அவர் என்ன சொல்கிறார்?''

# 'நண்பன்' ஆனது எப்படி?



வானொலி விளம்பரங்களில் எல்.ஆர். நாராயணன் தன்னை 'உங்கள் நண்பன் எல்.ஆர். நாராயணன்' என்று சொல்லிக் கொள்கிறாரே!

அதுபற்றி அவரிடம் கேட்டபோது—

''என் தந்தையிடம் விளம்பரக் கலை பற்றிப் பயிற்சி பெற்றேன். விளம்பரங்களை வானொலியில் சொல்லும்போது மக்களை ஈர்க்கும்படியாக வாசகங்கள் அமைய வேண்டுமே? 'உங்கள் அன்புள்ள' என்பதைவிட, 'நண்பன்' என்ற சொல் நெருக்கத்தை உண்டாக்கும்படியாக அமையும் எனத் தோன்றியது. 1961'ல் காவல்துறை பற்றி சின்னப் படம் ஒன்றை பொன். பரமகுரு 'உங்கள் நண்பன்' என்ற தலைப்பில் தயாரித்திருந்தார். மிகவும் வரவேற்பு பெற்ற படம் அது. அதே வாசகத்தை என் பெயருடன்—எங்கள் கம்பெனியுடன்—இணைத்துக் கொண்டோம்.''

தகவல்: 'பாமாப்ரியன்'

---

''தொட்டனைத்து ஊறும் மணற்கேணி; மாந்தர்க்குக் கற்றனைத்து ஊறும் அறிவு'' என்றார். அதாவது மண்ணைத் தோண்டுமளவுக்குத்தான் ஊற்றில் நீர் சுரக்கும்; படித்த அளவு தான் சிந்தனையும் ஊறும் என்பது அந்தப் பெரியவர் வாக்கு.''

''சரி. நீ நன்றாகப் படித்திருக்கிறாயல்லவா?''

''ஆகா!''

''சரி, அதை உபயோகப்படுத்திச் சிந்தனையைக் கிளறித் தப்புவதற்கு ஏதாவது வழி கண்டுபிடி'

''அதற்குத்தான் வழி தெரியவில்லை; தவிர சிந்தனை அதிலும் ஓடவில்லை!''

''பின் எதில் ஓடுகிறது?''

''இதோ இந்த ஆரண்யத்தின் சூழ்நிலையில் எங்கும் உயிர்களுக்குப் பலன் தரும் தருக்கள். அவற்றுடன் எங்கும் உயிரை அழிக்கும் துஷ்டமிருகங்களின் நடமாட்டம். அதோ, குயில், கிள்ளைகளின் இன்பக் கூச்சல்! அவற்றுடன் அதோ சிங்கம், புலி இவற்றின் கர்ஜனை! அமைதியாகவே ஆண்டவன் படைத்த மையிருட்டு! அந்த அமைதியைக் கலைக்கக் கிளம்பியுள்ள பயங்கரக் கதம்ப ஒலிகள்! சிருஷ்டியின் இரண்டு பாகங்களையும் இந்தக் காட்டில் பார்க்கிறேன். ஒன்று ஆக்கம், இன்னொன்று அழிவு. இரண்டுமே சம பாகத்திலிருப்பதால்தான் உலகம் ஜீவிக்கிறது.''

என்ன காரணத்தாலோ கடைசியாகச் சொன்ன வேதாந்தத்தைச் சற்று உரக்கவே சொன்னான் கரிகாலன். அதைக் கேட்ட செங்கமலச் செல்வியின் இதழ்களில் புன்னகை அரும்பியது. ஆனால் அரிஞ்சயன் உள்ளத்தில் மட்டும் உக்கிராகாரமான கோபம் பொங்கி எழவே அவனும் இரைந்தே கேட்டான், ''இந்தக் காட்டில் நீ பார்ப்பது இருக்கட்டும். இந்தக் காடு முடிந்ததும் எதைப் பார்க்கப் போகிறாய் தெரியுமா?''

''தெரியாதே.''

''நான் சொல்லட்டுமா?''

''சொல்லேன்.''

''சொர்க்கம்.''

''அப்படியா?''

''ஆமாம்; அரையன் ராஜராஜன் தாட்சண்யம் பார்ப்பவனல்ல. இரண்டு பேரையும் சொர்க்கத்துக்கு அனுப்பி விடுவான்.''

''அனுப்பலாம்; ஆனால் சொர்க்கத்துக்கு என்று சொல்ல முடியாது அரிஞ்சயா! நம்மைப்போன்ற ஒற்றர்களுக்குக் காத்திருப்பது நரகம் தான். அதுவும் மேதையான விமலாதித்தன் மகளை வஞ்சித்து ஜெயசிம்மனிடம்



# "மோகனிலிருந்து மோகன் சர்மா

ஒப்படைக்க முயன்ற நம்மைப் போன்றவர்களுக்குச் சொர்க்கம் கிடைப்பது மிகத் துர்லபம். சாத்திரம் அப்படியிருக்கிறது,'' என்றான் கரிகாலன்.

''அந்தச் சாத்திரத்தில் இடிதான் விழவேண்டும்!'' என்று சபித்த அரிஞ்சயன், அத்துடன் வாயை மூடினான். அதற்குப் பின்பு யாரும் பேசாமல் பயணம் மௌனமாகவே நடந்தது.

போகப்போகப் பாதையும் கடுமையாகிக் கொண்டு வந்ததால், வீரர்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் அரிஞ்சயனையும் கரிகாலனையும் நன்றாக நெருங்கியே வந்தார்கள். வெள்ளி முளைத்துச் சிறிது நேரம் ஆன பிறகுதான், காட்டின் முகப்பும் அதற்குச் சற்றுத் தொலைவிலிருந்த அரையன் ராஜராஜன் படைகளும் தெரிய ஆரம்பித்தன.

எதிரேயிருந்த காட்சியைக் கண்டு எதற்கும் அஞ்சாத கரிகாலன் மனங்கூடச் சற்று அசைந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் பந்தங்கள் தெரிந்தன. கூடாரங்களில் படுத்துறங்கிய வீரர்களைக் காக்க உலவி வந்த வீரர்களின் நடமாட்டம் எதிரேயிருந்த பரந்த வெளியின் அமைதியைக் கலைத்துக் கொண்டிருந்தது. சங்கிலியால் பிணைக்கப்பட்டு வைக்கப்பட்டிருந்த போர் யானைகள் கண்ணுக்குத் தெரியவில்லையானாலும், அவற்றின் பிளிறல் ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு சென்றது. காலை நெருங்கிவிட்டதால், எழுந்து உடலை உதறிவிட்டுக் கொண்ட புரவிகளின் கனைப்பும் கரிகாலன் காதில் விழுந்தது.

கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டிருந்த கூடாரங்களின் இடையே செப்பனிடப்பட்டிருந்த பாட்டைக்குள் நுழைந்த செங்கமலச் செல்வியைக் கண்ட காவல் வீரர்கள், அவளுக்கு அஞ்சலி செலுத்தினார்கள். அரிஞ்சயனையும் கரிகாலனையும் காவலில் வைக்கும்படி காவலாளிகளுக்கு உத்தரவிட்ட செங்கமலச் செல்வி, குதிரையை வேகமாகத் தட்டிவிட்டுத் தூரத்தே தெரிந்த தந்தையின் பாசறையை நோக்கிச் சென்றாள்.

கரிகாலனையும் அரிஞ்சயனையும் அழைத்துச் சென்ற காவலாளிகள், அவர்கள் கட்டுக்களை அவிழ்த்துவிட்டுக் கூடாரமொன்றில் காவல் வைத்தார்கள்.

நடிகை லட்சுமியிடமிருந்து நடிகர் தயாரிப்பாளர் மோகன் சட்டபூர்வமாகச் சில மாதங்களுக்கு முன் விவாகரத்து பெற்றார்.

தன் லெட்டர் ஹெட்டில் 'மோகன் சர்மா' என்று போட்டுக் கொள்கிறார்.

சமீபத்தில் மோகன், ஆங்கில இலக்கியத்தில் எம்.ஏ. பட்டம் பெற்ற மீனாட்சி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

திருமணம் மிகவும் எளிய முறையில், சென்னை போயஸ் கார்டனில் இருக்கும் மோகனின் பிளாட்டில் நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள் முன்னிலையில் நடந்தது. திரைப்பட சம்பந்தமான ஒருவரும் அழைக்கப்படவில்லை.

மீனாட்சி, சென்னையில் இந்துஸ்தான் மோட்டார் நிறுவனத்தில் பணிபுரிந்து வந்தார். திருமணத்திற்கு முன்பே மீனாட்சி தன் வேலையை ராஜினாமா செய்து விட்டார்.

இந்தத் திருமணம், காதல் திருமணம் அல்ல. பெரியவர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணம்.

—ரஜத்.

பொழுது புலர்ந்ததும் அவர்களே வியக்கக்கூடிய முறையில் காரியங்கள் நடந்தன. இருவரும் பெரிய மன்னர்களைப் போல நடத்தப்பட்டார்கள். ஸ்நான போஜன வசதிகளும் பிரமாதமாயிருந்தன. இதற்கெல்லாம் காரணம் அரிஞ்சயனுக்கு அடியோடு புரியாததால், ''என்ன கரிகாலா?'' என்று வினவினான்.

''எங்கள் பக்கத்தில் இப்படித் தான் வழக்கம்,'' என்றான் கரிகாலன்.

''ஓஹோ!''

''மாரியம்மனுக்குக் கிடாவைப் பலிகொடுக்கு முன்பு, அதற்கு நன்றாகக் குளிப்பாட்டி அலங்காரம் செய்து உண வளித்து பிறகுதான் வெட்டுவார்கள்,'' என்று சொல்லிச் சிரித்தான் கரிகாலன்.

அரிஞ்சயன் முகத்தில் பயத் தால் வியர்வைத் துளிகள் அரும்பின. ''பயப்படாதே அரிஞ்சயா! சாவு ஒரு பெரும் உறக்கம். அதற்குப்பின் மீண்டும் பிறப்பு உண்டு. உடல்தான் அழிகிறது! உயிர் அழிவதில்லை. நீ இறந்த பின்னும் ஜீவிப்பாய்,'' என்று வேதாந்தம் பேசினான் கரிகாலன்.

அந்த வேதாந்தம் அரிஞ்சய னுக்கு நாராசமாயிருந்தது. எந்த வினாடி அரையன் ராஜராஜனிடமிருந்து அழைப்பு வருமோ என்று நடுங்கிக் கொண்டிருந்தான் அரிஞ்சயன். அழைப்பு வந்தது. ஆனால் அரிஞ்சய னுக்கு அல்ல.

கரிகாலனையே முதலில் காவலாளர்கள் அழைத்துப் போனார்கள். அவன் திரும்பும் நேரத்தை எதிர்பார்த்துக் கூடாரத்தில் காத்திருந்தான் அரிஞ்சயன். பொழுது ஏறியதே தவிர, கரிகாலன் வரவில்லை. மெள்ள ஒரு வீரனை வரவழைத்துக் காரணத்தை விசாரிக்க முற்பட்ட அரிஞ்சயன். ''ஏனப்பா! போனவர் என்ன ஆனார்?'' என்று கேட்டான்.

''அவர் விஷயம் முடிந்து விட்டது,'' என்றான் வீரன்.

''அப்படியானால் என்னைக் கூப்பிடுவார்களா?'' என்று மீண்டும் கேட்டான் அரிஞ்சயன்.

''மாட்டார்கள்!'' திட்டமாக வந்தது பதில் வீரனிடமிருந்து.

''ஏன்?''

''உன் விஷயமும் முடிந்துவிட்டது.''

''என்ன உளறுகிறாய்?''

''சீக்கிரம் புரிந்து கொள்வாய்.''

விவரத்தைப் புரியவைக்க வந் தான் ஒரு தூதுவன். அதைப் புரிந்து கொண்டதும் அடியோடு இடிந்து போனான் அரிஞ்சயன்.

(தொடரும்)

**ஆறுவித்தியாசங்கள் விடை:**

1. தொட்டி
2. மரம்
3. **WETRO**
4. கடை
5. கார்
6. பழம் வாங்குபவர்.






### தென்கோடியில் ஒரு சமுதாயப் புரட்சி

(இரா. பொன்னு –பக். 110 –ரூ. 9 –தென்குமரி வெளியீடு, நாகர்கோயில் 629 001)

வைகுண்ட சுவாமிகளின் இயக்கம் பற்றிய ஒரு கண்ணோட்டம்.

### பக்திப் பூக்கள்

(இராஜதேவன் –பக். 64 –ரூ. 6 ஸ்ரீ சண்முகப்பிரியா பதிப்பகம், 9சி, பாரதி நகர், வடக்கு உஸ்மான் சாலை, சென்னை 600 017)

காவல் துறை உயர் அதிகாரி இயற்றிய பக்திப் பாடல்கள்.

### வீடு கட்ட வேண்டிய முறைகள்

(புஷ்பா அசோக்குமார் –பக். 60 –ரூ. 5 –இலக்குமி நிலையம், 10, காசிம் சாகிப் தெரு, சென்னை 600 014)

மனையடி சாஸ்திரம்.

### ஸையிதினா உதுமான்–கனீ துன்னூரைன்(ரலி)

(எம்.எஸ். முஹம்மது தம்பி–பக். 328 –ரூ. 25 – அன்ஸார் பப்ளிஷர்ஸ், 125, இராமசாமித் தெரு, சென்னை 600 001)

ஆட்சிப் பொறுப்பிலிருந்த ஓர் இஸ்லாமிய தத்துவ ஞானியின் வரலாறு.

### 1. நானறிந்த ராஜாஜி

(ம.பொ. சிவஞானம்–பக். 340 –ரூ. 26 –பூங்கொடி)

தமிழக அரசியலில் ம.பொ.சி.யைக் காட்டிலும் நெருக்கமானவர் ராஜாஜிக்கு இருந்திருக்க முடியாது. மதிப்பிற்குரிய தம் தலைவருக்கும் தமக்கும் இருந்த அரசியல் தொடர்பை ம.பொ.சி. விவரிக்கிறார்.

### 2. அமெரிக்காவில் மூன்று வாரம்

(ம.பொ. சிவஞானம் –பக். 164 –ரூ. 13 – பூங்கொடி)

அமெரிக்கப் பயண அனுபவங்கள்.

### 3. மோரீஷியஸ் தீவில் ஒரு வாரம்

(ம.பொ. சிவஞானம்–பக். 68 –ரூ. 6 –மூன்று புத்தகங்களும்: பூங்கொடி பதிப்பகம், 14, சித்திரைக் குளம் மேற்கு வீதி, சென்னை 600 004)

பயண நூல்.

முன் ஹாலில் மேசை மேல் வைத்திருந்த அழகான மேசை டைம்பீசைக் காணோம்.

செல்லம்மா, யோசித்து யோசித்துச் சொன்னாள், மதனிடம்.

''நம்ம பழைய குடித்தனக்காரர் ராமசாமி–இப்போது அண்ணா நகரில் வீடு கட்டிக்கொண்டு போய் விட்டாரே, அவர்–பெண் கல்யாணத்துக்குப் பத்திரிகை கொடுக்க வந்தார்.''

''அவர் போய்த் திருடுவாரா என்ன? சரி, அப்புறம்?''

''மளிகைச் சாமான் எடுத்துக்கொண்டு கடைப் பையன் வந்திருந்தான்.''

''அவன் ரொம்ப வருஷமாய் வந்து கொண்டிருக்கிறான். யோக்கியமான பையன். அப்புறம்?''

''உன் கம்பெனியில் வேலை கேட்டு 'ஒரு பிள்ளை முத்து என்று வந்தானே...''

''படிச்ச பையன். திருட மாட்டான். அப்புறம்? வேலைக்காரி கீலைக்காரி–''

''பார்த்தியா? மறந்தே போனேன்? மங்காத்தா இன்னிக்குச் சாயங்காலம் என்னோடு சண்டை போட்டு வேலையிலிருந்து நின்று விட்டாள்,'' என்றாள் செல்லம்மா.

''ஏன்?''

''இன்னொரு குடம் தண்ணி கொண்டு வான்னு சொன்னேன். 'உங்க வீட்டிலே வேலை செய்ய என்னாலே முடியாது. நின்னுக்கறேன்' என்றாள்.'' சொல்லிக்கொண்டிருந்தவள், சட்டென்று, ''ஆமாண்டா மதன். அவள்தான் எடுத்திருக்கணும். அதுதான் அனாவசியமா சண்டை பிடிச்சு, வேலையை விட்டு நின்னிட்டாள். போலீசில் போய்ச் சொல்லு,'' என்றாள்.

''வேண்டாம், விடு. அஜாக்கிரதையாய் நீ கழற்றி வைக்கிற நகை நட்டெல்லாம் போகாம, இந்தக் கடியாரத்தோடு போச்சே, அதுக்காகச் சந்தோஷப் படு,'' என்றான் மதன்.

எங்கே

சாண்டில்யன்




## 31. அரையன் ராஜராஜன்

சோழர் படைத் தலைவனிடமிருந்து வந்த தூதுவன் விஷயத்தைப் புரிய வைத்ததும் ஜெயசிம்ம சாளுக்கியனின் அந்தரங்க ஒற்றனான அரிஞ்சயன் அடியோடு இடிந்துபோய் விட்டானென்றால், அதற்குப் போதிய காரணம் இருக்கத்தான் செய்தது. வந்த தூதுவனும் சாதாரண வீரனல்லவென்பதையும், அவன் குறைந்தபட்சம் சோழப்படையில் ஓர் உபசேனாதிபதி பதவியையாவது வகிப்பவனென்பதையும், அரிஞ்சயன் அவன் உடையிலிருந்தே ஊகித்துக் கொண்டான். வந்தவன் பேசிய தோரணையும் அரிஞ்சயன் ஊகம் முற்றிலும் சரியென்பதற்கு அத்தாட்சியாயிருந்தது.

தூதுவன் கூடாரத்துக்குள் நுழைந்து அரிஞ்சயனைச் சந்தித்து, சுற்றுவட்டமாக எதுவும் பேசாமல், போர் வீரனுக்கு இயற்கையாக உள்ள பாணியில் பட்டவர்த்தனமாக விஷயத்தில் நேரே இறங்கி, ''அரிஞ்சயரே, உங்கள் விசாரணை முடிந்துவிட்டது. நாளைக் காலையில் நீங்கள் காஞ்சி மாநகர் புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும்,'' என்று அறிவித்தான்.

''என் விசாரணை முடிந்து விட்டதா! என்னை யாரும் விசாரிக்க வில்லையே!'' என்று அரிஞ்சயன் ஆச்சரியத்துடன் கூறினான்.

தூதுவன் பதில் பளிச்சென்று வெளிவந்தது. ''தங்களை நேரிடையாக விசாரிக்க வேண்டிய அவசியமில்லாது போயிற்று. தாங்கள் ஜெயசிம்ம சாளுக்கியனின் அந்தரங்க ஒற்றனென் பதற்குத் தகுந்த அத்தாட்சிகள் கிடைத்து விட்டன,'' என்று, ஏதோ சாதாரண விஷயத்தைத் தெரிவிப்பவன் போல் மிகுந்த அசட்டையுடன் தெரிவித்தான் அந்தத் தூதுவன்.

அரிஞ்சயன் முகத்தில் கோபமும் திகிலும் கலந்த உணர்ச்சிகள் தோன்றின. அந்த உணர்ச்சிகளால் தூண்டப்பட்டவனாய் ஆத்திரத்துடன் கேட்டான் அரிஞ்சயன், ''அத்தாட்சிகள் எங்கிருந்து கிடைத்தன?'' என்று.

''அதைத் தங்களுக்கு விளக்க வேண்டிய அவசியமில்லை. உத்தரவு உத்தரவுதான்!'' என்று மீண்டும் கிடைத்தது தூதுவனின் திட்டமான பதில்.

''என்ன விசாரணை இது? என்ன உத்தரவு? இதுதான் உங்கள் சோழ நாட்டு விசாரணை முறையோ?'' என்று சீற்றத்துடன் கேட்டான் அரிஞ்சயன்.

அரிஞ்சயன் கேள்வியையும் அவன் முகத்தில் பிரதிபலித்த சீற்றத் தையும் கண்ட தூதுவன் வாய்விட்டுப் பெரிதாகச் சிரிக்காவிட்டாலும், லேசாகப் புன்முறுவல் செய்து, ''அரிஞ்சயரே! சோழர் விசாரணை சாளுக்கியர் விசாரணைக்கு எந்த விதத்திலும் குறைந்ததல்ல. எங்கள் படைத் தலைவர் சரியான

---

# பாவாடை தாவணியாம்!

பானு டைப் இன்ஸ்டிட் யூட்டிற்குக் கிளம்பினாள்.

தெருமுனை திரும்பி அடுத்த தெருவில் நுழைந்தபோது, வாசல் களில் பெண்களின் வம்பளப்பு...

தங்கள் அலசலை ஒத்தி வைத்துவிட்டு, பார்வையைப் பானு பக்கம் திருப்பினார்கள். பானு அவர்கள் வாய்க்கு அவல் ஆனாள்.

''சின்னப் பொண்ணுன்னு நினைப்பு! போறதைப் பாரேன்... இருபத்தஞ்சு வயசாகுது... மாடாட்டம் வளர்ந்தாச்சு. பாவாடை தாவணியில் போறது பாருங்கோ!'' ஒரு பெண் காமெண்ட் அடித்தாள்.

''ம்... இவளுக்கு இன்னும் பதினைஞ்சு வயசுன்னு நினைப்பு! இளமை ஊஞ்சலாடுது! ஹூம்! இந்த வயசுல அரைத் தாவணி போட்டு மினுக்கிட்டு...''



அத்தாட்சியின்றி எந்த முடிவுக்கும் வரமாட்டார். ஜெயசிம்மன் விசாரணை முறைகள் எங்களுக்குத் தெரியும். அவன் சிருஷ்டித்துள்ள கோதண்டத்தைப் பற்றி நாங்கள் நன்றாக அறிவோம். அந்த மாதிரி உம்மைக் கோதண்டத்தில் மாட்டி எலும்புகளை முறித்து விசாரிக்காமல், இங்கு ருசுக்களைக் கொண்டு தண்டனை விதிக்கப்படுவதைப்பற்றி நீர் மகிழ்ச்சியடைய வேண்டுமேயொழிய, சீற்றமடைவது சரியல்ல,'' என்று இடக்கும், கிண்டலும் கலந்த குரலில் விளக்கினான்.

தூதுவன் பேச்சோடு பேச்சாகத் தண்டனையைப் பற்றிப் பிரஸ்தாபித்ததைக் கவனித்த அரிஞ்சயன் முகத்தில் சீற்றம் மறைந்து, கிலி பரவலாயிற்று. ''தண்டனையா? என்ன தண்டனை?'' என்று நடுங்கும் குரலில் கேட்டான்.

''காஞ்சி மாநகரில் சிறைவாசம்,'' என்று கிடைத்தது பதில்.

''எத்தனை நாளைக்கு?''

''கால வரையறையைத் தலைவர் குறிப்பிடவில்லை.''

''ஆயுள் பூராவும் சிறையில் கிடக்க வேண்டுமா?''

''தெரியாது, ஆனால் இந்தச் சிறைவாசம் கிடைத்தது தங்கள் அதிர்ஷ்டம்.''

''அதிர்ஷ்டமா!'' பூரணமான திகிலும் ஆச்சரியமும் தொனித்தது அரிஞ்சயன் குரலில்.

தூதுவன் விளக்கினான்: ''ஆமாம். உங்களைப் பிடித்த நல்ல காலம் கரிகாலன் கருணை காட்டினார்!'' என்று விவரம் தெரிவித்தான்.

''கரிகாலர் கருணை காட்டினாரா?'' அரிஞ்சயன் ஆச்சரியம் உச்சஸ்தாயியை அடைந்தது.

''ஆமாம். படைத்தலைவர் உங்கள் தலையைச் சீவிவிடும்படி உத்தரவிட்டார். ஆனால், கரிகாலர் தலையிட்டு அதற்கு அவசியமில்லையென்று மன்றாடினார். அவர் யோசனையின் மேல்தான் இப்பொழுது தங்களைக் காஞ்சி மாநகர் சிறைக்கு அனுப்புகிறோம்,'' என்று மேலும் விளக்கினான் தூதுவன்.

---

இந்தப் பேச்சுக்கள் காதில் விழ, பானு குறுகிப் போனாள். மனது படபடவென அடித்தது. தினம் தினம் இந்த மாதிரிப் பேச்சை அவள் கேட்டுக்கொண்டுதான் இருக்கிறாள்.

போகும் வழியில் அவள் தோழி வசந்தியின் வீடு இருந்தது. அவளும் டைப் இன்ஸ்டிட்யூட்டில் பானுவோடு படிக்கிறவள்தான்.

''வசந்தி...''

''தோ வந்துட்டேன் பானுக்கா!''

வசந்தி தழைய நைலக்ஸ் சேலைக் கட்டியிருந்தாள். பானுவுக்கு நெஞ்சு குறுகுறுத்தது.

பதினெட்டு வயசுகூட ஆகாத வசந்தியெல்லாம் பெரிய மனுஷி மாதிரி சேலை கட்டிட்டு வரா... நாம்தான் இன்னும்....

''என்ன பானுக்கா... ஒரு மாதிரியா இருக்கீங்க...''

''ஒ... ஒண்ணுமில்லே வசந்தி... நான் பாவாடை தாவணி போடறது பத்திப் பரிகாசம் பண்றாங்க...''

''நான்கூடக் கேட்கணும்னு நினைச்சிட்டிருந்தேன். ஏன் நீங்க எப்பவும் அரைத்தாவணியே போடுறீங்க?''

அடக்க இயலாமல் பானு சட்டென உடைந்து போனாள்.

''வசந்தி... எங்க வீட்டு நிலைமை உனக்குத் தெரியாதா? பண்டிகைக்குக்கூடத் துணி எடுக்க முடியாம இருக்கிறோம்... நோயாளி அம்மா... கூலி வேலைக்கு போய் ஆறோ ஏழோ கொண்டுவர்ற அப்பா.... நான்... நான் சேலைக்கு எப்படி ஆசைப்பட முடியும் வசந்தி? தாவணின்னா சேலை எடுக்கிற செலவுல பாதிகூட வராது... அதனாலதான்.... நான் ...நான்...''

தொடர்ந்து பேசமுடியாமல் கேவிக் கேவி அழுதாள் பானு.

ஜே.டி.ஆர்.



## காந்தி லெனினாகிறார்

அவன் விளக்க விளக்க ஏதும் புரியாமல் திண்டாடினான் அரிஞ்சயன். ''கரிகாலன் யோசனை சொன்னானா? சோழர் படைத்தலைவனுக்கு யோசனை சொல்ல இவன் யார்?'' என்று சிந்தித்தான் ஜெயசிம்ம சாளுக்கியனின் ஒற்றன்.

விஷயத்தை அவனுக்கு மேலும் தெளிவுபடுத்தத் தொடங்கிய தூதுவன், ''கரிகாலன் யோசனையைப் படைத் தலைவர் எப்படிக் கேட்காமலிருக்க முடியும்? மகனின் சொல்லைத் தந்தை தட்ட முடியுமா?'' என்றான்.

அரிஞ்சயனுக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. ''அரையன் ராஜராஜன் மகனா கரிகாலன்!'' என்று தட்டுத் தடுமாறி வார்த்தைகளை உதிர்த்தான் அரிஞ்சயன். மெள்ள மெள்ள அவன் சித்தத்தில் உண்மை உதயமாகத் தொடங்கியது. அசைக்க முடியாத பல ருசுக்களாலேயே ஜெயசிம்ம சாளுக்கியன் கரிகாலனிடம் ஏமாந்திருக்கிறானென்பதை அரிஞ்சயன் புரிந்து கொண்டதோடல்லாமல், வேட்டுவச் சத்திரத்தில் கரிகாலன் நடத்திய மிக அதிசயமான நாடகத்தின் மர்மத்தையும் உள்ளங்கை நெல்லிக் கனியென உணர்ந்துகொண்டான் துங்கபத்ரா நதியைத் தாண்டிப் போக விடாமல் கரிகாலன் தன்னைச் சத்திரத்துக்கு அழைத்துச் சென்றது, அங்கு வந்த விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை ஏமாற்றித் திரும்ப ஊருக்கு அனுப்பி வைத்தது, மாடியறையில் அரையன் ராஜராஜன் மகளோடு ரகசியம் பேசியது, அவன் வீரர்களின் வாட்களையெல்லாம் கரிகாலன் தன்னிடமே பத்திரப்படுத்திக் கொண்டது முதலிய சகல நடவடிக்கைகளுக்கும் மூலகாரணம் தெள்ளெனத் தெரியவே, எத்தனை அபாயமான எதிரியை நம்பி ஜெயசிம்ம சாளுக்கியன் தன்னை அனுப்பினான் என்பதை நினைத்து மன்னன்மீது பேராத்திரமும் கொண்டான். தான் அவதிப்படும் அந்தச் சமயத்தில் கரிகாலன் அரச போகத்திலிருப்பான் என்பதை நினைத்து ஆத்திரம் கலந்த பெரு மூச்சொன்றும் விட்டான். அன்று காலை கரிகாலன் கூடாரத்திலிருந்து வெளியேறியபோது, அவனுக்கிருந்த கலகலப்பின் காரணத்தையும் புரிந்து கொண்ட அரிஞ்சயனுக்குக் கரிகாலனை வெட்டி சாய்த்து விடலாம் போலிருந்தது. ஆனால், சிறகொடிந்த பட்சியான அரிஞ்சயன் என்ன செய்வான்? விதியை நினைத்துப் பெருமூச்சு விடத்தான் முடிந்தது அவனால்.

உண்மையில், காலையில் கூடாரத்திலிருந்து கிளம்பியபோது கரிகாலன் மிகுந்த உற்சாகத்துடனேயே கிளம்பினான். தன் ஆடைகளை நன்றாகச் சரிப்படுத்திக் கொண்டான். இடுப்புக் கச்சையை இறுகக் கட்டி மடியையும் இருமுறை சோதித்துக் கொண்டான். மரண பயத்திலிருந்த அரிஞ்சயனுக்குக் கரிகாலனுடைய ஏற்பாடுகள் எரிச்சலை விளைவிக்கவே, ''என்ன கரிகாலா! பெண் பார்க்கப் போகிறாயா? அலங்காரம் பலமாயிருக்கிறதே!'' என்று கேட்டான்.

''பெண் பார்க்கப் போனால் தான் சரியாகப் போக வேண்டுமா? அரச சந்நிதானத்துக்கும் ஒழுங்காகப் போக வேண்டுமென்றுதான் சாஸ்திரம், சொல்லுகிறது,'' என்றான் கரிகாலன்.

''உன் சாஸ்திரத்தில் இடி விழ! நம் நிலைமையை யோசித்துப் பார்த்தாயா?''

''ஆகா, பார்த்தேன்.''

---

**கா**ந்தியாக நடித்து, ஆஸ்கர் பரிசு பெற்ற பென் கிங்ஸ்லி, 'த ட்ரெயின்' என்ற டி.வி. தொடரில் (அமெரிக்கத் தயாரிப்பு) லெனின் வேடமிட்டு நடிக்கிறார்.

—'பாமாப்ரியன்.'

''உன்னை வெட்டிப் போட்டால் என்ன செய்வாய்?''

''அதைப் பற்றிக் கவலைப்பட்டு என்ன பயன்?''

''கவலைப்படாவிட்டாலும் படாடோபம் இல்லாமலிருக்கலாமல்லவா?''

''ஏன் இல்லாமலிருக்க வேண்டும்?''

''சாவதற்குப் படாடோபம் அவசியமா?''

''வீரர்களுக்கு அவசியம்தான். சாகும்போது வீரனாகச் சாக வேண்டும். வீரனுக்குரிய ஆடை அணிகளோடு மரணமடைவதுதான் நல்லது.''

அரிஞ்சயனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. ''கரிகாலா! பைத்தியமாயிருக்காதே! உன் சுபாவத்தைச் சோழர் படைத் தலைவனிடம் காட்டாதே. அரையன் ராஜராஜன் மகா பொல்லாதவன். அவன் பெயரைக் கேட்டாலே மக்கள் நடுங்குகிறார்கள். இவன் அரசனல்ல; அரசர் படைத் தலைவன்தான். அதிகப் படாடோபத்தை விரும்பாதவன் என்றும் பெயர்,'' என்று எச்சரித்தான்.

கரிகாலன். அந்த எச்சரிக்கையைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே சொன்னான், ''அரிஞ்சயா! அரையன் ராஜராஜன் அரசனல்ல; ஆனால் அரசனின் பிரதிநிதி. ஆகையால் அரசனுக்குள்ள மரியாதையை இவரிடமும் காட்ட வேண்டும். இது சாஸ்திரம். முறைப்படி நடக்க வேண்டியது நம் பொறுப்பே தவிர, அவருக்கு எது விருப்பம், எது விருப்பமல்ல என்பதைக் கவனிக்க வேண்டியது நமது கடமையல்ல,'' என்று.

கரிகாலனை அழைத்துப் போக வந்திருந்த வீரனும், இந்தத் தர்க்கத்தைக் கேட்டுக்கொண்டே நின்றானாதலால் கரிகாலனுக்கு என்ன நேரிடுமோ என்ற கவலையுடனும், கரிகாலன் முரட்டுத்தனமாக நடந்து கொண்டால் அதன் விளைவு தன்மீதும் பாயுமே என்ற பயத்துடனும், அரிஞ்சயன் அன்று காலையில் கரிகாலனுக்கு விடை கொடுத்து அனுப்பினான்.

கூடாரத்தை விட்டு வெளியே

## ஜானி-ஜூலி



''தொண்டை
கட்டிட்டிருக்கும்மா.
எனக்காகக குரைக்கிற
துக்கு டப்பிங் ஏற்பாடு
பண்ணினா நல்லா-
யிருக்கும்!''

வந்ததும் கரிகாலனுக்குத் தனிப் புரவியொன்றை அளித்த சோழ வீரன், தானும் தன் புரவிமீதமர்ந்து படைகளின் ஊடே கரிகாலனை அழைத்துச் சென்றான். அப்பொழுது வெயில் கிளம்பி வெகுநேரம் ஆகிவிட்டதால், அரையன் ராஜராஜன் படைகளை ஓரளவு அளவெடுக்க முடிந்தது கரிகாலனால். தக்ஷிணத்துப் பீடபூமியின் அந்தச் சமவெளியில், கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் கூடாரங்களும் ஓலை வீடுகளும் நிரம்பிக் கிடந்தன. வரிசை வரிசையாகப் படைகளே அணிவகுத்து நிற்பனபோல் அமைக்கப்பட்டிருந்த கூடாரங்கள், ஓலை வீடுகள், இவற்றுக்கிடையே இருந்த பாதைகள் நன்றாகச் செப்பனிடப்பட்டிருந்தன. பத்துப் பதினைந்து கூடாரங்களுக்கு இடையில் சமையல் கட்டடம் ஒவ்வொன்று தனித்து நின்று சமையல் நடந்து கொண்டிருந்ததன் காரணமாகப் புகைந்து கொண்டுமிருந்தன.

காட்டில் இரவில் வேட்டையாடிவிட்டு வந்த வேடர்கள் தாங்கள் அடித்துக்கொண்டு வந்திருந்த மான்களையும் காட்டு ஆடுகள், பட்சிகள் முதலியவற்றையும் சுமந்துகொண்டு படைகளுக்கு விற்பதற்காக நடந்து கொண்டிருந்தார்கள். அந்த மாமிசங்களை வாங்கப் படையின் உக்கிராணக்காரர்கள் பலர் ஆங்காங்கு பொன் நாணயங்களுடன் காத்துக்

கொண்டிருந்து, மான் முதலியவற்றைக கையிலேயே தூக்கிப் பார்த்து எடைக்குச் சரியாகக் காசுகளை வழங்கிக் கொண்டிருந்தனர்.

இவற்றையெல்லாம் பிரமையுடன் பார்த்துக் கொண்டே சென்ற கரிகாலன், சோழர்கள் படை பலத்தையும் முக்கியமாக அரையன் ராஜராஜன் அவற்றை நிர்வகித்து வந்த திறமையையும் பெரிதும் வியந்தான். நாலா பக்கமும் குதிரைகள் நடை பழக்கப்பட்டு வந்தன. யானை வீரர்களும் வேகமாகச் சுற்றுப்புறங்களில் அவற்றை நடத்திச் சென்றார்கள். எங்கும் வீரர்கள் கோஷம்! குதிரைக் குளம்புகளின் ஒலி! யானைகளின் பயங்கரப் பிளிறல்!

இந்தச் சூழ்நிலையில் சுமார் இரண்டு நாழிகை தூரம் குதிரையில் பிரயாணம் செய்த கரிகாலன், தூரத்தே ஒரு தோப்புக்கு நடுவில் ஒரு பெரிய மாளிகை இருப்பதையும் அதன் மீது சோழர்கள் புலிக்கொடி கம்பீரமாகப் பறப்பதையும் கண்டு, அதுதான் சோழர்கள் படைத்தலைவன் இருப்பிடமாயிருக்க வேண்டுமென்றும் ஊகித்தான். அந்த ஊகம் சரியாகவே யிருந்தது. தோப்பின் முகப்பிலிருந்து பல காவற் கட்டுக்களைக் கடந்து கட்டிடத்தின் முகப்புக்கு வந்ததும் கரிகாலனைப் புரவியிலிருந்து இறங்கச் சொல்லித் தானும் இறங்கினான் சோழ வீரன். பிறகு அவன் மட்டும் உள்ளே சென்று சற்று நேரத்தில் திரும்பி வந்து தன்னைத் தொடருமாறு கரிகாலனுக்குச் சைகை செய்து, கட்டிடத்துக்குள் சென்றான். கட்டிடம் மிகப் பெரிது என்று சொல்ல முடியாதென்றாலும், கூடியவரையில் பெரிய மாளிகைதான். இரண்டு மூன்று கட்டுகள் தாண்டியே இருவரும் செல்ல வேண்டியதாயிற்று. மூன்றாவது கட்டை நெருங்கியதும் வீரன் பின்னுக்குத் தள்ளி நின்று கரிகாலனை மட்டும் உள்ளே செல்லும்படி கையைக் காட்டினான்.

மூன்றாவது கட்டுக்குள் நுழைந்த கரிகாலன் மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. அந்த மாளிகைக்குள் மிகப் பெரிய கூடம்

## ரேகாவை ரேகா என்று கூப்பிடுவதில்லை



பாரதிராஜாவும், அவருடைய சகாக்களும் ரேகாவை ரேகா என்று கூப்பிடுவதே கிடையாது. எல்லாருமே 'சுமதி' என்று அழைக்கிறார்கள். ரேகாவின் உண்மைப் பெயர் அது.

எந்தத் தயாரிப்பாளராவது தங்கள் படத்தை டைரக்ட் செய்பவரைப் பற்றித் தாங்களே புரளி கிளப்பி விடுவார்களா?

சின்னப் பூ மெல்லப் பேசியதற்கப்புறம் ராபர்ட் ராஜசேகரனுக்கு எந்தப் படமும் வரவில்லை என்ற வதந்தியைப் பரப்பியவர்கள் ரா—ராவை வைத்து அடுத்த படம் செய்து வரும் அதே சி.பூ.மெ.பே. தயாரிப்பாளர்தானாம். அவரே அதைச் சொல்லிக் கொள்கிறார்.

''எங்கள் படத்தைச் செய்துகொண்டிருக்கும்போது மற்றத் தயாரிப்பாளர்கள் வந்து ராபர்ட் ராஜசேகரனைத் தொந்தரவு செய்து, அதனால் எங்கள் படம் கெட்டு விடக் கூடாது என்பதற்காக நாங்கள்தான் அப்படியொரு வதந்தியைக் கிளப்பி விட்டோம்,'' என்றார் தயாரிப்பாளர்.

ரஜனி கேட்ட மாதிரி இது எப்டி இருக்கு?

—துரை

அதுதான். அங்கிருந்த சிற்பங்களும் பிரும்மாண்டமான தூண்களும், அந்த மாளிகை சாளுக்கியர்களால் நிர்மாணிக்கப்பட்டது என்பதை வலியுறுத்தின. சுற்றுமுற்றும் கூடத்தைக் கவனித்தான் கரிகாலன். தூண்களின் உச்சியில் செதுக்கப்பட்டிருந்த யாளிகள் கரிகாலனைப் பயங்கரமாக உற்றுப் பார்த்தன. ஏதோ அற்புத உலகத்தைப் பார்ப்பது போல் பிரமை பிடித்து நின்ற கரிகாலனைக் கலகலவென்று உதிர்ந்த ஒரு சிரிப்பு இந்த உலகத்துக்கு இழுத்து வரவே, அவன் கண்கள் எதிர்த் திசையில் திரும்பின. கண்களைப் பறிக்கும் வேலைப்பாடமைந்த ஓர் ஆசனத்தைப் பிடித்துக்கொண்டு, அழகே உருவாய் நின்றிருந்தாள் செங்கமலச் செல்வி. அவன் பார்வை அவள் மீது விழுந்ததும் அவள் சிரிப்பு அடங்கினாலும், இதழ்களில் லேசான புன்முறுவல் மட்டும் தேங்கி நின்றது.

அப்படியே எந்த ஆண் மகனையும் ஆகர்ஷித்துவிடக்கூடிய செங்கமலச் செல்வியின் தாமரை விழிகளில் சற்று நேரமே சிக்கி நின்றான் கரிகாலன். அவன் விழிகளைக் கவர்ந்து கொள்ள, அந்த அழகியின் விழிகளைவிடச் சக்தியுள்ள வேறு இரு விழிகள் கரிகாலனை நோக்கிப் பாய்ந்தன. அந்த விழிகளில் சிக்குண்டு வெகுநேரம் அசைவற்று நின்றான் கரிகாலன்.

சோழ நாட்டுக் கலைஞர்களின் கைத்திறனெல்லாம் முழுக்க முழுக்கத் திரண்டு கடைந்தது போல், தங்கத்தாலும் வெள்ளியாலும் இழைக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்திருந்தவனுடைய கண்களில் இருந்த ஒளி, கூர்மை, கம்பீரம், ஓர் அலட்சியத் தன்மை, உறுதி இத்தனையும் கண்ட கரிகாலன் இவர்தான் இராஜேந்திர சோழ தேவரின் படைத்தலைவராயிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்து, அவரை மெள்ள ஏறிட்டும் நோக்கினான்.

இராஜேந்திர சோழ தேவரின் பிரதம படைத் தலைவனும், போரிடும் பராக்கிரமத்தால் 'விக்ரமச் சோழ சோழிய வரையன்' என்பது போன்ற பல விருதுகளைப் பெற்றவனுமான அரையன் ராஜராஜனும், எதிரே நின்ற கரிகாலனை ஒரு விநாடி பார்த்தான்.

---




எங்களுக்காக

டோனி கிராஃப்டர் (ஆஸ்திரேலியா); டிக்கி பேர்ட் (இங்கிலாந்து); வி.கே. ராமசாமி (இந்தியா); மகபூப் ஷா (பாகிஸ்தான்); விதனகம நே (ஸ்ரீலங்கா); உட்வார்ட் (நியூஜிலந்து); டேவிட் அர்ச்சார் (வெஸ்ட் இண்டீஸ்); கே. ஹயாத் (பாகிஸ்தான்); டி.கே. செப்பார்ட் (இங்கிலாந்து); ராம்பாபு குப்தா (இந்தியா).

வருகிற அக்டோபரில் இந்தப் பத்துப் பேர் முக்கியஸ்தர்களாகக் கருதப்படுவர். இந்தியா–பாகிஸ்தான் நகரங்களில் சுற்றப் போகிறார்கள். பல வெற்றி தோல்விகளை நிர்ணயிக்கப் போகிறார்கள். அப்படி நிர்ணயிக்கும்போது சிலரிடம் அடி வாங்கினாலும் திட்டு வாங்கினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இந்தப் பத்துப் பேர் யார்?

வருகிற அக்டோபரில் நடைபெறவிருக்கும் ரிலையன்ஸ்–உலகக் கோப்பைக் கிரிக்கெட் பந்தயக்களுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பல்வேறு நாட்டு அம்பயர்கள் இவர்கள்.

—வேடசந்தூர் வெண்ணிலா

## நலம்தானா?

நானும் எனது நண்பனும் ஒரு டாக்டரை அவருடைய வீட்டில் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தோம். டாக்டருடைய பெற்றோர்கள் கிராமத்தில் வசிக்கிறார்கள். எனது நண்பனின் பக்கத்து வீடு அவர்களுடையது. வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தும் கூட, டாக்டர் தன்னுடைய தாய் தந்தையரின் நலனை விசாரிக்கவில்லை. பிறகு இதுபற்றி எனது நண்பனிடம் கேட்டேன். அவன் சொன்னான்: ''எந்த டாக்டருமே, யாருடைய நலத்தையும் விசாரிக்க மாட்டார்கள். காரணம்: அவர்களுடைய தொழில் அப்படி. நலம் இல்லாவிட்டால் தான் டாக்டரைத் தேடி வந்து விடுவார்களே. நலமாக இருந்தால் வரமாட்டார்கள். எனவே, 'நல்லா இருக்கின்றார்களா?' என்று யாரிடமும், யாரையும் கேட்பதில்லை!''

அதுசரி, வயதான பெற்றோர்களைக் கூடவா நலம் விசாரிக்கக் கூடாது?

—உ.ப. சுப்பிரமணியன்

பிறகு அதிகம் பேசாமல் ஒரே ஒரு கேள்விதான் கேட்டான். அந்தக் கேள்வியைக் கேட்டதும் திக்பிரமை யடைந்த கரிகாலன், 'சோழர் படைத் தலைவனுக்கு ஒருவேளை ஜோஸ்யமும் தெரியுமோ?' என்று ஏதேதோ பலவாறாக யோசித்துக் கொண்டு, பதிலேதும் பேசாமல் சற்று நேரம் நின்றான்.

''நீ யாரென்று எனக்குத் தெரியும். எடு தஞ்சைத் துறவியார் கொடுத்த ஓலையையும், சூடாமணி விஹாரத் தலைவர் கொடுத்த முத்திரை மோதிரத்தையும்,'' என்று அரையன் ராஜராஜனிடமிருந்து இரண்டாம் முறையாக வெளிப்பட்ட சொற்கள் கரிகாலன் ஆச்சரியத்தைப் பன் மடங்காகப் பெருக்கின. அந்த ஆச்சரியம் கரிகாலனுக்கு மட்டுமல்ல, செங்கமலச் செல்விக்கும் ஏற்படவே, ''அப்பா! இவரை உங்களுக்கு முன்பே தெரியுமா?'' என்று கேட்டாள்.

''தெரியும்.'' சுருக்கமாகக் கிடைத்தது பதில்.

''யாரிவர்?''

''அதைச் சொல்ல எனக்கு உரிமையில்லை மகளே!'' என்றான் அரையன் ராஜராஜன்.

எந்தத் தன்னுடைய பிறப்பு மர்மத்தை அறியச் சூடாமணி விஹாரத்திலிருந்து புறப்பட்டானோ, அந்த மர்மம் அரையன் ராஜராஜனை அடைந்த பிறகும் துலங்காமல், அதிக மர்மமாகவே புதையுண்டு போவதையறிந்த கரிகாலனும், துணிவை வரவழைத்துக்கொண்டு, ''படைத் தலைவரே! என் பிறப்பு மர்மத்தை அறியவே நான் சூடாமணி விஹாரத்திலிருந்து புறப்பட்டேன். அதை நான் எப்பொழுது அறிய முடியும்?'' என்று வினவினான்.

அரையன் ராஜராஜன் ஆசனத்திலிருந்து எழுந்து வந்து, தன் வலிய கரமொன்றைக் கரிகாலன் தோள்மீது வைத்து, அன்பு ததும்பும் விழிகளுடன் அவனைப் பார்த்து, ''கரிகாலா! அந்த மர்மம் உனக்கு ஒரு நாள் தெரியலாம்; வாழ்க்கை பூராவும் தெரியாமலேயே போனாலும் போகலாம். என்னால் இப்பொழுது எதுவுமே சொல்ல முடியாது. எடு ஓலையை,'' என்று கூறிவிட்டு, ஓலையை வாங்க மற்றொரு கரத்தை நீட்டினான்.

(தொடரும்)

## நதியாவால் அபாயம்!



கல்லூரி மாணவிகள் தங்கள் முடியை வகிடு எடுக்காமல் தூக்கி வாரிக் கொள்கிறார்கள். (நதியா ஸ்டைல்).

டெல்லியில் பல வருடங்களுக்கு முன்பே இந்தப் பாஷனைப் பார்த்திருக்கிறேன். சமீபத்தில் டெல்லிக்கு மறுபடி சென்றிருந்தபோது அதிர்ச்சி!

அங்கு பல பெண்களுக்கு முன் நெற்றியில் உள்ள முடியெல்லாம் கொட்டி வழுக்கையாகி ஆண்களைப் போல் காட்சியளிக்கிறார்கள்! அந்தப் பகுதியில் மீண்டும் முடி வளர்வதற்குச் சான்ஸே இல்லை! ஆகையால் நம் ஊரில் உள்ளவர்கள் நதியா ஸ்டைலை உடனே மாற்றிக் கொண்டால் பிழைப்பார்கள்.

—ஜெயந்தி பத்பநாபன், சென்னை—14.

# மன்னன் மகள்



18-9-87

## 32. வாழ்வின் வசந்தம்

படைகளை அணிவகுத்து நடத்துவதிலும் வியூகங்களை வகுப்பதிலும் இணையற்றவனென்று பிரசித்தி பெற்ற விக்ரமச் சோழிய வரையனான அரையன் ராஜராஜன் தன் தோள்மீது கை வைத்ததால், உடலை ஊடுருவிச் சென்ற உணர்ச்சிகளின் வேகத்தாலும், தன்னைக் குனிந்து நோக்கிய அவனது இரு விழிகளின் காந்த சக்தியாலும் கருத்தை அடியோடு பறிகொடுத்துச் சிலையெனச் சில வினாடிகள் நின்ற கரிகாலன், கடைசியாகச்

சாண்டில்யன்



சுயநிலைக்கு வந்து கச்சையிலிருந்த ஓலைச் சுருளையும் சூடாமணி விஹாரத் தலைவர் கொடுத்த முத்திரை மோதிரத்தையும் எடுத்து அரையன் ராஜராஜன் நீட்டிய வலக்கரத்தில் மிகுந்த பயபக்தியுடன் வைத்தான். மோதிரத்தையும் ஓலையையும் பெற்றுக் கொண்டதும், அரையன் ராஜராஜன், கரிகாலன் தோள் மீதிருந்த கையை அகற்றிவிட்டு, இரண்டடி எடுத்து வைத்து அந்தக் கூடத்தின் ஒரு பக்கத்தி லிருந்த சாளரத்தை நோக்கி நடந்து, அவற்றைப் பரிசோதிக்கலானான்.

அரையன் ராஜராஜனைச் சந்திக்க நேர்ந்த பிரமையால் அதுவரை சோழர் படைத் தலைவனைச் சரியாகக் கவனிக்காத கரிகாலனும், படைத்தலைவன் சாளரத்தை அணுகி, முத்திரை மோதிரத்தையும் ஓலையையும் பரிசோதிக்கத் தொடங்கியதும் தன் கண்களை அவன்மீது ஓட்டத் தொடங்கினான். அரையன் ராஜராஜன் சுமார் ஆறரை அடி உயரமிருந்ததால் சாளரத்தின் மேல் உச்சி அவன் தலையில் இடித்து விடும்போல் மிக அருகாமை யிலிருந்ததைக் கவனித்த கரிகாலன், அந்த உயரத்துக்குத் தகுந்த அங்க அமைப்புக்களும் படைத் தலைவனுக்கு இருந்ததைக் கவனித்தான். அந்த உயரமான சரீரத்தில் கழுத்துக்குக் கீழே திரண்டெழுந்த தோள்களின் திண்மையை, அவற்றை இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்த அங்கியே நிரூபித்தது. அந்தத் தோளுக்குக் கீழே சாட்டைபோல் இறங்கிய நீண்ட கரங்கள் ஓலையைப் பிரித்துப் படித்துக் கொண்டிருக்காவிட்டால், கண்டிப்பாக முழங்கால்களுக்கும் கீழே இறங்கிவிடும் என்று கணக்குப் போட்ட கரிகாலன், அந்தக் கரங்களிலிருந்த வளைவுகளையும், கரங்களின் திண்மையிலும் சதை அமைப்பு இறுகிக் கரங்கள் மென்மையாகவே தெரிந்த தோரணையும் கண்டு, 'வாளைச் சுழற்றுவதற்காகவே இந்தக் கரங்கள் படைக்கப்பட்டிருக்க வேண்டும்' என்று நினைத்தான். நேராகவும் ஒரே சீராகவும் இறங்கிய முதுகுப்புறமும், ஒட்டி ஒரே சமனாகத் தெரிந்த வயிறும், வயிற்றுக்கு மேலே திடமாகக் காட்சி யளித்த மார்புப் பிரதேசமும், உறுதியாகத் தரையில் ஊன்றி நின்ற கால்களும் அரையன் ராஜராஜனின் தேகப் பயிற்சி அஃவற்றது என்பதை அறிவுறுத்தின. ஓலையைப் படித்த போது, அரையன் ராஜராஜன் கண்களில் துளிர்த்த ஒளியையும், ஆண்மை யெல்லாம் திரண்டு நின்ற கம்பீரமான அவன் முகத்தில் வாயிதழ்கள் மடிந்து நின்ற உறுதியையும் கவனித்த கரிகாலன், படைத் தலைவன் எதிலும் நல்ல திடசித்தமுடைய வனென்பதையும், முடிவுகளை வெகு சீக்கிரம் செய்யவல்ல பெரிய ராஜ தந்திரியென்பதையும் புரிந்து கொண்டான்.

கரிகாலன் முடிவுகள் முற்றிலும் சரியென்பதை அடுத்து நேர்ந்த நிகழ்ச்சிகள் நிரூபித்தன. ஓலையைப் படிக்கவும் முத்திரை மோதிரத்தைச் சோதிக்கவும் அரையன் ராஜராஜனுக்கு இரண்டு விநாடிகளுக்கு மேல் பிடிக்கவில்லை. மோதிரத்தின் பச்சைக் கல்லை ஒரு முறை கூர்ந்து நோக்கினான். உட்புறத்தில் பார்வையை அரை விநாடி தான் செலுத்தினான். ஓலையிலிருந்த நான்கு வரிகளைப் படிக்கவும் அதிக நேரம் ஆகவில்லை. சட்சட்டென்று சோதனையை முடித்துக் கொண்ட அரையன் ராஜராஜன் மீண்டும் கரிகாலனை நோக்கித் தன் கண்களைத் திருப்பி, ''அடையாளங்கள் சரியாயிருக்கின்றன. ஆனால் இந்த ஓலையிலிருந்த முத்திரையை யார் உடைத்தது?'' என்று வினவினான்.

சிறிதும் தயங்காமல் பதில் சொன்னான் கரிகாலன், ''சாளுக்கிய மன்னர் உடைத்தார்,'' என்று.

அரையன் ராஜராஜன் முகத்தில் சற்றே ஆச்சரியக் குறி படர்ந்தது. ''யார்! ஜெயசிம்மனா?'' என்று கேட்ட படைத் தலைவன் குரலில், ஆச்சரியத்தின் ஒலி சந்தேகமறத் தொனித்தது.

''ஆம்.''




''அவரிடம் எதற்காக இந்த ஓலையைக் கொடுத்தாய்?''

''தங்களுக்கும் எனக்குமுள்ள உறவை நிரூபிக்க.''

''உனக்கும் எனக்குமுள்ள உறவா?''

''ஆம்.''

''என்ன உறவு அது?''

''தந்தைக்கும் மகனுக்கும் உள்ள உறவு.''

இதைக் கேட்டதும் சாளரத்திலிருந்து இரண்டடி எடுத்து வைத்துக் கூடத்தின் நடுவுக்கு வந்த கரிகாலனை மீண்டும் ஒருமுறை கூர்ந்து கவனித்த அரையன் ராஜராஜன் 'இல்லை! இல்லை! இவன் அயோக்கியனாயிருக்க முடியாது. அந்த வம்சத்தில் அயோக்கியன் எப்படிப் பிறக்க முடியும்? அதே குழந்தை முகம்! அதே கூரிய விழிகள்! இவன் அவன் மகன்தான் சந்தேகமில்லை. ஆனால் எதற்காக இப்படிப் பொய் சொல்லியிருக்கிறான்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்.

அவன் உள்ளத்தே ஓடிய எண்ணங்களை ஓரளவு ஊகித்துக் கொண்ட கரிகாலன், ''படைத்தலைவரே! நான் போலியல்ல. சூடாமணி விஹாரத்திலிருந்து கிளம்பிய கரிகாலன் நான்தான். அங்கு நான் கிளம்பியதிலிருந்து, விதி என்னைப் பல வழிகளில் அழைத்துச் சென்றது. அதன் சுழலில் சிக்குண்டேன். அந்தச் சுழலிலிருந்து தப்பித்துக் கொள்ள மதியை ஆங்காங்கு உபயோகித்தேன்,'' என்றான்.

''மதியின் அந்த உபயோகத்தில் இந்தத் தந்தை மகன் உறவும் ஒன்று போலிருக்கிறது?'' என்று வினவினான் ராஜராஜன்.

''ஆமாம் படைத் தலைவரே!''

''உனக்கு நான் தந்தையென்று யார் சொன்னது?''

''யாரும் சொல்லவில்லை.''

''சொந்தக் கற்பனையோ?''

''ஆமாம்.''

''எதற்காக அந்தக் கற்பனை உதித்தது?''

''அவசியத்தை முன்னிட்டு.''

''என்ன அவசியம்?''

''ஒருவன் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வது அவசியமென்பதை, படைத் தலைவராகிய தாங்கள்கூட மறுக்க முடியாது,'' என்று சொல்லிய கரிகாலன், தான் யார் முன்னிலையில் இருக்கிறோம் என்பதையும் மறந்து லேசாகச் சிரித்தான்.

கரிகாலன் பதிலைக் கேட்ட அரையன் ராஜராஜன் இதழ்களும் புன்சிரிப்பால் சிறிதே மலர்ந்தன. இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு, அதுவரை மௌனமாக நின்ற செங்கமலச் செல்வியும் வாய்விட்டுக் கலகலவெனப் பெரிதாக நகைத்தாள். அந்தச் சிரிப்பை ஒரே பார்வையில் அடக்கிய சோழர் படைத் தலைவன், கரிகாலனை மீண்டும் நோக்கி, ''கரிகாலா! உயிரைக் காக்க எத்தகைய பொய்யையும் சொல்லலாமென்று நீ படித்த சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதா?'' என்று கேட்டான்.

''சாஸ்திரத்திலும் சொல்லியிருக்கிறது; புராணச் சான்றும் இருக்கிறது,'' என்று கரிகாலன் பதில் சொன்னான்.

''அப்படியா?''

''ஆமாம்! உதாரணமாக ராமாயண மகா காவியத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அனுமானை யாரென்று தெரியாதென்று சீதையே பொய் சொன்னதாக இருக்கிறது.''

''இன்னொரு உயிரைக் காப்பாற்றப் பிராட்டி பொய் சொன்னாள்.''

''இன்னொரு உயிரைவிடச் சொந்த உயிர் அருமையானதல்லவா? ஆகவே அதைக் காக்கப் பொய் சொல்வதும் நியாயம்தானே?''

இதைக் கேட்ட அரையன் ராஜராஜனே பெரிதாக நகைத்தான்.

அத்துடன், ''கரிகாலா! நீதான் பொய் சொன்னாய். அதை எப்படி ஜெயசிம்மன் நம்பினான்?'' என்று கேட்டான்.

''நம்பத்தான் அத்தாட்சி வைத்திருந்தேனே! இந்த ஓலையைக் காட்டினேன். அதன் வாசகத்தில் சூடாமணி விஹாரத்திலிருந்த குழந்தை உங்களால் அனுப்பப்பட்டிருந்தது என்று இருந்தது. ஆகையால் நீங்கள் சுவீகாரத் தந்தை என்று கூறினேன்,'' என்று விளக்கினான் கரிகாலன்.

அரையன் ராஜராஜனுடைய விழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. ''உன்னை எப்பொழுது நான் சுவீகாரம் எடுத்துக் கொண்டேன்?'' என்று கேட்டான்.

''நீங்கள் சுவீகாரம் எடுத்துக் கொள்ளவில்லை. நான்தான் உங்களைத் தகப்பனாராக சுவீகரித்துக் கொண்டேன்,'' என்ற கரிகாலன், மேலும் சொன்னான்: ''இதில் ஆச்சரியம் ஏதும் இல்லை படைத் தலைவரே! அயோக்கியனான ஒரு சைவத் துறவியின் செயலால், நான் வேங்கி நாட்டில் சிக்கிக் கொண்டேன். என்னை மீறிய சந்தர்ப்பங்கள் என்னைச் சூழ்ந்து கொண்டன. அவற்றிலிருந்து தப்ப என் புத்தியைப் பல வழிகளில் உபயோகப்படுத்தினேன். ஊகத்தில் யாருக்கும் சளைக்காதவனான ஜெய சிம்மனையும் சமாளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த ஆபத்தான நிலையில் உங்ளைத் தந்தையாக எண்ணினேன், மிகுந்த ஆபத்து வரும்போது இஷ்ட தெய்வத்தை எண்ணும் முறையில்; அவ்வளவுதான். என் கதையை முற்றிலும் கேட்டால் உண்மை உங்களுக்குத் தெள்ளென விளங்கும்,'' என்றான்.

அரையன் ராஜராஜன் முகத்திலிருந்த சந்தேகச் சாயை இதற்குப் பிறகு மெள்ளமெள்ள விலகத் தொடங்கியது. சற்று நேரம் தீவிரமாக யோசித்துக்கொண்டே அந்தக் கூடத்தில் உலாவினான் படைத் தலைவன். பிறகு கரிகாலனை நோக்கிய அந்தக் காந்தக் கண்களில் கருணையே நிரம்பி வழிந்தது. ''கரிகாலா! யாரையும் நம்பவைக்கும் திறன் உனக்கிருக்கிறது. வேட்டுவச் சத்திரத்து அறையில் நீ அண்ணன் என்று சொன்னபோது, யாரையும் நம்பாத செங்கமலச் செல்வியே உன்னை நம்பி விட்டாள். நீ யாரென்பதை முத்திரை மோதிரமில்லாவிட்டாலும், உன் முகமும் கண்களும் என்னை நம்ப வைத்திருக்கும். ஆனால் இடையே ஏற்பட்ட பல நிகழ்ச்சிகள் அவை சம்பந்தமாகக் கிடைத்த பல செய்திகள் என்னைக் குழப்பியிருந்தன. நீ ஜெயசிம்மனுடன் சேர்ந்துவிட்ட தாகவும், விமலாதித்தன் மகளுக்கு எதிராகச் சதி செய்ததாகவும் பிரும்ம மாராயர் எழுதியிருந்தார். நீ எந்தப் பக்கம் இருக்கிறாய் என்பதே புரியா திருந்த சந்தர்ப்பங்கள் பல. ஆனால் உன் பரம்பரை சதி செய்யும் பரம்பரையல்ல. எதற்கும் உன் வரலாற்றைப் பின்னால் விவரமாகச் சொல். தற்சமயம் செய்து கொண்ட சுவீகாரத்தை நானும் பகிரங்க மாக ஒப்புக் கொள்கிறேன். நீ என் மகன் என்பதைப் படைகளுக்கு இன்றே அறிவித்து விடுகிறேன்,'' என்று கூறினான் அரையன் ராஜராஜன்.



''என் கணவர் நான் பேசறதை சரியாவே புரிஞ்சுக்க மாட்டார்.''
''எப்படி சொல்றே?''
''என் தலையில பேன் இருக்குனு சொன்னதுக்கு, சிலிங் பேனா, டேபிள் பேனான்னு கேட்கிறார்!''
—எஸ். முகம்மது யூசுப்




ஒரு முறை முடிவுக்கு வந்து விட்டால், அதைத் திட்டவட்டமாக நிறைவேற்றி வைக்கும் குணமுள்ள அரையன் ராஜராஜன், தன் துணைப் படைத் தலைவர்களை உடனே அழைத்துக் கரிகாலனை அறிமுகப்படுத்தி வைக்கும் சமயத்தில் தான், அரிஞ்சயன் தலைவிதியும் நிர்ணயமாயிற்று. அரிஞ்சயன் ஜெயசிம்மனுடைய அந்தரங்க ஒற்றனென்பதை வெகு நாட்களாக அறிந்திருந்த அரையன் ராஜராஜன், அவன் தலையைத் துண்டித்துவிடும்படி உத்தரவிட்டான். கரிகாலனே அதற்குக் குறுக்கே நின்றான். ''வேண்டாம்; அவன் தலையைத் துண்டிப்பதில் பல சிக்கல்கள் இருக்கின்றன. அவனைக் காஞ்சி மாநகர்ச் சிறைக்கு அனுப்பி விடுங்கள்,'' என்று கரிகாலன் வேண்டிக் கொண்டான்.

அரையன் ராஜராஜனுக்கு அரிஞ்சயனை உயிரோடு விட்டு வைப்பதில் அடியோடு இஷ்டமில்லா விட்டாலும், தன் வளர்ப்பு மகனின் முதல் கோரிக்கையை மறுக்க விரும்பாமல் ஒப்புக்கொண்டான். இந்தத் தகவலைத்தான் உதவிப் படைத் தலைவனொருவன் அரிஞ்சயனுக்கு அறிவித்து, விஷயத்தைத் தெளிவாகப் புரியவும் வைத்தான்.

அரையன் ராஜராஜன் கட்டளைப்படி அடுத்த தினமே அரிஞ்சயன் காஞ்சி மாநகருக்கு அழைத்துச் செல்லப்பட்டான். பாசறைக் கூடத்தில் சந்தித்தது முதல், கரிகாலன் அரையன் ராஜராஜனுடனேயே தங்கிவிட்டான். அந்த நாள் முதலே கரிகாலனுக்குப் போர்ப் பயிற்சி அளிப்பதற்குத் தேவையான ஏற்பாடுகளையும் அரையன் ராஜராஜன் செய்து முடித்தான். சூடாமணி விஹாரத் தலைவர் அவனுக்கு வாட்போரும் குதிரையேற்றமும் மட்டுமே பயிற்றுவித்திருந்தார். ஆனால் அரையன் ராஜராஜன் மேற்பார்வையில், யானையேற்றம், வேலெறிதல், படைகளை அணிவகுத்தல் முதலிய பல துறைகளில் அவனுக்குப் பயிற்சி கிடைத்தது. இந்த நாட்களில் செங்கமலச் செல்வியும் அவனுக்குப் பல வழிகளில் உதவி வந்தாள். அடிக்கடி வேட்டையாட அவனைக் காட்டுக்கு அழைத்துச் சென்றாள். வேட்டையின் மர்மங்கள். பலவற்றை அவனுக்குப் பழக்கிக் கொடுத்தாள். வில்லில் அம்பைப் பொருத்தி நாணிழுத்து, கொடிய விலங்குகளை அடிக்க, அவளே அவனிடம் நெருங்கி நின்று போதித்து வந்தாள். போதனை பல முறைகளில் நடந்தது. அவன் உடலுக்குப்பின் அவள் நின்று அவன் கைகளோடு தன் கைகளைப் பொருத்தி, அவன் தோளில் சாய்ந்தவண்ணம் நாணை இழுக்கச் சொல்லிக் கொடுப்பாள் செங்கமலச் செல்வி. வித்தையைப் பயில்வதில் ஊக்கத்துடனிருந்த கரிகாலன் கல்மிஷம் ஏதுமில்லாமலே அவள் இழுத்த இழுப்புக்குச் சென்று கொண்டிருந்தான். ஆனால் செங்கமலச் செல்வியின் இதயத்திலோ, அவனுக்கிருந்த நிர்மலமான நிலையில்லை. அதில் அக்கினிப் பொறிகள் ஆயிரமாயிரமாக அள்ளிக் கொட்டிக் கொண்டிருந்தன. விளையாட்டுப் பெண்ணாக, தோற்றத்துக்கு ஆண்களைப்போல் ஆடையணிந்து வேட்டையாடி வந்த அவள் உள்ளத்தை எத்தனையோ உணர்ச்சிகள்— வேட்டையாடத் தொடங்கின. அதுவரை அடங்கிக் கிடந்த பெண்மையின் உணர்ச்சிகள் அவள் உடலையும் சித்தத்தையும் பூரணமாக ஆட்கொண்டு சொல்லவொண்ணா வேதனையை அளித்தன. அவள் வாலிப உள்ளத்திலே வாழ்வின் வசந்தம் கள்ளத்தனமாக மெள்ள மெள்ளப் புகுந்தது. அந்த வசந்தத்தின் இன்ப மலர்கள் அவள் இதயத்திலே லட்சக்கணக்கில் உதிர்ந்தன. அப்படி உதிர்ந்ததால் ஏற்பட்டதொரு நிகழ்ச்சி, அதன் விளைவாக ஏற்பட்டது கரிகாலன் வாழ்வில் பெரும் அதிர்ச்சி.

(தொடரும்)

## 33. நீரோடையும் நிலமங்கையும்

17.9.87

ஆண்டவன் படைப்பில் விசித்திரங்கள் பல. அவற்றுள் பெண்மையின் தத்துவம் மகா விசித்திரமானது.

பெண்களின் உடல் வாகுக்குத் தகுந்தபடி உள்ளம் அசைந்து கொடுப்பதில்லை. உள்ளத்துக்குத் தகுந்தபடி உடல்வாகு அசைந்து கொடுக்கிறது. பருவ எழில்கள் புஷ்பித்துக் குலுங்கும் நிலை வந்து விட்டாலும், உள்ளம் மலர்ந்தாலொழிய உடலில் உணர்ச்சிகள் பிரவாகிப்பதில்லை.

பெண்மையின் உதயத்துக்கும் பெண்மையின் பூர்ணத்துவத்துக்கும் இடைக்காலம் ஒன்று உண்டு. அது கற்பனைக் காலம். அந்தக் காலத்தில் கற்பனை தலைதெறித்து ஓடினாலும், விவரம் விளங்காததால், உணர்ச்சிகள் கட்டுக்கடங்கியே நிற்கின்றன. அந்தக் கற்பனையை உடைத்துப் பூர்ணத்தை அளிப்பது ஸ்பரிசம். இதற்கு அறிவாளிகள், தொட்டால் சிணுங்கிச் செடியை உதாரணமாகக் கூறுகிறார்கள்.

தமிழ்நாட்டின் நதியோரங்களில் ஏராளமாக மண்டிக் கிடக்கும் சிறு செடியொன்று 'தொட்டால் சிணுங்கி'யென்று கூறப்படுகிறது. சாதாரணமாகத் தன் சின்னஞ் சிறு இலைகளை மெல்லிய கிளைகளில் தாங்கிப் படர்ந்திருக்கும். இச்செடி மீது கையை வைத்தால் போதும், இலைகள் உடனே கூசிக்குறுகி மூடிக்கொள் கின்றன. அவை மீண்டும் சுய நிலைக்கு வர வெகு நேரம் பிடிக்கிறது. அந்தச் செடியை நாம் எத்தனை முறை தொட்டாலும் இதே கதிதான். ஸ்பரிசத்தின் வேகம் அச்செடியில் அத்தனை தீவிரமாக ஊடுருவிச் செல்கிறது.

பெண்மையின் தன்மையும் அநேகமாக இதுதான். ஆனால் ஒரு மாறுபாடும் உண்டு. ஸ்பரிசத்துக்குப் பிறகுதான் பெண்மை உள்ளம்

சாண்டில்யன்



நெகிழ்ந்து வாழ்க்கை விவரம் புரிகிறது. பெண்மையில் இயற்கையாகவே அடங்கியுள்ள நாணம் முதலிய உணர்ச்சிகள் ஸ்பரிசத்தால் உடலைக் குறுகிக் கூன வைத்து, அழகைப் பன்மடங்கு அதிகரிக்கச் செய்கின்றன. பார்வையில் மிரட்சி, நடையில் தளர்ச்சி முதலியன ஏற்பட்டு விடுகின்றன. ஆனால் பெண் உடல் தொட்டால் சிணுங்கியைப் போல் சதா சிணுங்கியே நிற்பதில்லை; சிணுங்கிய பின் மலர்கிறது. அந்த மலர்ச்சியில் எத்தனையோ இன்ப அலைகள்! எத்தனையோ கற்பனைகள்! சில வேளைகளில் அந்தக் கற்பனைகளின் பூர்த்தியும்கூட! எல்லாம் உள்ளத்தின் அசைவின் விளைவுகள்!

அந்த விளைவுகள் பல செங்கமலச் செல்வியிடமும் நாளா வட்டத்தில் தெரியலாயின. அரையன் ராஜராஜன் பாசறைக்குக் கரிகாலன் வந்த பத்துப் பதினைந்து நாட்களுக்குள்ளாகவே அவள் நடையுடை பாவனைகளில் எண்ணற்ற மாறுதல்கள் ஏற்பட்டதைப் படை வீரர்கள் கண்டார்கள். அதுவரை அலங்காரம் என்ன என்பதையே அடியோடு அறியாத அரையன் ராஜராஜன் மகள், பிரதி தினமும் அலங்காரத்தில் ஏகநேரம் செலவழிப்பதைக் கண்ட பாசறைக் காவல் வீரர்கள் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். எதிராளிகளைக் கொல்வதைத் தவிர, வேறெதிலும் பயிற்சி பெறாத படை வீரர்களுக்கு, அவளுடைய இந்த மாற்றம் புரியாத பெரும் புதிராயிருந்தது.

அழகான அங்க லாவண்யத்தைப் படைத்த செங்கமலச் செல்வி, தினம் தினம் விதவிதமான ஆடையாபரணங்களைத் தரிக்கலானாள். தென்னிந்தியாவின் முக்கால்வாசி இடங்களில் திக்விஜயம் செய்த அரையன் ராஜராஜன் பெட்டிகளில் ஆடைகளுக்குத்தான் குறைவா? ஆபரணங்களுக்குத்தான் குறைவா? அதுவரையில் பெட்டிகளில் கேட்பாரற்றுச் சிறைப்பட்டுக் கிடந்த ஆடையாபரணங்களுக்குக் கரிகாலன் வரவு திடீரென விடுதலையளிக்கவே அவை பெட்டியிலிருந்து கிளம்பி அவள் அறை முழுவதும் பரவிக்கிடந்து, சுதந்திரக் காற்றைச் சுவாசிக்க ஆரம்பித்தன. 'இதை உடுத்தினால் நன்றாயிருக்குமா, அதை உடுத்தினால் நன்றாயிருக்குமா?' என்று ஒவ்வொரு சேலையாகத் தன்மீது போட்டு நிலைக் கண்ணாடியில் அழகு பார்த்து வீசி வீசி எறிந்ததால், அறையில் ஏராளமான புடவைகளும் ரவிக்கைகளும் சிதறிக் கிடந்தன. இந்த அலங்கோலத்தின் காரணம் யாருக்குப் புரிந்தாலும் புரியாவிட்டாலும் செல்வியுடன் வந்திருந்த அவள் செவிலித்தாய்க்கு மட்டும் நன்றாகப் புரிந்திருந்தது. செல்வியின் அலங்கார விநோதங்களையும் அவற்றுக்குப் பூர்வாங்கமாக அவள் அறையில் தினம் தினம் ஏற்பட்ட அமர்க்களத்தையும் கண்ட செவிலித் தாய் உள்ளுக்குள்ளேயே நகைத்துக் கொண்டாள். குழந்தையிலேயே தாயைப் பறிகொடுத்த அந்தப் பெண்ணை அறியாப் பருவத்திலிருந்து எடுத்து வளர்த்த பாசத்தால், அவள் ஆண்களைப் போல் வேட்டுவக் கோலமணிந்ததையும், அடங்காமல் வெளியே சுற்றியதையும் வெறுத்து அடிக்கடி கண்டித்து வந்த செவிலித்தாய், கரிகாலன் பாசறைக்கு வந்த சில நாட்களுக்குள் அவளிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு மனம் மகிழ்ந்தவளாய், 'எந்த வித்தாரக் கள்ளிக்கும் ஒரு வித்தகனைக் கடவுள் படைத்துத்தான் இருக்கிறான்' என்று



தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்.

செங்கமலச் செல்வியின் மனத்திலே உதித்த இந்தப் பெண்மை பூர்ணத்துவம் பெறுவதற்கான முயற்சிகளையும் செவிலித்தாய் மன மகிழ்ச்சியுடனேயே செய்ய முற்பட்டு அவளுக்குத் தினம் தினமும் யார் கண் கண்டாலும் பிரமிக்கும்படியான அலங்காரங்களைச் செய்து வந்தாள். ஒரு நாள் தன் வளர்ப்பு மகளின் வனப்புப் பிரதேசங்களைக் காஞ்சி மாநகர் பட்டுப் பீதாம்பரத்தால் மறைத்தாள். மற்றொரு நாள் மதுரையின் வண்ணச் சேலையைக் கொண்டு மூடினாள். இன்னொரு நாள் சேரநாட்டு வெண் பட்டும், வேங்கி நாட்டுத் தங்கத் தகடியும் அவள் இணையற்ற எழிலை வளைத்துச் செல்ல உதவின. தலையில் பட்டுக்கட்டிய பாண்டியநாட்டு முத்துச் சுட்டி சில நாட்கள் தொங்கி அவள் வசீகர வதனத்தின் உச்சியை முகர்ந்து நிற்கும். இன்னும் சில நாட்கள் சோழ நாட்டுப் பொற்கொல்லர் செய்த நாகர் நாட்டு நாகரத்தினப் பதக்கம் அவள் மார்பகத்தே புரண்டும் படுத்தும் கிடக்கும். கையொன்றில் வைரமும் மரகதமும் பதித்த வங்கியொன்று சில நாட்கள் ரவிக்கையை இறுகப் பிடித்துக் கையின் சதையை சிறிதே கீழ்ப்புறமும் ஓடவிட்டிருக்கும். எங்கிருந்தோ அபூர்வமாக அரையன் ராஜராஜன் கொண்டு வந்திருந்த பச்சைக்கல் மூக்குப் பொட்டு ஒன்று செண்பக மொட்டைப் பழிக்கும் நாசியின் ஒரு பகுதியிலே நின்று பிரமாதமாக ஒளி வீசும்.

இப்படிப் பலப்பல அலங்காரங்களைச் செய்து மகளைக் கரிகாலனுடன் அவ்வப்போது வேட்டைக்கு அனுப்பி வைத்த செவிலித்தாய், அவ்விருவரும் ஜதையாய்ப் புரவிகளில் சென்றதைக் கண்டு மகிழ்ச்சிக் கடலிலே மூழ்கி வந்தாள். செங்கமலச் செல்வியின் நடையுடை பாவனைகளில் ஏற்பட்டு வந்த ஒவ்வொரு மாறுதலையும் கவனித்து வந்த செவிலித் தாய்க்கு அவள் உள்ளத்திலே ஏக்கமும் கலந்து நிற்பதைக் காணத்தான் அவ்வப் பொழுது பரம சங்கடமாயிருந்தது. இரவுகளில் வெகுநேரம் விழித்தே பஞ்சணையில் கிடந்தாள் செங்கமலச் செல்வி. வரவர அவள் பேச்சிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டிருந்தது. எதற்கெடுத்தாலும் வெடுக் வெடுக்கென்று பதில் சொல்லக் கூடிய சுபாவமுடைய செங்கமலச் செல்விக்குச் செவிலித் தாயின் கேள்விகளே சில வேளைகளில் காதில் விழவில்லை. கேள்வி எழுந்த சில விநாடிகளுக்குப் பிறகு தூக்கிப் போட்டவள் போல, ''என்னம்மா கேட்டாய்?'' என்று விசாரிப்பாள். சில வேளைகளில் கேள்விக்குப் பதிலும் வராது. செவிலித்தாயும் அவள் மன நிலை அறிந்து மேற்கொண்டு எதுவும் கேட்கமாட்டாள்.

செங்கமலச் செல்வியின் துடுக்குத்தனம் சில தினங்களுக்குள்ளாகவே எங்கோ சென்று ஒடுங்கி விட்டது. அவள் உணர்ச்சிகளை அடக்கம் பெரிதும் ஆட்கொண்டது. இதற்கெல்லாம் மூலகாரணம் எது என்று செங்கமலச் செல்வியே சில சமயங்களில் தன்னைக் கேட்டுக் கொண்டாள். அவள் அறிவு நிறைந்த சித்தத்துக்கு விடை கிடைக்கவும் அதிக நாள் ஆகவில்லை. காரணம், வேட்டுவச் சத்திரத்தில் அன்றிரவு ஏற்பட்ட அந்த நிகழ்ச்சிதான். 'திடீரென என் கையைத் துணிவுடன் பிடித்துக் காதுக்கருகில் சேதி சொன்னாரே அந்த நிகழ்ச்சிதான். அவர் கை பட்டதும் என் உடலில்தான் எத்தனை கூச்சம்! அவர் சேதி சொல்லக் காதுக்கருகில் வந்ததும் அவர் உதடு கன்னத்தில் பட்டுவிட்டால் என்ன செய்வது என்று எத்தனை பயம்!' என்று தனக்குத்தானே விஷயத்தை விளக்கிக் கொண்டாள், செங்கமலச் செல்வி. அவர் தனது அண்ணன் என்று சொல்லியதும் சற்றே அடங்கிய அந்த உணர்ச்சி, அவன்

ஐயா படிக்கிறதுக்கு முன்னாடி பேப்பர் மேலே போய்ப் படுத்துக்காதேன்னு உனக்கு எத்தினி வாட்டி சொல்லட்டும்? மனுசன் குரைக்க ஆரம்பிச்சிட்டார் பார்!

தனது சொந்த அண்ணனல்ல என்று தெரிந்ததும், மீண்டும் எப்படிக் கட்டுக் கடங்காமல் பிரவாகிக்கத் தொடங்கி விட்டது என்பதை நினைத்துப் பார்த்ததும், இணையற்ற ஆனந்த சாகரத்தில் மூழ்கினாள் அரையன் ராஜராஜன் மகள். அத்தனைக்கும் கரிகாலனுக்கு மட்டும் தன் மனோநிலை புரியாதிருந்தது அவள் உள்ளத்தில் ஓரளவு வேதனையையும் விளைவித்திருந்தது. இப்படி வேதனையும் மகிழ்ச்சியும் நிறைந்ததைத் தான் காதல் என்று பாடுகிறார்களா என்ற விசாரத்திலும் இறங்கினாள் அவள்.

உண்மையில் கரிகாலன் மனோநிலை வேறுவிதமாகத்தான் இருந்தது. முதன் முதலில் வேட்டுவச் சத்திரத்து மாடி அறையில் அவளைச் சந்தித்த சமயத்தில், அவளுடைய அபரிமிதமான அங்க லாவண்யங்களைக் கண்டு அடியோடு மதி மயங்கிப்போன கரிகாலன், பின்னால் மெள்ள மெள்ளத் தன் மனத்தைப் பெரிதும் சமாதானப் படுத்திக் கொண்டான். 'நான் அரையன் ராஜராஜனுக்கு வளர்ப்பு மகனென்றால், அவள் எனக்குத் தங்கையாகத்தானே இருக்க முடியும்? வேறு உறவு நீதிக்கு ஒவ்வாதது அல்லவா?' என்று தர்மத்தைப்பற்றித் தனக்குத் தானே உபதேசித்துக் கொண்டு அந்த அண்ணன் தங்கை உறவு முறையை வளர்க்க முயன்றான். அத்தகைய உறவு முறையை அவன் வளர்க்க இஷ்டப் பட்டதற்கு முக்கியக் காரண மாயிருந்தவை, அவன் உள்ளத்தே சதா காட்சி அளித்துக் கொண்டிருந்த வேங்கி நாட்டு மன்னன் மகளின் வேல்விழிகள்!

அரையன் ராஜராஜன் பாசறையில் தங்கி அந்தப் பதினைந்து நாட்களுக்குள், எத்தனை எத்தனையோ முறைகள் நிரஞ்சனாதேவியின் எழிலையும், செங்கமலச் செல்வியின் அழகையும் இணைத்துப் பார்த்து எடை போட முயன்றான் கரிகாலன், எத்தனை முறை எடை போட்டாலும் துலாக்கோலின் எந்த தட்டு தாழ்கிறது, எது உயர்கிறது என்பதை மட்டும் நிர்ணயிக்க முடியாமல் திண்டாடினான். சிருஷ்டி மனிதமனத்தின் துலாக் கோலுக்கும் அப்பாற்பட்டதல்லவா? செண்பகப் பூ சிறந்ததா, செங்கழுநீர்ப் பூ சிறந்ததா? ஜாதிமல்லிகை சிறந்ததா.



'வீடு, மனைவி, மக்கள்'
படத்தில்
எஸ்.வி. சேகர்-வனிதாஸ்ரீ
(என்யா? கசக்கிறதா!)



மகிழம் பூ சிறந்ததா? முத்து சிறந்ததா வைடூரியம் சிறந்ததா? இந்தக் கேள்விகளுக்குப் பதிலில்லை. எடை போட்டு முடிவுக்கு வர முடியாத புதிர் இது.

சிருஷ்டியின் பிரிவு எதிலும் ஒரு தனி அழகு திகழ்கிறது. போதிய உயரத்துடனும், அளவுக்கு அடங்கி நின்ற அங்க அமைப்புகளுடனும், வீட்டுக் கொடிபோல் துவண்டு வளைந்து நின்றது நிரஞ்சனா தேவியின் எழிலுருவம். நல்ல உயரத்துடனும், படைத்தலைவன் பாசறையிலேயே வளர்ந்ததன்றிப் போர்ப் பயிற்சியும் நன்றாகப் பெற்றிருந்ததால், நல்ல கட்டுடைய உடலமைப்புடனும், செழுமை பெற்ற காட்டு மலரைப்போல் விளங்கினாள் செங்கமலச் செல்வி. இந்த இரு மாதர்களின் உருவங்கள் நித்தம் நித்தம் சித்தத்திலே எழுந்து நடனமிட்டதால், மிகுந்த மனத் தொல்லைக்குள்ளான கரிகாலன் தன் சுயநிலை புரியாமல் பெரிதும் திண்டாடினான்.

என்னதான் தங்கையென்று உறவு கொண்டாட முயன்று, மனத்தில் கல்மிஷத்தை அண்ட விடாமல் தடுக்க முயன்றாலும், கரிகாலனை இயற்கை உணர்ச்சிகள் வாட்டத்தான் செய்தன. அவை மூட்டிய நெருப்பைச் செங்கமலச் செல்வியின் செயல்களும் நன்றாக விசிறி கொண்டு விசிற ஆரம்பித்தன. அவனுக்கு வில்வித்தை பயிலுவிக்கும் நேரங்களில் அவள் நடந்துகொண்ட முறைகளும், பார்த்த பார்வைகளும், நிஷ்களங்கமான அவன் மனத்தை வாட்டத் தொடங்கின.

விற்போர் முறைகளைக் கற்றுக் கொடுக்கச் செங்கமலச் செல்வி வேண்டுமென்றே காட்டுப் பகுதியைப் பொறுக்கினாள். காட்டில் இரண்டு நாட்கள் வித்தை கற்றதன் பயனாக, மனோ திடத்தை இழந்த கரிகாலன், மூன்றாம் நாள் காட்டுக்குப் போக மறுத்து, ''செல்வி! வில் வித்தையை இங்குதான் சொல்லிக் கொடேன். காட்டுக்கு எதற்காகப் போக வேண்டும்?'' என்றான்.

''ஏன்! போனாலென்ன?'' என்று கேட்ட அவள் குரலில் தொனித்த கோபம், பார்வையிலும் தெரிந்தது.

''போனால் எதுவுமில்லை செல்வி! ஆனால் எதற்காக அவ்வளவு தூரம் போக வேண்டும்? இங்கேயே இடமிருக்கிறதே.''

''இங்கு இடம் மாத்திரமா இருக்கிறது?'' தயக்கத்துடன் கேட்டாள் அவள்.

''வேறென்ன இருக்கிறது செல்வி?''

''மனிதர்களும் இருக்கிறார்கள்.''

''இருந்தாலென்ன?''

''இருந்தாலென்னவா? நான் ஒரு பெண்; உங்கள் கையைத் தொட்டு நாணைப் பிடிக்கவும், அம்பைக் குறி வைக்கவும் சொல்லிக் கொடுக்க வேண்டாமா! இதை நாலு பேர் எதிரில் செய்ய முடியுமா?''

''செய்தாலென்ன! நீ என் தங்கைதானே?''

அவன் அழகிய இதழ்களில் புன்னகை தவழ்ந்தது. ''இப்படியும் ஒரு பைத்தியம் இருப்பீர்களா! உங்களை நான் அண்ணனென்றும் நீங்கள் என்னைத் தங்கையென்றும் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் உலகம் ஒப்புமா?''

''ஏன் ஒப்பாது? உன் தந்தை ஒப்புக்கொண்டு விட்டாரே!''

''தந்தை மாத்திரம் உலகமல்ல. தந்தை வீரர்களின் நாவைக் கட்டுப்படுத்தலாம். மனத்தையும் கண் பார்வையையும் கட்டுப்படுத்த முடியாது. பேசாமல் வாருங்கள்,'' என்று விடாப்பிடியாக அவனைப் புரவி மீதும் ஏறச் செய்து காட்டுக்கு அழைத்துச் சென்றாள்.

காட்டின் ரம்மியமான பிரதேசங்கள் பலவற்றைச் செங்கமலச் செல்வி அவனுக்குக் காட்டிக் கொடுத்ததல்லாமல், காட்டு மரங்களின் மீது



பரண் கட்டவும் சொல்லிக் கொடுத்தாள். அந்த மரப் பரண்களின் மீது அவனுடன் தானும் நெருங்கி உட்கார்ந்து மிருகங்கள் மீது வேலெறியவும் வில் கொண்டு துஷ்டப் பறவைகளை அடித்து வீழ்த்தவும் போதித்தாள். காலையில் காட்டுக்குள் புகுந்து பகல்வரை வேட்டையாடிக் களைத்த பின்பு, காட்டின் நீரோடை யொன்றுக்கு அவனை நீராட் அழைத்துச் செல்வாள்.

நீராட்டத்துக்குப் பிறகு வீட் டுக்குப் போக அவள் இஷ்டப் பட்டால் அவன் போகலாம். இல்லாவிடில் கனிவர்க்கங்களைப் பறித்து அவனுக்கும் கொடுத்துத் தானும் உண்பாள். பிறகு நீரோடைக் கரையின் பசும் புற்றரையில் வெகுநேரம் படுத்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டேயிருப்பாள். மரமல்லி மரங்கள் காற்றிலாடி அவள்மீது புஷ்பங்களை உதிர்க்கும்.

அத்தனை புஷ்பங்களில் எதையுமே விலக்காமல் படுத்திருப்பாள் செல்வி. கடைசியாக அவள் எழுந்திருப்பதும் கரிகாலன் கட்டாயத்தின் மேல்தான். பாசறைக்குத் திரும்புவதற்கும், கலக்கமும் திகிலும் நிறைந்த அவள் பரிதாப விழிகளே காரணமாயிருந்தன. இப்படி இரு காட்டுப் பறவைகளைப் போல் சுதந்திரமாகத் திரிந்து வந்த அவர்கள் வாழ்வில் திடீரென ஒருநாள் நேர்ந்த நிகழ்ச்சியொன்று கரிகாலன் வாழ்க்கைப் பாதையை மீண்டும் வேறு திசையில் திருப்புவதற்குக் காரண மாயிற்று.

அன்று இருவரும் காட்டில் வேட்டையாடி முடிய வெகு நேரமாகி விட்டதால், பகலவன் மறையும் சமயம்




தலைப்பாகையிலிருந்து உதிரும் இவை என்ன? புகைப்படக்காரர் சொன்னார்: ''தலைப்பாகை அல்ல. 'கதண்டு' எனப்படும் கருந்தேனீ கட்டிய கூடு. எங்கள் வீட்டு கிணற்று நீருக்கான மோட்டார் அறையில் மேல் சுவரில் இந்தக் கூடு இருக்கிறது. சுமார் ஒன்றரை அங்குல நீளமுள்ள கருந்தேனீ இது.'' என்று சொன்னார்,'' என்றார்.

தகவல்: எஸ்.ஜி.
படம்: 'கலை' நாகராஜன்

நெருங்கி விட்டதென்பதைச் சற்று முன்னதாகவே கிளம்பிவிட்ட அரைமதி நிரூபித்தான். அதற்குப் பிறகும் வீட்டுக்குத் திரும்ப எத்தனிக்காமல், நீராட நீரோடைக்குச் சென்று நீண்ட நேரம் நீந்திக்கொண்டும் இருந்தாள் செல்வி. ஓடையின் வேறொரு புறத்தில் குளித்துவிட்டு, வஸ்திரங்களை அணிந்து தயாராக நின்று கொண்டிருந்த கரிகாலன், பகலவன் மறைந்து விட்டதையறிந்து துடியாய்த் துடித்து, ''செல்வி, நீந்தியது போதும். கிளம்பு,'' என்று அதட்டினான்.

அவள் நீரில் மல்லாந்து நீந்தியபடியே நகைத்தாள். வாயில் சிறிது நீரை உறிஞ்சி வாணம் போல் ஆகாயத்தில் ஊதினாள். அரைமதியும் தன் குளிர்க் கிரணங்களை அந்த நீர் வாணத்தின் மீதும் நீரில் மிதந்து கிடந்த அந்த நில மங்கையின் மீதும் பாய்ச்சினான். ஓடை நீர் பளபளத்தது. அதில் ஏதோ படகு போல் ஆடிக் கொண்டிருந்த செங்கமலச் செல்வியின் கவர்ச்சியான உருவம் தண்ணீரில் லேசாக அமிழ்ந்து அமிழ்ந்து எழுந்தது. காண முடியாத அந்தக் காட்சியிலே திளைத்துவிட்ட கரிகாலன் மனமும் உணர்ச்சி ஓடையிலே அமிழ்ந்து அமிழ்ந்து எழுந்தது.

வெகுநேரம் இப்படி அவனை ஆட்டிவைத்த அந்த எழில் மங்கை கடைசியாக நனைந்த துண்டத்துடன் கரையேறி, மார்பிலே கைகளைப் புதைத்த வண்ணம் பக்கத்திலிருந்த ஒரு புதரை நோக்கி நடந்தாள். நனைந்த உடையில் வெளிப்பட்ட வசீகர எழிலையும் நடையினால் ஏற்பட்ட அசைவுகளின் வகையையும் கண்ட கரிகாலன் உணர்ச்சிகள் ஊசி முனையில் நின்றன. புதரருகில் சென்ற அவள் துண்டத்தை எடுத்தெறிந்து சேலையை மாற்றிக் கொண்டாள். கரிகாலன் அவள் இருக்குமிடத்தைப் பார்க்க இஷ்டப் படாமல், வேறு பக்கம் திரும்பி நின்று கொண்டான். சில விநாடிகள் பறந்தன. பின்னால் காலடி ஓசை கேட்டது. கரிகாலன் அசையாமலே நின்றான். அழகிய பூங்கரமொன்று பின்னால் நின்றபடியே அவன் தோளில் புரண்டது. முதுகில் அழுந்தித் துவண்டது ஒரு பூவுடல். எங்கிருந்தோ வந்த காட்டு மலர்களின் சுகந்தம் விபரீத நிலையைச் சிருஷ்டித்தது. அவன் கன்னத்தில் மெள்ள உராய்ந்தது மற்றொரு கன்னம். என்ன செய்வது, ஏது செய்வது என்று தெரியாமல், விபரீத நிலையில் திகைத்து நின்றான் கரிகாலன். தோள்மீது முதலிலிருந்த கரம் கீழ் இறங்க, மற்றொரு பூங்கரம் அவன் இடை வழியாக மேல் நோக்கி அவன் உடலில் தவழ்ந்து சென்றது. இரண்டு புஷ்ப ஹாரங்களால் கட்டுண்டவன் போல் இரு கரங்களுக்குமிடையே திணறினான் கரிகாலன். 'இனி நீ எங்கே தப்பப் போகிறாய்?' என்று கிளைகளை ஆட்டிக் கரிகாலனை நகைத்த மரமல்லி மரம், தன் நீண்ட மலர்களை அவன்மீது பொல பொலவெனத் தூவியது. துஷ்ட சந்திரனும் கிளை இடுக்குகளின் வழியாக மெள்ள எட்டிப் பார்த்தான். அது மட்டுமா! ''ஏன் பேசாமலிருக்கிறீர்கள்! கோபமா?'' என்று பாம்பை நோக்கி ஊதப்படும் மகுடியின் புன்னாகவராளி ஸ்வரங்களைப் போல், செல்வியின் இனிய குரல் அவன் காதுகளில் ஒலித்தது. அவள் குரல் குழைந்தது. பவள இதழ்கள் லேசாக அந்தக் குழந்தை முகத்தின் அழகிய கன்னத்தை நோக்கித் திரும்பின.

(தொடரும்)



ஜுரம் விட்டு விட்டு அடிக்கிறது டாக்டர்!

டாக்டர்: (ஏதோ ஞாபகத்தில்) அது கிட்ட ஏன் வம்புக்குப் போறீங்க?

—சீர்காழி சாமா.

# அம்பென சீறிப்பாய்ந்து ஓடுவது சிறப்புகளில் ஒன்று! அத்துடன் நினைத்த உடன் நிறுத்த முடிவது அதைவிட நன்று!

FURY. அற்புத சக்தி வாய்ந்த இது 15 BHP 163CCயும் கொண்ட பைக் ஆகும்.

ஜெர்மெனியின் தொழில்நுட்பத்தைக் கொண்டு வலுவாகவும் உறுதியாகவும் உருவாக்கப்பட்டது. அதிக கனமோ அதிக இலேசோ இல்லாமல் பைக்கிற்குத் தகுந்த 128 கிலோ எடையை உடையது. இதுமட்டும் FURYயின் சிறப்பு அல்ல.

FURYயின் மற்றும் சில சிறப்பு அம்சங்கள் :

- டார்ஷன் ஷியர் மவுண்ட்டட் எஞ்சின்.
- புதிய இன்டக்ஷன் ரெசனேட்டர்.
- 4.75 வினாடிகளில் 0வில் இருந்து 50 கிலோ மீட்டர் வேகத்திற்கு உடனடியாகத் தாவக்கூடியது.
- இந்தியாவில் வேறு எந்த பைக்கிற்கும் இல்லாத "ஹைட்ராலிக் டிஸ்க் பிரேக்கிங் சிஸ்டம்" இதற்கு மட்டுமே உண்டு.
- 50 கிலோ மீட்டர் வேகத்தில் இருந்து 3.5 வினாடிகளில் பைக்கை அப்படியே அதே இடத்தில் எளிதாக அசையாமல் நிறுத்திவிட முடியும்.
- நெடுஞ்சாலைகளில் சௌகரியமான வேகத்திற்காக 5வது கியர் உள்ளது.
- துரிதமாக "ஸ்டார்ட்" செய்ய எலக்ட்ரானிக் 12-POLE இக்னிஷன் சிஸ்டம் இணைக்கப்பட்டுள்ளது.
- உங்களின் கூடுதல் பாதுகாப்பிற்காக "டே பிளாஷ் சிஸ்டம்" பொருத்தப்பட்டுள்ளது.
- கவர்ச்சிமிக்க "டை காஸ்ட் வீல்" பொருத்தப்பட்டிருக்கிறது.
- விருப்பத்திற்கேற்ப தேர்ந்தெடுக்க மூன்று வெவ்வேறு வண்ணங்களில் வருகிறது.

FURY. நீங்கள் ஒரு பைக்கை தேர்ந்தெடுக்க, அதன் தோற்றம் மட்டும் காரணமாக இருக்க முடியாது. அந்த தோற்றமும் உழைப்பும், எத்தனை காலம் தொடர்ந்து இருக்கிறது என்பதைத்தான் கணக்கில் கொள்ள வேண்டும்.

**FURY**

நொடியில் பறக்க. நெடுநாள் உழைக்க.

FROM ENFIELD



# மன்னன் மகள்

சாண்டில்யன்

## 34. மந்திராலோசனை

24.9.87

இன்பத்தையெல்லாம் கொள்ளை கொள்ளையாக அள்ளிக் கொட்டிய இயற்கையின் இணையற்ற அந்தச் சூழ்நிலையில், செங்கமலச் செல்வியின் சேஷ்டைகளால் கனல் பொறிகள் கணக்கின்றி உடலெங்கும் வாரித் தெளித்த்தன் காரணமாகப் பெரும் கலக்கத்தையும் குழப்பத்தையும்

அடைந்த கரிகாலன் சற்று நேரம் செயலற்று நின்றான்.

அவன் படித்த தத்துவங்கள் எங்கோ காற்றில் பறந்து கொண்டிருந்தன. அவன் சாஸ்திர ஞானம் அஞ்ஞானத்தைச் சிருஷ்டித்துக் கொண்டிருந்தது. தர்க்கத்தில் அவனுக்கு இருந்த ஞானம் ஏதோ தர்க்கங்களை அள்ளிக் கொட்டிக் கொண்டிருந்ததே யொழிய அவன் சித்தத்தில் தெளிவைச் சிருஷ்டிக்கவில்லை. காமத்தின் சுழலில் சிக்குகிறவன் கண்ணில்லாதவன் என்று இதனால்தான் பெரியோர்கள் எழுதியிருக்கிறார்களா என்ற கேள்வி கரிகாலன் புத்தியிலே உதயமானாலும், அந்தக் கேள்வியைத் தொடர்ந்து செயலாற்றும் வலிமையைச் செங்கமலச் செல்வியின் பூவுடல் பறித்துச் சென்று விட்டது.

செல்வி தனக்குப் பின்னால் நின்று ஏதோ வார்த்தைகளைத் தன் காதுக்கருகில் உதிர்த்ததை மெள்ள மெள்ளச் சிந்தித்த கரிகாலன் மனம், சில நாட்கள் பின்னோக்கி ஓடி, வேங்கி நாட்டிலிருந்த வசந்த மண்டபத்தை அடைந்தது.

காமனின் கரும்பு வில்லைப் போலும், பஞ்சபாணங்களைப் போலும் பஞ்சணையில் கிடந்த பைங்கிளியைப் பற்றி அவன் மனம் சிந்திக்கலாயிற்று. அந்த இரவுக்கும் இந்த இரவுக்கும் இருந்த நேர் எதிரான வித்தியாசத்தை யும் நினைத்துப் பார்த்ததன் காரண மாக, அதுவரை சிலையென இருந்த கரிகாலன் முகத்தில்கூட மகிழ்ச்சியின் குறிகள் லேசாகப் படர்ந்தன. இதழ்களும் புன்முறுவல் கூட்டிச் சிறிதே விரிந்தன.

'அன்று சாளரத்தின் மூலமாக வெளியே நோக்கிக் கொண்டு அவள் நின்றாள். அவளுக்குப் பின்னால் நெருங்கி நான் நின்றேன். நான்தான் பேசினேன். இன்று எனக்குப் பின்னால் இவள் நிற்கிறாள். கிள்ளை மொழிகளை என் காதிலே இந்தக் கள்ளி உதிர்க்கிறாள். அன்று காரிருள்; அந்தக் காரிருளிலும் என் இதயத்தே பெருநிலவு படர்ந்து கிடந்தது. இன்று பெருநிலவு தான். ஆனால் இதயத்தில் நிலவு இல்லையே. இருள் சூழ்ந்து கிடக்கிறதே! அன்று அவளும் நானும் உணர்ச்சிவசப் பட்டு நின்றோம். ஆனால், அன்று இருவருக்கும் ஒருமித்த உணர்ச்சி;



இன்றோ இருவருக்கும் மாறுபட்ட உணர்ச்சிகள்!....

அவள் கண்கள் அவனை ஒரு விநாடிதான் பார்த்தன. பிறகு நேருக்கு நேர் சந்திக்கச் சக்தியற்றுக் கீழே தாழ்ந்தன. அவள் உள்ள உணர்ச்சிகளைச் சந்தேகமறப் புரிந்து கொண்ட கரிகாலன் தன் கரங்களிரண்டையும் அவள் தோள்மீது ஆதரவுடன் வைத்தான். பிறகு ஒரு கையால் அவள் கன்னங்களை இருபுறமும் பற்றித் தூக்கிக் கண்களைக் கூர்ந்து நோக்கி, ''இது சரியல்ல செல்வி! உனக்குப் புரியவில்லையா?'' என்றான். பதிலுக்கு அவள் உதடுகள் ஏதோ முணுமுணுத்தன. ஆனால் குரலின் பலவீனத்தாலோ என்னவோ, அவள் என்ன சொன்னாள் என்பது அவன் காதில் விழவில்லை. எதையும் திடமாக வும், வெடுக்வெடுக்கென்றும் பேசக்கூடிய செல்வியின் குரல், உணர்ச்சியால் பலவீனப்பட்டுக் கிடந்ததைக் கண்ட கரிகாலன் அந்தப் பலவீனத்தை அழிக்க எண்ணி, அவள் தோளை ஒரு முறை அசக்கி, ''செல்வி! சொல்வதைத் தைரிய மாகச் சொல்லேன், என்னிடம் உனக்குப் பயமென்ன?'' என்று வினவினான்.

ஸ்பரிசத்தின் உணர்ச்சி பலமானதுதான். ஆனால் அது அளவுக்கு மீறிப் போகும்போது மென்மையான உணர்ச்சிகள் உடலை ஊடுருவுவதில்லை. சாதாரண நிலையையே அடைகிறோம். கரிகாலன் கைகள் தன்னைப் பலமாக அசக்கிய தாலும், கன்னத்தைப் பிடித்துத் தூக்கியதாலும் ஓரளவு சாதாரண நிலையை அடைந்துவிட்ட அரையன் ராஜராஜன் மகளும் அவனை விட்டுச் சிறிது விலகி நின்று, ''உங்களிடம் எனக்குப் பயம் எதற்கு?'' என்று பதிலுக்கு ஒரு கேள்வியை வீசினாள்.

"இந்த கலர்ச் சேலைதான் உனக்குப் பிடிக்காதே. இதை ஏன் வாங்கினே?"

"அடுத்த வீட்டுக்காரி உடுத்தி யிருக்காளே!"

—ஆர். சங்கரன்

"பயமில்லாவிட்டால் இரைந்து பேசுவதுதானே?" என்றான் கரிகாலன், ஏதோ சம்பாஷணையைத் தொடர வேண்டும் என்பதற்காக.

"எதற்காக இரைந்து பேச வேண்டும்? இங்கே படைகள் திரண்டு நிற்கின்றனவா? அவற்றுக்கு உத்தரவு போட வேண்டுமா? நீங்களும் நானும் தனிமையில் இருக்கிறோம். இங்கே கூச்சலுக்கு அவசியமில்லையே!" என்றாள் அவள்.

"நான் கூச்சலா போடச் சொன்னேன்?"

"வேறென்ன சொன்னீர்கள்?"

"பேசுவதைக் காது கேட்கும் படி சொல்வதுதானே?" என்றேன்.

"காதுக்கு ஏதும் பழுதில்லையே?"

"எத்தனை குறும்பு உனக்கு. வா, இப்படி."

"வரமாட்டேன்."

"வரமாட்டாய்?"

"ஊஹூம்."

அவன் அவளை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தான். அவள் பின்னுக்கு நகர்ந்தாள். அவன் கால்கள் துரிதமாக நடந்தன. அவள் ஓடினாள்; அவனும் அவளைத் துரத்தி ஓடிக் கடைசியாகக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து புரவிகளுக்கு அருகில் நிறுத்தி, "உம், ஏறு," என்றான்.

"எதற்கு?"

"பாசறைக்குச் செல்ல வேண்டும்."

"என்ன அவசரம்?"

"உனக்கு என்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா?"

"பைத்தியம் எனக்கல்ல; உங்களுக்குத்தான். காலையில் வேட்டையாட வந்த வாலிபனும் மங்கையும் திரும்பப் பாசறைக்கு இருட்டி ஒரு நாழிகைக்குப் பின் சென்றாலென்ன, பத்து நாழிகைக்குப் பிறகு சென்றாலென்ன, இரண்டும் ஒன்றுதானே?" என்று சொல்லிச் சிரித்தாள் அவள்.

தன்னுடைய நிலைமையைச் சந்தேகமறப் புரிந்து கொண்ட கரிகாலன், திக்பிரமை பிடித்து நின்றான். இருவரும் அத்தனை நாழிகைக்குப் பிறகு சைன்னியங்களின் இடையே ஒன்றாகச் சென்றால் படை வீரர்கள் என்ன நினைப்பார்கள், என்ன பேசுவார்கள் என்பதையெல்லாம் நினைத்துப் பார்த்து, செங்கமலச் செல்வி தன்னை எத்தனை இக்கட்டான நிலையில் கொண்டுவந்து வைத்து விட்டாள் என்பதை எண்ணிச் சொல்லவொண்ணாத கோபம் கொண்டான். தன்னை மகனாக ஏற்றுக் கொண்ட அரையன் ராஜராஜன். தான் மருமகன் பதவிக்கு ஏற்பாடு செய்வதாக நினைத்துக்கொண்டால், தன்னைப் பற்றி என்ன கேவலமான அபிப்பிராயத்துக்கு வருவார் என்பதை எண்ணியதால் மனம் புண்ணாகிச் செல்வியுடன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் பலவந்தமாக அவளைப் புரவிமீது தூக்கி உட்கார வைத்துத் தானும் புரவி மீது ஏறி அரையன் ராஜராஜன் பாசறையை நோக்கிக் குதிரையை நடத்தினான். செல்வியின் குதிரையும் கரிகாலன் மன ஓட்டத்தை அறிந்து கொண்டது போல அவள் குதிரையின் பக்கத்திலேயே சென்றது. பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் காலையில் வேட்டைக்கு வந்த அவ்விருவரும், பேச்சோ சிரிப்போ இன்றி, மௌனத்தின் அடிமைகளாக அரையன் ராஜராஜன் பாசறைக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

உணர்ச்சி வசப்பட்ட அவ்விருவரது வாய்கள் பேசவில்லையே தவிர, உள்ளங்கள் பேசிக்கொண்டிருந்தன. ஏதோ இரு பதுமைகள் போலக் கூடாரங்களுக்கிடையே சென்ற அந்த இருவரையும் படை வீரர்கள் பார்த்ததோ, கிசுகிசுவென்று பேசிக் கொண்டதோ, உள்ளங்களின் உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கியிருந்த

1
2
3
4
5
6

அவ்விருவரின் கண்களிலோ காதுகளிலோ படவில்லை. நேராகத் தங்கள் இருப்பிடத்துக்குச் சென்ற அவ்விருவரும், மாளிகையின் வாசலிலேயே பிரிந்து உள்ளே சென்றார்கள். அன்று இரவின் உணவு இருவருக்கும் வேம்பாயிருந்தது. ஆனால், படுக்கச் சென்றபின் ஏற்பட்ட தனிமையில் மட்டும் பெருத்த வித்தியாசமிருந்தது. பஞ்சணையில் தனியே படுத்துக் கிடந்த செங்கமலச் செல்வி, சாளரங்களைத் திறந்து வைத்துக் கொண்டு வானத்திலோடிய வெண் மதியையே நோக்கிக் கொண்டிருந்தாள். காட்டில் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அவள் உள்ளத்துக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுத்துக் கொண்டிருந்தது. 'அப்பா! பார்வைக்கு மெல்லியதாக இருக்கும் அவர் உடல் எத்தனை இரும்பாயிருக்கிறது! அதைச் சுற்றி வளைத்த என் கைகள் எவ்வளவு வலியெடுத்து விட்டன! நான் அவர் கன்னத்தில்.....' என்று நினைத்துக் கொண்டு போன அவள் சிந்தையை வெட்கம் சிறிது அறுத்தது. ஆனால் மீண்டும் நினைவைத் தொடர்ந்தாள். 'எதற்காக அவர் என் கன்னத்தை அப்படிப் பிடித்து உயர்த்திக் கண்களைப் பார்த்தார்? ஆமாம், அதென்ன நான் குழந்தையா, என்னை அத்தனை சுலபமாகத் தூக்கிக் குதிரையின் மீது உட்கார வைக்க! நானும் போர்ப் பயிற்சி செய்தாலும் ஆண்களைவிட எனக்குப் பலம் குறைவுதானோ? ஆகா, அவர் பேசிய அழகு! இது சரியல்ல செல்வி! உனக்குப் புரியவில்லையே! என்ன அசட்டுத்தனமான கேள்வி!' என்று பலப்பல விதமாகச் சிந்தித்த அவள், நித்திரை வராமலே பஞ்சணையில், இல்லை, இன்ப அலைகளில் புரண்டாள்.

ஆனால், கரிகாலன் எண்ணங்கள் வேறு திசையில் ஓடிக் கொண்டிருந்தன. காட்டின் நிகழ்ச்சிகள் அவன் இதயத்திலே பேரதிர்ச்சியை விளைவித்திருந்தன. சூடாமணி விஹாரத்தில் தான் நன்றாக வளர்க்கப்பட்டதற்குக் காரண பூதனான அரையன் ராஜராஜனுக்குத் துரோகம் செய்வது, எந்தத் தர்மத்துக்கும் ஒவ்வாது என்ற முடிவுக்கு வந்தான் கரிகாலன். மன்னன் மகளிடம் ஏற்கனவே மனத்தைப் பறிகொடுத்து விட்ட அவனுக்கு, அந்த மனத்திலே இரு மங்கையருக்கு இடமில்லை





சிதா–முரளி–மாதுரி
'அவள் மெல்ல சிரித்தாள்'

(அவன்? மெல்ல முழித்தான்!)

என்பதை அறிய அதிக நேரம் பிடிக்க வில்லை. அத்துடன் செங்கமலச் செல்வி யின் மனோ நிலையும் அவனுக்குப் புரிந்தே இருந்தபடியால், அவன் உள்ளத்தே வேதனையும் நிரம்பிக் கிடந்தது. உள்ளத்தை ஒருவனுக்குக் கொள்ளை கொடுத்த அந்தக் கிள்ளை மொழியாளின் பிற்கால வாழ்க்கை எந்த வழியில் திரும்பும் என்றும் தன்னைக் கேட்டுக் கொண்டான். 'எந்த வழியில் திரும்பினாலும், அவள் பாதை வேறு, என் பாதை வேறு. என் வாள் விமலாதித்தன் மகளுக்கு அடிமை. ஜெயசிம்மன் ஆதிக்கத்தை வேங்கி நாட்டில் உடைத்து, ராஜராஜ நரேந் திரனை உண்மையாகவே மன்னன் ஆக்கி, நிரஞ்சனா தேவிக்குச் சாந்தியளிக்கும் வரையில் என் வாழ்க்கை யின் கடமை நிறைவேறாது. அதுவரை காதலில்லை, மணமில்லை, எதுவுமே இல்லை,' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான் கரிகாலன். காட்டின் நிகழ்ச்சிகள் சிருஷ்டித்துவிட்ட நிலையில் தான் அதிக நாள் அரையன் ராஜராஜன் பாசறையில் தங்கியிருப்ப திலும் அர்த்தமில்லை என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்ட

பொழுது போகாத பொம்மு



நாதஸ்வர கச்சேரியின் போது, ஜால்ரா தாளம் போடுபவர் ஒரு பாட்டுக்கு எவ்வளவு தடவைகள் தாளம் போடுகிறார்?

28.8.87 அன்று மாலை ஒரு கல்யாண வரவேற்பில் நாதஸ்வரக் கச்சேரியில் ஒரு பாட்டு முடியும்வரை இருந்து கவனித்ததில்—

*119 தடவைகள் ஜால்ரா போட்டார். (பாட்டின் நேரம்: 10 நிமிடம்.)*

—பா.கோ.

கரிகாலன், தன் வாழ்க்கையைப் போர்ப் பாதையில் திருப்பத் தீர்மானித்தான். இந்த முடிவுக்கு வந்த அவன், சூடாமணி விஹாரத்திலிருந்து புறப்பட்ட காரியத்தை அறவே மறந்தான். பிறப்பு மர்மத்தை அறியும் பணி இரண்டாம் பட்சமாயிற்று. அரையன் ராஜராஜன் பாசறையை அடைய அவன் பட்ட கஷ்டங்களெல்லாம் அவன் சித்தத்திலி ருந்து மறைந்து, எப்படியாவது அந்தப் பாசறையை விட்டு அகன்றால் போதும் என்ற தீர்மானத்துக்கு வந்த அவன், மறுநாளே, அதைப் பற்றி அரையன் ராஜராஜனிடம் பிரஸ்தாபிக்கவும் முற் பட்டான்.

மறுநாள் உணவு அருந்தும் வேளையில், மெள்ளப் பேச்சைத் துவக்கிய கரிகாலன், "தந்தையே, போர்ப் பயிற்சியை நான் எப்பொழுது பெறுவது?" என்று கேட்டான்.

எங்கோ யோசித்துக்கொண்டு உணவருந்திக் கொண்டிருந்த அரையன் ராஜராஜன், இந்தக் கேள்வி காதில் விழுந்ததும், சரேலென நிமிர்ந்து தன் கூரிய விழிகளைக் கரிகாலன் மீது நாட்டி, "என்ன! போர்ப் பயிற்சியா! உனக்குப் போர்ப் பயிற்சி அளிக்கப்படவில்லை?" என்று ஆச்சரியத்துடன் வினவினான்.

"இல்லை தந்தையே!" என்றான் கரிகாலன்.

இதைக் கேட்ட அரையன் ராஜ ராஜன், தன் விழிகளைக் கரி காலனிடமிருந்து தன்னுடைய மற்றொரு பக்கத்தில் உட்கார்ந்திருந்த செங்கமலச் செல்விமீது திருப்பி, "செல்வி, இவனுக்கு நீ பயிற்சியளிக்க வில்லையா?" என்று வினவினான்.

செங்கமலச் செல்வி கண்களை மேலுக்குத் தூக்காமலும், தந்தையையோ கரிகாலனையோ பார்க் காமலுமே பதில் சொன்னாள். "பயிற்சியளிக்கிறேன்; தினந்தான் சொல்லிக் கொடுக்கிறேன்," என்று.

இதைக் கேட்ட கரிகாலன் இதழ்க ளில் சிறுநகை அரும்பியது. "பயிற்சி கிடைக்கிறது தந்தையே! ஆனால் அது நான் விரும்பும் பயிற்சியல்ல," என்ற கரிகாலன் பேச்சில், சிறிது விஷமமும் கலந்திருந்தது.

மிகத் தீட்சண்யமான



"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவுசெய்தது ஏனென்றால்."

அந்த நாட்கள் எனக்கு இன்றும் நினைவிருக்கு அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாக கடந்தேன்... சங்கடம், தொல்லை, சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்மசங்கடமாயிருக்கும். அதைத் துவைத்து காயப போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள் என் மகள். இக்காலப் பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது, மாறிவரும் உலகிற்கேற்ப பன்மடங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான், என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன், காரணம், நான் இளம் பெண்ணாக இருந்தபோது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரம்ப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப் போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையானபோது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிகமிக சுகாதாரமானது என்பதுதான்.

**உலர்வும் சுகமும்**

அது, கனமில்லாமல் மெல்லியதாக அடக்கமாக இருந்தாலும் என் மகளுக்கு தேவையான பாதுகாப்பைத் தருகிறது. மாத விலக்கை நாப்கினுள் விரைவாக உறிஞ்சிக் கொள்ளக்கூடிய அது, நன்கு அதிகம் உறிஞ்சும் அடுக்குகள் கொண்டது. அது எப்போதுமே உலர்வான உணர்வோடும் வசதியாகவும் வைத்துக கொள்வதாக என் மகளே கூறுகிறாள். அது மட்டுமா, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜும் (கூடுதலான பெரிய நாப்கின்) உள்ளது.

நீண்ட, அகன்ற, தடிப்பான கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ், அவளுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது— அந்த சங்கடமான நாட்களில் அல்லது அவளுக்கு அது தேவைப்பட்டபோது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் வெளியில் சென்று சுற்றி வந்தாலும்கூட அவள் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவேதான், எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை என் மகளுக்குத் தா



முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன்···அதுதான் கேர்ஃப்ரீ வசதி...கேர்ஃப்ரீ பாதுகாப்பு. மாறிவரும் காலத்தோடு நாமும் மாற வேண்டாமா!

---

கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்- இன்றைய மாறிவரும் உலகிற்கேற்ற முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு

---




10 உள்ள பேக்கிலும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்கிலும் கிடைக்கிறது

OBM/9072/TAM

# கேர்ஃபரீ. காரணம், காலம் மாறிவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்




''அவங்க பணக்காரப் பிள்ளைங்க. எப்படியும் பிழைச்சிப்பாங்க. நீயும் அவங்க-ளோடு உக்காந்து டி.வி., விடியோன்னு பார்த்து ஏன் கெட்டுப் போறே!''

புத்தியுடைய அரையன் ராஜராஜன், அந்த இருவருக்குமிடையில் ஏதோ மனத்தாங்கல் இருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டாலும், அது என்ன என்று அறியமாட்டாதவனாய் இருவரையும் மாறி மாறிப் பார்த்துவிட்டுக் கடைசியாகக் கரிகாலனை நோக்கி, ''நீ விரும்பும் பயிற்சி எது கரிகாலா?'' என்று வினவினான்.

சோழர் படைத் தலைவன் கண்கள் தன்னையும் செல்வியையும் மாறி மாறிப் பார்த்ததையும், அவற்றில் எழுந்த சந்தேகச் சாயையும் கவனித்த கரிகாலன், அவனிடம் அதிகக் கேலியை வைத்துக்கொள்வதில் பேராபத்து இருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டு, பேச்சை வேறு திசையில் திருப்பி, ''தந்தையே! செல்வி விற்போர்ப் பயிற்சி அளித்திருக்கிறாள். வேறு சில படைத்தலைவர்கள் வேலெறிவதையும் யானையை நடத்தும் முறையையும் கற்பித்திருக்கிறார்கள். ஆனால் படைகள் அணிவகுப்பு, அவற்றை நடத்தும் முறைகள் இவற்றை யாரும் கற்பிக்கவில்லையே,'' என்றான்.

அரையன் ராஜராஜன் உணவை முடித்துக்கொண்டு எழுந்து, சிறிது நேரம் அறையில் நடமாடிக் கொண்டே கரிகாலனை நோக்கினான். கடைசியாக அவன் வாயிலிருந்து வெளிப்பட்ட வார்த்தைகள் மிக நிதானமாக வெளிவந்தன. ''கரிகாலா! படைகளை நடத்தும் முறைகளைக் கற்பிக்க நான் ஏற்பாடுகளைச் செய்யாததற்குக் காரணமிருக்கிறது,'' என்றான் சோழர் படைத் தலைவன்.

''என்ன காரணம்?'' என்று கேட்டான் கரிகாலன்.

''காரணத்தைச் சொல்ல முடியாது.''

''ஏன்?''

''அதில் பல அரசியல் சிக்கல்கள் பிணைந்து கிடக்கின்றன.''

''காரணத்தைச் சொல்லவும் முடியாது; படைகளை அணிவகுத்து நடத்தக் கற்பிக்கவும் முடியாது. உங்கள் பேச்சு விசித்திரமாயிருக்கிறது. படைகளை அணிவகுத்து நடத்துவது என் பிறப்புரிமை—அதை நான் பயில வேண்டுமென்று சூடாமணி விஹாரத் தலைவர் சொன்னாரே.''

''அது அவர் அபிப்பிராயம்.''

''அப்படியானால் இந்த இடத்திலிருந்து செல்ல எனக்கு விடையளியுங்கள்.''

''எங்கு போகப் போகிறாய்?''

''வாழ்க்கையில் சந்தர்ப்பங்கள் கிடைக்கும் இடத்திற்கு.''

''அப்படி இடம் இருக்கிறதா?''

''ஏன் இல்லை? வேங்கி நாடு இல்லையா?''

அரையன் ராஜராஜன் மீண்டும் கரிகாலனை உற்றுப் பார்த்துப் பெரு மூச்சு விட்டு, ''கரிகாலா! விதி விசித்திர மானது. என் வாயைக் கட்டியதோடு நில்லாமல், உன் வாழ்க்கையையும் என்னுடன் பிணைத்துவிட்டது. அதற்கு நான் படியத்தான் வேண்டியிருக்கிறது. உன்னை நான் இங்கிருந்து அனுப்ப முடியாது. ஆனால் போர்ப் பயிற்சி அளிக்கிறேன், ஒரு நிபந்தனையின் மேல்,'' என்றான்.

''நிபந்தனை என்ன தந்தையே?''

''உன் பிறப்பு மர்மத்தை அறிய எவ்வித முயற்சியிலும் நீ ஈடுபடக் கூடாது.''

''இதற்கும் நான் படைகளை நடத்தப் பயிற்சி பெறுவதற்கும் என்ன சம்பந்தம்?''

''நிரம்ப இருக்கிறது மேற்கொண்டு எதுவும் பேசாதே. நிபந்தனைக்கு ஒப்புக் கொள்கிறாயா?''

''வேறு வழிதான்



# ஜூஸின் இனிப்பாய் ஈ·ஸி கலர் வனப்பு !

வாருங்கள். வகை விரிவான ஈஸி. கலர் டிவிக்களின் வனப்பை கண்டு களியுங்கள்.

இதன் தெள்ளத் தெளிவான காட்சியைகண்டு மகிழ்வீர்கள்.

வண்ணங்களின் ஈடில்லா நேர்த்தியை பார்த்து ரசிப்பீர்கள்.

இவை அனைத்துக்கும் மேலாக ஈஸியினால் மட்டுமே கிடைக்கும் தரமேன்மையையும், நம்பிக்கையையும் நீங்களே தேர்ந்தெடுப்பீர்கள்.

இதன் ஒப்பற்ற குணம் வருகிற எல்லா ஆண்டுகளிலுமே தொல்லையில்லாத காட்சிகளை தந்து மகிழ்விக்கும்.

அதுமட்டுமின்றி இதன் கருக்கான நவீன டிசைன் உடனடி சர்வீஸிங்கிற்கும் நிர்வகிப்பிற்கும் துணை செய்கிறது

எக்காலத்தும் கைவிடாத ஏற்றமான எலக்ட்ரானிக்ஸ் தொழில் நுட்பத்தின் அற்புதப் படைப்பு.

ஈஸி கலர் டெலிவிஷன்கள்.

காண வாருங்கள். இன்றே ஒரு டெலிவிஷனை எடுத்துச் செல்ல விரும்புவீர்கள்.

ஆமாம் ! அற்புதமான, டிவி.

ECtv

எந்த ஒரு டிவியும் எட்ட முயலும் இலட்சியம்.






ECIL EC எலக்ட்ரானிக்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிட்டெட் (இந்திய அரசின் கீழ் இயங்குவது) ஹைதராபாத் 500 762.

Karishma/EC/8/1711 TM

இல்லையே,'' என்று பதில் சொன்ன கரிகாலன், அரையன் ராஜராஜன் கேட்டபடி ஆணையிட்டும் கொடுத்தான். அந்த ஆணையிட்ட மறுநாளே கரிகாலனைத் தனது பாசறையிலிருந்து படைகளின் முன்னணிக்கு அனுப்பி வைத்தான் அரையன் ராஜராஜன். படைகளின் அணிவகுப்பைப் பற்றி ஏட்டுச் சுவடிகளில் ஏராளமாகப் படித்திருந்த கரிகாலன், அவர்களிடம் பயிற்சி பெற்ற தோடல்லாமல், அவர்கள் வியூகங்களை அமைக்கும் முறைகளிலிருந்த குறை பாடுகளையும் உணர்ந்து கொண்டான். படை அணிவகுப்பில் அவனுக்கிருந்த பேரறிவைக் கண்டு வியந்துபோன அரையன் ராஜராஜனின் உபதளபதி களும், ''இவனுக்கு எதற்காகப் பயிற்சி?'' என்று தங்களுக்குள்ளேயே விவாதித்துக் கொண்டார்கள். இந்த விஷயம் அரையன் ராஜராஜன் காதுக்கும் எட்டவே, தன்னுடைய மந்திராலோசனை சபையிலும் கரிகாலனுக்கு இடம் கொடுத்தான் சோழர் படைத்தலைவன்.

வேங்கி நாட்டின்மீது எப்படிப் படையெடுப்பது, எந்த இடத்தில் தாக்குவது என்பதைப் பற்றிய மந்திரா லோசனை அது. அந்த மந்திரா லோசனை மண்டபத்தில் சோழர் படைத் தலைவர்கள் எல்லோருமே கூடியிருந்தார்கள். பிரும்ம தேசத்தை ஆண்டவனும், இராஜேந்திர சோழ தேவனின் அத்தை குந்தவையின் கண வனும், இராஜேந்திர சோழ தேவன் பிரதானப் படைத் தலைவர்களில் ஒருவனுமான வல்லவரையன் வந்தியத்



''எதுக்கு உங்க மனைவியை உடம்பு சரியில்லாத இந்த நேரத்திலே போய்த் திட்டிக்கிட்டிருக்கீங்க?''

''உங்களுக்குத் தெரியாது. அவளை இந்த மாதிரி நேரத்திலேதான் திட்ட முடியும்.''

—ஜா. ரவி

தேவனும், கரிகாலனால் பல உபத்திரவங்களுக்கு ஆளானவனும் பிரும்மாண்டமான சரீரம் படைத்தவனு மான பிரும்ம மாராயனுங்கூட அந்தச் சபையிலே வீற்றிருந்தார்கள். அந்தச் சபையிலே, கையிலே ஒரு கரித்துண்டை எடுத்துக்கொண்ட அரையன் ராஜ ராஜன், எதிரேயிருந்த மரப்பலகையில் வேங்கி நாடு, இடை துறை நாட்டு இடங்களைக் கோடுகளாக இழுத்து, சோழர் படைகள் எந்த இடத்தில் தாக்க வேண்டும் என்பதை விவரிக்கலானான்.

''இதோ இருக்கிறது வேங்கியின் தலைநகர், இதோ இருக்கிறது இடைதுறை நாடு. இரண்டுக்கும் மத்தியில், கிருஷ்ணா நதியின் சரிபாதி இடத்தில், அக்கரையிலும் இக்கரையிலும் படைகளை நிறுத்தினால், இடைதுறை நாடும் வேங்கி நாடும் துண்டித்துப் போகும். அப்படித் துண்டித்த பிறகு, படைகளின் இரு பகுதிகளும் கிழக்கிலும் மேற்கிலும் அதாவது நேர் எதிர் திக்குகளில் நகர்ந்தால், வேங்கியையும் இடைதுறை நாட்டையும் ஏககாலத்தில் தாக்கலாம்,'' என்ற அரையன் ராஜ ராஜன், மற்றப் படைத் தலைவர்களைத் திரும்பிப் பார்த்தான்.

அரையன் ராஜராஜன் போர்த் திட்டத்தைப் படைத் தலைவர்கள் ஆமோதித்தார்கள். ஆனால் அந்தத் தலையாட்டம் அடுத்த விநாடி நின்றது. ஏதோ பெரிய இடியே அந்த மந்திரா லோசனையின் தலையில் விழுந்து விட்டது போன்ற உணர்ச்சி சபையில் ஏற்பட்டது. ''இந்தத் திட்டத்தில் ஒரு குறை இருக்கிறது,'' என்று நீரில் விழுந்த கல்லைப் போல அமைதியைக் குலைத்தது ஒரு மெல்லிய குரல். ஈட்டிகள் போன்ற இருபது கண்கள் கரிகாலன் மீது பாய்ந்தன. 'போரைக் கண்ணால்கூடப் பார்த்திராத இந்தச் சிறு பயலுக்கு என்ன துணிவு, பல போர்களைக் கண்டு வெற்றி வாகை சூடிய அரையன் ராஜராஜன் திட்டத்தில் குறைபாடு காண?' என்று அவர்கள் உள்ளத்திலே எழுந்த கோப ஜ்வாலை முகங்களிலும் கொழுந்துவிட்டு எரிந்தது. ''இன்னும் ஒரு முறை வாயைத் திறந்தால் வேங்கி நாட்டில் உன்னை வெட்டாத நான் இங்கு வெட்டிப் போடுவேன்,'' என்று இரைந்து எழுந்த பிரும்ம மாராயன், தன் கையை வாளுக்காகவும் கொண்டு போனான்.

(தொடரும்)




சாண்டில்யன்

## 35. உருவிய வாட்கள் உரத்த குரல்கள்

அரையன் ராஜராஜன் போர்த் திட்டத்துக்குப் பழுது சொல்லியதால், பிரும்ம மாராயன் வெகுண்டு எழுந்ததையோ தன்னை வெட்டிப் போடுவதாகக் கூவிக் கத்தியின் மேல் கையை வைத்ததையோ சிறிதும் லட்சியம் செய்யாத கரிகாலன், தன் அபிப்பிராயத்தை மேலும் வலியுறுத்தத் தொடங்கி, ''நான்கு பேரைக் கலந்து கொண்டு திட்டங்களை முடிவு செய்வதற்காகவே மந்திராலோசனை ஏற்பட்டது. அதில் யோசனை சொல்லும் ஒவ்வொருவரையும் வெட்டிப் போடுவதானால், கடைசியில் போரிடப் படைத்தலைவர்கள் யாருமே மிஞ்சமாட்டார்களே! நாம் ஒருவரை

யொருவர் வெட்டிக்கொள்ளப் பெரிய மந்திராலோசனை ஏதும் அவசிய மில்லையே,'' என்று சொல்லிப் பிரும்ம மாராயனை நோக்கிப் புன்முறுவலும் செய்தான்.

அரையன் ராஜராஜன் திட்டத்தில் குறை கண்டபோது, மற்றப் படைத் தலைவர்கள் திகைப்பும் ஆச்சரியமும் அடைந்தார்களென்றால், அவன் பிரும்ம மாராயனை எதிர்த்துப் பேசியதைக் கேட்டதும், அந்தத் திகைப்பும் ஆச்சரியமும் பல மடங்கு அதிகமாகி, அடுத்தபடி என்ன நடக்கும் என்பதை எதிர்பார்த்தவர்களாகப் பேச்சோ செயலோ அற்று நின்றார்கள். அங்கிருந்த ஒவ்வொரு படைத் தலைவனும் உப படைத்தலைவனும் அநேக போர்களில் தங்கள் வல்லமையை நிரூபித்தவர்கள். தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்து இராஜேந்திரன் படையில் சேர்ந்து பதவி வகித்த அந்தப் படைத் தலைவர்களின் பலதரப்பட்ட உடைகளும் ஆயுதங்களும் பார்ப்பதற்குக் கண்ணைப் பறித்தன. மீன் சின்னங்களைக் கழுத்தின் பெரிய பொற் சங்கிலிகளில் அணிந்த பாண்டி நாட்டுப் படைத் தலைவர்கள், சிறு சிறு வெண் சங்குகளை இணைத்த தங்கப் பதக்கங்களைக் கையில் இறுகக் கட்டிக் கொண்டிருந்த சேர நாட்டுச் சேனாதிபதிகள், செங்கழுநீர்ப் புஷ்பத்தின் பிறப்பிடம் தொண்டை மண்டலம் என்பதை நிரூபிக்க, அந்தப் புஷ்பங்களை வெள்ளியாலும் பொன்னாலும் செய்து கைகளில் வீர கங்கணங்களாக அணிந்திருந்த தொண்டை மண்டலச் சிங்கங்கள், இப்படிப் பலதரப்பட்ட பகுதி களிலிருந்தும் சேர்க்கப்பட்டவர்களும் இராஜேந்திர சோழ தேவன் மெய் கீர்த்தியைப் பரப்புவதிலேயே ஆர்வங் கொண்டவர்களுமான அந்த வீர சிங்கங்களுக்கிடையே சிறிய ஓர் ஆட்டுக் குட்டி புகுந்ததுபோல் கரிகாலன் புகுந்து யோசனை சொன்னதன்றி, எதிரிகள் மீது மிக முரட்டுத்தனமாகப் பாயக் கூடியவனும், மகா கோபிஷ்டனுமான பிரும்மமாராயனை எதிர்த்துப் பேசினானென்றால், அந்த மந்திரா லோசனை மண்டபத்தில் சிறிது நேரம் மௌனம் நிலவியதில் ஆச்சரியமென்ன இருக்க முடியும்?

அப்படி ஏற்பட்ட அந்த மகிழ்ச்சி மௌனத்தை வந்தியத்தேவரே தன் புன்முறுவலால் மெள்ளக் கலைத்தார். அவருடைய ராஜ வதனத்தில் மலர்ந்த புன்முறுவலையும் தன்மீது அவர் கண்களை ஓட்டியதன் அர்த்தத்தையும் புரிந்துகொண்ட பிரும்மமாராயன் கண்கள் பேராச்சரியத்தால் அகல விரிந்தன. வாளை நோக்கிச் சென்ற அந்த அந்தணனின் கை மீண்டும் திரும்பி பக்க வாட்டில் செயலற்று விழுந்தது. இருப்பினும், உள்ளூர ஏற்பட்ட கோபம் தணியாததால், ''என்னை அவமதிக்க இந்தச் சிறுவனுக்கு வந்தியத் தேவரும் இட மளிக்கிறாரா?'' என்று அவரை நோக்கிச் சற்று உஷ்ணமாகவே கேட்டான் பிரம்ம மாராயன்.

வந்தியத்தேவர் வாழ்க்கையின் பாதிப் பகுதியைத் தாண்டி வருஷம் பத்தாகிவிட்டாலும், இடைவிடாத போர்ப் பயிற்சியின் காரணமாகவும், உள்ளூர அவருக்கு யாரிடமும் இருந்த அன்பின் காரணமாகவும் முகத்தில் முதுமை அதிகமாகத் தட்டவில்லை. தலையில் லேசாகத் தெரிந்த ஓரிரு நரைகள், முகத்தில் ஆரம்பித்துக் கொண்டிருந்த ஓரிரு திரைகள் இவைகூட அந்த வதனத்துக்குச் சோபையையும் ஒருவித கம்பீரத்தையும் அளித்தனவே ஒழிய, முதுமையைக் காட்டவில்லை.

இளமைக் காலத்தில் அரச மகளான அழகி குந்தவை உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அவருடைய

---

**நீங்கள்**
**நினைப்பது போல**
**அத்தனை**
**சுலபமில்லை!**

இந்தப் படத்தைக் கோடிட்டுள்ளபடி சிறு சிறு துண்டுகளாக வெட்டிக் கொள்ளுங்கள். கலைத்துப் போட்டு விட்டுத் திரும்ப ஒன்று சேருங்கள்.

ரொம்பச் சுலபம் போல்தான் தோன்றும். ஆனால்—



வந்தியத்தேவர் ஒருமுறை கரிகாலன் மீது தமது கண்களை ஓட்டிவிட்டுத் திருப்திக்கு அறிகுறியாகத் தமது தலையையும் ஒருமுறை ஆட்டிக் கொண்டார். பிறகு மற்றப் படைத் தலைவர்களைப் பார்த்துச் சொன்னார், ''பிரும்மமாராயர் சொன்ன விஷயங்களையும் யோசிக்க வேண்டியதுதான். ஆனால் அவை ஒருவரை மந்திராலோசனையில் சேர்க்குமுன்பாக யோசிக்க வேண்டிய விஷயங்கள். ஒருவருக்கு அனுபவமிருக்கிறதா, அவர் யோசனை சொல்லத் தகுந்தவரா என்பதையெல்லாம் முன்பே யோசித்திருக்க வேண்டும். மந்திராலோசனையில் ஒருவரைச் சேர்த்த பிறகு அவர் வயதைப் பற்றி அக்கறை கொண்டு பயனில்லை. அறிவைப் பற்றித்தான் அக்கறை. ஆனால் இதில் முடிவு சொல்ல வேண்டியவன் நானல்ல. இங்கு படைகளின் தலைவர் அரையன் ராஜராஜன். அவர்தான் அதில் தீர்ப்புச் சொல்ல வேண்டும்.

அதுவரை ஏதும் பேசாமல் நடப்பதைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த அரையன் ராஜராஜன் மீது மற்றப் படைத் தலைவர்களின் கண்கள் திரும்பின. அவனைப் பேசத் தூண்ட முற்பட்ட வந்தியத் தேவரும், ''படைத் தலைவரே! இதில் நேராகச சம்பந்தப்பட்ட தாங்கள் ஏதும் சொல்ல வில்லையே?'' என்று கேட்டார்.

அரையன் ராஜராஜனின் கூர்மையான விழிகள் வந்தியத் தேவா மீது அரை விநாடி உலாவி விட்டுப் பிறகு சற்றுத் தூரத்திலிருந்த கரிகாலன் மீது நிலைத்தன. தன் உள்ளத்தையே ஊடுருவிச் சென்ற அந்தப் பார்வையைச் சந்திக்கத் திறமையற்ற கரிகாலன், தன் கண்களைத் தரையில் தாழ்த்தினான். தன்னை மகனென்ன ஏற்றுக்கொண்டு, மகனைவிட அருமையாக நடத்தி வந்த அந்த மாபெரும் படைத் தலைவனுக்கு மாசு ஏற்படும்படியாகப் பேசிவிட்டோமே என்ற வருத்தமும் அவன் மனத்திலே ஓடியதால், ''தந்தையே!

கண்களில் இத்தனை வயதுக்குப் பிறகும் பிரகாசம் குறையவில்லை. எத்தனையோ படைவீரர்களைத் தன் இஷ்டப்படி திருப்பும் வல்லமை வாய்ந்த கண்கள்! கண்டிப்பான கண்கள்தான்! ஆனால் அந்தக் கண்டிப்பில் கருணையும் கலந்திருந்தது. அத்தகைய கண்களின் பார்வையை மீண்டும் ஒருமுறை பிரும்மமாராயன் மீது செலுத்திய வந்தியத் தேவர், ''பிரும்மமாராயரே! இந்த மந்திராலோசனையில் இந்தச் சிறுவனுக்கு நான் இடமளிக்கவில்லை. அவனுக்குப் பயிற்சியளிக்கும் படைத் தலைவர்களெல்லாம், போரில் அவனுக்கிருக்கும் நுண்ணிய அறிவைப் பற்றி வியந்து கூறியதால், நாமனைவரும் அவனுக்கும் மந்திராலோசனையில் இடமளித்தோம். மந்திராலோசனை மண்டபத்தில் பெரியவர் சிறியவர் கிடையாது. எந்த யோசனையையும் மறுத்துக் கூற யாருக்கும் அதிகாரமுண்டு. தமிழர் வழக்கு இதுதான்,'' என்றார்.

''சோழர் படையின் பெருந் தலைவரான அரையன் ராஜராஜனையே எதிர்த்துப் பேச அனுமதிப்பது ஒரு வழக்கா? பேசுபவன் யார், அவன் அனுபவம் என்ன என்பதெல்லாம் யோசிக்கக்கூடிய விஷயங்களல்லவா?'' என்று மீண்டும் கேட்டான் பிரும்மமாராயன்.

# டயனோரா குவின்ட்ரிக்ஸ் கலர் டிவி.
# நீங்கள் அதைத் தேர்ந்தெடுப்பீர்கள், ஒரே ஒரு காரணத்திற்காக: அப்பழுக்கற்ற தரம்!




புதிய டயனோரா குவின்ட்ரிக்ஸ் கலர் டிவி. ஆரம்ப முதல் முடிவு வரை துல்லியமான சிறப்புடன் தயாரிக்கப்படுகிறது.

## அப்பழுக்கற்ற தயாரிப்பு

மிகத் துல்லியமாகத் தயாரிக்கும் இயந்திரங்களைக்கொண்டு உருவாக்கப்படுகிறது இந்த டிவி. உதாரணமாக, தயாரிப்பில் எவ்வித தவறும் ஏற்படாதிருக்க கம்ப்யூட்டர் உதவியால் இயங்கும் இயந்திரங்களால் பாகங்கள் தானகவே பொருத்தப்படுகின்றன. புரோகிராம் செய்யப்பட்ட தானியங்கி இயந்திரங்கள், முழுக்க முழுக்க குறைபாடற்ற சர்க்யூட்டை அமைக்கின்றன.

## அப்பழுக்கற்ற செயல்பாடு

இதன் தனித்தன்மை வாய்ந்த அம்சங்கள் சிறப்பான செயல்பாட்டிற்கு வழி வகுக்கின்றன. பிக்சர் கண்ட்ரோல் சாதனத்தின் உதவியால் மிகத் தெளிவான காட்சிகளைப் பெற முடிகிறது. இதில் ஹை-கெய்ன் ஆர்.எஃப். ட்யூனர் இருப்பதால் பிக்சர் சின்க்ரோனஸ் டிடக்டர். சர்க்யூட் படங்களை மிகவும் தத்ரூபமாகத் தருகிறது. எல்லா சேனலிலும் இயங்கும் வீடியோ அமைப்பு இதில் உள்ளது. வோல்டேஜ் ஏற்ற இறக்கங்கள், மின்னல், மின் சப்ளையில் ஏற்படும் சலனங்கள் ஆகியவற்றிலிருந்து டிவியை பாதுகாக்க, உள்ளடங்கிய பாதுகாப்பு சர்க்யூட் உள்ளது.

அப்பழுக்கற்ற தயாரிப்பே உங்களுக்குத் தேவையெனில், டயனோரா டீலரிடம் சென்று குவின்ட்ரிக்ஸ் டிவியைக் காட்டச் சொல்லுங்கள்.

**Dyanora®**

**டயனோரா®**

குவின்ட்ரிக்ஸ்

ரூ. 9,600*
• எல்லா வரிகளும் அடங்கியது.
• தமிழ் நாட்டில் மட்டுமே.



தயாரிப்பாளர்கள்: **டயனாவிஷன் லிமிடெட்**, டாக்டர் விக்ரம் சாராபாய் இன்ஸ்ட்ரானிக்ஸ் எஸ்டேட் அருகில், கொட்டிவாக்கம், சென்னை 600 041

இதன் சிறப்பான செயல்பாட்டைப் பார்க்க டயனோரா ஷோ ரூமிற்கு விஜயம் செய்யுங்கள். விலாசம்: ஜாவர் பிளாசா 1A நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை 600034

HTA-7080 R

என் துணிவுக்கு மன்னிக்க வேண்டும்,'' என்று மெள்ளச் சொன்னான்.

அரையன் ராஜராஜன் கண்கள் மட்டும், அந்த வாலிபனை விட்டு அரை விநாடி அகலவில்லை. அந்தப் பார்வையைத் தொடர்ந்து வெளிவந்த வார்த்தைகளில் கடுமையுமில்லை, கண்டிப்புமில்லை. ஏதோ சமதையான படைத் தலைவனுடன் போர்த் திட்டங்களைத் தர்க்கிப்பது போலவே பேசிய அரையன் ராஜராஜன், ''கரிகாலா! துணிவு வீரனுக்கு அவசியம். ஆனால் துணிவுடன் அறிவும் தேவை. பலாபலன்களை யோசித்துப் பார்க்கும் திறனும் வேண்டும்,'' என்றான்.

''யோசித்துப் பார்த்ததால் வந்த விளைவுதான் இது தந்தையே,'' என்று கரிகாலன் பதில் சொன்னான்.

''எந்த யோசித்துப் பார்த்தாய்?''

''பலா பலன்களை.''

''எந்தப் பலா பலன்களை?''

''தங்கள் போர்த் திட்டத்தின் பலாபலன்களை.''

''வெற்றியில் உனக்குச் சந்தேகமா?''

''சந்தேகமில்லை; தோல்வி நிச்சயம்.''

சபையில் மீண்டும் பேரதிர்ச்சி ஏற்பட்டது. பல படைத் தலைவர்கள் ஆசனங்களை விட்டே எழுந்து விட்டார்கள். வந்தியத் தேவருடைய முகத்தில்கூடப் பிரமை தட்டி விட்டது. சிறுவன் சுத்த அதிகப்பிரசங்கியாயிருப்பானோ என்ற சந்தேகம் அவர் முகத்திலும் நன்றாகப் பளிச்சிட்டது. இத்தனைக்கும் அரையன் ராஜராஜன் மட்டும் நிதானத்தை இழக்காமல் கையமர்த்தி, படைத் தலைவர்களை உட்காரச் சொல்லிவிட்டு மீண்டும் கரிகாலனை நோக்கிக் கேட்டான். ''தோல்வி நிச்சயமென்று எப்படிச் சொல்கிறாய்? திட்டத்தில் அப்படியென்ன பெருங்குறை இருக்கிறது?'' என்று.

''அனுமதி கொடுத்தால் விளக்குகிறேன்,'' என்று பணிவு நிரம்பிய குரலில் கரிகாலன் பதில் சொன்னான்.

''சரி, சொல்,'' என்று ஆணையிட்ட அரையன் ராஜராஜன், தன்






ஆசனத்தின் பின்னாலிருந்த தலையணை யிலே சாய்ந்து கொண்டான்.

கரிகாலன் தன்னைச் சூழ நின்றிருந்த படைத் தலைவர்களை விலக்கிக் கொண்டு நடந்து, அரையன் ராஜராஜனுக்கு அருகில் வந்து, எதிரே யிருந்த மரப் பலகையில் இழுக்கப் பட்டிருந்த கரிக் கோடுகளை ஒரு கணம் உற்றுப் பார்த்துவிட்டு, ''தந்தையே, உங்கள் திட்டத்திற்குப் பேராபத்தா யிருப்பது கிருஷ்ணா நதி. முகத்துவாரத் துக்கு அருகே செல்லச் செல்ல நதியின் அகலம் மிக அதிகம்,'' என்றான்.

இதைக் கேட்ட பிரும்ம மாராயன், ''ஓகோ! நதிகள் மூகத்துவாரத்துக்கு அருகில் பெரிதாகி விடுமோ? என்ன புதுமை? இதை எப்படியப்பா கண்டுபிடித்தாய்?'' என்று சொல்லிப் பெரிதாகக் கேலிச் சிரிப்பும் சிரித்தான்.

ஆனால், அரையன் ராஜராஜனோ, வந்தியத் தேவரோ கரிகாலன் சொன்னதைக் கேட்டு நகைக்க வில்லை. அதற்குப் பதிலாக இருவர் கண்களும் ஒருமுறை சந்தித்துவிட்டு, மீண்டும் கரிகாலனை நோக்கின.

கரிகாலன் மனம் போர்த் திட்டத்தை வகுப்பதில் சுழன்று கொண்டிருந்ததால், பிரும்மமாராயன் நகைப்பையோ, வந்தியத் தேவரும் அரையன் ராஜராஜனும் பரஸ்பரம் பார்த்துக் கொண்டதையோ, அவன் கவனிக்க வில்லை. ஏதோ வகுப்பு நடத்தும் உபாத்தியாயன் போல அவன் சொல்லிக் கொண்டே போனான். ''வெறும் தரை குறுக்கே இருக்குமானால், தந்தையார் வகுத்த திட்டத்தை வகுப்பதில் மிக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். நதி குறுக்கே வந்தால் படைபலம் மட்டும் பயன்படாது. இதற்குச் சரித்திரச் சான்று இருக்கிறது,'' என்று பேசிக் கொண்டே போன கரிகாலனை, மெள்ள இடைமறித்த வந்தியத் தேவர், ''அது என்ன சரித்திரச் சான்று கரிகாலா?'' என்று கேட்டார்.

''புருஷோத்தமனுக்கும் சிக்கந்தருக்கும் நடந்த போரைப் பற்றிக் குறிப்பிடுகிறேன் தலைவரே. புருஷோத்தமன் நதிக்கு இக்கரை யில் மாபெரும் படையுடன் தங்கினான். அவன் படையில் கால் பங்குகூட இல்லை யவனனான சிக்கந் தரின் படை. புருஷோத்தமன்

ஒரு புதுக் கருத்துடன் மோதுகிற போது வலிக்கிறதா? அதிலிருந்தே உங்களுக்கு வயசாகிவிட்டதென்று புரிந்துகொள்ளலாம்.

—ஜான் நுவீன்

ஒரே ஒருவர் உங்களைக் கழுதை என்று சொன்னால் லட்சியம் பண்ணத் தேவையில்லை. இரண்டு பேர் சொன்னால் ஒரு சேணம் வாங்கிக் கொள்வது நல்லது.

—பிட்டிஷ் பழமொழி

உங்களுக்குப் பாடத் தெரிந்திருக்க வேண்டு மென்பதில்லை. பாட வேண்டும் போல் இருக்கிறதல்லவா, அதுவே வெற்றிக்கு அடையாளம்.

—மான்ட்டா க்ரேன்

எதையும் சொல்லவில்லை. ஆனால் எதையும் சொல்லாமல் விடவில்லை.

இதுவே கிசுகிசுக் கலை.

—ஸவேரி.



''ஐயாவோட மதுரை மாமா பிஸ்கெட் வாங்கிட்டு வந்தால் தின்னாதே. கஞ்சன்! மட்டமான பிஸ்கெட்தான் வாங்கிட்டு வருவார்.''

படையைக் கண்டு சிக்கந்தர் படையே கலங்கியது. ஆனால் முடிவு என்ன? புருஷோத்தமன் படை பலம் வெற்றி பெற்றதா? சிக்கந்தரின் போர்த் தந்திரம் வெற்றி பெற்றதா? இடையில் நதி ஒன்று இல்லாமற் போனால், புருஷோத்தமன் படை பலத்தால் சிக்கந்தரை நிர்மூலம் செய்திருக்கலாம். ஆனால் நதி சதி செய்துவிட்டது. பாதிப் படையை நதியில் புருஷோத்தமன் கண்களுக்கு முன்னால் நிறுத்திவிட்டு, இரவோடிரவாக இன்னும் பாதிப் படையை நதியின் கோடியில் மற்றொரு பாகத்திற்குக் கொண்டு போய் நதியைக் கடந்த சிக்கந்தர், புருஷோத்தமனைப் பின்புறம் தாக்கினான். அதைச் சமாளிக்கத் திரும்பிய படையை எதிர்க் கரையிலிருந்த மீதிப் படை இன்னொரு பக்கத்தில் தாக்கியது. இரண்டு படைகளுக்கு மிடையில் அழிந்தது புருஷோத்தமனின் மாபெரும் படை,'' என்றான் கரிகாலன்.

''வெறும் ஏட்டுச் சுவடி! பழங்கதை!'' என்றான் பிரும்ம மாராயன்.

''பழங்கதைகளில் இக்காலத்துக்குத் தேவையான அறிவு புதைந்து கிடக்கிறது பிரும்மமாராயரே. ஏட்டுச் சுவடிகளில்தான் நாம் பயில வேண்டிய போர் அறிவும் இருக்கிறது,'' என்று கூறிய கரிகாலன், அரையன் ராஜராஜனை நோக்கி, ''தந்தையே! நான் சொல்வது பிரும்மமாராயருக்குப் புரியாவிட்டாலும், தங்களுக்கும் வந்தியத் தேவருக்கும் புரிகிறது. கிருஷ்ணாவின் அகலம், அக்கரையிலும் இக்கரையிலும் செல்லும் நமது படைகளைக் கிழக்கே போகப் போகப் பெரிதும் பிரித்து விடும். தவிர, தற்சமயம் கிருஷ்ணாவில் வெள்ளம் வேறு அதிகம். வேங்கியை அடைந்த பிறகு, நமது இரு படைகளும் இருபுறத்திலும் வேங்கி நாட்டுப் படைகளை இறுக்க முடியாது. இடையே நிற்கிறது பயங்கரமான கிருஷ்ணாவின் பிரவாகம்,'' என்றான்.

''பிரவாகத்தைப் பற்றிக் கவலைப்படாதே கரிகாலா. கீழ்க் கடலில் கிருஷ்ணாவின் முகத்துவாரத்தில் நமது கப்பற்படை சித்தமாயிருக்கிறது. நமது இரண்டு படைகளும் வேங்கியை அடைந்ததும், கப்பற்படை நதிக்குள் வந்து இரண்டு படைகளுக்கும் பாலம்போல குறுக்கே நின்று இரண்டு படைகளும் இணைவதற்கும் ஏற்பாடு செய்யும். அக்கரையில் நமது படையின் ஒரு பகுதி, இக்கரையில் ஒரு பகுதி, குறுக்கே நதியின் நீர்மட்டத்தில் நமது கப்பற்படை ஆக மூன்றும் சேர்ந்த பலமான போர்ச்சுவர் ஒன்று வேங்கியில் அமைக்கப்படும். இந்தச் சுவர் வடக்கு தெற்கில் வேங்கியை இரண்டாக வெட்டிவிடாதா?'' என்றான் ராஜராஜன்.

''இதையும் நான் யோசித்தேன். ஆனால் நான் மட்டும் ஜெயசிம்மன் நிலையிலிருந்தால், இந்தச் சுவரைப் பல இடங்களில் உடைத்து விடுவேன்.''

''எப்படி?''

''இந்தச் சுவரில் நான் மோதவே மாட்டேன். முதலிலேயே ஒற்றர்களை அனுப்பி, தங்கள் படை நடமாட்டத்தை அறிவேன். வேங்கிப் படைகளைக் கிருஷ்ணா நதிக்கு இக்கரையிலுள்ள சாளுக்கியர் கோட்டைப் பகுதியிலேயே நிறுத்துவேன். பிறகு என் சகாக்களை விட்டு அக்கரையிலிருக்கும் சோழர் படைகளைத் தாக்கச் செய்வேன்....'' என்று சொல்லிக் கொண்டு போன கரிகாலனை இடைமறித்த பிரும்மமாராயன், ''யார்

அந்தச் சகாக்கள்?'' என்று கேட்டான்.

பிரும்ம மாராயனின் ஞானசூன்யத்தை வியந்த கரிகாலன், ''என்ன அப்படிக் கேட்கிறீர்கள் பிரும்ம மாராயரே! வேங்கி நாட்டுத் தலைவாசலில், வடக்கில் இருக்கும் ஒட்டர நாட்டு மன்னன் இந்திரதத்தன் எங்கே போனான்? அவனை அடுத்துள்ள கலிங்க மன்னன் எங்கே போனான்? இந்த இருவரும் சோழ சாம்ராஜ்யத்தின் விஸ்தரிப்பை விரும்பவில்லையென்பதை உலகம் அறியுமே! ஜெயசிம்மன் கைப்பொம்மைகளான இந்த இருவரின் படைபலம் மகத்தானது. நமது படையெடுப்பு முயற்சிகளைக் கண்டதும் ஜெயசிம்மன் கிருஷ்ணா நதியின் தெற்குக் கரைக்கும் வந்து, வடக்குக் கரையில் இந்திரதத்தனையும் கலிங்கனையும் நிறுத்தினால், நம் கதி என்ன? பிரிவுபட்ட நமது படைப் பகுதிகள் பிரிவுபடாத மூன்று அரசர்களின் பெரும் படைகளைச் சமாளிக்கும்படி இருக்கும். விளைவு என்ன என்பது படைத் தலைவர்களாகிய உங்களுக்கே தெரியும்,'' என்று விளக்கினான்.

மறுபடியும் சபையில் பெரிய அமைதி. அதைத் தொடர்ந்து எழுந்தது அரையன் ராஜராஜன் குரல். ''இந்த நிலையைத் தவிர்க்க மாற்றுத் திட்டம் இருக்கிறதா?''

''இருக்கிறது,'' என்றான் கரிகாலன்.

''சொல், பார்ப்போம்,'' என்று கட்டளையிட்டான் அரையன் ராஜராஜன்.

கரிகாலன் சொன்னான். மறுபடி எழுந்தது சபையில் பெருங்கூச்சல். இந்த முறை பிரும்மமாராயன் மட்டுமல்ல. பல படைத் தலைவர்களின் குரல்கள் மிக உக்கிரமாக எழுந்தன. உறையிலிருந்து எழுந்தன பல வாட்கள். அடுத்த விநாடி, கரிகாலன் கதி என்ன ஆகுமோ என்று எதற்கும் கலங்காத வந்தியத் தேவரே கலங்கினார்.

(தொடரும்)

---

## என்ன ஆயிற்று வீரவாஞ்சி நினைவுச் சின்னம்?

சமீபத்தில் சுதந்திரப் போராட்ட வரலாற்றில் 40வது ஆண்டினையொட்டி, தமிழகத்தில் 'புனித மண்' எடுத்த 5 இடங்களில் மணியாச்சியும் ஒன்று. மணியாச்சி ரயில்வே சந்திப்பில் 'வீரவாஞ்சி'க்கு நினைவுச் சின்னம் அமைக்க, மத்திய சர்க்கார் நிலம் ஒதுக்கியுள்ளது. முன்னாள் மத்திய ரயில்வே அமைச்சர் மிஸ்ரா அவர்கள், லோக்சபா முன்னாள் உறுப்பினரான கே.டி. கோசல்ராமுக்கு எழுதிய ஓர் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளது. கோசல்ராம் தனது 61வது பிறந்த தினவிழா சென்னையில் கொண்டாடியபோது கூறினார். அப்போதே இதற்காக ஒரு விசேஷ கமிட்டியும் அமைத்து, வசூலான தொகை ரூபாய் ஐயாயிரத்தைக் கோசல்ராம் கமிட்டியின் டிரஷரரும், சென்னை முன்னாள் ஷெரீபுமான ஆர். ராமகிருஷ்ணனிடம் வழங்கப்பட்டபோது, ஷெரீபும், மேற்படி நிதிக்காகத் தனது நன்கொடையாக ரூ. 1,001/- அளித்துள்ளார். மத்திய ரயில்வேஅமைச்சரகம் மணியாச்சியில் வீரவாஞ்சிக்கு நினைவுச் சின்னம் அமைக்க நிலம் ஒதுக்கியும் அங்கு ரயில்வே அதிகாரிகள் இதுவரையில் நினைவுச் சின்னம் எழுப்பாததற்கான காரணங்களை அறிய முடியவில்லை.

—ரகமி



# மன்னன் மகள்

8-10-87

சாண்டில்யன்

## 36. ஆறு சுவர்கள்

சோழப் பேரரசின் பிரதான படைத் தலைவனான அரையன் ராஜராஜனுடைய போர்த் திட்டத்துக்குப் பழுது சொல்வதே பெரும் பிழை. அப்படிப் பழுது சொன்னதுமல்லாமல்; அதற்கு மாற்றுத் திட்டமொன்று சொல்ல முன்வருவதென்றால் அது மன்னிக்க முடியாத மாபெரும் குற்றம். அந்த மாற்றுத் திட்டமும் ஏற்கனவே அரையன் ராஜராஜன் செய்துள்ள சகல போர் ஏற்பாடுகளையும் தவிடு பொடியாக்கக் கூடிய வகையில் அமைந்திருந்ததென்றால், அதை மற்றத் தலைவர்கள் எப்படித்தான் ஒப்புக்கொள்ள முடியும்? எப்படித்தான் சகிக்க முடியும்? ஆகவே அவர்களில் பலர் வீராவேசத்துடன் சபையில் எழுந்ததிலோ, கரிகாலனை ஒழித்துவிடக் கத்திகளை உருவியதிலோ விந்தை என்ன இருக்கிறது?

உயிருக்கே ஆபத்து நோக்கூடிய அந்தப் பயங்கரமான சந்தர்ப்பத்தில் கரிகாலனைத் தவிர வேறு ஒருவனாயிருந்தால் அடியோடு நடுநடுங்கி மாற்றுத் திட்டம் சொன்னது பிசகென்று மன்னிப்புக் கேட்டிருப்பான். அல்லது தன் திட்டத்தில் தானே ஏதாவது குறைகளைக் கண்டுபிடித்து உயிர் பிழைக்க வழி தேடியிருப்பான். ஆனால் சூடாமணி விஹாரத்திலிருந்து புறப்பட்ட நாளாய்ப் பலமுறை உயிரைப் பணயம் வைத்த கரிகாலன் திடநெஞ்சு, இரண்டு வகைகளையும் கடைப்பிடிக்க மறுத்ததால், அவன் இருந்த இடத்தை விட்டுச் சிறிதும் நகராமலும், படைத் தலைவர்களின் உருவிய வாட்களையோ, உரத்த குரல்களையோ, உக்கிர விழிகளையோ, லட்சியம் செய்யாமலும் நின்றான். அவர்கள் ஆத்திரத்தைக் கண்ட அவன் கடை இதழ்களில், இளநகையொன்றும் அரும்பி நின்றது.

கரிகாலனுடைய நெஞ்சுறுதியையும், அத்தனை படைத் தலைவர்களின் எதிர்ப்பையும், அவன் பொருட்படுத்தாமல் நின்ற தோரணையையும் கண்ட வந்தியத் தேவர், அத்தகைய வாலிபனை இழப்பது சரியல்லவென்ற நோக்கத்தாலும், அவனிடம் உண்டான பெருங் கருணையாலும் குறுக்கிட்டு, "ஒரு வாலிபனை வெட்டத் தமிழ்நாட்டின் வாட்கள் இத்தனை தேவையா?" என்று மிக அடக்கமாக வினவினார். ஆனால், வந்தியத் தேவரின் அடக்கம் எத்தன்மையதென்பதை அந்தப் படைத் தலைவர்கள் அத்தனை பெரும் அறிந்திருந்தார்கள். அடக்கமும் குழைவும் கலந்து இன்பமாக ஒலிக்கும் வந்தியத்தேவரின் குரலில், எப்பொழுதும் ஊடுருவி நிற்கும் கண்டிப்பும் கட்டளையிடும் தோரணையும் அந்தச் சந்தர்ப்பத்திலும் நிறைந்திருந்ததைக் கண்ட படைத்தலைவர்கள் ஓரளவு அடங்கினாலும், அவர்கள் கோபம் முழுவதும் தணியாததால், சிறிது முணுமுணுப்பு சபையில் கேட்கத்தான் செய்தது. தேவரின் கேள்வி அவர்கள் வாட்களை உறைகளில் நுழையச் செய்ததேயொழியக் கொந்தளித்துக் கொண்டிருந்த உள்ளங்களுக்கு எந்த விதச் சாந்தியையும் அளிக்காததால், அவர்கள் கண்கள் அரையன் ராஜராஜனை நோக்கித் திரும்பின.

அரையன் ராஜராஜன் முகத்தில் எந்தவித உணர்ச்சியுமில்லை. அந்தச்

சபையில் எந்தவிதக் குழப்பமும் நடக்காதது போலவே உட்கார்ந்திருந்தான் அவன். பிரும்மமாராயனே அந்த அமைதியைக் கலைத்து, ''தேவரே! அவன் சொன்னதைச் சரியாகக் காதில் வாங்கிக் கொண்டீர்களா?'' என்று மிகக் கடுமையாகக் கேட்டான்.

''என் காதுக்கு இதுவரை ஏதும் பழுதில்லை,'' என்றார் வந்தியத் தேவர்.

''அப்படியானால் அவன் மாற்றுத் திட்டத்தை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா? அவன் திட்டப்படி வேங்கியுடன் போரை நிறுத்திவிட வேண்டியதுதானா?'' என்று மீண்டும் வினவினான் பிரும்மமாராயன்.

பிரும்மமாராயர் ஆத்திரத்தையோ, கொலையை விரும்பித் துடித்த கண்களையோ சிறிதும் லட்சியம் செய்யாத கரிகாலனே அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தொடங்கி, ''பிரும்மமாராயரே! வேங்கியுடன் போரை நான் அடியோடு நிறுத்தச் சொல்லவில்லையே. சிறிது காலத்துக்குத்தானே நிறுத்தச் சொன்னேன்,'' என்றான்.

இந்தச் சமயத்தில் குறுக்கிட்ட வந்தியத் தேவர், ''கரிகாலா! இப்பொழுது ஜெயசிம்மனுடன் நாம் போரை நிறுத்த முடியாது. போர் துவக்க அரசர் ஆணையிட்டு விட்டார். அந்த ஆணையைப் பெற்றுத்தான் நான் இங்கு வந்திருக்கிறேன். சோழ சாம்ராஜ்யத்தின் மாபெரும் விஸ்தரிப்பு வேங்கிப் போரைத் துவங்குவதைப் பொறுத்திருக்கிறது. அதற்கான சகல ஏற்பாடுகளையும் சோழப் பேரரசின் பிரதானப் படைத் தலைவர், பல போர்களில் வெற்றி வாகை சூடிய விக்ரமச் சோழியவரையனான அரையன் ராஜராஜன் செய்து முடித்து விட்டார். இப்போது நாம் போரை எப்படி நிறுத்த முடியும்?'' என்று கேட்டார்.

''தேவரே! போரை நடத்துவதென்று முடிவு செய்து விட்டால், இந்த மந்திராலோசனையே தேவையில்லையே. நேராகப் படைகளைச் செலுத்தப் படைத்



தலைவர்களுக்கு உத்திரவிட வேண்டியது தானே?'' என்றான் கரிகாலன்.

''மந்திராலோசனை சம்பிரதாயம்......'' என்று தொடங்கிய பிரும்மமாராயனை, இடையில் வெட்டிய கரிகாலன், ''கவைக்குதவாத சம்பிரதாயத்தைக் களைந்தெறிவது விவேகமல்லவா?'' என்று கேட்டான்.

''சம்பிரதாயத்தைக் களைந்தெறிவதா?'' என்று வியப்புடன் வினவினான் பிரும்மமாராயன்.

''அனுபவத்திலிருந்து சம்பிரதாயம் ஏற்படுகிறது. அது சந்தர்ப்பத்துக்கு ஏற்று வரவில்லையென்றால் களைந்தெறிவதே மேல். காரியத்துக்கு உதவாத சம்பிரதாயம் அரிசியற்ற பதர் போன்றது; முளை விடாது; பலனும் அளிக்காது,'' என்றான் கரிகாலன்.

''உண்மைதான் கரிகாலா! சம்பிரதாயத்தை அனுஷ்டிப்பதில் பலன் இருக்கிறது. அதனால்தான் மந்திராலோசனை சபையைக் கூட்டினோம். அதில், அரசர் இட்ட உத்தரவை நாம் எப்படி மாற்ற முடியும்?'' என்றார் வந்தியத்தேவர்.

''நாம் மாற்ற முடியாதுதான். அரசரே மாற்றலாமல்லவா? மந்திராலோசனை சபையில் ஏற்படும் முடிவுகளை ஏற்பது தமிழ்நாட்டு மன்னர் மரபின் வழக்கம்தானே?'' என்று கரிகாலன் கேட்டான்.

''வழக்கம்தான் கரிகாலா! ஆனால் இதோ பார். ஐயாயிரம் யானைப் படைகள், பதினாயிரம் குதிரைப் படைகள், இருபதினாயிரம் காலாட் படைகள் போருக்குச் சித்தமாக நிற்கின்றன. நமது கப்பற்படையோ வங்கக் கடலில் உலாவிக் கொண்டிருக்கிறது. படைகளை வேங்கி மீது நடத்தச் சொல்லி அரசர் உத்தரவு கிடைத்து விட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில், வேங்கியுடன் போர் வேண்டாமென்றால் அரசர் சம்மதிப்பாரா?''

''காரணம் காட்டினால் ஏன் சம்மதிக்க மாட்டார்?''

''சொல்கிறேன் கேள். நீங்களும் கேளுங்கள்,'' என்ற கரிகாலனையும் படைத் தலைவர்களையும் நோக்கி உரைத்த வந்தியத் தேவர், இராஜேந்திர சோழ தேவனது பெரும் திட்டத்தை மேலும் விளக்கலானார்: ''வேங்கியை ஒடுக்க இராஜேந்திர சோழ தேவர் இப்பொழுது முற்படும் காரணம் தன் மருமகனான ராஜராஜ நரேந்திரனின் அரியணையைத் திடப்படுத்துவதற்காக அல்ல; தென்னவர் பெருமையை வடநாட்டிலும் நிலைநிறுத்த. இப்பொழுது வேங்கியுடன் துவக்கப்படும் போர் பின்னால், சிறுகச் சிறுக வடக்கேயும் பரவி, பகீரதன் கொண்டு வந்த அந்தக் கங்கா நதிக் கரைக்கும் செல்லும். தமிழர் கொடி இன்னும் சில வருஷங்களில் கங்கைக் கரையில் பறக்கும். அந்தக் கங்கையின் நீரால் இராஜேந்திர சோழ தேவர் மகுடாபிஷேகம் செய்து கொள்வார். அந்த வெற்றியைச் சம்பாதிக்க உறுதி கொண்டுள்ள அரசர், சோழ மண்டலத்திலுள்ள ஓர் ஊருக்கு ஏற்கனவே கங்கைகொண்ட சோழபுரம் என்ற பெயரையும் சூட்டிவிட்டார். அவர் உறுதியை யாரும் குலைக்க முடியாது. திட்டத்தையும் மாற்ற முடியாது. அவர் ஆணையின்படி மாபெரும் நிலப்படை இங்கு அரையன் ராஜராஜன் தலைமையில் நிற்கிறது. பெரும் கடற்படை கிருஷ்ணா நதியின் முகத்துவாரத்திலிருந்து சற்றுத் தள்ளி உலாவுகிறது. கப்பற் படை கடல் வழியாகவும் தரைப்படை கரையோரமாகவும் சென்று இரு கரங்களைப் போல் வங்கத்தின் மென்னியைப் பிடிக்கும். இப்படித் திட்டமிட்டிருக்கிறார் மன்னர்.''



''ஐயயோ! ஐயயோ!''

''ஏன் இப்படி உயிர் போற மாதிரி கத்தறீங்க? சொத்தைப் பல்லுக்குப் பதிலா நல்ல பல்லை பிடுங்கித் தொலைச்சிட்டேனா?''

''நல்ல பல்லைப் பிடுங்கியிருந்தாப் பரவாயில்லையே! நாக்கை அல்லவா பிடுங்கப் பார்த்தீர்கள்!''

—கடலூர் கன்னியப்பன்.

---

வந்தியத் தேவர் பேசுவதை ஏதோ மந்திரத்தைக் கேட்கும் சர்ப்பங்கள்போல் உணர்ச்சி பொங்கக் கேட்டுக் கொண்டிருந்த அந்தப் படைத் தலைவர்களின் முகங்களில் போர் வெறி நிரம்பி நின்றது. ஆனால் அந்தத் திட்டத்தைக் கேட்கக் கேட்கக் கரிகாலன் முகத்தில் மட்டும் பலமான சிந்தனைக் குறி எழுந்து நின்றது. எந்தத் திட்டமும் நிறைவேற வேண்டுமானால் போர்த் தந்திரம் மட்டுமல்ல, ராஜ தந்திரமும் அவசியமென்பதை உணர்ந்த படைத் தலைவர்களின் உணர்ச்சிக் கடலில் மீண்டும் கொந்தளிப்பை உண்டு பண்ணப் பேச முற்பட்டு, ''தேவரே, திட்டம் மகத்தானது. தமிழர்களுக்குப் பெருமையையும் அளிக்கக் கூடியது. ஆனால் மன்னர் பெருமானுடைய மெய்கீர்த்திகளுக்கு இழிவு வராமல் இத்திட்டத்தை நிறைவேற்ற வேண்டும்,'' என்றான்.

''மன்னர் மெய்கீர்த்திக்கு இழுக்கா!'' அதுவரை பேசாத அரையன் ராஜராஜன் பேசினான். அவன் கண்கள் கரிகாலனை ஏறெடுத்து நோக்கின.

''ஆம் தந்தையே! திருமன்னிவளர இருநில மடந்தையும் போர்ச் சயப்பாவையும் சீர்த்தனிச் செல்வியும்... தன் பெருந்தேவியராகி இன்புற...'' என்று இராஜேந்திர சோழ தேவர் மெய்கீர்த்திகளைக் கரிகாலன் உச்சரித்தவுடன் வந்தியத் தேவர் உட்பட எல்லாப் படைத் தலைவர்களும் எழுந்து நின்று, மன்னர் விருதுகளை அவனுடன் சேர்ந்து உச்சரித்துச் சிரம் தாழ்த்தினார்கள். கரிகாலன் மேலும் சொன்னான்: ''தந்தையே, போர்சயப்பாவை, சீர்த்தனிச் செல்வி அதாவது போர்களில் ஜயலக்ஷ்மியும், நாட்டில் தனலக்ஷ்மியும் மன்னர் பிரானை அடைந்திருக்கிறார்களென்றால், அவர் இதுவரை கண்ட வெற்றிகள்தான் அதற்குக் காரணம். ஆனால், அதே போர்ச்சயப்பாவை, நமது அசட்டையால் அரசரை விட்டு அகன்றால் சாம்ராஜ்யத்தின் கதிதான் என்ன? அரசர் மெய்கீர்த்திதான் நிலைக்குமா? நிலைக்காது தந்தையே, நிலைக்காது. கங்கைக் கரையில் கொடி நாட்டும் திட்டத்துக்கு வேங்கி பூர்வாங்கமென்றால், அத்துடன் தற்சமயம் போரிடுவது கூடவே கூடாது.''

இப்படித் திட்டமாகக் கருத்தைச் சொன்ன கரிகாலனை நோக்கி மறுபடியும் கேட்டான் அரையன் ராஜராஜன்: ''ஏன் கூடாது? அதனால் வரக்கூடிய தீங்கு என்ன?'' என்று.

''நிரம்ப இருக்கிறது தந்தையே. நான் போரில் அனுபவமில்லாதவன். ஆனால், நாட்டு வரலாற்றைச் சூடாமணி விஹாரத் தலைவரிடம் நன்றாகப் படித்திருக்கிறேன். கங்கை நதிக்குப் படைகளை அழைத்துச் செல்வது சாமானிய விஷயமல்ல. வடக்கே நம்மை எதிர்க்க இருக்கும் அரசர் யார் யார் என்பதை எண்ணிப் பாருங்கள். வேங்கியிலிருந்து வரிசையாகச் சுவர் கட்டியதுபோல் ஒன்றன்பின் ஒன்றாக ஆறு பெரிய அரகைகள் நிற்கின்றன. அவற்றை ஆளும் மன்னர்கள் போரில் மிக வல்லவர்கள். வேங்கியை அடுத்து மாசுணி தேசத்தில் நாகர் படை இருக்கிறது. அதை அடுத்து ஒட்டர நாட்டு இந்திரதத்தன் இருக்கிறான். அவனையும் தாண்டினால் தண்டபுக்தியைச் சேர்ந்த தர்மபாலன், பிறகு தெற்கு லாட நாட்டு ரணசூரன்.

அடுத்தபடி வங்காள நாட்டின் கோவிந்த சந்திரன், கடைசியாக உத்தர லாட நாட்டின் மாபெரும் மன்னன் மஹிபாலன். இத்தனை மன்னர்களையும் நாம் பொருது வெற்றி காண வேண்டும். இந்த அரசாங்கங்கள் ஒவ்வொன்றைத் தாக்குவதிலும் ஒவ்வொரு கஷ்டமிருக்கிறது. மாசுணி தேசத்தில் இந்திராவதி ஆற்றின் கரையிலிருக்கும் சக்கரக்கோட்டம் சாமானியமான கோட்டையல்லவென்று கேள்வி. இதையெல்லாம் யோசியுங்கள். அத்துடன் படை செல்ல வேண்டிய தூரம், கடக்க வேண்டிய நதிகள், சமாளிக்க வேண்டிய சேனை எல்லாவற்றையும் யோசித்துப் பாருங்கள்!'' என்று கரிகாலன் படையெடுப்பில் உள்ள கஷ்டங்களை விளக்கினான்.

அவன் பேசுவதைக் கேட்கக் கேட்க வந்தியத் தேவர் ஆச்சரியத்தில் அயர்ந்து உட்கார்ந்து விட்டார். அரையன் ராஜராஜன்கூட அவன் சரித்திர அறிவைக் கண்டு பிரமித்துப் போனான். பிரும்மமாராயன் மட்டும் எதற்கும் மசியாமல் வழக்கம்போல் மூர்க்கத்தனமாகக் கேட்டான்: ''அப்படியானால் படையெடுப்பை அடியோடு கைவிட்டுவிட வேண்டியது தானா?'' என்று.

கரிகாலன் பிரும்மமாராயனை நோக்கி நன்றாகத் திரும்பினான். அவன் கூரிய விழிகள் அவரை நிர்ப்பயமாக நோக்கின. சொற்களும் திடமாகவே அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தன: ''படையெடுப்பைக் கைவிட வேண்டிய அவசியமில்லை. சில மாதங்களுக்குத் தான் தாமதிக்கச் சொல்கிறேன். முதலில் நாம் செய்ய வேண்டியது மித்திர பேதம். ஜெயசிம்மனைக் கூட்டாளிகளிடமிருந்து பிரிக்க வேண்டும். அர்த்த சாஸ்திரியான சாணக்கியரே மித்திர பேதத்தை ஒப்புக் கொண்டிருக்கிறார்,'' என்றான் கரிகாலன்.

''மித்திரபேதம் எப்படி முடியும்?'' என்று வந்தியத் தேவர் கேட்டார்.

''ஏன் முடியாது? நமக்கு நேர் எதிரில் இருப்பவர் ஐவர். மாசுணி மன்னன், கலிங்கன், ஒட்டர மன்னன், இந்திரதத்தன், சாளுக்கிய ஜெயசிம்மன். இவர்களில் மற்ற நால்வரையும்



நீதிபதி: சத்தம் போட்டு முதலில் பேசுபவரைக் கோர்ட்டுக்கு வெளியே அனுப்புவேன்.

கைதி: நான்தான் முதலில் சத்தம் போட்டுப் பேசினேன். என்னை வெளியே அனுப்புங்கள்.

—மல்லியம் பி. கல்யாணசுந்தரம்

---

பிணைக்கும் கயிறு ஜெயசிம்மன். அந்தக் கயிற்றை அறுத்து விட்டால், மற்ற நான்கு மணிகளும் சிதறிப்போகும்,'' என்றான் கரிகாலன்.

''ஜெயசிம்மனை அவர்களிடமிருந்து எப்படிப் பிரிக்க முடியும்?'' என்று அரையன் ராஜராஜன் குரல், இடையே புகுந்தது.

''தந்தையே! அனுமதி தந்தால் நான் பிரித்து விடுகிறேன்,'' என்றான் கரிகாலன்.

படைத் தலைவர்கள் வாய் விட்டுப் பெரிதாக நகைத்தார்கள். சிரிப்புடன் சிரிப்பாக, ''நமக்கொரு சாணக்கியன் கிடைத்து விட்டான்!'' என்று பிரும்மமாராயன் ஏளனமாகக் கூறினான்.

கரிகாலன் அவன்மீது அலட்சியமான பார்வையொன்றை வீசிவிட்டு, பிரும்மமாராயனை நோக்கி, ''வேங்கி நாட்டுச் சோழத் தூதரே! சாணக்கியனைப் பார்த்தும் சிலர் இப்படித்தான் நகைத்தார்கள். நந்தர்கள் சத்திரத்தில் அவன் அவமானப்பட்டுச் சினந்தெழுந்து சாம்ராஜ்யத்தையே அழித்து விடுவதாகச் சபதம் செய்தபோது, அதை யார் நம்பியிருக்க முடியும்? ஆனால், நாட்டு வரலாறு கூறும் கதை வேறு அல்லவா?'' என்று சொல்லிவிட்டு, வந்தியத் தேவரைப் பார்த்து, ''தேவரே! நீங்களும் தந்தையாரும் பல போர்களைக் கண்டவர்கள்;







## ஏன் பொதுமக்களால் விரும்பி வாங்கப்படுகிறது?

**69% பரிசுகள்!**

சில லாட்டரிகள் 25% பரிசுகள் கூட டிக்கட் வாங்குபவர்களுக்கு வழங்குவதில்லை. ஆனால் **மிஜோ** உடனடி பரிசுச்-சீட்டிலும், **கப்பல் படை** உடனடி பரிசுச்சீட்டிலும் 69% பரிசுகள் டிக்கட் வாங்குபவர்-களுக்கு வழங்கப்படுகிறது!

**டிக்கட் வாங்கி முழுப்பயன் பெற இன்றே வாங்கிடுவீர்!**

**ஒவ்வொரு வாரமும் 9,36,318 பரிசுகள்!**

3 வரிசைகள் வெளியிடும் சில லாட்டரிகள் 60,000 பரிசுகள் கூட வழங்கப்படுவதில்லை. ஆனால் **கப்பல் படை** உடனடி பரிசுச்-சீட்டில் 9,36,318 பரிசுகளும், **மிஜோ** உடனடி பரிசுச்-சீட்டில் 9,36,318 பரிசுகளும் ஒவ்வொரு வாரமும் டிக்கட் வாங்குபவர்களை வந்தடைகிறது

# மிஜோ
# கப்பல் படை

-வீஜி, நாகை-

ராஜதந்திரத்தில் இணையற்றவர்கள். நான் சொல்வதில் தவறிருக்கிறதா பாருங்கள். அதிகப் படைச் சேதமின்றி, கங்கையில் தமிழ்க் கொடி நாட்டவே நான் வழி சொல்கிறேன். அரசர் உத்தரவைப் பற்றியும் கவலைப் பட வேண்டிய அவசியமில்லை. அரசர் பிரதிநிதியும், அத்தை புருஷருமான தாங்கள் நிலைமையை எடுத்துச் சொன்னால் அரசர் கண்டிப்பாகச் சம்மதிப்பார்,'' என்று தன் கட்சியை வலியுறுத்தியும் பேசினான்.

வந்தியத் தேவரை. நோக்கிப் படைத் தலைவர்கள் கண்கள் திரும்பின. ஆனால், வந்தியத் தேவர் அன்று முடிவு கூறவில்லை. அவர் முகத்தில் தீவிரமான யோசனை படர்ந்து நின்றது. அரையன் ராஜராஜனுடன் கலந்து கொண்டு, இரண்டு நாட்களில் முடிவு கூறுவதாகச் சொல்லி மந்திராலோசனை சபையைக் கலைத்தார். அன்றிரவை அரையன் ராஜராஜன் மட்டுமின்றி, வந்தியத் தேவரும் இதரப் படைத் தலைவர்களும் நிம்மதியின்றியே கழித்தார்கள்.

படைகளின் முன்னிலையில் அமைக்கப்பட்டிருந்த கூடாரத்திலிருந்த கரிகாலன் மனமும் நிம்மதியிழந்து கிடந்தது. அவன் ஏதோ தனக்குத்தானே பேசிக் கொள்வதையும், கூடாரத்துக்கு வெளியே வேங்கி நாட்டை நோக்கிக் கைகாட்டி எதையோ நினைத்துத் தலையசைப்பதையும், அதே கூடாரத்திலிருந்து மற்றொரு படைத் தலைவனும் கண்டு, 'ஒருவேளை இவனுக்குப் புத்தி பிசகியிருக்குமோ?' என்று நினைத்தான். அந்த நினைப்பை உறுதி செய்யும் வகையில் கரிகாலன் அவனை வெளியே அழைத்துத் தூரக் கிழக்கில் கையைக் காட்டி ஒரு கேள்வியையும் கேட்டான். அந்தக் கேள்வி காதில் விழுந்ததுதான் தாமதம், கூட இருந்த படைத்தலைவன், 'சரி, இவனுக்குப் பைத்தியம்தான் பிடித்துவிட்டது,' என்று தன் முதல் அபிப்பிராயத்தை ஊர்ஜிதம் செய்து கொண்டான்.

(தொடரும்)







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை : 84'ம் பக்கம்

# மன்னன் மகள்

380

15-10-87

## 37. இதயத்தில் பாய்ந்த கூர்வேல்



சோழப் படைகளின் முன்னணிக் கூடாரத்தின் முகப்பிலே நின்று, வடகிழக்கில் நெடுந்தூரம் கண்களைச் செலுத்திய கரிகாலன், பலபலச் சிந்தனைகள் உள்ளத்தே அலை மோதியதால தலையை லேசாக அசைத்துக் கையையும் அத்திக்கில் நீட்டி ஏதேதோ கணக்குகளைப் போட்டான். அவன் வாயும் வெகுநேரம் வரை என்னென்னவோ முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அவன் நின்றிருந்த கூடாரத்துக்குப் பின்புறத்திலும், ஏன் முன்புறத்திலும்கூட, கண்ணுக்கெட்டிய வரையில் ஏராளமான கூடாரங்கள் காட்சியளித்தன. வெளேரென்று காய்ந்துகொண்டிருந்த பால் நிலவும் அந்தக் கூடாரங்களின் துணிகளிலிருந்த புழுதியையும் அழுக்கையும் மறைத்து அவற்றுக்கு இயற்கையாயில்லாத வெண்மையையும் சோபையையும் அளித்திருந்தது. அந்தத் தருணத்தில் சந்திரன் மேற்குப் புறமாகச் சற்றுச் சாய்ந்திருந்ததால் கூடாரங்கள் தங்கள் உச்சிகளைக் கூச்சமாகப் பல கோபுரங்களைப்போல் தரையில் நிழலாகப் பாய்ச்சியிருந்தன. எந்தப் போர்வீரனுக்கும் கண்ணுக்கு விருந்தை அளிக்கும் தன்மை வாய்ந்த அந்தக் காட்சி அன்றிரவு கரிகாலன் கண்களை மட்டும் சிறிதும் கவரவேயில்லை. அக்கம்பக்கத்தில் காவல் புரிந்து எச்சரிக்கைக் கோஷங்களைச் செய்து

சாண்டில்யன்

நடமாடிக் கொண்டிருந்த வீரர்களின் சப்தங்கள்கூட அவன் காதுகளில் விழவில்லை. கூடாரங்கள் நிரம்பிக் கிடந்த இடத்தில் வேங்கியின் மாநகர், சாளுக்கியர் கோட்டையுடன் கரிகாலன் கண் முன்னே எழுந்தது. கரிகாலன் எச்சரிக்கைக் கோஷத்துக்குப் பதில் மன்னன் மகளின் இசையினுமினிய குரல் அவன் காதுகளில் ஒலித்தது. மனத்துக்குத் தகுந்தபடி இந்திரியங்கள் அசைவதற்கு அன்று கரிகாலன் ஓர் உதாரணமாக விளங்கினான். அப்படியென்றால், கூடாரங்கள் வேங்கித் தலைநகராகுமா? காவலரின் முரட்டுக் கூச்சலைத்தான் மதுரசம் சொட்டும் மன்னன் மகளின் கிள்ளை மொழிகள் அடக்க முடியுமா?

விதி அவன் கருத்திலே அன்றிரவு இந்த விசித்திரத்தை விளைவித்துக்கொண்டு நின்றது. வேங்கி மீது மட்டும் அரையன் ராஜராஜன் உடனடியாகப் படையெடுத்தால் ஏற்படக்கூடிய விபரீதங்களை எண்ணிப் பார்க்கப் பார்க்க அவன் மனத்திலே விவரிக்க இயலாத திகில் எழுந்து நின்றது. சோழப் படைகள் வேங்கியை விட்டு அசைகின்றன என்று தெரிந்தாலே, ராஜராஜ நரேந்திரனையும் நிரஞ்சனா தேவியையும் ஜெயசிம்ம சாளுக்கியன் சிறையிலடைக்கத் தயங்கமாட்டான் என்பதைத் திண்ணமாக அறிந்திருந்தான் கரிகாலன். 'இப்போது ராஜராஜ நரேந்திரனையும் அரசகுமாரியையும் அணுகவிடாமல் ஜெயசிம்மனைத் தடுத்து நிற்கும் சக்திகள் இரண்டு. முதலாவது மக்கள் அபிப்பிராயம். அதன் விளைவாகச் சரித்திரத்தில் ஏற்படக் கூடிய அபகீர்த்தி. இரண்டாவது, காரணமின்றி ராஜராஜ நரேந்திரனைச் சிம்மாசனத்தை விட்டு அகற்றினால் மக்கள் கொதித்து எழுவார்கள். மக்களுக்கு ராஜராஜ நரேந்திரனிடத்தில் நல்ல அபிப்பிராயம் அதிகமாக இல்லையென்றாலும், அவன் தந்தையான விமலாதித்தனிடம் உள்ள ஆழ்ந்த ராஜபக்தி ஜெயசிம்மனைக் கண்டிப்பாக எதிர்த்து நிற்கும். இரண்டாவதாகக் காரணமின்றி ராஜராஜ நரேந்திரனை அரியணையிலிருந்து அகற்றினால், 'வலிமையற்ற ஒரு சிறுவனைக் காப்பாற்றுவதாக வேஷம் போட்டு வேங்கித் தலைநகரில் தன் கால்களை ஊன்றிக் கொண்டு ஜெயசிம்மன் மோசடியால் அவனை வென்றான்' என்று தமிழ்க் கவிகள் பா இசைப்பார்கள். இந்த இரண்டுக்கும் பயந்தான் ஜெயசிம்ம சாளுக்கியன். இந்தப் பயத்தினாலேயே, ராஜராஜ நரேந்திரனுக்கு எந்தவிதப் போர்ப் பயிற்சியும் அளிக்காமல், அவனைச் சுத்த பேடியாக்கி அரசாள உபயோகமற்றவன் என்பதை மக்களுக்கு அறிவுறுத்திப் பிறகு விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை வேங்கி நாட்டு அரச பீடத்தில் அமர்த்தத் திட்டமிட்டிருக்கிறான். அதனால்தான் வேங்கி நாட்டில் ராஜ ராஜ நரேந்திரனும் நிரஞ்சனாதேவியும் அபாயம் ஏதுமின்றி உயிருடன் இருந்து வருகிறார்கள். ஆனால் அவர்கள் நலனை அரையன் ராஜராஜன் படையெடுப்பு நொடிப் பொழுதில் நொறுக்கியெறிந்துவிடும். பிறகு விமலாதித்தன் மகளுக்கும் சிறையா? கோதண்டமா?' என்று நினைத்துக் கொண்டே போன கரிகாலனுக்குக் கோதண்டத்தை நினைத்ததும் ஒரு முறை உடல் தலைமுதல் கால்வரை சிலிர்த்தது. 'அந்த அழகியின் உருவம் கோதண்டத்தில் மாட்டப்பட்டால்? சே! சே! சே! அத்தனைக் குரூரமானவனாக ஜெயசிம்மன்கூட இருக்க முடியாது' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் கரிகாலன்.



மன்னன் மகளிடம் இதயத்தைப் பறிகொடுத்து விட்டதாலும், படையெடுப்பினால் அவளுக்கு ஏற்பட்க்கூடிய ஆபத்தை நினைத்துப் பார்த்ததாலும், கரிகாலன் வேங்கி நாட்டுப் படையெடுப்புக்கு ஒப்புக் கொள்ளவில்லையென்றாலும் அவன் மனம் மட்டும் அந்த உண்மையை ஒப்புக்கொள்ள மறுத்தது. 'தந்தையாரின் திட்டத்தை எதிர்க்கச் சொல்லி என்னைத் தூண்டியது நிரஞ்சனாதேவியின் எழில் முகமல்ல; படையெடுப்பிலுள்ள மாபெரும் குறைதான்' என்று சற்று இரைந்தே சொல்லித் தன்னைத்தானே ஏமாற்றிக் கொண்டான் கரிகாலன். அத்துடன் வேங்கியை நோக்கி வடகிழக்கிலே கையை நீட்டி, ''முத்து! அங்கு பெரும் போர் நடக்கிறது. ஆம் முத்து! ஒரு மாபெரும் மன்னனுக்கும் மான் விழியாளுக்கும் நடக்கிறது போர்,'' என்று சொல்லிய கரிகாலன், கூடாரத்தினுள்ளே கட்டிலில் புரண்டு கொண்டிருந்த உப படைத்தலைவனான முத்துத் தேவனையும் தன் அருகில் வரும்படி அழைத்தான்.

கரிகாலன் தனக்குத்தானே பேசிக்கொள்வதையும் கைகளை ஆட்டுவதையும் வெகுநேரமாகப் பார்த்துக் கொண்டிருந்த முத்துத் தேவன் சந்தேகம் நிரம்பிய கண்களுடன் எழுந்து வந்து சிறிது நேரம் உற்று நோக்கினான்.

''சந்தேகமேயில்லை முத்து. அங்கு பெரும் படைகளையுடைய ஓர் அரசனுக்கும் விழிகளாகிய கூர் வேல்களைத் தவிர வேறு ஆயுதங்களற்ற ஓர் அபலைக்கும் பெரும்போர் நடக்கத்தான் செய்கிறது. அந்தப் போரில் நானும் ஓரளவு பங்கு கொண்டேன்,'' என்ற கரிகாலன் வடகிழக்கே மீண்டும் கையை நீட்டினான்.

கரிகாலனைவிட ஓரிரண்டு பிராயங்களே அதிகமுடைய வாலிபனான முத்துத்தேவன், கரிகாலன் போக்கைப் புரிந்துகொள்ள இயலாததால், அதிக்மாக எதுவும் பேசாமல், ''ஒகோ! அப்படியா!'' என்று சம்பிரதாயமாக ஒரு பதிலைச் சொல்லி வைத்தான்.

அவன் பதிலிலிருந்த தயக்கத்தையும், சொல்லில் தொனித்த சந்தேகத்தையும், சாதாரண நிலையிலிருந்தால் கரிகாலன் கண்டிப்பாய்க் கவனித்திருப்பானானாலும், அப்பொழுதிருந்த புத்தி நிலை காரணமாக அவன் எதையும் கவனிக்காமல், ''ஆம் முத்து! அங்கு ஒரு வல்லரசின் ஆதிக்க வெறியை ஒரு பெண்தான் தடுத்து நிறுத்தியிருக்கிறாள். இப்பொழுது அரையன்





–வி. வைத்தியநாதன்

---

சமீபத்தில் ஒருநாள் வேளாங்கன்னி போயிருந்தேன். அங்கு பலரும், தங்கள் வேண்டுதலின்படி பலன் கிடைத்ததால், காணிக்கையாகச் செலுத்தியவைகளை, பொதுமக்களின் பார்வைக்குக் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்கள். தங்க நிறத்தில் ஒரு மாதா உருவம் பொறித்து அதில், 'கடலோரக் கவிதை–ரேகா' என்று எழுதியுள்ளதை நேரில் பார்த்தவர்:

பி.எஸ். குமார்

## காணிக்கை

ராஜராஜன் படையெடுப்பைத் தடுத்து நிறுத்தியிருப்பதும் அவள்தான்,'' என்று மீண்டும் வலியுறுத்தினான்.

கரிகாலனுக்குப் புத்தி சபலிக்கிறது என்று முத்துத்தேவன் முதலில் சந்தேகித்திருந்ததால், அந்தச் சந்தேகத்தைக் கரிகாலனுடைய இந்தச் சொற்கள் ஊர்ஜிதம் செய்தன. ஆகவே முத்துத்தேவன் சற்றுச் சாமர்த்தியமாக, ''கரிகாலா! இரவு முழுவதும் படையெடுப்பைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தால் எப்பொழுது உறங்குவது? வேங்கி எக்கேடு கெட்டால் நமக்கென்ன? வா படுக்கலாம்,'' என்று கரிகாலன் கையைப் பிடித்துக் கூடாரத்துக்குள் இழுத்தான்.

முத்துத் தேவனைத் திரும்பிப் பார்த்த கரிகாலன் கண்களில், ஆச்சரிய ரேகை நன்றாகப் படர்ந்திருந்தது. ''வேங்கி எக்கேடு கெட்டால் நமக்கென்னவா? உனக்கென்ன என்று வேண்டுமானாலும் சொல். வேங்கி அரசுடன் என் வாழ்க்கை சம்பந்தப் பட்டிருக்கிறது முத்து,'' என்றான் கரிகாலன்.

''ஏன், வேங்கி அரசை உனக்குக் கொடுக்கப் போகிறார்களா?''

''எனக்குக் கொடுக்க வேண்டாம். ஆனால், எனக்கு வேண்டியவர்களுக்கு நான் கொடுப்பேன்.''

இந்தப் பதில் முத்துத் தேவனின் சந்தேகத்தை இன்னும் அதிகப்படுத்தவே, அவன் முகத்தில் கவலைக் குறிகளும் அதிகமாகத் தோன்றத் தொடங்கின. முத்துத் தேவன் சொன்னான். ''கரிகாலா! போதும் இந்த வேங்கி நாட்டுப் பித்து. வா, படு. காலையில் எல்லாம் சரியாகப் போய்விடும்,'' என்று

''பித்து எனக்கில்லை முத்து, உனக்குத்தான். வேங்கி நாட்டு உள் விவகாரங்களை என்னைவிட நன்றாக அறிந்தவன் இந்தச் சோழர் படையில் யாருமே கிடை யாது. அங்கு தூதராயிருக்கும் பிரும்ம மாராயருக்குக் கூட முழு உண்மைகள் தெரியாது,'' என்றான் கரிகாலன்.

''அப்படியானால் பிரும்ம மாராயருக்குப் பதில் நீ தூதுவனாகச் செல்வதுதானே?'' என்றான் முத்துத் தேவன் கேலியாக.

''செல்வதாகத்தான் உத்தேசம். இப்படி உட்கார் முத்து,'' என்று முத்துத் தேவனை இழுத்துக் கூடார முகப்பில் தரையிலே உட்கார்த்தித் தானும் உட்கார்ந்த கரிகாலன், ''இதோ பார் முத்து! நான் சித்த பிரமையடைந்து விட்டதாக நீ நினைக்கிறாய். இல்லை; என் புத்தி பூரண சுவாதீனத்திலேயே இருக்கிறது. ஆனால், அதில் வேங்கி நாட்டு விவகாரம் பூராவும் சுழல்வதால் நீ கூட அறியாத பல விஷயங்களைப் பேசுகிறேன். ஆனால் நான் சொல்வதை நன்றாகக் கோத்துத் தொடர்ச்சியாக யோசித்துப் பார். விதி வசத்தால் நான் வேங்கி நாட்டில் நுழைந்தேன். அங்கு மன்னன் மகளைச் சந்தித்தேன். ஜெயசிம்மன் சூழ்ச்சியை அங்கிருந்து சில நாட்களில் உடைத்தேன். மன்னன் மகளையும் ராஜராஜ நரேந்திரனையும் நீதி ஸ்தலத்தில் நிறுத்தி, சதிக் குற்றம் சாட்டி அவர்களை ஒழித்துவிட அவன் ஏற்பாடு செய்திருந்த ஒரே சாட்சி அரிஞ்சயன். அவனை இங்கு இழுத்து வந்து காஞ்சிச் சிறைக்கு அனுப்பிவிட் டேன். அந்தக் கதை உனக்குத் தெரியுமல்லவா?''




பம்பாயிலிருந்து வந்திருக்கிற புது மருமகளுக்கு மரியாதையே தெரியலே! என்னைப் போய் என்னடா, நல்லாயிருக்கியான்னு டா போட்டுப் பேசுது!

''தெரியும், கேள்விப்பட்டேன்.''

''இந்தச் சம்பவத்தால் ஜெயசிம்மன் பல நாட்களாக ஏற்பாடு செய்துவந்த திட்டம் தகர்ந்து விட்டது. ராஜராஜ நரேந்திரனை ஒழிக்க அவனுக்குக் காரணம் வேண்டும். சோழப்படை வேங்கி நாட்டை நோக்கி நகர்ந்தால் போதும். உடனே அந்தக் காரணத்தை நாம் ஜெயசிம்மனுக்கு அளித்தவர்களாவோம்!''

மெள்ள மெள்ள உண்மை முத்துத் தேவனுக்கும் விளங்கலாயிற்று. 'விதிவசத்தால் வேங்கி நாட்டு மன்னன் மகளைக் கரிகாலன் சந்தித்து மையல் கொண்டிருக்கிறான். ஆகையால் தன் சாஸ்திர அறிவை ஆயுதமாகக் கொண்டு வேங்கிப் படையெடுப்பை நிறுத்த ஏற்பாடு செய்திருக்கிறான்!' என்று மனத்திற்குள் நினைத்ததன்றி, அவன் கரிகாலனை நோக்கிப் பகிரங்கமாகவும் கேட்டான். ''கரிகாலா! சொந்த உணர்ச்சிகளைப் பொதுக் காரியத்தில், அதுவும் நமது நாட்டுக்குப் பெருமையளிக்கக்கூடிய விஷயத்தில் புகுத்தலாமா?'' என்று

''அதையும் யோசித்தேன், முத்து. சொந்த உணர்ச்சிகளுக்கும் பொதுநலத்துக்கும் விரோதமிருந்தால், சொந்த உணர்ச்சிகளைத் தியாகம் செய்ய வேண்டியது வீரன் பொறுப்பு. ஆனால், இதில் விரோதமில்லை. இரண்டும் ஒரே திசையில் ஓடுகின்றன,'' என்றான்.

''எப்படி?'' என்று முத்துத் தேவன் கேட்டான்.

கரிகாலன் மண்ணில் சில கோடுகளை இழுத்தான். பிறகு, ''இதைக் கவனி முத்து! வேங்கிக்குச் சற்று உயரே வட மேற்கில் மாசுணி தேசம்; அடுத்து இந்த ஒட்டரநாடு; அதோ தண்ட புக்தி; இந்த இடத்தில் தெற்கு லாடம், சற்றுத் தள்ளி உத்தர லாடம்! கடைசியாக வங்காளம். அங்கேயிருக்கிறது இராஜேந்திர சோழதேவன் கொடி நாட்ட விரும்பும் கங்கா நதிக்கரை. வேங்கி இங்கே குறுக்கே நின்றால் அதன் பின்னாலுள்ள மூன்று நாடுகள் வேங்கியைத் தாங்கி நிற்கும். எவ்வளவு படைகளிருந்தாலும் இந்த நாடுகளின் பிணைப்பை உடைக்க முடியுமா?'' என்று கேட்டான்.

உதவிப் படைத் தலைவனான முத்து, கரிகாலன் இழுத்த கோடுகளை மிக உன்னிப்பாகக் கவனித்தான். கரிகாலன் சொன்னதிலிருந்து உண்மையும் அவன் மனத்தில் தெளிவாக விளங்கவே, ''இதை ஏன் பிரதான படைத்தலைவர் கவனிக்கவில்லை?'' என்று விசாரித்தான்.

''வேங்கியின் உள் வயணம் அவருக்குத் தெரியாது. எனக்கும் ஏதோ அகஸ்மாத்தாகத்தானே தெரிந்தது,'' என்றான் கரிகாலன்.

''அப்படியானால் என்ன செய்ய உத்தேசிக்கிறாய்?''

''வேங்கிமீது படையெடுப்பை நிறுத்த என்னாலான வரை முயலுவேன். படையெடுப்பு நின்றதும்,

---




முன்பெல்லாம் திருமணங்களைப் போட்டோ எடுத்து ஆல்பம் ஒட்டினார்கள். இப்போது வீடியோ எடுக்கிறார்கள்.

ஆனால் திருமண மேடையில் மணமகன்–மணமகள் முன் வீடியோ படம் எடுப்பவர், ஸ்விட்ச் போர்டு வைத்திருப்பவர், உதவியாளர், தவிர இரண்டு மூன்று போட்டோ எடுக்கும் நபர்கள் (பெண் வீட்டார், பிள்ளை வீட்டார், நண்பர் என) தம்பதியை மறைத்துக் கொண்டு விடுகிறார்கள். திருமணத்திற்கு வருபவர்கள் நேரில் தம்பதிகளைக் காண முடிவதில்லை.

ஆசீர்வதிக்கக் கொடுக்கப்படும் அட்சதையைப் போட்டால், அது வீடியோ படம் எடுப்பவர்கள், போட்டோ எடுப்பவர்கள் மீதுதான் விழுகிறது.

தம்பதிகளை மறைக்காமல் வீடியோ காமெராவில் அட்ஜெஸ்ட் செய்து படம் எடுத்தால் நன்றாக இருக்குமே!

–பி. ஆர். பார்த்தசாரதி

பிரும்ம மாராயருக்குப் பதில் நானே வேங்கிக்குத் தூதனாகச் சென்று ஜெயசிம்மனிடம் நட்பு கொள்வேன்.''

''ஜெயசிம்மனிடம் நட்பா!''

''ஆம்! கங்கையில் நாம் கொடி நாட்டித் திரும்பும் வரை.''

''பிறகு!''

''நட்பை உடைப்பது.''

''இது நம்பிக்கைத் துரோகமல்லவா?''

''சாதாரண வாழ்க்கையில் அத்தப் பெயர்தான் அதற்கு. ஆனால், ராஜ்ய வாழ்வில் இதற்கு ராஜதந்திரம் என்று பெயர்.''

முத்து ஆச்சரியத்தால் வாயைப் பிளந்து, ''கரிகாலா! இத்தனைச் சிறிய வயதில் இவ்வளவு விஷயங்களை நீ எப்படிக் கற்றுக் கொண்டாய்?'' என வினவினான்.

''சூடாமணி விஹாரத் தலைவர் சொல்லிக் கொடுத்தார்,'' என்றான் கரிகாலன்.

''என்ன, புத்த பிக்ஷுவா?''

''ஆம்.''

''துறவிக்கு அரசியலைப் பற்றி என்ன தெரியும்?''

''நம்மைவிட?'' நன்றாகத் தெரியும்.''

''துறவிகளுக்கு இதில் அத்தனை அக்கறையா?''

''ஆம் முத்து! அவர்களுக்கு இந்தச் சில் விஷமங்களில் இருக்கிற அக்கறை எந்த ராஜதந்திரிக்கும் கிடையாது,'' என்று சொல்லிய கரிகாலன் நகைத்தான். முத்துவும் அவனுடன் சேர்ந்து கொண்டு பெரிதாக நகைத்தான்.

அந்த இரவில் கரிகாலனிடமிருந்து முத்து அறிந்த விஷயங்கள், அவனைக் கரிகாலனிடம் பரிபூரண அடிமையாக அடித்துவிட்டன. அடுத்த இரண்டு நாட்களில் தான் சந்தித்த் படைத் தலைவர்களிடமெல்லாம் கரிகாலனின் ராஜதந்திர அறிவைப்பற்றி வானளாவப் புகழ்ந்து வந்தான் முத்துத் தேவன். அந்த இரண்டு நாட்களும் கரிகாலனைப்பற்றி மிகக் கெடுதலான அபிப்பிராயங்களை உலாவவிட முயன்று வந்தான் பிரும்ம மாராயன். சமயம் அகப்பட்ட போதெல்லாம் கரிகாலன் வர்த்தையை நம்பிப் படையெடுப்பை நிறுத்துவது அபாயம் என்று மற்றப் படைத் தலைவர்களிடம் வலியுறுத்தி வந்தான். மெள்ள மெள்ளப் படைத் தலைவர்களும் அந்தப் பெரும் படைத் தலைவர் வார்த்தைகளுக்கு மசியவே, மூன்றாம் நாள் எல்லாப் படைத் தலைவர்களையும் கூட்டிக் கொண்டு, பிரும்ம மாராயன் அரையன் ராஜ ராஜனிடம் சென்று தங்கள் ஆட்சேபணையைத் தெரிவிக்கச் சென்றான். அவன் சென்ற சமயத்தில், கரிகாலனிடம் வந்தியத்தேவர் ஓர் ஓலையைக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

அதைக் கவனித்தும், கவனிக்காதது போல் பாசாங்கு செய்த பிரும்ம மாராயன், ''தேவரே! வேங்கி நாட்டிலுள்ள சோழ தூதன் என்ற முறையில் நான் பேச வந்திருக்கிறேன்,'' என்று தொடங்கினான்.

வந்தியத்தேவர் . அவரை நோக்கிப் புன்முறுவல் செய்தார். அத்துடன் அரையன் ராஜராஜனையும் நோக்கினார். அரையன் ராஜராஜன் இதழ்களிலும் புன்முறுவல் அரும்பிற்று. இரண்டு பேரும் தன்னைப் பார்த்துச் சிரிப்பதன் அர்த்தத்தை உணராத பிரும்ம மாராயனுடைய பிரும்மாண்ட மான உடல் கோபத்தால் ஒரு முறை குலுங்கியது. முகத்தில் உஷ்ணம் பலமாக ஏற, குரலிலும் அந்தக் கடுமை பூரணமாக ஒலிக்கக் கேட்டான் பிரும்ம மாராயன், ''எதற்காக இருவரும் சிரிக்கிறீர்கள்?'' என்று.

வந்தியத் தேவர் எவ்விதப் பதட்டத்தையும் காட்டாமல் அடக்கமாகத்தான் பதில் சொன்னார். ஆனால் பதிலா அது? இல்லை, இல்லை; பிரும்ம மாராயன் இதயத்தின் மீது பாய்ச்சப்பட்ட கூர்வேல்.

(தொடரும்)



''ஆபீஸ் விஷயமா நாளைக்குப் பஞ்சாப் போறேன்.''

''போயிட்டு வரேன்னு சொல்லுங்கோ.''

–வி. சித்ரா

''தெரியும், கேள்விப்பட் டேன்.''

''இந்தச் சம்பவத்தால் ஜெயசிம்மன் பல நாட்களாக ஏற்பாடு செய்துவந்த திட்டம் தகர்ந்து விட்டது. ராஜராஜ நரேந்திரனை ஒழிக்க அவனுக்குக் காரணம் வேண்டும். சோழப்படை வேங்கி நாட்டை நோக்கி நகர்ந்தால் போதும். உடனே அந்தக் காரணத்தை நாம் ஜெயசிம்மனுக்கு அளித்தவர்களாவோம்!''

மெள்ள மெள்ள உண்மை முத்துத் தேவனுக்கும் விளங்கலாயிற்று. 'விதிவசத்தால் வேங்கி நாட்டு மன்னன் மகளைக் கரிகாலன் சந்தித்து மையல் கொண்டிருக்கிறான். ஆகையால் தன் சாஸ்திர அறிவை ஆயுதமாகக் கொண்டு வேங்கிப் படையெடுப்பை நிறுத்த ஏற்பாடு செய்திருக்கிறான்!' என்று மனத்திற்குள் நினைத்ததன்றி, அவன் கரிகாலனை நோக்கிப் பகிரங்கமாகவும் கேட்டான். ''கரிகாலா! சொந்த உணர்ச்சிகளைப் பொதுக் காரியத்தில், அதுவும் நமது நாட்டுக்குப் பெருமை யளிக்கக்கூடிய விஷயத்தில் புகுத்த லாமா?'' என்று

''அதையும் யோசித்தேன், முத்து. சொந்த உணர்ச்சிகளுக்கும் பொதுநலத்துக்கும் விரோதமிருந்தால், சொந்த உணர்ச்சிகளைத் தியாகம் செய்ய வேண்டியது வீரன் பொறுப்பு. ஆனால், இதில் விரோதமில்லை. இரண்டும் ஒரே திசையில் ஓடுகின்றன,'' என்றான்.

''எப்படி?'' என்று முத்துத் தேவன் கேட்டான்.

கரிகாலன் மண்ணில் சில கோடுகளை இழுத்தான். பிறகு, ''இதைக் கவனி முத்து! வேங்கிக்குச் சற்று உயரே வட மேற்கில் மாசுணி தேசம்; அடுத்து இந்த ஒட்டரநாடு; அதோ தண்ட புக்தி; இந்த இடத்தில் தெற்கு லாடம், சற்றுத் தள்ளி உத்தர லாடம்! கடைசியாக வங்காளம். அங்கே யிருக்கிறது இராஜேந்திர சோழதேவன் கொடி நாட்ட விரும்பும் கங்கா நதிக்கரை. வேங்கி இங்கே குறுக்கே நின்றால் அதன் பின்னாலுள்ள மூன்று நாடுகள் வேங்கியைத் தாங்கி நிற்கும். எவ்வளவு படைகளிருந்தாலும் இந்த நாடுகளின் பிணைப்பை உடைக்க முடியுமா?'' என்று கேட்டான்.

உதவிப் படைத் தலைவனான முத்து, கரிகாலன் இழுத்த கோடுகளை மிக உன்னிப்பாகக் கவனித்தான். கரிகாலன் சொன்னதிலிருந்து உண்மையும் அவன் மனத்தில் தெளிவாக விளங்கவே, ''இதை ஏன் பிரதான படைத்தலைவர் கவனிக்கவில்லை?'' என்று விசாரித்தான்.

''வேங்கியின் உள் வயணம் அவருக்குத் தெரியாது. எனக்கும் ஏதோ அகஸ்மாத்தாகத்தானே தெரிந்தது,'' என்றான் கரிகாலன்.

''அப்படியானால் என்ன செய்ய உத்தேசிக்கிறாய்?''

''வேங்கிமீது படையெடுப்பை நிறுத்த என்னாலான வரை முயலுவேன். படையெடுப்பு நின்றதும்,

---




முன்பெல்லாம் திருமணங்களைப் போட்டோ எடுத்து ஆல்பம் ஒட்டினார்கள். இப்போது வீடியோ எடுக்கிறார்கள்.

ஆனால் திருமண மேடையில் மணமகன்—மணமகள் முன் வீடியோ படம் எடுப்பவர், ஸ்விட்ச் போர்டு வைத்திருப்பவர், உதவியாளர், தவிர இரண்டு மூன்று போட்டோ எடுக்கும் நபர்கள் (பெண் வீட்டார், பிள்ளை வீட்டார், நண்பர் என) தம்பதியை மறைத்துக் கொண்டு விடுகிறார்கள். திருமணத்திற்கு வருபவர்கள் நேரில் தம்பதிகளைக் காண முடிவதில்லை.

ஆசீர்வதிக்கக் கொடுக்கப்படும் அட்சதையைப் போட்டால், அது வீடியோ படம் எடுப்பவர்கள், போட்டோ எடுப்பவர்கள் மீதுதான் விழுகிறது.

தம்பதிகளை மறைக்காமல் வீடியோ காமெராவில் அட்ஜெஸ்ட் செய்து படம் எடுத்தால் நன்றாக இருக்குமே!

—பி. ஆர். பார்த்தசாரதி

# தீபாவளி வாழ்த்துக்கள்

- தேவேந்திர சேலைகள்
- கோயமுத்தூர் கோரா சேலைகள்
- பரமகுடி புட்டா சேலைகள்
- கோடம்பாக்கம் சேலைகள்
- உறையூர் சேலைகள் ● செட்டிநாடு சேலைகள்
- ஓர நாட்டுச் சேலைகள்
- மற்றும் பலவிதமான பட்டு மற்றும் பருத்திச் சேலைகள்



கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி

**20-40%**

பண்டிகைக்கால
திறப்புத் தள்ளுபடி

DIPR/MS/87 : EFFICIENT

பிரும்ம மாராயருக்குப் பதில் நானே வேங்கிக்குத் தூதனாகச் சென்று ஜெயசிம்மனிடம் நட்பு கொள்வேன்.''

''ஜெயசிம்மனிடம் நட்பா!''

''ஆம்! கங்கையில் நாம் கொடி நாட்டித் திரும்பும் வரை.''

''பிறகு!''

''நட்பை உடைப்பது.''

''இது நம்பிக்கைத் துரோகமல்லவா?''

''சாதாரண வாழ்க்கையில் அந்தப் பெயர்தான் அதற்கு. ஆனால், ராஜ்ய வாழ்வில் இதற்கு ராஜதந்திரம் என்று பெயர்.''

முத்து ஆச்சரியத்தால் வாயைப் பிளந்து, ''கரிகாலா! இத்தனைச் சிறிய வயதில் இவ்வளவு விஷயங்களை நீ எப்படிக் கற்றுக் கொண்டாய்?'' என வினவினான்.

''சூடாமணி விஹாரத் தலைவர் சொல்லிக் கொடுத்தார்,'' என்றான் கரிகாலன்.

''என்ன, புத்த பிக்ஷுவா?''

''ஆம்.''

''துறவிக்கு அரசியலைப் பற்றி என்ன தெரியும்?''

''நம்மைவிட?'' நன்றாகத் தெரியும்.''

''துறவிகளுக்கு இதில் அத்தனை அக்கறையா?''

''ஆம் முத்து! அவர்களுக்கு இந்தச் சில் விஷமங்களில் இருக்கிற அக்கறை எந்த ராஜதந்திரிக்கும் கிடையாது,'' என்று சொல்லிய கரிகாலன் நகைத்தான். முத்துவும் அவனுடன் சேர்ந்து கொண்டு பெரிதாக நகைத்தான்.

அந்த இரவில் கரிகாலனிடமிருந்து முத்து அறிந்த விஷயங்கள், அவனைக் கரிகாலனிடம் பரிபூரண அடிமையாக அடித்துவிட்டன. அடுத்த இரண்டு நாட்களில் தான் சந்தித்த் படைத் தலைவர்களிடமெல்லாம் கரிகாலனின் ராஜதந்திர அறிவைப்பற்றி வானளாவப் புகழ்ந்து வந்தான் முத்துத் தேவன். அந்த இரண்டு நாட்களும் கரிகாலனைப்பற்றி மிகக் கெடுதலான அபிப்பிராயங்களை உலாவவிட முயன்று வந்தான் பிரும்ம மாராயன். சமயம் அகப்பட்ட போதெல்லாம் கரிகாலன் வார்த்தையை நம்பிப் படையெடுப்பை நிறுத்துவது அபாயம் என்று மற்றப் படைத் தலைவர்களிடம் வலியுறுத்தி வந்தான். மெள்ள மெள்ளப் படைத் தலைவர்களும் அந்தப் பெரும் படைத் தலைவர் வார்த்தைகளுக்கு மசியவே, மூன்றாம் நாள் எல்லாப் படைத் தலைவர்களையும் கூட்டிக் கொண்டு, பிரும்ம மாராயன் அரையன் ராஜ ராஜனிடம் சென்று தங்கள் ஆட்சேபணையைத் தெரிவிக்கச் சென்றான். அவன் சென்ற சமயத்தில், கரிகாலனிடம் வந்தியத்தேவர் ஓர் ஓலையைக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

அதைக் கவனித்தும், கவனிக்காதது போல் பாசாங்கு செய்த பிரும்ம மாராயன், ''தேவரே! வேங்கி நாட்டிலுள்ள சோழ தூதன் என்ற முறையில் நான் பேச வந்திருக்கிறேன்,'' என்று தொடங்கினான்.

வந்தியத்தேவர் . அவரை நோக்கிப் புன்முறுவல் செய்தார். அத்துடன் அரையன் ராஜராஜனையும் நோக்கினார். அரையன் ராஜராஜன் இதழ்களிலும் புன்முறுவல் அரும்பிற்று. இரண்டு பேரும் தன்னைப் பார்த்துச் சிரிப்பதன் அர்த்தத்தை உணராத பிரும்ம மாராயனுடைய பிரும்மாண்டமான உடல் கோபத்தால் ஒரு முறை குலுங்கியது. முகத்தில் உஷ்ணம் பலமாக ஏற, குரலிலும் அந்தக் கடுமை பூரணமாக ஒலிக்கக் கேட்டான் பிரும்ம மாராயன், ''எதற்காக இருவரும் சிரிக்கிறீர்கள்?'' என்று.

வந்தியத் தேவர் எவ்விதப் பதட்டத்தையும் காட்டாமல், அடக்கமாகத்தான் பதில் சொன்னார். ஆனால் பதிலா அது? இல்லை, இல்லை; பிரும்ம மாராயன் இதயத்தின் மீது பாய்ச்சப்பட்ட கூர்வேல்.

(தொடரும்)



''ஆபீஸ் விஷயமா நாளைக்குப் பஞ்சாப் போறேன்.''

''போயிட்டு வரேன்னு சொல்லுங்கோ.''

—வி. சித்ரா

# மன்னன் மகள்

22-10-87

## 38. பாழடைந்த கோட்டை

இரண்டு நாட்களாகப் படாத பாடெல்லாம் பட்டு, மற்றப் படைத் தலைவர்களையெல்லாம் தன் கட்சியில் சேர்த்துக்கொண்டு, எப்படியாவது கரிகாலன் திட்டத்தை உடைத்து வேங்கிமீது போர்ப்பறையைக் கொட்டி விடுவதென்ற திட சித்தத்துடன் மந்திராலோசனை மண்டபத்தில் திடும் பிரவேசமாக நுழைந்த பிரும்ம மாராயன், அங்கு தனக்கு ஒரு பேரிடி காத்திருக்குமென்றோ, கடந்த இரண்டு நாட்களில் தனக்குத் தெரியாமலே ஏற்பட்ட முடிவுகள் தன் பதவிக்கே பெரும் யமனாக வந்து வாய்த்திருக்கு மென்றோ அறியாததால், வந்தியத் தேவரின் வாயிலிருந்து உதிர்ந்த வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் அடியோடு நிலை கலங்கிப் போனான். போரில் பெரிய பெரிய ஈட்டிகள் வந்து பாய்ந்த சமயங்களில்கூட, ஆடாமல் அசையாமல் இரும்புச் சுவர்போல் நிற்கக்கூடிய அவனது பிரும்மாண்ட மான சரீரம்கூட ஒரு கணம் லேசாக ஆடியது. அந்தணனான பிரும்ம மாராயனை மட்டுமென்ன, வந்தியத் தேவரின் சொற்கள் பிரும்ம மாராயன் கட்சியை ஆதரித்து, அவனுடன் கடுவேக மாக உள்ளே நுழைந்த மற்றப் படைத் தலைவர்களிடையேயும் பெரும் குழப்பத் தையும் கலவரத்தையும் விளைவித்தன. அவர் பேசியதைக் கேட்ட மற்றப் படைத் தலைவர்கள், 'ஒன்று, வந்தியத் தேவர் சுயபுத்தியை இழந்திருக்க வேண்டும்; அல்லது கரிகாலன் பெரிய மந்திரவாதியாயிருக்க வேண்டும். இல்லாவிடில் அந்த வார்த்தைகள் வந்தியத் தேவரிடமிருந்து வெளிவர முடியுமா?' என்று திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்துப் பிரமித்து நின்று விட்டார்கள்.

ராஜராஜ சோழதேவன் காலத்திலிருந்தே எத்தனையோ போர்களையும், படைத் தலைவர்களையும், படைத் தலைவர் களின் பதட்டங்களையும் பார்த்திருந்த வல்லவரையரான வந்தியத் தேவர் முகத்தில் ஆரம்பத்திலிருந்த புன்னகை, படைத் தலைவர்கள் காட்டிய அத்தனை பதட்டத்துக்குப் பிறகும் சிறிதுகூட மறையவில்லை. பிரும்ம மாராயன் வாயு வேகத்தில் உள்ளே நுழைந்து, ''வேங்கி நாட்டுச் சோழ தூதன் என்ற முறையில் நான் பேச வந்திருக்கிறேன்...'' என்று பேச்சைத் துவக்கியபோது, பக்கத்தே அமர்ந்திருந்த அரையன் ராஜராஜனைப் பார்த்து எத்தகைய புன்னகையை முகத்தில் படரவிட்டுக் கொண்டாரோ, அதே மந்தகாசத்துடனே பிரும்ம மாராயனுடைய இரண்டாவது கேள்விக்கும் பதில் சொன்னார். மேற்கொண்டு நடந்த சம்பாஷணை பூராவிலும், அந்த மந்திராலோசனை மண்டபத்திலிருந்த அநேகர் நிதானத்தை இழந்தாலும், வந்தியத் தேவரின் அடக்கமோ, நிதானமோ சற்றும் குலையவேயில்லை.

தன்னைப் பார்த்து வந்தியத் தேவரும் அரையன் ராஜ ராஜனும் புன்முறுவல் செய்ததைச் சகிக்கமுடியாத உஷ்ண சித்தத்துடன், ''இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று, இரண்டாம் முறையாக இரைந்தான் பிரும்ம மாராயன்.

வந்தியத் தேவரின் குரல் மிக அடக்கமாகவே ஒலித்தது. ஆனால், அதில் ஓரளவு எச்சரிக்கையும் கண்டிப்பும் கலந்தேயிருந்தன. ''சிரிப்புக்கு மட்டுமென்ன பிரும்ம மாராயரே, இதில் பதட்டத்துக்கும் இடமில்லை!'' என்றார் வந்தியத் தேவர்.

''சில சந்தர்ப்பங்கள் எந்த மனிதனையும் பதட்டத்துக்கு உள்ளாக்கும்,'' என்று மீண்டும் படபடப்புடன் பேசிய பிரும்ம மாராயன், தன்னுடன் வந்த மற்றப் படைத் தலைவர்கள் மீதும் தனது கண்களை ஓட்டித் தன் பக்கமும், பலமானதுதானென்பதை வந்தியத் தேவருக்கு வலியுறுத்தினான்.

பிரும்ம மாராயனுடைய கண்ணோட்டத்தை மின்னல் வேகத்தில் கவனித்த வந்தியத் தேவர், மீண்டும்

சாண்டில்யன்

சாதாரணமாகவே பதில் சொல்லத் தொடங்கி, ''பிரும்ம மாராயரே! இங்கு நாம் ஒருவர் மீது ஒருவர் கட்சி கட்ட வரவில்லை. இராஜேந்திர சோழ தேவரின் பரந்த சாம்ராஜ்யத்தை மேலும் பரப்ப மந்திராலோசனை செய்யக் கூடியிருக்கிறோம். இங்கு யார் எதைச் செய்கிறார்களென்பது முக்கியமல்ல. சொல்லப்படும் விஷயம் எது, அதனால் போர்நிலை எத்தனை தூரம் பாதிக்கப்படுகிறது என்பதுதான் முக்கியம். உமது யோசனை தமிழ்ப் பேரரசின் விஸ்தரிப்புக்குத் துணை செய்யக் கூடியதாயிருந்தால், இத்தனை படைத் தலைவர்களின் ஆதரவு உமக்குத் தேவையில்லை. உமது யோசனையே உமக்குச் சரியான துணையாக நிற்கும்,'' என்று ஏதோ ஒரு சிறு குழந்தைக்குப் புத்திமதி சொல்வது போல் பேசினார்.

வந்தியத் தேவரின் அடக்கமும் பேச்சும் பிரம்ம மாராயனுடைய எரிந்த சித்தத்தில் எண்ணெயை வார்க்கவே, அவன் கடும் கோபத்துடன் கேட்டான், ''இங்கு எதைப் பற்றி யோசனை செய்கிறோம்? வேங்கிப் போரைப் பற்றித்தானே?'' என்று.

''இல்லை; தமிழ்ப் பேரரசைக் கங்கைவரையில் விஸ்தரிப்பதைப் பற்றி!'' என்றார் வந்தியத் தேவர்.

''கங்கை செல்ல வேங்கியைத் தாண்டித்தானே செல்ல வேண்டும்?'' பிரும்ம மாராயன் இந்தக் கேள்வியைக் கேட்டபோது, வெகு சாமர்த்தியமாகத் தான் எதையோ, கேட்டுவிட்டதாக எண்ணிக் கொண்டான்.

கல்லுப் பிள்ளையார் மாதிரி எதற்கும் அசையாமல் உட்கார்ந்திருந்த வந்தியத் தேவர், ஆமென்பதற்குத் தலையை மட்டும் ஆட்டினார்.

''வேங்கியைத் தாண்டிச் செல்வதானால், வேங்கியுடன் போரிடாமல் எப்படிச் செல்ல முடியும்?'' என்று கேட்டான் பிரும்ம மாராயன் மறுபடியும்.

''வழியைத்தான் கரிகாலன் சொல்லிவிட்டானே!''

''கரிகாலன்! இந்தச் சிறுவன்! இவன் எத்தனை போர்களைக் கண்டிருக்கிறான்? என்ன அனுபவம் இருக்கிறது இவனுக்கு?''

''அனுபவம் அத்தனையில்லை; ஆனால் அறிவு இருக்கிறது. ஆற்றல் இருக்கிறது.''

''அப்படியானால், அவன் யோசனைப்படி போரை நிறுத்தப் போகிறீர்களா?''

''அப்படித்தான் உத்தேசம்.''

''இதற்கு அரசர் சம்மதம் வேண்டாமா?''

''வேண்டும்.''

''பெற்று விட்டீர்களா?''

''இல்லை; பெற்றுவிடலாம் என்ற நம்பிக்கையிருக்கிறது.''

''நம்பிக்கைக்கு ஆதாரம்?''

''கரிகாலனின் மாசற்ற திட்டம்.''

''அந்தத் திட்டத்திற்கு நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். வேங்கி நாட்டிலுள்ள சோழ தூதன் என்ற முறையில், இத்திட்டத்தை எதிர்க்க எனக்கு அதிகாரமிருக்கிறது.''

இந்தக் கட்டத்தில்தான் வந்தியத் தேவரும், அரையன் ராஜராஜனும் ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று

## இறக்குமதி!

இது இறக்குமதி யுகமாகி விட்டது தமிழ்த் திரையுலகில்.

'வார்த்தா' மலையாளப் படம் தான் 'பாலைவன ரோஜாக்கள்'. 'அடியொழுக்கு' படம்தான் 'வண்ணக்கனவுகள்'. 'மேரிஜங்' என்ற இந்திப்படம்தான் 'ஒரு தாயின் சபதம்'. 'மக்கள் என் பக்கம்' கடமை கண்ணியம் கட்டுப்பாடு' முதலியவைகளும் இந்த வகைதான்.

மலையாளப் 'பிரணாமம்' படம் 'புயல் பாடும் பாட்டு' என்று மணிவண்ணன் இயக்கத்தில் வளர்ந்து வருகிறது. இந்தி 'அர்ஜுன்' இப்போது கமலின் 'சத்யா'. சிவாஜி பிலிம்சாரின் பிரபு நடிக்கும் 'ஆனந்த்', தெலுங்கில் தாசரி நாராயணராவ் இயக்கிய 'மஜ்னு'. விஜயகாந்த் நடிக்கும் 'தம்பி தங்கக் கம்பி' இந்தி 'ஜால்'.

—பாரத்

இடியென வார்த்தைகளை உதிர்த்தான் பிரும்ம மாராயன்.

''தாங்கள் இனி வேங்கிநாட்டுச் சோழ தூதர் என்ற முறையில் பேச முடியாது,'' என்று மெல்லச் சொன்னார் வந்தியத் தேவர்.

''ஏன், அந்தப் பதவியைக் கரிகாலருக்கு அளித்து விட்டீர்களோ?'' என்று சொல்லி ஏளன நகை நகைத்த பிரும்ம மாராயன் முகம், அடுத்த வினாடி வந்தியத் தேவரிடமிருந்து உதிர்ந்த வார்த்தைகளால் செவ்வானம் போல் சிவந்துவிட்டது.

''ஆம். தங்களுக்குப் பதில் கரிகாலனையே வேங்கி நாட்டுச் சோழ தூதராக நியமித்திருக்கிறோம். இதில் ஏளனத்துக்கு இடமில்லை பிரும்ம மாராயரே!'' என்றார் வந்தியத் தேவர்.

அந்தப் பதில், பெரும் சூறாவளியால் சலனப்பட்டு அலை மோதிக் கொண்டிருந்த நீரை, ஏதோ ஒரு மாயக் காற்று உறைய வைப்பது போல், அந்த மந்திராலோசனை மண்டபத்தின் சூழ்நிலையை அடியோடு உறைய வைத்து விட்டதால், பிரும்ம மாராயன் மட்டுமின்றி, மற்றப் படைத் தலைவர்களும் ஸ்தம்பித்து நின்று விட்டார்கள். அளவுக்கு அதிகமாக நீண்ட அந்த மௌன நிலையைப் பிரும்ம மாராயனே துண்டித்து, ''வந்தியத் தேவரே! தாங்கள் மன்னர்பிரான் உறவினராயிருக்கலாம். ஆனால், தமிழ் நாட்டு மன்னர் மரபினர் முறைக்கு விரோதமாக எதையும் செய்ய முடியாது. தூதர்களை நியமிக்கும் உரிமை அரசர் ஒருவருக்குத்தான் உண்டு. தூதர்களை மாற்றும் உரிமையும் அவருக்குத்தான் இருக்கிறது. ஆகவே, வேங்கி நாட்டில் நான் வகிக்கும் பதவியிலிருந்து என்னை நீக்க உங்களுக்கு ஏது அதிகாரம்? எங்கிருந்து கிடைத்தது?'' என்று துணிவுடனே கேட்டான்.

''அரசரிடமிருந்து கிடைத்தது பிரும்ம மாராயரே! இதோ இந்த ஓலையைப் பாரும்; யாரையும் அகற்றவோ நியமிக்கவோ எனக்குப் பூரண உரிமை அளிக்கப் பட்டிருக்கிறது!'' என்று கூறிய வந்தியத் தேவர் மடியிலிருந்த ஓர் ஓலையை எடுத்து பிரும்ம மாராயனிடம் நீட்டிய தோடல்லாமல், ''இதை உமது சகாக்களிடமும் காட்டும்,'' என்று, மற்றப் படைத் தலைவர்களைப் பார்த்துக் கேலியாகவும் கண்களை ஓட்டினார்.

ஓலையை வாங்கிப் படித்து முடித்த பிரும்ம மாராயன், மேற்கொண்டு என்ன செய்வதென்று அறியாமல் மந்திரத்தால் இயக்கப்பட்ட சிலைபோல் நின்றான். அவனிடமிருந்து ஓலையை வாங்கிப் படித்த சகாக்களின் முகத்திலும் ஈயாடவில்லை. சில வினாடி களுக்குப் பிறகு அவர்கள் முகத்தில் தோன்றிய குறி, 'எதற்காக இந்தப் பிரும்ம மாராயருடன் சேர்ந்தோம்' என்ற சொற்களைப் பறையறிவித்துக் கொண்டிருந்தது.

''ஓலையைப் படித்து முடித்தாகிவிட்டதா?'' என்று வந்தியத் தேவர் மீண்டும் கேட்டார்.

''ஆகிவிட்டது,'' இம்முறை பிரும்ம மாராயன் குரலில் பணிவும் துக்கமும் நிரம்பிக் கிடந்தன.

சோழர்கள் சேவையிலேயே காலத்தைச் செலவிட்ட அந்தப் படைத் தலைவன் முகத்தில் தோன்றிய துக்கத்தையும் தழுதழுத்த குரலையும் கண்ட வந்தியத் தேவரின் கருணை இதயம் கரையவே, அவர் ''பிரும்ம



# தீபாவளியின் பண்டிகை களிப்பில் உங்கள் உள்ளம் மணக்க ஆப்கோ துணிமணிகள்!

தகதகக்கும் பண்டிகை
சுடரொளியுடன்
கண்ணைப்பறிக்கும்
வண்ணக்கவர்ச்சிசேர
உங்கள் மனை
விளக்கேற்ற ஆப்கோ
புடவைகள்






kiron/apco/87 fd3/tac

ஆப்கோ

ஆடைகள்



மாராயனுக்குச் சமாதானமூட்டும் முறையில் பேச முற்பட்டு, பிரும்ம மாராயரே, தவறாக விஷயங்களை அர்த்தம் செய்து மனங் கலங்காதீர்கள். தங்களைப் பதவியிலிருந்து நீக்க வேண்டிய அவசியம் வெகு நாட்களாக இருந்து வருகிறது. அரையன் ராஜராஜனுக்கு அடுத்தபடியாகத் தலைமை வகிக்கக்கூடிய சோழநாட்டுப் படைத்தலைவர் தங்களைத் தவிர வேறு யாரும் இல்லை. தங்களை இதுவரை வேங்கியை விட்டு அகற்றாத காரணம் தங்களைப் போல் அனுபவம் வாய்ந்த தூதர் யாரும் கிடைக்கவில்லையென்பது தான்...'' என்றார்.

''இப்பொழுது அனுபவசாலி கிடைத்துவிட்டாரராக்கும்?'' என்று, பிரும்ம மாராயன் தன் சுபாவத்தை விடாமல் குறுக்கே பாய்ந்தான்.

''முன்பேதான் சொன்னேனே; அனுபவசாலி கிடைக்காவிட்டாலும் அறிவாளி கிடைத்திருக்கிறான். பிரும்ம மாராயரே! வேங்கியை விரோதித்துக் கொண்டு கங்கைக் கரைக்குச் செல்வது எவ்வளவு கடினம் என்பதைக் கரிகாலன் எடுத்துக் காட்டினானே, அதற்கு நாம் யாராவது மறுப்புச் சொல்ல முடிந்ததா? இல்லை; அப்படி மாற்றுத் திட்டம் கிடைக்காத போது நல்ல திட்டத்தை ஒப்புக் கொள்வது நமது கடமையல்லவா? கரிகாலன் வாதத்தில் சரக்கிருக்கிறது என்பதைப் போரில் நம் எல்லோரையும்விட அனுபவமுள்ள அரையன் ராஜராஜன் ஒப்புக் கொள்கிறார். ஆகவே, அதை நாம் எதிர்த்துப் பிடிவாதம் பிடிப்பதில் பயனென்ன இருக்கிறது? காரியம் வெற்றிகரமாக நிறைவேற, கரிகாலன் திட்டத்தை நாங்கள் ஒப்புக் கொண்டோம். அதை நிறைவேற்றி வைக்க அவனுக்குச் சந்தர்ப்பத்தைக் கொடுப்பதென்றும் தீர்மானித்தோம்.'' என்று சொல்லிய வந்தியத் தேவர், அரையன் ராஜராஜனைத் திரும்பிப் பார்த்தார்.

அதுவரை ஒரு வார்த்தைகூடப் பேசாமல் ஆசனத்தில் சாய்ந்து உட்கார்ந்திருந்த அரையன் ராஜராஜன், தன் கூரிய விழிகளைப் பிரும்ம மாராயன் மீது நாட்டினான். ''பிரும்ம மாராயரே, இந்த நடவடிக்கையை எடுக்கு முன்பாக இரண்டு நாட்கள் தீவிரமாகச் சிந்தனை செய்தோம். வேறு வழி புலப்படவில்லை. எந்தவிதமாகப் பார்த்தாலும் கரிகாலன் கூறியதைவிடச் சிறந்த வழி சிந்தனைக்கு எட்டவில்லை. நாம் ஜெயசிம்மன் மீது இப்பொழுது நேராகப் படையெடுத்தால், அவனை முறியடித்து விடலாமென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால், அந்த முயற்சியில் நமது படையில் பாதி அழிந்து விடும். கலிங்கன், ஒட்டாரன், ஜெயசிம்மன்—இம் மூன்று பேர்களையும் நாம் ஏககாலத்தில், எதிர்க்க வேண்டியிருக்கிறது. உமக்கும் போர் அனுபவமிருக்கிறது. நான்றாக யோசித்துப் பாரும்,'' என்று கூறினான்.

பிரும்ம மாராயன் இயற்கையாகக் கெட்ட குணமுடையவனல்ல. ராஜபக்தியில் வந்தியத் தேவருக்கோ அரையன் ராஜராஜனுக்கோ வேறு யாருக்கோ சற்றும் குறைந்தவனும் அல்ல. சீற்றமும், கரிகாலன் மீது வேங்கி நாட்டில் ஏற்பட்ட சந்தேகமும் அவன் மூளையைப் பெரிதும் குழப்பியிருந்தன. ஒரு சிறுவனுக்காகத் தன்னைப் பதவியிலிருந்தே நீக்குகிறார்கள் என்ற எண்ணமும் அவன் இதயத்தைப் பிளந்து அறிவையும் கோபத்துக்கு அடகு வைத்திருந்தது. இந்த உணர்ச்சிகளை வந்தியத் தேவர் தெரிவித்த தகவலும் அரையன் ராஜராஜனின் சொற்களும் ஓரளவு உடைத்தெறியவே நிதானமாக உள்ள நிலையைச் சிந்தித்த பிரும்ம மாராயன் புத்திக்கும் மெள்ள மெள்ள நியாயம் எது என்பது புலனாயிற்று. ஆகவே, கடைசியாகத் தாராள புத்தியுடன் பேசத் தொடங்கி, ''படைத் தலைவரே! கஷ்டங்கள் இருப்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் அவற்றைச் சமாளிக்க இந்தச் சிறுவனால் முடியுமா? யார் கண்ணிலும் மண்ணைத் தூவ வல்ல ஜெயசிம்மனை ஏமாற்றி, நம்முடன் சமாதானத்துக்கு இழுக்க இவனால் முடியுமா? முசங்கிப் போரை ஜெயசிம்மன் மறப்பானா? அதில் அவன் தங்களிடம் முறியடிக்கப் பட்டு, இன்னும் ஒரு வருடம்கூட ஆகவில்லையே!'' என்றான்.

அரையன் ராஜராஜன் கண்கள் கரிகாலனை நோக்கித் திரும்பின. அப்படித் திரும்பியதன் பொருளைப் புரிந்துகொண்ட கரிகாலன், ''பிரும்ம மாராயரே! ஏமாற்றுவது என்பது குறுக்கு வழி. அதை எந்த அறிவாளியும் செய்ய முடியும். நேர்மையான பாதைதான் கஷ்டமானது,'' என்று கூறினான்.

''நீ ஜெயசிம்மனை ஏமாற்றி விடுவாயா?''

''ஏமாற்ற முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது.''

''நம்பிக்கைக்குச் சான்று?''

''ஏற்கனவே அவனிடமிருந்து நான் தப்பி வந்திருப்பது...''

''அரசருக்கு வந்தியத் தேவர் சமாதானம் சொல்ல அது போதாது கரிகாலா! வேறு சரியான அத்தாட்சி வேண்டும். 'கரிகாலன் ஏற்கனவே இதைச் செய்திருக்கிறான். ஆகையால் அவனை நம்பி இந்தப் பெரிய சாம்ராஜ்யப் பணியை அவனிடம் ஒப்படைத்தேன்' என்று, அவர் எடுத்துச் சொல்ல வசதி வேண்டும். இங்குள்ள மற்றப் படைத் தலைவர்கள் சாதிக்க முடியாத எந்தக் காரியத்தை நீ சாதித்திருக்கிறாய்? இத்தனை அனுபவசாலிகள் இருக்க உன்னை ஏன் அரையன் ராஜராஜரும் வந்தியத் தேவரும் ராஜதந்திரிகளே மேற்கொள்ள அஞ்சும் இந்த அலுவலுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டும்?''

பிரும்ம மாராயன் கேட்ட இந்தக் கேள்வி கரிகாலன் இதழ்களிடையே ஒரு விஷமப் புன்முறுவலைத் தவழ வைத்தது. மெள்ள உள்ளுக்குள்ளேயே நகைத்துக் கொண்ட கரிகாலன், பிரும்ம மாராயனை நோக்கி, ''படைத் தலைவரே! அத்தாட்சி நான் காட்டுவேன். மற்றவர்கள் செய்ய முடியாத எதை நான் செய்தேன் என்பதையும் எடுத்துச் சொல்ல முடியும். ஆனால் தற்புகழ்ச்சியில் எனக்கு இஷ்டமில்லை...'' என்று இழுத்தான்.

வந்தியத் தேவரின் கண்களில் திடீரென ஒரு புத்தொளி பிறந்தது. ''என்ன அத்தாட்சி கரிகாலா?'' என்று வினவினார்.

''காட்ட உத்தரவா?'' என்று



வருகிறது

# கிறிஸ்டல் மென்மையின் மறுபெயர்

மென்மைமிகு பனியன்கள், ஜட்டிகள், கால்சட்டைகள்




கிறிஸ்டல். இந்தியாவில் தயாராகும் உள்-ஆடைகளில் இவை மட்டுமே அதிநவீன முறையில் மெர்ஸிரைஸ் செய்யப் பட்டு தயாரிக்கப் படுகின்றன... உங்களது உடலோடு அழகாக இணைந்து எப்போதும் சுகம் தரும் வண்ணம். வெண்மை மற்றும் பல வண்ணங்களில் கிடைக்கின்றன.

மறைவிலும் நிறைவான ஸ்டைல்

**கிறிஸ்டல்** ®

பணிவுடன் வினவினான் கரிகாலன்.

''காட்டப் போகிறாயா!'' என்றான் அரையன் ராஜராஜன், ஆச்சரியத்துடன்.

''எதை?'' வந்தியத் தேவரின் குரலிலும் வியப்புக் கலந்திருந்தது.

''தங்கள் சாம்ராஜ்யப் படைகள் நீண்ட நாட்களாகக் கண்டுபிடிக்க முடியாத பொக்கிஷம்!'' என்றான் கரிகாலன்.

வந்தியத் தேவரின் கண்களும் அரையன் ராஜராஜன் கண்களும் சந்தித்தன. சபையிலேயே பெரும் பரபரப்பு ஏற்பட்டது. அந்தப் பரபரப்பை இன்னும் அதிகமாக்கும் எண்ணத்துடன், மடியிலிருந்த செங்கதிர் மாலையை எடுத்து அந்த மந்திராலோசனை மண்டபத்தின் நடுவே தன் கையால் தூக்கிப் பிடித்த கரிகாலன், ''வந்தியத் தேவரே! எந்தச் செங்கதிர் மாலைத் திருட்டைக் கண்டுபிடிக்க உங்கள் படைகள் மாதக் கணக்கில் திரிந்தும் பயனில்லையோ, எந்தச் செங்கதிர் மாலை இராஜேந்திர தேவர் மெய்க்கீர்த்திகளில் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றதோ, எதைப் பறிக்கச் சேரமன்னன் தன் ஒற்றர்களை ஏவினானோ, அதே செங்கதிர் மாலை இதோ இருக்கிறது. இதை மன்னருக்கு என் காணிக்கையாகச் சமர்ப்பியுங்கள். இதுவே என் திறமைக்கும் அத்தாட்சியாகட்டும்!'' என்று கூறி, மாலையை வந்தியத் தேவரிடம் ஒப்படைத்தான்.

மந்திராலோசனையிலிருந்த அத்தனை படைத் தலைவர்களும் மந்திரத்தால் கட்டுண்ட சர்ப்பங்களைப் போலானார்கள். பிரும்ம மாராயன் மனமோ வேங்கி நாட்டில் நடந்த பல சம்பவங்களில் சுழன்று, சுழன்று, எது உண்மை, எது பொய் என்பதை அறிய முடியாமல் தவித்துக் கொண்டிருந்தது. அன்று சைவத் துறவியான ஜெயவர்மன், தன் முன்பாகவே, 'கரிகாலா! செங்கதிர் மாலையைக் கொடுத்துவிடு' என்று கூறிய காட்சியும், பின்பு அவன் சிறைக் கம்பிகளை அறுத்துவிட்டு ஓடிவிட்ட சம்பவமும், ஒன்றன் பின் ஒன்றாகப் பிரும்ம மாராயன் மனக்கண் முன்னே எழுந்து நின்றாலும், அவன் ஏதும் பேசமாட்டாதவனாய்க் கல்லெனச் சமைந்து நின்றான். ஒருமுறை சுற்று முற்றும் கண்களை ஓட்டிய பிரும்ம மாராயன், தான் அதற்குமேல் எதைச் சொன்னாலும் அந்தச் சபையில் எடுபடாது என்பதைப் புரிந்து கொண்டவனாய், நீண்ட பெருமூச் சொன்றை விட்டான்.

பிரும்ம மாராயன் பேச்சினாலும் அவன் கிளப்பிய பிரசினைகளாலும் வந்தியத் தேவருக்கு ஏதாவது சந்தேகமிருந்தால், அந்தச் சந்தேகத்தைச் செங்கதிர் மாலை அடியோடு உடைத்துவிட்டது. கரிகாலன் புதுப் பதவியை அந்த மாலை நன்றாக ஊர்ஜிதம் செய்ததன்றி, அவன் புகழையும் அடுத்த நாளே படை வீரர்களிடையே பெரிதும் ஏற்றிவிட்டது. ஆனால் அந்தப் புகழை ஏற்றுக் களிக்கவோ, மன்னன் மகளைக் காணுவதில் கால தாமதம் செய்யவோ கருத்துக் கொள்ளாத கரிகாலன், அடுத்த நாள் மாலையே முத்துத் தேவனுடன் வேங்கி நாட்டுக்குப் பயணமானான்.

சிறு காவற் படையையாவது உடன் அழைத்துச் செல்லும்படி அரையன் ராஜராஜன் எத்தனை சொல்லியும் கேட்காமல், முத்துத் தேவனை மட்டும் துணை கொண்டு வேங்கியை நோக்கி விரைந்த கரிகாலன், இரண்டாவது நாள் கிருஷ்ணாவின் மேற்குக் கோடியிலிருந்த ஒரு சிறு கோட்டைக்கருகே வந்து சேர்ந்தான். ''முத்து! இதென்ன கோட்டை தெரியுமா உனக்கு?'' என்று கேட்டான்.

''தெரியும்; சாளுக்கியர்களின் பாழடைந்த கோட்டை இது. ஏதோ பேருக்குக் காவல் வைத்திருக்கிறார்களே யொழிய, அநேகமாக வழிப்போக்கர் தங்குவதற்கே உபயோகப்படுகிறது.

பிச்சைக்காரன்: (வீட்டுக்கார அம்மாளிடம்): சந்தேகப்படாதீங்கம்மா, நான் வழக்கமா வர்ற பிச்சைக்காரன்தான். தீபாவளிக்குப் புதுசா பட்டு வேட்டியும், சட்டையும் தச்சிகிட்டேன்.

முசங்கிப் போரில் அரையன் ராஜராஜன் சாளுக்கியரை முறியடித்த பிறகு இந்தப் பிராந்தியத்திலுள்ள பல கோட்டைகள் இப்படிக் கேட்பாரற்றுக் கிடக்கின்றன,'' என்றான் முத்துத் தேவன்.

''அப்படியானால், இன்றிரவை இங்கேயே கழிப்போம்,'' என்று கூறிய கரிகாலன், கோட்டையை நோக்கி குதிரையைத் தட்டிவிட்டான். முத்துத் தேவன் ஊகம் சரியாகவே இருந்தது. கோட்டை கிட்டத்தட்ட சத்திரம் போல்தான் உபயோகப்பட்டிருந்தது. கோட்டைத் தலைவனே அவ்விருவருக்கும் மாடியில் ஓர் அறையை ஒழித்துக் கொடுத்தான். கரிகாலன் காட்டிய சோழநாட்டுப் பொற்காசுகள், கோட்டைத் தலைவனை அடிமையாக அடித்துவிட்டபடியால், இராப் போசனமும் பலமாகவே கிடைத்தது.

மெள்ள இரவு ஏறியது. முத்துத் தேவன் களைப்பால் நன்றாக உறங்கினான். ஆனால் எண்ணங்கள் பல உள்ளே ஓடியதால் தூக்கம் வராத கரிகாலன், மாடித் தாழ்வாரத்தில் வந்து தூரத்தே தெரிந்த கிருஷ்ணா நதியை உற்று நோக்கினான். கிழக்கே வெகு வேகமாகப் பாய்ந்து சென்ற கிருஷ்ணாவின் பிரவாகம், அவன் சிந்தனையை வேங்கி நாட்டிலிருந்த சித்தினிப் பெண்ணிடம் இழுத்துச் சென்றது. நீண்ட நேரம் கனவுலகில் சஞ்சரித்து இன்பத்தை நுகர்ந்து கொண்டிருந்த அவன் சிந்தனைக் கோட்டையைத் திடீரென்று மாடிப் படிக்குக் கீழே கேட்ட இருவர் குரல்கள் தகர்க்கவே, செவிகளைத் தீட்டிக் கொண்டு பேச்சைக் கேட்டான்.

''மேலே சோழர் படையைச் சேர்ந்த இருவர் வந்திருக்கிறார்களா?'' என்றது ஒரு குரல்.



''ஆமாம்.'' என்றது மற்றொரு குரல்.

இரண்டாவது குரல் கோட்டைத் தலைவனுடையது என்பதைப் புரிந்துகொண்ட கரிகாலனுக்கு, முதல் குரலும் பழக்கமானதாகத் தெரிந்தாலும், யாருடைய குரல் என்று திட்டமாகத் தெரியவில்லை.

''ஒருவன் முகம் குழந்தை முகம் போலிருந்ததா?'' என்று மேலும் கேட்டது முதல் குரல்.

''ஆம்.'' என்றது இரண்டாவது குரல்.

''அப்படியானால் வந்திருப்பவன் கரிகாலன்தான். நான் வீரர்களை அழைத்து வருகிறேன். அதுவரை நீ அவர்கள் அறையைக் காவல் புரிந்து கொண்டிரு. இன்றிரவே அவர்களைக் கைது செய்துவிட வேண்டும். கொஞ்சம் ஏமாந்தால் அந்தச் சிறு பயல் தப்பிவிடுவான்,'' என்று கூறிய முதல் குரலைத் தொடர்ந்து, வேகமாகச் செல்லும் காலடிகள் கேட்டன.

கரிகாலன் ஓசைப்படாமல் அறைக்குள் திரும்பி வந்து, முத்துவை அசைத்து எழுப்பி, ''முத்து! வாளை உருவிக் கொள்!'' என்று எச்சரித்துவிட்டு, தானும் வாளை உருவிக் கொண்டு, அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கையும் ஊதி அணைத்துவிட்டான். விநாடிகள் நகர்ந்தன. நான்கைந்து வீரர்கள் படிகள்மீது ஏறிவரும் காலடிச் சத்தம் கேட்டது. ''முத்து! நீ வாயிற்படிக்கெதிரில் நில். உள்ளே முதலில் நுழைபவன்மீது உன் கத்தியை நீட்டு. ஆனால் அவனைக் கொல்லாதே,'' என்று காதோடு காதாகக் கூறிவிட்டு, வெகு வேகமாக நாலே அடியில் கதவுப் பக்கம் சென்று கதவின் மறைவில் நின்று, தன் வாளையும் ஆசையுடன் ஒரு முறை தடவிக் கொடுத்துக் கொண்டான். வீரர்களும் துரிதமாகப் படிகளைக் கடந்து கதவை அணுகினார்கள். முதலில் வந்தவன் மெள்ளக் கதவைத் திறந்தான்.

(தொடரும்)

# காணாமல் போன விஸ்வன்



1 தடை



2 நடை








## 39. துறவியாரின் தகவல்

வெளியே பால் நிலவு படர்ந்து கிடந்தாலும், கோட்டையின் முன்னணிப் பகுதியிலிருந்த காரணத்தால், அதிகச் சாளரங்கள் வைக்கப்படாத அந்த அறையில் காரிருளே சூழ்ந்து கிடந்தது. அம்புகள் எய்வதற்காக மூலைகளையொட்டி அமைக்கப்பட்டிருந்த ஓரிரு சாளரங்களும் சாத்தப்பட்டிருந்தமையால், அறைக்குள் வெளிச்சம் நுழைவது அடியோடு சாத்தியமில்லாமல் போய்விட்டது.

சாண்டில்யன்

கரிகாலனைக் கைது செய்யும் நோக்கத்துடனும், மிக எச்சரிக்கை யுடனும் எதிரிகளிலொருவன் கதவைத் திறந்த பின்பு கூட, அறையை அடுத்து நின்ற தாழ்வாரம் வெளியே இருந்த வெளிச்சத்தைப் பெரிதும் வடிகட்டி விட்டதால், மிக மங்கலான ஒளியே அறைக்குள் பாய்ந்தது. அப்படிப் பாய்ந்த ஒளியும் திறந்த கதவுக்கு நேரே விழுந்தபடியால், கதவின் ஓரத்தில் மறைந்து நின்ற கரிகாலனையும் கதவின் எதிர்த் திக்குக்குச் சற்று அப்பால் நின்ற முத்துத் தேவனையும் பார்க்கவோ, அவர்கள் இருப்பிடத்தை ஊகிக்கவோ எதிரிகளால் முடியவில்லை.

அறையின் விளக்கு முன்னெச்சரிக்கையுடன் ஊதிவிடப் பட்டிருந்தபடியாலும், கதவு திறந்த பின்பும் உள்ளே இருள் சூழ்ந்தே நின்றபடியாலும், உள்ளிருந்த மனிதர் களின் நடமாட்டமும் ஏதும் கேட்காத தாலும், வெளியேயிருந்து கதவைத் திறந்தவனும் மிக ஜாக்கிரதையாகவே நடந்து கொள்ளத் தொடங்கி, 'அறையின் கதவை நன்றாகக் காவல் புரிந்து நில்லுங்கள்; யாராவது வெளியே ஓட முற்பட்டால் கருணையை மருந்துக்கும் காட்டாமல் வெட்டித் தள்ளுங்கள்,'' என்று உத்தரவிட்டு, அறையின் வாயிற்படியிலிருந்தபடியே, ''கரிகாலா! வெளியே வந்துவிடு. இவ்விடத்தில் ஆறு வீரர்கள் இருக்கிறார்கள். கீழே இன்னும் பதின்மரை நிறுத்தியிருக்கிறேன். ஆகவே எதிர்ப்பினால் பயனில்லை. உன் குள்ள நரித் தந்திரம் பலிப்பதற்கு இங்கு வழியில்லை. உன் புரட்டு வார்த்தைகளைக் கேட்டு ஏமாறுவதற்கும் இங்கு யாருமில்லை. பேசாமல் வா,'' என்று அதிகார தோரணையில் அழைத்தான்.

கரிகாலனோ முத்துத் தேவனோ வாயைத் திறக்காமல் நின்ற இடங்களிலேயே நின்றபடியால் பதிலேதும் கிடைக்காத எதிரி வீரன், 'கரிகாலா! பிடிவாதம் செய்யாதே; வந்துவிடு! உன்னைக் கொல்லச் சொல்லி எனக்கு உத்தரவில்லை. ஆனால் தப்ப முயன்றால், உன்னை உயிரோடு மன்னரிடம் கொண்டு போகா விட்டாலும் உன் சடலத்தையாவது கொண்டுபோய்ச் சேர்க்கத் தவற மாட்டேன். ஆகவே சரண் அடைந்துவிடு.'' என்று மீண்டும் கூறினான்.

அதற்கும் பதில் கிடைக்காமற் போகவே, எதிரி வீரன் தன்னுடன் வந்தவர்களை நோக்கி, ''சரி! மயிலே, மயிலே என்றால் இறகு போடாது போலிருக்கிறது. உங்களில் இருவர் போய்ப் பந்தங்களைக் கொளுத்திக் கொண்டு வாருங்கள். இருவர் என்னுடன் உள்ளே வாருங்கள்,'' என்று உத்தரவிட்டு உருவிய தன் வாளை நீட்டிய வண்ணம் அறைக்குள் அதிவேகமாக நுழைந்தான். அவன் அறைக்குள் நுழைந்ததுதான் தாமதம், கண்ணிமைக்கும் நேரத்தில் பிரமிக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடந்தேறின. உருவிய அவன் வாளை முத்துத் தேவனின் வாள் ஒரு சுழற்றுச் சுழற்றிக் கீழே தாழ்த்திவிட்டு, அவன் மார்பைத் தடவி நின்றது. பின் புறத்திலிருந்த மற்றொரு வாளின் நுனி அவன் முதுகில் சற்றே அழுந்தியது. ''துறவியாரே! வாளைக் கீழே போடுங்கள்; இல்லாவிடில் உங்கள் உடலில் எங்கள் இரு வாள்களும் நுழைந்துவிடும்,'' என்ற கரிகாலன்

சொற்கள், மிக நிதானமாக, ஆனால் அழுத்தமாக வெளிவந்தன.

மார்பில் ஒரு வாளும், முதுகில் ஒரு வாளும் தடவி நின்றாலும், மனோதைரியத்தை விடாத சேர ஒற்றனான அந்தச் சைவத் துறவி, ''கரிகாலா, நீ என்னைக் கொன்று பயனில்லை. மற்ற வீரர்கள் உன்னை வெட்டி எறிந்து விடுவார்கள். அந்தக் கதி இந்த இளவயதில் உனக்கு எதற்கு? நான் சொன்னபடி செய்தால் உனக்காக மன்னரிடம் நானே வாதாடுவேன். சொல்வதைக் கேள். தைரியம் மனிதனுக்கு வேண்டியதுதான்; ஆனால் அசட்டுத் தைரியம் அனர்த்தத்திலேயே கொண்டுபோய் விடும்,'' என்றான்.

கரிகாலன் சைவத் துறவிக்குப் பதில் சொல்லாமல், முத்துத்தேவ னிடமே பேசத் தொடங்கி, ''முத்து! வாளை உறுதியாகச் சுவாமிகள் மார்பில் அழுத்தி வை. சற்று அசைந்தாரானால், வாள் இவருடைய இதயக் குருதியை ருசி பார்க்கட்டும். நாம் அயருவோமா என்று பார்ப்பதற்கே நம்மிடம் பேச்சுக் கொடுக் கிறார் சுவாமிகள்,'' என்று கூறிவிட்டுச் சைவத் துறவியை நோக்கி,

''சாமியாரே! துறவிக்கு வாள் எதற்கு? கீழே எறிந்து விடுங்கள். உமக்குப் பின்புறமும் முன்புறமும் நிற்பவர்கள் வேங்கி நாட்டு வீரர்களல்ல; எங்களை ஏமாற்றுவதும் அவ்வளவு எளிதல்ல,'' என்றான்.

சற்று நேரம் ஏதோ யோசித்த சைவத் துறவியும், வாளைக் கீழே எறிந்துவிட்டு, ''இன்னும் என்ன செய்ய வேண்டும்?'' என்று குரலில் கோபம் கொந்தளிக்க வினவினார்.

''துறவியாரே! தங்களுக்குத் துணையாக வந்திருக்கும் வீரர்களைக் கீழே அனுப்பிவிடுங்கள். நாம் சாவதான மாகப் பேசுவோம்,'' என்றான் கரி காலன், ஏதோ பழைய நண்பனொருவனைத் திடீரெனச் சந்தித்தவன், ஆசையுடன் பேச முற்படும் பாணியில்.

கரிகாலன் வார்த்தைகள் ஒவ்வொன்றும் சைவத் துறவியாரின் கோபத்தைப் பெரிதும் கிளப்பிவிட் டாலும், வேறு ஏதும் வழியில்லாத வராய் அவன் விருப்பப்படியே நடக்கத் தொடங்கி, தமது வீரர்களைக் கீழே சென்று மாடிப்படிக்கு அருகில் காவல் புரியுமாறு கட்டளையிட்டார். வீரர்கள் கீழே சென்றதும், கதவைத் தாளிட்ட கரிகாலன், விளக்கை மீண்டும் ஏற்று மாறு முத்துத்தேவனுக்கு உத்தர விட்டான். முத்துத்தேவனும் அறை மூலையில் கிடந்த வன்னிமரத் துண்டு களைத் தேடியெடுத்து, இரண்டு மூன்றை நன்றாகச் சூடு பறக்கத் தேய்த்துப் பொறிகளைக் கிளப்பி விளக்கை ஏற்றவே, அறையில் மீண்டும் ஒளி நாற்புறமும் சூழ்ந்தது. அந்த விளக்கொளியில் சைவத் துறவியின் முகத்தைக் கூர்ந்து நோக்கி அதில் ஆச்சரியம் பரிபூரணமாகப் படர்ந் திருப்பதைப் பார்த்து, ''துறவியாரே! நீர் வியப்பில் ஆழ்ந்திருக்கும் காரணம் எனக்குத் தெரியும்!'' என்றான்.

''என்ன காரணம்?'' என்று கேட்டார் சைவத் துறவி.

''விளக்கை ஏற்ற வேண்டு மானால், எப்படியும் யாராவது ஒருவன் நெருப்பு எடுத்துவரக் கீழே போய்த் தானாக வேண்டும். அங்கு உமது வீரர்கள். எங்களில் ஒருவரைப் பிடித்துக் கொண்டால், மற்றொருவரைச் சிறை செய்வது சுலபம் என்று மனப்பால்

 (சரி பார்க்க: 78'ம் பக்கம்)

குடித்தீர்கள். ஆனால் நெருப்பு இங்கேயே உற்பத்தியாவது உமக்கு வியப்பாயிருக்கிறது!'' என்று கூறிய கரிகாலன், சைவத் துறவியை ஏற இறங்க நோக்கினான்.

சைவத் துறவியும் அவன் கண்களோடு தமது கண்களைத் தைரியமாகவே கலக்கவிட்டு, ''ஆமாம் கரிகாலா; அப்படித்தான் நினைத்தேன். ஆனால் இங்கேயே நெருப்பைக் கொண்டு வந்துவிட்டாயே!'' என்று பதில் கூறியதுமல்லாமல், ''அதென்ன மரத்துண்டுகள்? எவ்விதம் நெருப்பைக் கக்குகின்றன?'' என்று கேட்டார்.

''துறவியாரே! வன்னி மரத்தின் கர்ப்பத்திலே நெருப்பு இருக்கிறது. இதைக் காளிதாசனே ரகுவம்ச மகா காவியத்தில் சொல்லியிருக்கிறான். வன்னி மரத்தை உராய வைத்து நெருப்புப் பொறிகளைக் கிளப்புவது தொன்று தொட்டு இருந்து வரும் பழக்கம். சாளுக்கியர் நாட்டில் நெருப்பை அப்படி உற்பத்தி செய்வது மிக சகஜம். சாளுக்கியர்களிடம் சேவைக்கு அமர்ந்த உமக்கு இந்த அல்ப விஷயம் தெரியவில்லையே!'' என்று சொல்லி நகைத்தான் கரிகாலன்.

சைவத் துறவியின் முகத்தில் ஆச்சரியம் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகப் படர்ந்தது. ''என்ன, நான் சாளுக்கியர்களிடம் சேவைக்கு அமர்ந்துவிட்டேனா?'' என்று வினவினார் சைவத்துறவி, அந்த ஆச்சரியம் குரலிலும் தொனிக்க.

''அமரவில்லையா?''

''அமர்ந்துவிட்டேன். ஆனால் அது உனக்கெப்படித் தெரியும்?''

''உம்முடன் வீரர்கள் வந்திருக்கிறார்களே!''

''ஏன், அவர்கள் என்னைச் சேர்ந்த சேரநாட்டு ஒற்றர்களாயிருக்கக் கூடாதா?''

''இருக்கலாம்; ஆனால் சாத்தியமில்லை.''

''ஏன், சாத்தியமில்லை?''

கரிகாலன் உதடுகளில் விஷமமான புன்னகையொன்று படர்ந்தது. ''துறவியாரே! நான் தர்க்க சாஸ்திரம் படித்தவன் என்று தங்களிடம் எத்தனை முறை கூறியிருக்கிறேன்?'' என்று

கேட்டான் கரிகாலன்.

''ஆமாம், கூறியிருக்கிறாய். அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று சைவத் துறவியாரும் பதிலுக்கு ஒரு கேள்வியைக் கேட்டார்.

''தர்க்க சாஸ்திரி எப்பொழுதும் விஷயங்களைத் தொகுத்துப் பார்ப்பான். முதன் முதலாக, சேர நாட்டுக்கும் வேங்கிக்கு மிடையே சோழர்களின் பெரும் படை இருக்கிறது. அந்தப் படையைத் தனி ஒற்றனே ஊடுருவித் தப்பி வருவது கஷ்டம். ஆகவே, பல வீரர்களையும் அழைத்துக் கொண்டு தாங்கள் இங்கு விஜயம் செய்து என்னைக் கௌரவப் படுத்துவது முடியாத காரியம். தவிர தங்களுக்கு ஒரு தனிப் பதவியும் இருக்கிறது.''

''என்ன அது, எனக்குத் தனிப் பதவி?''

''தாங்கள்தான் செங்கதிர் மாலையைக் களவாடியவர் என்பது சோழர் படைகளுக்கு நன்றாகத் தெரியும். அல்லும் பகலும் தங்களைப் பிடிப்பதிலேயே நாட்டமுடையவர்களாய் வீரர்கள் உலாவிக் கொண்டிருக்கிறார்கள். இத்தனை ஆபத்தில் தாங்கள் இங்கு வருவதே சிரமம். அப்படியிருக்க, சேரமான் வீரர்களையும் திரட்டிக் கொண்டு வருவதென்பது கனவிலும் நடவாத காரியம். அது மட்டுமல்ல; இன்னொரு விஷயத்தையும் யோசித்தேன்.''

''யோசனை பலமாகத்தானிருக்கிறது?'' என்று பதில் சொன்னார் சைவத் துறவி மகிழ்ச்சியுடன்.

''யோசனை தர்க்க சாஸ்திரத்துக்கு இன்றியமையாதது. தெளிவாகச் சிந்திக்கும் திறன் உள்ளவனுக்கே அந்தச் சாஸ்திரம் பயனளிக்கும்,'' என்ற கரிகாலன், மேலும் சொன்னான்: ''துறவியாரே! நான் தங்களைப் பிரும்ம மாராயன் சிறையிலிருந்து தப்புவித்தாலும், செங்கதிர் மாலையைக் கொண்டுபோகாமல், இந்தப் பிராந்தியத்தை விட்டுத் தாங்கள் நகரமாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். அத்துடன் நான் வேங்கியைவிட்டு அரிஞ்சயனை அழைத்துச் சென்ற விவரங்களையும் அறிந்திருப்பீர். ஆகவே எப்படியாவது என்னைப் பிடித்து, செங்கதிர்

மாலையைக் கைப்பற்ற நீங்கள் முயலாமல் இருக்கமாட்டீர்கள் என்பதிலும் எனக்குச் சந்தேகமிருந்த தில்லை. ஜெயசிம்மனிடம் சேவை உமக்கு அந்த வாய்ப்பை அளிக்கும். ஆகவே, அவன் படையில் தாங்கள் சேர்ந்திருக்கிறீர்கள். ஏன், அப்படித் தானே?''

இந்த வார்த்தைகளைக் கேட்ட சைவத் துறவியார் கரிகாலனின் சிந்தனைத் திறனைப் பெரிதும் வியந் தாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''ஜெயசிம்மன் சேர நாட்டு ஒற்றனை நம்புவானா?'' என்று வினவினார்.

''நம்ப வைப்பது தங்களுக்கு எளிது. என்னைப் பிரும்ம மாராயன் மாளிகையில் பார்த்ததையும், பிரும்ம மாராயன் தங்களைச் சிறையிட்டு, என்னை மகிழ்ச்சியுடன் மாளிகைக்குள் அழைத்துச் சென்றதையும் விளக்கியிருப் பீர்கள். அதில் தங்கள் சொந்த வியாக்கி யானமும் கலந்திருந்தால், ஜெய சிம்மனை நம்ப வைப்பது ஒரு பெரிய காரியமல்ல,'' என்று கரிகாலன், மேலும் தன் ஆராய்ச்சித் திறனைக் காட்டி னான்.

சைவத் துறவியார் நீண்ட நேரம் ஏதோ யோசித்துக் கொண்டே அறையில் சற்று நேரம் உலாவினார். அப்பொழுது அவர் காவி உடை அணிந்திருந்தாலும் அதையும் போர்ப் பாணியிலேயே இழுத்துக் கட்டியிருந்த தால் சற்றுக் கம்பீரமாகவே காணப் பட்டார். அவசியமில்லாத காரணத் தால் தாடியைக் களைந்துவிட்டிருந்த அவர் முகம் வயதேறியிருந்தாலும் அழகாகவே காணப்பட்டதானாலும், அந்த அழகைச் சதா திருட்டுத் தனத்தைக் கொட்டிக் கொண்டிருந்த

விடை:

ஐதராபாத்திலிருந்து முதல் முறையாக விமானமேறிய அசாருதீன் தான் அவர்.

கண்கள் பெரிதும் கெடுத்துக் கொண் டிருந்தன. தீவிர சிந்தனையுடன் உலா விய அந்தக் கபட சந்நியாசி, கடைசி யாகத் தன் கபடப் பார்வையைக் கரிகாலன் மீது திருப்பி, ''கரிகாலா! இப்பொழுது கூட ஓர் உதவி செய்! உன்னை இங்கிருந்து தப்பவைத்து விடுகிறேன்,'' என்றார்.

''என்ன உதவி வேண்டும்?''

''செங்கதிர் மாலையை என்னிடம் கொடுத்துவிடு.''

''அது என்னிடமில்லை.''

''எங்கிருக்கிறது? இராஜேந்திர சோழ தேவனிடம் சேர்ப்பித்து விட்டாயா?''

இந்தக் கேள்விக்குக் கரிகாலன் உடனே பதில் சொல்லவில்லை. ஒரு வினாடி யோசித்து விட்டுப் பிறகு, ''துறவியாரே! அந்த மாதிரி ஒரு பொக்கிஷத்தைத் திருப்பிக் கொடுக்க யாருக்காவது மனம் வருமா?'' என்றான்.

''வராது கரிகாலா! அப்படி யானால் அதை எங்கு வைத்திருக் கிறாய்?''

''பத்திரமான இடத்தில் வைத்திருக்கிறேன்.''

''அந்த இடத்தை எனக்குச் சொல்லிவிடு. உன்னை இப்பொழுதே விடுதலை செய்கிறேன்.''

''எப்படி விடுதலை செய்வீர்?''

''நான் தேடிவந்த மனிதன் நீ அல்ல; தவறு நேர்ந்து விட்டது என்று சொல்லிவிடுகிறேன்.''

''துறவியாரே! தாங்கள் அப்படிச் சொன்னால் தற்சமயம் நான் தப்பலாம், ஆனால் தப்ப நான் இஷ்டப் படவில்லை. நான் இப்பொழுது போவதே ஜெயசிம்மனிடம்தான்,'' என்றான் கரிகாலன்.

தூக்கிவாரிப் போட்டது சைவத் துறவியாருக்கு. ''என்ன, ஜெயசிம்மனிடமா?'' என்று அதிர்ச்சியடைந்தவர் போல் வின வினார்.

''ஆமாம் துறவியாரே! ஜெயசிம்மனிடம்தான்,'' என்றான் கரி காலன்.

''உனக்குப் பைத்தியமா?''



திருடன் 1: தீபாவளிக்குத் துணியெல்லாம் எடுத்திட்டியா?

திருடன் 2: இன்னிக்கு ராத்திரிதான் எடுக்கலாம்னு இருக்கேன்.

—ஞா. ரவி

''என்னைப் பார்த்தால் அப்படித் தோன்றுகிறதா உமக்கு?''

''இல்லை. ஆனால் நீ செய்கிற காரியத்தைப் பார்த்தால் அப்படித் தோன்றுகிறது. உன்னைக் கோதண்டத்தில் மாட்டத் துடித்துக் கொண்டிருக்கின்றன ஜெயசிம்மனின் கைகள்.''

''அதே கைகள் என்னை ஆவலுடன் வரவேற்கவும் செய்யும்.''

''ஏன், உன்மீது கொள்ளை ஆசையா சாளுக்கிய மன்னனுக்கு?''

''என்மீது ஆசையிருக்காது. ஆனால் வேங்கிநாட்டு அரியணைமீது ஆசையிருக்கிறது அவன் மருமகன் விஜயாதித்தனுக்கு. அந்த அரியணையை அவனிடம் ஒப்புவிக்க என்னால் முடியும்.''

சைவத் துறவியின் கண்கள் மிக அகலமாக விரிந்தன. அவன் விழிகள் வீசிய பார்வையிலே எண்ணற்ற உணர்ச்சிகள் பாய்ந்து நின்றன. நெடுநேரம் வரை அவரிடமிருந்து வார்த்தைகள் எதுவும் வெளியே வரவில்லை. வார்த்தைகள் வெளியே வந்தபோது, கடுமையாகவும் கோபமாகவும் நெருப்பைக் கக்கிக்கொண்டே வந்தன.

''அடப் பாவி கடைசியில் நீ இத்தனை அயோக்கியனா?'' என்று சைவத் துறவி கூவினார்.

அதுவரை மௌனமாக நின்று முத்துத்தேவன் கண்களில் தீப்பொறி பறந்ததன்றி அவன் வாளும் மெள்ள மெள்ளத் தரைப் பக்கத்திலிருந்து மேலே எழுந்தது. அந்தச் சந்தர்ப்பத்திலும் நிதானத்தை இழக்காத கரிகாலன், தன் பார்வையாலேயே முத்துத்தேவனை அடக்கிவிட்டு, சைவத்துறவியை நோக்கி, ''துறவியாரே! தங்களை விட நான் அயோக்கியனா?'' என்று வினவினான்.

''அதில் சந்தேகம் வேறா உனக்கு? நான் ஒற்றன்; அந்த முறையில் என் பணியை நிறைவேற்ற, எத்தனையோ துரோகங்கள் செய்கிறேன்; அப்படிச் செய்யலாம் என்பதற்கு நீ படித்த சாஸ்திரத்திலேயே இடமிருக்கிறது. ஆனால், உன்னைப்போல் நம்பிக்கைத் துரோகம் செய்பவனுக்கு எந்தவிதப் பிராயச்சித்தத்தையும் சாஸ்திரம் அளிக்கவில்லை,'' என்று மீண்டும் படபடப்பாகப் பேசினார் சைவத்துறவி.

''யாருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தேன்?'' என்று அமைதியை இழக்காமலே கேட்டான் கரிகாலன்.

ஆனால் அந்த அமைதியை அடுத்த வினாடி சுக்குநூறாக உடைத்தெறிந்த சைவத்துறவி, ''யாருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தேன் என்பதைவிட உன்னைக் கைது செய்ய உத்தரவிட்டது யார் என்று கேள்,'' என்று கூறினார்.

''சந்தேகமென்ன? ஜெயசிம்ம சாளுக்கியன்தான்.''

''உத்தரவிட்டது அவன்தான்; ஆனால் அந்த உத்தரவை இடத் தூண்டியது யார்?''

கரிகாலன் நிதானம் மெள்ள மெள்ளக் குலையலாயிற்று. தெளிவான அவன் சிந்தனையிலும் மெள்ள மெள்ளச் சந்தேகமும் குழப்பமும் சூழ்ந்து கொண்டன. ''யார் துறவியாரே?'' என்று கேட்ட குரலில் நடுக்கம் தெரிந்தது.

சைவத் துறவி ஆசனத்திலிருந்தபடியே தமது விழிகளை அவன்மீது நாட்டி, ''சொல்கிறேன், தைரியப்படுத்திக்கொள் கரிகாலா!'' என்றார்.

''சொல்லுங்கள்.''

''நிரஞ்சனாதேவி!''

சைவத் துறவியார் அந்தச் சொல்லை மெதுவாகத்தான் உச்சரித்தார். ஆனால் அந்தச் சொல்லின் ஒவ்வோர் எழுத்தும் அவன் சிந்தனையைப் பல அஸ்திரங்களைப்போலத் திடீரெனத் தாக்கின. அந்தத் தாக்குதலைச் சமாளிக்க மாட்டாத கரிகாலன், கண்களைச் சற்றே மூடினான். உலகமே கிறுகிறுவென்று சுழல்வது போலிருந்தது அவனுக்கு.

(தொடரும்)

# பூர்ணம் விசுவநாதன்

# லட்சுமி சாரதி

சந்திக்கிறார்கள்



*பூர்ணம் விசுவநாதனைக் கல்லூரி மாணவி லட்சுமி சாரதியும் சந்தித்து உரையாடினார்:*

**லட்சுமி சாரதி:** தனிக் குடித்தனம் நாடகத்தில் ரொம்ப சாதுவாக இருந்து கடைசியிலே பயங்கரமாகக் கோபம் வருகிற மாப்பிள்ளையாக நடித்திருக்கிறீர்களே? உங்களுடைய நிஜ சுபாவம் என்ன? எதெதற்கெல்லாம் கோபப் படுவீர்கள்?

**பூர்ணம் விசுவநாதன்:** கோபப்பட வேண்டிய குணம் ஒவ்வொரு மனிதனுக்கும் அவசியமாக இருக்க வேண்டியது என்று நான் நினைக்கிறேன். சில அநியாயங்கள் சமூகத்தில் நடக்கின்றன. அதற்காக நாம் சரியான படி கோபப்பட்டே ஆகவேண்டும். அதற்காகக் கிளர்ச்சிகளும் செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் அவை சரியாகாது. எங்கேயோ ராஜஸ்தானில் சதி என்ற மகாப் பெரிய கொடுமை நடந்திருக்கிறது. கற்காலத்தில் கடைப் பிடித்து வந்த ஒரு வழக்கத்தை இந்தக் காலத்திலும் சில ஜனங்கள் கொண்டாட விரும்புகிறார்கள் என்றால் நமக்கு ஆத்திரம் வரத்தானே செய்கிறது? எனக்குள்ளேயே இரண்டு பகுதிகள் உண்டு. பொதுவாக எல்லோரிடமும் இனிமையாகப் பழகும் சுபாவம் உள்ளவன் நான். கோபப்படுகிறேன் பேர்வழி என்று எடுத்தவுடனேயே வாசலில் வருகிற காய்கறிக்காரரிடம் எல்லாம் சண்டைக்குப் போக மாட்டேன். ரேடியோவில் நாடகங்கள் தயாரித்திருக்கிறேன். செய்திகள் வாசித்திருக்கிறேன். டி.வி. நாடகங்கள் தயாரித்திருக்கிறேன். இவற்றை மற்றவர்களுடன் சேர்ந்து தயாரிக்கும்போது உச்சரிப்பில் குறைபாடு வந்தால்கூட எனக்குக் கோபம் வந்துவிடும். வீட்டில் என் மனைவிகூட வேண்டாததற்கெல்லாம் நான் கோபப்படுகிறேன் என்று சொல்லுவாள். இல்லை, வேண்டியதற்குத்தான் இந்தக் கோபம் என்று வாதிடுவேன். ரேடியோவிலும், டி.வி.யிலும் இன்றைக்குத் தமிழ் உச்சரிப்புகள், முறையாகவே இல்லை. மெல்லின உச்சரிப்புக்கும் இடையின உச்சரிப்புக்கும் வித்தியாசம் தெரியவில்லை. முறைகேடான உச்சரிப்பு

# மன்னன் மகள்

## 40. கண்ணிலே ஒரு காட்சி கருத்திலே ஒரு புரட்சி

புறக்கண் மூடும்போது அகக்கண் விழித்துக்கொள்கிறது. அந்தக் கண் நம் சித்தத்திற்கு முன்னே எழுப்பும் சித்திரங்கள் பல. ஊனக்கண்ணால் பார்க்க முடியாத கோளங்களையும் பிண்டங்களையும் சிந்தனைப் பீடத்திலே கொண்டு வந்து நிறுத்தும் சக்தி அகக்கண்ணுக்கு உண்டு. புறக் கண்ணின் விழிப்பினால் உலக மாயையில் அறிவு சிக்கி விடுவதால், தெளிவாகச் சிந்திக்கும் சக்தியைச் சித்தம் இழந்துவிடுகிறது. ஆனால், புறக்கண் மூடியதும் ஒரு விநாடி சிந்தனையில் இருள் சூழ்ந்து, பிறகு அகக்கண் விழித்து அறிவுப் பொறிகளையும் ஒளிகளையும் வீசும்போது சிந்தனையில் எத்தனை எத்தனையோ மின்னல்கள், எத்தனை எத்தனையோ உண்மைகள், எத்தனை எத்தனையோ இந்திர ஜாலங்கள் எல்லாம், ஒன்றுடன் ஒன்று இணைந்து எழுந்து தாண்டவமாடுகின்றன. ஆகையால்தான் உண்மையை அறியக் கண்களை மூடித்தியானத்தில் உட்கார் என்று அறிஞர்கள் பணித்தார்கள். அந்த

சாண்டில்யன்



உபதேசத்தில்தான் எத்தனை உண்மை! அதுவரை கரிகாலன் சிந்தனைக்கு எட்டாத எத்தனை உண்மைகள் கண்களை மூடிநின்ற அந்தச் சில விநாடிகளில் அவன் அறிவுக்கு எட்டின.

''உன்னைச் சிறை செய்யத் தூண்டியது நிரஞ்சனாதேவிதான்!'' என்று சைவத் துறவியார் கூறிய மாத்திரத்தில், நிலை தடுமாறிக் கண்களை மூடிய அவனுக்கு ஒரு வினாடி உலகமே சுழல்வது போலென்ன, உலகமே இருண்டு விட்டது போலக்கூடத் தோன்றியது. சித்தத்தில் சூழ்ந்து நின்ற அந்தக் காரிருளிலே மெள்ள மெள்ள உதயமாயிற்று நிரஞ்சனாதேவியின் கண்கவர் உருவம். அத்தனை சோகத்திலும் அந்த உருவம் அவன் உடலெங்கும் மகிழ்ச்சி வெள்ளத்தைப் பாய்ச்சியதால், இன்பமும் துன்பமும் கலந்த உணர்ச்சிகள் எழுந்து அலை மோதவே, அடடா! இத்தனை அழகியான உனக்குத்தான் 'எத்தனை கல் நெஞ்சம்!' என்று அந்த எழிலுருவத்தை நோக்கி நொந்து கொண்டான் கரிகாலன்.

'நிரஞ்சனாதேவி! என் உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்ட நிரஞ்சனாதேவி! எந்த அரச மகளுக்காக நான் அரையன் ராஜராஜன் படைத்தளத்தையும் யானையின் தந்தத்தைவிட மென்மையான கரங்களைப் படைத்த செங்கமலச் செல்வியையும் உதறிவிட்டு வந்தேனோ, அந்த அரச மகள், யாருடைய தம்பியை வேங்கி நாட்டு அரியணையில் அமர்த்த எத்தனை எத்தனையோ சாகசக் காரியங்களையும் ராஜதந்திரங்களையும் செய்து வருகின்றேனோ அந்தக் கட்டழகி, எவளை என் இதய ராணியாக, எவளுக்காக அரையன் ராஜராஜன் போர்த் திட்டத்தையே தவிடு பொடியாக்கிவிட்டு வருகின்றேனோ அந்த இன்ப அரசி, அவளா என்னை சிறை செய்யச் சொன்னாள்?' என்று பித்தனைப்போல் திரும்பத் திரும்ப எண்ணமிட்ட அவன், அரசகுமாரி, வேங்கி நாட்டைச் சேர்ந்த உங்களுக்கு நன்றி என்ற வார்த்தைக்கு அர்த்தமே தெரியாதோ?' என்று உள்ளுக்குள்ளேயே வெறுத்துப் பேசிக் கொண்டான்.

இப்படிக் கரிகாலன் நீண்ட நேரம் கண்களை மூடி நிஷ்டையிலாழ்ந்து



விட்டதைக் கண்ட சைவத் துறவியார் முத்துத்தேவனைப் பார்த்து, ''ஏனப்பா, கரிகாலர் நிஷ்டையிலாழ்ந்து விட்டாரே!'' என்று வினவினார்.

அந்தக் கேள்விக்கு முத்துத் தேவன் பதில் சொல்லமாட்டாமல் திணறினாலும், அந்தக் கேள்வி ஏற்பட்டதன் காரணமாகக் கண்களைத் திறந்து கரிகாலனே பதில் சொல்லத் தொடங்கி, ''போலித் துறவியான உங்களுக்கு நிஷ்டையில் பரிச்சயமில்லாதிருக்கலாம். ஆனால் அதில் உண்மையாகவே ஈடுபடுகிறவர்களும் உலகத்தில் இருக்கிறார்களல்லவா?'' என்று கேட்டான்.

துறவியின் கண்களில் விஷமச் சிரிப்பு ஒன்று உதயமாயிற்று. ''அந்த மாதிரி உண்மை நிஷ்டையில் ஈடுபடுகிறவர்களில் தாங்களும் ஒருவர் போலிருக்கிறது,'' என்று விசாரித்தார் துறவியார்.

''ஏன் இருக்கக்கூடாது?''

''இருக்கலாம், இருக்கலாம். அதுவும் தேவி உபாசனை என்றால் நிஷ்டை பலமாகத்தானிருக்கும்.'' இதைச் சொன்ன துறவியார் சற்று வெளிப்படையாகவே நகைத்தார்.

அவர் பேசுவதன் அர்த்தத்தைக் கரிகாலன் தெளிவாகவே புரிந்து கொண்டாலும், புரியாதவனைப் போல் பாசாங்கு செய்து, ''துறவியாரே! தேவி உபாசனையா! என்ன உளறுகிறீர்?'' என்று கேட்டான், குரலில் சற்றுப் பொய்க் கோபத்தை வரவழைத்துக்கொண்டு.

''கரிகாலா! நான்தான் போலி என்றால், நீ என்னைவிடப் பெரிய போலியாயிருப்பாய் போலிருக்கிறதே? இது கூடவா எனக்குத் தெரியாது

பூட்ஸ்தானே கழற்றறேன். அதுக்குப் போய் இப்படி அலர்றீங்களே?

—செ. வேலாயுதம்

கரிகாலா? நிரஞ்சனாதேவியின் பெயரைக் கேட்டவுடன் தான் கண்களை மூடி அரைக்கணம் அசைவற்று நின்று விட்டாயே,'' என்று விளக்கிய துறவியார் இன்னொரு கேள்வியும் கேட்டார்: ''கரிகாலா அவளிடம் இத்தனை அன்பை வைத்திருக்கும் நீ, அவளுக்கு ஏன் விரோதியாகத் திரும்பினாய்?'' என்று வினவிக் கரிகாலனை உற்றுப் பார்த்தார்.

அதுவரை அசட்டையாகப் பேசிக்கொண்டிருந்த கரிகாலன் திடீரென்று சைவத்துறவியை நோக்கித் திரும்பி, ''என்ன! நான் அரசகுமாரியின் எதிரியா? பைத்தியமா உமக்கு?'' என்று வினவினான்.

''பைத்தியம் எனக்கல்ல கரிகாலா! உனக்கோ அல்லது நிரஞ்சனா தேவிக்கோ. யாருக்கென்று நிச்சயமாக எனக்குத் தெரியவில்லை,'' என்றார் சைவத் துறவியார்.

''நீர் சொல்வது விளங்கவில்லை.''

''நீ நிரஞ்சனாதேவியிடம் ஆழ்ந்த அன்பு வைத்திருக்கிறாய் என்பது தெரிகிறது. ஆனால், நிரஞ்சனா தேவியோ உன்னைத் தன் பரம விரோதியாக மதிக்கிறாள்.''

''உமக்கெப்படித் தெரியும் அது?''

''என்னிடமே சொன்னாள்.''

''என்ன சொன்னாள்?''

''நீ பெரிய நயவஞ்சகன் என்று.''

''காரணம் சொன்னாளா?''

''சொல்லவில்லை; ஆனால் நானாக ஊகித்தேன்.''

கரிகாலன் அதுவரை கையில் பிடித்திருந்த வாளை உறையில் போட்டு, துறவிக்கு வெகு அருகில் வந்து, கூரிய தன் கண்களை அவர் முகத்தின்மீது பதியவிட்டுக் கேட்டான். ''என்ன ஊகித்தாய் ஜெயவர்மா?'' என்று, அதுவரை கையாண்டு வந்த போலி மரியாதையையெல்லாம் காற்றில் பறக்க விட்டு.

சேரர் நாட்டு ஒற்றனான ஜெயவர்மனும் கரிகாலன் பார்வையைக் கண்டு சிறிதும் தளராமல் தன் கண்களை அவன் கண்களோடு கலக்கவிட்டான். பிறகு தன் தோள் மீதிருந்த கையை எடுத்துக் கீழே எறிந்துவிட்டுச் சற்றுத் தள்ளி நின்று கரிகாலனை ஏற இறங்க ஒரு முறை பார்த்தான். பிறகு சொன்னான். ''கரிகாலா! நீ நிரம்பச் சாஸ்திரங்களைப் படித்திருக்கலாம். ஆனால் உலக அனுபவம் உனக்கு இன்னும் போதாது. இரண்டும் இரண்டும் நான்கு என்று கூட்டக்கூட உனக்குத் தெரியவில்லையே அப்பா!'' என்று.

''நீதான் கூட்டிச் சொல்!'' என்றான் கரிகாலன்.

சைவத் துறவியார் கரிகாலனை நோக்கி, ஓர் இகழ்ச்சிச் சிரிப்பை உதிரவிட்டுப் பேசினார். ''சொல்கிறேன் கேள்: வேங்கி நாட்டில் நாம் பிரிந்தபிறகு முதன்முதலாகப் பிரும்ம மாராயன் மாளிகையில் உன்னைச் சந்தித்தேன். அது பெரிய சதிக்கூடம் என்றும், அங்கு நடக்கும் சதியில் வேங்கி நாட்டு அரசமகள் நிரஞ்சனா தேவிக்குப் பங்கு உண்டென்றும் வதந்தி பலமாக இருந்தது. நீ உன் மோதிரத்தைக் காட்டியதும், பிரும்ம மாராயன் என் வார்த்தைகளைப் புறக்கணித்து உன்னை உள்ளே அழைத்துச் சென்றபோது, அவருக்கு உன்னிடத்தில் ஏற்பட்டுள்ள நம்பிக்கையைப் பார்த்தேன். அன்றிரவு நீ என்னைத் தப்புவிக்கச் சிறைச்சாலைக்கு வந்தபோது காவலன் நடந்துகொண்ட முறையைக் கவனித்தேன். சரி, நீ பிரும்ம மாராயன் நம்பிக்கைக்குப் பூரணமாகப் பாத்திரமாகிவிட்டாய் என்று உணர்ந்தேன். என்னைத் தவிர இன்னொருவனாயிருந்தால் சிறையிலிருந்து தப்பிய பின் வேங்கி நாட்டை விட்டு ஓடியே இருப்பான். ஆனால் நான் அப்படிச் செய்யவில்லை. அங்கிருந்தே நடந்ததையெல்லாம் விசாரித்தேன்.

ஜெயசிம்மன் உன்னை அரையன் ராஜ ராஜன் மகனென்று பறைசாற்றியது, பிறகு உன்னை இஷ்டப்படி அரண்மனையில் உலாவவிட்டது எல்லாவற்றையும் அறிந்தேன். அதிலிருந்து சில முடிவுகளுக்கு வந்தேன்.''

''ஓகோ!''

''ஆம்! நீ ஜெயசிம்மன் நம்பிக்கைக்கும் மட்டுமின்றி, பிரும்ம மாராயன் நம்பிக்கைக்கும் பாத்திரமாயிருக்கிறாய். பிரும்ம மாராயனோ அரசகுமாரியுடன் சேர்ந்து ஜெயசிம்மனை ஒழிக்கச் சதியிலிறங்கியிருக்கிறான். ஆகவே எதிர்ப்பட்ட இரு கட்சியின் நம்பிக்கைக்கும் பாத்திரமாய் இருப்பவன், ஒன்று பெரிய அயோக்கியனாய் இருக்க வேண்டும்; அல்லது ஒரு பக்கத்துக்கு நன்மை செய்ய அயோக்கியனாய் நடிக்க வேண்டும். இந்த இரண்டில் நீ எப்படி என்று என்னால் ஊகிக்க முடியவில்லை.''

''பிறகு?''

''ஊகித்தவர் இருவர். ஜெயசிம்மன் ஒற்றனான அரிஞ்சயனை நீ கடத்திச் சென்றதால், ஜெயசிம்மனும், உன்னை அயோக்கியனாக நினைக்கிறான். அரிஞ்சயனைத் தன் ஆத்ம நண்பனென்று நினைத்திருப்பதால், அரசகுமாரியும் உன்னை அயோக்கியனாக நினைக்கிறாள்...'' என்ற துறவியாரின் பேச்சை, ''ஆகவே என்னைச் சிறை செய்வதில் இரண்டு பேருக்கும் மகிழ்ச்சி,'' என்று கரிகாலன் பூர்த்தி செய்தான்.

''ஆம் கரிகாலா! இந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்ய உத்தேசிக்கிறாய்? என்னுடன் சமரசம் செய்துகொண்டு, சுதந்திர பறவையாகத் திரிய உத்தேசமா? அல்லது என்னுடன் வேங்கி நாட்டுக்கு வந்து கோதண்டத்தில் பிராணனை விட உத்தேசமா?'' என்று மீண்டும் பழைய வியாபாரத்துக்கு வந்தார் துறவியார்.

அவர் கேள்வி கேட்கு முன்பாகவே அது விஷயமாக ஒரு முடிவுக்கு வந்துவிட்ட கரிகாலன், ''ஜெயவர்மா, உன்னுடன் என்னை வேங்கி நாட்டுக்கு அழைத்துச் செல்,'' என்றான்.

சேர நாட்டு ஒற்றனும் கரிகாலனும் பேசிக்கொண்டிருந்ததை மௌனமாக நின்று அதுவரை கேட்டுக் கொண்டிருந்த முத்துத்தேவன், ''கரிகாலா! சுவாமியார் சொல்வது போல் வேங்கி நாட்டில் கழுத்துக்குக் கயிறு காத்துக் கொண்டிருந்தால்...'' என்று ஆரம்பித்தான்.

''உயிர் போகும்! அவ்வளவு தானே முத்து,'' என்றான் கரிகாலன்.

''போக்கிக்கொள்ள வேண்டியது அவ்வளவு அவசியமா?'' என்று வினவினான் முத்துத்தேவன்.

''அவசியமில்லை. என் உயிரை அவ்வளவு சுலபத்தில் நான் இழக்க மாட்டேன். பயப்படாதே,'' என்று அவனுக்குத் தைரியம் சொல்லிய கரிகாலன், மீண்டும் சைவத் துறவியாரை நோக்கிப் பழைய முறையில் பேசத் தொடங்கி, ''சுவாமி! வேங்கி நாட்டுக்குப் புறப்பட ஏற்பாடு செய்யுங்கள். இன்னும் சில நிமிடங்களில் நாங்கள் சித்தமாகி விடுவோம்,'' என்று கூறினான்.

சைவத் துறவியார் அவன் போக்குக்குக் காரணத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் விழித்தார். ''துறவியாரே! விழிக்க வேண்டாம். வேங்கி நாட்டில் எனக்கு எத்தகைய ஆபத்தும் நேரிடாது. புறப்படச் சித்தமாகுங்கள்,'' என்று மீண்டும் கரிகாலன்



''டிவி உள்ளாற எலி இருக்கு.''

''இப்ப எதுவும் செய்ய வேண்டாம். நாளைக்கு நாடகம் போடறப்ப சகிக்காம அது வெளியே வரும். அப்ப அடிச்சுடலாம்.''

—ஹரிதா

வற்புறுத்திக் கூறவே, ஏற்பாடுகளைச் செய்யத் துறவியார் கீழே சென்றார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கோட்டை வாசலில் புரவிகள் சித்தமாக நின்றன. சைவத் துறவியார் கரிகாலனுக்கும் முத்துத்தேவனுக்கும் முன்னும் பின்னும் இரண்டு இரண்டு வீரர்களைக் காவல் புரியவிட்டுத் தான் சில வீரர்களுடன் பின்னால் சென்றார். சுமார் மூன்று நாள் துரிதமாகப் பயணம் நடந்தது. வழியில் நீராடி உண்டியருந்தச் சிறிது சிறிது நேரத்தைத் துறவியார் வழங்கினாரேயொழிய, எந்த இடத்திலும் தயக்கமில்லாமல் கரிகாலனையும் முத்துத் தேவனையும் வெகு பத்திரமாக வேங்கி நாட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தார். மூன்றாவது நாள் அந்தி நேரத்தில் பிரும்மாண்ட மான வேங்கி நாட்டுச் சாளுக்கியர்களின் கோட்டை அவர் கண்முன்னே எழுந்தது. துறவியார் அந்தக் கடைசி விநாடியிலும் கரிகாலன் மனத்தைக் கலைக்கப் பார்த்து, ''கரிகாலா! வேண்டாம். இந்த இளவயதில் பிராணனை விடாதே. இனிமேல் உன் பொய் ஜெயசிம்மனிடம் பலிக்காது. இப்பொழுதுகூடச் செங்கதிர் மாலையை என்னிடம் ஒப்படைப்பதாக ஒரு வார்த்தை சொல். கண்ணிமைக்கும் நேரத்தில் உன்னை விடுதலை செய்கிறேன்,'' என்று கெஞ்சினார்.

கரிகாலன் கண்கள் கோட்டை வாயிலை ஒருமுறை நோக்கின. பிறகு அவன் பெரிதாகச் சிரித்தான். ''எதற்காகச் சிரிக்கிறாய் கரிகாலா?'' என்று கோபத்துடன் கேட்டார் சைவத் துறவியார்.

''சுவாமி! விடுதலை யாருக்குத் தேவை?''

''ஏன், உனக்குத்தான்.''

''நான் சிறைப் பட்டிருந்தாலல்லவா எனக்கு விடுதலை வேண்டும்?''

''இப்போது சுதந்திர மாயிருக்கிறாயோ?''

''சந்தேகமென்ன?''

சைவத் துறவியார் கரிகாலனை உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வையின் பொருளைப் புரிந்துகொண்ட கரிகாலன், ''துறவியாரே! எனக்குப் பைத்தியமில்லை. பைத்தியம் உமக்குத்தான்,'' என்றான்.

# எஸ்.வி. சேகரால்

எஸ்.வி. சேகரின் 'எல்லாமே தமாஷ் தான்' நாடகத்தில் நடிக் கிறார் சீனா.

நாடகத்தின் கிளை மாக்ஸில் கோவிலுக்கு வேண்டுதலுக்காக இவருக்கு மொட்டை அடிப்பதாக வருகிறது. அதற்காக இவர் உண்மையாகவே மொட்டை அடித்துக் கொண்டு நடிக்கிறார். ஆரம்பத்தில் மொட்டை அடிக்க விருப்பம் இல் லாததால் விக் போட்டு நடிக்க முயற்சித்தாராம். ஆனால் எஸ்.வி. சேகர் விடவில்லை. 'நடிக்க இஷ்டமிருந்தால் மொட்டை அடி, இல்லா விட்டால் வேறு யாருக் காவது இந்தப் பாத் திரத்தைக் கொடுத்து விடுவேன்,' என்றவுடன் உண்மையாகவே மொட்டை அடிக்கச் சம்மதித்தாராம் சீனா.

நாடகங்களுக்காக வெளியூர் சென்றால் அங்கேயுள்ள கோவில் களில் மொட்டை அடித்துக் கொள்கிறார் சீனா. இப்படியாக இது வரை இருபத்தைந்து முறை மொட்டை அடித் திருக்கிறார்.

—செல்லப்பா



''எனக்கா!'' ஆச்சரியத்தால் வாயைப் பிளந்தார் துறவியார்.

''ஆமாம் துறவியாரே! உமக்கு அரசர்கள் வழக்கு தெரியுமல்லவா?'' என்று கேள்வியை வீசினான் கரிகாலன்.

அவன் என்ன சொல்கிறானென்பதைப் புரிந்துகொள்ள முடியாத துறவியார், ''ஆமாம் தெரியும்!'' என்றார், பதில் சொல்லியாகவேண்டும் என்பதற்காக.

''அரசர்கள் வழக்குப்படி தூதனைக் கைது செய்ய முடியுமா?''

''முடியாது.''

''அப்படியானால் என்னைக் கைது செய்ய முடியாது.''

''ஏன்? நீ...?''

''சோழ நாட்டுத் தூதன். பிரும்ம மாராயருக்குப் பதில் வேங்கி நாட்டில் இனி நான்தான் தூதன்.''

துறவியார் ஒரு கணம் கல்லாய்ச் சமைந்தார். பிறகு 'இவன் பொய்க்கு எல்லையே இல்லையோ' என்று வியந்தார்.

''துறவியாரே! நான் சொல்வது பொய்யல்ல. என்னுடன் வாரும். சிறிது நேரத்தில் புரிந்து கொள்வீர்!'' என்று சொல்லிய கரிகாலன், கோட்டைக்குள் புரவியைத் தட்டி விட்டான். சைவத் துறவியாரும் மற்ற வீரர்களும் அவனைத் தொடர்ந்து சென்றார்கள். கோட்டை வாசலிலிருந்து நேராகப் பிரும்ம மாராயன் மாளிகைக்குச் சென்ற கரிகாலன், முதலில் முத்துத் தேவனை மாளிகைக்குள்ளே அனுப்பிக் காரியஸ்தனை வரவழைத்தான். முத்துத் தேவனால் விஷயத்தை உணர்ந்துகொண்ட காரியஸ்தன், அவசரம் அவசரமாக வெளியே ஓடி வந்து, ''பிரபு! வரவேண்டும். பிரும்ம மாராயர் தங்கிய அறை சுத்தமாகத் தானிருக்கிறது. தங்களது நீராட்டத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் ஒரு விநாடியில் செய்து முடித்துவிடுகிறேன்,'' என்று கரிகாலனை மிகுந்த பணிவுடன் வரவேற்றான்.

கரிகாலன் சைவத் துறவியாரை நோக்கித் திரும்பி, ''துறவியாரே! இனி என்ன செய்ய உத்தேசம்? என்னைச் சிறைக் கூடத்தில் அடைக்க உத்தேசமா? அல்லது இங்கேயே விட்டுச் செல்ல உத்தேசமா?'' என்று வினவினான்.

இதைக் கேட்ட காரியஸ்தன் பதைபதைத்துப் போனான். ''என்ன! சோழ நாட்டுத் தூதரைச் சிறை செய்வதா? அப்படிச் சிறை செய்வதானால் இங்கு நூறு சோழ நாட்டு வீரர்களைக் கொன்ற பிறகுதான் அந்தக் காரியத்தைச் செய்ய முடியும்,'' என்று கூறியதன்றி, கையைத் தட்டி ஏதோ சமிக்ஞையையும் செய்யவே, அடுத்த வினாடி பூரண ஆயுதம் தரித்த பத்துப் பன்னிரண்டு சோழ நாட்டு வீரர்கள் வெகு துரிதமாக வெளியே வந்து, அங்கிருந்தவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''துறவியாரே, பார்த்தீரா?''

துறவியார் என்ன சொல்வதென்றறியாமல் மென்று விழுங்கினார். கரிகாலன் சோழ நாட்டு வீரர்களை மாளிகைக்குள் செல்லும்படி கட்டளையிட்டுவிட்டுத் துறவியாரைத் தனியே அழைத்துச் சென்று, ''சுவாமி! ஜெயசிம்மனால் தங்களுக்கு எந்தத் தீங்கும் வராது. நான் இந்த ஊரைவிட்டு ஓடமாட்டேன். பயப்பட வேண்டாம். எந்த நிமிஷமும் தாங்கள் இந்த மாளிகைக்கு வந்து என்னைப் பார்க்கலாம். நாளை நானே

ஆறு வித்தியாசம் விடை:



ஜெயசிம்மனைச் சந்திக்கிறேன்,'' என்று உறுதி கூறினான்.

''உன் உறுதியை நான் எப்படி நம்புவது?''

''நம்புங்கள்; அத்துடன் இன்னோர் உறுதியையும் கொடுக்கிறேன். என்னுடைய வாழ்க்கைப் பணி நிறைவேறி விட்டால், சேரனுடைய செங்கதிர் மாலையையும் உம்மிடம் ஒப்படைக்கிறேன்.''

''உண்மையாகவா?''

''என் வாளின்மேல் ஆணையாக!''

''இப்பொழுது நான் என்ன செய்யவேண்டும்?''

''வீரர்களை அனுப்பிவிடும்.''

''சரி.''

''பிறகு என்னை உம்முடன் அழைத்துச் சென்று, அரசகுமாரியின் நந்தவனத்தில் விட்டுவிடும்.''

''அது எப்படி முடியும்?''

''என்னை உமது கைதியாக அரண்மனை வாசலுக்குள் அழைத்துச் செல்லும். பிறகு நீர் அரண்மனைக்குள் செல்லும். நான் தோட்டத்திற்குள் செல்கிறேன.''

''பெரிய ஆபத்து கரிகாலா.''

''நம் இருவர் பிழைப்புமே நித்தியகண்டம் பூர்ண ஆயுசுதானே சுவாமி!''

இறுதியில் அவன் ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்ட துறவியார், வேங்கி வீரர்களைச் சென்றுவிடுமாறு கட்டளையிட்டார். கரிகாலனும் முத்துத் தேவனைத் தான் வரும்வரை மாளிகையில் இருக்கச் சொல்லிவிட்டுத் துறவியாருடன் சென்றான். கரிகாலன் திட்டப்படியே சகலமும் நடந்தது.

சுவாமியாரை நந்தவனத்தின் முகப்பிலே பிரிந்த கரிகாலன், நேரே வசந்த மண்டபத்தை நோக்கிச் சென்றான். ஆனால், அவன் கடைசி வரை செல்லவில்லை. நந்தவனத்தின் இடையே அல்லித் தடாகத்தின் கரையிலே அவன் கண் முன்னே எழுந்தது ஒரு காட்சி, அதைக் கண்டதும் அவன் கருத்திலேதான் எத்தனை புரட்சி!

(தொடரும்)

## அன்புடன் அறுக்கிறோம்

வாரியார் சமீபத்தில் ஆங்கிலப் படம் பார்க்கப் போனார்.

என்ன படம்?

ஜங்கிள் 'வாரியர்'ஸ்!

—பிரியாபாலு

கீரை வாங்கப் போன அப்பா வரும்போது கீரையைத் தின்னுகிட்டே வந்தார்.

ஏன்?

வரும்போது கால்நடையா வந்தார்.

—ராதா வாசுதேவன்

கூண்டிலிருந்த புலி தப்பிச்சா, நேரா இலங்கைக்குப் போகும்.

ஏன்?

அதுதான் விடுதலைப் புலியாச்சே!

—ஸ்ரீமன்

தன்வினை தன்னைச் சுடும். ஏன் தெரியுமா?

தெரியலையே?

தன்வினை ரொம்ப ஹீட்டா இருக்கும்.

—ஜி.கே. கவிதா

ஒரு 'கடி' ஜோக் சொல்லுங்க, பார்க்கலாம்?

ஒரு கடி ஜோக்.

—கே.ஏ. ராமன்



# மன்னன் மகள்

12-11-87

சாண்டில்யன்

## 41.
## 'வஞ்சகன் நீ!'

பாவலர் பாட்டிசைப்பதற்கும் காதலர் கருத்துக் குலைவதற்கும் காரணமான தன் வெண்ணிறக் கிரணங்களின் பால் வலையை வெண்மதி பாரெங்கும் விரிந்திருந்தாலும், வேங்கி நாட்டின் அரண்மனைப் பூங்காவிலே அதன் சக்தி பன்மடங்கு அதிகப்பட்டுக் கிடந்தது. கோட்டைச் சுவரின் தோட்டக் கதவுக்கு அருகாமையில் அடர்த்தியாக வளர்ந்திருந்த உயர்ந்த மரங்களின் முன் வரிசையிலிருந்த பாரிஜாதச் செடிகள் தங்கள் மலர்களை வெள்ளை வெளேரெனத் தரையில் உதிர்த்திருந்தாலும்; அந்த வெண்மையைக்கூட வெண்ணிலவு ஓரளவு குறைத்திருந்ததால், அந்த மலர்களின் இதழ்கள் பனியில் வைக்கப்பட்ட வெள்ளிக் கட்டிகளைப் போல் சற்றே ஒளி மங்கியும்; அந்த மங்கலின் காரணமாக மிதமிஞ்சியே மயக்கும் சக்தியையும் பெற்றும், விண்ணை நோக்கி நகைத்துக் கொண்டிருந்தன. அந்தச் செடிகளுக்குச் சற்று அப்பால், இலந்தை மரத்தின் முட் கிளைகளில் தொற்றி ஏறி; காற்றில் மெல்ல ஆடிக் கொண்டிருந்த நித்திய மல்லிகைக் கொடியின் நீண்ட மலர்கள் மட்டும் சந்திர கிரணங்களால் முன்னிலும் அதிக வெண்மையை அடைந்து, காற்று அதிகமாக வீசும் போதெல்லாம் வெளியே கொத்துக்

காத்தாகத் தலையை நீட்டி, வண்மையிழந்து தரையில் கிடந்த ாரிஜாத மலர்களை நோக்கிப் ரிகசித்து, பரிகசித்து, மீண்டும் பச்சைக் காடிகளுக்கிடையே பதுங்கிக் காண்டன. நந்தவனத்தின் டர்த்தியான அந்தப் பகுதியிலிருந்த சண்பக மரங்கள் சில தங்கள் பான்னிற மலர்களை ஏராளமாகத் ரையில் உதிர்த்திருந்தன. அந்த மலர் ளில் பல கீழேயிருந்த முட்புதர்களில் தாற்றிக் கொண்டும், மரத்தின் கீழ்க் நமை தட்டிக் கிடந்த இருளின் ாரணமாக அடியோடு கண்ணுக்குத் தரியாமல் மறைந்தும் கிடந்தாலும், கெரம்மியமான சுகந்தத்தை நந்தவனம் ழுவதும் பரப்பித் தங்கள் ருப்பிடங்களைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. வசந்த மண்டபத்தின் கப்பிலே இருந்த கொடி சம்பங்கி லர்களும் தங்கள் பச்சை உடலைக் ாற்றில் அசைத்து மஞ்சள் வாய் திறந்து கைத்து எத்தனை நறுமணம் முப்பினாலும், உயர்ந்த மரங்களில் ஷபித்ததால் இறுமாப்படைந்திருந்த சண்பக மலர்கள் சம்பங்கி ாசனையைத் தலை கிளப்ப விடாமல் டித்து, தங்கள் ராஜ்யத்தையே அந்த ந்தவனம் பூராவிலும் ஏற்படுத்திக் கொண்டிருந்தன. அந்த அரசாட்சிக்குக் ட்டியம் கூறிக் குயிலினங்கள் சில ரங்களிலிருந்து 'கூ கூ'வென இன்னிசை ளப்பின.

கரிகாலன் கருத்தை மயக்க யற்கையின் இந்த அஸ்திரங்களே போதுமே; அப்படியிருக்க, விதி தற்காக அந்தப் பெரிய மோகனாஸ் ரத்தை எடுத்து அவன் கண் முன்பாக வீச வேண்டும்? அழகுகளை அள்ளி வீசிக் கொண்டிருந்த அந்த இன்பச் சூழ்நிலையிலே, நந்தவனத்தின் நடுவிலே ருந்த அல்லித் தடாகத்தின் கரையிலே, பசும்புல் விரித்திருந்த மரகதப் பாயிலே, யற்கை வீசிய மோகனாஸ்திரம் போலும், சற்றே அப்பால் தோகையை விரித்துப் படுத்துத் தன்னை உற்று நோக்கிக் கொண்டிருந்த ஆண் மயிலுக்குப் பெரும் போட்டி போலும், சேலையின் அடிப்பாகம் லேசாக அலைந்து கிடக்கப் பேரெழிலுடன் படுத்திருந்தாள் விமலாதித்தன் மகள் ரஞ்சனாதேவி.

இடது கையைத் தலைக்குக் கொடுத்துத் தூக்கி, உடலை





ஒருக்களித்து அல்லிக் குளத்திலே கண்களை நாட்டிப் படுத்திருந்ததன் விளைவாக, அவள் உடல் எழிலின் பாகுபாடுகளைக் கவனித்த கரிகாலன், உலகத்தை அழகுபடுத்த மலைகளையும் பள்ளத்தாக்குகளையும் இயற்கை சிருஷ்டித்திருக்கும் காரணத்தை நன்றாகப் புரிந்துகொண்டான். அவளையும் அவளுக்கு அப்பால் அல்லித் தடாகத்தின் மற்றொரு வளைவிலே படுத்திருந்த மயிலின் விரிந்த தோகையிலிருந்த கண்களையும் பார்த்த கரிகாலன், மன்னன் மகளின் கருமை பாய்ந்த மலர்விழிகளுக்கு முன்னால், இத்தனை கண்களும் என்ன செய்ய முடியும் என்றே எண்ணினான். 'தோகையில் கண்கள் ஏராளமாக இருக்கின்றனவே என்று இறுமாப்புக் கொள்ளாதே மயிலே! மன்னன் மகளின் எழிலை ஆராயும் திறனுள்ளவனுக்கு இந்த மாதிரி வண்ணச் சுழிகள் ஆயிரமிருப்பது புலப்படும்' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

அவள் படுத்திருப்பதைத் தூரத்தில் கண்டதால் மெள்ள ஓசைப் படாமல் அவள் பின்புறத்தே கரிகாலன் வந்து நின்றதாலும், உள்ளத்தே ஏதோ எண்ணங்கள் ஓடியதால் சித்தத்தை எங்கெங்கோ அலைய விட்டுக் கொண்டிருந்ததாலும், பின்னால் ஓர் ஆண்மகன் நிற்பதை அறவே அறியாமலும், அவன் தன்னை உற்று உற்றுப் பார்த்து அலசி ஆராய்ந்து விநாடிக்கு விநாடி உன்மத்தம் ஏறி, கருத்து அடியோடு குலையும் நிலையை அடைந்துகொண்டிருக்கிறான் என்பதை உணராமலும், இரண்டு விநாடிகளுக் கொருமுறை உடலை அசைத்துக் கொடுத்துக் கொண்டும், தரையில் புற்களுக்கிடையில் கிடந்த சிறு கற்களை வலது கையில் எடுத்து அவ்வப்பொழுது

இது திருச்சி பெரிய கடை வீதியில் ஒரு பலகாரக் கடையில் கர்ணப்பட்ட வாசகம்:

—பா. நடராஜன்

அல்லிக் குளத்தில் எறிந்துகொண்டும் படுத்திருந்தாள் அந்தப் பேரழகி. அவள் அழகிய உடல் சில வேளைகளில் அசைந்தும் சில வேளைகளில் அளவுக்கு அதிகமாகப் புரண்டும் கிழேயிருந்த பசும்புல் தரையில் லாவண்ய அம்சங்களை அடிக்கடி படிய விட்டுக் கொண்டிருந்ததைக் கவனித்த கரிகாலன், அந்தப் புற்றரையாகத் தானிருக்கக் கூடாதா என்று எண்ணிப் பரிதவித்தான். அந்தப் பரிதவிப்பிலிருந்து விடுதலையை அடைய அவள்மீதிருந்த கண்களை அகற்றி, அல்லித் தடாகத்திலே கண்களைப் பதியவிட்ட கரிகாலனுக்குச் சாந்தியை அளிப்பதற்குப் பதிலாக அல்லிக்குளம் அல்லலையே அளித்தது. அந்தத் தடாகத்திலே படர்ந்திருந்த பல அல்லி மலர்களிடமிருந்து பிரிந்து நின்று கரையின் ஓரத்திலே பச்சைப் பசேலெனப் படர்ந்திருந்த பாசியின் மத்தியிலே கதிரவன் மறைவால் முகங்குவித்து நின்றிருந்த இரு தாமரைகளையும், கரையிலே பாசியை விடப் பச்சையாகப் படர்ந்திருந்த பசுந்தரையிலே படுத்துக் கிடந்த எழிலுடலிலே வளைந்திருந்த வனப்பின் பகுதிகளையும் கவனித்த கரிகாலன், 'இந்த அழகுக்கு அது எப்படி ஈடாகும்' என்று எண்ணினான். அந்த உவமையும் உவமைக்குக் காரணமும் தன் கண்ணெதிரே நின்றதாலும், தன் மனத்தைப் பெரிதும் அலைக்கழித்ததாலும் பெருமூச்சொன்றையும் விட்டான்.

அதே சமயத்தில் அல்லிக் குளத்தைப் பார்த்துக் கொண்டிருந்த நிரஞ்சனா தேவியும் நீண்டதொரு பெருமூச்சு விட்டாள். அந்தப் பெருமூச்சில் சோகம் கலந்திருப்பதைக் கவனித்த கரிகாலன், அவள் முகத்திலும் அந்தச் சோகக் குறி பூரணமாயிருந்ததைக் கண்டான். பெருமூச்சு விட்டதால் அவள் உடல் சற்று அதிகமாகவே எழுந்து தாழ்ந்ததைப் பார்த்த கரிகாலன், அவள் சித்தத்தைச் சோகம் அளவுக்கு அதிகமாகவே ஆட் கொண்டிருந்ததைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான். அப்படிப் புரிந்துகொண்ட போதிலும் அவன் இதயத்திலே அவள் சோகத்தைக் கண்டு பரிதாபம் ஏற்படவில்லை. ஆனால், அவள் உடல் எழுந்து தாழ்ந்ததால் அவள் எழிலிடங்களில் ஏற்பட்ட அசைவுகள் அவன் இதயத்துக்குத் தாபத்தையே அளித்தன.

காமத்துக்கு இலக்காகிறவனுக்குத்தான் எத்தனை கடின இதயம்! ஆனால் தான் கடினப்பட்டு விட்டதை அந்த இதயம் ஒப்புக்கொள்கிறதா? காதல் சரித்திரத்திலேயே அதுதான்



# இலவசம்!

ஒவ்வொரு பாருடன்
ஒரு தரமான
லேகக் பென்சில்

FREE WITH Total DETERGENT BAR

## டோட்டல்

நீலநிற டிடர்ஜெண்ட் சலவை பார்




தயாரிப்போர்: கர்நாடகா சோப்ஸ் & டிடர்ஜெண்ட்ஸ் லிமிடெட்
விற்பனை ஏற்பாடு: மைசூர் சேல்ஸ் இன்டர்நேஷனல் லிமிடெட்

MCA/TDB/56/TAM-R

கிடையாதே! அந்தத் தருணத்தில் கரிகாலன் இதயத்திலே அனுதாப மென்னும் போர்வையிருந்ததேயொழிய உண்மையில் காமதாபமே நிரம்பிக் கிடந்தது. அவள் உடலின் ஒவ்வொரு பகுதியையும் கண்கள் ஆராய்ந்தன. கண்கள் ஆராய்ந்த விஷயங்களைக் கருத்து அலச முற்பட்டது. இந்த ஆராய்ச்சியாலும் அலசலாலும் உணர்ச்சி வெள்ளம் உடலெங்கும் பாய்ந்து பேரலைகளாக மாறி, கரிகாலனைப் பேயாட்டமாக ஆட்டிக் கொண்டிருந்தது. ஒருக்களித்துப் படுத்த அந்த நிலையில் அவள் உடலில் உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை எத்தனை வளைவுகள்! எத்தனை குறுகல் கட்டங்கள்! எத்தனை விஸ்தாரப் பிரதேசங்கள்! எத்தனை மலர்கள்! இயற்கை ஒவ்வொரு புஷ்பச் செடிக்கும் ஒவ்வொரு புஷ்பத்தைத்தான் கொடுத்திருக்கிறது; ஆனால் பெண்களிடம் சகல புஷ்பங்களையும் வாரி இறைத்து அவர்களைப் புஷ்பச் சோலையாக அடித்திருப்பது ஏன்? இப்படியெல்லாம் ஏதேதோ நினைத்துக் குலைந்திருந்த கரிகாலன் வரவை மன்னன் மகள் அறியாவிட்டாலும், கழுத்தை அப்படியும் இப்படியும் ஆட்டிப் பார்த்துக் கொண்டிருந்த மயில் பார்த்து விடவே, அது தோகையை ஓர் உதறல் உதறிக்கொண்டு எழுந்து புது மனிதனைக் கண்ட காரணத்தாலோ என்னவோ ஒரு முறை இரைந்து கூவியது.

அபசுரத்தின் சக்தி அளவிட முடியாததல்லவா? இயற்கை அது வரையில் சிருஷ்டித்த இந்திர ஜாலங்களையெல்லாம் மயிலின் அந்த ஓர் அபசுரக் குரல் சிதற அடித்து விட்டதாலும் அது எதிர்த் திசையை நோக்கிய காரணத்தாலும் சட்டென்று எழுந்து உட்கார்ந்துகொண்ட நிரஞ்சனா தேவி மருண்ட தன் விழிகளைப் பின்புறம் திருப்பினாள். சாதாரணமாகக் கருணை பொங்கி வழியும் அந்த விழிகளில், திரும்பிய சில விநாடிகளுக்குள்ளாகப் பலவிதப் பார்வைகள் புளிச்சுப் பளிச்சென்று தோன்றி மறைந்தன. ஓர் ஆடவன் தன்னைப் படுத்த நிலையில் பார்த்து விட்டானே என்பதால் வெட்கம்; அப்படிப் பார்த்தவன் கரிகாலன் என்பதால் ஒரு கணம் உள்ளூர உவகை; அடுத்த கணம் தன்னை வஞ்சித்த அயோக்கியன் தன் முன்னே வந்து நிற்கிறானே என்பதால் சீற்றம். இத்தனை உணர்ச்சிகளும் மின்னல் வேகத்தில் உள்ளே எழுந்ததால் அவை பார்வையிலும் மாறி மாறி உதயமாகி மறைந்தன. இறுதியில் சீற்றமே கண்களில் தேங்கி நின்றது. ஆனால் உள்ளே எழுந்த சீற்றத்தை மன்னன் மகள் ஓரளவு அடக்கிக் கொண்டதால், கண்களில் அதிகச் சீற்றம் புலப்படாமல், உள்ளே கொந்தளிக்கும் தீப்பிழம்பு இருந்தாலும் லேசாகப் புகையை வெளிக்காட்டும் எரிமலையைப்போல் விளங்கினாள் அவள்.

அவனைக் கண்டதும் அவள் கரங்கள் புடவையை இழுத்து உடலை நன்றாக மூடிக் கொண்டன. அரியாசனத்தில் உட்கார்ந்து எதிரே சிறைப்பட்டு நிற்கும் விரோதியைக் காண்பது போல், புல் தரையில் உட்கார்ந்திருந்த போதிலும், மிகக் கம்பீரமாகவே கரிகாலன் மீது அவள் கண்கள் பதிந்தன. அவள் பார்வையிலிருந்தது சீற்றமா, வெறுப்பா என்பதைத் தீர்மானிக்க முடியாத கரிகாலன், அதை அறிந்துகொள்ள விரும்பி ஏதோ பேச வாயெடுத்தான். ஆனால் வார்த்தைகள் அவன் வாயை விட்டு வெளி வருமுன்பாக நிரஞ்சனா தேவியே பேச ஆரம்பித்து, ''தன் வாளை எனக்கு அடிமையாக்கிய காவலர், மீண்டும் வேங்கி நாட்டில் காலை வைத்திருக்கிறார் போலிருக்கிறது,'' என்று மிக இகழ்ச்சியுடன் வார்த்தைகளை உதிர்த்தாள்.

அவள் சொற்களின் முழு அர்த்தத்தையும், அவள் குரலில்



இவள்: உன் கணவருக்கு இடை விடாத வேலைன்னு சொல்றியே, அப்படி என்ன வேலை?

அவள்: என்னுடைய இடையை அவர் கட்டிப் பிடிச்சிக்கிட்டு மணிக் கணக்கில் கொஞ்சி கிட்டே இருப்பார்.

கடலூர் கன்னியப்பன்

தொனித்த இகழ்ச்சியையும் விநாடியில் கண்டு கொண்ட கரிகாலனின் மனத்தின் முன்பாகக் கடந்த கால நிகழ்ச்சிகள் எழுந்து தாண்டவமாடவே, 'அன்று அந்த இரவில் என் வாள் உனக்கடிமை என்று பேசிவிட்டு, ஊரை விட்டே ஓடிவிட்ட பேடியே! திரும்பவும் வந்து விட்டாயா?' என்று கேட்பதற்குப் பதிலாகவே, மன்னன் மகள் மரியாதை யென்ற வெல்ல மூடிக்குள் விஷ மாத்திரையை வைத்துத் தனக்கு அளிக்கிறாள் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டவனாய், ஏதும் பேச வாயெழாமல் நின்றான்.

அவன் பதில் சொல்ல முடியாமல் வாயடைத்து நிற்பதைப் பார்த்த அப்பேரழகி, மீண்டும் தன் சொல்லம்புகளை அவன்மீது வீசத் தொடங்கி, ''ஏது, சூடாமணி விஹாரத்தில் தர்க்க சாஸ்திரம் படித்த அறிவாளிக்குப் பதில் சொல்லக்கூட நா எழவில்லையே? என்று மீண்டும் ஒரு கேள்வியைக் கேட்டாள்.

அதுவரை அவள் எழில் விளைவித்த வலையை அவளது சுடுசொற்கள் ஓரளவு கத்திரித்துவிட்டதால் சற்றே சுயநிலைக்கு வந்த கரிகாலன், ''ஆற்றுக்கு அணை போடலாம் நிரஞ்சனாதேவி! ஆனால் ஆத்திரத்தில பேச்சுக்கு அணை போட முடியாது. தர்க்க சாஸ்திரத்தில்கூட அதற்கு வழியில்லை'' என்றான் மெதுவாக.

நிரஞ்சனாதேவி உட்கார்ந்திருந்த நிலையிலேயே தலையைத் தூக்கி மீண்டும் அவனை நோக்கினாள். அந்த வீரனுடைய குழந்தை முகத்தில் துயரமே தாண்டவமாடுவதைக் கண்ட அவள் மனத்தில் ஒருகணம் அனுதாபம் உதயமானாலும், உள்ளத்தே சில நாட்களாக வேரூன்றி விட்ட வெறுப்பு அதைச் சட்டென்று அடக்கிவிடவே, ''ஆத்திரப் பேச்சா! யார் ஆத்திரமாகப் பேசுகிறார்கள்? என் பேச்சில் பதட்டம் தெரிகிறதா?'' என்று வினவினாள்.

''எரிமலைகூடத் தீப்பிழம்பை வெளியில் காட்டுவதில்லை, அரசகுமாரி!'' என்று வெறுப்புடன் பதில் சொன்னான் கரிகாலன்.

அவன் பதிலில் புதைந்து கிடந்த அர்த்தத்தை ஊகித்துக் கொண்ட அரசகுமாரியும், உவமையில் அவனுக்குத் தான் குறைந்தவள் அல்ல வென்று நிரூபிக்கத் தொடங்கி, ''புல்லில் மறைந்து கிடக்கும் பாம்புகூடத் தான் கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆனால், அது எரிமலையை விட மோசமல்லவா?'' என்று வினவினாள்.

அவள் அந்த உவமையை எதற்காகச் சொன்னாள் என்று புரிந்தே இருந்தது கரிகாலனுக்கு. இருந்தபோதிலும் அவள் வாயிலிருந்தே அவள் நெஞ்சத்திலிருக்கும் முழு வெறுப்பையும் உணர்ந்துகொள்ளும் எண்ணத்துடன் கேட்டான், ''அது எப்படி மோசம் அரசகுமாரி?'' என்று.

''எரிமலை எப்படியும் தீப்பிழம்பைக் கக்கும்; அது கண்ணுக்குத் தெரியும்...''

''உம்...''

''அதிலிருந்து தப்பியோட மக்களுக்குச் சில சமயங்களில் அவகாசமும் இருக்கும். தப்ப முயற்சியாவது செய்யலாம். ஆனால்...''

''ஆனால்?''

''பாம்பு அப்படியல்ல. சோழ நாட்டு வீரரே; நாம் அயர்ந்திருக்கும்



போது நமது பக்கத்திலேயே வளைந்து வளைந்து வந்து கடித்துவிடும். நாம் வளர்க்கும் புல்லிலே உறையும். நாம் பால் ஊற்றும் புற்றிலே வளரும். ஆனால் அந்தப் பாலுக்குப் பதில் நமக்கு நஞ்சையே அளிக்கும். பால் வெண்மையானது. வெள்ளை மனத்துடன் நாம் பிறருக்கு அளிக்கும் நம்பிக்கையும் அப்பேர்ப்பட்டதுதான். அதற்குப் பதில் பலர் நம் வாழ்க்கையில் நஞ்சையே கலக்கிறார்கள்.''

''உங்கள் வாழ்க்கையில் அப்படி யார் நஞ்சைக் கலந்தார்கள் அரசகுமாரி?'' என்று கரிகாலன் கேட்டான்.

இந்தக் கேள்விக்கு உடனே பதில் சொல்லாத அரசகுமாரி மெள்ள எழுந்து நின்று கரிகாலன் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். கல்மிஷம் சிறிதும் இல்லாத கண்களும் அவளைத் திரும்ப நோக்கவே, அவள் கண்களில் சற்று நேரம் குழப்பம் தெரிந்தது. 'கபட்டம் சிறிதும் இல்லாத இந்தக் கண்களை உடையவன் எப்படி நச்சுப் பாம்பாக இருக்க முடியும்? ஆனால் இவன்தானே அரிஞ்சயனைக் கடத்திச் சென்று சோழர் சிறைக்கு அனுப்பி வைத்தான்? அப்படியிருக்க, இவன் எப்படி வஞ்சகனாக இல்லாதிருக்க முடியும்? இவன் நிர்மலமான கண்களில் பயத்தின் சாயையேகூட இல்லையே! 'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்ற பழமொழியும் பொய்யா?' என்று பலவாறாகச் சிந்தித்த அவளை மேலும் குழப்ப, பாணங்களைப் போல் வெளி வந்தன கரிகாலன் சொற்கள்: ''என்ன சிந்திக்கிறீர்கள் அரசகுமாரி? வெளிப்படையாகத்தான் சொல்லுங்களேன், நீ தான் வஞ்சகன், நீ நச்சுப் பாம்பு, உதவுவதுபோல் பாசாங்கு செய்து, என்னை ஏய்த்துவிட்ட கயவன் நீ என்று. இதில் தயக்கம் எதற்கு?''

நேரடியான இந்தத் தாக்குதலுக்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை அரசகுமாரிக்கு. அவனுடன் மேற்கொண்டு ஏதும் பேசாமல் வசந்த மண்டபத்திற்குச் செல்ல ஓர் அடியெடுத்து வைத்தாள். அவள் நடையை ''அரசகுமாரி!'' என்ற கரிகாலன் சொல் சட்டென்று தடுத்து நிறுத்தியது. அவனுக்கு முதுகுப்புறத்தைக் காட்டி மண்டபத்துக்குச் செல்ல அடி எடுத்து வைத்த மன்னன் மகள் தலையைத் திருப்பி அவனைப் பார்த்து. ''அதிகாரம் பலமாயிருக்கிறதே!'' என்றாள்.

''அநீதியாகக் குற்றம் சாட்டப்பட்டவனுக்குள்ள உரிமை அது!''

''குற்றம் சாட்டியது யார்?''

''நீங்கள்தான் - வஞ்சகன் என்றீர்கள்.''

''நெஞ்சைத் தொட்டுப் பாருங்கள்; அது உண்மை என்று தெரியும்.''

''நெஞ்சைத் தொட்டுத்தான் சொல்கிறேன். அதில் வஞ்சகம் தெரியவில்லை.''

''பின் என்ன தெரிகிறது?''

''ஒரு வஞ்சியின் அறியாமை தெரிகிறது. சந்தர்ப்ப சாட்சியத்தால் ஒரு பேதை கருத்திழந்த கதை விளங்குகிறது.''

''அப்படியானால் உண்மை?''

''அதோ அந்த மரங்களின் மறைவுக்கு வாருங்கள்.''

அரசகுமாரி நன்றாக அவனை நோக்கித் திரும்பி, அவன் மீது சந்தேகப் பார்வையொன்றையும் நாட்டி, ''உண்மையைச் சொல்ல மறைவு எதற்கு?'' என்று வினவினாள்.

''அவசியமிருக்கிறது; வாருங்கள் என்னை நம்புங்கள்'' என்றான் கரிகாலன்.

''ஒருமுறை உங்களை நம்பினேன்.''

''நான் நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை.''

''அதற்கு அத்தாட்சி?''

''இங்கு நின்று பேச வேண்டாம். ஜெயசிம்மன் கண்களில் நாம் பட்டுவிட்டால் பேராபத்து. இப்படி வாருங்கள், அரசகுமாரி, பயப்படாதீர்கள்'' என்று அவளுக்குத் தைரியமூட்டி மரங்களின் மறைவுக்கு அவளை அழைத்துச் சென்றான். அதே சமயத்தில் மரக்கூட்டத்தின் இருளிலிருந்து வெளியே வரமுயன்ற ஓர் உருவம் எதிரே வந்த இருவரைக் கண்டதும் அவசர அவசரமாக மீண்டும் நிழலடித்த இடத்துக்குச் சென்று, ஒரு மரத்தின் மறைவில் பதுங்கிக்கொண்டது. அந்த மரத்தின் அடிக்கே கரிகாலனும் அரசகுமாரியை அழைத்துச் சென்றான்.

(தொடரும்).



# ஒதெல்லோ

வெனிஸ் நகரத்தில் ஒரு பெரிய செல்வந்தருக்கு டெஸ்டிமோனா என்ற மகள் இருக்கிறாள். அவளுடைய அழகையும் செல்வத்தையும் கண்டு பல பேர் அவளை மணக்கப் போட்டியிடு கிறார்கள். அவர்களில் யாரையும் டெஸ்டிமோனா விரும்பவில்லை. அவள் மனமெல்லாம் ஒதெல்லோவிடம் சென்றிருக்கிறது.

அவன் ஒரு ராணுவ தளபதி. அரபு இனத்தவன்.

பல நாடுகளையும் நகரங்களையும் கண்டவன் ஒதெல்லோ. தான் பங்கு பெற்ற போர்களையும் முற்றுகைகளையும் பற்றி டெஸ்டிமோனாவிடம் விவரிப்பான். நீரிலும் நிலத்திலும் தான் சந்தித்த அபாயங்களைச் சொல்வான்.

இவற்றையெல்லாம் கேட்டுக் கேட்டு டெஸ்டிமோனாவுக்கு அவனிடம் காதல் பிறக்கிறது. அவனை ரகசியமாக மணந்து கொள்கிறாள். முதலில் அவள் தந்தைக்கு அதில் விருப்பமில்லை. பிறகு ஏற்றுக் கொள்கிறார்.

நாட்டைப் பாதுகாக்க வேண்டி ஒதெல்லோ தன் மனைவியுடன் ஸைப்ரஸ் தீவுக்குச் செல்கிறான். அவனுடைய நண்பனும் இளம் தளபதியுமான காஷியோவும் வருகிறான். டெஸ்டிமோனாவுக்கும் ஒதெல்லோவுக்குமிடையே காதல் தூது சென்றவன் இவன்.

காஷியோவை ராணுவத்தில் லெப்டினென்ட் பதவிக்கு உயர்த்துகிறான் ஒதெல்லோ. இது இயோகா என்ற மூத்த அதிகாரிக்குப் பிடிக்கவில்லை. தனக்கு வரவேண்டிய பதவி உயர்வு பறிபோய்விட்டதால் காஷியோ மீதும் ஒதெல்லோ மீதும் பகைமை பாராட்டுகிறான். காஷியோ, டெஸ்டிமோனா, ஒத்தெல்லோ மூவரையும் அழிப்பதற்குச் சூழ்ச்சி செய்கிறான்.

மனித மனங்களை அறிந்த கெட்டிக்காரன் இயாகோ. ஆகவே, ஒதெல்லோவின் மனத்தில் சந்தேகத் தீயை மூட்டி விட்டுவிட்டால் தன் திட்டம் எளிதில் நிறைவேறும் என்று எண்ணுகிறான்.

போரில் வெற்றி பெற்றதை முன்னிட்டு ஒரு கொண்டாட்டம் நடைபெறுகிறது. அப்போது காஷியோவுக்குக் கிண்ணத்துக்கு மேல் கிண்ணமாக மது ஊற்றித் தந்து, குடிக்கச் செய்கிறான் இயாகோ. காஷியோ போதை தலைக்கேற, அங்கிருந்த ஒரு ராணுவ அதிகாரியைச் சண்டைக்கு இழுத்துத் தாக்குகிறான். உடனே இயாகோ அபாய மணியை அடித்து ஏதோ பெரிய கலவரம் நிகழ்ந்தது போல ஒதெல்லோவுக்கு அறிவிக்கிறான். நள்ளிரவில் எழுந்து வந்த ஒதெல்லோவிடம் காஷியோ மீது குற்றம் சுமத்தி, காஷியோமீது ஒத்தெல்லோவுக்குக் கோபம் வருகிற மாதிரி பண்ணுகிறான்.

கண்ணியத்தையும் கட்டுப்பாட்டையும் பெரிதும் மதிப்பவனான ஒதெல்லோ காஷியோவைப் பதவியிலிருந்து இறக்கி விடுகிறான். இயாகோவின் முதல் சூழ்ச்சி பலிக்கிறது.

தான் அளவுக்கு மீறிக் குடித்தது தவறு என்று உணரும் காஷியோ, இழந்த பதவியை எப்படிப் பெறுவது என்று இயாகோவிடம் யோசனை கேட்கிறான்—அவனைத் தன் உண்மை நண்பனென்று கருதி. இதுதான் சந்தர்ப்பம் என்று மகிழ்கிறான் இயாகோ. ஒதெல்லோவிடம் சிபாரிசு செய்யும்படி டெஸ்டிமோனாவிடமே கேட்கலாமே என்று யோசனை சொல்லித் தருகிறான். அதன்படி காஷியோ டெஸ்டிமோனாவிடம் சொல்ல, அவளும் ஒதெல்லோவிடம் சிபாரிசு செய்கிறாள். இன்னும் கொஞ்ச நாள் கழித்துக் காஷியோவை மன்னித்துப் பழைய பதவியைத் தருவதாகச் சொல் கிறான் ஒதெல்லோ.

டெஸ்டிமோனா சிபாரிசு செய்ததை வைத்தே இயாகோ தூபம் போடுகிறான் ஒதெல்லோவிடம். காஷியோவுக்கும் டெஸ்டிமோனாவுக்கும் கள்ளக் காதல் இருப்பதாகக் கூறி, சிறிது சிறிதாக

ஒதெல்லோவின் மனத்தில் விஷ வித்து விதைக்கிறான்.

தன் இனத்தவனை மணந்து கொள்ளாமல் ஒரு அரபு இனத்தவனை மணந்தோமே என்று டெஸ்டிமோனா இப்போது வருத்தப்பட்டு எல்லா வகையிலும் தனக்கேற்றவனான காஷியோவைக் காதலிக்கிறாள் என்று இயாகோ கோள்மூட்ட, அதுவும் உண்மையாக இருக்கலாம் என்று எண்ணுகிறான் ஒத்தெல்லோ. எனினும் சரியான ருசு இல்லாமல் டெஸ்டிமோனாவைத் தண்டிக்க முடியவில்லை.

எனவே அவன் உள்ளம் வேதனைக் காடாகிறது. ஒரு நாள் மனைவியைச் சந்தேகிக்கிறான். இன்னொரு நாள் அவளை உத்தமி என்று நம்புகிறான். சினேகிதன் காஷியோவை ஒரு சமயம் நம்பத் தோன்றுகிறது. மற்றொரு சமயம் அவன் துரோகியென்று தோன்றுகிறது. இயாகோவின் (பேச்சை ஏற்றுக்கொள்ளவும் முடியவில்லை. நிராகரிக்கவும் முடியவில்லை. தன் ராணுவக் கடமைகளை மறக்கிறான். தூக்கத்தை வெறுக்கிறான். உணவை ஒழிக்கிறான்.

கடைசியில் சந்தேகத்தின் வேதனை தாள மாட்டாமல் இயாகோவிடம் போகிறான். அவன் கழுத்தைப் பிடித்து, ''டெஸ்டிமோனா உண்மையிலேயே எனக்குத் துரோகம் செய்தாளா? அதை நிரூபி பார்க்கலாம்,'' என்கிறான்.

இயாகோ உடனே, ''பூ வேலைப்பாடு செய்த ஒரு கைக்குட்டையை நீங்கள் ஒரு முறை டெஸ்டிமோனாவுக்குப் பரிசளித்தீர்கள் அல்லவா? அதை அவள் காஷியோவுக்குக் கொடுத்திருக்கிறாள். காஷியோ அதைக் கொண்டு முகம் துடைத்துக் கொள்வதைப் பார்த்தேன்,'' என்கிறான்.

''அது மட்டும் உண்மையானால் நான் டெஸ்டிமோனாவைக் கொலை செய்யத் தயங்க மாட்டேன்,'' என்கிறான் ஒதெல்லோ.

ஆனால் அந்தக் கைக்குட்டையை டெஸ்டிமோனா காஷியோவுக்குக் கொடுக்கவில்லை. அதைத் தன் மனைவி மூலமாகத் திருடி




அட்டையில்: வாணி

எடுத்து வரச் செய்திருந்தான் இயோகா. அதைக் காஷியோ போகும்பாதையில் போட்டு வைத்து அவன் எடுத்து வைத்துக் கொள்ளும்படி செய்து விட்டான்.

இயாகோ சொன்னதுபோல் காஷியோவின் கையில் அந்தக் கைக்குட்டை இருப்பதைப் பார்த்ததும் ஆத்திரம் பீரிடுகிறது. நண்பனையோ மனைவியையோ விசாரிக்காமல் இருவரும் தனக்குத் துரோகம் செய்திருக்கிறார்கள் என்று தீர்மானித்து விடுகிறான்.

டெஸ்டிமோனாவிடம் வந்து அவளைச் சோதிக்க எண்ணி, தனக்குத் தலைவலி என்றும், தலையில் கட்டிக்கொள்ள ஒரு கைக்குட்டை வேண்டும் என்றும் கேட்கிறான். அவள் ஏதோ ஒரு கைக்குட்டையை எடுத்துத் தருகிறாள். ''இது அல்ல. நான் கொடுத்த கைக்குட்டை எங்கே?'' என்கிறான் ஒத்தெல்லோ.

அதைக் காணவில்லை என்று டெஸ்டிமோனா தவிக்க, அவன் கடுமையாகச் சொல்கிறான்: ''அந்தக் கைக்குட்டை ஒரு எகிப்தியப் பெண் என் அம்மாவுக்குக் கொடுத்தது. அது யாரிடம் இருக்கிறதோ அவர்களுக்கு எல்லா பாக்கியங்களும் கிடைக்கும். அதை இழந்துவிட்டால் பெரிய கெடுதல்கள் நேரிடும்.''

கணவனுக்குத் தன் மேல் ஏதோ சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது என்பது

புரிகிறது டெஸ்டிமோனாவுக்கு. அவனைத் துருவித் துருவிக் கேட்கிறாள். அவனும், ''வறுமை, நோய், அவமானம் எதை வேண்டுமானாலும் நான் பொறுத்துக் கொள்வேன். ஆனால் துரோகத்தை மட்டும் பொறுத்துக்கொள்ள மாட்டேன்,'' என்று கூறிவிட்டு, விம்மியழுகிறான். ஆனால் காஷியோவின் பெயரைச் சொல்லவில்லை.

டெஸ்டிமோனா துயரத்துடன் படுக்கச் செல்கிறாள். அவள் தூங்கும்போது ஒதெல்லோ வருகிறான். அவளைக் கொலை செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் வந்தாலும் அவனுக்கு அவள் மீதுள்ள காதல் மாறவில்லை. ரத்தம் சிந்தாமல் அவளைக் கொலை செய்ய விரும்புகிறான். ஆசையுடன் அவளை முத்தமிடுகிறான்.

டெஸ்டிமோனா விழித்துக் கொள்கிறாள். அவளை மரணத்துக்குத் தயாராகும்படியும் இறுதிப் பிரார்த்தனை செய்யும்படியும் ஒதெல்லோ கூறுகிறான். அப்போதுதான் அவனுடைய கண்களில் உள்ள கொலை வெறியைக் கவனிக்கிறாள் டெஸ்டிமோனா. தான் செய்த குற்றம் என்னவென்று கேட்கிறாள்.

காஷியோவுக்கும் அவளுக்கும் கள்ளக் காதல் இருப்பதாக அவன் சொன்னதும், அதிர்ச்சியடைந்த டெஸ்டிமோனா உண்மையைச் சொல்ல முயல்கிறாள். ஆனால் அதற்குள் ஒதெல்லோ படுக்கை விரிப்பினால் அவள் கழுத்தை நெரித்துக் கொன்று விடுகிறான்.

அதே சமயம், இயாகோ தன் ஆள் ஒருவனைக் கொண்டு காஷியோவைக் கொல்ல ஏற்பாடு செய்கிறான். ஆனால் காஷியோ பலத்த காயங்களுடன் தப்பி விடுகிறான். கொலையாளியின் பையிலிருந்த சில கடிதங்களைப் பார்த்து, இயாகோவின் சதியை அறிகிறான். ஒதெல்லோவிடம் ஓடி வந்து நடந்த உண்மைகளைச் சொல்கிறான்.

நிரபராதியான மனைவியைக் கொன்று விட்டோம் என்று ஒதெல்லோவுக்குப் புரிகிறது. மனச் சாட்சியின் வதை தாங்காமல் கத்தியால் குத்தித் தற்கொலை செய்து கொண்டு இறக்கிறான்.

இயாகோ செய்த குற்றங்களுக்காக அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்படுகிறது.

(ஆதாரம்: சார்லஸ் லாம்ப், மேரி லாம்ப் எழுதிய 'டேல்ஸ் ஃப்ரம் ஷேக்ஸ்பியர்.'

---




சென்னை நகர பஸ் பயணிகளில் எவ்வளவு பேர் மூக்குக் கண்ணாடி அணிகிறார்கள்?

27.10.87 காலை 11 மணிக்கு மாம்பலத்திலிருந்து புறப்பட்ட 11-A பஸ்ஸில் (TML 1773 தி. நகர்-பாரிமுனை) கவனித்தபோது-

சுமார் ஒரு மணி நேரம் பயணம் செய்த 133 பேர்களில் (ஆண்கள் 95, பெ. 38).

கண்ணாடி அணிந்த ஆண்கள் 26; பெண்கள் 11. (குளிர்ச்சிக் கண்ணாடி அணிந்திருந்தவர்கள் இரண்டு ஆண்கள் இரண்டு பெண்கள் நீங்கலாக.)

—பா.கோ.

# 42. இருளில் நகைத்த இருவர்

ஆயிரம் சந்தேகங்கள் அகத்தே எழுந்து அலைமோத அரசகுமாரி கரிகாலனைப் பின்தொடர்ந்து நந்த வனத்தின் மரங்களிருந்த அடர்த்தியான பகுதிக்குள் நுழைந்தாள். மரங்கள் நெருக்கமாக வளர்ந்திருந்ததால் இருள் மண்டிக் கிடந்தாலும், மரக்கிளைகளிலிருந்து இலைகளின் இடுக்குகளின் வழியாக உள்ளே நுழைந்த சந்திரக் கிரணங்கள், மெல்ல நடந்து சென்ற நிரஞ்சனாதேவியின் அழகிய உடலின் மீது வட்ட வட்டமாக நாணயங்களைப் போல் விழுந்து விழுந்து நகர்ந்து கொண்டிருந்ததன் காரணமாக, சந்திரனே அந்த அழகை ரசித்து அரசகுமாரிக்குக் கனகாபிஷேகம் செய்கிறானோ என்ற பிரமை ஏற்பட்டது. அவள் தாங்களிருக்குமிடம் தேடி வருவதை எண்ணித்தானோ என்னவோ, மரக் கிளைகளிலிருந்த குயில்கள் முன்னை விட அதிகமாகக் கீதங்களைப் பாடின. அந்தப் பாடலுக்குப் பக்க

மன்னன் மகள்

சாண்டில்யன்

வாத்தியங்களைப் போல் அரசகுமாரியின் காற்சிலம்புகளும் 'ஜல் ஜல்' என்று கஞ்சிராவின் சலங்கைச் சப்தத்தை எழுப்பின.

மேலே மரக் கிளைகளிலிருந்து எழுந்த குயில்களின் இன்ப கீதமும் தரையிலே தனக்குப் பின்னால் சப்தித்துக் கொண்டு வந்த மன்னன் மகளின் காற்சிலம்புகளின் ஒலியும் காதில் விழுந்ததால், கரிகாலன் மனதிலே

19-11-87



எத்தனையோ இன்ப உணர்ச்சிகள் எழுந்து தாண்டவமாடினாலும், திடீரெனத் திரும்பி அந்த அழகியை வளைத்துத் தழுவ அவன் கரங்கள் துடித்தாலும், அவளுக்குத் தன்மீது ஏற்பட்டிருந்த அருவருப்பு, அவநம்பிக்கை இவற்றின் காரணமாகும், தன் முன்னே நிற்கும் பெரிய பணியை எண்ணிப் பார்த்ததன் விளைவாகவும், அவன் தன் உள்ளத்திலே எழுந்த உணர்ச்சிகளைச் சிறிதும் வெளியே காட்டாமல் அடக்கிக்கொண்டு எதிரேயிருந்த செண்பக மரத்தடிக்குச் சென்று, அதன் மீது சாய்ந்துகொண்டு நிரஞ்சனாதேவியை நோக்கித் திரும்பினான்.

மன்னன் மகள் மனத்திலும் உணர்ச்சி அலைகள் கடலலைகளைவிடப் பெரிதாக எழுந்து, பேரிரைச்சலாகப் போட்டு, அவள் இதயக்கரையிலே தாபநீரை வாரிவாரி இறைத்து, மணலை அரித்து, சின்னஞ்சிறு கற்களால் உறுத்தித் துன்புறுத்திக் கொண்டு தானிருந்தன. 'சாளுக்கிய வீரர்களுக்கு அஞ்சி, கோட்டையின் ரகசியக் கதவின் மூலமாக ஓடிவந்து தஞ்சம் புகுந்த ஊர்பேர் தெரியாத அந்த வாலிபன் தன் வாழ்க்கையில் எத்தனை தூரம் சம்பந்தப்பட்டு விட்டான்' என்பதை நினைக்க நினைக்க அவளுக்கே பேராச்சரியமாயிருந்தது. அவன் செய்த வஞ்சகம், தன் நண்பனாக நடித்து ஜெயசிம்மனின் கையாளாக மாறிய விந்தை, அவன் அன்றொரு நாள் இரவில் வசந்த மண்டபத்தில் தன் பள்ளியறைச் சாளரத்தருகே தன் காதில் ஓதிய பொய்யான மொழிகள் ஆகிய ஒவ்வொரு நிகழ்ச்சியையும் நினைத்து உள்ளம் வெதும்பினாள் நிரஞ்சனாதேவி. 'இவனுடைய அயோக்கியத்தனம்

இத்தனை தூரம் வெளியாக்யும், இவனை நம்பி, இவன் இனிமேலும் சொல்லக்கூடிய 'பொய்களைக் கேட்க வந்திருக்கிறேன்; இது என்ன பேதமை!' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்ட மன்னன் மகள், 'இவன் எண்ணம் எதுவாகத்தான் இருக்கும்?' என்பதை ஆராயும் எண்ணத்துடன் தானே முன்னதாக பேச முற்பட்டு, ''சூடாமணி விஹாரத்து வீரரே! இங்கு ஏன் என்னை அழைத்து வந்தீர்கள், என்ன ரகசியத்தைச் சொல்ல இந்த மறைவிடத்துக்குக் கூப்பிட்டீர்கள்?'' என்று வினவினாள்.

அவள் குரலிலே இருந்த ஏளனத்தையும் வெறுப்பையும் கவனித்த கரிகாலன், அவள் முகத்தையும் ஆராய முற்பட்டானானாலும், இருளின் விளைவாக அது பூராவாக முடியவில்லை. இருந்தபோதிலும் அவள் முகத்திலே வீழ்ந்து நெற்றியையும் கண்களையும் மாத்திரம் காட்டிக்கொடுத்த சந்திர கிரணமொன்றின் உதவியால் ஓரளவு அவளுக்குத் தன்மீதிருந்த கோபத்தின் ஆழத்தையும் வெறுப்பின் வேகத்தையும் உணர்ந்துகொண்டான். 'அமுதமும் விஷமும் கலந்த சிருஷ்டிதான் பெண்' என்று பெரியோர்கள் கூறியிருப்பது எத்தனை உண்மை என்பதை அந்த வினாடியில் புரிந்து கொண்டான் கரிகாலன். தன் எழிலை ஒப்படைத்து, புருஷன் வாழ்க்கையில் அமுத மழை பொழியக்கூடிய ஏந்திழை, கருத்து மாறுபட்ட மாத்திரத்தில் விஷத்தை வார்க்கும் கருநாகமாக மாற முடிகிறது, என்ன விசித்திரம் என்று எண்ணிய கரிகாலன், 'அமுதம் ஆலகாலம் இரண்டுமே பாற் கடலிலிருந்துதானே பிறந்தன! உற்பத்தி ஸ்தானம் ஒன்று தானே! ஒன்றிருக்குமிடத்தில் மற்றொன்றும் இருக்கத்தானே செய்யும்! இயற்கையின் தன்மை இப்படியிருக்க, இவள்மீது குறைபட்டு என்ன பயன்?' என்று தர்க்க ரீதியில் தன்னைச் சமாதானம் செய்து கொண்டாலும், 'கொந்தளிக்கும் மனோ நிலையிலிருக்கும் இவளிடம் நான் சொல்லப்போகும் விஷயம் இன்னும் அதிக அவநம்பிக்கையை விளைவிக்குமே, இதற்கென்ன செய்வது?' என்று தடுமாறிப் பதிலேதும் சொல்லாமலே நின்றான்.

அவன் மௌனத்திலிருந்தே அவன் உள்ளத்தின் நிலையை ஊகித்த

## கல்யாண வாக்கியப் போட்டி பரிசுகளில் மாற்றம்

**"கல்யாண வாக்கியப் போட்டி'யில் (5.11.87) பரிசுத் தொகை ரூ. 2000த்தை ரூ. 1500 ஆகக் குறைத்து விட்டீர்களே' என்று பலர் எழுதியிருந்தார்கள். விட்டுப் போன ரூ. 500 கீழ்க்கண்டவாறு சரிசெய்யப் பட்டுவிட்டது.**

**ரூ. 25 பரிசு பெற்ற 10 பேருக்கு ரூ. 35 விதமும் ரூ. 10 பரிசு பெற்ற 50 பேருக்கு ரூ. 18 விதமும் அதிகரித்து அனுப்பி யுள்ளது.**

நிரஞ்சனாதேவி, ''ஏன் பேசாமல் நிற்கிறீர்கள்? இரவு ஏறிக்கொண்டே போகிறது. அரண்மனைக்குப் போயிருக்கும் மாலினியும் வரும் நேரமாயிற்று. சொல்ல ஏதாவதிருந்தால் சீக்கிரம் சொல்லுங்கள்,'' என்றாள்.

''நிரஞ்சனாதேவி! நான் மிகவும் தர்மசங்கடமான நிலையில் இருக்கிறேன்,'' என்றான் கரிகாலன், உணர்ச்சியால் சற்றே அசைந்த குரலில்.

''தர்மம் உங்களிடமிருந்தால் சங்கடப்பட வேண்டிய அவசியமில்லை. தர்மம் தலைகாக்கும்!'' என்று கூறினாள் நிரஞ்சனாதேவி.

''தலையைக் காத்துத்தானிருக்கிறது அரசகுமாரி! அதிலொன்றும் சந்தேகமில்லை,'' என்று சற்றுத் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, அழுத்தியே பேசினான் கரிகாலன்.

''என்ன சொல்கிறீர்கள்?''

''உங்களுக்கு நன்றாகத் தெரியுமே அரசகுமாரி.''

''எது?''

''என் தலையைத் தர்மம் காத்திருக்கும் விஷயம்.''

''புரியவில்லையே எனக்கு.''

''புரியும்படி சொல்கிறேன் கேளுங்கள். என்னைச் சிறை செய்யும்படி ஜெயசிம்ம சாளுக்கியனை நீங்கள் கேட்டுக் கொண்டீர்கள்...'' என்று பதில் சொல்லிய கரிகாலன், அவள் உள்ளத்தில் ஏதாவது சலனம் ஏற்படுகிறதா

என்பதை அறிய, அவள் அழகிய விழிகளைக் கூர்ந்து நோக்கினான்.

நிலவின் கிரணத்தினால் அளவுக்கு மீறிய மயக்கும் சக்தியைப் பெற்றிருந்த நிரஞ்சனாதேவியின் விழிகளில் எந்தவிதச் சலனமும் இல்லை. அழகையெல்லாம் அள்ளிக் கொட்டும் அந்த விழிகள், அவன் ஆண்மகன் என்பதால் எத்தனையோ முறை வெட்கத்தால் பக்கவாட்டில் தாழ்ந்த அதே விழிகள், அன்று அவனைக் கூர்ந்து வெறுப்புடன் நோக்கின. அவள் சொன்ன பதிலிலும் அந்த வெறுப்பு நன்றாகப் பிரதிபலிக்கவே செய்தது. ''ஆம், கேட்டுக் கொண்டேன்; உங்களைச் சிறை செய்து கோதண்டத்தில் மாட்டி உண்மையைக் கக்க வைக்க வேண்டுமென்று நான் ஜெயசிம்மனைக் கேட்டுக் கொண்டது உண்மைதான்!'' என்றாள் நிரஞ்சனாதேவி.

''எந்த உண்மையைக் கக்குவதற்கு?'' என்று கேட்டான் கரிகாலன்.

''நீங்கள் யார் பக்கம் என்ற உண்மையை. என் சகோதரன் கட்சியா, அல்லது ஜெயசிம்மன் கட்சியா என்ற உண்மையை.''

''அதை அறிவதால் பலன்?''

''உங்களிடம் எச்சரிக்கையாயிருக்கலாம்; நம்பிக்கை மோசம் போகாதிருக்கலாம்.''

''அப்படியென்ன நம்பிக்கை மோசம் செய்திருக்கிறேன்?''

''ஏன் பிரும்ம மாராயர் திட்டம் குட்டிச்சுவராகப் போனதற்கு நீங்கள்தானே காரணம்.''

''ஆமாம்.''

''அரியஞ்சயனைக் கடத்திச் சென்றதும் நீங்கள்தானே?''

''ஆமாம்.''

''நீங்கள் இன்னும் என்ன செய்யவேண்டும்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டாள் விமலாதித்தன் மகள்.

''செய்ய வேண்டியது நிரம்ப இருக்கிறது, அரசகுமாரி!'' என்ற பதில் திடமாகவே வந்தது கரிகாலனிடமிருந்து.

அவன் துணிவைக் கண்டு அரசகுமாரி அசந்து போனாள். 'என்ன துணிவு இவருக்கு! என் குற்றச்சாட்டுகளையெல்லாம் ஒப்புக்கொண்டு, இன்னும் செய்யவேண்டிய தீமை பாக்கியிருக்கிறதாமே!' என்று எண்ணி வியந்து, மேற்கொண்டு ஏதும் பேசாமல் திரும்பி வசந்தமண்டபத்துக்குச் செல்ல முயன்றதைக் கரிகாலன் பேச்சுத் தடுக்கவில்லை. அவன் பலமான கரம் தடுத்தது. இரும்பினும் வலிய அவன் கை அவள் பூக்கரத்தின் மேற்பகுதியை பிடித்திழுத்து, அவளைத் திருப்பிப் பழைய நிலையில் நிறுத்தி வைத்தது. அப்பா! அந்தப் பிடியில்தான் எத்தனை அழுத்தம்! 'இந்த மெல்லிய கரங்களுக்கு இத்தனை பலமா?' என்று ஆச்சரியப்பட்டுப் போன அரசகுமாரி, அவன் முரட்டுப் பிடியின் காரணமாகக் கன்றிச் சிவந்துவிட்ட கையின் வலி தாளாது சற்று முகத்தையும் சுளித்தாள். அவன் கரத்தினால் ஏற்பட்ட ஸ்பரிசம், ஸ்பரிசத்தினால் ஏற்பட்ட வலி, இரண்டும் அவள் இதயத்துக்கு பெரும் இதமாயிருந்தன. அவன் அப்படிக் கையைப் பிடித்த நேரத்திலேயே,




பாண்டிச்சேரியில் ஹெல்மெட் அணிபவர்களில் சிலர் தங்கள் ஹெல்மெட்டுகளில் A-O-B என்று குறிப்பிட்டுக் கொள்கின்றனர். அது என்ன தெரியுமா? அவர்களின் ரத்தம் எந்தக் குரூப்பைச் சேர்ந்தது என்பதே. விபத்தில் சிக்க நேருமாயின் உடனடி சிகிச்சைக்கு முன்னெச்சரிக்கை. இதை ஏன் எல்லோரும் பின்பற்றக் கூடாது?

—ஸ்ரீமனோ பாரதி

அதுவரை உணராத பேருண்மையை உணர்ந்துகொண்ட மன்னன்மகள், தன் மீதே பெரும் சீற்றம் கொண்டாள். அவனிடம் முதல் சந்திப்பிலேயே ஏற்பட்ட அன்பு எத்தனை ஆழமாகத் தன் உள்ளத்துள்ளே வளர்ந்துவிட்டது என்பதை நினைத்துப் பார்த்து, 'எத்தனை சுயவனிடம் என் நெஞ்சத்தைப் பறிகொடுத்துவிட்டேன்' என்று ஏங்கினாள். அந்த ஏக்கம் பெருமூச்சாகவும் வெளிவந்தது.

யாருடைய உள்ளக் கிடக்கையையும் ஊகிக்கவல்ல பேரறிவு படைத்த தர்க்க சாஸ்திரியான கரிகாலன், அவள் கருத்திலே முளைத்து அவளை எரித்துக் கொண்டிருந்த எண்ணப் பொறிகளைத் திண்ணமாக அறிந்து கொண்டானானாலும், மீண்டும் தன் ஸ்பரிசத்தால் அப்பொறிகளை விசிறிப் பெரு நெருப்பாக்கி, அந்த ஏந்திழையின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ள இஷ்டப்படாதவனாய்ச் சிறிது விலகி நின்று மீண்டும் மரத்தில் சாய்ந்து கொண்டு அவளை நோக்கி, ''அரசகுமாரி! தங்களைத் தீண்டியதற்கு மன்னிக்கவேண்டும்,'' என்றான்.

''இதில் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? நீங்கள் இதுவரை நடந்து கொண்ட முறையின் சிகரம் இது!'' என்று சீறினாள் மன்னன்மகள்.

''அரசகுமாரி! ஊர் பேர் தெரியாத கரிகாலன் வேங்கிநாட்டு இளவரசியைத் தொட்டு நிறுத்தியது பிசகுதான்,'' என்று ஏதோ சொல்லப் போன கரிகாலன் பேச்சைப் பாதியிலேயே வெட்டிய நிரஞ்சனாதேவி, ''பிசகு என்று தெரிந்தும், அதைச் செய்ய வேண்டிய அவசியமென்ன?'' என்று கேட்டாள்.

''அவசியம் இருக்கிறது அரசகுமாரி! வேங்கி நாட்டின் பிற்காலம், அதற்காக நான் செய்ய வேண்டிய பணி, இவற்றைப் பற்றிய அவசியம்.''

''வேங்கி நாட்டின் பிற்காலம்! அதற்காக நீங்கள் செய்ய வேண்டிய பணி! ஹூம்!'' என்று அவன் வார்த்தைகளையே வெறுப்புடன் திருப்பியும் உதிர்த்து, ஒரு 'ஹூம்' காரத்தையும் கொட்டினாள் நிரஞ்சனாதேவி.

அந்த வெறுப்பையோ

ஹூங்காரத்தையோ லட்சியம் செய்யாமல் மீண்டும் சொன்னான் கரிகாலன், ''உங்கள் அவநம்பிக்கையை அகற்றுவது கடினம் அரசகுமாரி. ஆனால் காலம் உண்மையை அறிவுறுத்தும்,'' என்று.

''எந்த உண்மையை?''

''நான் ஒருவனே வேங்கி நாட்டில் உங்கள் உண்மை ஊழியன் என்ற உண்மை.''

''உண்மை ஊழியர்தான் என் அந்தரங்க ஊழியனைக் கடத்திச் சென்றாரோ?''

''யார் அந்த அந்தரங்க ஊழியன்? அரிஞ்சயனா?''

''ஆமாம். அதுவும் இல்லையென்று சொல்வீர்கள் போல் இருக்கிறது?''

''அதையும் காலம் விளக்கும் அரசகுமாரி. அரிஞ்சயன் ஜெயசிம்மனின் ஒற்றன். உங்கள் சதியை அம்பலமாக்கி உங்களையும் உங்கள் சகோதரரையும் ஒழித்துக்கட்ட ஜெயசிம்மன் திரட்டிய சதுரங்கக் காய்களில் அவன் முக்கியமானவன் என்பதைப் போகப் போக நீங்களே புரிந்து கொள்வீர்கள்.''

''யாரிடம் சொல்கிறீர்கள் இதை?''

''உங்களிடம்தான். உண்மை எது, பொய் எது என்று அறியாமல் தவிக்கும் உங்களிடம்தான் சொல்கிறேன். வேங்கி நாடு இப்பொழுது பெரிய சதுரங்கப் பலகை நிரஞ்சனா தேவி. அதில் எதிரும்புதிருமாக நகரும் பிரதானக் காய்களில் பலியாக வேண்டியது யார்? உங்கள் சகோதரரா அல்லது ஜெயசிம்மனா என்பது தெளிவுபட வேண்டும். என் திட்டம் வெற்றியடைந்தால், ஜெயசிம்மனுடைய சகாப்தம் வேங்கி நாட்டில் முடிவடைந்து விடும்.''

''உங்கள் திட்டமென்ன?''

''வேங்கி நாட்டிலிருந்து சில காலம் உங்களையும் உங்கள் சகோதரரையும் சோழநாட்டுக்கு அழைத்துச் செல்வது!''

''என்னையும் என் தம்பியையும் வேங்கியிலிருந்து அகற்றுவதுதான் உங்கள் திட்டமா?''

''ஆமாம்.''




சில மாதங்களுக்கு முன்பு தங்கள் இதழில் ''உள்ளூர் வரிகள் தனி'' என்ற பெயரில் பலர், பலவிதமாக கணக்கிட்டு வசூல் செய்வதாக ஒருவர் எழுதியிருந்தார். நான் கோவையில் உள்ள ஒரு பிரபலமான போட்டோக் கடையில் ஜனவரி மாதம் ஒரு பிலிம் ரோல் வாங்கினேன். ரூபாய் பதினெட்டு வாங்கினார்கள். அதன் உறையில் உள்ள விலை 15.89 பை. உள்ளூர் வரி தனி என்று உள்ளது. அதாவது உள்ளூர் வரி என்னிடம் 2–11 மட்டும் வாங்கினார்கள்.

ஆனால், அதே கடையில் இரண்டு மாதம் கழித்து அதே பிலிம் வாங்கினேன். 24.00 ரூபாய் வாங்கினார்கள். அதாவது பிலிம் விலையை விட 8.11 அதிகமாக வாங்கினார்கள். இது என்ன கொடுமை.

'உள்ளூர் வரி'' என்பதை யார் நிர்ணயிக்கிறார்கள்? உயர்ந்த பட்சம் எத்தனை சதவீதம் வாங்கலாம் என்ற விதி முறை ஏதாவது உண்டா?

—ஆ. பட்டிலிங்கம்

''உடனே வேங்கியின் அரியாசனத்தில் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் அமரமாட்டானா?''

''அமருவான்.''

அரசகுமாரியின் உள்ளம் அளவுக்கு மீறி துடித்தெழுந்ததால், அவள் உடல் லேசாக ஆட்டம் கண்டது. உதடுகளும் மெள்ளத் துடித்தன. ''எங்களை எங்கள் தாய் நாட்டிலிருந்து அகற்றி, ஜெயசிம்மன் மருமகனை அரியணையில் ஏற்ற எத்தனை பொற் காசுகளை ஜெயசிம்மனிடம் பெற்றிருக் கிறீர்கள்? இல்லை; இங்கே தளபதிப் பதவியை அடைய ஏதாவது வழியிருக் கிறதா?'' என்று ஆக்ரோஷத்துடன் வினவினாள் நிரஞ்சனாதேவி.

''உங்கள் நலத்தைக் கோரி, உங்கள் சகோதரர், இந்நாட்டின் மன்னர் ராஜராஜ நரேந்திரன் நலத்தைக் கோரி, ஏன் வேங்கி நாட்டின் நலத்தையே கோரி, உங்களை இங்கிருந்து கொண்டுபோய்ச் சோழர்கள் பாதுகாப்பில் சில காலம் வைக்கப் போகிறேன். இதனால், நீங்கள் என்னை வெறுக்கலாம். ஆனால் தங்களுக்கு எது நன்மை, எது தீமை, தங்கள் நண்பர் யார், விரோதி யார் என்று அறியாதவர்களுக்குச் சில சமயங்களில் நன்மையைக் கட்டாய மாகச் செய்யவேண்டி வரும். அந்த மாதிரிச் சமயமிது,'' என்று கூறிய கரிகாலனை, மிகக் கம்பீரமாக நோக்கிய நிரஞ்சனாதேவி, ''வீரரே! தங்கள் விருப்பப்படி நானும் என் தம்பியும் சோழ நாட்டுக்குப் போக மறுத்தால்?'' என்று வினவினாள்.

''இஷ்டவிரோதமாகக் கொண்டு போகப் படுவீர்கள்!''

''மக்கள் சும்மா இருப்பார் களா?''

''இருப்பார்கள். பெரிய வல்லரசுகளின் மோதலில் சின்னஞ்சிறு அரசர்கள் துரும்புக்குச் சமானம். மக்களும் அப்படித்தான்.''

''நீங்கள் எந்த வல்லரசைச் சேர்ந்தவர்?''

''சோழப் பேரரசின் பிரதிநிதி.''

''தூதரான பிரும்ம மாராயரைவிட உயர்ந்தவரா?''

''இல்லை; அவருக்குள்ள அதிகாரம்தான் எனக்கு.''

''என்ன உளறுகிறீர்?''

''உளறவில்லை; இப்பொழுது வேங்கி நாட்டில் சோணாட்டுத் தூதன் நான்தான்.''

இதைக் கேட்ட நிரஞ்சனாதேவி ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றாள். மறுகணம் வாய்விட்டு நகைத்தாள். அந்தச் சிரிப்பும் அடுத்த வினாடி உறைந்தது. மரத்துக்குப் பின் ஒளிந்திருந்தவனும் அவளுடன் சேர்ந்துகொண்டு சிரித்துவிட்டான். சிரித்ததோடு நிற்காமல், மறைவிடத்தை விட்டு வெளியிலும் வந்தான். கரிகாலன் உணர்ச்சிகளும் உறைந்துதான் போயின. ஆனால் கை மட்டும் வாளை நோக்கிச் சென்றது.

(தொடரும்)

# இன்னும் ஒன்று!



இடையில் கொஞ்ச நாள் டிரஸ்ட்புரம் வீட்டில் இருந்து வந்த அனுராதா, இப்போது பழையபடி அசோக்நகர் வீட்டிற்கு வந்து விட்டார்.

ராசியை முன்னிட்டா?

இதுவரை சகலகலா வல்லவராக இருந்த டி. ராஜேந்தர் இனி சகலகலாகலா வல்லவராகிறார். ரஜனிகாந்த் நடிக்கும் 'கோ ஃபார் கோல்டு' ஆங்கிலப் படத்தின் சென்னை, வட ஆற்காடு, தென்ஆற்காறுடு, செங்கல்பட்டு, பாண்டிச்சேரி ஏரியாக்களுக்கு வினியோக உரிமை வாங்கியிருக்கிறார்.

அமலா அண்டர்கிரவுண்டு! எங்குமே பார்க்க முடியவில்லை. போன் செய்தால், உதவியாளர் சுரேஷ்தான் பதில் சொல்கிறார். அமலாவுக்குத் தனி வீடு அமர்த்தி யாருக்கும் தெரியாதபடி வைத்திருக்கிறார்களாம். யார்? மர்மம்.

அஞ்சுவுக்குப் பத்து வயது கூடினால் பதினைஞ்சு. மகேந்திரனுடைய படங்களில் நடித்து வந்த பேபி அஞ்சு, இப்போது குமாரி அஞ்சு. கதாநாயகியாக நடிக்க ரெடி.



பாக்யராஜைக் காட்டிலும் பாலாஜி கெட்டிக்காரர். 'மிஸ்டர் இண்டியா'வைத் தமிழில் 'ரத்தத்தின் ரத்தமே' என்ற பெயரில் பாலாஜி தயாரிக்கிறார். ஹீரோ பாக்யராஜ்.

படத்தின் கதை விவாதம் பாலாஜியின் அலுவலகத்தில் சில நாட்கள் நடைபெற்றது. பாக்யராஜ் ஒழுங்காக வராமல் டிமிக்கி கொடுக்கவே, கதை விவாதத்தைப் பாக்யராஜின் வீட்டிலேயே வைத்துக்கொண்டு விட்டார் பாலாஜி. பாக்யராஜ் திணறுகிறார், வெளியில் எங்கும் போக முடியாமல்.

ஸ்ரீவித்யா ஓர் அலாதி டெக்னிக் வைத்திருக்கிறார்.

தேடிவரும் எந்தப் படத்தையும் மறுக்காமல் ஊதியம்கூடப் பேசாமல் முதலில் ஒப்புக் கொள்கிறார். முதல் நாள் படப்பிடிப்பிற்குப் போகும்போதுகூடப் பணத்தைப் பற்றிப் பேசுவதில்லை. இரண்டாவது நாள் படப்பிடிப்பின் போது ஒரு பெரிய தொகையைக் கேட்பார். தயாரிப்பாளர் கொடுப்பார். மூன்றாம் நாள் படப்பிடிப்பிற்கு வரமாட்டார். உடல் நலமில்லை என்பார். தன்னுடைய ஊதியம் ஒரு லகரம், அதில் முக்கால் பகுதியைக் கொடுத்தால் தான் வருவேன் என்பார்.

இப்படி மாட்டிக் கொண்ட தயாரிப்பாளர்களில் முதன்மையானவர் நடிகராயிருந்து தயாரிப்பாளராக மாறியுள்ள ரவீந்திரன்.

தகவல்கள்: செல்லப்பா, ராம்சந்த்.




## 43. வேண்டாம் இந்த அரசு

அரசகுமாரியின் சிரிப்பொலியோடு இன்னொரு சிரிப்பொலியும் கலந்து காதில் விழுந்த விநாடியிலேயே எச்சரிக்கையடைந்து வாட்பிடியின்மேல் கை வைத்துக் கொண்ட கரிகாலன், இரவின் அந்த நேரத்தில் இருளடர்ந்த மரத்தடியில் ஒளிந்து நின்று தங்கள் பேச்சைக் கேட்டவன் யாராயிருக்குமென்று அறிய, மரத்தடியிலிருந்து சிறிது விலகி நின்று மறைவிலிருந்து வெளியே வந்தவன்மீது தன் கண்களை ஓடவிட்டானானாலும், அங்கிருந்த மையிருட்டின் விளைவாகவும் மரக்கிளைகளைப் பிளந்துகொண்டு உள்ளே பாய்ந்த வெள்ளிய சந்திரக்




கிரணங்களும் அந்தப் பிரதேசத்தில் அதிகமாக விழாததாலும், வந்தவன் யாரென்பதைத் திட்டமாக அறிய முடியாமல், சற்றே சஞ்சலத்துக்குள்ளானான். ஒட்டுக் கேட்டவன் அங்கிமீது மட்டுமே விழுந்திருந்த ஓரிரு கிரணங்கள் தகதகவென்று அவன் ஆடையைப் பொலிவுறச் செய்ததாலும், அவன் தளர்ந்த நடையிலும் ஒரு கம்பீரமிருந்ததன் காரணத்தாலும், ஒளிந்திருந்த மனிதன் யாராயிருந்தாலும் அவன் பெரிய பதவியை வகிப்பவனாகவே இருக்க முடியுமென்றும், சாதாரண ஒற்றனாயிருக்க முடியாதென்றும் கரிகாலன் முடிவுக்கு வந்தான். இருந்த போதிலும், திட்டமாக அவன் யாரென்று அறிந்து கொள்ளும் நோக்கத்துடன் ஏதோ பேச வாயெடுத்த கரிகாலனிடமிருந்து வார்த்தைகள் வெளி வருவதற்கு முன்பாக, வந்தவனே பேச ஆரம்பித்து, 'அக்கா, தமிழர்களிடம் உறவாடுமுன்பு அவர்கள் பழமொழிகளை நீ கற்க வேண்டாமா?'' என்று சொல்லி, மீண்டும் ஏளன நகையொன்றை இதழ்களிலிருந்து உதிரவிட்டான்.

அங்கு ஒளிந்திருந்து தானும் கரிகாலனும் பேசியதைக் கேட்டவன் தன் தம்பி ராஜராஜ நரேந்திரனைத் தவிர வேறு யாருமில்லையென்பதை அறிந்ததும், உள்ளத்தே கொதித்தெழுந்து கொண்டிருந்த பயங்கர அலைகள் அடங்கியதற்கு அறிகுறியாக நீண்டதொரு பெருமூச்சை விட்ட அரசகுமாரி, 'எந்தப் பழமொழியைக் கற்க வேண்டும் தம்பி?'' என்று மெல்ல வினவினாள்.

''பகலில் பக்கம் பார்த்துப் பேசு; இரவில் அதுவும் பேசாதே' என்று தமிழ் நாட்டில் பழமொழி இருக்கிறதாமே? என் தாயார் சொல்வார்கள்,'' என்றான் ராஜராஜ நரேந்திரன், ஏதோ சாதாரண சம்பாஷணையில் ஈடுபடுபவனைப்போல்.

இரவு நேரத்தில் மரக் கூட்டத்தின் இருட்டில், தான் இன்னொரு புருஷனைத் தனிமையில் சந்தித்துப் பேசிய அந்தச் சந்தர்ப்பத்திலும் ராஜராஜ நரேந்திரன் பதட்டமில்லாமல் மிகுந்த நிதானத்துடன் பேசியதைக் கண்ட நிரஞ்சனா தேவியே ஆச்சரியப்பட்டுப் போனாள். 'மிகுந்த பலவீனனும் வாட்போர் விற்போர் கற்றவனுமான ராஜ ராஜ நரேந்திரன் நிதானத்தைக் கைவிடாதிருக்க யாரிடமிருந்து கற்றான்?' என்று கரிகாலனும் பிரமிப்படைந்து நின்றான். 'இத்தனை நிதானத்தைப் படைத்திருக்கும் இந்த ராஜ ராஜ நரேந்திரனுக்கு மட்டும் சரியான போர்ப் பயிற்சி அளிக்கப் படுமானால், வேங்கி நாட்டு அரச மரபெனும் ஆபரணத்தில் சுடர்விடும் மாபெரும் முகப்பாக இவன் அமைய முடியும்' என்பதையும் நினைத்துப் பார்த்த கரிகாலன், 'அந்தப் பயிற்சியை இவனுக்கு அளிப்பது என் பொறுப்பு. அதற்காக நான் கையாள உத்தேசித்திருக்கும் முறைகளில் அரசகுமாரியின் வெறுப்பும் விரோதமும் கிட்டினாலும் சரி' என்ற முடிவுக்கு வந்து, அரசகுமாரிக்கும் அவள் தம்பிக்கும் மேற்கொண்டு நடந்த சம்பாஷணையைக் கவனிக்கலானான்.

தமிழ்ப் பழமொழியைப் பற்றிப் பிரஸ்தாபித்த தம்பியை நோக்கி அரசகுமாரி, ''தம்பி! தமிழ்ப் பழமொழி நமக்கெதற்கு? சோழ நாட்டு வீரர் வந்திருக்கிறாரே அவருக்குச் சொல்,'' என்றாள்.

''அவருக்கு எதற்காகச் சொல்ல வேண்டும் அக்கா?''

''அவர்தான் பெரிய ராஜ ரகசியத்தைப் பேச இந்த அழகான இடத்துக்கு அழைத்து வந்தார்.''

''ஓகோ, தூதரின் யோசனை தானோ இது?''

''தூதராவது! இதை நம்புகிறாயா தம்பி?''

''ஏன், நம்பினால் என்ன?

அவரே சொல்கிறாரே, தான் சோழ நாட்டுத் தூதரென்று!''

நிரஞ்சனாதேவி இகழ்ச்சியெல்லாம் அள்ளித் தெளிக்கும் சிரிப்பொன்றை உதிர்த்துவிட்டு, ராஜராஜ நரேந்திரன் இருந்த திக்கில் கண்களை நாட்டியபடி சொன்னாள். ''தம்பி, அவர் சொல்வதால்தான் நம்பக் கூடாது,'' என்று.

வேங்கி நாட்டு மன்னனும், பொறுப்பைச் சிறிதும் அறியாதவனும், வேடிக்கையாகவே காலத்தைக் கடத்தி வந்தவனுமான ராஜராஜ நரேந்திரன் உடம்பில், இயற்கையாக இருந்த விஷமம் உச்ச ஸ்தாயியை அடையவே ''அப்படியானால் இவர் வார்த்தையில்...'' என்று நீட்டினான்.

''உண்மைக் கலப்பு இருக்காது,'' என்று முடிவாகச் சொன்னாள் நிரஞ்சனா தேவி.

''இவரைத்தானே அன்றொரு நாள் வசந்த மண்டபத்தில் உனக்கு மிகவும் நம்பிக்கையானவர் என்று எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தாய்? இவருக்குத்தானே...'' என்று ஏதோ யோசித்துச் சற்றுத் தடுமாறினான் ராஜராஜ நரேந்திரன்.

''உன் அரச உடையையும் அணியக் கொடுத்தேன்,'' என்று பதில் சொன்ன அரசகுமாரி மேலும் தொடர்ந்து, ''அவரேதான் இவர் தம்பி! இவர் சொன்னதெல்லாம் பொய்; செய்ததெல்லாம் துரோகம்! நமது அரிஞ்சயனைக் கடத்திச் சென்று சோழ நாட்டில் சிறை வைத்திருப்பதும் இவர் தான்,'' என்றாள்.

ராஜராஜ நரேந்திரன் இதற்குச் சொன்ன பதில் அரச குமாரியை மட்டுமல்லாமல் கரிகாலனையும் தூக்கி வாரிப் போட்டது. சிறிது நேரம் ஏதோ யோசித்த வேங்கி நாட்டு மன்னன், ''அக்கா, அரிஞ்சயனை அகற்றியது இவர் என்பது உண்மையானால் இவர் துரோகி யல்ல; நமக்கு நண்பர்தான்!'' என்றான்.

விமலாதித்தன் மகளுடைய முகத்தை மட்டும் அந்தக் கணத்தில் ராஜராஜ நரேந்திரன் காண முடிந்திருந்தால், அதில் எழுந்து தாண்டவமாடிய கோபாவேசத்தின் முழு வேகத்தையும் உணர்ந்திருப்பான். ஆனால் பாதி ஒளியே முகத்தில் தட்டியிருந்த காரணத்







இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: அடுத்த பக்கம்

தால், அவள் கோப ஜ்வாலையை முழுவதும் காண முடியாவிட்டாலும் அவள் உதட்டிலிருந்து உதிர்ந்த ''நரேந்திரா!'' என்ற சொல்லில் தொனித்த அழுத்தமும் வேகமும் அவள் உள்ளத்தே எழுந்த அனல் வீச்சைத் தெளிவாக நிரூபித்தன. தான் சொன்ன சொற்கள் நிரஞ்சனா தேவிக்குச் சொல்ல வொண்ணாக் கோபத்தை அளித்து விட்டன என்பதை அறிந்துகொண்ட ராஜராஜ நரேந்திரன், அதற்குமேல் அதிகம் பேசாதது மட்டுமல்லாமல் உள்ள நிலையை ஓரளவு சீர்படுத்தவும் நினைத்து, ''அக்கா, பேசுவதைச் சற்று வெளிச்சத்தில் போய்ப் பேசினால் என்ன?'' என்று கேட்டான்.

''எதற்காக வெளிச்சத்தில் பேசவேண்டும்?'' ஏதோ ஏட்டிக்குப் போட்டியாகக் கேட்டாள் நிரஞ்சனா தேவி.

''உனக்குச் சிரமம் இருக்காது.''

''எனக்கு என்ன சிரமம்?''

''இவ்வளவு அழுத்தமாக 'நரேந்திரா' எனக் கூப்பிட்டுப் பய முறுத்த வேண்டாம். உன் கண்களில் கோபத்தைக் கண்டாலே நான் அடங்கி விடுவேனே!''

இதைக் கேட்ட நிரஞ்சனாதேவியின் கோபம் முளைத்த வேகத்தில் மறைந்துவிடவே, தன் தம்பி மீது பரிதாபமான பார்வையொன்றை வீசிவிட்டு, ''நரேந்திரா! நீ இன்னும் விளையாட்டுப் பிள்ளையாக இருக் கிறாயே என்பதால்தான் எனக்குக் கோபம் வருகிறது. சரி, வா. பேச வேண்டியதை வசந்த மண்டபத்தில் பேசிக் கொள்ளலாம்'' என்று கூறிவிட்டு தோட்டத்தின் அந்தப் பகுதியை விட்டுச் சந்திர வெளிச்சம் மண்டிக் கிடந்த புல்வெளியை நோக்கி நடந்தாள்.

**ஆறு வித்தியாசங்கள் விடை:**

1. டி.வி. ஆன்டெனா ஒயர்
2. தலையில் பூ
3. டம்ளர்
4. சப்ளாக் கட்டை
5. பழம்
6. கூட்டத்தினர் எண்ணிக்கை

ராஜராஜ நரேந்திரன் பேசாமல் அவளைப் பின் தொடர்ந்தான். ஏதேதோ எண்ணங்கள் மனத்திலே கிளைத்துக் கொண்டிருந்தாலும், எப்படி யாவது நிலைமையைச் சமாளித்து அரசகுமாரிக்கு நம்பிக்கையூட்டித் தன் வாழ்க்கையின் முக்கியப் பணியை நிறை வேற்ற வேண்டுமே என்ற பொறுப் புணர்ச்சியாலும் அவ்விருவரையும் முன்னால் செல்லவிட்டுச் சற்றுப் பின்னடைந்தே அவர்களைப் பின்பற்றிச் சென்றான் கரிகாலன்.

தீர்க்காலோசனையிலிருந்த காரணத்தால், அரசகுமாரி மெது வாகவே நடந்து சென்றதால், சொப்பன உலகத்தில் நடமாடும் ஒரு வனதேவ தையைக் காண்பதுபோல் அவளைப் பார்த்துப் பரவசப்பட்டான் கரிகாலன். ராஜராஜ நரேந்திரன் அவளுக்கு நேர் பின் பகுதியில் செல்லாமல் சிறிது தள்ளியே நடந்ததாலும், மலைபோல் செழித்துக் கிடந்த அவள் வனப்பின் அசைவுகள் கண்ணுக்கு நன்றாகத் தெரிந்ததாலும், அந்த அசைவுகளை அல்லித் தடாகத்திற்கு அருகில் நடந்து கொண்டிருந்த மயிலின் அசைவுக்கு ஒப்பிட்டுப் பார்த்த கரிகாலன், 'மயிலே! உன் சாயலும் நடையும் இந்தப் பெண் மயிலின் நடைக்கும் எழிலுக்கும் உறை போடக் காணுமா?' என்று மனத்திற்குள் ளேயே சொல்லிக்கொண்டான். 'நன்றாகப் பின்னப்பட்டு நீண்டு கிடந்த அந்த ஜடைக்குத்தான் என்ன கிறுக்கு? அவள் நடக்கும்போது எதற்காக இப் புறமும் அப்புறமும் ஆடி ஆடி அவள் அழகைத் தொட்டுக் காட்ட வேண்டும்?' என்று எண்ணியது கரிகாலன் கவி யுள்ளம்.

இப்படி அவள் நடையழகை ரசித்துக்கொண்டே வசந்த மண்ட பத்தை அடைந்த கரிகாலனைச் சிறிதும் திரும்பிப் பாராமலும், உள்ளே வாவென்று அழையாமலும் கதவைத் திறந்துகொண்டு சென்றாள் நிரஞ்சனா தேவி. அவள் அப்படிச் சென்றதை ரசிக்காததாலோ, அல்லது கரிகாலனிட மிருந்து பூராத் தகவலையும் அறிய வேண்டுமென்ற காரணத்தாலோ தெரிய வில்லை ராஜராஜ நரேந்திரன் மட்டும் லேசாகப் பின்புறம் திரும்பி, தன்னைத் தொடருமாறு கரிகாலனுக்குச் சைகை செய்து, வசந்த மண்டபத்திற்குள் நுழைந்து, அரசகுமாரியின் பள்ளிய றையை நாடிச் சென்றான்.

ஒரே உயரம், கிட்டத்தட்ட ஒரே வயது, அநேகமாக ஒரேவிதமான அங்க அமைப்பு—இவற்றையுடைய கரிகாலனும் ராஜராஜ நரேந்திரனும் அரசகுமாரியின் அதே பள்ளியறையில் மீண்டும் பல நாட்களுக்குப் பிறகு அந்த இரவில் சந்தித்தார்கள். ஆனால் அன்றைக்கும் இன்றைக்கும் எத்தனை மாறுதல்! அன்றைக்கு அநாதையாக அரசகுமாரியின் அபயத்தை நாடி ஓடிவந்தான் கரிகாலன். இன்று பதவி உயர்ந்து, சோழ நாட்டுத் தூதன் என்ற முறையில் ஜெயசிம்மனும் அசைக்க முடியாத அதிகாரத்தைப் பெற்று வந்திருக்கிறான். ஆனால், அன்று வந்த கரிகாலன் அரச குமாரியின் ஆதரவையும் நம்பிக்கையையும் பெற்றவன்; அவளுக்குக் கரும்பாயிருந்தவன். இன்று வந்த கரிகாலன், அவளுக்கு வேம்பு; விரோதி; தம்பியின் நலனை அழிக்க வந்த நமன்!

இத்தகைய எண்ணங்களுடன் அரசகுமாரி கட்டிலில் அமர்ந்திருந்தாள். அன்று அவளுக்கு அருகில் நின்றவன் கரிகாலன்; வாயிற்படியில் நின்ற ராஜ ராஜ நரேந்திரன், அவளுக்கு வெகு அருகில் சென்று நின்றுகொண்டு,

''அக்கா!'' என்று ஆசையோடு அழைத்தான். ஆசை வெள்ளம் அகத்தில் புரண்டு கொண்டிருந்த கரிகாலன் உள்ளே காலை எடுத்து வைக்கவும் கூசியவனாய் வாயிற்படியிலே நின்றான்.

அரசகுமாரி ஏதும் பேசாமலே கட்டிலில் உட்கார்ந்திருந்தாள். ராஜ ராஜ நரேந்திரன் பேச்சைத் துவக்கி, ''அக்கா! அரிஞ்சயனை இவர் சோழ நாட்டுச் சிறையில் அடைத்தது உண்மையா?'' என்று கேட்டான்.

''உண்மை; மாமாவே சொன்னார்!'' என்றாள் நிரஞ்சனா தேவி.

''யார்! ஜெயசிம்மனா!'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் நரேந்திரன்.

''ஆம்,'' என்றாள் அரசகுமாரி.

''அவருக்கு எப்படித் தெரியும்?''

''அவரிடம் வந்திருக்கும் சேர நாட்டு ஒற்றன் சொன்னான்.''

''எதற்காகச் சொன்னான்?''

''இவரைப் பழி வாங்க.''

''இவர் அவனுக்கு என்ன தீமை செய்தார்?''

''அது தெரியவில்லை.''

''சரி, ஆனால் ஒரு விஷயம் தெரிகிறதல்லவா?''

''எது தம்பி?''

''சேர நாட்டு ஒற்றனுக்கும்

## சொல்லாதீர் யாரும் கேட்டால்

மூன்றெழுத்துக் கட்சியின் முக்கிய தலைவருக்கு இரண்டு அதிர்ச்சி. கோலாலம்பூர் மாநாட்டில் விடுதலைப் புலிகளை ஆதரித்துப் பிய்த்து உதறலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தவருக்கு டத்தோ சாமுவேல், புலிப் பிரசினை பற்றி எதுவும் மாநாட்டில் பேசக் கூடாது என்று வாய்ப் பூட்டுப் போட்டது முதல் அதிர்ச்சி.

வரி உயர்வை எதிர்த்துத் தி.மு.க. நகரசபைத் தலைவர்




வண்ணப்படம்: ராஜா பொன்சிங்
அட்டையில்: லக்ஷ்மி அனந்தா
அமெரிக்காவில் இந்தியர்களுக்கிடையே நடந்த அழகுப் போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்ட 'மிஸ் இந்தியா'.

களெல்லாம் ராஜினாமா செய்வதன் மூலம் அரசுக்கு ஒரு பூகம்பத்தை ஏற்படுத்தலாம் என்று திட்டமிட்டிருந்த போது, பாளையங்கோட்டை நகர சபைத் தலைவர் சுப. சீதாராமன், ''ராஜினாமாச் செய்துவிட்டால் திரும்பவும் நாமே வருவோம் என்பது என்ன நிச்சயம்?'' என்று சொல்லி அந்த ஐடியாவையும் 'வீட்டோ' செய்தது இரண்டாம் அதிர்ச்சி.

''மூன்றாவது அதிர்ச்சியை விட்டு விடலாமா?'' என்று கண் சிமிட்டுகிறார் நட்டுவாக்காலி நாச்சி முத்து. (சி.பி.ஐ. விஜயம்—அமைதிப் படை ராணுவத்தை அவதூறு செய்யக் கூடாது என்ற கோரிக்கை சம்பந்தமாக.)

கோட்டையில் நான்கு புதிய அமைச்சர்களுக்கான அறைகள் துப்புரவு செய்யப்பட்டுத் தயாராகக் காத்திருக் கின்றன. அவரவர்கள் தங்களுக்குத் தோன்றியவாறு ஊகித்துப் பட்டியல் போடுகிறார்கள். தங்களுக்கு நிச்சயம் ஒரு சான்ஸ் கிடைக்கப் போகிறது என்று சிலர் ஆவலோடு காத்திருக்கின்றனர்.

நட்டுவாக்காலி நாச்சிமுத்து: முசிறிப் புத்தன் கூடவா?

—லிப்ரன்

---

இவருக்கும் விரோதம். அந்த ஒற்றனை வேலைக்கு அமர்த்தியிருக்கிறார் மாமா. இவருடைய விரோதியைத் தன் பக்கம் சேர்த்துக்கொண்டு, இவரை ஒழிக்கத் திட்டமிட்ருக்கிறார். இதிலிருந்து உனக்கு என்ன புரிகிறது?''

அரசகுமாரியின் கண்களில் திடீ ரென ஓர் ஒளி பிறந்தது. சட்டென்று தலை தூக்கித் தம்பியை ஏறெடுத்து நோக்கி, ''என்ன சொல்லுகிறாய் தம்பி?'' என்று வினவினாள்.

''இவர் ஜெயசிம்மன் விரோதியில்லாவிட்டால் இவர் விரோதியை ஜெயசிம்மன் ஏன் வேலை யில் வைத்துக்கொள்கிறார்? இவரைப் பிடித்துவர, ஏன் அந்த ஒற்றன் தலைமையில் வீரர்களை அனுப்ப வேண்டும்?''

ராஜராஜ நரேந்திரனுடைய வாதத்தின் போக்கு மிகத் தெளிவாகப் புலப்பட்டது அரசகுமாரிக்கும். ஆகவே, அவள் பதிலேதும் சொல்லாமல் மௌனம் சாதித்தாள். ராஜராஜ நரேந் திரன் அவள் மௌனத்தை நீடிக்க விடாமல், ''ஏன் அக்கா, அரிஞ்சயன் நமது நண்பனாயிருந்தால், நமது சதிக்கு உதவுகிறவனாயிருந்தால், அவன் ஒழிந்ததைப்பற்றி ஜெயசிம்மன் ஏன் கவலைப்பட வேண்டும்? அதற்காக இவரை ஏன் சிறைபிடிக்க முயல வேண்டும்?'' என்று ஒரு கேள்வியும் கேட்டான்.

''என்னைத் திருப்தி செய்ய இவரைக் கைது செய்யும்படி கூறினார் ஜெயசிம்ம சாளுக்கியன்'' என்றாள் நிரஞ்சனா தேவி.

இதைக் கேட்ட ராஜராஜ நரேந் திரன், அந்த வசந்த மண்டபமே அதிரும்படியாக நகைத்தான். அவன் உடம்பில் அவ்வளவு பெரிதாகச் சிரிப்ப தற்கும் வலு இருக்கிறதென்பதை அப் பொழுதுதான் அரசகுமாரியும் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அதிர்ச்சி யடைந்த கண்களை அவனை நோக்கி எழுப்பினாள் அரசகுமாரி. ''அக்கா! ஜெயசிம்மனை நீ புரிந்து கொண்ட லட்சணம் இதுதானா? இத்தனை சிற்றறிவு படைத்த நீயா, உயிருக்கே உலைவைக்க வல்ல மாபெரும் சதியில் இறங்கியிருக்கிறாய்? உன்னைத் திருப்தி செய்யக்கூடிய ஒரு காரியத்தை ஜெயசிம்ம சாளுக்கியன் செய்வானென்ற ஞானோதயம் உனக்கு என்று ஏற் பட்டது?'' என்று சொல்லி மீண்டும் சிரித்தான் ராஜராஜ நரேந்திரன்.

அரசகுமாரியின் முகம் குங்கும மெனச் சிவந்தது. ராஜராஜ நரேந் திரனை அடித்து விடுபவளைப் போல் திடீரெனப் பஞ்சணையிலிருந்து எழுந் தாள். கோபத்தால் நிதானத்தை அறவே இழந்துவிட்ட விமலாதித்தன் மகளை, அப்படியே ஸ்தம்பித்து நின்று விடும்படி யான பேரிடியொன்றையும் அடுத்தபடி வீசிய ராஜராஜ நரேந்திரன், ''அக்கா! நீ இஷ்டப்பட்டாலும் சரி, இஷ்டப்படா விட்டாலும் சரி, இவர் திட்டத்துக்கு நான் ஒப்புக்கொள்கிறேன். வேங்கி நாட்டு அரியணை எனக்கு வேண்டாம்,'' என்று கூறினான்.

(தொடரும்)

# நிர்வாண பூஜை

''அம்மா... பக்கத்து வீட்டுக் காரங்க மைசூரைச் சேர்ந்தவங்க தானே?'' கீதாவின் கேள்வியில் அச்சம்தான் அதிகம் இருந்தது.

''அதுக்கென்னடி இப்போ?'' அம்மாவின் சந்தேகப் பார்வை ஜன்னலை ஊடுருவியது.

இரண்டு வீட்டு ஜன்னல் களுக்கும் இடையே பத்து அடிதான் இடைவெளி இருக்கும். ஜன்னல் வழியாகவே இரு வீட்டாரும் பேசிக் கொள்வதுகூட உண்டு.

கீதா வீட்டில் அந்த ஜன்னல் இருக்கும் அறை, படுக்கை அறை.

பக்கத்து வீட்டு ஜன்னல் பூஜை அறையினுடையது. காலையில் மிகச் சரியாக ஆறு மணிக்கு அந்த அறை ஜன்னல் திறக்கும். கூடவே கணீர் என்ற குரலில் தோத்திரங்கள் காற்றில் மிதந்து வரும். அதற்கு இனிமையும் தெய்வீகமும் சேர்க்கும் வகையில் ஊதுவத்தி, தசாங்கம் புகை மணங்களும் தவழ்ந்து செல்லும்.

ஒரு சில சமயம் கீதாவும் கண்மூடி மெய்மறந்து பக்கத்து வீட்டுப் பாட்டுக்களில் ஒன்றி விடுவதும் உண்டு. ஆனால் இன்று—

''அப்படி என்னதாண்டி பார்த்தே பக்கத்து வீட்டிலே?'' அம்மா கீதாவை உலுக்கினாள்.

''நிர்வாண பூஜைம்மா....'' சொல்லும்போதே அவள் உடல் வெட்கத்தால் கூசியது.

''என்னது?'' அம்மாவும் அதிர்ந்துதான் போனாள். பக்கத்து வீட்டுக்காரர்கள் மைசூரைச் சேர்ந்தவர்கள்தான் என்றாலும் நிர்வாண பூஜை நடத்தும் அளவுக்கா மூடப் பழக்கங்களைக் கூடவே கூட்டி வந்திருப்பார்கள்?

அம்மா லேசாக ஜன்னலைத் திறந்து பார்த்தாள்.



பக்கத்து வீட்டில் வித்யா தன் கணவனைத் திட்டிக் கொண்டிருந் தாள்: ''என்கிட்ட கேட்டா எடுத்துக் கொடுத்திருக்க மாட் டேனா? பசங்களோட சின்னத் துண்டை எடுத்துப் போய்க் குளிச்சுட்டு வந்திருக்கீங்களே. நமஸ்காரம் பண்ணி எழுந்தா சின்னத் துண்டு நழுவி கீழே விழுமேன்னாவது தெரிய வேண்டாமா? அக்கம் பக்கத்திலே வயசுப் பொண்ணுங்க இருப்பாங்களே, கண்ராவியா இருக்குமேன்னு தோண வேண்டாம்? சே! சரியான இந்த ஜன்மம் நீங்க! எனக்கே பகீர்னு ஆயிட்டது. நல்ல வேளையா அக்கம்பக்கத்திலே யாரும் பார்க்கலே. இந்தாங்க பெரிய துண்டு...''

பிரபுசங்கர்

# மன்னன் மகள்



## 44. அட துரோகி!

ராஜராஜ நரேந்திரன் சொன்ன கடைசி வார்த்தைகளால் ஒரு கணம் அடியோடு செயலிழந்து ஸ்தம்பித்துப் போன அரசகுமாரி, அடுத்த கணம் உள்ளூர ஓடிய உணர்ச்சிகளால் தன் கால்கள் நிற்கவும் முடியாமல் பலவீனப்பட்டுப் போவதை அறிந்து, கட்டிற்காலின் முகப்பிலிருந்த சிங்கத்தின் தலையைத் தன் மெல்லிய விரல்களால் அமுக்கிப் பிடித்துத் தன்னைச் சற்றே திடப்படுத்திக் கொண்டாள். பள்ளியறையின் மூலையிலிருந்த வெண்கலப் பதுமை விளக்குக்கூட, 'அடி பேதையே! தம்பிக்காக உன் நாளையெல்லாம் தியாகம் செய்து தலைக்கே தீம்பு தரக் கூடிய சதியிலிறங்கினாயே! கிடைத்த பலனைப் பார்த்தாயா?' என்று தன்னைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது அரசகுமாரிக்கு. இன்னொருவன் முன்பாகத் தன்னைச் சிற்றறிவு படைத்தவள் என்று தம்பி சொன்ன மாத்திரத்திலே துடித்தெழுந்த அரசகுமாரியின் உள்ளத்தில், ராஜ ராஜ நரேந்திரன் தனக்கு வேங்கி நாட்டு அரசு வேண்டாம் என்று சொன்ன சொற்கள் பல நெருப்புக் கணைகளாகப் பாய்ந்து,

**சாண்டில்யன்**

அவள் இதயத்தைத் அப்படியே சுட்டுப் பொசுக்கிக் கொண்டிருந்தன. சிங்காரத்திலும் சிற்றின்பத்திலும் செல விட வேண்டிய தன் இளமையை, எந்த ராஜராஜ நரேந்திரனுக்காகச் சதியிலும் சங்கடத்திலும் செலவிட்டுக் கொண்டிருந்தாளோ, அதே ராஜராஜ நரேந்திரன் தான் வகுத்த திட்டத்துக் கெல்லாம் யமனாக வந்து முளைப்பான் என்று அவள் சற்றும் எதிர்பாராததால், நெருப்பில் பழுக்கக் காய்ச்சிய ஈட்டியின் முனைகளைப் போல் சிவந்து ஜொலித்த தனது இரு விழிகளையும் தம்பிமீது பதியவிட்ட அரசகுமாரி கண்களில் தெரிந்த உஷ்ணத்தைச் சொற்களிலும் தோயவிட்டு நெருப்பென வார்த்தை களைக் கக்கினாள்.




''நரேந்திரா! அதைரியமும் பயமும் இன்னதென்றறியாத விமலாதித் தன் மகனா நீ? எந்த வேங்கி நாட்டு அரியணையைப் பாதுகாப்பதற்காகப் பலப்பல சாளுக்கிய மன்னர்கள் போர் முனையில் தங்கள் உதிரத்தைச் சொட்டினார்களோ, அந்த வீரர்கள் பரம்பரையில் வந்த இளவலா நீ? எந்த அரச பீடத்தைக் கண்டு விமலாதித்தன் காலத்தில் மேலைச் சாளுக்கியர்களும் பயந்தார்களோ, அந்த அரச பீடத்தை மாற்றான் கையில் ஒப்படைக்கச் சோழர் களிடம் பேரம்பேச முற்படும் நீயும் ஒரு வீரனா? எந்தத் தைரியத்தைக் கொண்டு இந்த வார்த்தைகளை என் செவிகளில் படும்படி பேச முன் வந்தாய்? இதோ நிற்கும் இவர் சோழர்கள் ஆயுத பலத்துக்கிடையே உன்னைப் பேடி போல் அடைக்கலம் புக ஏற்பாடு செய்வதாகச் சற்று முன்பு தோட்டத்தில் சொன்னாரே, அந்தச் சொற்கள் அளித்த தைரியமா? அல்லது, 'இவள் பெண் தானே. இவள் முன்பாக எதைப் பேசினால் என்ன செய்து விடுவாள்?'' என்று இனத்தால் ஆண்களுக்கு இயற்கை யாகவுள்ள இறுமாப்பு அளிக்கும் தைரியமா?'' என்று, கண்களும் உதடு களும் ஏககாலத்தில் கனல் கக்கச் சொல்மாரி பொழிந்தாள் மன்னன் மகள்.

அந்தச் சமயத்தில் அவள் நின்ற கம்பீரத்தையும், கோபத்தால் குங்குமக் குழம்பாயிருந்த அவள் முகத்தில் எழுந்த கோபாவேசத்தையும் கண்ட கரிகாலன், 'ராஜராஜ நரேந்திரனுக்குப் பதில் இவள் ஆளப் பிறந்திருந்தால் வேங்கி நாடு எத்தனை உயரிய ஸ்தானத்தைத் தென்னகத்தில் வகித்திருக்கும்!' என்று எண்ணியதோடு, இந்தச் சுடு சொற் களுக்கு ராஜராஜ நரேந்திரன் எத்தகைய பதிலைச் சொல்லப் போகிறான் என்று அவன்மீது தன் பார்வையைச் செலுத்தி னான்.

சாதாரணமாகக் கோழை யென்று எல்லோராலும் மதிக்கப்பட்ட ராஜராஜ நரேந்திரன், உண்மையில் அத்தனை கோழையல்ல என்பதை அவன் நின்ற தோரணையே நிரூபித்தது. சகோதரியின் கோபத்தைக் கண்டு பயந்து, ஒரு விநாடி அசைந்த அவன் உடல், அடுத்த விநாடி கூடிய வரையில் திடமாகவே காலைத் தரையில் ஊன்றி நின்றது. இயற்கையாகச் சற்றுச் சல னத்தைக் காட்டும் அவன் கண்கள் கூடப் பயத்தால் ஒருகணம் தரையில் தாழ்ந்தா லும், மறுகணம் மன்னன் மகளின் கூர் விழிகளுடன் இணைந்து நின்றன. கொஞ்சம் நடுங்கிய குரலிலிருந்து வெளி வந்த சொற்களிலும் தீர்க்காலோசனை யும் நியாயமும் நிரம்பி நின்றன.

''அக்கா! சோழ நாட்டுத் தூதர்...'' என்று ஆரம்பித்த ராஜராஜ நரேந்திரனை, ''அவரைத் தூதரென்று அழைக்காதே; சுத்தப் பொய்,'' என்று கோபத்துடன் வெட்டின அரசகுமாரி யின் சொற்கள் ஆரம்பத்திலேயே.

''இல்லை, இந்த நண்பர்...''

''இவர் நமது நண்பரல்ல.''

''சரி அக்கா! இந்த

**பி.பி.சி.** தமிழ் ஒலிபரப்பில், மகாகவி ஷேக்ஸ்பியரின் 'ஹாம்லட்' தமிழ் வடிவம் 1988' ஜனவரித் திங்களிலிருந்து 15 வாரங்கள், வெள்ளிக்கிழமைதோறும் ஒலிபரப்பாகும். ஷேக்ஸ்பியரின், மன்னன் லீயர், புயற்காற்று, மக்பத் ஆகிய அற்புத நாடகங்களின் தமிழ் வடிவத்தைத் தந்த பி.பி.சி. தமிழோசைத் தயாரிப்பாளர் சங்கரமூர்த்தியின் படைப்பு இது. இந்திய நேரப்படி இரவு 9.45 முதல் 10.15 வரை வாரத்தில் திங்கள் முதல் வெள்ளி வரை 31,41, 49 மீட்டர் சிற்றலை வரிசையில் பி.பி.சி. தமிழோசை ஒலிபரப்புகிறது.

—வயலூர் இரா. பார்த்திபன்.

மனிதர்...''

''இவர் மனிதருமல்ல; இவரிடம் மனிதத் தன்மை மருந்துக்குக்கூட இல்லை.''

பெண்களின் கோபம் உச்ச நிலையை அடையும்போது, அவர்கள் நிதானத்தை எத்தனை தூரம் இழந்து விடுகிறார்களென்பதை அறிந்த ராஜ ராஜ நரேந்திரன், மெள்ள இளநகை பூத்துவிட்டுக் கேட்டான். ''அப்படியானால் இவரை என்னவென்று அழைக்கட்டும்?'' என்று.

அவன் இதழ்களிலே பூத்த இளநகையைக் கண்டாள் நிரஞ்சனா தேவி. அவன் முகத்திலே பூத்த ஏளனத்தையும் கண்டாள். இரண்டையும் கண்டு வெகுண்டாள், ''விளையாடுகிறாயா நரேந்திரா?'' என்று கேட்டாள்.

''விளையாடவில்லை, அக்கா! உன் போக்குத்தான் எனக்குப் பெரும் விளையாட்டாக இருக்கிறது. இங்கு நாம் பேச வந்தது இவர் யார் என்பதை விவாதிக்க அல்ல; இவர் சொல்லும் யோசனை நமக்கு நன்மை பயக்குமா தீமை பயக்குமா என்பதை ஆராயத்தான். ஆனால், நான் பேசத் தொடங்குகையில் வார்த்தைகளுக்கே நீ ஆட்சேபிக்கிறாய், சொற்களில் என்ன இருக்கிறது அக்கா? விஷயத்தைப் பற்றி விவாதிப்போம்'' என்று பேசினான் ராஜராஜ நரேந்திரன்.

''இவர் பேச்சில் விஷயமில்லை தம்பி! விஷம் இருக்கிறது'' என்று எச்சரித்தாள் அரசகுமாரி.

''விஷமிருந்தால் ஏற்க வேண்டாம். அமுதமாயிருந்தால் ஏற்பதற்கு என்ன தடை? உனக்குப் பிடிக்காத இந்தக் கரிகாலன் அளித்தாலும், அதை ஏற்கலாமல்லவா?''

''எது அமுதம்? சோழ நாட்டுச் சுகவாசம் அமுதமா?''

இந்தச் சந்தர்ப்பத்தில் மெள்ளச் சம்பாஷணையில் புகுந்த கரிகாலன், ''இங்கே சிறிது தவறு இருக்கிறது'' என்று சுட்டிக் காட்டினான்.

அதுவரை கரிகாலனைக் கண்ணெடுத்தும் பார்க்காத நிரஞ்சனா தேவி, அவன் மீது கேள்வியும் வெறுப்பும் தொக்கி நின்ற பார்வையொன்றை வீசினாள். அவள் பார்வையில் தொக்கி நின்ற கேள்வி ராஜராஜ நரேந்திரன் வாயிலாக வெளிவந்தது. ''என்ன தவறு கரிகாலரே?'' என்று ராஜராஜன் கேட்டான்.

''வேங்கி நாட்டு இளவலுக்குச் சோழ நாட்டில் காத்திருப்பது சுகவாசமல்ல'' என்று பதில் சொன்னான் கரிகாலன்.

''வேறென்ன காத்திருக்கிறது கரிகாலரே? சிறைவாசமா?'' என்று கேட்டான் நரேந்திரன்.

''சிறைவாசமும் சிலருக்குச் சொர்க்க போகம்தான். ஆனால், அந்தச் சுகமும் இராஜேந்திர சோழ தேவர் சகோதரி மகனான தங்களுக்குக் கிடைப்பது கஷ்டம்.''

''அப்படியானால் அங்கு என்னதான் கிடைக்கும்?''

''தங்களுக்கு இங்குக் கிடைக்காததெல்லாம் அங்கு கிடைக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். நான்கு பக்கத்திலும் எதிரிகள் சூழ்ந்திருக்கும் வேங்கி நாட்டு மன்னனுக்கு அத்தியாவசியமான போர்ப் பயிற்சி கிடைக்கும். தங்கள் கைகளை இரும்பாக்குவதற்குத் தேவையான தேகப் பயிற்சிகள் கிடைக்கும். படைகளை அணிவகுத்து நடத்துவதற்கு ஓர் அரசனுக்கு மிகமிக அவசியமான அறிவு கிடைக்கும். தவிர மற்ற அரசர்களுடன் சமாதான உறவாடுவதற்குத் தேவையான ராஜ தந்திரமும்

கற்பிக்கப்படும். இவற்றையெல்லாம் உங்களுக்களிக்கவே சோழநாடு அழைத்துச் செல்ல இஷ்டப்படுகிறேன்'' என்று நரேந்திரனுக்குப் பதில் சொன்ன கரிகாலன், வாசற்படியைத் தாண்டிப் பள்ளியறைக்குள் வந்து, அரசகுமாரியையும் பார்த்து, ''நிரஞ்சனா தேவி! சந்தர்ப்பங்கள் உங்கள் கண்களில் என்னைச் சதிகாரனாக்கிவிட்டன. சந்தேகத்தால் உங்கள் அறிவும் நிலையை உள்ளபடி அலசும் சக்தியை இழந்து கிடக்கிறது. இந்தச் சமயத்தில் நான் எதைச் சொன்னாலும் நீங்கள் நம்புவது கஷ்டம். ஆனால் சிந்தித்துப் பாருங்கள். நாம் இன்றிருக்கும் சூழ்நிலையில் நீங்கள் ஏற்கனவே வகுத்த சதித்திட்டம் பலன் தருமா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். ஜெயசிம்மனைக் கொலை செய்ய உங்கள் நண்பர் பிரும்ம மாராயர் இட்ட திட்டம் நிறைவேறியிருந்தால், விமலாதித்தன் அரச பரம்பரைக்கு மட்டுமல்ல, அத்துடன் திருமணத் தொடர்பு கொண்ட, ஏன் இன்னும் தொடர்பு கொள்ள உத்தேசித்திருக்கும் சோழ பரம்பரைக்கும் சரித்திரத்தில் ஏற்படக்கூடிய நிரந்தரமான இழிவைப் பற்றிச் சிறிது சிந்தித்துப் பாருங்கள்'' என்று நிதானமாக, ஆனால் மிக அழுத்தமாகவும் தெளிவாகவும் விஷயங்களை எடுத்துரைத்தான்.

ஆனால் குழம்பிப் போயிருந்த அரசகுமாரியின் சிந்தனையைத் தெளிவுபடுத்துவதற்குப் பதிலாகக் கரிகாலனது சொற்கள் அவள் கோபத்தையே கிளறின. ''திருமணத் தொடர்பா! அதற்கும் ஏற்பாடாகியிருக்கிறதா? சோழ நாட்டுக்குப் போனால் நரேந்திரனுக்குச் சொர்க்க போகம்தான் போலிருக்கிறது!'' என்றாள் நிரஞ்சனா தேவி, கோபமும் ஏளனமும் கலந்த குரலில்.

''சொர்க்க போகம் பின்னால் இருக்கலாம்; தற்சமயம் இல்லை!'' என்றான் கரிகாலன்.

வெறுப்பையெல்லாம் அள்ளிக் கொட்டிய அரச குமாரியின் கண்கள் கரிகாலனை நோக்கி எழுந்தன. ''ஓகோ! அதற்குச் சிறிது காலம் பிடிக்கும் போலிருக்கிறது,'' என்றாள் அவள்.

''அரசகுமாரி! இராஜேந்திர சோழதேவர் மகள் அம்மங்காதேவியைத் தங்கள் தம்பிக்குக் கொடுப்பதென இளவயதிலேயே நிச்சயம் செய்யப்பட்டதை ஊரறியும். ஆனால், ஏன் அத்திருமணம் இன்னும் நடைபெறவில்லை?'' என்று கரிகாலனும் கோபத்துடன் கேட்டான், நிரஞ்சனா தேவியின் இருண்ட புத்தியில் சற்று ஒளியை உதயமாக்கும் எண்ணத்துடன்.

கரிகாலன் கேள்வி தன்னையும் தன் தம்பியையும் சுளீரென அடிக்கும் சாட்டையென உணர்ந்த நிரஞ்சனா தேவிக்கு என்ன பதில் சொல்வதென்பதே விளங்கவில்லை. அம்மங்காதேவியும் நரேந்திரனும் சிறு வயதாயிருக்கும்போதே அவர்கள் திருமணத்தை நிச்சயித்த இராஜேந்திர சோழதேவன், இருவரும் மணப் பருவத்தை அடைந்தும் வாளாவிருக்கிறான் என்றால், அதற்குக் காரணம் தன் தம்பியின் தற்கால நிலையே என்பதை நிரஞ்சனாதேவி நன்றாக உணர்ந்து கொண்டாள். சோழப் பேரரசன் தன் மகளுக்கு வீரமற்ற ஒருவனை மணாளனாக்க ஒருகாலும் சம்மதிக்க மாட்டான் என்பதையே கரிகாலன் சுட்டிக் காட்டுகிறானென்பதைத் திட்டமாகத் தெரிந்துகொண்ட நிரஞ்சனாதேவி, விஷயம் கரிகாலன் வாயினாலேயே வரட்டுமென்று, ''ஏன்?'' என்று ஒற்றைச் சொல் கேள்வியை வீசினாள்.

ஏதோ பதில் சொல்ல வாயெடுத்த கரிகாலனைத் தனது வலது கையைத் தூக்கி அடக்கிய நரேந்திரன், சகோதரியை நோக்கி, ''அக்கா! சதியில் திளைத்த உனக்குக் கூடவா இது புரியவில்லை? எந்தச் சங்கடத்திலும் ஈடுபடாத எனக்கே புரிகிறதே. நான் வீரனல்ல; பேருக்குத்தான் நான் மன்னனே தவிர...'' என்று மேலும் பேசப் போன அவனை இடைமறித்த



நிரஞ்சனாதேவி, ''இராஜேந்திர சோழ தேவனின் சகோதரி மகன் நீ,'' என்றாள்.

''இருக்கலாம், அக்கா! அதற்காக ஒரு பேரரசன் பெண்ணைக் கொடுப்பானா? அப்படியே கொடுப்பதானாலும் வீரமற்றவனை ஒரு தமிழ்ப் பெண் மணக்க இசைவாளா?'' என்று கேட்டான் ராஜராஜ நரேந்திரன்.

''தம்பி!'' பதட்டத்துடன் எழுந்தது நிரஞ்சனா தேவியின் குரல்.

''இதில் பதட்டம் உதவாது அக்கா! உண்மையை அலசுவதில் நிதானம் வேண்டுமென்று நீயே சொல்வாயே. இந்தத் திருமணத்தில் ஏதோ உன் தம்பியும் இன்னொரு பெண்ணும் மட்டும் சம்பந்தப்பட்டிருப்பதாக நினைக்காதே. இரண்டு அரசுகள் சம்பந்தப்பட்டிருக்கின்றன. பெருவாரியான மக்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். வேங்கி நாட்டு அரசு திடப்படக் கரிகாலர் சொன்ன யோசனையை ஏற்பது அவசியம்.''

''அது ஒழுங்கான யோசனை அல்ல.''

''ஏன்?''

''உன்னைச் சோழநாட்டு அடிமையாக்க ஒருகாலும் நான் உடன்பட மாட்டேன்.''

''இங்கு ஜெயசிம்மன் அடிமையாக நான் வாழ்வதில் உனக்கிஷ்டமா?''

''அந்த அடிமைத்தளையை உடைத்து விட்டால்?''

''உடைக்கப் பலம் தேவை அக்கா! அந்தப் பலத்தைச் சம்பாதிக்க, நான் இந்த அரசைச் சிலகாலம் துறக்க வேண்டும்; வேங்கி நாட்டில் கிடைக்காத போர்ப் பயிற்சியை வேறு நாட்டில் பெறவேண்டும்.''

''இங்கு அதை ஏன் பெற முடியாது?''

''பெறவிட மாட்டான் ஜெயசிம்மன். சைன்னியம் அவன் சொன்னபடி கேட்கிறது, மக்கள் அவனை நம்புகிறார்கள். நான் வாளைக் கேட்டால், என் கையில் மதுக் கிண்ணத்தை வேலைக்காரர்கள் தரச் சித்தமாக இருக்கிறார்கள். படைகளைப் பார்க்க வேண்டுமென்றால், பருவப் பெண்களின் படைகளைத் தான் என்னைச் சூழ விடுகிறான் ஜெயசிம்மன். இந்த வலையிலிருந்து முதலில் விடுபட வேண்டும். எனது கையும் காலும் சுதந்திரமடைந்த பிறகு, ஜெயசிம்மன் சூழ்ச்சி வலையை அறுக்க நான் கத்தியுடன் இங்கு வரவேண்டும்,'' என்றான் ராஜராஜ நரேந்திரன்.

''முதலில் வலையிலிருந்து விடுபட வேண்டுமே,'' என்றாள் அரசகுமாரி.

அவள் சிந்தனையிலும் மெள்ள மெள்ள உண்மை உதயமாயிற்று. ஆனால், அடுத்த கணம் கரிகாலன் மீதிருந்த வெறுப்பு அவள் மதிக்கு மீண்டும் திரை போட்டது.

அவள் கேள்விக்கு, ''விடுபட வைக்கவே நான் வந்திருக்கிறேன்,'' என்று பதில் சொன்னான் கரிகாலன்.

அரசகுமாரி அவனுடன் பேசவும் இஷ்டமில்லாமல் வேறு பக்கம் திரும்பிக் கொண்டாள்.

ஆனால் ராஜராஜ நரேந்திரன், ''கரிகாலரே! எந்த எண்ணத்தினால் நீர் என்னை இந்த வேங்கி நாட்டிலிருந்து அகற்ற இஷ்டப்படுகிறீர் என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அதற்குக் காரணம் எனக்குப் போர்ப் பயிற்சி அளிப்பது என்றால், அதில் எனக்குப் பூரண சம்மதம். நீர் ஜெயசிம்மனுடன் செய்துகொள்ளும் எந்த ஒப்பந்தத்திற்கும் நான் உடன்படுவேன்,'' என்று சொல்லிவிட்டு நிரஞ்சனாதேவியைப் பார்த்து, ''கவலைப்படாதே அக்கா! எல்லாம் நன்மைக்குத்தான் நடக்கிறது,'' என்று அவளிடம் விடைபெற்றுக்கொண்டு, வெளியே நடந்துவிட்டான்.

---

''போர்க்களத்தில் 100 ஈட்டிக் காரர்களை அழைத்துச் சென்றது வசதியாப் போச்சு மன்னா!''

''ஏன் தளபதி?''

''எதிரி வீரர்கள் சிதறி ஓடி விட்டனர்.''

எம்.பூங்கோதை.

---

# நான்கு மணி வெளிச்சம்



அரியலூர் சக்தி தியேட்டரில், மேட்னி காட்சி ஓடிக்கொண்டிருக்கும்போது 4 மணியளவில் ஒரு லைட்டை எரியவிடுவார்கள். அதாவது ரயிலுக்குச் செல்பவர்கள் எழுந்து சென்று விடுவார்கள். ரயிலைப் பிடிப்பவர்களுக்கு வசதியாக இவர்கள் செய்யும் உதவி இது.

—மு. மாரிமுத்து, அக்பர்.

தனியே விடப்பட்ட கரிகாலனும் மன்னன் மகளும் நீண்ட நேரம் மௌனமாக நின்றனர். பிறகு மன்னன் மகளே பேசத் தொடங்கினாள், ''சோழநாட்டுத் தூதரின் அடுத்த திட்டம் என்ன?'' என்று இகழ்ச்சி பூரணமாகத் ததும்பிய குரலில் கேட்டாள்.

''அரசகுமாரி! நீங்கள் எத்தனை இகழ்ச்சியாக என்னை அழைத்தாலும், நான் சோழநாட்டுத் தூதன்தான். உங்கள் இருவரையும் சோழ நாட்டுக்கு அழைத்துச் செல்வது என் திட்டம்,'' என்றான் கரிகாலன்.

''அதற்கு என்ன காரணத்தைச் சொல்லுவீர் ஜெயசிம்மனிடம்?''

''காரணத்தைத்தான் நீங்களே முன்பு சுட்டிக்காட்டி விட்டீர்களே. அவன் மருமகன் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை வேங்கி நாட்டு அரியணையில் அமர்த்தவே நான் முயல்வதாகக் கூறுவேன்.''

''அதாவது உண்மையைக் கூறுவீர்!''

''உண்மையோ பொய்யோ, காலம் சொல்லும் அரசகுமாரி.''

அரசகுமாரி ஏதோ யோசித்தாள். பிறகு சாளரத்தை நோக்கி வெளியே பார்த்தாள். அவள் அருகில் செல்லக் கரிகாலனும் இரண்டடி எடுத்து வைத்தான்.

அவன் காலடிச் சத்தம் அவள் காதுகளிலும் விழவே, அவள் திரும்பிப் பாராமலே சொன்னாள்: ''இங்கே வர வேண்டாம். போய் வாருங்கள். உங்கள் திட்டம் நிறைவேறிய பிறகு, உங்களுடன் கைதிகளாக நானும் என் தம்பியும் சோணாடு வரும்போது, மீண்டும் சந்திப்போம்,'' என்று.

அவள் குரலில் ஏக்கமும் துக்கமும் கலந்து தொனித்தன. பின்னால் நின்ற கரிகாலனால் முன்னாலிருந்த அவள் முகத்தைப் பார்க்க முடியவில்லை. முடிந்திருந்தால், அவள் அழகிய கண்களிலிருந்து இரண்டு நீர்த்துளிகள் உருண்டு நிலத்தைச் சுட்டதை அறிந்திருப்பான்.

முகத்தைப் பார்க்காவிடிலும், அவள் சொற்களில் சொட்டிய வெறுப்பின் காரணமாக அவன் அவளை அணுக முற்படவில்லை. உள்ளத்தே எழுந்த துயர அலைகளின் காரணமாகப் பெருமூச்சொன்றை விட்டு வெளியே சென்றான். அவன் தூரத்தே செல்லச் செல்ல அவன் காலடி ஓசை மெல்ல அவள் செவிகளில் விழுந்தது. மெள்ளத் திரும்பி அவன் நின்றிருந்த இடத்தைப் பார்த்த அவள் வாயிலிருந்து, ''அடத் துரோகி! உன்னிடம் என் உள்ளத்தைக் கொள்ளை கொடுத்தேனே!'' என்ற வார்த்தைகள் உதிர்ந்தன. அவள் உள்ளத்தின் ஏதோ ஒரு மூலையில் மட்டும், 'அவன் நல்லவன், அவனை நம்பு!' என்று ஏதோ ஒன்று ரகசியமாகச் சொல்லிக் கொண்டிருந்தது. அவள் நம்பவும் முயன்றாள். அப்படி ஏதாவது நம்பிக்கை உதயமாகியிருக்கும் பட்சத்தில், அடுத்த நாள் மாலினி கொண்டு வந்த செய்தியொன்று, அந்த நம்பிக்கையை அடியோடு உடைத்துவிட்டது.

(தொடரும்)





10-12-87

## 45. சதுரங்கக் காய்கள்

ஒரே இரவு ஒரே பகல்! அறுபதே நாழிகைகள்! அந்தக் குறுகிய கால அளவில், பெரிய பெரிய ராஜதந்திரிகளும் சாதிக்க முடியாத அந்த மகத்தான காரியத்தைக் கரிகாலன் எப்படிச் சாதித்தான் என்பதை நினைக்க நினைக்கப் பேராச்சரியமாயிருந்தது நிரஞ்சனாதேவிக்கு. தன்னையும் தன் தம்பியையும் சோழ நாட்டுக்கு அழைத்துச் செல்வதாக முந்திய நாளிரவு வசந்த மண்டபத்தில் உறுதி கூறிய கரிகாலன், எந்த உபாயத்தைக் கையாண்டு, மறுநாள் பகலுக்குள் அந்தக் காரியத்துக்கு ஜெயசிம்மன் சம்மதத்தைப் பெற்றான் என்பதைப் பற்றி, எண்ணற்ற முறைகள் திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்தும் காரணத்தை அறிய முடியாமல் திணறின அரசகுமாரிக்கு, மாலினி கொண்டுவந்த தகவல் உண்மையாக இருக்க முடியுமா என்ற சந்தேகமும் ஏற்படவே, எதிரே நின்ற தன் தோழிமீது தன் அழகிய விழிகளைச் சற்றே பதியவிட்டாள்.

அரசகுமாரியின் பார்வையில் படர்ந்து கிடந்த சந்தேகச் சாயையைக் கண்ணுற்ற மாலினி, "ஏன் அரசகுமாரி! நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கையில்லையா?" என்று மெல்லக் கேட்டாள்.

**சாண்டில்யன்**

# மன்னன் மகள்

அரசகுமாரியின் சித்தம் எங்கெங்கோ சுழன்றுகொண்டு கிடந்ததால், அவள் உடனே பதில் ஏதும் சொல்லாமல், சாளுக்கிய அரச மாளிகையில் அந்தப் பெரும் அறையின் பிரும்மாண்டமான சாளரங்களிலொன்றை நோக்கிச் சென்று வெளியே தன் பார்வையைச் செலுத்தினாள். வெளியே சற்று தூரத்தில் நகரத்து விளக்குகளின் ஒளியில் பளபளத்துக் கொண்டிருந்த கிருஷ்ணா நதி மிக அமைதியாகப் பிரவகித்துக் கொண்டிருந்தது. விளக்கொளி விழாத இடத்தில் இருண்டும், ஒளி விழுந்த ஒவ்வோரிடத்தில் பிரகாசித்துக் கொண்டும், இருளும் ஒளியும் கலந்து மானிட வாழ்க்கைக்கு விளக்கம் தருவதுபோல் பிரவகித்துக் கொண்டிருந்த கிருஷ்ணா நதியை நீண்ட நேரம் பிரமித்துப் பார்த்துக் கொண்டிருந்த அரசகுமாரி, ''இன்னும் சில நாட்களுக்குள் உன்னைவிட்டுப் போய் வேறு நாட்டு எல்லையில் வாசம் செய்ய வேண்டுமே தாயே!'' என்று சற்று இரைந்தே சொல்லி, வரப்போகும் பிரிவின் நினைப்பால் ஏக்கம் கலந்த பெருமூச்சொன்றையும் விட்டாள்.

அரசகுமாரியின் மனோநிலை மாலினிக்குப் பூரணமாகப் புரிந்திருந்ததால், அவள் ஏதும் பேசாமல் சிறிது நேரம் மௌனமாகவே நின்றாலும், இருவரையும் சங்கடத்திலாழ்த்திக் கொண்டிருந்த அந்த மௌன நிலையை உடைக்க எண்ணி மெள்ள அரசகுமாரியை அணுகி, ''அரசகுமாரி! நான் கேட்டது உங்கள் காதில் விழவில்லை போலிருக்கிறது?'' என்று மெதுவாக வார்த்தைகளை உதிர்த்தாள்.

அந்தக் கேள்வி அரசகுமாரியையும் ஓரளவு நிதானத்துக்குக் கொண்டு வரவே, அவள் மீண்டும் சாளரத்தை விட்டு உட்பக்கம் திரும்பி, மாலினியை நோக்கி, ''என்ன கேட்டாய் மாலினி?'' என்று வினவினாள்.

''நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கையில்லையா என்று கேட்டேனே!'' என்று, முதலில் கேட்ட கேள்வியை மீண்டும் விளக்கிச் சொன்னாள் பணிப்பெண் மாலினி.

அரசகுமாரியின் புருவங்கள் ஏதோ யோசனைக்கு அறிகுறியாக ஒருமுறை எழுந்து தாழ்ந்ததல்லாமல், இதழ்களிலும் ஒரு வரட்டுப் புன்முறுவல்





தவழ்ந்தது. அந்த வரட்சி குரலிலும் தொனிக்கச் சொன்னாள் அரசகுமாரி, ''நம்பக் கஷ்டமாகத்தானிருக்கிறது மாலினி. செய்தி எப்பேர்ப்பட்டது. நினைத்துப் பார்!'' என்று.

''நம்பவும் முடியாத விஷயங்கள் உலகத்தில் நடப்பதில்லையா அரசகுமாரி?'' என்று கேட்டாள் மாலினி.

''நடக்கின்றன, மாலினி. ஆனால் இத்தனை சீக்கிரத்தில் ஒரு நாட்டின் அரசியல் அஸ்திவாரத்தையே ஆட்டவல்ல ஓர் ஏற்பாடு நடப்பது சாத்தியமா?'' என்று அரசகுமாரியும் பதிலுக்குக் கேட்டாள்.

''ஏன் சாத்தியமல்ல அரசகுமாரி? சாளுக்கிய வீரர்களுக்கு அஞ்சி நம்மிடம் அடைக்கலம் புகுந்த ஒரு நாடோடி, சில நாட்களுக்குள் சோழ தூதராவது சாத்தியமாயிருந்தால், தாங்களும் மன்னரும் சோழ நாட்டுக்குச் செல்வது ஏன் சாத்தியமாகக் கூடாது?'' என்று மாலினி தர்க்க ரீதியில் கேள்வியைத் தொடுத்தாள்.

''அப்படியானால், கரிகாலர் உண்மையில் சோழ நாட்டுத் தூதர்தான் என்கிறாயா?''

''சந்தேகமில்லை அரசகுமாரி! நமது பிரதான மந்திரியே சொன்னார்.''

''இருக்க முடியாது மாலினி; இதிலும் ஏதோ விஷமமிருக்கிறது.''

''விஷமம் ஏதுமில்லை அரசகுமாரி. கரிகாலரைத் தூதராக நியமித்த

''சரி, நாளைக்குக் கொண்டு போய், ணத்தைக் கொடு,'' என்றார் நண்பர்.

பட்டென்று புதல்வி சொன்னாள்: வேண்டாம்பா! ஒரு மாதம் டைம் கொடுத் ருக்காங்க. அப்ப கொடுக்கலாம். இப்பவே காடுத்திட்டா, இன்னொரு அட்டை தந்திடு ங்க!''

—பொடுசி

ஓலையில், வல்லவரையர் வந்தியத் தேவரே கையெழுத்திட்டிருக்கிறார். சோழர்கள் முத்திரையும் ஓலையில் பொறிக்கப்பட்டிருக்கிறது.''

''இதையும் பிரதான மந்திரிதான் சொன்னாரோ?''

''ஆமாம் அரசகுமாரி!''

''நன்றாக விசாரித்தாயா?''

''திட்டமாக விசாரித்தேன். சந்தேகத்திற்கு இடமேயில்லை.''

அரசகுமாரி மீண்டும் சிந்தனையிலாழ்ந்து அறைக்குள்ளே சிறிது நேரம் உலாவினாள். கடைசியாக மாலினியை நோக்கி அரசகுமாரி சற்று இரைந்தே நகைத்தாள்.

''ஏன் நகைக்கிறீர்கள் அரசகுமாரி?''

''சிந்தித்துப் பார்த்தேன்; எல்லாம் விந்தையாயிருக்கிறது மாலினி.''

''எது விந்தையாயிருக்கிறது அரசகுமாரி?''

''சோழதூதர் வந்தது, அவர் யோசனைக்கு ஜெயசிம்மன் ஒப்புக் கொண்டது எல்லாமே விந்தையாயிருக் கிறது மாலினி. இதில் யாருக்குப் பைத்தியம் பிடிக்கிறதென்பதுதான் எனக்குப் புரியவில்லை ஊர்பேரறியாத ஒரு புத்த மடாலயச் சீடரை, நாடோடியை, ஒரு வல்லரசின் தூதராக நியமிக்க ஒப்புக்கொண்ட வல்லவரை யருக்குப் பைத்தியமா? இந்தப் புதுத் தூதர் வந்ததும் வராததுமாக முன்பின் ஆராயாமல் அவர் யோசனைக்கு ஒப்புக் கொண்ட ஜெயசிம்மனுக்குப் பைத்தியமா? அல்லது 'சோழநாட்டுக்கு உங்களைக் கொண்டு செல்கிறேன்' என்று சொன்னதும், சரியென்று துள்ளிக் குதித்தானே நரேந்திரன், அவனுக்குப் பைத்தியமா? வேங்கி நாட்டு அரசபீடம் மாற்றான் கைக்குப் போகிறது என்பதை அறிந்தும், ஏதும் செய்ய வழியில்லாமல் விழிக்கிறேனே எனக்குப் பைத்தியமா? இது என்ன, நாடுகளைப் பற்றிய ராஜ தந்திரமா அல்லது ஒரு தனிமனிதன் இஷ்டப்படி நடத்தக் கூடிய நாடகமா?'' என்று விடுவிடு என்றுபேசிக்கொண்டே போன அரசகுமாரி, உணர்ச்சிகளின் வேகத்தில் சிறிது தள்ளாடி, கட்டிலுக் காக நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

மன்னன் மகள் உள்ளத்திலே கொதித்தெழுந்த உணர்ச்சிப் பிரவாகம் எத்தன்மையது என்பதை மாலினி நன்றாக உணர்ந்துகொண்டாள். கரி காலன் வந்ததும் வராததுமாக மன்னன் மகளையும், மன்னன் ராஜராஜ நரேந்திரனையும் சோழ நாட்டுக்குக் கூட்டிச் செல்ல ஏற்பாடு செய்துவிடுவா னென்பது மனத்தால் நினைக்கக்கூட முடியாத மகத்தான சாதனை என்பதை யும். அந்தச் சாதனையால் ராஜராஜ நரேந்திரனுடைய ஆட்சியே வேங்கி நாட்டில் அற்றுப்போகும் என்பதையும் சந்தேகமறப்புரிந்து கொண்டிருந்த மாலினிக்கு, அந்தச் சாதனையின் விளை வாக அரசகுமாரிக்கு ஏற்படக் கூடிய துக்கமும் ஏமாற்றமும் எத்தன்மைய தென்பதும் நன்றாகத் தெரிந்தேயிருந் தது. ஆகவே, மேற்கொண்டு எதுவும் பேசாமல், அரசகுமாரிக்கு முன்பாக மௌனமாகவே நின்றாள்.

அரசகுமாரியின் உள்ளத்தை எண்ணற்ற உணர்ச்சி அலைகள் தாக்கிக் கொண்டிருந்ததால், அவள் ஏதோ சொப் பன உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந் தாள். அவள் அகக் கண் முன்பு ஏதேதோ காட்சிகள் தோன்றித் தோன்றி மறைந் தன. எல்லாவற்றிற்கும் மேலாக, கரி காலன் உருவமே அவள் உள்ளத்தில் திரும்பத் திரும்ப எழுந்து நின்றது. உள்ளே ஓடும் உணர்ச்சிகளைச் சிறிதும்

**எது எந்தப் படம்?**

1. உங்களில் ஒருவன்
2. தாலி தானம்
3. ரயிலுக்கு நேரமாச்சு
4. சின்னமணிக் குயிலே

பிரதிபலிக்காத அந்தக் குழந்தை முகம், சதா விஷமம் தவழும் கூரிய அந்தக் கண்கள், புன்முறுவல் பூத்து நிற்கும் உறுதியான அந்த உதடுகள்— இவையனைத்தையும் திரும்பத் திரும்பக் கருத்தின் திரையிலே தீட்டித்தீட்டிப் பார்த்த அரசகுமாரிக்கு, கரிகாலனை வெறுப்பதா விரும்புவதா என்றே புரியவில்லை. விருப்பும் வெறுப்பும் கலந்து தாண்டவமாடிய உணர்ச்சிகளுக்கும் மேலாக எழுந்து நின்றது ஒரு கேள்வி. ''அவர் எப்படி இதைச் சாதித்தார்?'' என்ற அந்தக் கேள்வியை இருமுறை வாய்விட்டும் சொன்னாள்.

''அது அமைச்சருக்கும் தெரியவில்லை அரசகுமாரி'' என்றாள் மாலினி.

''என்ன அமைச்சருக்கும் புரியவில்லையா?'' என்றாள் அரசகுமாரி, சிந்தனைச் சுழலிலிருந்து தன்னைச் சற்று விடுவித்துக்கொண்டு.

''இல்லை.''

''ஏன்?''

''சோழ தூதர் ஜெயசிம்மனுடன் தனிமையிலேயே பேசினார். அமைச்சரைக்கூட ஜெயசிம்மன் அறையை விட்டு அகன்றுவிடும்படி உத்தரவிட்டானாம்.''

''அப்படியா?''

''ஆம், கரிகாலர்....'' மாலினி வாக்கியத்தை முடிக்கு முன்பே அரசகுமாரி கட்டிலிலிருந்து துள்ளியெழுந்து, ''தனிமையில் பேச விரும்பினார்.... இப்பொழுது புரிகிறது'' என்று நிதானத்தை இழந்து கூவினாள். மாலினி ஏதோ பேச வாயெடுத்தாள். ஆனால் அதற்குச் சந்தர்ப்பமளிக்காமல் அரசகுமாரியே பேசிக்கொண்டு போனாள்; ''புரிகிறது மாலினி, நன்றாகப் புரிகிறது! அந்தப் படுபாவி நமது நாட்டை ஜெயசிம்மனுக்கு விற்றுவிட்டான். நேற்றுச் சொன்னதைச் சாதித்துவிட்டான். இனி விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் வேங்கி நாட்டு அரியணையில் யார் நிர்ப்பயமாக உட்காரலாம். சோழர்கள்கூட இதற்கு ஒப்புக் கொள்வார்கள். வேங்கி நாட்டு அரியணையில் யார் அமர்ந்தால் சோழர்களுக்கென்ன? அவர்களுக்கு வேண்டியது சாம்ராஜ்ய விஸ்தரிப்பு. இதற்கு இடமளிக்கக் கூடிய எதையும் சோழர்கள் ஒப்புக்கொள்வார்கள் இனி விமலாதித்தன் வம்சம் அழிந்தது; அதன் பெருமை அழிந்தது! இத்தனைக்கும் மூலகாரணம் ஓர் அயோக்கியன்; தர்க்க சாஸ்திரம் படித்த ஒரு போக்கிரி. வெகு சுலபத்தில் முடித்து விட்டான் காரியத்தை'' என்று விடுவிடு என்று பேசினாள். அவள் நினைத்ததுபோல் காரியம் அத்தனை சுலபத்தில் முடியவில்லை. அன்று காலையில் ஜெயசிம்மனைச் சந்தித்த கரிகாலன், தனக்குத் தெரிந்த தந்திரங்கள் அனைத்தையும் பிரயோகித்தே காரியத்தை முடித்தான். எடுத்த காரியத்தை முடிக்கக் கரிகாலன் எத்தனை பொய்களைப் புனைந்தான். எத்தனை முறை உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டான், எத்தனை முறை எதிரியுடன் சொற்போர் நடத்தினான் என்பதையெல்லாம், அந்தப் பேதை எப்படி அறிவாள்?

வேங்கி நாட்டுக்கு முதலில் வந்தபோது எந்த அறையில் ஜெயசிம்ம சாளுக்கியன் கரிகாலனைச் சந்தித்தானோ அதே அறையில்தான் அன்று காலையிலும் அவனுக்குப் பேட்டியளித்தான். வல்லூறின் கண்களைவிடக் கூர்மையான அதே கண்கள், எள்ளளவும் வெளியில் காட்டாத நிச்சலனமான அதே முகம் அவனை ஏறெடுத்துப் பார்த்தது. உறுதியும் கொடுமையும் நிறைந்த புன்முறுவல் பயங்கரமான மீசைக்குக் கீழே இதழ்களில் தவழ்ந்து நின்றது. ஜெயசிம்மன் முதலில் பேசவில்லை. கரிகாலன் பேசுவதைக் கேட்கத் தன் செவிகள் தயாராயிருக்கின்றன என்பதைப் பார்வையின் மூலமே

எங்களை மிகவும் கவர்ந்தது. அங்கே நம் நண்பர்களுக்கு கடிதம் எழுதிப் போஸ்ட் செய்தால் அந்த ஆஸ்ரமத்தின் முத்திரையுடன் அவர்களுக்குப் போய்ச் சேரும். நண்பர்களுக்கு வித்தியாசமான பரிசாக இருக்கும் என்று எண்ணினால் எங்களிடம் கவர், கார்டு ஏதும் இல்லை. அங்கு டூர் செல்லும் வாய்ப்புக் கிடைத்தால் உங்களுடன் கவர், கார்டு எடுத்துச் செல்லுங்கள்.

—பானுதம்பி

உணர்த்தினான். அவன் மௌனத்திலும் ஒரு கட்டளை தொனித்தது.

மேலைச் சாளுக்கிய மன்னனைத் தலைதாழ்த்தி வணங்கிய கரிகாலன், ''தங்கள் அடிமை வந்திருக்கிறேன்'' என்று சொல்லி, மடியிலிருந்த ஓலை ஒன்றை எடுத்து ஜெயசிம்மனிடம் நீட்டினான். திடமான தன் கரங்களிலொன்றை நீட்டி ஓலையை வாங்கிய ஜெயசிம்மன், ஒரு விநாடிதான் அதைப் பார்த்தான். பிறகு ஓலையைத் திருப்பிக் கரிகாலனிடம் கொடுத்துவிட்டு, லேசாகச் சிரித்துக்கொண்டே கேட்டான்: ''இங்கு எந்த முறையில் வந்திருக்கிறாய் கரிகாலா? சோழ நாட்டுத் தூதர் என்ற முறையிலா; அல்லது என் வீரர்களால் சிறைப் படுத்தப்பட்டவன் என்ற முறையிலா?'' என்று.

கரிகாலனும் மெள்ள நகைத்து விட்டு, ''இரண்டுக்கும் அதிக வித்தியாசமில்லையே மன்னவா!'' என்றான்.

''வித்தியாசமில்லையா?'' உணர்ச்சி ஏதுமில்லாமலேயே தொனித்தது மன்னன் குரல்.

''தங்கள் மேற்பார்வையில் இருப்பவன், பிற நாட்டுத் தூதனாயிருந்தாலும், தங்கள் கைதி போல்தானே அலுவல் புரியமுடியும்?'' என்றான் கரிகாலன்.

ஜெயசிம்மன் புருவங்கள் ஏதோ கேள்வி கேட்கும் முறையில் சற்றே உயர்ந்தன. அந்தக் கேள்வி அவன் உதடுகளிலிருந்து உதிரும் முன்பாகக் கரிகாலனே பேசத் தொடங்கி, ''நான் இப்படித் திடீரெனச் சோழநாட்டுத் தூதனாக வந்திருப்பது தங்களுக்கு ஆச்சரியத்தை விளைவித்திருக்கிறது; அதுமட்டுமல்ல; என்மீது அவநம்பிக்கையையும் அளித்திருக்கிறது!'' என்றான்.

ஜெயசிம்மன் மேலும் மௌனம் சாதித்ததால், கரிகாலன் பேச்சைத் தொடர்ந்து, ''நான் அரிஞ்சயனை இங்கிருந்து கடத்திச் சென்றதே தங்களுக்கு என்மீது சந்தேகத்தைக் கிளப்பியிருக்கலாம்...'' என்று மிகப் பணிவுடன் வார்த்தைகளை உதிர்த்தான்.

''அரிஞ்சயனைக் கடத்திச் சென்றது மட்டுமல்ல; விஜயாதித்தனை ஏமாற்றி, செங்கமலச் செல்வியையும் அழைத்துச் சென்று, அரையன் ராஜராஜனிடம் ஒப்படைத்திருக்கிறாய்'' என்று விளக்கிய ஜெயசிம்மன், கரிகாலன் செய்துள்ள குற்றம் எத்தனை கடுமையானது என்பதைச் சுட்டிக் காட்டினான். அந்தச் சமயத்தில்கூட, ஜெயசிம்மன் முகத்தில் சிரிப்பின் சாயை மண்டிக் கிடந்ததேயொழிய, கோபத்தின் குறி சற்றேனும் புலப்படாததைக் கண்ட கரிகாலன், மேலைச் சாளுக்கிய மன்னரிடம் மிக எச்சரிக்கையுடன் பேச வேண்டிய அவசியத்தை உணர்ந்தான். ஆகவே, பணிவு நிரம்பிக் கிடந்த குரலிலேயே மீண்டும் பேச்சைத் துவங்கி, ''எல்லாம் தங்கள் கட்டளையை முன்னிட்டுத்தான் மன்னவா!'' என்று கூறினான்.

''எது என் கட்டளை கரிகாலா? அரிஞ்சயனைக் கடத்திச் சென்றதா? அல்லது செல்வியை விடுவித்ததா?''

பார் கை எழுதியது! விடை:

T. [illegible]

[illegible]

பொன்மலர் [illegible]

தொகுப்பு: எஸ்.ஜீ.

என்று கேட்டான் ஜெயசிம்மன்.

''இரண்டுமில்லை மன்னவா; தாங்கள் முதலில் எனக்கு இட்ட கட்டளை.''

''என்ன அது?''

''தாங்கள் அடிமையாக அலுவல் புரியச் சொன்னீர்கள். அதற்காகப் பெரும் பதவி அளிப்பதாக வும் உறுதி கூறினீர்கள்.''

''ஆமாம், உறுதி கூறினேன்.''

''நானும், தங்கள் பக்கம் அலுவல் புரிய ஒப்புக் கொண்டேன். அதன் விளைவுதான் இது!''

''எது?''

''நான் செய்திருக்கும் காரியம்.''

''என்ன காரியத்தைச் சாதித்து விட்டாய்?''

''விஷ்ணுவர்த்தன விஜயா தித்தனை வேங்கி நாட்டு அரியணையில் அமர்த்தும் சூழ்நிலையைச் சிருஷ்டித்து விட்டேன்.'' கரிகாலன் இந்தப் பதிலை மிக மெதுவாகத்தான் சொன்னான். ஆனால் எதற்கும் அசையாத ஜெய சிம்மனையே அது அசைய வைத்தது.

ஜெயசிம்ம சாளுக்கியனின் கரிய பெரும் புருவங்கள் சட்டென ஒரு வினாடி உயர்ந்தன. உதடுகள் துடிப்பதற்கு அறிகுறியாக, மீசையும் ஒரு முறை அதிர்ந்து அடங்கியது. ''என்ன! விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனன் வேங்கி நாட்டு அரியணையில் அமரலாமா?'' என்று வினவினான் ஜெயசிம்ம சாளுக்கியன்.

''ஆம்; இன்னும் பதினைந்து நாட்களில்.'' திட்டமாகப் பதில் சொன்னான் கரிகாலன்.

''அப்படியானால் நரேந்திரன்...?''

''ராஜராஜ நரேந்திர மன்னரையும் அரசகுமாரி நிரஞ்சனா தேவியையும் சில நாட்கள் தமது விருந்தாளிகளாக வைத்திருக்கச் சோழ மன்னர் இஷ்டப்படுகிறார்.''

ஜெயசிம்மன் சிம்மாசனத்தில் ஒருமுறை அசைந்து உட்கார்ந்து, நம்பிக்கையைச் சிறிதும் பிரதிபலிக்காத விழிகளைக் கரிகாலன்மீது நாட்டி, ''என்ன, சோழமன்னன் இங்கிருந்து நரேந்திரனையும் அவன்



சகோதரியையும் தம் நாட்டுக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறாரா?'' என்று ஆச்சரியம் ததும்பி நின்ற குரலில் கேட்டான்.

''ஆம் மகாராஜா! சோழ நாட்டுத் தூதுவன் என்ற முறையில், நான் தங்களிடம் அவர்களை அழைத்துச் செல்ல அனுமதி கேட்டு வந்திருக் கிறேன்,'' என்று சொல்லித் தலையைத் தாழ்த்தி ஜெயசிம்மனை வணங்கினான் கரிகாலன்.

ராட்சஸன்போல் சிம்மாசனத் தில் உட்கார்ந்திருந்த ஜெயசிம்மன் ஸ்தம்பித்துப் போனான். ''இவன் சொல்வது உண்மையாக எப்படி இருக்க முடியும்?'' என்று எண்ணி எண்ணிப் பார்த்து, விடை காணாமல் தவித்தான்.

மெள்ள கரிகாலனே சிக்கலை அவிழ்க்கத் தொடங்கி, நிலைமையை விவரித்தான்.

''மன்னவா! தங்களிடம் சேவை செய்ய ஒப்புக்கொண்ட நாள் முதலே அதற்கான திட்டங்களை வகுத்தேன். அரிஞ்சயனைக் கடத்திச் சென்று சோழர்களிடம் ஒப்படைத்தேன். அரையன் ராஜராஜன் மகளைத் தங்கள் மருமகனிடமிருந்து விடுவித்தேன். இரண்டினாலும் சோழப்படைத் தலைவரின் நம்பிக்கையைப் பெற்றேன். தஞ்சைத் துறவியார் கொடுத்த ஓலை அந்த நம்பிக்கையை உறுதிப்படுத்தியது. பிறகு நானும் படைததலைவன் பதவியைப் பெற்றேன். படைத் தலைவர் மந்திராலோசனையில் கலந்துகொண் டேன். ஆனால எந்த நிலையிலும் தங்கள் நலனை மட்டும் மறக்கவில்லை. சந்தர்ப்பம் வந்தபோது காரியத்தைச் சாதித்தேன். சோழப் படைகள் வட நாட்டு யாத்திரைக்குச் சித்தமாயிருக் கின்றன. ஆனால் இடையே நிற்கின்றது

அவன்: ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி கேப்டன் ஆலன் பார்டருக்குத் தலைவலி வந்தா எப்படி இருக்கும்?
இவன்: Win... Win... என்று தெறிக்கும்.
—எஸ்.மீனலோசனி.

ீவங்கிநாடு. இதைக் கடந்து வடநாடு செல்லத் தங்கள் உறவுவேண்டும் என்று மந்திராலோசனையில் கூறினேன்,'' என்று பேசிய கரிகாலன், சிறிது பேச்சை நிறுத்தி ஜெயசிம்மனைக் கவனித்தான்.

''ஹூம்—'' என்ற ஒரு சப்தமே எழுந்தது ஜெயசிம்மனிடமிருந்து.

கரிகாலன் மெள்ள ஜெய சிம்மனை அணுகி, ''முதலில் அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை, மன்னவா! வந்தியத்தேவர் கூடச் சற்று யோசித்தார். ஆனால் அவர்கள் சாம்ராஜ்யப் பேராசையைத் தூண்டி விட்டேன். தங்கள் படைபலத்தையும், வேங்கியின் சக்தியையும், பற்றி அளவுக்குச் சற்று அதிகமாகவே சொன்னேன். கடைசியில் தங்கள் நட்பைப் பெறவும், வேங்கி நாட்டைத் தங்களிடம் ஒப்படைக்கவும் தீர்மானித்தார்கள்,'' என்று கூறினான்.

''என்னிடமிருந்து சோழர்கள் எந்த உதவியை எதிர்பார்க்கிறார்கள்?'' என்று கேட்டான் ஜெயசிம்மன்.

''நட்புள்ள ஒரு நாட்டு மன்னன் செய்யக்கூடிய உதவியைத்தான் எதிர்பார்க்கிறார்கள். அவர்கள் படைகள் இந்நாட்டு வழியாக வடக்கே செல்லத் தங்கள் அனுமதி வேண்டும்.''

''அவ்வளவுதானா?''

''அவ்வளவேதான் மன்னவா! தாங்கள் அனுமதி கொடுத்தால், இன்னும் ஒரே வாரத்திற்குள் ராஜராஜ நரேந்திரனையும் நிரஞ்சனாதேவியையும் அழைத்துக்கொண்டு, நான் அரையன் ராஜராஜன் பாசறைக்குப் பயணமாவேன்.''

''இதற்கு நரேந்திரன் ஒப்புக்கொள்ள வேண்டுமே?''

''ஒப்புக்கொண்டு விட்டார்.''

இந்தப் பதில் ஜெயசிம்மனை அப்படியே தூக்கிவாரிப் போடவே, திடீரென ஆசனத்திலிருந்து எழுந்து, பலமான தன் கரங்களிலொன்றைக் கரிகாலன் தோள்மீது வைத்து அவனை மீண்டும் கூர்ந்து நோக்கினான். அப்படிக் கூர்ந்து நோக்கிய அந்த விழிகளில் சந்தேகம் பலமாய்ப் படர்ந்தது. ''நீ எப்போது நரேந்திரனைச் சந்தித்தாய்?'' என்று கேட்டான் ஜெயசிம்மன், அந்தச் சந்தேகம் குரலிலும் தொனிக்க.

''நேற்றிரவு சந்தித்தேன் மன்னவா. தங்களுடைய திட்டங்களுக்கு வழியைச் சீர்ப்படுத்த வேண்டியது உங்கள் அடிமையின் பொறுப்பல்லவா? அதற்காக, அவரிடம் ஏதேதோ பொய் சொன்னேன்.''

''என்னிடம் சொல்வது மட்டும் நிஜமென்று எப்படித் தெரியும் எனக்கு?''

''கிடைக்கும் பலனிலேயே இருக்கிறது அத்தாட்சி. தங்கள் திட்டம் ராஜராஜ நரேந்திரனை விலக்கி, தங்கள் மருமகனை மன்னனாக்குவது. அதற்கு நான் வழிகோலவில்லையா?'' என்று கேட்டான்.

எதற்கும் குழம்பாத ஜெயசிம்மன் மூளைகூடக் குழம்பிக் கிடந்தது. எதிரே நிற்கும் அயோக்கியன் யார் பக்கம் பணிபுரிகிறான் என்பதை நிர்ணயிக்க ஜெயசிம்மனால்கூட முடியவில்லை. அது மட்டுமா? அடுத்த சில தினங்களில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைத் தடுக்கவும் ஜெயசிம்மன் சக்தியிழந்து போனான். திறமைசாலியான சூதாட்டக்காரன் சதுரங்கப்பலகையில் காய்களை நகர்த்துவதுபோல, வேங்கி நாட்டு ராஜகுடும்பத்தினரைத் தன் இஷ்டப்படி திருப்பிக் கொண்டிருந்தான், பௌத்த மடத்தின் மாணவனான கரிகாலன். அவன் இஷ்டப்படி வேங்கி நாடு மட்டுமல்ல, சோழ நாடும் ஆடியது. ஜெயசிம்மனைக் கரிகாலன் சந்தித்த நாளிலிருந்து, சரியாக ஆறாவது நாள், பிரமிக்கத் தக்க நிகழ்ச்சிகள் வேங்கி நாட்டின் தலைநகரிலே நடந்தேறின.

தொடரும்)















கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே
கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி. வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.

முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 010



# இந்த ஜோக்குகளில்

## ஒரு விசேஷம் இருக்கிறது

(78'ம் பக்கம் பார்க்க)

**வ**க்கில்: ஏம்மா, மேசை மேல் இருந்த பேப்பர் வெயிட்டாலே உன் கணவனை ஏன் அடிச்சே?

அவள்: மேசையைத் தூக்க முடியலிங்க.

—பாரதிமோகன்

**நீ**திபதி: ஏம்மா, விவாக ரத்து வழக்கு போட்டிருக்கியே, அவர் கூட வாழ என்ன தடை?

அவள்: அவர் எப்பப் பார்த்தாலும் என்னை அடிக்கிறாருங்க.

நீதிபதி (கணவனிடம்): ஏம்பா, மனைவியை அடிக்கிறாயா?

கணவன்: இல்லிங்க... அவங்கதான் நம்பளை அடிக்கிறாங்க.

நீதிபதி: என்னை ஏம்ப்பா நடுவிலே இழுக்கிறாய்?

—த. தர்மலிங்கம்



## 46. உணர்ச்சியின் அதிர்ச்சி

ரகசியத்தை அறிவதில் மனிதனுக்குள்ள ஆசை ஒரு தீப்பொறி. ஊகம் என்ற காற்றினால் அது வீசப்படும்போது, வதந்தி என்ற பெரும் தீ சமூகத்தில் படுவேகத்தில் பரவி விடுகிறது. அப்படிப் பரவும்போது, அது யார் யார் நலன்களைச் சுடும், யார் யாரை விட்டு வைக்கும் என்பதை நிர்ணயிக்க முடியாது. எப்பேர்ப்பட்ட திறமைசாலியையும் திணற வைக்கும் நிலையை வதந்தி சிருஷ்டித்து விடுகிறது. வேங்கியின் தலைநகருக்குள் கரிகாலன் சோழநாட்டுத் தூதனாக நுழைந்த இரண்டு மூன்று தினங்களுக்கெல்லாம் பலப்பல வதந்திகள் ஊரில் பரவியிருப்பதை ஒற்றர்கள் மூலம் கேட்டறிந்த ஜெய்சிம்மன், என்ன செய்வது, நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்பதை அறியாமல் குழம்பிப் போனான்.

''சோழர்கள் ஜெயசிம்ம சாளுக்கியனுககு அடிபணிந்து விட்டார்கள். இராஜேந்திர சோழதேவர் தமது மருமகனான ராஜராஜ நரேந்திரனைச் சோழ நாட்டுக்கு அழைத்துச் சென்றுவிடப் போகிறார்!'' என்று சிலர் பேசினார்கள்.

சாண்டில்யன்

''அப்படியில்லை; ஜெயசிம்ம சாளுக்கியன் சோழர்களுக்குப் பயந்து வேங்கி நாட்டை அவர்களிடம் ஒப்படைக்கத் தீர்மானித்து விட்டான்!'' என்று மற்றும் சிலர் பேசினார்கள். ''அதெல்லாம் காரணமல்ல; விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை அரியணையில் அமர்த்த, ஜெயசிம்ம சாளுக்கியனும் புதிதாக வந்திருக்கும் சோழ தூதருமாகச் சேர்ந்து ஏதோ சதி செய்திருக்கிறார்கள். ஆனால் இதெல்லாம் அதிக நாள் நீடிக்காது. கூடிய சீக்கிரம் சோழர்களின் பெரும் படை வந்து வேங்கியைச் சுட்டெரித்து விடும்,'' என்று வேறு சிலர் பேசினார்கள்.

இப்படி, மக்களிடையே வதந்தி பலவிதமாகப் பரவிக் கிடப்பதையறிந்த ஜெயசிம்மன், பெரிதும் குழப்ப மடைந்திருந்தான். இந்தக் குழப்பம் அவனை மட்டுமல்ல, கரிகாலனைச் சேர்ந்தவர்களையும் பலமாகப் பிடித்துக் கொண்டது. கண்ட வதந்திகள் நகரத்தில் உலவுவதால், தூதர் காரியாலயத்துக்கு ஏதாவது கெடுதி நேரிட்டால் என்ன செய்வது என்ற பீதி முத்துத்தேவன் மனத்தில் பலமாகப் படரவே, அவன் கரிகாலனை நேரடியாகவே கேட்டான், ''அபாயத்தை அளிக்கக்கூடிய வதந்திகள் நகரத்திலே படர்ந்து வருகின்றனவே, தெரியுமா உங்களுக்கு?'' என்று.

பல நாட்களுக்கு முன்பு எந்த மாளிகையில் பிரும்மமாராயனின் விருந்தாளியாகவும் பிறகு கைதியாகவும் இருந்தானோ, அதே மாளிகையின் அறையொன்றில் தீவிர யோசனையுடன் உலாவிக் கொண்டிருந்த கரிகாலன், முத்துத்தேவனின் வார்த்தைகளைக் கேட்டதும், சற்று நின்று அவனை உற்று நோக்கிவிட்டு, ''தெரியும் முத்து!'' என்று பதில் சொன்னான்.

''இந்த வதந்திகளால் ஏற்படக்கூடிய பலனை உணர்ந்தீர்களா?'' என்று முத்துத்தேவன் மீண்டும் வினவினான், எல்லையற்ற கவலை முகத்தில் தவழ.

''பலனை உணராமல் யாராவது காரியத்தில் இறங்குவார்களா?''

''சோழ தூதர் சொல்வது என்னவென்று எனக்கு விளங்கவில்லை.''

''விளங்காததற்கு என்ன இருக்கிறது இதில்? வதந்திகளைக் கிளப்பிவிட்டது நான்தான். ஆகையால் பலனைக் கருதாமல் இருந்திருப்பேனா என்பதை யோசித்துப் பார் முத்து.''

முத்துத்தேவனுக்கு என்ன பேசுவதென்றே புரியாததால் ஒரு கணம் விழித்தான்; மறுகணம் பதறினான். அடுத்தபடி அவன் பேசிய பேச்சில் பயமும் ஓரளவு தொனித்தது. ''வதந்திகளை நீங்கள் கிளப்பி விட்டீர்களா? இதை ஜெயசிம்மன் அறிந்தால், விளைவு என்ன ஆகும் தெரியுமா?'' என்று கேட்டான் முத்துத் தேவன்.

''மனித சரித்திரத்தில் வதந்திகளின் மூலத்தைக் கண்டுபிடித்தவன் எவனுமே கிடையாது, முத்து. நமது ஒற்றர்கள் நகரத்தின் பல இடங்களிலும் சஞ்சரித்து வருகிறார்கள். ஏதோ அரை குறையாக அரசாங்க விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். மீதியை மக்களின் ஊகத்துக்கு விட்டு விடுகிறார்கள். விஷயம் எந்த இடத்திலிருந்து முளைத்தது, எப்படிக் கிளை விட்டது, இலையும் பூவும் காயுமாக எப்படிப் பரவியது என்பதை



டி.வி.யில் காண்பிக்கப்பட்ட 'காணாமல் போனவர்கள்' பகுதியைக் கண்ட சிறுமி கேட்ட கேள்வி:

''ஏம்பா! அவங்களைப் போட்டோ பிடிக்கும்போதே பிடிச்சிருக்கலாமே? ஏன் விட்டிட்டாங்க?''

–திருமலை கோவிந்தன்

## ஒரு தாத்தா பள்ளிக் கூடம் நடத்துகிறார்





எங்கள் ட்ள்ளியில் ர ண்டுத் தேர்வில் கண்காணிப்பாளர் ன்றி நடத்தேர்வு நடக்கிறது. தேர்வு பூதுவ ற்கான தாள்கள் தேர்வு டக்கும் இடத்தில் வைக்கப் ட்டிருந்தன. காசை அந்த இடத்தில் வத்துவிட்டுத் தாளையும் எடுத்துக் காண்டோம்.

ஆசிரியர்களை 'ஐயா' என்றும், பூசிரியைகளை அக்கா என்றும் அழைக் றோம்.

வகுப்பில் உள்ளேன் ஐயா– ஆஜர் ஐயா எல்லாம் கிடையாது. 'ஜெய்ஹிந்த்' என்றுதான் சொல் லுவோம்.

காந்திஜி செய்த அதே பிரார்த்தனை, ரகுபதி ராகவ ராஜாராம் என்ற ராம்துன் பாடல், பகவத்கீதை, பைபிள், குர்ரான் ஓதுதல்

---

நிர்ணயிக்க யாராலும் முடியாது. சிறிதும் பயப்படாதே. ஜெயசிம்மனை விடச் சிறந்த ராஜ தந்திரியாலும் இந்த வதந்திகளின் வித்தை நட்டவன் யார் என்பதை அறிய இயலாது,'' என்றான் கரிகாலன்.

முத்துத்தேவன் சிறிது நேரம் யோசித்துவிட்டு, ''இந்த வீண் வதந்திகளைக் கிளப்பிவிட்டுப் பயன் என்ன?'' என்று வினவினான்.

''வதந்தி ராஜதந்திரத்துக்கு அவசியமான கருவிகளில் ஒன்று. அதுவும் ஜெயசிம்மனைப் போன்ற பெரிய ராஜ தந்திரியுடன் உறவாடும்போது அந்தக் கருவி மிக மிக அவசியமாகிறது முத்து. ஜெயசிம்மனைச் சற்று நிம்மதியாகப் படுக்கவிட்டால், அவன் சிந்தனை வேலை செய்யும்; சிந்தனை வேலை செய்தால் தெளிவு ஏற்படும்; தெளிவு ஏற்பட்டால் நீயும் நானும்...''

''சொல்லுங்கள் தூதரே!''

''நேராகச் சிறைச்சாலைக்குச் செல்ல வேண்டி வரும். கோதண்டத்தில் மாட்டி இருவர் தோலையும் உரித்து விடுவான் ஜெயசிம்மன்,'' என்று சொல்லி, லேசாக நகைத்தான் கரிகாலன்.

ஆனால், முத்துத்தேவன் கரிகா லனின் நகைச்சுவையில் பங்கு கொள்ளக் கூடிய மனோ நிலையில் இல்லை.

பிரும்ம மாராயன் செய்து வைத்துள்ள வேங்கி நாட்டுக் கோதண்டத்தை அந்த நகரத்துக்கு வந்த மறு நாளே பார்த்து, அது இயங்கும் முறையையும் அறிந்து கொண்டிருந்த முத்துத்தேவன் உடலில், அதைப்பற்றிய பிரஸ்தாபம் ஏற்பட்ட மாத்திரத்திலேயே ஒரு பயங்கர உணர்ச்சி ஊடுருவிச் சென்றதால், அவன் கரிகாலனுடைய சிரிப்பை ரசிக்க முடியாமல், கவலை தோய்ந்த குரலிலேயே கேட்டான். ''இத்தனை ஆபத்தில் நாம் தலையைக் கொடுப்பது அவசியமா?'' என்று.

''சிங்கத்தின் குகைக்குள் நுழைந்துவிட்டோம் முத்து. இனி என்ன செய்வது என்பதைப்பற்றிச் சிந்திக்க வேண்டுமேயொழிய, உறுமி வரும் சிங்கத்தைக் கண்டு பயந்து என்ன பயன்?'' என்று வினவிய கரிகாலன், முத்துத்தேவன் அருகில் சென்று, ''முத்து! எல்லாம் திட்டப்படியே நடக்கிறது; கவலைப்படாதே. இன்னும் சில தினங்களில் வேங்கி நாட்டின் தலை எழுத்தையே அழித்து எழுதி விடுவோம்,'' என்று உறுதி கூறினான்.

கரிகாலனுடன் பழகிய சில தினங்களுக்குள்ளாகவே அவனிடம் உயிரை வைத்திருந்த முத்துத்தேவன் கவலையை அந்த உறுதிமொழி சிறிதும் உடைக்கவில்லை.

அந்தக் கவலை முத்துத் தேவனை மட்டுமல்ல, அந்த மாளிகை யிலிருந்த சோழ நாட்டு ஒற்றர்கள், வீரர்கள் எல்லோரையுமே கவர்ந்து கொண்டிருந்ததால் மாளிகைவாசிகளின் முகங்களில் மலர்ச்சி சிறிதும் இல்லை. எந்த விநாடியிலும் ஜெயசிம்மன் உண்மையை அறிந்து தூதர் மாளிகை

எல்லாம் வெள்ளிக்கிழமை நடக்கும் கூட்டுப் பிரார்த்தனையில் இடம்பெற்று வருகின்றது.

இந்தப் பள்ளிக்கூடம் எது தெரியுமா? தே. கல்லுப்பட்டி—காந்தி நிகேதன் ஆசிரமப் பள்ளிக்கூடம்தான். ஆசிரமத்தை நிர்வாகம் செய்யும் காரியதரிசியைத் 'தாத்தா' என்றுதான் அழைக்கிறார்கள். அவர் சுதந்திரப் போராட்ட வீரர். வயது 83.

—பா. பானுமதி.

யையும், அதிலிருக்கும் தங்களையும் அழித்துவிடலாம் என்ற கிலியில் அனைவரும் ஆழ்ந்து கிடந்தனர்.

இத்தனை அபாய நிலைமையிலும் சிறிதும் கவலையில்லாமல் முகத்தில் புன்சிரிப்புடன் உலாவிக் கொண்டிருந்தவன் கரிகாலன் ஒருவன் தான்.

ஆற்றுக்குப் பாலம் அமைக்குப் சிற்பி எப்படி அதன் வெள்ளத்தைக் கண்டு அச்சப்படுவதில்லையோ, அப்படியே எதற்கும் அஞ்சாமல் தன் திட்டத்தை உருவாக்குவதில் முனைந்திருந்தான் கரிகாலன். வேங்கி நாட்டின் அரசியல் வாழ்வை அடியோடு மாற்றியமைக்கத் திட்டமிட்டுள்ள அந்த பௌத்த மடாலயச் சிஷ்யன், அரசியல் அரங்கத்தில் மாறுதல் ஏதும் ஏற்படாதது போலவே நடந்துகொண்டு அரண்மனை வட்டாரங்களில் சுற்றிக் கொண்டிருந்தான். ஜெயசிம்ம சாளுக்கியனைக் கூடிய வரையில் பிரியாமல் அவனை அடிக்கடி சந்தித்துக் கொண்டும், அவனுடன் பேசிக்கொண்டும் உலாவிக் கொண்டும் இருந்த கரிகாலனின் மதிப்பு, அரண்மனை வட்டாரங்களில் நாளுக்கு நாள் ஏறிக்கொண்டிருந்தது. உள்ளூர எவ்வளவோ கரிகாலனை வெறுத்தாலும், ஊரில் தன்னைப்பற்றி உலாவிக் கொண்டிருந்த வதந்திகள் ஊர்ஜிதமாகாதபடி தடுக்க வேண்டுமென்ற காரணத்தால், சோழ நாட்டுக்கும் தனக்கும் எந்தவிதப் பகையுமில்லாதது போல் காட்டப் பிரியப்பட்ட ஜெயசிம்ம சாளுக்கியன் சோழ தூதனான கரிகாலனுக்கு, வேறு யாருக்கும் கிடைக்க முடியாத அத்தனை சலுகைகளையும் அளித்திருந்தான். அரண்மனையில் எந்த இடத்திலும் நுழைந்து புறப்படச் சோழ தூதருக்கும் அனுமதி கிடைத்தது.

இந்த அனுமதி காரணமாகக் கிடைத்த வசதியைக் கொண்டு, ராஜராஜ நரேந்திரனுடன் நெருங்கிப் பழகிய கரிகாலன், சம்பாஷணையில் தனக்கிருந்த சாதுரியத்தினால், சோழ நாட்டுக்குப் பிரியமுடன் போவதற்கு வேண்டிய மனோநிலையையும் அவனுக்கு ஏற்படுத்தினான்.

பழக்க வழக்கங்களினாலும், ஜெயசிம்மன் அளித்த சகவாச தோஷத்தினாலும் உறுதியையும் நம்பிக்கையையும் வாழ்க்கையில் இழந்து நின்ற ராஜராஜ நரேந்திரனுக்குப் பாரதத்தில் பிறந்த பல வீர புருஷர்களின் கதைகளை எடுத்துச் சொன்னான் கரிகாலன். ராஜராஜ நரேந்திரனைப் போன்ற சிறு வயதிலேயே, அபிமன்யு எப்படிக் கௌரவர்களின் பத்ம வியூகத்தையே உடைத்தான் என்பதை விவரித்து, ''அபிமன்யு பிறந்த இந்தப் பாரத நாட்டில் தோன்றிய நீங்கள் மட்டும் எப்படி வீரத்தை இழந்திருக்க முடியும்?



''நம்ம வாத்தியார், எம்.ஏ. பரீட்சையில் பிட் அடிச்சிருப்பார் போலிருக்கு...''

''எப்படிச் சொல்றே?''

''எம்.ஏ., பி.எட்—னு எழுதறதா நெனைச்சு, எம்.ஏ., பிட்னு எழுதிட்டாரே!''

—சுப்புலட்சுமி ஜெயபாலன்



சந்தர்ப்பம் உங்களையும் அத்தனைப் பெரிய வீரனாக்கும்; சந்தேகம் வேண்டாம்,'' என்று உற்சாக வார்த்தைகளைச் சொல்லி, அவன் மனத்திலிருந்த அவநம்பிக்கையையும் உறுதியின்மையையும் மெள்ள அழித்துக் கொண்டிருந்தான் கரிகாலன்.

இருட்டில் நடந்து செல்பவனுக்குத் திடீரென்த் தீப்பந்தம் கிடைத்த கதையாக ராஜராஜ நரேந்திரனின் இருண்ட மதியிலே ஒளியைப் பிறப்பித்து, வாழ்க்கையின் உண்மைப் பாதையையும் கரிகாலன் வார்த்தைகள் காட்டவே, அவனிடம் மிதமிஞ்சிய அன்பும் மதிப்பும் ராஜராஜ நரேந்திரனுக்கு நாளடைவில் ஏற்பட்டன. கரிகாலனுடைய ராஜ தந்திரம் முற்றிப் பலன் தரும் சமயத்தில், ராஜராஜ நரேந்திரன் நம்பிக்கையே, கரிகாலனுக்குப் பெரும் துணையாக நின்றது. ராஜராஜ நரேந்திரன் மட்டும் பூரண உறுதியைக் காட்டியிரா விட்டால் கரிகாலன் திட்டத்தை உடைத்துக் கூட இருப்பாள் நிரஞ்சனா. அத்தனை ஆக்ரோஷத்துடன் ஜெயசிம்மனுடனும் கரிகாலனுடனும் போராடினாள் அவள்.

அன்று சந்திரன் தன் கலைகளைப் பூரணமாக இழந்துவிட்ட அமாவாசை தினம். வேங்கி நாட்டை இயற்கை இருள் மட்டுமல்ல, செயற்கை இருளும் சூழ்ந்து கொண்டதாகவே கருதினாள் நிரஞ்சனாதேவி. அவளும் ராஜராஜ நரேந்திரனும் வேங்கி நாட்டை விட்டுச் சோழ நாட்டுக்குச் செல்ல வேண்டும் என்ற ஏற்பாட்டின் பூர்த்தியை ஜெயசிம்மன் மெள்ள அவளுக்கு உணர்த்திக் கொண்டிருந்தான். வேங்கி நாட்டு மன்னர்களின் அந்தரங்க அறையிலேயே, அந்த நாடகம் தொடங்கியது. மன்னன் மகளின் சீற்றத்துக்கும், ஜெயசிம்ம சாளுக்கியனின் ராஜதந்திரப் பேச்சுக்கும் இடையே, பதிலேதும் சொல்லத் தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த மந்திரிப் பிரதானிகள் மௌனமாகவே நின்று கொண்டிருந்தார்கள்.

அரசகுமாரி அந்த அவையைக் கம்பீரம் சொட்டிய தன் கருவிழிகளால்



அவர்: குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன் என்கிற தியரி சரியாகத்தான் இருக்கும்!

இவர்: எப்படிச் சொல்றே?

அவர்: மாம்பலம் கிளை, மவுண்ட் ரோடு கிளை, மைலாப்பூர் கிளை, சைதாப்பேட்டை கிளைன்னு எத்தனை கிளைக்குக் கிளை தாவியிருக்கிறேன்.

—எஸ். ரஷீத் அலி

## தாடையடி!

சத்யராஜுக்குத் தாடையில் ஒரு பெரிய தழும்பு இருக்கிறது. அதைப் பற்றிக் கேட்டவுடன் சிரித்தார். பிறகு தழும்பு ரகசியத்தைச் சொன்னார்.

''நான்தான் மூத்த பிள்ளை. செல்லம் அதிகம். ஐந்து வயதுவரை தூளியில் தூங்குவேன். கோயம்புத்தூர் வட்டாரத்தில் தூளி வித்தியாசமாகக் கட்டுவார்கள். மான் கொம்பை 'வி' போல் அமைத்து, அதில் கயிறு மாட்டு வார்கள். ஆட்டுவதற்கு அது வசதியாய் இருக்கும். ஆனால் ரொம்ப உயரத்துக்கு ஆட்டினால் முனையிலிருந்து கயிறு வெளியே வந்துவிடும்.

ஒரு தடவை, நான் தொட்டிலில் வேகமாய் ஆடிக் கொண்டிருந்தேன். வேகம் அதிகமானதால், கயிறு வெளியே வந்துவிடவே, நான் வெளியே பறந்து போய் விழுந்தேன். படிக்கட்டுகள் என் தாடையைப் பதம் பார்த்துவிட்டன. அந்த 'மலரும் நினைவு'தான் இது.''

–செல்லப்பா

ஒருமுறை அளவெடுத்தாள். ஒருமுறை எதிரே அமர்ந்திருந்த தன் தம்பியை வெறுப்புடன் நோக்கினாள். தம்பிக்குப் பக்கத்தில், சந்திரனுக்குப் பக்கத்தில் ராகுவைப் போல் வேங்கி நாட்டை விழுங்கச் சித்தமாக உட்கார்ந்திருந்த மேலைச் சாளுக்கிய மன்னன் மீது ஆத்திரம் தோய்ந்த விழிகளை நாட்டினாள். மீண்டும் அவை முழுவதையும் தன் வேல் கண்களால் தாக்கிவிட்டுக் கேட்டாள் அரசகுமாரி: ''இந்த நாட்டை விட்டு என்னை வெளியேற்ற உங்களுக்கு யார் அதிகாரம் கொடுத்தது?'' என்று. இந்தக் கேள்வியை அவள் பொதுவாகவே கேட்டாலும், அவள் விழிகள் கடைசியில் வேங்கி நாட்டுப் பேரமைச்சர் மீதே நிலைத்தன.

அந்தப் பார்வையைத் தாங்க மாட்டாத பேரமைச்சர், மிகுந்த சங்கடப்பட்டு ஆசனத்தில் அசைந்து ஜெயசிம்ம சாளுக்கியனை நோக்கினார், மேலைச் சாளுக்கிய மன்னனையும் அந்த நிலை பெரும் சங்கடத்துக்குள்ளாக்கியிருந்தாலும், அவன் ஓரளவு சமாளித்துக்கொண்டு, ''குழந்தாய்! என்னை நாட்டை விட்டு வெளியேற்றுவதாக யார் சொன்னது?'' என்று வினவினான்.

அரசகுமாரியின் கண்கள் கனலைக் கக்கின. ''இல்லை! நாட்டை விட்டு வெளியேற்றவில்லை. சோழ நாட்டைச் சுற்றிப் பார்த்துவர உல்லாசப் பயணம் அனுப்புகிறீர்கள்!'' என்று இகழ்ச்சியும் கோபமும் ததும்பும் குரலில் சீறினாள் நிரஞ்சனாதேவி.

''தவறாக நினைக்கிறாய் குழந்தாய்! உங்களைச் சோழ நாட்டுக்கு அனுப்ப எங்களுக்கு இஷ்டமில்லை தான்,'' என்று ஏதோ பதில் சொல்லத் தொடங்கிய ஜெயசிம்மனை, இடையிலே வெட்டின அரசகுமாரியின் இகழ்ச்சி நிரம்பிய சொற்கள்: ''உங்களுக்கு இஷ்டமில்லை. சோழப் பேரரசர் விரும்புகிறார், அதனால் அனுப்புகிறீர்கள்!'' என்று நிரஞ்சனா தேவி சுடச்சுட வார்த்தைகளை உதிர்த்தாள்.

''அதில் சந்தேகமென்ன அரசகுமாரி?'' என்றார் பேரமைச்சர், மெள்ள தைரியத்தை வரவழைத்துக் கொண்டு.

நிரஞ்சனாதேவியின் கண்களில் ஆத்திரம் தாண்டவமாடியது. ''பேரமைச்சரே! நீர் என் தகப்பனார் காலத்திலிருந்து இங்கு பதவி வகிக்கிறீர் அல்லவா?''

''ஆம் தேவி.''

''உமக்கு அரசியல் விவகாரமும் ராஜதந்திரமும் சிறிது தெரியும்.''

''அப்படித்தான் தங்கள் தந்தையார் அபிப்பிராயப்பட்டார்.''

''அப்படியானால் சொல்லுங்கள்: மேலைச் சாளுக்கிய மன்னருக்கும் சோழர்களுக்கும் இத்தனை வருஷ காலமாக நட்பு ஏற்பட்டதுண்டா?''

''நட்பாவது? தீராத போர்தான்!''

''அப்படியானால் திடீரென்று சோழர்களுக்கு இவரிடம் இப்பொழுது நட்பு ஏற்படவேண்டிய காரணம் என்ன?''

பேரமைச்சர் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தார். அரசகுமாரி, விடாமல் அவரை வற்புறுத்தி, ''பேரமைச்சரே! உமது நாவு அசைய வில்லையா? விமலாதித்தன் உப்பை உண்டு, அவன் குலத்தை நாசம் செய்ய முயலும் சதிக்கு உடந்தை யாயிருக்கிறோமே என்ற வெட்கம் உமது நாவையும் அடைத்துவிட்டதா?'' என்று வினவினாள்.

பேரமைச்சர் பேசவில்லை. அவர் உதவிக்குக் கரிகாலனே விரைந்தான்: ''அரசகுமாரி! கலங்கிய உங்கள் கருத்தில், நடக்காத சதிகள், இல்லாத சூழ்ச்சிகள், நாங்கள் சிந்தனையால் நினைக்கவும் முடியாத கேடுகள் சகலமும் வலம் வருகின்றன. தங்களை யாரும் இந்த நாட்டைவிட்டு வெளியேறச் சொல்லவில்லை. சோழ மன்னர் விருப்பத்தை ஜெயசிம்மனிடம் தெரிவித்தேன்; அவர் வேங்கிநாட்டு மன்னரைக் கலந்தார்; மன்னர் இசைந்தார். அதனால் ஏற்பட்ட முடிவு இது. மன்னர் என்னுடன் வருவதாக முடிவு செய்து விட்டார்கள். தங்களுக்கு இஷ்ட மில்லையேல், தாங்கள் இங்கேயே தங்கலாம்,'' என்று ராஜராஜ நரேந்திரன்மீது தன் கண்களைச் சிறிதே ஓட்டினான்.

அரசகுமாரியின் கயல் விழிகளும் தம்பியின் மீது நிலைத்தன. ''வேங்கி நாட்டு மன்னர் தமது பொறுப்பை விட்டு நாட்டைத் துறந்து ஓடச் சம்மதித்துவிட்டாரா?'' என்று வினவினாள், குரலில் இகழ்ச்சி தொனிக்க.

சலனப்பட்ட கண்களை

லேசாக உயர்த்தித் தன் சகோதரியை ஒரு விநாடி நோக்கினான் ராஜராஜ நரேந்திரன். அவள் கண்களைத் தவிர்ந்து நிற்கச் சக்தியற்ற தன் கண்களை மறுபடியும் தரையில் தாழ்த்திக் கொண்டு, "விமலாதித்தன் மகன் பெற்றுப்பைப் புறக்கணிக்கும் கோழையல்ல அக்கா! நாட்டின் நன்மையை முன்னிட்டு நான் செய்த முடிவு இது. என் பூரண சம்மதத்துடனேயே இந்த ஏற்பாடு நடந்திருக்கிறது. இதற்காகக் கரிகாலர் மீதோ மேலைச் சாளுக்கிய மன்னர் மீதோ நீ குற்றம் சாட்டிப் பயனில்லை. நான் சோழ நாடு போகிறேன். நீ இஷ்டப்பட்டால் வா; இல்லாவிட்டால் இங்கேயே இரு!" என்று சொல்லிவிட்டு, அவை அத்துடன் முடிவடைந்து விட்டது என்பதற்குறிகுறியாக அரியணையை விட்டு எழுந்தான் ராஜராஜ நரேந்திரன்.

தம்பியின் சொற்களைக் கேட்டு ஸ்தம்பித்துப் போன நிரஞ்சனாதேவி, தலை குனிந்தவாறே அவையிலிருந்து வெளியேறினாள். அவள் உள்ளத்திலே தம்பி தன்னைத் தூக்கியெறிந்து பேசிவிட்டானே என்ற துக்கமும் அவனுக்கு இத்தனை தைரியம் எங்கிருந்து உதயமாயிற்று என்ற ஆச்சரியமும் கலந்து தாண்டவமாடியதால், அடுத்த சில தினங்களில் உணர்ச்சியற்ற பதுமை போல் நடமாடிக் கொண்டிருந்தாள் மன்னன் மகள். கரிகாலனும் சுமார் ஐம்பது சோழ நாட்டு வீரர்களும் காவல் புரிய, ஆறு வெண் புரவிகளால் இழுக்கப்பட்ட ரதத்தில் தம்பியுடன் அவள் சோழ நாட்டுக்குப் புறப்பட்ட போதுகூட உணர்ச்சியிழந்தே கிடந்தாள்.

உணர்ச்சிக்கு ஏற்பட்ட பெரும் அதிர்ச்சியானது.. மக்கள் அவர்களை வழியனுப்பச் செய்த வாழ்த்துக் கோஷங்களைக் கூட அவள் செவிகளில் விழ விடவில்லை. அவளைத் தாங்கிச் சென்ற ரதத்தின் சக்கரங்களின் ஓசையைக் கூடக் கேட்கும் சக்தியை இழந்திருந்தாள் அவள். வேங்கி நாட்டில் தனக்கேற்பட்ட அரசியல் தோல்வியால் உண்டான அதிர்ச்சியைப் பெரிதாக மதித்து, அடியோடு மதியைக் கவலைக்கும் குழப்பத்துக்கும் பறி கொடுத்திருந்தாள் மன்னன் மகள். ஆனால், அதைவிடப் பேரதிர்ச்சி காத்திருந்தது அவளுக்கு அரையன் ராஜராஜன் பாசறையிலே

(தொடரும்)

# இவர்கள் அனைவருக்கும் சுகம்தான் பொதுவான அம்சம்...





எல்லா வயதினரும்
அனைத்து ரகங்களிலுமுள்ள
டான்டெக்ஸ் அணிந்து
சுகம் அனுபவியுங்கள்.

ttk தயாரிப்பு

**டான்டெக்ஸ்®**

வெஸ்ட்ஸ் அண்ட் ப்ரீ:ப்ஸ்
சுகம் மற்றும் உறுதித்தன்மை
அளிக்கின்றன.

Imageads 2480

# மன்னன் மகள்

4774

24-12-87

## 47. பஞ்சணையை நோக்கி நகர்ந்த உருவம்

வேங்கி நாட்டு அரச குடும்பத்தைப் பத்திரமாக அரையன் ராஜரார்ஜன் பாசறைக்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டிய பெரும் பொறுப்பை ஏற்றிருந்தாலும், கிருஷ்ணு நதியின் கரையோரமாகச் சென்று கூடல் சங்கமத்தை அடைவதால் ஆபத்துக்கள் பல அரசகுமாரிக்கும் அவள் தம்பிக்கும் ஏற்படலாம் என்ற அச்சத்தாலும், கரிகாலன் கிருஷ்ணு நதியின் கரையைவிட்டுச் சற்று விலகி, குறுக்கேயுள்ள தட்சிண பீடபூமியின் மேடான பிரதேசங்கள் வழியே அவர்களை அழைத்துச் சென்றுன். துங்கபத்திரையும் கிருஷ்ணாவும் இணையும் கூடல் சங்கமத்திற்குச் செல்வதால் அனுகூலங்கள் பல இருக்கத்தான் செய்தன. வேங்கி நாடும் மேலைச் சாளுக்கிய நாடும் ஒரு காலத்தில் ஒரே சாளுக்கியப் பேரரசாக இருந்ததால், கிருஷ்ணா நதியின் கரையோரமாகப் பட்டணங்கள் பல ஏற்பட்டிருந்தன. வேங்கியிலிருந்த சாளுக்கியக் கோட்டையிலிருந்து கூடல் சங்கமத்தின் வேட்டுவர் மாளிகை வரையில் வழி நெடுக அரச குடும்பத்தினர் தங்குவதற்கான மாளிகைகளும் வேறு பல வசதிகளும் இருந்தன. ஆனல் அந்த வழியாகச் சென்று கூடல் சங்கமத்தை அடைவதற்குள், தான் வேங்கி நாட்டு அரச குடும்பத்தை அழைத்துச் செல்லும் காரணத்தை ஜெயசிம்மன் ஊகிக்க ஏற்பட்டால், வெகு சீக்கிரத்தில் தன்னை வளைத்துக் கொள்வதற்கு மேற்கு சாளுக்கிய மன்னனுக்கு வழி உண்டு என்பதை அறிந்திருந்தாலும், அப்படி வளைத்துக் கொள்ள நேரிட்டால் வேங்கி நாட்டு அரச குடும்பத்தின் கடைசிக் கட்டம் அதுவாகவே இருக்குமென்பதையும் உணர்ந்திருந்ததாலும், வழக்கமான வழியைவிட்டுத் தெற்குத் திசையில் திரும்பி, கஷ்டமான மார்க்கத்திலேயே நிரஞ்சனா தேவியையும் ராஜராஜ நரேந்திரனையும் கரிகாலன் அழைத்துச் சென்றான்.

இந்தப் பயணத்திற்கும் கிருஷ்ணா நதிக்கரையோரமாகப் பயணம் செய்வதற்கும் ஒரு வார காலத்திற்கு மேல் வித்தியாசமிருக்கத் தான் செய்தது. தவிர, வழியிலிருந்த சிறு கிராமங்களிலும் சரி, ஒதுக்குப்புறமாக இருந்த சில பட்டணங்களிலிருந்த சத்திரங்களிலும் சரி, அரச குடும்பத்தினர் தங்குவதற்கு வேண்டிய பூரா வசதியும் இல்லை. இருப்பினும் கரிகாலன் நிரஞ்சனா தேவிக்கும் ராஜராஜ நரேந்திரனுக்கும் எத்தனை சௌகரியங்களைச் செய்து கொடுக்க முடியுமோ, அத்தனை சௌகரியங்களையும் செய்து கொடுத்தான். எவ்வளவு ராஜ போகத்தில் அவர்களை வைக்க முடியுமோ அவ்வளவு ராஜபோகத்தில் வைக்கச் சகலவிதமான முயற்சிகளையும் எடுத்துக்கொண்டான். ஆனால் மன்னன் மகளுக்கிருந்த மனோநிலையில் அவள் வழியிலே இருந்த கஷ்டங்களைச் சிறிதும் கவனிக்காமல் வழி நெடுக ஏதும் பேசாமல் மௌனமாகவே பிரயாணம் செய்தாள். இறங்கும் இடங்கள் வந்த

**சாண்டில்யன்**



சமயங்களில் முத்துத்தேவன் அவளை அணுகி, ''அரசகுமாரி, இறங்கலாம்,'' என்று பணிவுடன் கூறிய போதெல்லாம், அவள் பதிலுக்கு ஒரு வார்த்தைகூடப் பேசாமலும், அவனைத் திரும்பியும் பார்க்காமலும் வெறும் பதுமைபோல் இறங்கிச் சென்றாள்.

அவள் சித்தத்தில் சதா வேங்கி நாடும் ஜெயசிம்மனும், கரிகாலனும் மாறி மாறிச் சுழன்று கொண்டிருந்ததால், வேறு இடங்களோ மனிதர்களோ உலகில் இருப்பதாகவே தோன்றவில்லை அவளுக்கு. தன் பிறந்த மண்ணை விட்டுத் தன்னை வெளியேற்ற, ஒருவன் பாரதத்தின் மண்ணில் பிறப்பான் என்பதைச் சொப்பனத்தில்கூட நினைக்காத நிரஞ்சனா தேவிக்கு, அப்பேர்ப்பட்டவன் பிறந்து வந்து காரியத்தைச் சாதித்து விட்டானே என்ற நினைப்பால் உள்ளம் கொதித்துக் கொண்டிருந்தது. யார் ஒருவனை ஒழிக்க வேண்டும் என்பதற்காகப் பிரும்ம மாராயனுடன் சதியில் இறங்கினாளோ, அந்த ஜெயசிம்மன் கடைசியில் தன்னை வென்றுவிட்டானே என்ற எண்ணம் அவள் உள்ளத்தை உடைத்தெறிந்து கொண்டிருந்தது. சாளுக்கிய வீரர்களிடமிருந்து யாரைக் காத்து, யாரிடம் தன் நலனையும் உள்ளத்தையும் ஒப்படைத்தாளோ, அவனே தன்னுடன் இச்சகம் பேசி, தன்னை ஏமாற்றித் தனக்கும் தன் பிறந்த மண்ணுக்கும் பெரும் நமனாய் வாய்த்தானே என்ற ஏமாற்றம் அந்த ஏந்திழையின் இதயத்தைப் பாகாய் உருக்கிக்

கண்ணைக் கவரும் இல்லம்—அவர்கள் கைக்கெட்டும் தூரம்.
ஆம். அந்த வீட்டுச் சுவர்களின் வண்ணம் ட்ராக்டர்.




ட்ராக்டர். இந்தியாவில் எல்லோரும் விரும்பும் சுவர் பெயிண்ட். பட்டுப் போன்றது. பலகாலம் உழைப்பது. கழுவக் கூடியது. அதோடு, கட்டாயம் உங்கள் கைக்கும் பைக்கும் எட்டக் கூடியது!

ட்ராக்டர் எந்தச் சூழலுக்கும் ஏற்ற வகை வகையான வண்ணச் சீர்வரிசை—தொட்டுத் தழுவும் மென் வண்ணச் சாயல்கள், எடுப்பான ஆழ்ந்த நிறங்கள்.

ட்ராக்டர் ஸிந்தடிக் மற்றும் ட்ராக்டர் அக்ரிலிக் டிஸ்டெம்பர். எங்கும் எத்தகைய உட்புறத்திற்கும் ஈடிணையற்றது.

**மிடுக்கான சுவர்கள் கையைக் கடிக்காமலே கிடைக்குது!**

**ட்ராக்டர்**

இந்தியாவிலேயே மிக அதிகமாக விற்பனையாகும் டிஸ்டெம்பர்



**ஏஷியன் பெயிண்ட்ஸ்**

கொண்டிருந்தது. இப்படியாக உள்ளம் முறிந்து உணர்ச்சிகள் சிதறிப் பிரயாணம் செய்து கொண்டிருந்த அரசகுமாரியின் மனத்தில், கரிகாலனைப் பற்றிய வெறுப்பு மிதமிஞ்சி வளர்ந்திருந்ததால் மாற்றானிடம் அகப்பட்ட ஒரு கைதி போலவே அவள் பயணம் செய்தாள்.

ஆனால் ராஜராஜ நரேந்திரன் உணர்ச்சிகள் நேர்மாறாக இருந்தன. கூண்டிலிருந்து விடுபட்ட பட்சி சிறகடித்துக் குதூகலிப்பது போல், வேங்கி நாட்டு அரியணையிலிருந்து கிடைத்த விடுதலையால் மிகுந்த உற்சாகத்துடன் இருந்தான் வேங்கி நாட்டு மன்னன். வாலிபப் பருவமடைந்த நாளாய் ஜெயசிம்மன் ஏற்பாட்டினால் மதுவுடனும் மங்கையுடனும் காலம் கழித்த வேங்கி நாட்டு இளவலுக்கு, வீரர்கள் சேர்க்கையும் அவர்கள் தங்கியிருந்த மண் தரையும் கூடத் தேவேந்திர போகமாயிருந்தது. அதிகமாகச் சத்திரங்களில் இடவசதி அகப்படாத போதெல்லாம் கரிகாலன், அரசகுமாரிக்கும் ராஜராஜ நரேந்திரனுக்கும் மட்டும் சத்திர வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்துவிட்டுத் தன் வீரர்களுடன் எதிரிலிருந்த தோப்புக்களிலோ, அதுவுமில்லாவிடில் வானக் கூரையின் கீழோ தங்கி வந்தான். இரவில் தோப்புக் களில் குதிரைகளைக் கட்டிவிட்டு, வெளிச்சத்துக்காகச் சுள்ளிகளைக் குவித்து எரிய விட்டு, மரங்களில் குதிரைகளைக் கட்டி மண்தரையில் உட்கார்ந்து பேசியே இராப்பொழுதைப் போக்கும் வீரர்களுடன் ராஜராஜ நரேந்தினும் வந்து கலந்து கொள்வான். அவர்களுடனிருந்த கரிகாலன் சொல்லும் வீரர்களின் கதைகளைக் கேட்பான். அந்த மாதிரி, தானும் ஒரு வீரனாகிப் பாரதத்தின் வரலாற்றில் தனியிடம் பெறும் நாள் வருமா என்று ஏங்கிப் பெருமூச்சும் விடுவான். பொதுவில், வேங்கியிலிருந்து அரையன் ராஜராஜனுடைய பாசறைக்கு அவன் பயணம் செய்த சுமார் பதினைந்து நாட்களுக்குள்ளாகவே, தன் உணர்ச்சிகளில் பெரும் மாறுதல் ஏற்படுவதைக் கவனித்த வேங்கி நாட்டு மன்னனுக்கு, மெள்ளக் கரிகாலனிடம் ஓரளவு குரு பக்தியும் ஏற்படவே செய்தது. கரிகாலனுடைய ஆழ்ந்த சாஸ்திர ஞானத்தைக் கண்ட ராஜராஜ நரேந்திரன், இவ்வளவு படிப்பும் நுண்ணறிவும் ராஜ தந்திரமும் இத்தனை இளவயதில் கரிகாலனுக்கு எப்படி ஏற்பட்டன என்பதை நினைத்து நினைத்து வியப்படைந்தான். மந்திரத்தைவிட மகாசக்தியுள்ள கரிகாலன் போதனைகள் ராஜராஜ நரேந்திரனை ஒரு புது மனிதனாக அடித்துக் கொண்டிருந்தன. வேங்கி நாட்டு மன்னன் மனத்திலிருந்து மது அகன்றது. மடந்தையர் அகன்றனர். அறிவும் புகுந்தது. ஆணவமும் தலை நீட்டியது. வாளைப் பிடிக்க நடுங்கிய கை வாளை ஏற்கத் துடித்தது. அவனுடைய மூதாதையரின் ரத்தத்தைத் தேக்கி வைத்திருந்த் ஜெயசிம்மன் என்ற பெரிய கறை அகன்றதும், வீர உணர்ச்சி அவன் உடலில் பிரவகிக்கத் தொடங்கியது. அதன் விளைவு அவன் பார்வையிலும் தெரிந்தது.

ராஜராஜ நரேந்திரனிடம் மெள்ள மெள்ள ஏற்பட்டு வந்த இந்த மாறுதலைக் கரிகாலன் மட்டுமல்ல, அரசகுமாரி நிரஞ்சனாதேவியும் கவனிக்கத்தான் செய்தாள். தம்பியின் வாழ்க்கையில் ஒரு புது சகாப்தம் ஏற்பட்டு வருவதை அவன் நடையிலும் பார்வையிலும் அவள் கண்டறிந்தாள். ஆனால், பிறந்த மண்ணை அவன் மாற்றானுக்குத் தத்தம் செய்து விட்டானே என்ற உள்ளத் துடிப்பு அவள் உணர்ந்த உண்மையை மறக்கச் செய்யவே, அவள் அவனிடமும்




சாமி கும்பிட்டு சன்னதியை விட்டு வெளியே வருபவர்களில் எவ்வளவு பேர் உண்டியலில் காணிக்கை செலுத்துகிறார்கள்?

ஓரளவு வெறுப்புக் கொண்டாள்.

இந்த இருவர் நிலை இப்படியென்றால் பயணம் செய்த சில நாட்களில் கரிகாலன் மனோநிலை எப்படியிருந்ததென்பதை யாராலும் உணர முடியவில்லை. வேங்கி நாட்டில் சாளுக்கியர் கோட்டையின் திட்டி வாசலைத் திறந்துகொண்டு அவன் ஓடி வந்த அன்று, முதன் முதலாக அவளைச் சந்தித்த அந்தத் தினத்தில், அவன் முகபாவம் எப்படியிருந்ததோ அப்படித்தானிருந்தது பல நாட்கள் கழித்தும். மனத்தாலும் நினைக்க முடியாத பல சம்பவங்களுக்குப் பிறகு பயணம் செய்த அந்த நாட்களிலும் அவனிடம் எந்த மாற்றமோ துடிப்போ ஏற்படவில்லை. உதட்டில் இயற்கையாகத் தெரியும் அந்த விஷமப் புன்முறுவல் அந்த நாட்களிலும் இருந்துகொண்டு தானிருந்தது. வீரர்களுக்கு அவன் இடும் கட்டளைகள் எப்பொழுதும் போலவே உறுதியாகவும் தெளிவாகவும் இருந்தன. அவன் சித்தத்தில் சிந்தனைகள் ஏதாவது ஓடிக் கொண்டிருந்தாலும், அந்தச் சிந்தனையின் முத்திரை ஏதும் முகத்தில் தெரியவில்லை. பயணம் செய்த நாட்களில் அவனைப் பார்க்காததுபோல் பல முறை பார்த்து அவன் மனத்திலோடிய எண்ணங்களை அறிய முயன்ற அரசகுமாரி கூடத் தோற்றே போனாள்.

எந்த நிகழ்ச்சிகளும் உடைக்க முடியாத அந்த உறுதி, உள்ளத்தில் என்ன உணர்ச்சிகள் ஓடுகின்றன என்பதைக் கண்டுபிடிக்க முடியாமல் முகத்தைக் கல்லாக வைத்துக் கொள்ளக் கூடிய ஒரு சாமர்த்தியம்—இவைதான் கரிகாலன் வெற்றிக்குக் காரணம் என்று பிற்காலத்தில் அரையன் ராஜராஜன், இராஜேந்திர சோழ தேவரிடம் சொன்னான் என்றால் அதற்கான அத்தாட்சியை முன்னதாகவே அந்தப் பயணத்தில் கண்டாள் அரசகுமாரி. அரசாங்க விஷயங்களில் அதிக அனுபவமில்லாதவனானாலும் எந்த ராஜதந்திரியின் அறிவுக்கும் கீழ்ப்படாத ஓர் அறிஞனிடம் தான் எந்த வழியும் போக முடியாமல் சிக்கிக் கொண்டிருப்பதை அறிந்தாள் நிரஞ்சனாதேவி. இத்தகைய அறிவு அவளுக்கு உண்மையில் சாந்தியை அளித்திருக்க வேண்டும். ஒரு பெரிய அறிவாளியின் காதலைப் பெற்ற அவள் பெருமைப்பட்டிருக்க வேண்டும். ஆனால், அவள் மனம் சாந்தியிழந்து நின்றது. கரிகாலன் ஒரு துரோகி என்ற சிறுமை மனப்பான்மையே அவளிடம் ஓங்கி நின்றது. அந்த மனப்பான்மையை அவள் காட்டவும் தயங்கவில்லை. அவளுடைய போக்கைக் கண்டு அரையன் ராஜராஜனும் பால்யத்தில் அவளை எதிர்கொண்ட வந்தியத்தேவரும்கூட அயர்ந்து போனார்கள்.

பத்துநாள் பயணத்திற்குப் பின்பு அரையன் ராஜராஜன் பாசறையில் அவள் வந்தியத்தேவரைச் சந்தித்தாள். அதுவும் கரிகாலன் முன்பே தூதர்களை அனுப்பியதன் விளைவாக அவள் வருகைக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மாபெரும் வரவேற்பு சபையில்தான் அவரைச் சந்தித்தாள். அங்கு அவள் இகழ்ச்சி நிரம்பிய வெறுப்புச் சொற்களால் கரிகாலனை மட்டுமல்ல, வந்தியத்தேவரையும், அரையன் ராஜராஜனையும் கூடச் சுட்டாள்.

இராஜேந்திர சோழ தேவனின் பிரதான படைத்தலைவனும் போரில் இணையற்ற ஜெயசிம்மனையே முறியடித்த மாவீரனுமான அரையன் ராஜராஜன், விமலாதித்தன் மகளையும் மகனையும் படைத்தளத்தின் எல்லையிலேயே ஆயிரம் குதிரைகளுடனும், யானைகளுடனும் எதிர்கொண்டு, துந்துபிகளும் சங்கங்களும் வானைப் பிளக்க அவர்களை வரவேற்றான். அவனைக் கூட லட்சியம் செய்யவில்லை அரசகுமாரி. ஆறு வெண் புரவி வண்டியிலிருந்து வரவேற்பு மண்டபத்திலிறங்கிய மன்னன் மகள், தலையைச் சற்றே




8.12.87 செவ்வாய் இரவு 7 மணி முதல் 8 மணிவரை, கோடம்பாக்கம் வடபழனி கோயிலில், புதிதாகப் பொருத்தப் பட்டிருக்கும் ஆறரை அடி உயர உண்டியலருகே (எண். 11) அமர்ந்து கவனித்ததில்—

85 பேர் கடந்து சென்றதில், உண்டியலில் காணிக்கை செலுத்தியவர்கள், 31 பேர். (அதில், பெண்கள் 10, ஆண்கள் 12, சிறுவன் 2, சிறுமி 4, குழந்தை 3.)

—பா. கோ.

திருப்பி, கடல் போல் கண் சென்ற விடமெல்லாம் பரந்து கிடந்த சோழப் படைகளைக் கவனித்தாள். பிறகு தலையைச் சட்டென்று மண்டப வாயிலுக்காகத் திருப்பி உள்ளே சென்றாள். அவளுக்கும் ராஜராஜ நரேந்திரனுக்கும் சுற்ற, பெண்கள் கொண்டுவந்திருந்த ஆர்த்திகளையும் ஏற்காது புறக்கணித்து மண்டபத்துக்குள் புகுந்தாள் அவள். மண்டபத்திலிருந்து சுமார் ஆயிரம் வீரர்கள் எழுந்திருந்து மன்னன் மகளுக்கும் வேங்கி நாட்டு இளவலுக்கும் தலை தாழ்த்தினர். ஆயிரம் வாட்களும் ஏக காலத்தில் உருவப்பட்டு, 'இந்த வாட்கள் உங்கள் சேவைக்காக' என்று பொருள்படும்படி அவள் காலடியில் தாழ்த்தப்பட்டன. மௌனமாக அந்த வரவேற்பு வாட்கள் எழுந்து தாழ்ந்த அந்த வீரக் காட்சி, வீரனான விமலாதித்தன் மகளும் உடலிலே வீரம் சிறிதும் குன்றாதவளு மான நிரஞ்சனாதேவியின் இதயத்தைச் சென்று தொடத்தான் செய்தது. தளராத அவள் பிடிவாதத்தைக்கூட அந்தக் காட்சி ஓரளவு தளர்த்திவிடவே, தனது மணிக்கரங்களை எடுத்துக் குவித்துச் சபையை வணங்கினாள் நிரஞ்சனாதேவி. பிறகு நடுவிலிருந்த வழிக்குள் நுழைந்து தாழ்ந்த பல வாட்கள் தன் கமலப் பாதங்களைத் தொடத் தம்பி பின் தொடர, நடந்து சென்று, தனக்காகப் பிரத்தியேகமாகப் போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்து பக்கத்தில் உட்காரும்படி ராஜராஜ நரேந்திரனுக்கு விழிகளால் சைகை காட்டினாள்.

அவள் முன்பாகப் பய பக்தியுடன் நின்ற வல்லவரையர் வந்தியத்தேவர் மற்றப் படைத் தலைவர் களையும் வீரர்களையும் உட்காரச் சொல்லிவிட்டு, ''விமலாதித்தன் திருமகளும் வேங்கி நாட்டு மன்னரும் விஜயம் செய்திருப்பதால் சோழப் படைகளின் இந்தப் பாசறை புனித மடைந்திருக்கிருக்கிறது. நீங்கள் இணங்கி வந்ததற்கு சோழப் பேரரசர் சார்பாக எங்கள் நன்றி,'' என்று முகமன் கூறினார்.

நிரஞ்சனாதேவியின் நீள்விழி கள் ஒருமுறை அந்த அவையைத் துழாவி விட்டுக் கடைசியில் வந்தியத்தேவர் மீது நிலைத்தன. செம்பருத்தியின் இதழ்களைப் போன்ற அவள் இதழ்கள்





36'ம் பக்கப் புதிருக்கு விடை.

மெல்லத் திறந்தன. செம்பருத்தி யிலிருந்து தேன் சிதறும் என்று வல்லவரையர் எதிர்பார்த்தார். ஆனால் விஷம் தோய்ந்த நெருப்புப் பொறிகள் உதிர்ந்தன.

''வந்தியத்தேவரே! எங்கள் வருகை குறித்து நீர் நன்றி கூற வேண்டியது எங்களுக்கல்ல. எங்களைச் சிறைப்படுத்தி இங்கு கொண்டு வந்துள்ள உங்கள் தூதருக்குச் சேர்ந்தது. அவருக்குக் கூறுங்கள் நன்றியை,' என்றாள் அரசகுமாரி.

சபையில் ஒரு வினாடி சலசலப்பு ஏற்பட்டது. அந்தச் சலசலப்பை ஒரே பார்வையால் அடக்கிய வந்தியத்தேவர், நிதானம் சிறிதும் தவறாத பார்வையொன்றை அரச குமாரி மீது நிலைக்கச் செய்து, ''அரச குமாரி! தூதர் வேங்கி நாட்டு நன்மையையும் வேங்கி அரச குடும்பத் தின் நன்மையையும் உத்தேசித்துத்தான் தங்களை இங்கு அழைத்து வந்திருக்கி றார். அவர் மீது தாங்கள் சினப்படுவது முறையல்ல. தவிர, தூதர்கள் என்ன செய்வார்கள்? அரசனிடும் ஆண்ணப்படி நடப்பது தூதர்கள் பொறுப்பு, இது தங்களுக்குத் தெரிந்ததுதானே?'' என் றார்.

''எங்களைச் சிறைப்பிடித்து வரச்சொல்லிச் சோழப் பேரரசர் உத்தர விட்டாரா?'' என்று வினவினாள் நிரஞ்சனாதேவி.

''மருமகனைச் சில நாட்கள் தம்முடன் தங்க அழைத்து வருவதைச் சிறைப் பிடிப்பதென்று சொல் வதில்லையே அரசகுமாரி,'' என்றார் வந்தியத்தேவர்.









அரசகுமாரி ஆசனத்தில் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு, ''தங்கக் கம்பிகளைப் போட்டாலும் சிறை சிறைதான் தேவரே! எங்கள் இஷ்ட விரோதமாக எங்களை இங்கு கொண்டு வந்ததைச் சிறைப்பிடிப்பது என்று சொல்லாமல் வேறெந்தப் பெயரிட்டு அழைக்க முடியும்?'' என்று கேட்டாள்.

வந்தியத்தேவர் பக்கத்திலிருந்த கரிகாலனை நோக்கினார். கரிகாலன், ''தேவரே! அரசகுமாரி சொல்வது தவறு. யார் இஷ்ட விரோதமாகவும் எதுவும் செய்யப்படவில்லை,'' என்றான் பணிவான குரலில்.

''அப்படியா?'' என்றார் வந்தியத்தேவர்.

''ஆமாம்! வேண்டுமானால் வேங்கி நாட்டு மன்னரையே கேட்டுப் பாருங்கள்,'' என்று கரிகாலன் சொன்னான்.

யாரும் கேட்கும் வரையில் காத்திராத ராஜராஜ நரேந்திரன், வந்தியத்தேவரை நோக்கி, ''தேவரே! என் சகோதரி பிறந்த மண்ணை இதுவரை பிரியாதவள். அதைப் பிரிந்த ஆத்திரத்தில் சொன்ன வார்த்தைகளை நீங்கள் தவறாக நினைக்க வேண்டாம். என் பூரண சம்மதத்துடனேயே நான் இங்கு வந்திருக்கிறேன். வேண்டுமானால், வேங்கியிலேயே தங்கும்படி சகோதரிக்கு வேங்கி நாட்டு அவையிலேயே சொன்னேன். அவள் தான் என்னைவிட்டுத் தனித்திருக்க இஷ்டமில்லாமல் வந்திருக்கிறாள். உண்மையில் நாங்கள் கரிகாலருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்,'' என்றான்.

தம்பியின் வார்த்தைகளுக்குப் பிறகு பேசுவதற்கு ஏதுமில்லாததால், அடுத்து நடந்த வரவேற்பு நிகழ்ச்சிகளில் சிறிதும் கலந்து கொள்ளாமலே உட்கார்ந்து கொண்டிருந்தாள் நிரஞ்சனாதேவி. வரவேற்பு முடிந்த பிறகும், அவள் மனத்தே விவரிக்க இயலாத எண்ணங்கள் எழுந்து தாண்டவமாடியதால் உணர்ச்சிகளை எங்கோ பறக்கவிட்டு மரப்பாவைபோல் அன்று முழுவதும் நடமாடிக் கொண்டிருந்தாள். எல்லோருக்கும் நிம்மதியளிக்கும் இரவுகூட அவளுக்கு நிம்மதியளிக்காததால் தன் அறைப் பஞ்சணையில் மெள்ளப் புரண்டு கொண்டிருந்தாள். கரிகாலனை நினைத்து வெகுண்டாள். உணர்ச்சிகள் அப்படி நிறைந்து நின்றதால் வார்த்தைகள் அவள் உதடுகளிலிருந்து இரைந்தே உதிர்ந்தன. ''அட பாவி! உன்னை ஏன் சந்தித்தேன் நான்,'' என்ற சொற்கள் அறைக்குள்ளே எதிரொலி செய்தன. அந்த ஒலியை வெட்டியது கலகலவென்ற சிரிப்பொலி. அந்த ஒலி வந்த திசையை நோக்கிய ராஜகுமாரி பஞ்சணையில் சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். வாயிற்படியில் சிரித்துக் கொண்டிருந்த உருவத்தை நோக்கிய நிரஞ்சனாதேவியின் விழிகளில் வியப்பும் கோபமும் கலந்து தாண்டவமாடின. ''யார் நீ?'' என்று அதட்டிக் கேட்டாள் அரசகுமாரி.

அந்த அதட்டலை அந்த உருவம் சிறிதும் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. சிரித்துக் கொண்டே அவள் பஞ்சணையை நோக்கி நகரவும் தொடங்கியது.

(தொடரும்)

# பாம்பே டையிங்

வாங்குவீர்! சேமிப்பீர்!

## தள்ளுபடி விற்பனை

**15% தள்ளுபடி**

பாலியெஸ்டர் ஷர்ட்டிங், பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர் வுல் ப்ளெண்டெட் சூட்டிங்குகளுக்கு.

**15% தள்ளுபடி**

பாலியெஸ்டர் மற்றும் காட்டன் சேலைகள், டிரெஸ் துணிகள், ரூபியா, கேம்ப்ரிக், லாண் இவைகளுக்கு.

**15% தள்ளுபடி**

பாலியெஸ்டர் மற்றும் காட்டன் விரிப்புகள், டவல்கள், ஃபர்னீஷிங், ப்ளாங்க்கெட், க்வில்ட் இவைகளுக்கு

தமிழ்நாடு, கேரளா மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள 100க்கும் மேற்பட்ட ஷோரூம்களிலும், 750 க்கு மேற்பட்ட அங்கீகரிக்கப்பட்ட டீலர்களிடமும் இத்தள்ளுபடி விற்பனை உண்டு.

**15%**
தள்ளுபடி
எல்லா வகை
பாம்பே டையிங்
துணிகளுக்கும்

இத்தள்ளுபடி விற்பனை
ஷோரூம்களிலும், டீலர்களிடமும் வாங்கும்
வாடிக்கையாளர்களுக்கு மட்டுமே

**சலுகை காலவரம்புக்கு உட்பட்டது.**



Marketers
சிவ்ராம்ஸ் அஸோஸியேட்ஸ் / சிவ்சேல்ஸ்,
கோவை-11 போன்: 42620/42670 சென்னை-17 போன்: 447091/447240. Bankers : The Federal Bank Ltd.

BRIGHT/SAC

482




31-12-87

## 48. அவர் உன் காதலர்

வானவீதியில் மிதந்து கொண்டிருந்த ஏழாம் பிறைச் சந்திரன் தனது கிரணங்களைச் சாளரத்தின் வழியாக உள்ளே அனுப்பி, அரசகுமாரியின் அறைக் கோடியிலிருந்த பொன் அகல் விளக்கின் சுடரோடு உறவாட விட்டிருந்ததால், அந்த அறையில் தேவைக்குச் சற்று அதிகமான வெளிச்சமே இருந்தது. அதன் விளைவாக, தன் பஞ்சணையை நோக்கி நகர்ந்த உருவத்தை நன்றாக ஏறெடுத்துப் பார்த்து அளவெடுக்க முடிந்தது அரசகுமாரிக்கு. தன் அறை வாயிற்படியில் நின்று, தன்னைப் பார்த்து நகைத்தது ஒரு பெண் என்று அறிந்து கொண்ட மாத்திரத்திலேயே வியப்பெய்திய நிரஞ்சனாதேவி, அந்தப் பெண்ணின் அச்சமில்லாக் கண்களையும் திடமான நடையையும் அலட்சியமான முக பாவத்தையும் கண்டதும் வியப்புடன் கோபமும் எழப் பெற்று, ''யார் நீ?'' என்ற கேள்வியையும் அதிகாரம் நன்றாகத் தொனித்த குரலில் வீசினாள்.

அறைக்குள் நுழைந்த பெண்ணும், அந்த அதிகாரத் தொனியைச் சிறிதும் லட்சியம் செய்யாதவளாய், மெதுவாக நடந்து பஞ்சணைக்கருகில் வந்து அதன் கால்களொன்றின் உச்சியைப் பிடித்துக்கொண்டு, நிரஞ்சனா தேவியின் அழகிய உடலின் மீது அச்சத்தைச் சிறிதும் தோற்றுவிக்காத தன் அஞ்சன விழிகளை நீண்ட நேரம் ஓடவிட்டாள். இப்படித் தன் கேள்விக்குப் பதில் சொல்லாமல், இரவில் வந்து தன் தனிமையைக் கலைத்தது மின்றித் தன்னை அலசிப் பார்க்கும் அந்தப் பெண்ணைப் பதிலுக்குத் தானும் நன்றாகக் கவனித்துப் பார்க்கத் தொடங்கிய அரசகுமாரிக்கு, அவளுடைய அவயவங்களில் துள்ளி விளையாடிக் கொண்டிருந்த எழிலும் பலமும் முகத்திலிருந்த ஒரு கம்பீரமும் இணையற்ற ஆச்சரியத்தை விளைவிக்கவே, 'இப்பேர்ப்பட்ட ஒரு பெண் இந்தப் படைத் தளத்துக்கு எதற்காக வந்து சேர்ந்தாள்?' என்று தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டாள்.

ஆனால், வந்த பெண்ணோ, அரையன் ராஜராஜனின் படை பலத்தைப் பற்றியோ, அந்தப் படைகளின் நடுவில் தானிருப்பதைப் பற்றியோ, சிறிதும் அக்கறை கொண்டவளாகத் தெரியவில்லை. அவளுடைய கூரிய கண்கள் மீண்டும் மீண்டும் அரசகுமாரியை வலம் வந்தன. கடைசியில் அவளிடமிருந்து பெருமூச்சொன்றும் கிளம்பியது. ''புரிந்தது; காரணம் புரிந்தது,'' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள் அவள்.

**சாண்டில்யன்**

வார்த்தைகளை மிக மெது வாகத்தான் உச்சரித்தாள் அவள். ஆனால், அந்த அறையிலிருந்த நிசப் தத்தில், அந்தச் சந்தர்ப்பத்தில் ஏற்பட்ட அக்கறையில், அந்தப் பெண்ணின் சொற்கள் மிகத் தெளிவாக விழுந்தன அரசகுமாரியின் செவிகளில். 'இவள் யார்? எதற்காக இங்கு வந்தாள்? ஏன் சிரித்தாள்? என்ன புரிந்தது இவளுக்கு? ஒரு வேளை பைத்தியமோ?' என்றெல்லாம் சிந்தித்தாள் நிரஞ்சனா தேவி. அவள் உள்ளத்தே ஓடிய எண்ணங் களை அந்தப் பெண்ணும் புரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆகவே சொன்னாள் அவள், ''எனக்குப் பிடித்திருப்பது ஒருவகைப் பைத்தியம் தான் அரசகுமாரி. உங்களுக்கும்தான் பிடித்திருக்கிறது,'' என்று.

வந்த பெண்ணுக்குப் பைத்தியமா அல்லவா என்ற சந்தேகம் அதுவரை அரசகுமாரிக்கு எள்ளளவு இருந்திருக்குமானால், அந்தச் சந்தேகத்தை அப் பெண்ணின் வார்த்தைகள் அடியோடு போக்கடித்துவிட்டதால், 'இது நிச்சய மாகப் பைத்தியம்தான்' என்று தீர் மானித்த நிரஞ்சனாதேவி பஞ்சணையை விட்டுச் சட்டென்று எழுந்திருக்க முயன் றாள். வந்தவள், அவ்வளவு சுலபமாக அரசகுமாரியைத் தப்புவிக்க விடுவதாக இல்லை. பலமான தன் வலது கரத்தால் அரசகுமாரியின் தோளைப் பிடித்து அழுத்தி மீண்டும் பஞ்சணையில் உட்கார



வைத்து, ''தேவியவர்கள் என்னைப் பைத்தியம் என்று தீர்மானம் செய்து விட்டாற் போலத் தோன்றுகிறது. நீங்கள் நினைப்பதுபோல் நான் அறிவிழந்தவள் அல்ல. முழு அறிவுடன் இருக்கிறேன். நல்ல அறிவிலும் சித்தம் சலிப்பது பெண்களுக்கு இயற்கைதானே அரசகுமாரி? அந்தச் சித்தப் பிரமையைத் தான் சொன்னேன். நான் சொல்லும் இந்தப் பிரமை அறிவைக் குழப்புவ தில்லை. கிடைக்கும் பலனுக்குத் தக்கபடி ஆனந்தத்தையோ துக்கத் தையோ அளிக்கிறது. பருவ காலத்தில் பெண்களுக்குப் பிடிக்கும் பைத்தியம் இத்தன்மையது,'' என்றாள்.

அரசகுமாரி என்ன செய்வது என்று விளங்காததால், சற்று நேரம் மௌனமாகவே கட்டிலில் உட்கார்ந் தாள். தன் தோளைத் தொட்டுப் பலவந்தமாக உட்கார வைக்கும் அந்தப் பெண்ணின் துணிவை வியந்ததுமன்றி, அந்தப் பெண்ணின் வார்த்தைகளில் உள்ளர்த்தமும் ஏராளமாகப் புதைந்து கிடப்பதைக் கண்ட அரசகுமாரியின் பவள இதழ்கள் கடைசியாகத் திறந்தன. திறந்ததன்றி, ''யார் நீ! அதை முதலில் சொல்?'' என்ற கட்டளையும் பிறப்பித்தன.

''தேவியவர்களின் பணிப்பெண். அரையன் ராஜராஜன் புதல்வி. என்னைச் செங்கமலச் செல்வி என்று அழைப்பார்கள்!'' என்றாள் அந்தப் பெண்.

அடுத்த விநாடி நான்கு செங்கமலங்கள் சந்தித்தன. அரச குமாரியின் பங்கஜ விழிகள் செல்வியின் கமலக் கண்களுடன் உறவாடின. அந்த இரண்டு பெண்களும் ஒருவர் மனத்தை இன்னொருவர் ஆராயும் நோக்கத்துடன் நீண்ட நேரம் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தனர். ஒருவர் அழகை ஒருவர் வியந்தனர். அந்த வியப்பில் பொறாமையும் கலந்து தானிருந்தது. அந்தப் பொறாமை இருவரிடமிருந்தும் ஏககாலத்தில் பெரு மூச்சாக வெளிவந்தது. அந்தப் பெரு மூச்சையொட்டி, 'உனக்கு நான் குறை வில்லை' என்று பழிப்பனபோல் இருவர் மார்பகங்களும் ஒருமுறை எழுந்து தாழ்ந்தன.

அந்தப் பெருமூச்சைத் தொடர்ந்து, ''உனக்கு ஏதோ பைத்தியம் என்று சொன்னாயே, அது




''உங்களுக்குப் பயமா இருக்குங்கற துக்காக நகர்வலத்தைப் பகலில் வைத்துக் கொள்வோம்னு சொல்றது அவ்வளவு நல்லா இல்லே மன்னா...!''

—கடுவை கோபால்சாமி

என்ன செல்வி?'' என்று கேட்டாள் அரசகுமாரி.

''எனக்கு மட்டும் பைத்தியம் என்று சொல்லவில்லையே, இருவருக்கும் தான் பைத்தியம் என்று சொன்னேன்,'' என்று திருத்தினாள் அரையன் ராஜராஜன் மகள்.

''இருவருக்குமா? அதென்ன விசித்திரப் பைத்தியம்?''

''விசித்திரம்தான் அது. காதல் பைத்தியம் விசித்திரமில்லையா?''

இந்த முறை சட்டென்று பஞ்ச ணையிலிருந்து எழுந்து விட்டாள் அரச குமாரி. அவள் அழகிய கண்களில் ஆத்திரம் சொட்டியது. அதைக் கண்டு கலகலவென மீண்டும் நகைத்தாள் அரையன் ராஜராஜன் மகள்.

''எதைக் கண்டு நகைக் கிறாய்?''—அரசகுமாரியிடமிருந்து எழுந்தன இந்தச் சுடுசொற்கள்.

''உங்கள் ஆத்திரத்தைக் கண்டு!''—அலட்சியமாக வெளிவந்தது அரையன் ராஜராஜன் மகளின் பதில்.

''நான் காதலால் தவிக்கிறே னென்று யார் சொன்னது உனக்கு?''

''உங்கள் கண்கள்.''

''கண்களிலிருந்தே கண்டுபிடிப் பாயா உள்ளத்தை? அத்தனை வல்ல வளா நீ?''

''இதற்கு வல்லமை தேவை

யில்லை. பார்வைதான் தேவை.''

''அரையன் ராஜராஜன் மகளுக்கு நல்ல ஆராய்ச்சிப் பார்வை தான்.''

''கோபித்துப் பயனில்லை அரச குமாரி. உங்கள் கருத்தில் காதல் நிரம்பிக் கிடக்கிறது. அதை உங்கள் கண்கள் பறை சாற்றுகின்றன. ஓர் ஆண் பிள்ளைக்கு அது தெரியாதிருக்கலாம். ஆனால் பெண்ணுக்குத் தெரியாதிருக்குமா? உங்கள் துடிப்பு ஆண்மக்களை ஏமாற்ற லாம். ஆனால், அதே உள்ளத் துடிப்பு உள்ள ஒரு பெண்ணை ஏமாற்ற முடியாது, உங்களை இன்று வரவேற்பு மண்டபத்தில் கண்டபோதே, நீங்கள் பேசிய கோபச் சொற்களைக் கேட்ட போதே, உங்கள் பார்வை அவ்வப் பொழுது சென்ற திக்கை நோக்கிய பொழுதே உண்மையைப் புரிந்து கொண்டேன் அரசகுமாரி.''

அரசகுமாரியின் கண்கள் தரையை நோக்கித் தாழ்ந்தன. காற் பெருவிரல் தரையைச் சற்று நேரம் கீறியது. சிறிது சிந்தனைக்குப் பிறகு பேசிய அரசகுமாரியின் குரலில் கோப மில்லை. குழைவு இருந்தது; ஆத்திரம் சொட்டவில்லை, அன்பு கனிந்து நின்றது. ''எந்தத் திக்கில் என் பார்வை பாய்ந்தது செல்வி?'' என்று கேட்டாள் விமலாதித்தன் மகள்.

நிரஞ்சனா தேவியின் மாறிய தோரணை, குழைந்த குரல், கனிந்த சொற்கள், செங்கமலச் செல்வியின் இதழ்களில் ஓர் இளநகையைத் தோன்றச் செய்தன. ''கரிகாலர் இருந்த திக்கில் தான்,'' என்றாள் செல்வி.

செல்வியின் பொறாமை தோய்ந்த குரல்கூட மிக இனிமையாய் ஒலித்தது நிரஞ்சனா தேவியின் செவி களுக்கு. 'அடி பேதையே! சற்றுமுன் அவள்மீது ஆத்திரப்பட்டாயே, இப் பொழுது எங்கு போயிற்று அந்த ஆத்திரம்?' என்று வானவீதியிலோடிய மதியும் அவளைப் பார்த்துச் சிரித்து விட்டுக் குறுக்கே பாய்ந்த சின்னஞ்சிறு வெண்மேகத் திரைக்குள் சில விநாடிகள் பதுங்கிப் பிறகு எட்டிப் பார்த்தான். அரசகுமாரி பூவுலகத்தையே மறந்தாள். அவள் எதிரே கரிகாலன் உருவம் மெல்ல மெல்ல எழுந்தது. அந்த அறை முழுவதும் அவனே வியாபித்துவிட்டது போல் தோன்றியது மன்னன் மகளுக்கு.




அந்தக் குழந்தை முகம், அந்த விஷமப் புன்முறுவல் இரண்டையும் பார்த்துப் பார்த்து உள்ளமெங்கும் இன்ப வேதனைகள் அலைபாய நின்றாள் அரசகுமாரி.

அந்தப் பெண்ணுள்ளத்தை இன்னொரு பெண்ணுள்ளம் நன்றாகப் புரிந்து கொண்டதால், அதன் முகத் திலும் வேதனை பாய்ந்தது. இப்படி விரகமும் வேதனையும் இணைந்து விளையாடி இன்ப வேகத்தால் அவதிப்பட்ட அந்த இருவர் கரங்களும் பரஸ்பரம் ஆதரவைத் தேட முற் பட்டன. செங்கமலச் செல்வியின் கரங் களைத் தன் கரங்களுக்கிடையில் கெட்டி யாகப் பிடித்துக்கொண்ட நிரஞ்சனா தேவி, அவளைத் தனக்காக இழுத்துப் பஞ்சணையில் தானும் உட்கார்ந்து தன் பக்கத்தில் அவளையும் உட்கார வைத்தாள்.

''அரசகுமாரி! இது முறையல்ல. நான் தங்கள் பணிப் பெண்!'' என்றாள் செல்வி.

''போடி பைத்தியமே! காதலில் கட்டுண்ட நமக்குள் ஏதடி பேதம்? அவர் காதல் உனக்குக் கிடைக்கலாம்; எனக்குக் கிடைக்காது. உன் வெற்றியும் எனக்கு மகிழ்ச்சிதான்,'' என்றாள் மன்னன் மகள்.

மீண்டுமொருமுறை பெருமூச் செறிந்த செங்கமலச் செல்வி, ''தேவி!

திரைப்படத் துறையில் 'செல்லப்' பெயர்கள் சகஜம். அப்படி சிலருடைய நாமகரணங்களும் சூட்டியவர்களும்:

கே. பாலாஜி—அலிபாபா—ஏ.எல். நாராயணன்.

பழ. கருப்பையா —Fruit Black Father—நளினி ராமராஜன்.

பாண்டியராஜன் — மூசு உருண்டை—சீதாவின் அப்பா.

ஏ.எல். நாராயணன் — வசிஷ்டர்—கே. பாலாஜி.

லெனின் — யோகி — கங்கை அமரன்.

—'லூனா' சுந்தரம்.

எனக்கு வெற்றி கிடையாது. வெற்றி தங்களுக்குத்தான்!'' என்றாள்.

''தவறு செல்வி! அவர் எனக்குத் தீங்கைத் தவிர வேறெதுவும் செய்ததில்லை. என்னை என் அரசை விட்டு வெளியேற்றினார். என் எதிரிக்கு உளவாளியானார்....'' என்று மேலும் பேசப்போன அரசகுமாரியை இடை மறித்த செல்வி, ''தேவி! கரிகாலர் உங்களுக்கு ஒருகாலும் தீங்கு விளைவிக்க மாட்டார். உங்களுக்கெதிராக அவர் ஏதாவது செய்தாலும் அதை உங்கள் நன்மைக்காகவே செய்வார்,'' என்றாள்.

''அவரை அவ்வளவு நன்றாக அறிவாயோ?'' என்று கேட்ட அரச குமாரி குரலில்கூடச் சற்றுப் பொறாமை தொனித்தது.

''அறிவேன் அரசகுமாரி.''

''எப்படி அறிவாய்?''

''சந்தர்ப்பங்கள் அறியச் செய்தன.''

''எந்தச் சந்தர்ப்பங்கள்?''

''நானும் அவரும் தனித்திருந்த சந்தர்ப்பங்கள்.''

''தனித்திருந்தீர்களா?''

''பல முறைகள்.''

''ஓகோ!''

''ஆமாம் அரசகுமாரி! அவருக்கு வில்வித்தை நான்தான் கற்றுக் கொடுத்தேன். அந்தச் சமயங்களில் தனித்திருந்தோம்.''

''தனித்திருந்தீர்களா? வில் வித்தை கற்றுக் கொடுத்தாயா! இன்னும் என்ன கற்றுக் கொடுத்தாய்?''—அரச குமாரியின் குரலில் கோபம் பரிபூரண மாகத் தாண்டவமாடியதுமன்றி, உள்ளக் கொதிப்புக்கு அடையாளமாக அவள் உதடுகளும் துடித்தன.

பஞ்சணையில் வேங்கி நாட்டு அஞ்சுகத்துக்குப் பக்கத்தில் அமர்ந் திருந்த செங்கமலச் செல்வி திரும்பி மன்னன் மகளை ஏற இறங்க நோக்கி விட்டு, ''தேவி! சந்தேகம் உங்கள் அறிவைக் கலக்குகிறது. ஆகையால் பேசத் தகாத வார்த்தைகளைப் பேசு கிறீர்கள். ஓர் அரசகுமாரி இப்படிப் பேசலாமா?'' என்று வினவினாள்.

''அரசகுமாரியாயிருந்தாலும் நான் பெண்தானே? மற்றப் பெண் களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? அவர்களுக்குள்ள உணர்ச்சிகள் எனக் கிருக்காதா? உள்ளத் துடிப்புதான் இருக்காதா?'' என்று அரசகுமாரி பதில் கேள்வி கேட்டாள்.

''உணர்ச்சிகள் இருக்கும். ஆனால், அறிவின் பலத்தைக் கொண்டு அவற்றை அடக்கவேண்டும். உள்ளத் துடிப்பு இருக்கும். உயர்ந்த நிலையை உத்தேசித்து அதைக் கட்டுப்படுத்த வேண்டும். நானும் பெண்தான். எனக்கும் உணர்ச்சிகள் இருக்கின்றன அரசகுமாரி. ஆனால் அவற்றை அலையவா விடுகிறேன்?''

''நீ பேசலாம் செல்வி. ஆனால், செயலில்...''

''செயல் என் கருத்துக்குட் பட்டது. அவரை நான் இழந்து விட்டேன் என்பதை அறிந்ததும், உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி விட்டேன். நான் பிறந்தது முதலே துரதிருஷ்டசாலி, அரசகுமாரி. இள வயதில் தாயை இழந்தேன். இந்த வயதில் காதலனை இழந்தேன். அவள் உயிர் நீக்க அவளைப் பறிகொடுத்தேன். இவரை உயிருடன் உன்னிடம் பறிகொடுத்து விட்டேன். அதற்குக்கூட என் மனம் கலங்கவில்லை. ஆனால், உனக்காக எத்தனையோ ஆபத்துக்களை ஏற்ற அவரைச் சந்தேகிக்கிறாயே, அதைக் கண்டுதான் என் மனம் பதறு




கடைசி பஸ் நிறுத்தத்தில் இறங்கும்போது பஸ் டிக்கெட்டைத் தூக்கி எறிபவர்கள் எத்தனை பேர்?

5.12.87 சனி மாலை 6 மணி முதல் 7.30 மணி வரை பூாரிமுனையில் இறங்கிய பயணிகளைக் கவனித்தபோது–

பஸ் டிக்கெட்டைக் கசக்கி எறிந்தவர்கள் 18. (ஆண்கள் 12, பெண்கள் 6.) கிழித்து எறிந்தவர்கள் 26. (ஆண்கள் 14, பெண்கள் 12.) டைரி, புத்தகத்தில் அப்படியே செருகிக் கொண்டவர்கள் 5. (ஆண்கள் 2, பெண்கள் 3.) டிக்கெட்டை அப்படியே நழுவ விட்டவர்கள் 13 (ஆண்கள் 3, பெண்கள் 10.)

இறங்கிய பயணிகளின் மொத்த எண்ணிக்கை 93.

–பா. கோ.

கிறது. அந்தச் சந்தேகத்தைப் போக்கவே இங்கு வந்தேன். அவர் உன் காதலர் தான்; வேறு யாருக்கும் அவர் சொந்த மல்ல, நம்பு அவரை; பூரணமாக நம்பு. உன் தம்பி அரசைப் பெறுவான். நீ ஒரு மகா வீரனை, தமிழ்நாட்டின் சிறந்த அறிவாளியைப் பெறுவாய்,'' என்று உணர்ச்சிப் பெருக்கால் சற்று இரைந்து பேசிய செங்கமலச் செல்வி, கட்டிவி லிருந்து எழுந்து அறையில் உலாவினாள். உணர்ச்சிப் பெருக்கால் வார்த்தைகளில் மரியாதையைக் கைவிட்டு அரச குமாரியை ஏக வசனத்தில் பேசியதைக் கூட அவளால் உணர முடியவில்லை.

கோபத்தாலும் சந்தேகத் தாலும் பொறாமையாலும் தெளிவை அடியோடு இழந்து கிடந்த அரச குமாரியின் சித்தத்தில், செங்கமலச் செல்வி கூறிய உண்மை மொழிகள் இடம் பெற மறுத்தன. அந்த உண்மையைக் கூறிவிட்டுச் செங்கமலச் செல்வி அறையை விட்டுப் போய்விட்ட வெகு நேரத்திற்குப் பிறகும் அவற்றைப் பற்றிச் சிந்தித்தவாறே பஞ்சணையில் படுத்திருந் தாள் நிரஞ்சனாதேவி. எண்ணங்கள் பல எழுந்து அவள் புத்தியில் அலைமோதின. 'அவரா என் காதலர்! ஒருகாலும் இல்லை. ஒரு காதலன் தன் காதலிக்கு எதிராகச் சதி செய்வானா? அவள் நாட்டை விட்டு அவளை வெளியேற்று வானா?'

அடுத்த சில தினங்களிலும் கரிகாலனைப் பற்றிய சந்தேகம் மட்டும் அவள் மனத்தை விட்டு அகலவில்லை. அந்த எண்ணத்தை உறுதி செய்யும் நிகழ்ச்சியொன்றும் அடுத்த ஒரு மாத காலத்திற்குள் ஏற்பட்டது. அந்த நிகழ்ச்சியை வேங்கி நாட்டுத் தூதுவன் வல்லவரையரிடம் கூறுகையில் சபையில் நிரஞ்சனாதேவியும் வீற்றிருந்தாள்.

அமைதியாகத் தேங்கி நிற்கும் குளத்தில் பெரும் பாறையைத் தூக்கி யெறிந்ததுபோல் வார்த்தைகளைக் கொட்டினான் தூதுவன். ''தேவர் பெருமானே! வேங்கி நாட்டுத் தலை நகரில் இன்று விஷ்ணுவர்த்தன விஜயா தித்தன் முடிசூடி விட்டான்!''

சபையில் பெரு மௌனம் நிலவியது. ஏக காலத்தில் பல கண்கள் கரிகாலன்மீது பாய்ந்தன. மௌனத்தை உடைத்த வந்தியத் தேவர் கேட்டார்: ''கரிகாலா! கேட்டாயா செய்தியை!''

சபையே ஒரு கலங்கு கலங்கும் படியாகப் பதில் சொன்னான் கரிகாலன்; ''இது எதிர்பார்த்ததுதானே?''

அரையன் ராஜராஜன் முகத் திலும் ஆத்திரக் குறி எழுந்தது. ''இதற்குத்தானா உன்னை வேங்கி நாட்டுக்கு அனுப்பினேன்?'' என்றார் சோழர் படைத்தலைவன்.

''எல்லாம் திட்டப்படிதான் நடக்கிறது தந்தையே,'' என்றான் கரிகாலன்.

அரசகுமாரியின் விழிகள் அவனைச் சுட்டெரித்து விடுவனபோல் பார்த்தன.

(தொடரும்)




## 49. நீ ஒரு தெய்வப் பிறவி

7-1-88

வேங்கி நாட்டு அரியணையில் விஜயாதித்தன் அமர்ந்து விட்டான் என்ற செய்தியைக் கேட்ட மாத்திரத்தில், எந்தச் சந்தர்ப்பத்திலும் நிதானத்தை இழக்காத அரையன் ராஜராஜனே நிதானத்தை இழந்து விட்டதைக் கண்ட வல்லவரையருக்குக் கூடக் கரிகாலன் செய்த காரியம் சரிதானா என்பதில் சந்தேகம் உண்டாயிற்று. அத்துடன் விமலாதித்தன் மகளின் விழிகள் தீப் பொறிகளாக மாறியதையும் அவர் கண்டதும், 'இந்தக் கரிகாலனை வேங்கி நாட்டுக்கு ஏன் அனுப்பினோம்?' என்ற எண்ணங்கூட அவர் மனதில் எழுந்தது. போதாக்குறைக்கு அந்த மகா சபையில் கூடியிருந்த படைத் தலைவர்களெல்லோருமே கரிகாலனைக் கண்டித்துக் கூச்சலும் போடத் தொடங்கவே, வல்லவரையர் சிறிது நேரம் அந்தக் குழப்பத்தை அடக்கக் கூடத் துணிவில்லாதவராய், தமது ஆசனத்தில் அசைவற்று உட்கார்ந்து விட்டார். ஆனால், உள்ளூரக் கோபம் எரிமலையாக எழுந்து வெடித்துக் கொண்டிருந்தாலும், ஓரளவு அதை அடக்கிக்கொண்ட அரையன் ராஜ ராஜன், அவையைச் சுற்றி ஒருமுறை தன் கூரிய கண்களைச் சுழல விட்டு அந்தப் பார்வையின் சக்தியாலேயே படைத் தலைவர்களிடையே எழுந்த கூச்சலையும் குழப்பத்தையும் அடக்கி விட்டு அவை நடுவே குற்றவாளி போல் நின்று கொண்டிருந்த கரிகாலன் மீது கடைசியாகத் தன் பார்வையை நிலை நிறுத்தி, ''உன் குற்றம் மன்னிக்க முடியாதது என்பதைப் புரிந்து கொண்டாயா கரிகாலா?'' என்று வினவினான்.

கரிகாலனும் அவையைச் சுற்றித் தன் பார்வையை ஒருமுறை ஓடவிட்டுப் பிறகு தன் வளர்ப்புத் தந்தையை நோக்கினான். அந்தப் பார்வையில் எந்தக் கல்மிஷமும் இல்லாதிருந்ததோடு, எல்லையில்லாத துணிவும் ஒருவித அலட்சியமும் நிரம்பிக் கிடந்ததைக் கண்ட அரையன் ராஜ ராஜன் மனத்தில், 'இத்தகைய பார்வையை உடையவன் குற்றவாளியாக இருக்க முடியாது,' என்ற எண்ணம் ஏற்பட்டாலும், சந்தர்ப்ப சாட்சியங்கள் கரிகாலனுக்கு முற்றும் விரோதமாக இருக்கவே, முதலில் கேட்ட கேள்வியை மறுபடியும் உக்கிரத்துடன் திருப்பினான், சோழர்களின் பிரதான படைத்தலைவன். ''கரிகாலா, உன்

குற்றம் மன்னிக்க முடியாதது என்பதைப் புரிந்து கொண்டாயா, இல்லையா?'' என்று வினவினான்.

கரிகாலன் இதழ்களில் லேசாக இளநகை அரும்பியது. ''தந்தையே! குற்றம் என்ன என்பதைப் புரிந்து கொண்டால்தானே, அது மன்னிக்கத் தகுந்ததா அல்லவா என்பதைப் புரிந்து கொள்ள முடியும்?'' என்று பதில் கூறினான் கரிகாலன்.

அவன் பேச்சில் கண்ட துணிவு அவை முழுவதையுமே ஆச்சரியத்தில் அமிழ்த்தினாலும் பிரும்ம மாராயரை மட்டும் ஆத்திரத்தில் அமிழ்த்தவே, அவர் அரையன் ராஜராஜனை நோக்கி, ''படைத்தலைவரே! இவனைப் பேச மட்டும் விடாதீர்கள். பேசவிட்டால் எதையாவது சொல்லி இந்த அவையை ஏமாற்றிவிடுவான். இவன் பெரிய போக்கிரி,'' என்றார்.

பிரும்ம மாராயனின் ஆத்திரமும் பேச்சும் வல்லவரையரின் உதடுகளில்கூட ஒரு புன்முறுவலைத் தோற்றுவித்தது. ''பிரும்ம மாராயரே! இந்தச் சிறுவன் பேச்சினால் இந்தப் பேரவை ஏமாந்துவிடுமானால், இது அறிவிற் சிறந்த சபையாகுமா? இத்தகைய ஒரு சபையை நம்பிக் கங்கைக் கரையை நோக்கிப் படையெடுக்கத்தான் முடியுமா? பொறுத்திருங்கள்,'' என்று அவரை அடக்கிவிட்டுக் கரிகாலனை நோக்கி, ''கரிகாலா! நீ இளைஞன். இங்குள்ள படைத்தலைவர்கள் பல போர்களைக் கண்டவர்கள்; ராஜ தந்திரத்தில் இணையற்றவர்கள். இவர்கள் உன் செய்கையை ஒப்புக் கொள்ளவில்லை. உன் தந்தையே உன்னைக் குற்றவாளியென நினைக்கிறார். இத்தனையையும் சிருஷ்டித்தது எது? வேங்கி நாட்டிலிருந்து ராஜராஜ நரேந்திரன் வெளியேற்றம்; விஜயாதித்தன் மகுடாபிஷேகம். இவை எல்லாம் நடந்தது உன்னாலல்லவா?'' என்று கேட்டார்.

கரிகாலன் அவருக்கு ஒரு முறை தலைதாழ்த்தி வணங்கிவிட்டுச் சொன்னான்: ''தேவர் பெருமானே! நீங்கள் கூறுவது எதையுமே நான் மறுக்கவில்லை. வேங்கி நாட்டு மன்னரையும் அரசகுமாரியையும் வேங்கி நாட்டை விட்டு வெளியேற்றியவன் நான்தான். விஜயாதித்தன் முடிசூட இடம் அளித்தவனும் நான்தான். இவையெல்லாம் குற்றமென்றால், நான் குற்றம் புரிந்தவன்தான்.''

''இவையெல்லாம் குற்றமல்லவென்று கூறுகிறாயா?'' என்று ஆத்திரத்துடன் கேட்டான் அரையன் ராஜராஜன், வல்லவரையருக்கும் கரிகாலனுக்கும் இடையே புகுந்து.

கரிகாலன் பதில் தெளிவாக இருந்தது. குரலும் திடமாக ஒலித்தது.

''ஆம், தந்தையே! இவை எதிலும் குற்றமில்லை. இந்த நிகழ்ச்சிகள் ஏற்படுமென்பது முன்பே நமக்குத் தெரிந்ததுதான். இதை







—ஆர்.டி. சுப்பிரமணியன்




—லட்சுமி நாயகன்

அரசகுமாரியும் முன்னமே உணர்ந்திருந்தார்கள். வேங்கி அரண்மனை வசந்த மண்டபத்தில் அவர்களைச் சந்தித்தபோது, அவர்களே இப்படியெல்லாம் குற்றம் சாட்டினார்கள்,'' என்றான் கரிகாலன்.

''அப்படியிருந்துமா பிடிவாதமாக அவர் களை அரசிழக்கச் செய்தாய்?'' என்று பிரம்ம மாராயர் பெரும் குரலில் கேட்டார்.

''ஆம். அந்தக் குற்றச்சாட்டுகளையெல் லாம் 'லட்சியம் செய்யாமலே காரியத்தை முடித்தேன்,'' என்றான் கரிகாலன்.

''அவனே குற்றத்தை ஒப்புக் கொள் கிறான், கைது செய்யுங்கள் அவனை,'' என்று கூவினார் பிரம்ம மாராயர்.

கரிகாலன் அவரை ஏறெடுத்துப் பார்த் தான். ''பிரும்ம மாராயரே! உமக்கு ராஜ தந்திரம் என்பதைப் பற்றி ஏதாவது தெரியுமா?'' என்று நிதானமாக ஒரு கேள்வியையும் கேலி நிரம்பி நின்ற குரலில் வீசினான்.

அவன் கேள்வி– குரலில் தொனித்த கேலி– இரண்டும் பிரம்ம மாராயருடைய நிதானத்தை அடியோடு போக்கடித்துவிடவே, அவர் ஆசனத் திலிருந்து எழுந்து தமது ராட்சச சரீரத்தைத் தூக்கிக் கொண்டு, ''என்ன சொன்னாய்? எனக்கு ராஜதந்திரம் தெரியுமா என்றா கேட்கிறாய்?'' என்று கூவிக்கொண்டே, கரிகாலனை அடித்து விடுபவர்போல அவனை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தார்.

''பிரும்ம மாராயரே! இந்த அவைக்குத் தலைவன் நான் என்பது நினைவிலிருக்கட்டும்,'' என்று வல்லவரையரின் கண்டிப்பான வார்த்தைகள், பிரும்ம மாராயரை மீண்டும் ஆசனத்தில் இழுத்து உட்கார வைத்தன. மேற்கொண்டு கேள்விகளை வல்லவரையரே கேட்டார்.

''கரிகாலா! சோழப் பேரரசு கங்கை வரையில் நீடிக்கக் கூடிய பெரிய சகாப்தத்தில் நாம் ஜீவிக்கிறோம்,'' என்று வந்தியத்தேவர் தமது பேச்சைத் துவக்கினார்.

''ஆம்! தேவர் பெருமானே!'' என்றான் கரிகாலன்.

''அந்த நிலையில் நாம் செய்யும் எந்தக் காரியமும் அந்தப் பேரரசின் விஸ்தரிப்புக்கு அனுகூலமாக இருக்கவேண்டும்.''

''ஆம்.''

''இடைஞ்சலான எந்தச் செய்கையும் குற்றமான செய்கைதான்.''

''சந்தேகமில்லை, தேவரே.''

''வேங்கி நாட்டில் விஜயாதித்தன் முடிசூடி விட்டான்.''

''ஆம்.''



## ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்

(பார்க்க 71'ம் பக்கம்)

000–காதல் எல்லாம் இல்லை– சும்மா!
001–உங்களைப் பற்றிய கனவேதான் அவருக்கு!
002–உங்களை அவர் நினைப் பதே கிடையாது.
010–அவரிடமிருந்து முத்தம் கிடைக்கப் போகிறது!
011–கண்டு கொள்ளவில்லை உங்களை.
012–உங்கள் காதலைச் சொல்லி விடுங்கள்.
020–உங்களைக் கல்யாணம் செய்து கொள்ள நினைக் கிறார்.
021–உங்களுடையது நீடித்த காதலாயிருக்கும்.
022–பார்க்கத் துடிப்பு.
100–காதல் உண்டு. ஆனால் அடிக்கடி சந்திக்கும் தில் உள்ளவர் அல்ல.
101–பரிசு தரப் போகிறார்.
102–பார்க்க விரும்புகிறார்.
110–உங்கள் இதயம் உடையப் போகிறது, ஜாக்கிரதை.
111–ஐயையோ! வேறு இடங் களிலும் நிறையத் தொடர்பு உண்டு.
112–எந்நேரமும் உங்கள் நினைவுதான்.
120–உங்களை ரொம்ப விரும்புகிறார்.
121–உங்கள் மீது ஏதோ கோபம்.
122–சந்திக்க விருப்பமிருக் கிறது.
200–உங்கள் செயலால் அவர் மனம் வருந்துகிறார்.
201–நல்லவரல்ல.
202–உங்களைப் பார்க்க விருப்பமில்லை.
210–அவர் மனசு பாவம் உடைந்திருக்கிறது.
211–முடிவே பண்ணி யாயிற்று– உங்களைத் திருமணம் செய்ய.
220–உங்கள் காதலைப் பற்றி அவர் கேட்கப் போகிறார்.
221–நட்புதான். காதலில்லை!
212–நீங்கள் அவருக்குச் சரி யான ஜோடி அல்ல என்று நினைக்கிறார்.

''ஜெயசிம்மன் பலம் அங்கு வேரூன்றியது போலத்தான்.''

''ஆமாம் தேவரே!''

''நமது வட இந்தியப் போருக்குக் குறுக்கே, நமது பலமான எதிரியொருவன் நிற்கிறான்.''

''இங்குதான் சிறிது தவறு இருக்கிறது தேவரே.''

''என்ன? தவறா!'' தேவர் ஆச்சரியம் நிரம்பிய கண்களைக் கரிகாலன் மீது நாட்டினார்.

கரிகாலன் உள்ள நிலையைத் தெளிவாக்க முற்பட்டுத் தன் தந்தையையும் தேவரையும் ஒருமுறை பார்த்துவிட்டு அவையோரையும் நோக்கினான். பிறகு மிக மெதுவான குரலில் பேசினான்: ''தேவர் பெருமானே! தந்தையே! அவையோரே! நான் சொல்வதைச் சற்றுச் செவி சாய்த்துக் கேளுங்கள். இப்பொழுது ஜெயசிம்ம சாளுக்கியன் சோழ நாட்டுக்கு விரோதியல்ல, நண்பன்,'' என்றான்.

''நண்பனா! நண்பனா! ஜெயசிம்மன் நண்பனா!'' என்ற குரல்கள், அவையின் பல பக்கங்களிலிருந்தும் எழுந்தன. அரசகுமாரியின் இகழ்ச்சி ததும்பிய பார்வையொன்றும் கரிகாலன் மீது நிலைத்தது.

''நண்பனா! என்ன கரிகாலா இது?'' என்று வினவினார் வல்லவரையர் வந்தியத்தேவர்.

கரிகாலன் மடியிலிருந்த ஓலையொன்றை எடுத்து வந்தியத்தேவரிடம் கொடுத்தான். அதைப் படிக்கப் படிக்க வந்தியத்தேவரின் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. படித்து முடித்ததும், ஓலையை அரையன் ராஜராஜனிடம் அவரே நீட்டினார். சோழர்களின் பிரதான படைத் தலைவனும் ஓலையைப் படித்ததும் அடியோடு பிரமித்துப் போனான். அவர்களிருவரும் அப்படி ஓலையைப் படித்து விட்டு ஆச்சரியத்திலாழ்ந்து விட்டதைக் கண்ட அவைத் தலைவர்கள், ஓலையிலிருந்த விஷயம் என்னவென்று அறியாதவர்களாய், ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

ஓலையின் மர்மத்தைக் கரிகாலன் சொற்களே நீக்கின. ''தேவர் பெருமானுக்கும் தந்தைக்கும் என் மேலுள்ள சந்தேகம் இன்னும் விலகவில்லையா?'' என்று கேட்டான் கரிகாலன்.

''சரித்திரத்தில் இதுவரை யாரும் சாதிக்காத மாபெரும் காரியத்தை நீ சாதித்து விட்டாய்

## நவம்பர் 25

அண்மையில் பம்பாய்க்கு நான் ரயிலில் பயணம் செய்தபோது எங்களது பெட்டியில் லக்ஷ்மி என்ற பள்ளிச் சிறுமியும் பயணம் செய்தாள். சகஜமாக மற்றப் பயணிகளுடன் பழகினாள். சிறிது நேரம் ஆனதும் பையிலிருந்து காகிதத்தை எடுத்தாள் எங்கள் பெயர் முகவரி எழுதிக் கையெழுத்துப் போடச் சொன்னாள்.

சரி, ஏதோ நன்கொடை சமாசாரம் என்று நினைத்து எரிச்சலுடன் கேவலமாக அதை வாங்கி அவளிடம் 'என்ன, இரண்டு போடலாமா?' என்று கேட்டுக் கொண்டே அந்தக் காகிதத்தில் பார்த்தேன். அதில் கீழ்க்கண்ட வரிகள் எழுதப் பட்டிருந்தன 'நவம்பர் 25'ஆம் தேதி எங்கள் பள்ளி (செயின் மீரா பள்ளி, பூனே) நிறுவனர் சாது டி.எல். வாஸ்வாமியின் பிறந்ததினம்.

அன்று தாங்கள் ஹிம்சை (Violence) மூலம் கிடைக்கும் எந்த உணவுப் பொருளையும் தொட மாட்டேன் என்று உறுதி எடுத்துக் கொண்டு கீழே கையெழுத்திட்டு பெயர் விலாசம் எழுதவும்' என்று எழுதியிருந்த உறுதிமொழி ஃபாரம் அது.

ஒரு பள்ளிச் சிறுமி கையெழுத்து வாங்கிய வித்தியாசமான அந்த ஃபாரம் மனத்தைத் தொட்டது.

—ஈ.வெ.ரா. மோகன்.

கரிகாலா! இந்த மாதிரி ராஜதந்திரத்தை நான் என் ஆயுளில் கண்டதில்லை!'' என்று வந்தியத்தேவர் வியப்பினால் மெய்மறந்து பேசினார்.

அதுவரை பொறுமையாயிருந்த பிரும்ம மாராயர் கரிகாலனுக்கு வந்த பெருமையைச் சகிக்க முடியாமல், ''அப்படியென்ன பெரிய ராஜ தந்திரத்தை இவன் சாதித்து விட்டான்? ஓலையில் என்ன கண்டிருக்கிறது?'' என்று வினவினார்.

''இந்த ஓலை ஜெயசிம்ம சாளுக்கியனால் எழுதப்பட்டு அவன் ஒப்பந்தத்துடனும் முத்திரையுடனும் இருக்கிறது. சோழப்படைகள் வேங்கி நாட்டுக்குள் புகுந்து வடக்கே செல்ல அனுமதிக்கப்பட்டிருக்கிறதென்றும், இந்த ஓலையைக் காணும் எந்த சாளுக்கியப் படைத் தலைவனும் சோழப் படைகளுக்கு வேண்டிய சகல வசதிகளையும் செய்து கொடுக்க வேண்டியதென்றும், இந்த ஓலையில் கண்டிருக்கிறது. இது ஜெயசிம்மன் ஆக்ஞாபத்திரம்!'' என்று கூறினார் வந்தியத்தேவர்.

அவை அப்படியே ஸ்தம்பித்து விட்டது. இது என்ன இந்திரஜாலமா, மகேந்திர ஜாலமா என்று படைத் தலைவர்கள் பிரமிப்படைந்தனர்.

சோழர்களின் பரம விரோதியான ஜெயசிம்மன் திடீரெனப் பரம நண்பனாக மாறியது பேராச்சரியமாய் இருந்தது அவர்களுக்கு. ஆனால் நிரஞ்சனாதேவி மட்டும் இதைப்பற்றி எள்ளளவும் ஆச்சரியப்படவில்லை. தன் எண்ணத்தைத் தெளிவுடனேயே கூறத் தொடங்கிய அவள், ''சோழ நாட்டுப் படைத் தலைவர்களே! இது பெரும் சாதனையல்ல. சோழ நாட்டுக்குப் பெருமையளிப்பதுமாகாது. என் தம்பியின் அரசை ஜெயசிம்மனுக்குத் தத்தம் செய்தீர்கள். ஜெயசிம்மன் அதற்குப் பதிலாக உங்கள் படைகளைத் தனது நாட்டின் மூலம் செல்ல அனுமதிக்கிறான். இது வீரர்கள் செய்யக் கூடிய செய்கையா? ஜெயசிம்மனை வெல்ல முடியாத சோழப் பேரரசர், மருமகன் அரசை மாற்றானுக்குத் தத்தம் செய்து, படைகள் செல்ல அனுமதி வேண்டினார்! என்று உலகம் தூற்றாதா பேரரசை?'' என்று சடசடவென்று வார்த்தைகளை உதிர்த்தாள்.

கரிகாலன் அவளுக்குப் பதில் சொன்னான். ''பெரிய சாதனைகளை முன்னிட்டுச் சிறு நாடுகளை விட்டுக் கொடுப்பது சரித்திரத்திற்குப் புதிதல்ல. அர்த்த சாஸ்திரம் எழுதிய

---




பக்திப் பாடல்களும், திரைப்படப் பாடல்களும் இயற்றிய காலஞ்சென்ற பாபனாசம் சிவனின் பெயர் என்ன? சிவனா? ஊஹூம். அவரது ஊரென்ன? பாபனாசமா? அதுவுமில்லை.

சிவனின் பெயர் ராமய்யா. பிறந்த ஊர் தஞ்சை மாவட்டத்திலுள்ள போலகம்.

எப்படிப் பாபனாசம் சிவன் ஆனார்?

சிறு வயதில் குடும்பத்தில் வறுமை காரணமாக மனத் துறவறம் பூண்டு ஒவ்வொரு கோவிலாய் அலைந்தார். நல்ல சங்கீத ஞானமுள்ளவர். கணபதி அக்கிரகாரம் என்ற கிராமத்துச் சிவன் கோவிலில், சிவப்பழமாய், விபூதிதாரியாக நின்று தாயுமானவர் பாடலை மெய்ம்மறந்து பாடிய ராமய்யாவை, அங்குள்ளவர்கள் கைலாயத்திலிருந்து சிவனே வந்துவிட்டாரோ எனப் போற்றினர். இப்படித்தான் அவர் சிவனானார். பின் பாபனாசத்திலும் ஆசிரியராய்ப் பணிபுரிந்த சகோதரர் ராஜகோபாலனுடன் சில காலம் தங்கினார். அதிலிருந்து அவர் பெயர் பாபனாசம் சிவனாக மாறியது.

ஆதாரம்: ருக்மணி ரமணி எழுதிய ஸ்ரீ பாபனாசம் சிவன் சரிதம்.

நடுப்பக்க வண்ணப்படம்:
வி.பி. மணி

கவிதை எழுதியவர்: சிற்பி.

கௌடில்யனே முதலில் சந்திரகுப்தனைச் சொந்த நாட்டை விட்டுக் கிளப்பிக் கொண்டுபோய், பிறகு அந்த நாட்டிற்கே அவனை அதிபதியாக்கினான். நந்தர்கள் மாதிரி ராட்சசனைக் கௌடில்யனின் ராஜதந்திரம்தான் வென்றது. ஜெயசிம்மனுக்கு எதிராக நாம் கையாளுவது அத்தகைய ஒரு ராஜதந்திரம்தான். இது இந்தப் பேரவையில் பேசக் கூடிய விஷயமல்ல. வந்தியத் தேவரும் என் தந்தையும் மட்டும் தங்களுடனிருக்கும் பட்சத்தில் விஷயத்தை விளக்க என்னால் முடியும்.''

அன்றிரவில் அரையன் ராஜ ராஜன் பாசறையில் கரிகாலன் உள்ள நிலையை விவரித்தபோது, அரையன் ராஜராஜன் மட்டுமல்ல, தேவர் பெருமானும் அரசகுமாரியும் கூட ஆச்சரியத்தால் பிரமித்துப் போனார்கள். கரிகாலன் பேச்சைக் கேட்கக் கேட்க வந்தியத் தேவனின் வயோதிக விழிகளின் எதிரே சோழப் பேரரசின் பெரும் விஸ்தரிப்பு ஆச்சரியமாக எழுந்து கொண்டிருந்தது. அந்தக் கனவில் அவர் வார்த்தைகளையும் உதிர்த்தார். ''அப்பா! ஆச்சரியம்! ஆச்சரியம்! சக்கரக்கோட்டம்! தூரத்தில் மூன்றிலொரு பாகம் தீர்ந்துவிட்டதே,'' என்று முணுமுணுத்தார். அதனால் ஏற்பட்ட ஆனந்தம் தாங்காமல், ஆசனத்திலிருந்து எழுந்து கரிகாலனைத் தம் இரு கைகளாலும் தழுவிக் கொண்டார். ''கரிகாலா, நீ ஒரு தெய்வீகப் பிறவி! உனக்கு வேண்டியதைக் கேள், தருகிறேன்,'' என்றார்.

''கொடுப்பதாகச் சத்தியம் செய்வீர்களா?'' என்று வினவினான் கரிகாலன்.

''கண்டிப்பாய்ச் சத்தியம் செய்வேன். உன் கை எங்கே,'' என்று அவன் கையை எடுத்து, அதில் தம் கரத்தால் அடித்துப் பிரமாணம் செய்யப் போனார்.

''நில்லுங்கள்!''—உக்கிரமாக இடை புகுந்தது அரையன் ராஜராஜன் குரல்.

(தொடரும்)

## என்ன ஞாபகம் வருகிறது?



இந்தப் படத்தைப் பார்த்ததும் என்ன ஞாபகம் வருகிறது உங்களுக்கு? ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள். முகவரி: குமுதம், த.பெ. எண்: 1022, சென்னை—600010. முடிவு தேதி: 9.1.88 பரிசு ரூ. 250/-

# மன்னன் மகள்

## 50. சக்கரக் கோட்டம்

கரிகாலன் கைமீது சத்தியம் அடித்துக் கொடுக்க எழுந்த வந்தியத் தேவரின் கை, அரையன் ராஜராஜன் திடீரெனக் குறுக்கிட்டதால் பாதியிலேயே நின்றுவிட்டாலும், அவர் விழிகளில் மட்டும் பேரார்ச்சரியம் படர்ந்தது. சோழ சாம்ராஜ்ய விஸ்தரிப்புக்கு எல்லையற்ற சேவை செய்திருக்கும் கரிகாலன் கோரிக்கையை நிராகரிப்பது எத்தனை நன்றிகெட்ட செய்கை என்று அவர் பண்பட்ட இதயத்திலே உறுத்தியதால், அவர் அரையன் ராஜராஜனை நோக்கி, ''படைத்தலைவரே! நாட்டுக்கு நலம் புரிந்தவர் கேட்பதைத் தருவது சோழர் மரபில் நாம் கண்ட பண்பல்லவா?'' என்று வினவினார்.

வந்தியத்தேவரைத் திரும்பி நோக்கிய அரையன் ராஜராஜன் விழிகளில் உறுதி பூரணமாகத் தெரிந்தது. ''உண்மைதான் தேவரே. ஒரு நன்மையை உத்தேசித்து நாம் செய்யும் கைம்மாறு நாட்டுக்குப் பெரும் தீங்கைக் கொண்டு வருவதானால், அந்தப் பிரதி உபகாரத்தைச் செய்யாதிருப்பதே ராஜ தர்மம்,'' என்றான் அரையன் ராஜ ராஜன்.

''சோழர்களுக்கு இத்தனை சேவை புரிந்திருக்கும் கரிகாலன் நாட்டுக்குப் பாதகம் விளைவிக்கக்கூடிய பிரதி உபகாரத்தை எதிர்பார்ப்பானென்று நினைக்கிறீரா?'' என்று வினவிய வந்தியத்தேவரின் குரலில் சிறிது கண்டனமும் கலந்திருந்தது.

அரையன் ராஜராஜன் வந்தியத் தேவருக்குப் பதில் ஏதும் கூறாமல், கரிகாலனை நோக்கி, ''கரிகாலா! நாட்டுக்குப் பெரும் நன்மை புரிந்திருக்கிறாய், ஜெயசிம்ம சாளுக்கியனிடம் நீ செய்துகொண்ட ஒப்பந்தத்தால் நமது பெரும் படை எந்தத் தடையுமில்லாமல் சக்கரக் கோட்டம் வரை போக முடியும். நீ விளக்கியபடி இந்த ஒப்பந்தத்தை வேங்கியை அணைத்து நிற்கும் கலிங்க நாடோ அதற்கு அப்பாலிருக்கும் ஒட்டர தேசமோ ஒப்புக் கொள்ளாது. இப்படிக் கலிங்கன் ஒட்டரன் ஒரு பக்கமும், ஜெயசிம்மன் இன்னொரு பக்கமும் சாய்வதால், அம்மன்னர்களின் ஒற்றுமை உடைக்கப்பட்டுவிட்டது. இவர்களைத் தனித் தனியே வெல்வது பரம சுலபம். பெரும் சேனைகள் சாதிக்க முடியாத மகத்தான காரியத்தை ராஜதந்திரத்தால் சாதித்து விட்டாய்...'' என்ற அரையன் ராஜராஜன் பேச்சை இடைபுகுந்து வெட்டிய வந்தியத்தேவர். ''இதனால் நம் கங்கைப் படையெடுப்பில் மூன்றிலொரு பங்கைப் போரில்லாமலே கடக்கிறோம்,'' என்றார்.

இதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த அரையன் ராஜராஜன், ''இத்தகைய மகத்தான பணியை உன் கோரிக்கையால் நாசம் செய்யாதே கரிகாலா!'' என்றான் கடைசியாக.

''அப்படியானால் என் பிறப்பு என் ஆயுள் பூராவும் மர்மமாகவே இருக்கவேண்டியதுதானா?'' என்று வினவிய கரிகாலன் குரலில், துயரம் பூரணமாகத் தொனித்தது.

''யார் கண்டார்கள் கரிகாலா! உனக்கு அந்த மர்மத்தை நானே விளக்கும் சமயம் வரலாம். உன் பிறப்பு வரலாற்றுடன் அரசாங்க ரகசியங்கள் பிணைந்து நிற்கின்றன. அந்தச் சிக்கல்களை விதி தானாக அவிழ்க்கலாம். உன் நல்ல மனசுக்கு அவிழ்க்கவும் செய்யும். அதுவரையில் பொறுத்திரு உன்னை வேண்டுகிறேன்,'' என்று கெஞ்சினான் அரையன் ராஜராஜன்.

---

**சாண்டில்யன்**

கரிகாலனிடமிருந்து பதில் ஏதும் வரவில்லை. சோகப் பெருமூச்சு ஒன்றே வெளிப்பட்டது. மேற்கொண்டு ஏதும் பேசாமல், தலைகுனிந்த வண்ணம் பாசறையைவிட்டு வெளியேறினான் கரிகாலன். அவன் போவதை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்த வந்தியத்தேவர் மனம் பாகாய் உருகிக் கொண்டிருந்தது. சற்று முன்பாக அரையன் ராஜராஜனைக் கூட லட்சியம் செய்யாமல், திடமாகப் போர் நிலவரத்தை எடுத்துக்கூறிய அந்த வீரன் வெளியே சென்றபோது, அவன் எடுத்து வைத்த ஒவ்வோர் அடியிலும் வருத்தம் தொனித்ததைக் கண்ட வந்தியத் தேவர், அரையன் ராஜராஜனை நோக்கினார். அரையன் ராஜராஜன் அவரை அலட்சியமாகப் பார்த்துவிட்டு,

''தேவரே, உம்மிடம் கூட நான் கரிகாலனைப் பற்றிய மர்மத்தைச் சொல்ல முடியாது. மன்னிக்க வேண்டும்,'' என்று சொல்லிவிட்டுப் பாசறையை விட்டு வெளியே சென்றான்.

வந்தியத்தேவர், தம்முடன் தனித்திருந்த அரசகுமாரியைப் பார்த்தார். ''நிரஞ்சனாதேவி, இது வேடிக்கையாயில்லையா?'' என்றும் வினவினார்.

அரசகுமாரியின் மனம் எங்கெங்கோ அலைந்துகொண்டிருந்ததால், அவள் உடனே பதில் சொல்லவில்லை. கரிகாலன் மீது எத்தனையோ கோபமிருந்தாலும், அவன் துயரம் அவள் இதயத்தைப் பல வேல்களைக் கொண்டு தாக்கிக் கொண்டிருந்ததால்,



'அவள் நீண்ட நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு சொன்னாள்: ''தேவரே! நான் அவரைச் சந்தித்தது முதல் நடந்துள்ள வேடிக்கைகள் பல. சந்தித்த முறையே ஒரு வேடிக்கை. வேங்கி வீரர்கள் துரத்த, என்னிடம் அடைக்கலம் புகுந்தார். பிறகு என் தம்பிக்கு உதவுவதாகச் சொல்லி ஜெய சிம்மனுடன் சேர்ந்து கொண்டார். இப்பொழுது எங்கள் நாட்டையே ஜெயசிம்மனிடம் ஒப்படைத்து விட்டார். இதெல்லாம் வேடிக்கை தானே தேவரே?''

அவள் கரிகாலனை வெறுக்கிறாளா விரும்புகிறாளா என்பதைத் தேவரால் புரிந்துகொள்ள முடியாததால், ''அரசகுமாரி! கரிகாலன் உங்களுக்கு ஒருநாளும் தீங்கு செய்ய மாட்டான். ஏதோ பெரிய நல்ல முடிவை உத்தேசித்தே இந்த வேங்கி நாட்டைத் தற்காலிகமாக எதிரியிடம் ஒப்படைத்திருக்கிறான். நான் கிழவன் தான் அரசகுமாரி. இருந்தாலும் மனித இதயங்களை நன்கு அறிவேன். கரிகாலன் உங்களைப் பார்க்கும் பார்வைக்கு என் மனம் தரும் விளக்கம் சரியானால், உங்களுக்காக அவன் தன் உயிரையும் தியாகம் செய்வான். பொறுத்திருங்கள் அரசகுமாரி. காலம் உங்களுக்குச் சந்துஷ்டியான முடிவைத் தரும்,'' என்று சமாதானம் செய்தார் வந்தியத்தேவர்.

அத்துடன் அவ்விருவரும்கூடப் பாசறையைவிட்டு அகன்றார்கள். அங்கிருந்து அகன்ற அரசகுமாரி, நேராக அறைக்குச் செல்லாமல் சைனியங்கள் தங்கியிருந்த இடத்தை நோக்கிக் கால் நடையாகச் சென்றாள். அவள் உள்ளத்தில் எண்ணற்ற எண்ண அலைகள் பேரிரைச்சலுடன் தாக்கிக் கொண்டிருந்ததால், அவள் ஏதோ கனவில் நடப்பவள்போல் நடந்து சென்றாளாயினும், அடிக்கடி படைத்தளத்தின் எங்கோ ஒரு பகுதியிலிருந்து எழுந்த கூச்சல்களை அவள் காதுகள் கேட்கத் தவறவில்லை. தளமடித்துத் தங்கிய காலத்திலும், அரையன் ராஜராஜன் தன் படைகளை எத்தனை அருமையாக அணிவகுத்திருந்தான் என்பதைக் கண்ட அவள், தன் சுய எண்ணங்களையும் துயரங்களையும் ஓரளவு மறந்து, 'வேங்கியிலும் இந்த மாதிரி அணிவகுப்பு என்றாவது நடைபெறுமா? என் தம்பி மன்னனாக



தலைவலி 1



தலைவலி 2



தலைவலி 3

முடிசூடி வீரனாக வாழ்வானா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள்.

அரையன் ராஜராஜன் பாசறை மண்டபத்திலிருந்து கவனித்தால், நான்கு அரைச்சக்கரங்களாக சைனியத்தைச் சோழர் படைத்தலைவர் நிறுத்தியிருப்பது தெரியும். தளத்தின் கோடி அரைச் சக்கரம் யானைப் படை, அதற்கு அடுத்த அரை வட்டம் குதிரைப் படை. இந்த அர்த்த சந்திர வியூகத்தை அரசகுமாரி பார்க்கப் பார்க்க, பெரிய வீரர்கள் வம்சத்தில் பிறந்த அவள் உள்ளத்திலும், வீர அக்கினி கொழுந்து விட்டு நின்றது. 'இந்தப் படைகளை அரையன் ராஜராஜன் எப்படி நடத்திச் செல்வான்? அதுவும் கங்கைக் கரை வரையில்?' என்று பிரமித்தாள் அவள். உண்மையாகக் கங்கைப் பயணம் வந்தபோது, அவள் பிரமிப்புப் பன் மடங்கு அதிகமாயிற்று.

விக்கிரமச் சோழிய வரையரான அரையன் ராஜராஜன் பெரும் ரஸ்திகளை உடைய இராஜேந்திர சோழ தேவரின் ஆக்ஞைப்படி, மேலைச் சாளுக்கிய நாட்டின் எல்லையிலிருந்து, சுக்கிலபட்ச சப்தமியன்று கங்கைப் படையெடுப்பைத் துவக்கினான். சோழப் பேரரசின் இணையற்ற படை பலத்துக்கும் ஆற்றலுக்கும் அத்தாட்சியாக விளங்கிய அந்த மாபெரும் படை பிரும்மாண்டமாக அணிவகுத்து நின்றது. படையின் முன்னணியில் அரையன் ராஜராஜன் பூரண பொற்கவசம் அணிந்து, அந்தப் பொற்கவசம் காலைச் சூரியனில் பளபளக்கப் பெரும் வெள்ளைப் புரவி மீது வீற்றிருந்தான். அவன் வலப் பக்கத்தில் ராட்சசன் போலிருந்த பிரும்ம மாராயன் பெரும் இரும்புக் கவசத்துடனும், இடது பக்கத்தில் ராணுவ உடையில் செங்கமலச் செல்வியும் குதிரைகளில் ஆரோகணித்துப் புறப்படத் தயாராயிருந்தனர். செங்கமலச் செல்விக்கு அருகே கரிகாலன் காணப்பட்டான். மற்றப் பாண்டிய, சேர நாட்டுப் படைத் தலைவர்கள் ஏராளமாகப் படைத் தலைவனை அடுத்துப் புறப்படச் சித்தமாயிருந்தனர்.

துந்துபிகள் முழங்கப்பட்டன. தாரைகள் சப்தித்தன. சங்குகள் ஒலித்தன. நிரஞ்சனாதேவி அரையன் ராஜராஜன் நெற்றிக்குத் திலகமிட்டு, ''சோழர் படைத்தலைவரே! சென்று வெற்றி வாகை சூடித் திரும்புங்கள்,'' என்றாள்.

''நன்றி அரசகுமாரி! ஆனால் இந்தப் பயணத்தின் முன்பாகத் தங்களை ஒன்று கேட்கலாமா?'' என்று வினவினான் சோழப் படைத்தலைவன்.

''கேளுங்கள்.''

''செய்வீர்களா?''

''கண்டிப்பாகச் செய்வேன்.''

''இந்தப் படையெடுப்பு சாத்தியமானதற்குக் காரணமான என் மகன் கரிகாலனுக்கும் உங்கள் கையால் திலகமிட வேண்டும்,'' என்று, குனிந்து மெள்ளச் சொன்னான் சோழர் படைத் தலைவன்.

நிரஞ்சனாதேவி மௌனம் சாதித்தாள். அரையன் ராஜராஜன் மீண்டும் வேண்டினான். ''அரசகுமாரி! போருக்குச் செல்பவர்களில் யார் திரும்புவோம், யார் திரும்ப மாட்டோம் என்று சொல்ல முடியாது. ரணகளம் செல்லும் வீரனுக்குப் பெண்கள் அளிக்கக்கூடிய ஒரே உதவியை




தலைவாரிப் பின்னிவிடும் பெண்களில் எவ்வளவு பேர் நுனியை முடிகிறார்கள்? எத்தனை பேர் நுனி முடிய ரப்பர் வளையம் பயன்படுத்துகிறார்கள்.

29.12.87 தி.நகரில் பாண்டி பஜாரில் மாலை 5.15 முதல் 6.45 வரை கவனித்தபோது—

ரப்பர் வளையம் இட்ட பெண்கள் 43; ரிப்பன் கட்டிக்கொண்ட பெண்கள் 27; குஞ்சலம் வைத்துக் கொண்டவர்கள் 4; வெற்றுப் பின்னலாக அப்படியே விட்டவர்கள் 32 பேர்.

—பா. கோ.

மறுக்காதீர்கள்,'' என்றான் அரையன் ராஜராஜன்.

நிரஞ்சனாதேவி மெள்ளக் கரிகாலனை நோக்கி நடந்து, அவன் புரவியை அணுகி, கையிலிருந்த தங்கச் சிமிழிலிருந்து குங்குமத்தை எடுத்தாள். அவன் புரவியிலிருந்தபடியே குனிந்தான். திலகமிட்ட அவள் விரல்கள் நடுங்கின. திலகத்தை அவன் நெற்றியில் தீட்டிவிட்டுத் தலை குனிந்தபடியே வந்தியத்தேவரின் ரதமிருந்த இடத்துக்குச் சென்றாள். அரையன் ராஜராஜன் கையை உயர்த்தினான். படை பெரும் கடல்போல் நகர்ந்தது. கரிகாலனை நோக்கிக் கொண்டிருந்த அரசகுமாரியின் விழிகளில் நீர் தேங்கி நின்று, ரதத்தின் தட்டிலும் விழுந்தது.

வந்தியத்தேவர் அவளை ஆசுவாசப்படுத்த முற்பட்டு, ''தேவி! கலங்காதீர்கள்! கரிகாலன் பெரும் வெற்றி வாகையுடன் திரும்புவான். அவனிடம் உபதலைவனாகச் செல்லும் உங்கள் தம்பியும் மாபெரும் வீரனாகத் திரும்புவான். அதுவரையில் காஞ்சி மாநகரில் நீங்கள் ராஜேந்திர சோழ தேவரின் பராமரிப்பில் இருக்கலாம்,'' என்றான்.

அரசகுமாரி போகும் படைகளையே பார்த்துக் கொண்டு நின்றாள். எங்கும் தூள் கிளப்பப் படை நகர்ந்தது. தூரம் செல்லச் செல்ல வேகமாக நகர்ந்தது. அன்றிலிருந்து இருபதாவது நாள் இந்திராவதி நதிக்கரையில் ராஜபுரத்துக்கு ஒரு காத தூரத்திலிருந்த சக்கரக் கோட்டம் என்ற சித்திர கூடத்துக்கு எதிரில் தங்கியது.

அந்தச் சித்திர கூடத்தின் அரண்களையும் அமைப்பையும் பார்த்த அரையன் ராஜராஜன், இந்தக் கோட்டையை எப்படிப் பிடிக்கப் போகிறோம் என்று அஞ்சினான். அவன் அச்சம் சரியென்பதைக் காலம் நிரூபித்தது. இரண்டு மாத காலம் முற்றுகையிட்டும் சக்கரக்கோட்டம் சரணடையவில்லை. எதற்கும் குழம்பாத கரிகாலன் மூளைகூட, 'இந்தச் சக்கரக் கோட்டம் எப்படி உணவில்லாமல் இரண்டு மாத காலமாகச் சமாளிக்கிறது?' என்ற கேள்வியால் குழம்பியது.

கேள்விக்குப் பதில் மிகவும் எதிர்பாராத விதமாகக் கிடைத்தது கரிகாலனுக்கு.

(தொடரும்)







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன: விடை: 87'ம் பக்கம்

# மன்னன் மகள்

21-1-88

## 51. காட்டுக்குள்ளே காலடிச் சத்தம்

மாசுணி தேசத்தின் முக்கியக் கோட்டைகளில் ஒன்றான சககரக் கோட்டத்தைத் தன் படைகளைக் கொண்டு சூழ்ந்தபோது, அந்தக் கோட்டை நீண்ட நாள் தன்னை எதிர்த்து நிற்க முடியும் என்று அரையன் ராஜராஜன் கனவிலும் கருதவில்லையாதலால், முற்றுகை இரண்டு மாத காலத்துக்கும் மேலாக நீடித்தது பெரும் மனக்கவலையை அளித்தது அவனுக்கு. நீண்ட தூரம் பயணம் செய்து நாலைந்து அரசுகளுடன் போரிட வேண்டிய படைகளுக்கு ஓரளவு ஓய்வு ஆங்காங்கே அவசியமென்றாலும், அதிகப்படியான ஓய்வை அளித்தால் படைகளின் சுறுசுறுப்புக் குறைந்து போகுமென்பதை அனுபவத்தில் கண்டறிந்த அரையன் ராஜராஜனுக்கு, சக்கரக் கோட்டத்தின் முற்றுகை நீடிக்க நீடிக்க மன வேதனையும் அதிகமாகிக் கொண்டே வந்தது.

சக்கரக் கோட்டத்தைப் படைகள் அணுகிய முதல் நாளன்று, அதன் அமைப்பையும் கோட்டையின் வலுவையும் கண்ட சோழர் படைத் தலைவன் அதைப் பிடிப்பது அவ்வளவு எளிதல்ல என்பதை உணர்ந்தானானாலும், தன் படைபலத்தையும்



சாண்டில்யன்

528

கோட்டையிலிருக்கக் கூடிய பாதுகாப்பையும் எடை போட்டுப் பார்த்த பின், பலமான அந்தக் கோட்டையை உடைப்பதும் தன் படைகளுக்கு எளிதே என்று எண்ணினான். மாசுணி நாகர்களின் அந்தக் கோட்டையின் மூன்று வாயில்களையும் தனது ஆயிரம் யானைகளையும் கொண்டு தவிடுபொடியாக்கி விட முடியுமென்றும், பிறகு காலாட்படையும் குதிரைப் படையும் உள்ளே புகுந்தால் ஊரைக் கண் இமைக்கும் நேரத்தில் கைவசப்படுத்தி விடலாமென்றும் நினைத்தான். சோழர் படைத் தலைவன். இந்த யோசனையை அவன் தனது படைத்தலைவர்களிடம் முதல் நாள் வெளியிட்டபோது, கரிகாலன், அரையன் ராஜராஜனை எதிர்த்துப் பேசினான்.

படைகள் கோட்டையை வளைத்துத் தங்கிய முதல் நாளிரவு தன் படைத் தலைவர்களை மந்திராலோசனைக்கு அழைத்த அரையன் ராஜராஜன் தன் திட்டத்தை அவர்களுக்கு விளக்கிச் சொன்னான்.

சற்று எட்ட எரிந்துகொண்டிருந்த பந்தத்தின் திக்கில் கை நீட்டி எதிரேயிருந்த கோட்டையைச் சுட்டிக் காட்டிய சோழர்களின் பிரதான படைத்தலைவன், ''பிரும்ம மாராயரே, அதோ அந்தக் கோட்டையின் அமைப்பு பலமானதுதான். ஆனால், அதில் சில பலவீனங்களும் இருக்கின்றன. அதோ பாருங்கள், கோட்டையின் முகப்பில் மூன்று பெரிய வாயில்கள் அர்த்த சந்திர வடிவத்தில் காணப்படுகின்றன. அந்த வாயிலின் கதவுகளை நமது யானைப் படைகள் உடைக்க முடியுமானால், பிறகு நமது படைகள் மிகச் சுலபமாக உள்ளே நுழையலாம். தவிர, இந்திராவதி நதி இந்தக் கோட்டையை இணைந்து ஓடுவதும் நமக்கு அனுகூலம். கோட்டைக்குப் பின்னிருக்கும் நதி ஆழமானது. ஆகவே எதிரியின் படைகள் வெளியே வருவதானால் முன் வாயில் வழியாகத்தான் வரவேண்டும்.. வந்தால் நமது வாயில் நுழைந்துதானாக வேண்டும்,'' என்றான்.

பிரும்ம மாராயரும் இதர தளபதிகளும் கோட்டையை உற்றுக் கவனித்தார்கள். கடைசியில் அரையன் ராஜராஜனைப் பார்த்த பிரும்ம மாராயர், ''இதைவிடச் சிறந்த மார்க்கம் இருக்க முடியாது. நீண்ட மரங்களை யானைகளின் துதிக்கைகளில் கொடுத்துக் கதவுகளை நொறுக்கி விடலாம். பிறகு தலைவர் அனுமதி கொடுத்தால் நான் என் படைப் பிரிவுகளுடன் நகருக்குள் நுழைந்து விடுவேன்,'' என்றார்.

இதர படைத் தலைவர்களும் அரையன் ராஜராஜன் யோசனையை அங்கீகரித்தார்கள். கோட்டைக்கெதிரேயிருந்த சமவெளியில் அமர்ந்திருந்த அந்தப் படைத் தலைவர்களிடமிருந்து சற்று விலகி நின்று கோட்டையை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த கரிகாலனைப் பார்த்த செங்கமலச் செல்வி, ''அப்பா! அவர் ஏதும் சொல்லவில்லையே!'' என்று வினவி, கரிகாலன் இருந்த திசையில் கண்களை ஓட்டினாள்.

இதைக் கேட்ட பிரும்ம மாராயர், வயிறு குலுங்கப் பெரிதாக நகைத்து, ''கரிகாலனா! அவன் என்ன சொல்ல முடியும் செல்வி? அநேகப் போர்களில் வெற்றி கண்ட அரையன் ராஜராஜனின் திட்டத்துக்குக் குறை சொல்லக் கூடிய திறன் உடையவன் சோழ மண்டலத்தில் எவனிருக்கிறான்?'' என்று வினவினார் கேலியாக.

அவருடைய ராட்சசச் சிரிப்பினால், கோட்டையிலிருந்து கண்களை அகற்றிப் பக்கத்திலிருந்த படைத் தலைவர்களை நோக்கித் திரும்பிய கரிகாலன், ''இந்தக் கோட்டைக் கதவுகளை உடைத்து உட்புகுவது நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு எளிதல்ல பிரும்ம மாராயரே'' என்றான்.

பிரும்ம மாராயர் அடுத்த வினாடி எரிமலை போல வெடித்தார். ''ஏன் உபதளபதியாரே! ஏன் உட்புக முடியாது? கதவுகளை உடைக்க நமது யானைகளுக்கு வலுவில்லையா? அவற்றைத் தொடர்ந்து உட்புக நமது படைகளுக்குத்தான் பலமில்லையா?'' என்று கோடையிடி போன்ற குரலில் கேள்விகளை மடமடவென்று வீசினார்.

அவர் சொற்களிலிருந்த கோபத்தைக் கரிகாலன் கவனித்ததாகவே தெரியவில்லை. நிதானமாக, அரையன் ராஜராஜனையும் மற்றப் படைத் தலைவர்களையும், பார்த்தே சொன்னான்: ''படைத்தலைவர்களே! கதவுகளை மாத்திரம் பார்க்காதீர்கள். கதவுகளுக்கு மேலேயுள்ள கோட்டைச்

''இனி யாரிடமும் கடன் வாங்கறதில்லேன்னு முடிவு பண்ணிட்டேன்.''

''எப்பதிலேருந்து?''



''எனக்கு யாரும் கடன் தர்றதில்லேன்னு முடிவு பண்ணதிலேருந்து.''

—ஆர். ராஜேந்திரன்.

---

சுவர்க் கட்டடங்களில் எத்தனை பெரிய துவாரங்கள் இருக்கின்றன. கவனியுங்கள்.'' என்று.

படைத்தலைவர்கள் கண்கள் மீண்டும் கோட்டைகளை ஆராய்ந்தன. அரையன் ராஜராஜனும் அந்தப் பெரும் துவாரங்களை ஆராய்ந்தான். ''துவாரங்கள் இருக்கின்றன கரிகாலா! அவற்றால் கோட்டைக்குப் பலவீனம் தானே?'' என்று வினவினான் அரையன் ராஜராஜன் இறுதியில்.

''ஆம் தந்தையே! பலவீனம் தான். ஆனால், அந்தப் பலவீனத்தை எதற்காக அந்தக் கோட்டை மீது அமைத்திருக்கிறான் சிற்பி?'' என்று வினவினான் கரிகாலன்.

''தூரத்திலிருந்து வரும் படைகளைக் கண்காணிப்பதற்காக இருக்கலாம்,'' என்று அரையன் ராஜ ராஜன் பதில் சொன்னான்.

''அதற்கும் இருக்கலாம்; அப்படிப் படைகள் வந்து கோட்டையைச் சூழ்ந்து கொள்ளு மானால், படைகளைக் கோட்டைகளை அணுக விடாமல் அம்பு மாரி பொழியவும் அந்தப் பெரும் துவாரங்கள் உபயோகப் படலாம். தவிர, இந்தக் கோட்டையும் சாளுக்கியர்கள் கோட்டைகளைப் போன்ற அமைப்பைக் கொண்டிருக் கிறது. கோட்டைச் சுவரின் அகலம் நான்கு அடிகளுக்குக் குறைவில்லை. இந்த ஒவ்வொரு துவாரத்தையும் ஒட்டிக் கோட்டைச் சுவரின் மேல்பாகம் பூராவும் வில்லாளிகள் தங்கலாம்....''

கரிகாலன் இதற்குமேல் பேசாமல் மீண்டும் கோட்டைச் சுவரைக் கவனித்தான். அவன் மேலே பேசா விட்டாலும் கரிகாலன் மனத்திலோடிய எண்ணங்களை நொடிப் பொழுதில் புரிந்துகொண்ட அரையன் ராஜராஜ னுக்கு அந்தக் கோட்டையைத் தாக்கு வதோ பிடிப்பதோ தான் எண்ணியது போல் அத்தனை சுலபமல்லவென்பது மட்டும் திட்டமாகத் தெரிந்தது. ஆகவே, கரிகாலன் கிளப்பிய ஆட்சேபணையை அவனே பூர்த்தி செய்து, இதர படைத்தலைவர்களுக்கு நிலைமையை விளக்கினான்.

''கரிகாலன் சொல்வது சரிதான் பிரும்ம மாராயரே'' என்று முணுமுணுத்தன அரையன் ராஜராஜன் உதடுகள்.

''என்ன சொல்கிறான் கரி காலன்? எதைச் சரியென்கிறீர்கள்?'' என்று சீறினார் பிரும்ம மாராயர்.

''பிரும்ம மாராயரே! நீரும் போரில் நெடுநாள் பழக்கமுள்ளவர். நானும் எத்தனையோ போர்களைக் கண்டிருக்கிறேன். இருந்தும் அனுபவ மற்ற இந்தச் சிறுவனின் கண்களில் பட்டது நம்மிருவர் கண்களிலும் படவில்லை, பார்த்தீர்களா?'' என்றான் அரையன் ராஜராஜன்.

''என்ன கண்டுவிட்டான் இவன்?'' என்றார் பிரும்மா மாராயர் விஷயம் லவலேசமும் புரியாமல், ஆனால் கோபம் குரலில் கொழுந்துவிட்டெரிய.

''அதோ, அந்தக் கோட்டைக்குள் மேலுள்ள சுவரில் தெரியும் பெரிய துவாரங்கள்...''

''ஆம்; இருக்கின்றன.''

''அவற்றுக்குப் பின்னால் வில்வீரர்கள் இருக்க முடியும்.''

''இருக்கட்டும்.''

''வேல் வீரர்களும் இருக்க லாம்.''

''இருக்கட்டுமே!''

''யானைகள் கதவைத் தாக்கப் புறப்படுமானால், அந்தத் துவாரங்களி லிருந்து வாளிகள் யானைகளை நோக்கிப் பறக்கும். ஈட்டிகளும் பறந்து

வரும்!''

இதைக் கேட்ட பிரும்ம மாராயருக்கும் மெள்ள மெள்ள விஷயம் புரியலாயிற்று. அரையன் ராஜராஜனின் திட்டம் அந்தத் துவாரங்களினால் எப்படித் தவிடு பொடியாகி விட்டதென்பதை உணர்ந்தார். வேல்களும் அம்புகளும் சரியாகக் குறி பார்த்து யானைகளைப் பார்த்து எய்யப்படுமானால் யானைகள் மிரளலாம். மிரண்டு அலங்கோலமாக ஓடினால் அவற்றுக்குச் சேதம் ஏற்படுவதைத் தவிர, பின்னால் இருக்கும் நமது காலாட் படைக்கும் சேதம் ஏற்படும்,'' என்று தமக்குள்ளேயே சொல்லிக் கொண்ட பிரும்ம மாராயர், அரையன் ராஜராஜனைப் பார்த்து விழித்தார்.

பதிலுக்கு அரையன் ராஜராஜன் புன்முறுவல் காட்டி, ''பார்த்தீரா பிரும்ம மாராயரே! போரில் அனுபவமற்ற இந்தச் சிறுவன் கண்களில் படுவது நமது கண்களில் படவில்லை,'' என்று மீண்டும் சுட்டிக் காட்டினான்.

அப்பொழுதும் வீம்பை விடாத பிரும்ம மாராயர், ''சிறு துரும்பும் பல் குத்த உதவும்,'' என்று அலட்சியமாகவே பேசினார் கரிகாலனைப்பற்றி. அந்த அலட்சியத்தைக் கரிகாலன் கவனித்தானானாலும், கவனிக்காதது போலவே உள்ள ஆபத்தை மேலும் விளக்க முற்பட்டு, ''தந்தையே, எதிரிகள் கோட்டையிலிருந்து அம்புகள் எய்யும் விஷயத்தில் நாம் இன்னொரு விஷயத்தையும் கவனிக்க வேண்டும். இது நாகர்கள் நாடு. நாக பூஜை செய்பவர்கள். இவர்களிடம் நாகப் பாம்புகள் கட்டுப்பட்டிருப்பதாகச் சரித்திரம் கூறுகிறது. இவர்களது அம்புகளிலும், ஈட்டிகளிலும் நாகப்பாம்புகளின் கடும் விஷம் தோய்க்கப்பட்டிருக்கதென்றும் கேள்வி. அந்த அம்புகள் யானைகளின் மீதோ அல்லது நமது பிரும்ம மாராயர் மீதோ பாய்ந்தால் நிலைமை என்னவென்பதைச் சொல்லத் தேவையில்லை. பிரும்ம மாராயர் என்ன செய்வாரென்று என்னால் சொல்ல முடியாது. ஆனால் யானைகள் மீது விஷம் தீட்டப்பட்ட வாளிகள் பாய்ந்தால் யானைகள் அலறித் திரும்பி, நமது படைகளை நோக்கி ஓடிவரும்...'' என்று பேச்சை முடிக்காமலே விட்டு, பிரும்ம மாராயர் மீது ஏளனம் கலந்த இளநகையொன்றையும் வீசினான்.

ஆனால் இத்தனையையும்







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன: விடை: 77'ம் பக்கம்




கேட்டுக் கொண்டிருந்த செங்கமலச் செல்வி இளநகை காட்டவில்லை, பெரிதாகவே நகைத்தர்ள்.

''ஏனம்மா சிரிக்கிறாய்?'' என்று கேட்டார் பிரும்ம மாராயர்.

''யானைகள் மிரண்டு திரும்பி ஓடி வந்தால் நமது படைகள் மிதிபட்டுப் போகுமே. அதை நினைத்துப் பார்த்தேன். தவிர, உங்கள் மீதும் விஷ வாளி பாய்ந்தால்...'' என்ற செல்வியின் பேச்சை, ''மாண்டு போவேன். வீர சொர்க்கம் அடைவேன்,'' என்று முடித்தார் பிரும்ம மாராயர்.

''மாண்டு போக முடியாது பிரும்ம மாராயரே!'' என்று திருத்தினான் கரிகாலன்.

''மாண்டு போக முடியாதா?விஷவாளி பாய்ந்தால் ஆயுசு நீடிக்குமோ?'' என்று சீறினார் பிரம்ம மாராயர்.

''ஆமாம் பிரும்ம மாராயரே! நாகர்கள் பாம்பின் விஷத்தில் ஏதோ பச்சிலையைக் கலக்குகிறார்களாம். அதனால் அவர்கள் வாளியால் தாக்கப் பட்டவனுக்குப் பைத்தியம் பிடிக்குமாம்! யானைகளுக்கு மதம் பிடித்ததாகவும் கேள்வி,'' என்றான் கரிகாலன்.

இதற்குப் பின் நிலைமையை நினைப்பதே பயங்கரமாயிருந்தது பிரும்ம மாராயருக்கு. ''மதம் பிடித்த நமது யானைகள் நமது படைகளை நோக்கி ஓடிவந்தால்...'' என்று இரைந்தே பேசினார்.

''பெரும் குழப்பம்! நமது படைகள் நாசப்பட்டுவிடும்,'' என்று விளக்கினான் கரிகாலன்.

''வேறு இதற்கு வழிதான் என்ன கரிகாலா?'' என்று வினவினான் அரையன் ராஜராஜன்.

''முற்றுகைதான் வழி தந்தையே! ஆகாரமெதுவும் நகரத்துக்குள் போகவிடாமல் செய்வோம். பிறகு எதிரி கோட்டைக் கதவுகளைத் திறந்துகொண்டு சண்டைக்கு வந்தாலும், நமது குதிரைப் படை கண்ணிமைக்கும் நேரத்தில் எதிரி களைத் தாக்க முடியும். அப்படிச் சண்டைக்கு வரவில்லையானால், எதிரி சரணடைய நேரிடும். பிறகு தொல்லையே இல்லை,'' என்று கரி காலன் யோசனை சொன்னான்.

அவன் யோசனைப்படியே முற்றுகைக்கு உத்தரவிட்ட அரையன் ராஜராஜன், தன் படைகளைக் கோட்டையைச் சுற்றிலும் நிறுத்தினான். கரிகாலன் யோசனைப்படி யானைப்படை பின்னுக்குக் கொண்டுபோகப்பட்டது. குதிரைப் படை முன்னணியில் தங்கியது. கோட்டையை முற்றிலும் சோழர்களின் பிரும்மாண்டமான படை சூழ்ந்துகொண்டது. ஆனால் ஒரே ஒரு இடத்தை மட்டும் படைகள் சூழ முடியவில்லை. அதுதான் இந்திரா வதியை அடுத்து கோட்டையின் மேற்குப் பக்கத்திலிருந்த வாயிலுக்கருகில் அடர்த்தியாயிருந்த காடு. அந்த இடத்தில் முத்துத்தேவன் சுமார் முப்பது வீரர்களுடன் காவலுக்கு நிறுத்தப் பட்டான். ''அந்தக் காடு இருந்தென்ன? எதிரிக்கு அதனால் பயனில்லை,'' என்று அரையன் ராஜராஜன் மட்டுமென்ன, கரிகாலன்கூட நினைத்தான்.

ஆனால், எதை மனிதன் அலட்சியப்படுத்துகிறானோ அதுவே பெரும் எமனாய் வந்து சேருகிறது. அவனுக்குப் பல சமயங்களில். அந்தக்காடு எதிரிக்கு அத்தனை தூரம் உபயோக மாயிருக்கும் என்று கரிகாலன் சொப்பனத்தில் கூட நினைக்கவில்லை. சுவரில் முதன் முதலாக முளைக்கும் சிறு அரசச் செடியை எப்படி அலட்சியம்

செய்கிறோமோ, அப்படியே கரிகாலன் அந்தச் சிறு காட்டையும் அலட்சியம் செய்தான். அதன் விளைவு?"

மாதம் இரண்டாகியும் சக்கரக் கோட்டம் பணியாததைக் கண்ட கரிகாலன், ஒரு நாளிரவு சந்திர வெளிச்சத்தில் முத்துத் தேவனுடன் சம்பாஷித்துக் கொண்டே, அந்தக் காட்டின் முகப்பில் இந்திராவதி நதிக்கரையோரமாக நடந்து கொண்டிருக்கையில், சட்டென்று குனிந்து எதையோ கையிலெடுத்தான். அந்தப் பொருளைப் பார்க்கப் பார்க்க அவன் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. மீண்டும் தரையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே சிறிது தூரம் நடந்த கரிகாலன் வழிநெடுக உணவுப் பொருள்கள் இறைந்திருக்கக் கண்டு, ''இதைப் பார்த்தாயா முத்து?'' என்று கையிலிருந்த பதக்கத்தை முத்துத் தேவனிடம் கொடுத்ததன்றி, சிந்திக் கிடந்த உணவுப் பொருள்களையும் சுட்டிக் காட்டினான்.

முத்துத்தேவன் எல்லையற்ற ஆச்சரியத்தால் அந்தப் பதக்கத்தையும் கரிகாலனையும் மாறி மாறி நோக்கி விட்டு, ''இதில் ஒட்டர நாட்டு ராஜ முத்திரை இருக்கிறதே!'' என்றான்.

''இப்பொழுது புரிந்து விட்டது எனக்கு, இந்த முற்றுகை நீடிக்கும் காரணம்,'' என்றான் கரிகாலன்.

''என்ன புரிந்து விட்டது?'' என்று வினவினான் முத்துத்தேவன்.

விஷயத்தை மெள்ள விளக்கினான் கரிகாலன். அவன் விளக்க விளக்க மிதமிஞ்சிய கலவரத்துக்கு உள்ளான முத்துத்தேவன், ''இதை உடனே படைத் தலைவரிடம் சொல்ல வேண்டாமா?'' என்றான்.

''வேண்டாம் முத்து.''

''பின் நாம் செய்ய வேண்டியது?''

செய்ய வேண்டியதை எடுத்துச் சொன்னான் கரிகாலன். அவன் யோசனையைக் கேட்ட முத்துத்தேவன், ''இது சுத்தப் பைத்தியக்காரத்தனம். அரையன் ராஜராஜனுக்குத் தெரிந்தால் இருவர் தலைகளையும் வாங்கி விடுவான்,'' என்று கூவினான்.

முத்துத்தேவனின் எச்சரிக்கைக்குச் சிறிதும் செவி கொடுக்காத கரிகாலன், ''நீ போய் இருபது வீரர்களை அழைத்து வா, முத்து,'' என்று உத்தரவிட்டுவிட்டு, மீண்டும் தரையை ஊன்றிக் கவனித்துக் கொண்டே கோட்டையை நோக்கி நடக்கலானான். அதற்கு மேல் ஏதும் பேச முடியாத முத்துத்தேவன், கரிகாலன் உத்தரவுப்படியே இருபது வீரர்களை அழைத்து வந்தான். அந்த இருபது வீரர்கள் வருவதற்குள் தன் ஆராய்ச்சியை ஒருவழியாக முடித்துக் கொண்ட கரிகாலன் அந்த இருபது வீரர்களையும் அந்தக் காட்டின் பக்க வாட்டுகளில் ஒளிந்து கொள்ளச் செய்தான். கரிகாலனும் ஒரு மரத்தடியில் மறைந்து நின்று காட்டினுட்புறத்தைக் கவனித்துக் கொண்டு நின்றான். இரவு ஏறியது; நடுநிசியும் தாண்டி விட்டது. காத்திருந்த வீரர்கள் பொறுமை இழக்கத் தொடங்கினார்கள். முத்துத்தேவன் கூடப் பொறுமை இழந்து, ''தலைவரே! இன்னும் எத்தனை நேரம் இப்படிக் காத்திருக்க வேண்டும்? யாருக்காகக் காத்திருக்கிறோம்?'' என்று கேட்டான்.

அந்தச் சமயத்தில் எங்கிருந்தோ மெள்ள மெள்ளக் காலடிகள் கேட்டன. காட்டுக்குள்ளேயிருந்து சிறு பந்தமொன்றும் மெல்ல நகர்ந்து வந்தது.

(தொடரும்)

**ஆறு வித்தியாசங்கள் விடை:**



1. சன்னல்
2. நரிக்குறவர் மாலை
3. வக்கீல் கோட்டு
4. தபால்காரர் தொப்பி
5. தெரு முனையில் வேடிக்கை பார்ப்பவர்
6. பேசுபவர் வேட்டி



''ஆபரேஷன் தான் முடிஞ்சுடுச்சுனு சொல்றியே, அப்புறம் தியேட்டரில் இன்னும் டாக்டர் என்ன செய்றார்?''

''பேஷண்டிடம் கடன் கேட்கிறார்!''

—கடுவை கோபால்சாமி.

திறக்கக் கூடாத கதவு.
கிருஷ்ணகுமார்.

அந்த வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்று அப்போது விளங்கவில்லை.

திறக்கக் கூடாத கதவு—முன்கதை

**சென்ற வாரம்:** என் பெயர் தியாகு. என் நண்பர் ராமாமிர்தம் திடீரென்று இறந்து விட்டார். அவருக்கு இரண்டு பெண்கள். ஒருத்தி கல்யாணமாகி, கணவன் ஸ்ரீராமுடன் அஸ்ஸாமிலிருந்து வந்திருக்கிறாள். இன்னொருத்தி அனுசூயா—அனு—வெளியூரில் நர்ஸாக இருந்து, இப்போது சென்னைக்கு மாற்றலாகியிருக்கிறாள். பயந்த சுபாவம் உள்ள பெண்.

மூத்த மாப்பிள்ளை ஸ்ரீராம் என்னிடம் செலவுகளுக்காகக் கொடுத்து வைத்திருந்த ஆயிரத்தைந்நூறு ரூபாயை என் ஹாண்ட் பாக்கில் வைத்திருந்தேன். அதை மயானத்தில் விட்டுவிட்டு வந்தது ஞாபகம் வர, நள்ளிரவில் அதை எடுப்பதற்காகச் சுடுகாட்டுக்குப் போகிறேன். பையை எடுத்துக் கொள்ளும் சமயம், ஒரு சிறு நெருப்புக் குவியலிலிருந்து சித்தர் பாடல்கள் கேட்கின்றன. 'அவளை அந்தக் கதவைத் திறக்க வேண்டாமென்று சொல்லு' என்று ஒரு குரல் கேட்கிறது. நான் மயக்கம் போட்டு விழுகிறேன்.

## 2

''சார்! சார்!'' என்ற குரல் முதலில் வெகு தூரத்திலிருந்து கேட்பது போலிருந்து, பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் கிட்டத்தில் கேட்கலாயிற்று.

என் காதுக்குள்ளேயே வந்து அறைகிற மாதிரி பெரும் சத்தமாகக் கேட்டபோது நான் விழித்துக் கொண்டேன்—'என்ன... யார்... ஏன்...' என்ற உளறல்களுடன்.

கண்ணைத் திறந்தபோது சோகை நிலா உச்சிக்கு வந்திருந்தது. முதுகின் கீழே சுடுகாட்டின் மண்ணும் கல்லும் உறுத்தின. வியர்வையினால் சட்டை சொத சொதவென்று நனைந்திருந்தது. என் முகத்துக்கு நேர் மேலே சுடுகாட்டுக் காவல்காரனின் முகம் மிக நெருக்கமாகத் தெரிந்தது. அவனுடைய மெல்லிய மீசை காடாந்தாரமாகத் தெரிகிற மாதிரி தோன்றியது. தலையைச் சுற்றி அவன் கட்டிக் கொண்டிருந்த முண்டாசின் ஒரு நுனி தொங்கி என் மூக்கில் நெருடியபோது தொடக்கூடாத ஆயிரம் கொடுக்குகள் என்னைத் தொடுகிற மாதிரி ஓர் அருவருப்பு உண்டாயிற்று. பூனையோ நாயோ என் பக்கமாக ஓடி என் முகத்தின் மீது பொடிப் பொடியான மண்ணை வாரி இறைத்துவிட்டுச் சென்றது.

காவல்காரன் இரண்டு கைகளையும் இடுப்பில் வைத்துக் கொண்டு கவிழ்ந்த மாதிரி நின்று கொண்டிருந்தான். ''என்ன சார், சுடுகாட்டுக் காத்து இதமாயிருந்திச்சா? நல்லாத் தூங்கிட்டியே? உனக்கு இன்னும் வயசு ஆவலே. இன்னும் கொஞ்ச நாள் கழிச்சு வா. ஒரேயடியா




## 52. போவது என் உயிர்

இரவின் மூன்றாவது ஜாமத்தின் ஆரம்பத்திலே பிறைச் சந்திரனும் மறைந்து விட்டதால் ஏற்பட்ட பயங்கர இருளிலே, அந்தத் தீப்பந்தம் மட்டும் ஏதோ மந்திரத்தால் உந்தப்பட்ட பெரிய கொள்ளிவாய்ப் பிசாசைப் போல மெள்ள மெள்ள ஊர்ந்து, காட்டின் முகப்பை நோக்கி வந்து கொண்டிருந்தது. அந்தப் பந்தத்துக்குப் பயந்து தானோ அல்லது சற்று முன்பாகக் கரிகாலன் தன் வீரர்களுக்கு இட்ட ஆணையைக் கேட்டு அஞ்சியோ தெரியாது, இரவில் சப்திக்கும் ஆந்தைகளும், மரப் பல்லிகளும் கூடத் தங்கள் குரலைக் காட்டாமல் ஒடுங்கிக் கிடந்ததால், எங்கும் கிலியைத் தரக் கூடிய பேரமைதி நிலவிக் கிடந்தது. அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு மெல்ல மெல்லக் கிளம்பிய காலடிச் சப்தத்தை, காட்டை அணைத்து ஓடிய இந்திராவதிப் பிரவாகத்தின் சலசலப்புச் சத்தம் அழுத்திவிடவே, காட்டுக்குச் சற்றுத் தொலைவிலேயிருந்த படைகளுக்கு மரங்களுக்கிடையே பூரண அமைதி நிலவியிருந்ததாகத் தோன்றியது. ஆகவே, காவலுக்காக இரவில் நடமாடிய போர் வீரர்கள்கூட அந்தப் பிராந்தியத்தில் தலைகாட்டாமல் எட்டவே போய்க் கொண்டிருந்தார்கள்.

ஆராய்ச்சித் திறனை அளவற்றுப் பெற்றிருந்த கரிகாலன் இந்த நிலையை எல்லாம் சீர் தூக்கிப் பார்த்து ஒரு முடிவிற்கு ஏற்கனவே வந்திருந்ததால், மற்ற வீரர்களின் தலையீடு இருக்குமென்ற பயம் சிறிதும் இல்லாமலே தன் திட்டத்தை வகுத்திருந்தான். உணவுப் பொருள்களைக் காட்டின் முகப்பில் பார்த்த விநாடியிலேயே, கோட்டையிலுள்ள படைகளுக்கு அவ்வப்பொழுது தானியம் அனுப்பப்படுகிறதென்பதையும் அது காரணமாகவே முற்றுகையைப் பற்றிக் கோட்டையிலுள்ளவர்கள் அலட்சியமாக இருக்கிறார்கள் என்பதையும் தீர்மானித்துக் கொண்ட கரிகாலன், சோழர்களுடைய பெரும் படைகளுக்கிடையே உணவுப் பொருள்களை எடுத்துச் செல்பவன் சாமானிய மனிதனாக இருக்க மாட்டான் என்டதையும் நிச்சயம் செய்து கொண்டான். கோட்டையின் அமைப்பையும் காட்டின் இருப்பிடத்தையும் கண்டதும், அதன் மூலமாக உணவுப் பொருள்களைக் கொண்டு வருவது எத்தனை சுலபம், முற்றுகையிட்டுள்ள படைகளின் கண்களில் மண்ணைத் தூவுவது எத்தனை எளிது என்பதையும் கண்டு கொண்டான் கரிகாலன். காட்டை அடுத்து ஓடும் இந்திராவதியின் பிரவாகச் சத்தம் காட்டிலும் ஏற்படும் மனிதர்களின் நடமாட்ட சத்தத்தையும் அடக்கிவிடும் என்பதையும், பந்தங்கள் ஏதாவது அங்கு உலாவினாலும் எட்ட இருக்கும் படைகளுக்கு ஏதோ காவல் வீரர்களின் நடமாட்டம் அங்கு ஏற்பட்டிருப்பதாகப் புலப்படுமேயொழிய வேறு சந்தேகம் ஏற்படக் காரணமில்லையென்பதையும் கரிகாலன் நன்றாகப் புரிந்து கொண்டான். படைகளின் இந்த அசிரத்தைக்கு இடையே புகக்கூடிய எதிரி பெரும் சாமர்த்தியமுள்ளவனாகத்தான் இருக்க முடியுமென்பதையும் அந்தப் பௌத்த மடாலயச் சீடன் திட்டமாகத் தெரிந்து கொண்டிருந்ததால், அத்தகைய பேர்வழியை ரகசியமாக வளைத்து மர்மத்தை அறிவதால் பெரும் பலனுண்டு என்ற முடிவுக்கு வந்து, அரையன் ராஜராஜனுக்கோ, இதர படைத் தலைவனுக்கோ தெரியாமலேயே காரியத்தை முடிக்க முனைந்தான்.

அவன் வீரர்களுக்கு இட்ட

**சாண்டில்யன்**



உத்தரவு திட்டமாயிருந்தது. ''நடுவே தெரியும் ஒற்றையடிப் பாதைக்குப் பக்கத்திலுள்ள மரங்களின் கிளைகளில் மரத்தோடு மரமாக ஒட்டிப் படுத்திருங்கள். நான் குரல் கொடுத்தால் வருகிறவர்கள் யாராயிருந்தாலும் அவர்களை நோக்கி வேல்களை எறிய ஆயத்தமாக இருங்கள்,'' என்று உத்தர விட்ட கரிகாலன், அவர்கள் பதுங்கிய பின்பு தானும் ஒரு மரத்தடிக்குப் பின்பாக மறைந்து நின்று கொண்டான். காட்டின் முகப்பை நோக்கி ஊர்ந்து வந்த பந்தத்தை அந்த நிலையிலிருந்து அவன் நன்றாகக் கவனிக்க முடிந்தது. மிகுந்த எச்சரிக்கையுடன் மெள்ள மெள்ள வந்து கொண்டிருந்தவர்களின் காலடிச் சத்தத்திலிருந்து, அவர்கள் மொத்தம் நாலைந்து பேருக்கு மேல் இருக்க முடியாதென்ற முடிவுக்கு வந் தான் கரிகாலன். அப்படி நாலைந்து பேரே வருவதானால் அவர்கள் முன்னால் வந்து நிலைமையை ஆராய்பவர்களாகத்தான் இருக்க வேண்டுமென்றும், அவர்களுக்குப்

பின்னால் உணவுப் பொருள்களைச் சுமந்து வருபவர்கள் வேறு இருக்க வேண்டுமென்றும் கரிகாலன் தீர்மானித்தான். வருவது வேவுப் படையாயிருந்தால், அதைச் சிறிது சத்தம் செய்ய விட்டாலும் பின்னாலிருப்பவர்கள் எச்சரிக்கையடைந்து ஓடி விடுவார்களென்பதை உணர்ந்த கரிகாலன், அத்தகைய நிலைக்கு இடம் கொடுக்காமலிருக்கத் தனது வில்லில் அம்பைப் பொருத்தி நாணை நன்றாக இழுத்துப் பிடித்துக் கொண்டான்.

பந்தம் மெள்ள மெள்ள நகர்ந்து கரிகாலன் மறைந்திருந்த மரத்தடிக்கருகில் வந்ததும் சற்று நின்றது. பந்தத்தை ஏந்தி வந்தவன் முகத்தை நன்றாக மூடி முக்காடிட்டிருந்ததால் பந்தத்தின் பிரகாசத்திலும் அவன் முகத்தைப் பார்க்கக் கரிகாலனுக்கு வாய்ப்பில்லாமல் போனாலும், அவன் நின்ற தோரணையும், தலையை ஒரு முறை ஆட்டி, எதிரேயிருந்த கோட்டையை நோக்கிய மாதிரியும், அவனை எங்கோ பார்த்திருக்கும் உணர்ச்சியை ஊட்டின. இருந்தாலும் அதைப் பற்றி அதிகமாக அக்கறை செலுத்தாத கரிகாலன், வந்திருந்தவனின் நடவடிக்கையை மட்டும் மிக உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டு தன் மறைவிடத்திலேயே நின்றான். பந்தத்தை ஏந்தி வந்தவனும், சிறிது நேரம் கோட்டையையும் தூரத்தே இருந்த சோழர்கள் படையையும் ஒரு விநாடி நோக்கிவிட்டுப் பின்னால் இருந்தவர்களுக்கு, 'அபாயமில்லை, வரலாம்,' என்பதற்கறிகுறியாகக் கையால் சைகை செய்ய, சற்றுத் தூரத்தே காட்டுக்குள் நின்றிருந்த மற்ற நால்வரும் அவனிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

''பொதிகளை இக்கரைக்குக் கொண்டு வரலாமா?'' என்று கேட்டான் ஒருவன்.

''சற்றுப் பொறு. அதோ வரும் காவல் வீரர்கள் இந்தப் பகுதியைக் கடந்து செல்லட்டும்,'' என்றான் பந்தத்தைக் கொண்டுவந்தவன்.

''ஏன்? அந்தக் காவற் படை போனால், இன்னொன்று வராதா?'' என்று வினவினான் மூன்றாமவன்.

''முட்டாள்! அதோ பார், சோழர் பெரும் படையை. அதைச் சுற்றிக் காவல் புரிவது அவ்வளவு எளிதா? இந்த நான்கு வீரர்கள் அதில் கால் பாகத்தைச் சுற்றுவதற்குக் குறைந்த பட்சம் கால் ஜாமமாவது ஆகும். இன்னொரு காவல் கோஷ்டி இப்பொழுது வராது. சோழர் படைக் காவல் முறைகளை நான் நன்றாக அறிவேன். கலங்காதே!'' என்றான் பந்தத்தைப் பிடித்திருந்தவன்.

அவன் மெள்ளத்தான் பேசினான்; ஆனால் குரல் மிகப் பரிச்சயமானதாயிருந்தது கரிகாலனுக்கு. பந்தத்தை ஏந்தி வந்தவன் குறிப்பிட்ட நான்கு காவல் வீரர்களும் தாண்டும் வரையில்தான் கரிகாலனும் பொறுத்திருந்தான். அந்த வீரர்கள் தூரத்திலிருந்த மூலையைத் திரும்பியதும், காட்டுக்குள் திரும்ப முற்பட்ட பந்தமேந்தி திடீரென அசைவற்று நின்று, எதையோ உற்றுக் கேட்டான். பிறகு, ''இங்கே யாரோ அசைந்தார்கள், யாரது?'' என்று கிலியுடன் கேள்வியும் கேட்டான்.

அந்தக் கேள்வியைத் தொடர்ந்து மெள்ள ஒரு நகைப்பொலியும் கேட்கவே, பந்தத்தைப் பிடித்திருந்தவனின் பயம் பன்மடங்கு அதிகமாகப் பெருகி, ''யாரது? யார் சிரிப்பது?'' என்று சற்றே நடுக்கம் கொடுத்த குரலில் விசாரித்தான்.

''நான்தான்!'' இருளைக் கிழித்துக் கொண்டு நிதானமாக, ஆனால் மிகத் திட்டமாக எழுந்தது கரிகாலன் குரல். மரத்தடியில் யாரோ ஒளிந்திருக்கிறார்களென்பது திட்டமாகத் தெரிந்ததும், அந்த ஐவர் கூட்டம் சிதறியோடப் பார்த்தது. ஆனால், கரிகாலனின் அடுத்த சொற்கள் அவர்களை ஸ்தம்பிக்கச் செய்தன ''பந்தமேந்தியவனே! ஓர் அடி நகர்ந்தால் பிணமாகி விடுவாய். என் கையிலிருக்கும் வாளி உன் இதயத்துக்காகக் குறி வைக்கப்பட்டிருக்கின்றது. சுற்றிலும் மரங்களில் என் வீரர்கள் இருக்கிறார்கள். உன் சகாக்கள் மீது அவர்கள் வேல்கள் குறிபார்த்து நிற்கின்றன. உயிரின் மீது ஆசையிருந்தால் யாரும் நகர வேண்டாம். பந்தத்தைக் கீழே எறிந்து இருளில் ஓடிவிடலாம் என்றும் மனப்பால் குடிக்காதே. பந்தம் அசையு முன்பே என் வாளியும் என் வீரர்களின் வேல்களும் உங்கள் இதயங்களில் பாய்ந்து விடும்,'' என்று சொல்லிக் கொண்டே மறைவிடத்திலிருந்து

ானில் பூட்டிய வாளியுடன் வெளியே ந்தான் கரிகாலன். அடுத்த விநாடி ரத்திலிருந்து இருபது வீரர்களும் ச்சிறு கூட்டத்தை வேல்களுடன் ழ்ந்து கொண்டார்கள்.

கரிகாலன் உத்தரவுப்படி அடுத்த நாடியில் பந்தமேந்தியின் கரத்தி ருந்த பந்தம் அகற்றப்பட்டது. தன் ரனொருவன் பந்தத்தை உயர்த்திப் டிக்க, பந்தமேந்தியின் முகத்திரையை லக்கிய கரிகாலன் ஒரு கணம் ப்படியே ஸ்தம்பித்துப் போனான். 'யார், நீயா?'' என்று ஆச்சரியத்தால் ரண்டு சொற்களையும் உதிர்த்தான். வன் எதிரே சைவத் துறவியார் நின்று கொண்டிருந்தார். சேர நாட்டு ஒற்றனான ஜெயசிம்மன், மீண்டும் ழைய வேடத்தையே புனைந்திருந் நான். முதன் முதலில் கும்பகோணம் ாவிரிக் கரையருகில் கண்ட அதே கோலம். முகத்தை அலங்கரித்த பொய்த் நாடி மீசை! நெற்றியிலே பெருமளவு நிருநீறு! கையிலே அதே காவிப் பை! உடலிலே காவி உடை. துறவியாரின் அந்தக் கோலம் ஒரு விநாடி பழைய நினைவுகளை, முக்கியமாகக் நடமுக்கின் கன்னிக் காவிரியாளின் கரையோரக் காட்சிகளைக் கரிகாலன் கருத்திலே கிளப்பி விட்டன. படித் துறைகளில் குளித்துக் கொண்டிருந்த பெண்களின் இன்பக் காட்சி, காவிரிப் பிரவாகத்திலே மிதந்து வந்த மலர்களின் சுந்தரத் தோற்றம் எல்லாம் அவன் கண் முன்னே எழுந்தன.

அந்தக் கனவில் ஒரு விநாடி திளைத்த கரிகாலன், சரேலென்று அந்த உணர்ச்சிகளை உதறிவிட்டு சைவத் துறவியாரை நோக்கி, ''ஸ்வாமி! மீண்டும் பழைய ஆசிரமத்துக்குப் போய் விட்டீர்கள் போலிருக்கிறது. சரி, அடியேன் பாசறைக்கு விஜயம் செய்யுங்கள்,'' என்று கூறிவிட்டு, 'முத்து! இவர்களை என் பாசறைக்குக் கொண்டு வா,'' என்றவன், ஏதோ யோசித்துவிட்டு, ''வேண்டாம்! உன் இருப்பிடம் அருகில்தானே இருக்கிறது? அங்கேயே செல்வோம்,'' என்று உத்தர விட்டு முன்னால் நடந்தான்.

காட்டுக்குச் சற்று தூரத்தி லிருந்த முத்துத்தேவன் கூடாரத்தில், சைவத் துறவியாரும் கரிகாலனும் நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம்

துறவியார் ஏதோ பேச வாயெடுத்து, ''அன்று வேங்கியில் உன்னிஷ்டப்படியே நடந்தேன்.....'' என்று இழுத்தார்.

''என்னிஷ்டப்படி நடக்க வேண்டிய அவசியம் தங்களுக்கு அடிக்கடி ஏற்படுகிறது. அதற்கு நான் என்ன செய்யட்டும், ஸ்வாமி?'' என்று சொல்லிச் சிரித்த கரிகாலன், ''துறவியாரே, இரவு ஏறிக் கொண்டிருக்கிறது. பேச நேரம் அதிகமில்லை. உணவுப் பொருளோ கோட்டைக்குள் போய்ச் சேர வேண்டும்,'' என்று பேச்சைச் சற்று நிறுத்தினான்.

''உணவுப் பொருளா? என்ன உணவுப் பொருள்?'' என்றார் துறவியார் ஏதுமறியாதவர் போல்.

''ஸ்வாமி, தாங்கள் காட் டுக்குள் சீடர்களுடன் வந்தது தவம் செய்வதற்காக அல்லவென்பதை நான் அறிவேன். ஆகவே, தாமதம் செய்யா மல் சொல்லுங்கள், ஆற்றங் கரைக்கு அக்கரையிலிருக்கும் உணவுப்பொருள்களை கோட்டைக்குள் எப்படிச் சேர்ப்பது?''

''எனக்கெப்படித் தெரியும்?''




ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: அடுத்த பக்கம்

''தெரியாமலா உணவுப் பொதிகளைக் கொண்டு வந்தீர்?''

''உணவுப் பொதிகளா? எங்கிருந்து?''

''ஒட்டர நாட்டிலிருந்து இந்திரதத்தன் உதவியால்.''

விவரிக்க இயலாத ஆச்சரிய ரேகை துறவியாரின் முகத்தில் படர்ந்தது. ''அதுவும் தெரியுமா உனக்கு?'' என்று வினவினார்.

''இதில் என்ன ஆச்சரியமிருக்கிறது? மாசுணி தேசத்தை அடுத்திருப்பது ஒட்டர நாடு. அதன் மன்னன் இந்திரதத்தன் சோழர் படைகளின் தாக்குதலிலிருந்து தப்ப எதையும் செய்வான். சக்கரக் கோட்டம் எத்தனை நாள் சோழர் படைகளை இந்திராவதி நதி தீரத்தில் தடுத்து நிறுத்துமோ, அத்தனையும் அவனுக்கு லாபம்தானே! அதெல்லாம் புரிகிறது துறவியாரே! ஆனால் நீர் எதற்காக இந்த ஆபத்தான வேலையில் புகுந்தீர் என்பதுதான் புரியவில்லை,'' என்றான் கரிகாலன்.

''என் கடமையை முன்னிட்டு,'' என்றார் துறவியார்.

''என்ன கடமை?''

''உன்னை எப்படியாவது முறியடிக்கும் கடமை.''

''என் மீது உமக்கேன் அத்தனை துவேஷம்?''

''செங்கதிர் மாலையை நீ என்னிடமிருந்து பறித்ததுதான் காரணம் கரிகாலா! அதை எப்படியாவது கொண்டு வருவதாகச் சேரமானிடம் சபதம் செய்திருக்கிறேன். அதை நீ என்னிடம் ஒப்படைக்கும் வரை, நீ எங்கு சென்றாலும் உன்னைத் தொடருவேன். உன் படைகளை முறியடித்து நீ நாகர்கள் கையில் சிக்கும் பட்சத்தில், உன்னைச் சித்திரவதை செய்து மாலையை மீட்கத் திட்டமிட்டேன்,'' என்றார் துறவியார்.

கரிகாலன் துறவியாரைச் சிறிது நேரம் உற்று நோக்கினான். பிறகு கேட்டான். ''ஜெயவர்மா! எப்படியும் அந்த மாலையை உன்னிடம் திருப்பித் தருவதாகச் சொன்னேனே, என்னிடம் நம்பிக்கையில்லையா உனக்கு?''

ஜெயவர்மனும் அச்சமில்லாமலேயே பதில் சொன்னான்: ''உன்னை எப்படி நம்புவது? உன்னை நம்பிய வேங்கி நாட்டு மன்னன் மகளையே ஏமாற்றி, அவள் தம்பியின் நாட்டை வாங்கி எதிரியிடம் அளித்து விட்டாயே!''

கரிகாலன் சற்று நேரம் ஏதோ யோசித்துவிட்டு, ''சரி ஜெயவர்மா! அந்தப் பழங்கதை எதற்கு? இந்த உணவுப் பொருள்களை எப்படிக் கோட்டைக்குள் கொண்டு போகிறாய்? அதைச் சொல்,'' என்றான்.

''சொல்லா விட்டால்?'' என்று ஜெயவர்மன் வினவினான்.

''காட்டில் மரங்கள் நிரம்ப இருக்கின்றன. அவற்றுக்குப் பலமான கிளைகளும் உண்டு.''

''இருந்தாலென்ன?''

''நீங்கள் ஐவரும் அதில் தொங்கலாடுவீர்கள்.''

''உயிரைத்தானே கொண்டு போவாய்? கொண்டு போ முற்றுகையை எப்படி உடைப்பாய்?''

''உங்கள் ஐந்து பேர் சவங்களைக் கோட்டை மதில்களுக்கு அருகே எறிய ஏற்பாடுகள் செய்வேன்.

கோட்டைப் பொந்துகளிலிருந்து கீழே பார்க்கும் வீரர்கள் உங்கள் சவங்களை அடையாளம் கண்டு கொள்வார்கள். இனி உணவுப் பொருள்கள் வராதென்பதைக் கோட்டைத் தளபதி உணர்வான். அது அவன் உரத்தை உடைக்கும். சில நாட்களில் கோட்டையிலுள்ள மக்களின் உறுதியும் குலையும். அந்த நேரத்தில் சோழர்கள் படை கோட்டையைத் தாக்கும்,'' என்று தன் திட்டத்தை விவரித்தான் கரிகாலன்.

''உணவுப் பொருள்கள் உள்ளே செல்லும் முறையை நான் சொல்லி விட்டால்?'' என்று மீண்டும் வினவினான் ஜெயவர்மன்.

''முதலில் உங்கள் ஐவர் உயிரும் தப்பும்; கோட்டையிலுள்ள மக்களும் தப்புவார்கள்,'' என்று கூறினான் கரிகாலன்.

''எப்படி?''

கரிகாலன் தன் மாற்றுத் திட்டத்தையும் விளக்கினான். அதைக் கேட்ட ஜெயவர்மன் சொல்லவொணாத ஆச்சரியத்தில் மூழ்கி, ''கரிகாலா! புத்தியற்றவனே! இது நடக்கக் கூடிய காரியமா? உனக்கு வாழ்க்கை அதற்குள்ளாகக் கசந்து விட்டதா?'' என்று கூவினான்.

''உயிர் நிலையற்றது ஜெயவர்மா! ஆனால் புகழ் சாசுவதமானது. ஒன்றை விரும்புபவன் இன்னொன்றின் மீது அதிகம் பற்றுதல் வைக்கக் கூடாது,'' என்றான் கரிகாலன்.

அவன் துணிவைக் கண்டு வியந்த ஜெயவர்மன் மெள்ள மெள்ள உணவுப் பொருள்கள் கோட்டைக்குள் செல்லும் முறையை விளக்கினான். அடுத்த கால் ஜாமத்திற்குள் கரிகாலன் ஏற்பாடுகளை மிகத் துரிதமாகச் செய்தான். ஜெயவர்மனையும் அவன் சகாக்களையும் காவலில் வைத்தான். செங்கமலச் செல்விக்குச் சொல்லியனுப்பி, அவளை வரவழைத்து ரகசியமாகச் செய்தியை அவளுக்குச் சொன்னான்.




அவன் சொன்ன செய்தியை— சிங்கத்தின் வாய்க்குள் தானாகத் தலையிடத் தீர்மானித்த அவன் உறுதியைக் கண்ட செல்வி நடுங்கினாள். தன் அழகிய கரங்களை அவன் தோள் மீது வைத்து, ''இது ரொம்ப அபாயமாயிற்றே!'' என்று துக்கத்தால் தழுதழுத்த குரலில் கூறினாள்.

''செல்வி! அபாயம் எங்கில்லை? மனிதனைக் குவலயத்தில் சூழ்ந்திருப்பது பூராவும் அபாயம்தானே? பயப்படாதே. நாளைக்கு மறு நாள் இரவு இதே நேரத்தில் சக்கரக் கோட்டத்தின் கதவுகள் திறக்கும். என்னை நம்பு!'' என்று கூறிவிட்டு, அவள் அழகிய கன்னத்தையும் ஆதரவாக வருடிக் கொடுத்தான்.

அந்த ஸ்பரிசத்தினால் ஏற்பட்ட உணர்ச்சியால் அவள் சற்றே அசைவற்று நின்றாள். சிலையென அவள் நின்ற தன்மையையோ, உணர்ச்சியால் அவள் உள்ளத்தே ஏற்பட்ட கொந்தளிப்பையோ கவனிக்காமலே, அவன் வெளியே சென்றான்.

செல்வியும் அந்தக் கூடாரத்தின் வாயிலிலே வந்து நின்றாள். சிறிது நேரத்திற்கெல்லாம் காட்டின் முகப்பிலிருந்து ஒரு பந்தம் இருமுறை ஆடியது. கோட்டையின் மேற்கு வாசலிலிருந்து மற்றொரு பந்தம் பதிலுக்கு இரு முறை ஆடியது. சில விநாடிகளில் காட்டு முகப்பிலிருந்த பந்தம் அணைந்தது. பிசாசுகள் போல் இருபது முப்பது பேர் கோட்டையை நோக்கி மெல்லச் சென்று கொண்டிருந்தனர். கரிகாலன் தன் மரணத்தையே நாடிச் செல்கிறான் என்று நன்றாகப் புரிந்து விட்டதால், ஏக்கம் கலந்த பெருமூச்சொன்று செண்பக மொட்டையும் பழிக்கும் செங்கமலச் செல்வியின் நாசியிலிருந்து வெளி வந்தது. அவள் கமலக் கண்களில் நீர்த் துளிகள் திரண்டெழுந்து அவள் கன்னங்களில் உருண்டோடின.

''போவது அவரல்ல, என் உயிரே போகின்றது அங்கே!'' என்று அவள் தேம்பித் தேம்பி அழுது கொண்டே வார்த்தைகளை உதிர்த்தாள். அவள் இதயம் சுக்குநூறாக வெடித்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)

மன்னன் மகள்

4.2.88

—சாண்டில்யன்



## 53. பிரும்மமாராயனின் கேள்வி

விக்ரமச் சோழியவரையனான அரையன் ராஜராஜன் படைத்தளத்தின் மேற்குக் கோடியிலே, முத்துத் தேவன் கூடாரத்தின் முகப்பிலே, சுக்கு நூறாக வெடித்துக் கொண்டிருந்த இதயத்துடன், சுவர்க்கத்திலிருந்து உதிர்ந்து விட்ட அப்ஸரஸ் மங்கையைப் போல இணையற்ற எழிலுடன் பொழுது போவது தெரியாமலே நீண்ட நேரம் நின்று கொண்டிருந்தாள் செங்கமலச் செல்வி. தன் நெஞ்சிலே நிலையாக நின்றுவிட்ட கரிகாலன் வேண்டுமென்றே மரணத்தை நாடிச் செல்கிறானே என்ற எண்ணம் அவள் உணர்ச்சிகளை உருக்கி உருக்கிக் கண்ணீராக வடித்துக் கொண்டிருந்ததால் தூரத்தே ஆங்காங்கு கூடார முகப்புகளில் எரிந்து கொண்டிருந்த தீப்பந்தங்கள் கூட, நீர்த் திரையிட்ட அவள் கண்களுக்கு மங்கலாகவே தெரிந்தன. சற்று நேரத்திற்கொரு முறை சென்ற காவற்படை வீரர்களின் உருவங்கள்கூட அவள் கண்களில் திரண்டு நின்ற கண்ணீர் காரண



574

மாக அநாவசியமாக அகலப்பட்டும் நீண்டும் பல பிசாசுகளைப் போலத் தோற்றமளித்தன. எதிரே பல கோபுரங்களுடன் எழுந்து நின்ற சக்கரக் கோட்டமும், அவள் விழிகளின் நீரிலே அலைந்து அலைந்து உருக் குலைந்தே தெரிந்தது. பிரபஞ்சமே மங்கி அலைந்து உருக் குலைந்து விட்டதாகவே தோன்றியது செங்கமலச் செல்விக்கு, அந்தச் சந்தர்ப்பத்திலே.

கடைசியாக, அவன் தன்னிடம் விடைபெற்றுச் சென்ற தோரணையை நினைத்ததும், அவள் கண்ணீர் வடித்தாள். அவன் ஆணையிட்ட சமயத்தில் திடமாகக் கணீரென்று கேட்ட குரல், அவன் சென்று வெகு நேரமாகியும் அவள் காதுகளில் மீண்டும் மீண்டும் ஒலித்துக் கொண்டிருந்தது. தன் தோள்மீது அவன் கையை வைத்தபோதும், கன்னத்தை ஆசையுடன் வருடியபோதும் தன் உடலில் அதிக வேகத்தில் பாய்ந்து சென்ற இன்ப அலைகளை நினைத்து அப்பொழுதும் ஏங்கிக் கொண்டிருந்தாள் அவள். அந்த ஸ்பரிச வேதனையை நினைத்ததால், அவள் உள்ளத்திலே சொல்லவொண்ணா வெட்கமும் ஏற்பட்டு, துக்கமும் இன்பமும் கலந்த அழகிய களையொன்று முகத்திலே படர்ந்தது. அந்த ஸ்பரிசம் அவளைப் பழைய நினைவுகள் பலவற்றுக்கும் இழுத்துச் செல்லவே ஏதேதோ உணர்ச்சிகளுக்கு இலக்காகிய செங்கமலச் செல்வி, பதுமை போல முத்துத்தேவன் கூடாரத்தின் முகப்பிலேயே நின்றாள். காட்டில் கரிகாலனுக்குப் பின்புறத்தில் இணைந்து நின்று, அவனுக்குத் தான் வில்வித்தை கற்பித்தது, வெண்ணிலவில் நீரோடைக்கருகே வெட்கத்தையெல்லாம் விட்டு, தான் அவனைத் தழுவி நின்றது ஆகியவற்றை நினைக்க நினைக்க அவள் உலகத்தின் ஸ்மரணையையே அடியோடு மறந்தாள். தன்னையும் கரிகாலனையும் தவிர வேறு சிருஷ்டியே உலகத்தில் கிடையாது என்ற பிரமையிலேயே திளைத்தாள். குறுக்கே எழுந்தது நிரஞ்சனாதேவியின் எழிலுருவம்.

அன்னத்தைப் பழிக்கும் நடையுடன் நிரஞ்சனா தேவி அவள் கனவுகத்தில் குறுக்கே நடந்து வந்தாள். சதா சாந்தத்தைப் பொழியும் அவள் அமுத விழிகள் செங்கமலச் செல்வியை நோக்கி நகைத்தன. கருத்தின்




சொப்பனத்திலே எழுந்த அந்த கனவு மங்கையை, 'அடிபாவி! உனக்காகத் தானே அவர் உயிரைத் துறக்கக் கோட்டைக்குள் செல்கிறார்!' என்று செங்கமலச் செல்வி மனமாரச் சபிக்கவும் செய்தாள். 'இந்தச் சிங்காரியை மட்டும் அவர் சந்திக்காதிருந்தால் நிச்சயம் அவர் என்னைக் காதலிப்பார். அப்படிக் காதலித்திருந்தால், இத்தனை பெரிய தியாகத்தை அவர் செய்ய வேண்டியிருக்காது. அவர் உடலில் ஓர் ஊசி பாய்வதைக் கூட நான் அனுமதிக்க மாட்டேனே! என் உயிரையே கொடுப்பேனே!' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்.

நிரஞ்சனாதேவியைக் கரிகாலன் காதலிக்கிறானென்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்டிருந்த செங்கமலச் செல்விக்கு, நிரஞ்சனா தேவியின் போக்கு மட்டும் பெரும் புதிராயிருந்தது. எந்த மந்திராலோசனையிலும் வேங்கி நாட்டு இளவரசி கரிகாலனின் யோசனையை எதிர்த்தே பேசி வந்திருப்பதையும் சதா அவனிடம் வெறுப்பைக் காட்டி வந்திருப்பதையும் கண்ட செல்வி, 'இவள் அவரை ஏன் வெறுக்கிறாள்? உண்மையாகவே வெறுக்கிறாளா? வேண்டியவனிடம் போலி வெறுப்பைக் காட்டும் பெண்ணின் நடிப்பா அது? என்று பல கேள்விகளைக் கேட்டு, அவை எதற்கும் விடை காணாது தவித்தாள். இருந்த போதிலும் ஒரு விஷயம் நிச்சயமாகத் தெரிந்திருந்தது அரையன் ராஜாராஜன் மகளுக்கு. கரிகாலன் நிரஞ்சனா தேவியைக் காதலிக்கிறானென்றும், அதற்காகவே அவன்

விஜயகாந்தா?



பிரபுவா?



ஏதோ திட்டங்களை வகுத்துக்கொண்டு, பெரிய பெரிய ஆபத்துக்களில் தலையை நுழைத்துக் கொள்கிறானென்றும், செல்வி சந்தேகமற நம்பினாள். அன்று அவன் சக்கரக் கோட்டத்தின் கோட்டைக்குள் துணிந்து நுழைவதும் கூட, மன்னன் மகளின் நன்மையைக் கருதிதான் என்று நினைத்தாள். சக்கரக் கோட்டத்துக்குள் கரிகாலன் நுழைவதற்கும் மன்னன் மகளின் அரசியல் அபிலாஷைகளுக்கும் சம்பந்தமிருந்ததோ இல்லையோ, அத்தகைய சம்பந்தத்தைத் தன் சித்தத்திலே சிருஷ்டித்துக் கொண்டாள் செங்கமலச் செல்வி, அன்று அந்தக் கூடாரத்தின் முகப்பிலே.

இப்படிப் பலப்பல எண்ணங்கள் உள்ளத்திலே சுழல நின்ற அந்தச் சித்தினிப் பெண், நீண்ட நேரத்துக்குப் பின் சற்றே சுய உணர்வைப் பெற்று அக்கம் பக்கத்தில் திரும்பிப் பார்த்தாள். அரையன் ராஜராஜன் மகள் நின்றிருந்ததால் உட்காரத் தைரியமில்லாத இரண்டு காவல் வீரர்கள் மட்டும் சற்று ஒதுங்கி, பயபக்தியுடன் நின்றிருந்தார்கள். தன் கண்களில் வடியும் நீரை அவர்கள் பார்த்துவிடக் கூடாதென்பதற்காக வேறுபுறம் திரும்பி, கண்ணைச் சேலைத் தலைப்பால் துடைத்துக் கொண்ட செங்கமலச் செல்வி, ''யாரங்கே! கூடாரத்தைக் காவல் புரியுங்கள், நான் வருகிறேன்,'' என்று கூறிவிட்டு நடக்க முற்பட்டாள்.

''அம்மணி! தங்கள் புரவி இருக்கிறதே,'' என்று குதிரையை அவிழ்த்துக் கொண்டு அவளருகே கொண்டு நிறுத்தினான் காவலரில் ஒருவன். அவள் புரவியில் ஏறவில்லை! சேணத்தை வாங்கிப் புரவியின் முதுகிலேயே எறிந்துவிட்டு மெள்ள நடந்து சென்றாள். அவளை அழுத்திக்கொண்டிருந்த துன்பச் சுமையை உணர்ந்து கொண்டதுபோல அந்தப் புரவியும் அவளுக்குப் பின்னால் மெதுவாக நடந்தது. முத்துத்தேவன் கூடாரத்திலிருந்து அரையன் ராஜராஜன் பாசறை நீண்ட தூரம் இருந்தாலும், புரவியில் ஏறாமலே சைனியங்கள் நடுவே கால் நடையாகவே சென்ற செங்கமலச் செல்வி மூன்றாம் ஜாமத்தின் முடிவில் தந்தையின் இருப்பிடத்தை அடைந்தாள்.

மூன்றாம் ஜாமம் அஸ்தமிக்கும் சமயமாயிருந்தும்கூட அரையன் ராஜராஜன் தூக்கம் சிறிதுமில்லாமல் தன் பாசறையின் வாயிலிலே சிங்கநடை போட்டுக்கொண்டிருந்தான். புரவி பின்தொடர அவனை அணுகிய செங்கமலச் செல்வி துக்கம் நிரம்பிய தன் விழிகளை அவனை நோக்கி உயர்த்தி, ''இன்னும் தூங்கவில்லையா அப்பா?'' என்று வினவினாள்.

அரையன் ராஜராஜனின் ஈட்டி விழிகள் அவளை ஊடுருவி நோக்கின.

மதுரையில் பொங்கல் தினத்தன்று 'காலையும் நீயே! மாலையும் நீயே' படம் பார்க்கப் போயிருந்தேன்.

மூன்று விதமான வரிசைகள் (கியூக்கள்) இருந்தன. ஒன்று ராதிகா ரசிகர் மன்ற வரிசை; அடுத்து பிரபு ரசிகர் மன்ற வரிசை; அதற்கடுத்தது விஜய்காந்த் ரசிகர் மன்ற வரிசை. பிரபு ரசிகர் மன்ற டிக்கெட் வைத்துள்ளவர்கள் ராதிகா மன்ற வரிசையிலோ, ராதிகா மன்ற டிக்கெட் வைத்துள்ளவர்கள் விஜய்காந்த் மன்ற வரிசையிலோ டிக்கெட் வாங்க முடியாது. காசு கொடுத்துப் படம் பார்ப்பதே பெரிசு என்ற நிலையில் இந்த மாதிரியான சங்கடங்களையும் சமாளிக்க வேண்டுமா?

—அ.பெ. ரவி.

பிறகு கேள்வியும் உஷ்ணமாக வெளி வந்தது. ''அவன் எங்கே?'' என்று கேட்டான் அரையன் ராஜராஜன்.

''யாரைக் கேட்கிறீர்கள்?'' என்று ஏதுமறியாதவள் போல் வின வினாள் செங்கமலச் செல்வி.

''கரிகாலனை.''

''இங்கில்லை.''

''அது தெரிகிறது. கூடாரத்தில் தானே இருக்கிறான்? கூப்பிட்டனுப்பு. அவனுடன் உடனே நான் பேச வேண்டும்.''

செங்கமலச் செல்வியின் வருத்தம் தோய்ந்த விழிகள் மீண்டும் தந்தையின் முகத்தில் நிலைத்தன. ''நீங்கள் அவரைப் பார்க்க முடியாது. அப்பா! பேசவும் முடியாது,'' என்றாள் செல்வி.

''ஏன்? உபதளபதி எனக்குப் பேட்டி தரமாட்டாரோ? உன்னை நள்ளிரவில் தன் கூடாரத்துக்குக் கூப்பிட்டனுப்ப அவனுக்கு என்ன துணிச்சல்?'' என்ற அரையன் ராஜ ராஜன் குரல், கோபத்தால் சற்று நடுங்கவும் செய்தது.

உணர்ச்சி வசப்பட்டிருந்த செங்கமலச் செல்வி இதழ்களில் துக்கம் கலந்த புன்முறுவலொன்று உதய மாயிற்று. ''அவரைக் கோபித்துப் பயனில்லை. அப்பா! உங்கள் காரிய மாகத்தான் அவர் என்னைக் கூப்பிட்டனுப்பினார். அதுவும் அவர் கூடாரத்துக்கல்ல, முத்துத்தேவன் கூடாரத்தில் தான் அவர் என்னைச் சந்தித்தார்.'' என்று பேசிய செங்கமலச் செல்வி, வார்த்தைகளைச் சிறிது தேக்கினாள்.

மேற்கொண்டு தந்தையிடமிருந்து கேள்வி பிறக்கட்டும் என்றே அவள் தன் வார்த்தைகளுக்குத் தேக்கம் கொடுத்தாள். ஆனால், அரையன் ராஜராஜன் எந்தக் கேள்வியும் கேட்கவில்லை. அவள் மேற்கொண்டு பேசுவதற்காகக் கனைத்துக்கொண்டு நின்றாள். தந்தைக்குக் கோபம் வந்து விட்டால், பேச்சு அடைபட்டு விடுமென்பதை அறிந்திருந்த செங்கமலச் செல்வி, மீண்டும் பேசத் துவங்கி, ''அப்பா! நீங்கள் ஏதோ தவறாக நினைக்கிறீர்கள். அவர் அங்கு என்னை வரச் சொன்னது உங்கள் நன்மையை உத்தேசித்துதான்,'' என்றாள்.

''என் நன்மையை உத்தேசித்து உன்னை வரச் சொன்னானா?'' இதைச் சொன்ன அரையன் ராஜராஜன் குரலில் ஏளனம் கலந்திருந்தது.

''ஆமாம் அப்பா! உங்களைக்கூட வரச்சொல்லியிருக்க லாம். ஆனால், காரியம் கெட்டிருக்கும். அவர் திட்டத்திற்கு நீங்கள் ஒருகாலும் ஒப்புக் கொண்டிருக்க மாட்டீர்கள்,'' என்றாள் செல்வி.

''அந்தத் திட்டம் என்னவென்று தான் பார்ப்போமே,'' என்று செல்விக்கு சொல்லிய அரையன் ராஜராஜன், ''டேய் யாரங்கே! கரிகாலனை நான் கூப்பிடுவதாகத் தெரிவி,'' என்று சற்று எட்ட நின்று காவல் புரிந்திருந்த வீரனிடம் கூறினான். அவன் புறப்பட முயன்றவுடன், அவனை, ''டேய் நில்!'' என்று தடுத்த செங்கமலச் செல்வி, தந்தையை நோக்கி, ''அவரை நீங்கள் கூப்பிட்டு அனுப்புவதில் பயனில்லை,'' என்று, சற்று அழுத்தியே சொன்னாள்.

அரையன் ராஜ ராஜன் முகத்தி லிருந்த கோபம் குறைந்து சந்தேகமும் ஆச்சரியமும் குடிகொள்ளவே, ''ஏன் பயனில்லை?'' என்று வினவினான்.

''அவர்தான் இங்கு இல்லையென்று சொன்னேனே.''

''பின் எங்கிருக்கிறான்?''



''நீங்கள் சிறுவயதிலே கைக்கொண்டிருந்த எந்தக் கெட்ட வழக்கத்தையாவது பிற்காலத்தில் விட்டிருக்கிறீர்களா?''

''ஓ. விட்டிருக்கிறேனே!''

''எதை?''

''நகத்தைக் கடிக்கிற பழக்கத்தைத்தான்.''



''அதோ அந்தக் கோட்டைக்குள்ளே!'' என்று சக்கரக் கோட்டத்தின் கோட்டைக்காகக் கையைச் சுட்டிக் காட்டினாள் செங் கமலச் செல்வி.

செங்கமலச் செல்வி சித்து வித்தையில் கைதேர்ந்திருந்தால்கூட, அத்தனை திக்பிரமை ஏற்படுத்தியிருக்க முடியாது அரையன் ராஜராஜனிடம். ஏதோ திடீரென மந்திரத்தால் கட்டுப் படுத்தப்பட்டவன் போல் அந்தப் புறமோ இந்தப் புறமோ அசையும் சக்தியற்று நின்றான் அரையன் ராஜ ராஜன். எத்தனையோ போர்களின் போக்கைப் பிரமிக்கத்தக்க வகையில் திடீரெனத் திருப்பி, சோழப் பேரரசுக்கு வெற்றிகளை வாங்கித் தந்திருந்த அரையன் ராஜராஜன், எதிரியின் கோட்டைக்குள்ளே தன் உபதளபதி யென்ன, தானேகூடப் பிரவேசிப்பது அசாத்தியமென்று கருதியிருந்தானாகை யால், கரிகாலன் அதற்குள் சென்றிருக் கிறானென்பதைக் கேட்டும் அந்தச் செய்தியைச் சிறிதும் நம்பமுடியாத வனாய், ''செல்வி! உனக்கென்ன பைத்தியமா? அந்தக் கோட்டைக் காவலர்கள் என்ன கரிகாலன் கையாட் களா, கோட்டையைத் திறந்து விடுவதற்கு?'' என்று கேட்டான்.

''தந்தையே! இந்த நிலையில் நான் உங்களுக்கு விவரத்தைச் சொன்னால் புரிந்து கொள்வது கஷ்டம். உங்கள் படைத் தலைவர்களை வர வழையுங்கள்; கலந்து பேசுவோம்,'' என்றாள் செல்வி.

''நான்காம் ஜாமம் எட்டிப் பார்க்கப் போகிறதே! இப்பொழுதா படைத்தலைவர்களை அழைக்க வேண்டும்? எதற்குச் செல்வி?'' என்றனன் அரையன் ராஜராஜன் அப்போதும் நம்பிக்கை உதயமாகாத குரலில்.

''நாளை மறுநாளைக்கு ஏற்படவிருக்கும் போரைப்பற்றி விவாதிக்க.''

''யாருடன் போர்?''

''நாகர்களுடன்!''

''ஏன், கோட்டைக் கதவுகளைத் திறந்துகொண்டு போருக்கு வரப் போகிறார்களா?''

''ஆமாம்.''

''யார் சொன்னது?''

''அவர்தான்.''

''கரிகாலனா?''

''ஆமாம்.''

''அவனுக்கு எப்படித் தெரியும்?''

''கோட்டைக் கதவுகளைத் திறக்க அவர்தான் ஏற்பாடு செய்யப் போகிறார்.''

கடைசியாக செங்கமலச் செல்வி எறிந்த இந்த வெடியால் ஏற்பட்ட அதிர்ச்சி பலமாயிருந்ததால், அரையன் ராஜராஜன் செல்வியின் கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக்கொண்டு கூடாரத்துக்குள் சென்றான். அங்கு மெள்ள அவள் விஷயத்தை விளக்கவே, விவரிக்க இயலாத பிரமிப்பால் சுயநிலையை அறவே இழந்த அரையன் ராஜராஜன்,

''என்ன செல்வி! இது ஏதோ புராணங்களில் படிக்கும் சம்பவங்களைப் போலல்லவா இருக்கிறது? இத்தனை நாளாக நமது காவலையும் கடந்து கோட்டைக்கு உணவுப் பொருள்கள் செல்கின்றதா? அதைக் கரிகாலன் கண்டு பிடித்தானா? கண்டுபிடித்துவிட்டு அவர்களைச் சிறையும் பிடித்து வைத்து விட்டு, அவர்கள் வேஷத்தில் தன் வீரர்களுடன் இவன் கோட்டைக்குள் போயிருக்கிறானா,'' என்று ஆச்சரியத் தால் வார்த்தைகள் கூட ஓரிரு இடங் களில் தடுமாறப் பேசினான்.

''இதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது அப்பா. அவரை உங்களுக்குத் தெரியாதா? அவர் பார்வையே தனிப் பார்வை. இந்திராவதியின் மேல்திசைக்



அதிகாரி: தாமதம் செய்த காண் டிராக்டரைப் பிடித்து வாங்கு வாங் கென்று வாங்கி விட்டேன்.

மனைவி: எவ்வளவு?

—எஸ். லக்ஷ்மி.

காட்டுக்கருகில் காவல் குறைவாயிருந்ததை ஆரம்பம் முதல் அவர் விரும்பவில்லை. தானியங்கள் சிந்திக் கிடந்ததும் சதா எதையும் துழாவும் அவர் கண்களுக்குப் பட்டிருக்கிறது. அவருடைய துணிவைப் பற்றி...'' என்ற தன் மகளின் பேச்சை இடைமறித்த அரையன் ராஜராஜன், ''அதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை மகளே! ஆனால் இந்தத் துணிகர வேலையைச் செய்யும் முன்பு, அவன் என்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருக்கலாமே?'' என்றான்.

செல்வி கூடாரத்துக்குள்ளிருந்த பஞ்சணையில் உட்கார்ந்து கொண்டு, ஆயாசம் கலந்த பெருமூச்சொன்றை விட்டாள். ''உங்களிடம் சொன்னால் நீங்கள் இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொள்ள மாட்டீர்களென்று அவருக்குத் தெரியும்,'' என்று சொன்னாள்.

அரையன் ராஜராஜன் புத்தி தீவிரமாக வேலை செய்துகொண்டிருந்ததால், அவன் மேற்கொண்டு ஏதும் பேசாமல் நீண்ட நேரம் கூடாரத்தில் உலாவிக் கொண்டேயிருந்தான். அடுத்த நாளைக்கு மறுநாள் இரவு ஏற்படப் போகும் போரைப் பற்றித் தீவிரமாகச் சிந்தனையில் இறங்கியிருந்த படைத் தலைவன், கூடாரத்தின் சூழ்நிலையை அறவே மறந்தான். சக்கரக் கோட்டத்தின் மூன்று பெரிய வாயில்களைச் சமாளிக்கப் படைகளை எப்படி நிறுத்த வேண்டும் என்று யோசித்துக் கொண்டே, ''முதலில் நமது யானைப் படை...'' என்று சற்று இரைந்தே திட்டம் போட்டான். அவன் சிந்தனையைச் செங்கமலச் செல்வியின் சொற்கள் கலைத்தன. ''யானைப்படை முதலில் கூடாது அப்பா!'' என்றாள் செல்வி.

யோசனை அறுந்ததால், சட்டென்று அவளை நோக்கித் திரும்பிய அரையன் ராஜராஜன், ''ஏன் கூடாது?'' என்று வினவினான்.

''யானைப்படையைக் கடைசிக் கட்டத்தில் நிறுத்தச் சொன்னார்,'' என்றாள் செல்வி.

''யார், கரிகாலனா?''

''ஆம் யானைப்படை முகப்பிலிருப்பது கோட்டைக் கதவுகளைத் தகர்க்கவாம். கோட்டைக் கதவுகளைத் தாமே திறந்து விடுவதால், அவற்றை முகப்பில் நிறுத்திப் பயனில்லையாம். தெற்கு வாசலில் உங்கள் தலைமையிலும், கிழக்கு வாசலில் பிரும்மமாராயர் தலைமையிலும் வேகமாக எதிரிகளைத் தாக்கவல்ல குதிரைப் படைகளை நிறுத்திக் கொண்டால் போதுமாம். மேற்கு வாசலில் காலாட் படைகளும், ரதங்களும் நிற்கட்டுமென்றார்.''

''அணிவகுப்பை அவனே கூறிவிட்டானா?''

''ஆமாம்.''

அரையன் ராஜராஜனைத் தவிர வேறு ஒரு படைத் தலைவனானால் இந்த ஏற்பாடுகளும் திட்டமும் அவனைக் கடும் கோபத்திற்குள்ளாக்கியிருக்கும். ஆனால், அறிவாளியான அரையன் ராஜராஜன் சிந்தனையிலே கரிகாலன் புத்தி தெளிவையும் திறமையையும் பற்றிய வியப்பே மேலோங்கி நின்றது. அத்துடன், கரிகாலன் மேற்கொண்டிருக்கும் மகத்தான தியாகமும் அவன் உள்ளத்தை உருக்கிக் கொண்டிருந்தது. அந்த எண்ணத்துடன், இத்தனையும் செய்பவன் தன் வளர்ப்புப் பிள்ளை என்பதால் சற்றே பெருமிதமும் கலந்து கொண்டதும், அந்தப் பெருமிதம் காரணமாகவும் கரிகாலனிடம் அவனுக்கு இயற்கையாயுள்ள வாஞ்சை காரணமாகவும், பெருந்தன்மையான வார்த்தைகள் அரையன் ராஜராஜனிடமிருந்து வெளிவந்தன. ''மகளே! கரிகாலன் திட்டப்படியே இந்தப் போரை நடத்துகிறேன். அவன் உயிருடன் கோட்டையிலிருந்து நம்மிடம் வந்து சேர ஆண்டவன் அருள் புரியட்டும்,'' என்றான் செல்வியை நோக்கி. அவள் இஷ்டப்படி, படைத்தலைவர்களைச் சில வினாடியில் தன் கூடாரத்தில் கூட்டி, துரிதமாக மந்திராலோசனையிலும் இறங்கினான்.

கரிகாலன் செய்கையிலும் திட்டத்தையும் கேட்ட படைத்தலைவர்கள், முதலில் திக்பிரமையடைந்தார்கள். பிறகு பதறிப் போனார்கள். ''இதென்ன பைத்தியக்காரத்தனம்,'' என்று பிரும்மமாராயர், தமது பெருங்குரலில் கூறினார்.

''பைத்தியக்காரத்தனமல்ல பிரும்மமாராயரே! பெரும் யுத்த

தந்திரம்,'' என்று அரையன் ராஜ ராஜன், தன் வளர்ப்பு மகனுக்காகப் பரிந்து பேசினான்.

''அவன் அகப்பட்டுக் கொண்டு உயிரை விட்டால்?'' என்று இடிபோல் கர்ஜித்தார் பிரும்மமாராயர்.

''பெரும் தியாகம்!'' என்றான் அரையன் ராஜராஜன் அழுத்தமான குரலில். அத்துடன் சொன்னான்: ''கரிகாலனை உமக்குத் தெரியும் பிரும்ம மாராயரே, அவன் எத்தனையோ சங்கடங் களில் சிக்கிக் கொண்டு தப்பியிருக் கிறான்,'' என்று.

''அத்தனையும் பொய் சொல்லி.''

''அந்தப் பொய்யை இங்கும் சொல்லலாம்.''

''பலிக்காது. இவன் சிக்கிக் கொள்வது நிச்சயம். கோட்டைக் காவலருக்கு முந்தி வந்தவனை அடையாளம் தெரியாதா?''

''தெரியும்.''

''தெரிந்தால் இவன்மீது சந்தேகப்பட மாட்டார்களா?''

பிரும்மமாராயரின் கேள்வி நியாயமாகவே பட்டது. அரையன் ராஜராஜனுக்கு. அது நியாயமானது தானென்பது கோட்டைக்குள்ளும் நிரூபணமாகிக் கொண்டிருந்தது. கரி காலன் பொதி மூட்டைகளுடன் கோட்டைக்குள் நுழைந்ததும் கோட்டையின் மேல்திசைக் காவலன் அவன்மீது சந்தேகம் கொண்டு, அவன் முக்காட்டைத் தன் ஈட்டியால் விலக்கி னான். உள்ளிருந்த முகத்தைக் கண்டதும், கோபமும் வியப்பும் மேலி ட்டவனாய், ''யார் நீ? ஜெயவர்மன் எங்கே?'' என்று கேட்டான். கரிகாலன் பதில் சொல்வதற்குள், துரிதமாக நிகழ்ச்சிகள் நடந்தேறின. ''இதில் ஏதோ சூது இருக்கிறது,'' என்று கூறிக் கொண்டே காவலன், ''டேய் இவனைச் சிறையிலிடுங்கள்; காலையில் கோட்டைத் தளபதியிடம் கொண்டு போவோம்,'' என்று தன் வீரர்களை நோக்கி உத்தரவும் இட்டான். அடுத்த வினாடி சுமார் இருபது வீரர்கள் கரிகாலனை வாளும் கையுமாகச் சூழ்ந்து கொண்டார்கள்.

(தொடரும்)

## 54. பிரதாபருத்திரன்

தனது கழுத்தையும், மார்பையும் தடவி நின்ற நாகர்களின் வாட்களைச் சிறிதும் பதட்டமில்லாமல் மிக அமைதியுடன் நோக்கிய கரிகாலன், தன்னைச் சிறை செய்யும்படி ஆணையிட்ட தலைவன் முகத்துக் காகத் தன் கண்களைச் சற்றே உயர்த்தி, ''படைத் தலைவரே! இந்த உத்தரவை உடனே நிறைவேற்ற வேண்டாம்; சற்றுத் தாமதியுங்கள்,'' என்று நாகர்கள் பேசிவந்த பிராகிருதம் கலந்த ஆந்திர பாஷையில் கூறினான்.

அவன் பார்த்த தோரணையும், அதைவிட அவன் பேசிய தங்கள் சுய பாஷையும் சக்கரக் கோட்டத்தின் மேற்குப்புறக் காவலனைத் திக்பிரமையடையச் செய்யவே, ''நீ யார்? எங்கள் பாஷை உனக்கெப்படித் தெரியும்?'' என்று வினவினான் அவன்.

கரிகாலன் இதழ்களில் புன்முறுவல் அரும்பியது. மொழிகளின் மகிமை அவன் நன்றாக அறிந்திருந்தான். மனிதனுடைய ரத்தத்தில் கலந்திருக்கும் மகா சக்திகளுக்குள் மொழி ஒன்றென்பதையும், அந்தந்த நாட்டவரிடம் பிறனொருவன் அந்தந்த நாட்டு மொழிகளில் பேசும்பொழுது பேசுபவனிடம் அவர்களுக்கு இணையற்ற அன்பு உண்டாகிறதென்பதையும் கரிகாலன் அறிந்திருந்தானாகையால், நாகர்களின் மொழியிலேயே மேலும் பேச ஆரம்பித்தான். பாரதத்தின் பிரதான மொழிகளையெல்லாம் சூடாமணி விஹாரத் தலைவரிடம் பயின்றிருந்த அவனுக்கு, நாகர்கள் மொழியில் பேசுவது அவ்வளவு பெரிய காரியமாகவும் படவில்லை. ஆகவே, மிகச் சரளமாகச் சம்பாஷணையைத் தொடர்ந்து, ''வீரர்கள் தலைவரே! நீங்கள் கேட்பது மிகவும் விந்தையாய் இருக்கிறது. ஒட்டர நாடும் மாசுணி தேசமும் அக்கம் பக்கத்திலிருக்கும்போது ஒருவர் பாஷை

இன்னொருவருக்குத் தெரிந்திருப்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?'' என்றான்.

மேற்குப்புறத் தலைவன் மிகுந்த சந்தேகத்துடன் கரிகாலனை நோக்கி, ''நீ ஒட்டர நாட்டவனா?'' என்று கேட்டான்.

''ஏன்? ஒருவேளை சோழ நாட்டவனென்று நினைக்கிறீர்களா? உங்களுக்கிருக்கும் பயத்தில் சோழர்கள் ஒற்றன் என்றுகூட என்னை நினைப்பீர்கள் போலிருக்கிறது,'' என்று சொல்லிச் சற்றுப் பெரிதாகவே நகைத்தான் கரிகாலன்.

அந்த நகைப்பு மற்றவர்களுக்கு எப்படியிருந்தாலும், சற்றுத் தூரத்திலிருந்த முத்துத் தேவனுக்குக் குலை நடுக்கமெடுக்கச் செய்தது. சக்கரக் கோட்டத்து மேற்குப்புறத்துத் தலைவனுக்கு அச்சமேதும் இல்லையென்றாலும் அது அவனைப் பெரும் குழப்பத்தில் ஆழ்த்தியதால், அவன் என்ன பதில் சொல்லுவதென்று அறியாமல், சற்று நேரம் இப்படியும் அப்படியும் உலாவியதன்றி, பொதி மாடுகளுடன் நின்று கொண்டிருந்த முத்துத்தேவன் முதலிய இதர வீரர்களையும் உற்றுப் பார்த்தான். என்ன பார்த்தும் ஏதும் விளங்கவில்லை அந்த வீரனுக்கு. அவன் உள்ளத்திலே எழுந்த குழப்பம் முகத்திலும் சுடர் விட்டுப் பிரகாசித்தது. கடைசியாக அவன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போலக் கரிகாலனுக்கு வெகு அருகில் வந்து, ''உன் பெயரென்ன?'' என்று வினவினான்.

''கங்கன்.'' சட்டென்று வந்தது கரிகாலன் பதில்.

''உன் தொழில்?'' இந்தக் கேள்வியும் மிகத் துரிதமாகவே எழுந்தது மேற்குப்புறக் காவலனிடமிருந்து.

''போர் வீரன்; தற்சமயம் ஒட்டர நாட்டுப் படையின் ஒரு பிரிவுக்குத் தலைவன்.''

''நீ படைத் தலைவனா?''

''ஏன், என்னைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லையா? இதோ இதைப் பாருங்கள்!'' என்று கூறிய கரிகாலன் தனது வாள் கட்டப்பட்டிருந்த கச்சையிலிருந்து ஒரு பதக்கத்தை எடுத்து நீட்டினான்.

விளக்குகளின் வெளிச்சத்தில் அதை நன்றாக ஆராய்ந்த மேற்குப்புறக் காவலன், ''ஒட்டர நாட்டு ராஜமுத்திரைதான்; சந்தேகமில்லை,'' என்று அந்தப் பதக்கத்தில் பொறிக்கப்பட்டிருந்த பிம்பத்தையும் வார்த்தைகளையும் பார்த்துத் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான். ஆனால் அவன் உள்ளத்தே ஒலித்த அந்தச் சொற்களை முகபாவத்திலிருந்தே ஊகித்துக் கொண்ட கரிகாலன், ''வீரர்கள் தலைவனே! சந்தேகத்திற்கு இடமில்லை. அது எங்கள் அரசர் படைத் தலைவர்களுக்கு அளிக்கும் அத்தாட்சிப் பதக்கம்தான். முதபக்கத்தில் பொறிக்கப்பட்டிருப்பது இந்திரதத்த மன்னனின் திரு உருவம். பின்பக்கமிருக்கும் சிம்ம பிம்பத்திற்கு அடியிலிருப்பது சமஸ்கிருத லிபி. மன்னர் விருதுகளின் ஆரம்பச் சொல் பொறிக்கப்பட்டிருக்கிறது. முக்கிய அலுவலாக வெளிநாட்டுக்குச் செல்லும் தூதுவர்களுக்கு மட்டுமே இதை அளிப்பது எங்கள் நாட்டு வழக்கம்,'' என்று விவரித்தான்.

பெருங் குழப்பத்திலிருந்த மேற்குபுறக் காவலன் தலையை அசைத்துவிட்டு, ''அத்தாட்சிகள் உனக்குச் சாதகமாக இருக்கின்றன, கங்கா! ஆனால், உன்னை நம்ப என்னவோ என் மனம் மறுக்கிறது,'' என்றான்.

''வீரர்கள் தலைவனே! மனம் ஒரு குரங்கு. அதை அடக்கி ஆள்வது மனிதன் கடமை என்று விவேகிகள் கூறுகிறார்கள்.''

''இருக்கலாம். ஆனால் எதிரிகள் கோட்டையைச் சூழ்ந்திருக்கும் இந்தச் சமயத்தில், விவேகத்துடன் எச்சரிக்கையையும் இணைத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது.''

''எச்சரிக்கை கண்டிப்பாகத் தேவைதான். ஆனால், நான் வந்துள்ள காரியத்துக்கு இடைஞ்சலாக இருக்கிறது தங்கள் உத்தரவு.''

''என் உத்தரவா?''

''ஆமாம். என்னைச் சிறை செய்ய உத்தரவிட்டிருக்கிறீர்களே, அது.''

மேற்குப்புறக் காவலனின்

சாண்டில்யன்



இதழ்களில் இகழ்ச்சி நகை அரும்பியது. ''தங்களைச் சிறை செய்யக் கூடாதா? விருந்து வைக்கட்டுமா?'' என்று கேட்டான் கரிகாலனை.

''தாங்கள் விருந்து வைக்க வேண்டியதில்லை தலைவரே. தங்களுக்கும் தங்களைச் சேர்ந்தவர்களுக்கும் விருந்து வைக்கத்தான் நானும் என் சகாக்களும் எங்கள் உயிரைப் பேராபத்துக்குள்ளாக்கிப் பொதிகளைச் சுமந்து கொண்டு வந்திருக்கிறோம். பொதிகளைச் சுமந்து வந்திருக்கும் இன்னும் இரு கூட்டங்கள் காட்டுக்குள் நிற்கின்றன. அவர்கள்மீது சோழப்படை வீரர்கள் பாயுமுன்பாகத் தயவு செய்து அவர்களை இங்கு வரவழைக்கக் கோட்டை மீதிருந்து பந்தத்தை இரு முறை ஆட்டி உதவுங்கள். அதன் பிறகு, எங்களைச் சிறை செய்து கொட்டடியில் அடைத்து நாகர்களுக்கு இயற்கையாகவுள்ள நன்றியறிதலைத் தெரிவிக்கலாம்,'' என்று கரிகாலன் வாயிலிருந்து வார்த்தைகள் படபடவென உதிர்ந்தன. அவன் முகத்திலே விவரிக்க இயலாத கோபம் தாண்டவமாடியதையும், சொற்களில் இணையற்ற உஷ்ணம் கலந்திருந்ததையும் கண்ட மேற்குப்புறக் காவலன் இதயத்தில்கூடச் சிறிது அச்சம் உதயமாயிற்று.

அந்த அச்சத்தை நன்றாக மேலும் விசிறத் தொடங்கிய கரிகாலன், ''தலைவரே! நான் சொல்லியதை மட்டும் நீர் செய்யத் தவறினால், நாளைக்கு இந்தக் கோட்டைக்குள் நீர் தூக்கிலாடுவது நிச்சயம். கோட்டைத் தலைவரான பிரதாபருத்திரன் உங்களை லேசில் விடமாட்டான். உயிரைத் திருணமாக மதித்து, சோழர்கள்

படைப் பிராந்தியத்திலே நுழைந்து உங்களுக்கு உணவுப் பொருள் கொண்டுவரும் என்னை நீங்கள் சிறை செய்ததே முதல் குற்றம். பொதி மாடுகளை உக்கிராணத்துக்கு ஓட்டாமல், இங்கு நிறுத்தி வைத்துக் கொண்டு வீண் தர்க்கத்தில் ஈடுபடுவது இரண்டாவது குற்றம். மீதிப் பொதி மாடுகளையும் என் வீரர்களையும் இங்கு வரவழைக்காமல் காலதாமதம் செய்வது மூன்றாவது குற்றம். மூன்று குற்றங்களுக்கும் நீங்கள் நாளை கோட்டைக் காவலனிடம் என்ன சமாதானம் கூறப் போகிறீர்கள்? 'ஜெயவர்மன் வரவில்லை, வேறொருவன் வந்தான். ஆகையால் சந்தேகப்பட்டேன்,' என்று கூறுவீரா? அத்தாட்சிப் பதக்கமிருப்பவனை உள்ளே விடும்படிதானே உமக்கு உத்தரவு? அதன்படி ஏன் நடக்கவில்லையென்றால் பதில் என்ன சொல்லப் போகிறீர்?'' என்றான்.

மேற்குப்புறக் காவலன் இந்தப் பேச்சைக் கேட்டுப் பாதி அச்சமும் பாதி கோபமும் கொண்டு, என்ன செய்வதென்று அறியாமல் திணறினான். கரிகாலன் பேச்சில் நியாயம் நிரம்ப இருந்ததை அவன் கண்டான். குரலில் திடம் இருந்ததையும் அவன் கவனித்தான். இருந்த போதிலும் அவனிடம் பூரண நம்பிக்கை மட்டும் ஏற்படவில்லை நாகர்கள் தலைவனுக்கு. ஏதேதோ யோசித்துப் பார்த்த அந்தத் தலைவனுக்குக் கரிகாலன் யோசனையின் படி நடப்பதைத் தவிர வேறு வழியில்லாமல் போகவே, கோட்டை மீதிருந்த பந்தத்தை மீண்டும் இருமுறை அசைக்கும்படி தன் வீரர்களுக்கு உத்தரவிட்டான். மேற்குப்புறக் காவலனின் அனுமதியின் மீது கோட்டைச் சுவரின் மீதிருந்த மற்றப் பொதிக் கூட்டங்களின் வரவைக் கவனித்துக் கொண்டிருந்த கரிகாலன், கண்களை நாலா பக்கங்களிலும் ஓட்டி, கோட்டையின் அமைப்பையும் நன்றாகப் பார்த்துக் கொண்டான்.

சித்திரகூட மலையை அணைத்து இந்திராவதியின் கரையில் கட்டப்பட்டிருந்த அந்தக் கோட்டைக்கு மூன்று வாயில்களிருப்பதையும், வடக்குப்புறத்தில் அரச மகளிர் நீராடுவதற்கான திட்டி வாசல் மண்டபமொன்றைத் தவிர வேறு பெரிய வாயிலொன்றும் இல்லையென்பதையும் கண்ட கரிகாலன், 'பின்புறத்தில் இந்திராவதியின் வெள்ளப் பெருக்கையும் சித்திரகூட மலையையுமே பாதுகாப்புக்கு இவர்கள் நம்பியிருக்கிறார்கள்,' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். அவர்கள் அப்படி நம்பியதிலும் தவறில்லையென்றே பட்டது கரிகாலனுக்கு. சக்கரக் கோட்டக் கோட்டைக்குப் பின்புறமிருந்த மலைச் சரிவில் மரங்கள் இல்லை. வெறும் பாறைகளும் கூழாங்கற்களுமே இருந்தன. அந்தச் சரிவில் குதிரைப் படையோ, யானைப் படையோ, ஏன் காலாட் படையாயிருந்தாலும்கூட இறங்குவது அசாத்தியம். இறங்குவது மட்டுமல்ல, அந்தப் பகுதியில் படைகள் ஏறிச் சென்று தப்புவதும் கஷ்டம்.




இந்த நிலையை நன்றாகப் பார்த்து அறிந்து கொண்ட கரிகாலன், 'நாகர் படை சக்கரக் கோட்டத்தை விட்டு வெளிக் கிளம்ப வேண்டுமானால் பின்புறமாகத் தப்பி ஓட முடியாது. முன்புறத்திலுள்ள மூன்று வாயில்கள் வழியாகத்தான் வெளியேற வேண்டும். அப்படி வெளியேறுவதானால் சோழப் படைகளின் வாயில் நுழைந்துதானாக வேண்டும். வேறு வழியில்லை. நான் இட்ட திட்டம் சரிதான்' என்று தீர்மானித்துக் கொண்டான். அவன் கண்கள் மற்ற மூன்று வாயில்களின் அமைப்பையும் நகரத்தின் பொதுத் தோற்றத்தையும் கூட ஆராய்ந்தன. கோட்டைத் தலைவன் மாளிகை நகரத்தின் நடு மத்தியில் பிரும்மாண்டமாக எழுந்து நின்றது. அந்த மாளிகையைச் சுற்றிச் சக்கரம் சக்கரமாக அமைந்திருந்த வீடுகள் அந்தக் கோட்டைக்குச் சக்கரக் கோட்டம் எனப் பெயர் அமைந்தது எத்தனை பொருத்தம் என்பதை நிரூபித்தன. மேற்கு, தெற்கு, கிழக்கு வாசல்களையொட்டி வரிசை

செங்கை நகரில் நடைபெற்ற இலக்கிய வீதி விழாவில் சுஜாதா சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டபோது, சுவைஞரில் ஒருவரான வழக்கறிஞர் செளந்தரராசன் அவரையே ஓவியமாக, வரைந்து அவரிடம் கையெழுத்துக்காக அனுப்பினார். தன் படத்தின் கீழே, தானே, 'எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு!' என எழுதி ஒப்பமிட்டார் சுஜாதா.

—எஸ். ரகுவீரன்.

வரிசையாக இருந்த வீடுகளின் அமைப்பையும், அவற்றின் வாயில்களில் அடையாளத்துக்காகச் செருகப்பட்டிருந்த ஆயுதங்களையும் கவனித்த கரிகாலன், அவை படை வீடுகளென்பதையும், அந்தப் படை வீடுகளிலேயே ஆயுதக் கிடங்குகளும் கலந்திருக்கின்றனவென்பதையும் ஊகித்துக் கொண்டிருந்தான். அப்படிக் கோட்டையின் மேலே நின்று அவன் ஊரைக் கவனித்து எடை போட்டு முடிப்பதற்கும், பொதிமாடுகளும் அவற்றை ஓட்டி வந்தவர்களும் உள்ளே நுழைவதற்கும் பொழுது சரியாயிருந்தது. சீக்கிரம் பொழுது விடியும் என்பதற்கு அறிகுறியாக வானத்திலே வெள்ளியும் முளைத்தது.

வெள்ளி முளைத்துவிட்டதைக் கண்ட கரிகாலன், மேற்குப்புறக் காவலனை நோக்கி, ''தலைவரே! அதோ சுக்கிரோதயம் ஆகிவிட்டது. சீக்கிரம் கோட்டைக் கதவைத் தாளிடச் சொல்லுங்கள்,'' என்றான்.

கோட்டைக்குள் வந்த ஆரம்பத்தில் தலைவன் உள்ளத்தில் துளிர்த்த சந்தேகம் ஏற ஏறக் குறைந்து கொண்டே வந்தது. சிறை செய்ய உத்தரவிட்ட போதும் அதற்குப் பிறகும் கரிகாலன் சிறிதும் கலவரப்படாமல் நடந்து கொண்டதாலும் பொதிகளும் ஏராளமாக உள்ளே வந்ததாலும் திருப்தியடைந்த காவலன், ''சீக்கிரம் கோட்டைக் கதவை மூடச் சொல்லுங்கள்,' என்று கரிகாலன் எச்சரித்ததைக் கேட்டதும், அவனிடம் ஓளவு நம்பிக்கையும் கொண்டான். ஆகவே, பொதி மாடுகளின் கூட்டம் கோட்டைக்குள் நுழைந்து கதவு மூடப்பட்டதும், அவன் கரிகாலனை நோக்கிப் பேசிய பேச்சில் பழைய தோரணை மறைந்துவிட்டதல்லாமல் சிறிது மரியாதையும் கலந்து நின்றது. ''ஒட்டர நாட்டுப் படைத் தலைவரே, தாங்கள் சக்கரக் கோட்டப் படைகளுக்குச் செய்துள்ள மகத்தான உதவிக்கு எங்கள் தலைவர் சார்பில் நன்றி செலுத்துகிறேன். இருப்பினும், நான் என் கடமையைச் செய்தாக வேண்டியிருக்கிறது. ஜெயவர்மன் தலைமையில் வரும் பொதிகளை மட்டுமே அனுமதிக்க எனக்கு உத்தரவிருக்கிறது. உங்களை எனக்குத் தெரியாது. ஆகவே, கோட்டைத் தலைவரான பிரதாபருத்ர பூபதியை நாளைக்குச் சந்திக்கும் வரை தாங்களும் சகாக்களும் காவலில் இருந்துதானாக வேண்டும்,'' என்றான் மேற்குப்புறக் காவலன்.

''அதற்கென்ன ஆகட்டும்! தங்கள் கடமையைச் செய்யுங்கள்,'' என்ற கரிகாலனின் பதில், மேற்குப்புறக் காவலனுக்குக் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகத்தையும் நீக்கி விடவே, அவன் கரிகாலனையும் அவன் சகாக்களையும் சற்றுச் செளகரியமான இடத்திலேயே காவலில் வைத்தான்.

உறக்கம் இடத்தைப் பொறுத்ததாக மட்டும் இருந்தால் கரிகாலனுடைய சகாக்கள் இரவு முழுவதும் தூக்கம் விழித்ததற்குக் காலையில் நீண்ட நேரம் நன்றாக உறங்கியிருப்பார்கள். உறக்கம் மன நிம்மதியைப் பொறுத்ததல்லவா? நிம்மதியிழந்து கிடந்த முத்துத்தேவனுக்கும் அவனுடன் வந்திருந்த சுமார் தொண்ணூறு வீரர்களுக்கும், உறக்கம் சற்றும் பிடிக்காததால், சிறைக் கூடத்தில் அவர்கள் உட்கார்ந்து கொண்டே இருந்தார்கள். அந்த நிலையிலும் கரிகாலன் படுத்து நிம்மதியாக உறங்கத் தொடங்கியதுதான், முத்துத்தேவனுக்குப் பெரும் விந்தையாகவும் மற்றவருக்குப் பெரும் எரிச்சலாகவும் இருந்தது.

காவற் கூடத்தை அணுகிய உடனேயே, அறைக்குள் நுழைந்து கத்தியைக் கழற்றி ஒரு மூலையில் சாத்திவிட்டுத் தரையில் படுத்துத் தூங்குவதற்காகக் காலை நீட்டிக் கையை உயர்த்திச் சோம்பல் முறித்த கரிகாலனை நோக்கிக் கேட்டான் முத்துத்தேவன், ''ஏன் தூங்கப் போகிறீர்களா?'' என்று.

''ஆம் முத்து: இரவு முழுவதும் உறக்கமே இல்லையே.''

''உறக்கம் வருமா உங்களுக்கு?''

''ஏன் வராது?''

''நாம் இருக்கும் இடம் பகைவர் கோட்டை.''

''இருப்பினும் நாம் மனிதர்கள் தானே? இயற்கையை விட்டு நாம் மாறுபட முடியுமா? உறக்கம் இயற்கை அளிக்கும் அமைதி. அதை ஏன் விடவேண்டும்?''

''விளையாட்டுக்கு இது சமயமல்ல, தலைவரே.''

''ஆம். அதனால்தான் தூங்கப் போகிறேன்.''

இப்படிச் சொல்லிய கரிகாலன் நன்றாகப் புரண்டு படுத்து அடுத்த வினாடி அயர்ந்து தூங்கி விட்டான். தூக்கத்திலும் அவன் முகம் விகாரமின்றி அழகாயிருந்ததையும், கடை இதழில் வழக்கமான அந்த ஏளனப் புன்னகை அரும்பி நின்றதையும் கவனித்த முத்துத்தேவன், 'இவர் கூப்பிட்ட மாத்திரத்தில், நள்ளிரவில், அரையன் ராஜராஜன் மகள் ஓடி வருகிறாளென்றால் அதில் ஆச்சரியம் ஏதுமில்லை,' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

பொழுது புலர்ந்து வெகு நேரம் வரையில் அமைதியாகத் தூங்கிய கரிகாலனை மேற்குப்புறக் காவலனே வந்து எழுப்பினான். கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்திருந்த கரிகாலன் காவலனை நோக்கி, ''ஒகோ! பொழுது புலர்ந்து இத்தனை நேரம் ஆகி விட்டதா?'' என்று சொல்லிக் கொண்டு வேண்டா வெறுப்பாக நிதானமாக எழுந்து உட்கார்ந்தான்.

மேற்குப்புறக் காவலனும் முத்துத்தேவனைப் போலவே ஆச்சரியத் தால் மூழ்கி, ''என்ன! இத்தனை நேரம் தூங்கினீர்களா?'' என்று கரிகாலனைக் கேட்டான்.

''ஆமாம்! இரவு பூராவும் தூக்கமில்லை. தவிர, இரண்டு நாள் பயணம் வேறு,'' என்று சொல்லிக் கொண்டே கரிகாலன் எழுந்திருந்து ஆடைகளைச் சரிப்படுத்திக் கொண்டான். கரிகாலன் மீது அதுவரை சந்தேகம் ஏதாவது மேற்குப்புறக் காவல னுக்கு இருந்ததென்றால், அது அன்று காலை அடியோடு போய்விட்டது.

இவ்விதம் நிம்மதியாக உறங்கக் கூடியவன் ஒருகாலும் ஒற்றனாயிருக்க மாட்டான் என்ற முடிவுக்கு வந்த தலைவன், ''ஒட்டர நாட்டுப் படைத் தலைவரே! உங்களுக்கும் உங்கள் சகாக் களுக்கும் ஸ்நானத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருக்கிறேன். ஸ்நானத்தை முடித்து, காலை உணவு அருந்திச் சித்தமாயிருங்கள். நடுப்பகலுக்குச் சற்று முன்பாகக் கோட்டைத் தலைவர் உம்மைக் காண்பார்,'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

அவன் கூறியபடி சரியாக நடுப்பகலுக்கு நாலைந்து நாழிகைக்கு முன்பாகவே, பிரதாபருத்திரனை அவன் மாளிகையின் பெரு மண்டபத்தில் கரிகாலன் சந்தித்தான். நாலா பக்கங்களி லும் நாகர்கள் சின்னங்கள் பொறிக்கப் பட்டிருந்த மாபெரும் கற்றூண்களால் தாங்கப்பட்ட அந்த மணிமண்டபத்தின் நடுமத்தியில், நாகர்கள் இருவர் வெண்குடை பிடிக்க அரச கோலத்தில் அமர்ந்திருந்தான் பிரதாபருத்திரன். அவனது அரச கோலத்தையும் நாகாசனத்தையும் கண்ட கரிகாலன், 'கோட்டைத் தலைவன் நாகர்களின் அரச வம்சத்தைச் சேர்ந்தவனாயிருக்க வேண்டும்,' என்று தீர்மானித்து, ''அரசே!'' என்று அழைத்தே தன் பேச்சைத் தொடங்கினான்.

சுமார் ஆறடி உயரத்துக்குக் குறைவில்லாமல், மிக ஒல்லியாய் ராஜகளை முகத்தில் சொட்ட, நாகாசனத்தில் உட்கார்ந்திருந்த பிரதாபருத்திரன் கண்கள் ஒரு விநாடி ஆச்சரியத்தால் மலர்ந்தன. மறு விநாடி பெரும் சந்தேகச் சாயை அவன் முகத்தில் பரவலாயிற்று. ''உன்னை இதற்கு முன்பு எங்கோ பார்த்திருக்கிறேன். எந்த இடத்தில்?'' என்று உக்கிரமாக வினவிய பிரதாபருத்திரன், சட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவன்போல் கிடுகிடுவென்று ஆசனத்தை விட்டுக் கீழே இறங்கி வந்து கரிகாலனின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். ஏதோ உண்மை புலப்பட்டு விட்டது போன்ற பிரகாசமொன்றும் அவன் முகத்தில் திடீரென உதயமாயிற்று. அடுத்த விநாடியில் இடி போன்ற சொற்கள் அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்து மண்டபத்தின் சுவர்களில் தாக்கி மிகப் பயங்கரமாக எதிரொலி செய்தன.

(தொடரும்)

# மன்னன் மகள்

## 55. மேகத்திடையே ஒரு மின்னல்

உலகம் மிகப் பெரிது என்று நாம் எண்ணுகிறோம். ஆனால் அது உண்மையில் மிகச் சிறியது. ஏனென்றால் நம்மையும் அறியாமலே நாம் எண்ணாத இடங்களுக்குப் போகிறேர்ம். மனத்தாலும் சிந்திக்காத மனிதர்களைச் சந்திக்கிறோம். சொப்பனத்திலும் எழாத நிகழ்ச்சிகளில் சிக்கிக் கொள்கிறோம். ஆகவே, ஆண்டவன் படைப்பில் இந்தப் பரந்த உலகம் மிகச் சிறிய கிரகம்தான். அதன் நியதியால் வாழ்க்கையின் அலைகளில் எடுத்து வீசப்படும் நாம் இந்தக் கிரகத்தின் எந்தப் பாகத்தையும் அடைகிறோம். எதிர்பாராத பல விசித்திரச் சம்பவங்களில் அகப்பட்டுக் கொள்கிறோம். அப்படி அகப்பட்டுக் கொள்ளும்போது ஆயுளில் அறியாத முக்கிய உண்மைகளையும் அறிகிறோம். அன்று சக்கரக் கோட்டத்தில் பிரதாபருத்திரன் மாளிகையில் அத்தகைய ஓர் உண்மையைக் கரிகாலன் உணர்ந்தான். அந்த உணர்ச்சின்யயும் அதில் விதி புகுந்து விளையாடிய விளையாட்டையும் பிற்காலத்திலே நினைத்துப் பார்த்த கரிகாலன், மனித எண்ணங்களுக்கு எத்தனை சுலபத்தில் ஏமாற்றமும் கிடைக்கிறது என்பதை எண்ணி எண்ணிப் பலமுறை வியந்திருக்கிறான்.

பிற்காலத்தில் அவன் சக்கரக் கோட்டச் சம்பவங்களை எண்ணி வியந்தது உண்மையானாலும், அன்று அந்த மாளிகையில் பிரதாபருத்திரன் இரைந்து கூவியதுமின்றித் தன்னை உற்றுப் பார்த்தபோது இணையற்ற அச்சமே அவன் எண்ணத்தில் ஓங்கி நின்றது. 'உன்னை இதற்கு முன்பு எங்கோ பார்த்திருக்கிறேன்' என்று பிரதாபருத்திரன் கூறியபோர்தே சற்றுக் கலங்கிய கரிகாலன், சக்கரக் கோட்டத்தின் தலைவன் நாகாசனத்திலிருந்து இறங்கியும் ஓடிவந்து தன் முகத்தைக் கூர்ந்து கவனித்ததும் எப்படியும் தப்பிக்க முடியாத பேராபத்தில் தான் சிக்கியிருப்பதை உணர்ந்தான். தன்னை உற்றுப் பார்த்த பிறகு, ''அவன்தான். சந்தேகமில்லை. அதே முகம், அதே கண்கள், அதே சாயல்!'' என்று பிரதாபருத்திரன் இடியென இரைந்து வார்த்தைகளை உதிர்த்ததும், அவன் என்ன சொல்லுகிறான், எதற்காகத் தன்னை அப்படி ஊன்றி ஊன்றிக் கவனிக்கிறான் என்பதை அறிய முடியாமல் திணறிய கரிகாலன், எதிரே ருத்திராகாரமாக நின்ற பிரதாபருத்திரனின் கோப விழிகளை ஏறெடுத்துப் பார்த்தான். அந்தப் பார்வை பிரதாபருத்திரனை மேலும் குழப்பத்தில் ஆழ்த்தியிருக்க வேண்டும். அவன் மீண்டும், ''அதே முகம், அதே கண்கள், அதே சாயல், சந்தேகமில்லை. ஆனால்...'' என்று ஏதோ பேசிக் கொண்டே போய், இடையே வார்த்தைகளை அறுத்து, ''ஆனால் இவன் வயது... சீ...சீ, என்ன தவறு செய்து விட்டேன்,'' என்று தன்னைத்தானே நொந்து கொண்டு, மறுபடியும் விடுவிடுவென்று நடந்து சென்று நாகாசனத்தில் அமர்ந்தான். நீண்ட நேரம் அந்த மண்டபத்தில் மௌனமே தாண்டவமாடியது. பிரதாபருத்திரனின் படைத் தலைவர்களும் இதர வீரர்களும்கூடச் சிறிது நேரத்திற்கு முன்பாகத் தங்கள் தலைவன் நடந்து

சாண்டில்யன்

கொண்ட விசித்திர முறையை நினைத்துத் திக்பிரமையடைந்து நின்றார்கள். பிரதாபருத்திரனுக்கு அடுத்தபடியாகக் கோட்டையில் அதிகாரம் வகித்து வந்த உப தளபதியும், ஆச்சரியம் கலந்த தன் பார்வையைப் பிரதாபருத்திரன் மீது நிலை நாட்டினான். வீரர்கள் இந்த நிகழ்ச்சியின் காரணங்களையோ சக்கரக் கோட்டத்துத் தலைவன் சிந்தனையில் எழுந்த எண்ணங்களையோ, சிறிதும் அறிய மாட்டாதவர்களாய், 'தலைவனுக்கு இப்பொழுது என்ன நேர்ந்து விட்டது? ஏன் இப்படித் திணறுகிறார்?' என்ற கேள்விகள் பார்வையில் தொனிக்க, ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

நாகாசனத்தில் அமர்ந்த பின்பு, வெகுநேரம் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டே ஏதோ யோசனையில் ஆழ்ந்த பிரதாபருத்திரன் மனத்தில், ஏதோ ஓர் உண்மை உதயமாகவே அவன் தனக்குத் தானே லேசாகச் சிரித்துக்கொண்டு, ''ஆம்; அப்படியும் இருக்கலாம்!'' என்று முணுமுணுத்துவிட்டுக் கரிகாலனை நோக்கித் தலை உயர்த்தி, ''உன் பெயர் என்ன?'' என்று மிகச் சாவதானமாகவே கேட்டான்.

பிரதாபருத்திரன் தன்னை நோக்கிக் கூச்சலிட்டபோது குழப்பத்தில் சிக்கிக் கொண்ட கரிகாலனும் சக்கரக் கோட்டத்துத் தலைவன் நாகாசனத்தில் அமர்ந்து சிந்தனையில் இறங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் சுயநிலையை அடைந்துவிட்டானாகையால், உறுதியான குரலிலேயே பதிலிறுத்தான் ''கங்கன்,'' என்று.

மீண்டும் பெருங்குழப்பத்தையும் அச்சத்தையும் விளைவிக்கும்படியான முறையில் எழுந்தது பிரதாபருத்திரனின் அடுத்த பேச்சு. கடை இதழில் இகழ்ச்சிப் புன்னகை அரும்பச் சொன்னான் சக்கரக் கோட்டத் தலைவன், ''அதல்ல உண்மைப் பெயர்!'' என்று.

மனிதர்களை மிகத் திறமையுடன் ஊடுருவிப் பார்க்கவல்ல ஒரு பெரிய அறிவாளியிடம் தான் அகப்பட்டுக் கொண்டிருப்பதை அறிந்த கரிகாலன் தான் அந்தச் சமயத்தில் சற்றுத் தளர்ந்தால் உண்மை வெளிப்பட்டுப் போகுமென்பதைச் சந்தேகமற உணர்ந்துகொண்டானாகையால், சிறிதும் சலனமின்றியே சம்பாஷணையைத் தொடர்ந்து, ''அரசே! நான் சொன்னது உண்மைப் பெயரல்ல என்பது தங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான், உறுதி சிறிதும் தளராத குரலில்.

அடுத்தபடி பேசிய பிரதாபருத்திரன் சொற்களில் சற்று நஞ்சும் கலந்திருந்தது. அவன் கரிகாலன் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லாமல், ''நீ ஒட்டர நாட்டைச் சேர்ந்தவன் என்று எனது கோட்டையின் மேற்குப்புறக் காவலன் சொன்னானே, அதுவும் உண்மைதானா?'' என்று வினவினான்.

பிரதாபருத்திரன் தன்னைப் பற்றிய உண்மையை எப்படியோ ஊகித்துக்கொண்டு விட்டானென்பதை, அவன் கேள்வியிலிருந்தும் அவன் பேசிய தோரணையிலிருந்தும் தெரிந்து கொண்ட கரிகாலன் மனத்தில் மீண்டும் ஓரளவு அச்சம் உதயமானாலும் அதை வெளியில் காட்டாமலே, ''தற்சமயம் நான் ஒட்டர நாட்டைச் சேர்ந்தவன் தான். நான் பேசும் பாஷையும் அதுதான். வேண்டுமானால் சோதித்துப் பாருங்கள்!'' என்றான்.

பிரதாபருத்திரனின் கூரிய கண்கள் கரிகாலனை மீண்டும் ஆராய்ந்தன. அவன் உதடுகளில் ஏற்கெனவே இருந்த புன்னகை இன்னும் அதிகமாக விகசித்தது. லேசாகச்



அட்டையில்: ஜாக்லின் மேரி, ஷியாமளா, ரஞ்சனி, ப்ரீதி

வண்ணப்படம்: ராஜா பொன்சிங

சிரித்துவிட்டுச் சொன்னான் பிரதாப ருத்திரன், ''இருக்கலாம்; தற்சமயம் ஒட்டர நாட்டுச் சேவையில் நீ அமர்ந்திருக்கலாம். அந்தப் பாஷையை அறிந்தும் இருக்கலாம். அதை அந்த நாட்டவரைப் போலவே பேசினாலும் பேசலாம். ஆனால் நீ சோழ நாட்டைச் சேர்ந்தவன். உன் முகத்தில் அது எழுதி ஒட்டியிருக்கிறது,'' என்று.

பிரதாபருத்திரன் வாயிலிருந்து இந்த வார்த்தைகள் உதிர்ந்ததும், அந்த அவையிலேயே மிகுந்த பரபரப்பு உண்டாயிற்று. ''சோழ நாட்டவன்! சோழ நாட்டவன்!'' என்ற சொற்கள் மற்றவர்கள் வாயிலிருந்தும் உதிரவே, மண்டபத்தின் பெரும் சுவர்களும், ''சோழ நாட்டவன்! சோழ நாட்டவன்!'' என்று பயங்கரமாக எதிரொலி செய்தன.

படைத் தலைவர்களின் ஆச்சரியம் கலந்த கலவரச் சொற்களையும் சுவர்களில் அந்தச் சொற்கள் தாக்கி எதிரொலி செய்ததையும் கேட்ட கரிகாலனுக்கு, அந்த மண்டபமே தன் மீது குற்றம் சாட்டுவது போன்ற பிரமை ஏற்பட்டது. அடுத்தபடி என்ன நேரிடும் என்ற சந்தேகமும் மனத்தில் எழுந்து நிற்கவே பிரதாபருத்திரன் எத்தகைய கட்டளையை இடப்போகிறான் என்பதை ஆவலுடன் எதிர்நோக்கி நின்றான். சற்று யோசனைக்குப் பிறகு, பிரதாபருத்திரன் இட்ட கட்டளை கரிகாலனை மட்டுமின்றி, அந்த மண்டபத்திலிருந்த மற்றப் படைத் தலைவர்களையும் சொல்ல வொண்ணாத ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.



''இவனை அழைத்துச் சென்று உன் மாளிகையில் தங்க வை. ஓர் அரசனுக்குரிய மரியாதையுடன் இவனை நடத்து. இன்று மாலை என்னுடைய பள்ளியறையில் இவனைத் தனியாகச் சந்தித்துப் பேசுகிறேன்!'' என்று தன் உப தளபதிக்கு உத்திரவிட்ட பிரதாப ருத்திரன் கரிகாலனை நோக்கிச் சிரித்துக்

கொண்டே, ''கங்கா, மாலை சந்திப்போம்,'' என்று கூறிவிட்டு, நாகாசனத்திலிருந்து எழுந்து காவலர் பின் தொடர மண்டபத்தின் பின்புறத் தூண்களுக்கிடையில், துரிதமாக நடந்து சென்றான்.

சக்கரக் கோட்டத்துத் தலைவன் மாளிகையின் உள்கட்டுக்குச் சென்று மறைந்து, மண்டபத்துக்கும் அடுத்த கட்டுக்குமிருந்த மணிக் கதவுகள் மூடப்பட்டதும், கோட்டையின் உப தளபதி கரிகாலனைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்றான். தலைவன் உத்தரவுப்படியே அன்று முழுவதும் அரச போகத்துடன் நடத்தப்பட்டான் கரிகாலன். உப தளபதியின் சிறந்த அறையொன்றில் தங்க வைக்கப்பட்ட கரிகாலனுக்குப் பணிவிடைகள் செய்ய இரு பணிப் பெண்கள் வந்து சேர்ந்தார்கள். வாயிலைக் காவல் புரிய இரு வீரர்களும் நியமிக்கப்பட்டார்கள். கரிகாலன் விருப்பப்படி முத்துத் தேவனும் அவன் அறைக்குக் கொண்டு வரப்பட்டான். இத்தனை உபசாரங்கள் நடந்தும், தான் கேவலம் ஒரு கைதியே என்பதை உணர்ந்து கொள்ள அதிக நேரமாக வில்லை கரிகாலனுக்கு. பகல் முழுவதும் பணிப் பெண்கள் இருவரும் அந்த அறையை விட்டு நகர மறுத்தார்கள். முத்துத் தேவனுடன் ஏதேதோ பேசத் திட்டம் போட்டிருந்தான் கரிகாலன். ஆனால் உபதளபதியின் ஏற்பாடுகளால் அந்தத் திட்டம் படுதூளாகப் போய்விடவே, முத்துத் தேவனிடம் எந்த விஷயத்தையும் சொல்லாமலே மாலையில் பிரதாபருத்திரனைச் சந்திக்கச் சென்றான்.

பிரதாபருத்திரனின் அந்தரங்க அறை மாலை நேரத்தில் ஏற்றப்பட்ட மணி விளக்குகளால் ஜாஜ்வல்லியமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த அறையே ஒரு பெரும் மண்டபம் போலிருந்ததையும் அந்த அறையிலிருந்த மாபெரும் தூண்களில் மாசுணி தேசத்துப் படைகளின் வீரச் செயல்கள் வண்ணச் சித்திரங்களாகத் தீட்டப் பட்டிருந்ததையும் கரிகாலன் கண்டான். அந்தப் போர்ச் சித்திரங்களைச் சுற்றிச் சுற்றிப் பெரும் நாகங்கள் வரையப்பட்டி ருந்தமையால், நாலா பக்கங்களிலும் பெரும் சர்ப்பங்கள் சீறி வருவதைப் போன்ற பிரமையை அந்த மண்டபம் ஏற்படுத்துவதையும் கண்ட கரிகாலன், 'இந்தச் சூழ்நிலையில் சிக்கிக்'கொள்ளும் எவனும் பயத்தாலேயே உண்மையை உளறிவிடுவான்' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

அவன் அந்த மண்டபத்தைச் சுற்றிக் கண்களை ஓட்டிப் பிரமித்து நிற்பதைக் கண்ட பிரதாபருத்திரன், அவன் உட்காரத் தனக்கெதிரே இருந்த ஓர் ஆசனத்தைச் சுட்டிக் காட்டி, ''உட்கார் கங்கா! நாகங்களைக் கண்டு பயப்படாதே!'' என்று தைரியமும் சொன்னார். அந்தத் தருணத்தில் பிரதாபருத்திரன் தோற்றமே மாறி யிருந்தது. பகலில் மண்டபத்தில் அணிந்திருந்த படைத் தலைவன் உடை அப்பொழுதில்லை. மாலை வேளை சந்தி செய்த பிறகு மன்னர்கள் அணியும் சாதாரண உடையையே அணிந் திருந்தான் பிரதாபருத்திரன். அவன் முகத்திலும் மண்டபத்தில் தெரிந்த கோபம், குழப்பம், இகழ்ச்சி ஏதுமில்லை; சாந்தம் நிலவிக் கிடந்தது. அன்பு ததும்பும் விழிகளைக் கரிகாலன் மீது நாட்டி, தேன் போன்ற மொழிகளை உதிர்க்கத் தொடங்கிய பிரதாபருத்திரன், ''கங்கா! ஆம், நீயாக உண்மைப் பெயரைச் சொல்லும்

---

**அவர் என்றால் உசத்தி, இவர் என்றால் மட்டமா?**

முன்னாள் கிரிக்கெட் காப்டன் வெங்சார்க்கருக்கு 10000 ரூபாய் அபராதம் விதித்திருக்கிறார்கள். ஆறு மாத காலத்துக்கு எந்த இந்திய அணியிலும் விளையாடக் கூடாதென்று தடை போட்டிருக்கிறார்கள்.

இந்தியக் கிரிக்கெட் போர்டின் தீர்ப்பு இது.

மேட்சுகள் நடந்துகொண்டிருக்கும் போது அவைகளைப் பற்றிப் பத்திரிகைகளில் எழுதினாராம் வெங்சார்க்கர். அது கூடாதாம்.

வரையில் உன்னைக் கங்கனென்றே அழைக்கின்றேன். நன்றாக இளைப்பாறினாயா? பிரயாண அலுப்பு நீங்கியதா உனக்கு?'' என்று கேட்டான்.

''அலுப்புத் தீர்ந்தது அரசே!'' என்றான் கரிகாலன்.

''மகிழ்ச்சி கங்கா! உனக்கு நாகர்கள் சார்பாக நன்றி செலுத்துகிறேன்.''

''எதற்கு மன்னவா?''

''ஒட்டர நாட்டிலிருந்து உணவுப் பொருள்கள் கொண்டு வந்ததற்காக.''

''இதில் நன்றி செலுத்த என்ன இருக்கிறது மன்னவா? இது என் கடமையல்லவா? ஒட்டர நாட்டு மன்னனிடம் சேவை புரிகிறேன்; கட்டளையை நிறைவேற்றுகிறேன்; அவ்வளவுதானே?''

''கட்டளைகளிலும் வித்தியாசமுண்டல்லவா? இது உன் உயிரையே குடிக்கக்கூடிய கட்டளை.''

''வீரர்கள் வாழ்வே அப்படிப் பட்டதுதானே?''

கரிகாலனின் இந்தச் சொற்களைக் கேட்டதும் சுளீரென்று அடிக்கப்பட்டவன் போல் ஆசனத்தில் சட்டென்று எழுந்து உட்கார்ந்த பிரதாபருத்திரன் மீண்டும் பெருமூச்சு விட்டு மஞ்சத்தில் சாய்ந்துகொண்டு, ''ஆம் ஆம், உண்மைதான்!'' என்றான். பிறகு சில விநாடிகள் பேசாமலே இருந்தான் பிரதாபருத்திரன். அவன் உள்ளத்திலே எண்ண அலைகள் எழுந்து எழுந்து மோதிக் கொண்டிருந்ததை அவன் முகமே பிரதிபலித்தது. இப்படி இருவருக்கும் இடையே திடீரென எழுந்த மௌனத்தைக் கலைக்க எண்ணிய கரிகாலன், ''அரசே! வீரர்கள் வாழ்வு அப்படித்தான் என்று நான் சொன்னதும், ஏன் அப்படித் தூக்கி வாரிப் போட்டது தங்களுக்கு?'' என்று வினவினான்.

''காரணமிருக்கிறது. அதே சொற்களை வேறொருவன் சொன்னான் பல வருஷங்களுக்கு முன்பு. அதுவும் மிகவும் இக்கட்டான நிலையில் சொன்னான்,'' என்றான் பிரதாபருத்திரன்.

''யாரது அரசே?''

''சொல்ல முடியாது கங்கா.''

''ஏன்?''

''ஒரு பிரமாணம் என்னைக் கட்டுப்படுத்துகிறது.''

''யாருக்குப் பிரமாணம் செய்து கொடுத்தீர்கள்?''

''நீ கூறிய வார்த்தைகளைக் கூறினானே அவனுக்குத்தான். ஈழத்தில் நடந்த கதை அது. ஏன், சோழ நாட்டிலும்தான் நடந்தது. அந்தக் கதையை நீ நினைவுபடுத்திவிட்டாய் கங்கா, நீயென்ன, உன் முகம், குரல் அனைத்தும் நினைவுபடுத்திவிட்டன.'' பிரதாபருத்திரன் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''கங்கா!'' என்றான்.

''ஏன் அரசே?''

''உன்னிடம் அந்த மோதிரம் இருக்கிறதா?''

''எந்த மோதிரம்?''

''அதுதான், பச்சைக்கல் மோதிரம்; அதன் உட்புறத்தில் சோழர்கள் கிரீட முத்திரை இருக்கும்.''

உலகமே சுழல்வது போலிருந்தது கரிகாலனுக்கு. அவன்

---

போர்டு தலைவர் ஸ்ரீராமுக்கு இரண்டு கேள்வி:

1. அடித்தால் நூறு, இல்லா விட்டால் சைபர் என்று விளையாடும் 'வீரர்'களுக்கு நடுவே, நிச்சயம் ஐம்பதுரன்னாவது எடுப்பார் என்று நம்பக் கூடிய வெங்சார்க்கரை இப்படித் தண்டித்தது நியாயமா?

2. அன்று காவஸ்கரும்தான் விளையாடிக் கொண்டே பத்திரிகைகளிலும் எழுதினார். அவர் ரொம்பப் பெரிய ஆள் என்பதால் விட்டு விட்டீர்களா?

—'நவீன்'



உடல் ஒருமுறை லேசாக ஆடியது. உடல் பூராவும் பலப்பல உணர்ச்சிகள் பாய்ந்து சென்றன. நாகர்கள் நாகங்களைக் கட்டுவதில் கைதேர்ந்த மந்திரவாதிகள் என்பதைப் படித்திருந்தான் தத்துவ சாஸ்திரியான கரிகாலன். ஆனால், மனித ரகசியங்களையும் ஊடுருவிப் பார்க்கவல்ல அத்தனை மந்திரவாதி களாயிருக்க முடியும் என்பதைச் சொப்பனத்தில்கூட நினைக்காத கரிகாலன், பிரதாபருத்திரன் கேட்ட கேள்வியால் அடியோடு நிலை குலைந்து போய்த் தன் கச்சையிலிருந்த மோதிரத்தை எடுத்துச் சக்கரக் கோட்டத்துத் தலைவனிடம் நீட்டினான். அதை விளக்கில் நன்றாகப் பரிசோதித்துப் பார்த்த பிரதாப ருத்திரனும், ''அதே மோதிரம்தான். சந்தேகமில்லை,'' என்று சற்று இரைந்தே சொல்லி, மோதிரத்தை மீண்டும் கரிகாலனிடம் திருப்பிக் கொடுத்தான்.

மோதிரத்தை அவன் பரீட்சை செய்ததாலும், தன் சாயலைக் கொண்டே தன்னைச் சோழ நாட்டவனென்றும் ஊகித்ததாலும், தன் பிறப்பு மர்மத்தை அவன் பூர்ணமாக அறிந்திருக்கிறானென்பதை உணர்ந்துகொண்ட கரிகாலனுக்குப் பெரும் மேகத்திடையே சிறிய மின்னல் தோன்றுவதுபோல், எதிரிக் கோட்டைக்குள்ளே, பேராபத்துக்கிடையே, ஒரு நன்மையும் பயக்குமென்ற உணர்வு ஏற்பட்டதும், மகிழ்ச்சி வெள்ளம் முகத்தில் தாண்டவமாடப் பிரதாபருத்திரனை நோக்கி, ''என் தந்தையை உங்களுக்குத் தெரியுமா?'' என்று திட்டமாகவே கேட்டான்.

''தெரியும்!'' அதைவிடத் திட்டமாக வெளிவந்தது பிரதாப ருத்திரன் குரல்.

''எப்படித் தெரியும்?''

''சோழ சக்கரவர்த்தி ராஜ ராஜ சோழன் கீழ் இருவரும் படைத் தொழில் புரிந்தோம். ஈழத்துப் போரில் தோளுக்குத் தோள் நின்று போரிட்டோம்.''

''அவர் பெயர்?''

''சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன். பிரமாணம் என்னைக் கட்டுப்படுத்துகிறது கங்கா! ஆனால் நான் எடுத்துக்கொண்ட பிரமாணத்தை உடைக்கவும் சித்தமாயிருக்கிறேன், ஒரு நிபந்தனையின் மேல்.''

''என்ன நிபந்தனை அரசே?''

''அரையன் ராஜராஜன் படைகளை எப்படி அணிவகுத்திருக்கிறான் என்று நீ சொன்னால்...'' என்று நிபந்தனையைக் குறிப்பிட்டுச் சிறிது தயங்கவும் தயங்கினான் பிரதாப ருத்திரன்.

கரிகாலன் வழக்கமாகத் தன் தந்திரத்தைத் துவங்கி, ''அது எனக்கெப்படித் தெரியும்?'' என்று வினவினான்.

''நீ அவன் படையைச் சேர்ந்தவன்!'' என்று நிதானமாக வெளிவந்தன , பிரதாபருத்திரன் சொற்கள்.

''நானா?''

''ஆம். நீயும் உன்னுடன் உணவுப் பொருள் கொண்டு வந்திருப்பவர்களும். கங்கா! உணவுப் பொருள் இப்படி ரகசியமாக வருவது உனக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது. ஆகவே, ஜெயவர்மனை மடக்கிக் கோட்டைக்குள் வரும் முறையைத் தெரிந்து கொண்டு உள்ளே புகுந்து விட்டாய். ஆனால் வெளியே செல்ல முடியாது. நான் கேட்கும் கேள்விகளுக்கு நீ ஒழுங்காகப் பதில் சொன்னால், உன் பிறப்பு மர்மத்தை விளக்குவேன். இல்லையேல் இந்தச் சக்கரக் கோட்டத்தின் மத்தியிலிருக்கும் தூக்கு மேடையில் உன்னையும் உன் சகாக்களையும் மாட்டித் தொங்க விடுவேன். நீ எனது நண்பனின் புதல்வன் தான். ஆனால், இந்தக் கோட்டையைக் காத்து, சோழர்கள் கங்கைப் படையெடுப்பைத் தடைசெய்ய உன்னையும் தியாகம் செய்வேன்,'' என்றான் பிரதாபருத்திரன்.

விதி இப்படித் திரும்புமென்பதைச் சற்றும் எதிர்பார்க்காத கரிகாலன் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தான். தூக்கு மேடையைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அந்தப் பயங்கரம் மிகச் சகஜமாயிருந்தது அவனுக்கு. ஆனால் பிரதாபருத்திரன் அடுத்துக் கேட்ட கேள்வி? மிகப் பயங்கரம்! தூக்கில் தொங்கலாடுவதை விட எத்தனையோ மடங்கு பயங்கரம்! ஒவ்வொரு கேள்வியும் விஷம் தீட்டப்பட்ட பெரிய ஈட்டியைப்போல் பாய்ந்தது கரிகாலன் இதயத்திலே.

(தொடரும்)



25.2.88 — சாண்டில்யன்

## 56. பொய்யும் மெய்யும்

நாகப்பட்டினத்துச் சூடாமணி விஹாரத்திலிருந்து கிளம்பிய பிறகு, வாழ்க்கையில் எத்தனை எத்தனையோ திருப்பங்களை அடைந்து, எத்தனை எத்தனையோ ஆபத்துக்களில் சிக்கி, அத்தனையையும் தன் ஆராய்ச்சித் திறமையாலும் அறிவின் பலத்தாலும் அறுத்துக் கொண்டு வெற்றியுடன் தப்பிய கரிகாலன், அன்று அந்த நாகர்களின் மாளிகையில் மனத்தில் அச்சமே பெரிதும் மேலோங்க நின்றான். உயிரைப் பற்றி அவன் சிறிதுகூடக் கவலையோ அச்சமோ படவில்லை. தன் உள்ளக் கருத்துக்களை அக்கக்காக அலசிப் பார்க்கவல்ல பெரிய அறிவாளியும், எப்படியாவது சோழர் படையெடுப்பை முறியடித்து விடுவதில் ஊக்கமுள்ளவனுமான பிரதாபருத்திரன் வீசிய ஆராய்ச்சி வலையில் தான் அயர்ந்து மறந்து சிக்கிவிட்டால், சோழர் படையெடுப்பின் கதி அதோகதியாகிவிடுமே என்ற நினைப்பே அவன் இதயத்தில் விவரிக்கவொண்ணாத கிலியைக் கிளப்பியிருந்தது. சக்கரக் கோட்டத்துத் தலைவனான பிரதாபருத்திரன், ராஜராஜன் காலத்திலேயே சோழப் படைகளில் சேவை செய்தவனாகையால் சோழப் போர் முறைகளை நன்றாக அறிந்திருப்பானென்பதையும், அவனிடம் அரையன் ராஜராஜன் படை அணிவகுப்பு முறையைச் சொல்லிவிட்டால் சோழர் படைகளைப் பூர்ணமாக முறியடிக்காவிட்டாலும், சக்கரக் கோட்டத்தைத் தாண்டிச் செல்லாத

நிலைமைக்குக் கொண்டு வந்து விடுவானென்பதையும் ஊகித்துக் கொண்ட கரிகாலன், நாகர்கள் தளபதியின் கண்களில் எப்படி மண் தூவலாம் என்பதைப் பற்றிச் சிந்திக்கவும் செய்தான். பிரதாபருத்திரன் கேள்விகளுக்கு உடனுக்குடனே பதில் சொல்லி ஏமாற்ற முயன்றால் நாகர்கள் தளபதி, தன்னை நம்ப மாட்டானென்பதிலும், அப்படி நம்பாவிட்டால் அவன் ஏற்கனவே சொல்லியபடி தன்னையும் தன் சகாக்களையும் தூக்கில் போடத் தயங்க மாட்டான் என்பதிலும் கரிகாலனுக்குச் சிறிதும் சந்தேகமேயில்லை. தன் உயிரைப் பற்றி அவன் சிறிதும் கவலைப்படவில்லையென்றாலும், தன் சகாக்களின் உயிரைப் பற்றிக் கவலை இருந்ததால், தன்னை நம்பிக் கோட்டைக்குள் நுழைந்திருக்கும் அவர்களைக் காப்பாற்றுவது தன் கடமையென்று கருதினான். தன் உயிரைக்கூட அந்தச் சந்தர்ப்பத்தில் விட அவனுக்கு இஷ்டமில்லைதான். 'என் பிறப்பைச் சூழ்ந்திருக்கும் மர்மத்தை அறியாமல் நான் சாகலாமா? அந்த மர்மம் இந்தப் பிரதாபருத்திரனுக்கும் ஓரளவு தெரிந்திருக்கும் போலிருக்கிறதே' என்று நினைத்துக் கொண்டான்.

பிரதாபருத்திரன் மனமும் அப்பொழுது அதிதுரிதமாக வேலை செய்து கொண்டுதானிருந்தது. தன் எதிரே நிற்பவன் யாரென்பதைச் சந்தேகமற ஊகித்துவிட்ட பிரதாபருத்திரன், அந்த ஊகத்தினால் எத்தனை நன்மைகள் சக்கரக் கோட்டத்துக்கு விளையலாம் என்பதை எண்ணி மகிழ்ச்சியால் பெருமூச்சு விட்டான். அந்த மகிழ்ச்சிப் பெருமூச்சுகூட அந்தச் சூழ்நிலைக்குப் பயங்கரத்தையே அளித்தது. பிரதாபருத்திரன்தான் பெருமூச்சு விடுகிறானா, அல்லது அந்த மண்டபத்தின் தூண்களைச் சுற்றிக் கொண்டு பயங்கரமாகத் தலைகளை நீட்டிக் கொண்டிருந்த சித்திரச் சிற்பங்களின் சீறலா அது என்று சந்தேகமுண்டாக்கும் வகையில் தாக்கி எதிரொலி செய்தது அவன் பெருமூச்சு. சோழர்கள்மீது தான் அடையக் கூடிய வெற்றி எதிரே ஏதுமறியாததுபோல நிற்கும் சிறுவன் மசிவதில்தானிருக்கிறதென்பதைத் திண்ணமாகத் தெரிந்து கொண்ட பிரதாபருத்திரன் மிக அன்புடன் கரிகாலனை நோக்கினான். அவன் பேச்சும் தேன்பாகாகத்தான் உருகி வந்தது. ஆனால் அந்தத் தேனில் விஷம் பரிபூரணமாகக் கலந்திருப்பதைக் கண்ட கரிகாலன், மிகுந்த எச்சரிக்கையுடன் சம்பாஷணையில் இறங்கினான்.

ஆரம்பத்தில் சம்பிரதாயமாகவே எழுந்தன பிரதாபருத்திரன் கேள்விகள் ''கங்கா! சோழர் படையில் என்ன பதவி வகிக்கிறாய்?'' என்று கேட்டான் பிரதாபருத்திரன்.

அந்தக் கேள்வியை அடியோடு மறுப்பதில் பயனில்லையென்பதையும், தன் உண்மைச் சொரூபத்தை பிரதாபருத்திரன் பெரிதும் ஊகித்து விட்டானென்பதையும் அறிந்து கொண்ட கரிகாலன், தன் வழக்கப்படி உண்மையையும் பொய்யையும் கலந்து கலந்து பதில் சொல்லத் தொடங்கி, சக்கரக்கோட்டத்துத் தலைவன் கேள்வியால் திடீரென அதிர்ச்சியடைந்தவன் போல் பாசாங்கு செய்து, ''என்ன கேட்டீர்கள் மன்னவா?'' என்று பதிலுக்கு வினவினான்.

சிறிதும் குழப்பமில்லாத திட்டமான குரலில் மீண்டும் எழுந்தது பிரதாபருத்திரன் கேள்வி: ''சோழர் படையில் என்ன பதவி வகிக்கிறாய்?''

''உப தளபதியாயிருக்கிறேன்,'' என்று தயக்கமில்லாமலே பதில் சொன்னான் கரிகாலன்.

கரிகாலன் முகத்தை விட்டுக் கண்களை அகற்றாமலே மேற்கொண்டு கேள்விகளைத் தொடர்ந்தான் பிரதாபருத்திரன். ''உன் கீழ் எத்தனை வீரர்கள் இருக்கிறார்கள்?''

''ஆயிரம் வீரர்கள்.''

''அவர்களை எந்தப் பக்கத்தில்



நிறுத்தியிருக்கிறாய்?''

''மேற்குத் திசையிலுள்ள காட்டுக்கருகில்.''

இந்தப் பதில் பிரதாபருத்திரனுக்குச் சிறிது மகிழ்ச்சியை அளித்ததால், அவன் இதழ்களில் புன்முறுவல் லேசாக அரும்பிற்று. கரிகாலன் உண்மை பேச ஆரம்பித்து விட்டானென்பதை அறிந்து கொண்டதற்கு அறிகுறியாக இதழ்களில் தோன்றிய இந்தப் புன்னகை பிரதாபருத்திரன் முகம் பூராவுக்கும் ஒரு தனிச் சோபையை அளித்தது. அந்தப் புன்னகையின் உட்பொருளைப் புரிந்துகொண்ட கரிகாலனும் தன் கைச்சரக்குப் பலிக்க ஆரம்பித்து விட்டதை நினைத்து உள்ளூர மகிழ்ச்சியடைந்தானானாலும், அதை வெளியில் காட்டாமலே மிகப் பணிவுடன் பதில்களைச் சொல்லலானான்.

''மேற்குத் திசையிலுள்ள காட்டுக்கருகிலா?'' என்று அலட்சியமான குரலில் பிரதாபருத்திரன் மீண்டுமொரு கேள்வியை வீசினான். அந்த அலட்சியம் போலியென்பதையும், தன்னைச் சோதிப்பதற்கு அது ஒரு போர்வையென்பதையும் அறிந்து கொண்ட கரிகாலனும், சற்று எச்சரிக்கையுடனேயே பதில் சொல்லத் தொடங்கி, ''ஆமாம் மன்னவா! அதனால்தான் தங்களைச் சந்திக்கும் பாக்கியம் கிடைத்தது,'' என்றான்.

அந்தப் பதிலில் தொக்கி நின்ற பொருளைக் கவனித்த பிரதாபருத்திரன் லேசாகச் சிரித்துவிட்டு, ''ஆம், கங்கா! உண்மைதான். என்னைச் சந்திக்கும் பாக்கியம் கிடைத்தது அதனால்தான். நான் கேட்கும் கேள்விகளுக்கு மட்டும் உண்மையாகப் பதில் சொல்லிக் கொண்டு வா. அந்தப் பாக்கியம் பன்மடங்கு அதிகமாகும்படி செய்கிறேன். முதன் முதலாக வேங்கி நாட்டு நிகழ்ச்சிகளை எடுத்துக் கொள்வோம். இப்பொழுது ராஜராஜ நரேந்திரன் எங்கிருக்கிறான்?'' என்று வினவினான்.

இந்தக் கேள்வி கரிகாலனை ஓரளவுக்குத் திடுக்கிட வைத்தாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமலே, ''தங்கள் வாயிலிலேயே தற்சமயம் இருக்கிறார்,'' என்றான்.

''அரையன் ராஜராஜன் படையிலா?''

''ஆமாம்.''

''எதற்காக இந்தப் படையுடன் வந்திருக்கிறான்?''

''அவர் சகோதரியின் விருப்பம் அது.''

''யார், நிரஞ்சனா தேவியா சோழர்கள் படையில் தம்பியைப் பணி செய்யத் தூண்டினாள்?''

''ஆம் அரசே! ஒரு காலத்தில் அவர் பெரிய வீரராகி, மீண்டும் வேங்கி நாட்டை ஆள வேண்டுமென்பது அரசகுமாரியின் கனவு.''

''அது எப்படிப் பலிக்கும்?''

''ஏன் பலிக்காது?''

தெளிவாக, மெள்ள, ஆனால் வெகு உறுதியாக வெளிவந்தது பிரதாபருத்திரன் பதில். ஒவ்வொரு வார்த்தையும் அழுத்தி உச்சரித்தான் சக்கரக் கோட்டத் தலைவன். ''பலிக்காதபடிதான் செய்து விட்டாயே கரிகாலா!'' என்ற பிரதாபருத்திரன், அடுத்த விநாடி இடியிடியென மண்டபமே அதிரும்படியாகச் சிரித்தான்.

மண்டபத்தின் விமானத்திலிருந்து எழுந்த சிரிப்பொலியின் எதிரொலி பளீச் பளீச்சென்று கரிகாலன் தலைமீதுவிழுவது போன்ற பிரமையைச் சிருஷ்டிக்கவே, மெய்மறந்து ஒரு விநாடி சிலையென நின்றான் கரிகாலன். அவன் பிரமையை விலக்க விவரித்தான் பிரதாபருத்திரன். ''கரிகாலா! உன்னைக் கண்டதுமே உன்னை இன்னானென்று தீர்மானித்து விட்டேன் சுய நன்மையையும் சோழ நாட்டு நலனையும் உத்தேசித்து, நீ நிரஞ்சனா தேவிக்குத் துரோகம் செய்ததும்; வேங்கி

''கல்யாணத்துல என்ன கலாட்டா?''

''மொய்க்குப் பதிலா கூட்டத்துல யாரோ அவங்க குழந்தையைக் கொண்டு வந்து கொடுத்துட்டுப் போயிட்டாங்க!''

—திருநாவுக்கரசு

நாட்டு அரியணையை ஜெயசிம்ம சாளுக்கியன் மருமானான விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனுக்கு விற்று விட்டதும், அக்கம் பக்கத்து அரசுகளில் பிரதி தினம் பேசப்பட்டு வருகிறது. லாபம் மட்டும் இருக்கும் பட்சத்தில், நீ யாரையும் காட்டிக் கொடுக்கத் தயங்க மாட்டாய் என்று ராஜதந்திரிகள் கூறுகிறார்கள். ஒற்றர்கள் மூலம் கிடைத்திருக்கும் செய்தியும் அதுதான். ஆகையினால்தான், உன்னுடன் இன்று தனிமையில் நானும் பேச எண்ணினேன்,'' என்றான்.

கரிகாலன் சிந்தனையில் எண்ணங்கள் எழுந்து புரண்டன. வேங்கி நாட்டு விவகாரங்களால் எத்தனை அபகீர்த்தி தனக்குக் கிடைத்திருக்கிறது என்பதை நினைத்து ஒரு விநாடி ஏங்கினானாயினும், அந்த அபகீர்த்தியும் அந்தச் சமயத்தில் தனக்கு உதவுவதை நினைத்து வியந்தான். 'இப்படி ஓர் அபகீர்த்தி இல்லாவிடில், நானும் என் சகாக்களும் இத்தனை நேரம் தூக்கில் தொங்கலாடியிருப்போம். இவன் ஏதோ ஆசை காட்டி என்னிடமிருந்து அரையன் ராஜராஜன் அணிவகுப்பைப் பற்றித் தகவல் அறியப் பார்க்கிறான். சுயநலத்துக்காக நான் எதையும் செய்வேனென்பதில் இவனுக்குச் சந்தேகமில்லை,' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்ட கரிகாலன் கடைசியாகப் பிரதாபருத்திரனை ஏறெடுத்து நோக்கி, ''மன்னவா! நான் யாரென்பதையும், என் பெயர் என்ன என்பதையும் எப்படியோ ஊகித்து விட்டீர்கள்.....'' என்று ஆரம்பித்தான்.

அவன் பேச்சை இடையில் வெட்டிய பிரதாபருத்திரன், ''இதில் அதிக ஊகத்திற்கு இடமில்லை, கரிகாலா! வேங்கி நாட்டிலும் மேலைச் சாளுக்கிய எல்லையில் அரையன் ராஜராஜன் பாசறையிலும் நடந்த உன் லீலா விநோதங்களை உலகம் அறியும். வேங்கி நாட்டு மக்களே அதைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டார்கள். போதாததற்குச் சேர நாட்டு ஒற்றன் ஜெயவர்மனும் உன்னைப் பற்றி அடிக்கடி கூறியிருக்கிறான்,'' என்றான்.

''என்ன கூறியிருக்கிறான் அரசே?''

''நீ பெரிய பொய்யன், தந்திரசாலி; உன்னை நம்பக் கூடாது




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு

என்று.''

''ஓகோ!''

''அது மட்டுமல்ல; உன் பெயரையும் அங்க அடையாளங்களையும் சொல்லியிருக்கிறான்.''

''அப்படியா?''

''ஆமாம். காட்டு ஓரமாக உன் பாசறை இருப்பதும் அவனுக்குத் தெரியும். என்றாவது அவன் உன்னிடம் பிடிபடக் கூடும் என்று பயந்து கொண்டிருந்தான். அது நடந்து விட்டது.''

கரிகாலன் சிறிது நேரம் மௌனம் சாதித்தான்.

''ஏன் மௌனம் சாதிக்கிறாய், கரிகாலா?'' என்று பிரதாபருத்திரன் வினவினான்.

''நான் பேச என்ன இருக்கிறது, மன்னவா! எல்லாவற்றையும் நீங்களே சொல்கிறீர்களே!''

''இதையெல்லாம் நான் முன்பே அறிவேன் கரிகாலா! ஆனால் நான் அறியாத விஷயங்களும் இருக்கின்றன. உதாரணமாக, அரையன்




வித்தியாசங்கள் உள்ளன. விடை: 47'ம் பக்கம்

ராஜராஜன் படை அணிவகுப்பைப் பற்றி எனக்குத் தெரியாது. அரையன் ராஜராஜன் போர்த் திட்டமும் எனக்குத் தெரியாது. அவற்றை உன்னிடமிருந்து அறிய இஷ்டப்படுகிறேன். சொன்னால்.....''

''சொன்னால்?''

''உனக்குச் சக்கரக் கோட்டத்தில் பெரும் பதவி கிடைக்கும்.''

''என்ன பதவியளிப்பீர்கள்?''

''எனக்கு அடுத்தபடி உன்னை இக் கோட்டத்தின் காவலனாக நியமிப்பேன். நாகர்கள் உன்னைத் தலைவணங்குவார்கள். உன் பிற்காலம் பயனுள்ளதாக இருக்கும்.''

''அத்தனை பெரிய பதவியா?''

''ஆமாம் கரிகாலா! அத்தனை பெரிய பதவி இப்பொழுது உன் காலடியில் கிடக்கிறது!''

இதைக் கேட்ட கரிகாலன், ஏதோ யோசிப்பது போல் பாசாங்கு செய்தான். பிரதாபருத்திரன் அளிக்கும் பதவியை உடனே ஒப்புக் கொள்வது சந்தேகத்தை அளிக்கும் என்று நினைத்து, திருப்தியடையாதவன் போல் பேச ஆரம்பித்து, ''மன்னவா! நான் பதவிக்கு ஆசைப்பட்டு இதைச் செய்ய முன்வர மாட்டேன். அத்தனை கயவனல்ல நான்,'' என்று மனவருத்தத்தை லேசாகக் காட்டினான்.

''வேறு எதற்கு ஆசைப் படுகிறாய்? சொல். பெரும் படைகளை விலைக்கு வாங்கவல்ல நாகரத்தினங்கள் வேண்டுமா? பொற்காசுகள் கோடிக் கணக்கில் வேண்டுமா?'' என்று ஆசை காட்டினான் பிரதாபருத்திரன்.

''அவையும் வேண்டியதுதான். அத்துடன்.....''

''என்ன?''

''என் பிறப்பு மர்மம்.''

பிரதாபருத்திரன் சற்றே யோசித்தான்; பிறகு சொன்னான்: ''பிறப்பு மர்மத்தைச் சொல்ல என் நண்பனுக்குக் கொடுத்த பிரமாணத்தை உடைக்க வேண்டும்....'' என்று.

''தர்மம் அதற்கு இடம் கொடுக்கிறது மன்னவா!''

''தர்மத்தைப் பற்றித் தெரியுமா, உனக்கு?''

''தர்ம சாஸ்திரத்தை நன்றாகப் படித்திருக்கிறேன்.''

''அந்தச் சாஸ்திரம் என்ன சொல்லுகிறது?''

''பெரிய நன்மைகளைப் புரிய, சிறிய பாவங்களைச் செய்யலாம் என்று கூறுகிறது. இந்தக் கோட்டையைப் பாதுகாப்பது தங்கள் தர்மம். அதற்காகப் பிரமாணத்தை உடைப்பது தவறாகாது.''

''அப்படிப் பிரமாணத்தை மீறுவதானால், அரையன் ராஜராஜன் படைகளை உடைக்க வழி சொல்கிறாயா?''

''சொல்வதைத் தவிர வேறு வழியில்லையே எனக்கு!''

கரிகாலனை ஒரு கணம் கூர்ந்து கவனித்தான் பிரதாபருத்திரன். பலர் சந்தேகங்களை உடைத்தெறிக்கும் அந்தக் குழந்தை முகம், யாரையும் மயக்கும் அந்த விஷமப் புன்முறுவல், அவன் சந்தேகங்களையும் உடைத்தெறியவே அவன் சொன்னான்: ''கரிகாலா! அந்தப் பிரமாணம் எத்தன்மையென்பதை நீ அறிய மாட்டாய். அதை மீறுவதும்

அவ்வளவு சுலபமல்ல. மீறினால் என் வம்சத்தையே அது பாதிக்கலாம். இருப்பினும் மீறுகிறேன். நாகர்களின் நன்மையை முன்னிட்டு என்னையும் என் வம்சத்தையும் தியாகம் செய்கிறேன். இந்தப் போரில் அரையன் ராஜராஜன் படைகள் முறியடிக்கப் பட்டால், உனக்கு இந்நாட்டில் பெரும் பதவி தருவதுமல்லாமல், சோழ நாட்டையே ஒரு கலக்குக் கலக்கவல்ல உன் பிறப்பு மர்மத்தைக் கூறுகிறேன். இப்பொழுது சொல், அரையன் ராஜராஜனின் படைகளின் அணிவகுப்பு எப்படியிருக்கிறது?''

கரிகாலன் ஏதோ யோசிப்பது போலும், தகவலைக் கூற இஷ்டமில்லாதது போலும் சிறிது நேரம் பாசாங்கு செய்துவிட்டுத் தான் செங்கமலச் செல்வியிடம் சொல்லிவிட்டு வந்த அணிவகுப்பு முறையை நேர்விரோதமாக மாற்றிச் சொல்லத் தொடங்கினான். அந்தப் பேச்சைப் பிரதாபருத்திரன் நம்புவதற்காக ஓரளவு உண்மையையும் கலந்து கொண்டான். ''மன்னவா! அரையன் ராஜராஜன் படை மூன்று பிரிவாகப் பிரிந்து நிற்கிறது. உங்களுக்கு நேர் எதிரில் பிரும்ம மாராயன் குதிரைப் படைகள் நிறுத்தப் பட்டிருக்கின்றன. கிழக்குக் கதவுக்கெதிரில் அரையன் ராஜராஜன் தன் படைப் பிரிவை நிறுத்தியிருக்கிறான். மற்றப் படைகள் செங்கமலச் செல்வியின் தலைமையிலும், ராஜராஜ நரேந்திரன் தலைமையிலும் காட்டு முகப்பில், அதாவது மேற்குப் பகுதியில் நிற்கின்றன,'' என்று விவரித்துச் சற்றுப் பேச்சை நிறுத்தினான்.

பிரதாபருத்திரன் வியப்பினால் விழிகளைக் கரிகாலன் மீது நாட்டி, ''இதென்ன விசித்திரமாயிருக்கிறதே! பிரதான படைத் தலைவன் பக்கவாட்டிலும், அவனுக்கு அடுத்தவன் நேர் எதிரிலுமா அணிவகுத்து நிற்பார்கள்! சோழ நாட்டுப் போர் முறைக்கே இது முரணாயிற்றே?'' என்று கேட்டான்.

''நடந்து போகும் போது வாத்து எப்படி சத்தம் போடும்?''

''வாக்... வாக்... வாக்.''

—மதுமலர்

அவன் உள்ள நிலையைச் சரியாக ஊகித்து விட்டதைக் கண்டு கரிகாலன், ''சாதாரணமாகப் படை அணிவகுப்பு மாறித்தானிருக்க வேண்டும். ஆனால், நான் புறப்படு முன்பு அவர்கள் செய்த மந்திராலோசனையில் முறையை மாற்றி விட்டார்கள். எதிர்பாராத விதமாகத் தங்களைத் தாக்கவே இந்த மாறுதல். அரையன் ராஜராஜனை எதிர்பார்த்து நீங்கள் தெற்கு வாயில் வழியாகப் புறப்படுவீர்கள். பிரும்ம மாராயர் தங்களைத் தடுத்துத் தாக்குவார். அதற்குள் அரையன் ராஜராஜன், கிழக்கு வாயிலுக்குள் நுழைந்து தெற்கு வாசலை நோக்கிப் பின்புறமாகப் படைகளுடன் வருவான். இரு படைகளுக்கிடையே தங்கள் படை நொறுங்கி விடும்,'' என்று விவரித்தான்.

உண்மைக்கு முழுதும் மாறுபட்ட இந்த அணிவகுப்பை பற்றிக் கரிகாலன் கூறிய தகவல்களைக் கேட்ட பிரதாபருத்திரன், அதைப் பெரும் உண்மையென்றே கருதினான். அதில் கண்ட போர்த் தந்திரம் பெரிய படைத் தலைவர்கள் கையாளும் முறைகளைப் பின்பற்றியிருந்தமையால் சந்தேகத்துக்குச் சிறிதும் இடமில்லாது போகவே, நாகாசனத்திலிருந்து எழுந்து, கரிகாலன் அருகில் வந்த பிரதாபருத்திரன், ''கரிகாலா! இன்னுமொரு கேள்வி. யானைப் படைகள் என்னவாயின?'' என்று வினவினான்.

''அவற்றைப் பின்னணிக்குக் கொண்டு போய் விட்டார்கள்.''

''ஏன்?''

''நான் யோசனை சொன்னேன்.''

''உன் யோசனையா அது?''

''ஆமாம். யானைப் படைகள் முன் நின்றால், விஷம் தீட்டிய உங்கள் வாள்களும் வேல்களும் அவற்றின் மீது பாயும். அதனால் அவை மிரண்டு திரும்பி ஓடும். இது சோழர் படைகளுக்குப் பெருத்த சேதத்தை அளிக்குமல்லவா? அதனால்தான், கடைசிக் கட்டத்தில் அவற்றை நிறுத்தி வைக்கும்படி ஏற்பாடு செய்தேன்.''

பிரதாபருத்திரன் மனத்தில் ஏதாவது சந்தேகமிருந்தால், இந்தப் பதில் அந்தச் சந்தேகத்தை அறவே உடைத்து விட்டது. யானைப் படைகள் பின்னணிக்கு அழைத்துச் செல்லப்படுவதாகக் கோட்டையிலிருந்து பார்த்த அவன் வீரர்கள் அவனுக்குத் தவகல் கொடுத்திருந்தார்கள். ஆகவே, கரிகாலன் சொன்னது அனைத்தும் உண்மையே என்று பிரதாபருத்திரன் நம்பிப் பூரண மகிழ்ச்சியுடன் கேட்டான்: ''எந்தச் சமயத்தில் அவர்கள் கோட்டையைத் தாக்க உத்தேசம்?'' என்று.

''நாளை நள்ளிரவில் கோட்டைக் கதவுகளைத் திருட்டுத்தனமாகத் திறந்துவிடுவதாகக் கூறியிருக்கிறேன்,'' என்றான் கரிகாலன்.

''மகிழ்ச்சி, கரிகாலா! அதே நள்ளிரவில் கோட்டைக் கதவுகளைத் திறக்கிறேன். ஆனால் அவர்கள் இஷ்டப்படி போர் செய்ய அல்ல; என் இஷ்டப்படிப் போர் புரிய. கிழக்கு வாயிலில் அரையன் ராஜராஜனை என் படைகள் சந்திக்கும். தெற்கு வாயிலில், என் உபதளபதி பிரும்ம மாராயரைச் சந்திப்பார். மேற்குத் திசைக் கதவைத் திறக்கவே மாட்டோம். இந்த இரண்டு கதவுகளும் சற்று நேரம்தான் திறந்திருக்கும். அரையன் ராஜராஜனும் பிரும்ம மாராயரும் படை முகப்பில் நின்று போர் புரிவார்கள். அவர்கள் கோட்டைக்குள் நுழைந்ததும், கதவுகள் எதிர்பாராத விதமாகச் சாத்தப்படும். சில வீரர்களும் அரையன் ராஜராஜனும் பிரும்ம மாராயரும் கோட்டைக்குள்ளே சிக்கிக் கொள்வார்கள். பிறகு அவர்கள் கதி அதோகதியாகி விடும்,'' என்று தன் போர்த் திட்டத்தை விளக்கிய பிரதாபருத்திரன், தன் சாமர்த்தியத்தை எண்ணிப் பெரிதாக நகைத்தான்.

மறுநாள் அவன் ஏற்பாட்டின் படியே படைகள் கோட்டைக்குள் அணிவகுக்கப் பட்டன. வீரர்கள் ஆயிரக் கணக்கில் வாயில்களுக்கு அருகே கதவுப் பக்கங்களில் ஒதுங்கி நின்றார்கள். பூர்ண கவசமணிந்த பிரதாபருத்திரனும் தன் பெரும் புரவி மீது கம்பீரமாக அமர்ந்து கோட்டை வாயிலை நெருங்கினான். அவன் வாயிலை அணுகுமுன்பாகவே அவனை நோக்கி ஓடிவந்த வீரன், ''மன்னவா! சோழப் படைகள் நகர ஆரம்பித்து விட்டன,'' என்று



ஆறு வித்தியாசங்கள் விடை

1 பிளாஸ்திரி
2 மரத்தின் வேர்
3 பந்து
4 மாடி
5 ஸ்டம்ப்
6 மாடியில் நிற்பவர்

எச்சரிக்கை செய்தான். அதைக் கேட்ட பிரதாபருத்திரன், வாளை ஆகாயத்தில் உயர்த்தி ஏதோ சமிக்ஞை செய்தான். ஆயிரக் கணக்கான வாட்கள் ஆகாயத்தில் எழுந்து ஒரு முறை ஆடித் தாழ்ந்தன! எங்கும் நிசப்தம்! கோட்டைக்கு வெளியே சோழற் படைகள் மெல்ல மெல்ல நகர்ந்து வந்தன. அந்தப் படைகளின் குதிரையின் குளம்புகள் தரையில் மாறிமாறிப் பதிந்ததால் ஏற்பட்ட சப்தம் மெல்ல மெல்லக் கேட்டது. பெரிய கடலே மூன்று பிரிவாகப் பிரிந்து சக்கரக் கோட்டத்தின் மீது மோத வருவதாகத் தோன்றியது. ரகசியத் தாக்குதலாதலால் பந்தங்கள் கூடக் கொளுத்தப்படவில்லை. பிசாசுகளின் சமூகமே திரண்டு நெருங்க வருவது போன்ற பிரமையை அளித்துக் கொண்டே நகர்ந்தது சோழர்களின் பெரும் படை. அடுத்த கணத்தில் நிகழப் போகும் பெரும் போரில் உயிர்களைப் பிடிப்பதற்காகக் கால தேவனே தன் பாசக் கயிற்றை வீசியது போல், நீண்ட கருமேகம் ஒன்று ஆகாயத்தின் குறுக்கே எழுந்தது. இந்தப் போர்த் தாண்டவத்தைப் பார்க்க அச்சப்பட்டன போல் மேற்றிசைக் காட்டிலிருந்த பறவைகள் கூட, 'கூ... கூ...' என்று கூவின. வேகமாக அந்தப் பக்கத்தை நோக்கி நகர்ந்த சோழர் ரதங்களின் சக்கரங்கள் அந்தக் 'கூகூ' ஒலத்துடன் தங்கள் 'கிரீச் கிரீச்'சென்ற அலறலையும் இணைத்துக் கோரமான சூழ்நிலையைச் சிருஷ்டித்தன.

சோழர் படைகள் மெள்ள மூன்று வாயில்களையும் நெருங்கின. அப்படைகளை விழுங்க முற்பட்ட வாஸ்து புருஷனின் பெருவாய்களைப் போல் சக்கரக் கோட்டத்தின் கிழக்கு, தெற்கு வாயிற் கதவுகள் மெள்ள மெள்ளத் திறக்கத் தொடங்கின.

(தொடரும்)

# புதிருக்கு முகம் கொடுங்கள்

தனது முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமனைப் பார்த்து வேதாளம் சொன்னது:

'விக்கிரம ராஜனே! இந்த யுகத்துக்கு ஏற்றமாதிரி ஒரு புதிர் சொல்கிறேன். இங்கே இருக்கும் நான்கு படங்களையும் பார். ஒவ்வொரு புதிரிலும் குறிப்பிட்டுள்ள மூன்று நடிகைகளில் யாரோ ஒருவர்தான் லிப்ஸ்டிக்கைக் கொண்டு கண்ணாடியில் தங்கள் முகத்தின் வெளிப்புற வடிவத்தை வரைந்திருக்கிறார்கள். கண்ணாடியில் உள்ள முகத்துக்குப் பொருத்தமான நடிகை யார்? உன்னுடன், புத்திசாலியான வாசகர்களும் போட்டியில் கலந்து கொள்கிறார்கள் என்பதை நினைவில்கொண்டு, சரியான விடையைக் கணித்து ஒரு தபால்









# 57. நாக விஷம்

மு ப்பெரும் பிரிவுகளாகப் பிரிந்து, ஆழ்கடலின் பேரலைகளைப் போல் திரண்டு எழுந்து, சக்கரக் கோட்டத்தின் மீது மோதி, அதை மூழ்கடித்துவிட நெருங்கிய சோழப் பெரும்படையை எதிர்க்க ஆயத்தமாகக் கோட்டைக்குள்ளே நின்ற பிரதாப ருத்திரனுக்கு, இரண்டு பெரிய ஏமாற்றங்கள் காத்துக் கொண்டிருந்தன. அரையன் ராஜராஜன் கிழக்கு வாசலிலும், பிரும்ம மாராயர் மேற்கு வாசலிலும் தாக்குவார்கள் என்று கரிகாலன் சொன்ன பொய்யால் ஏற்பட்ட ஏமாற்றம் ஒன்று; கோட்டை வாயில்களை நெருங்கியதும் அரையன் ராஜராஜன் திடீரெனப் போர் முறையை மாற்றி விட்டது மற்றொன்று. இந்த இரண்டாவது ஏமாற்றத்திற்கான அறிகுறிகள் சோழப் படைகள் வாயிலை நெருங்கியதுமே ஏற்பட்டதைக் கண்ட பிரதாபருத்திரன், சற்றுப் பிரமித்தே போனான்.

சோழப் படைகள் கிழக்கு, தெற்கு வாசல்களில் திடீரென உட்புகும், அவற்றில் ஒரு பகுதியை உள்ளே விட்டு மீதியைக் கதவை மூடித் தேக்கிவிடலாம் என்ற எண்ணத்தில் கதவுக்குப் பக்கவாட்டில் மட்டுமின்றி, தளத்தின் மேலேயிருந்து சுழற் கட்டைகளைத் திருப்பிக் கதவுகளை மூடவும் வீரர்களை நிறுத்தியிருந்தான் பிரதாபருத்திரன். ஆனால் அரையன் ராஜராஜன் போர்த் திட்டத்தில் ஏற்படுத்திய மாறுதலும், அவன் கையாண்ட வேறு சில முறைகளும் பிரதாபருத்திரனின் திட்டங்களை அடியோடு குலைத்தெறிந்து விட்டன.

கரிகாலன் செங்கமலச் செல்வியிடம் சொல்லிவிட்டுப் போனபடிதான், அரையன் ராஜராஜனும் படைகளை அணிவகுத்துச் சக்கரக் கோட்டத்தின் பெரும் வாயில்களை அணுகினான். ஆனால், அந்த வாயில்களைத் தான் அணுகுவதற்கும் அந்த வாயில்கள் ஏதோ தன் படைகளை எதிர்பார்த்தவை போல் திறந்ததற்கும் நேரம் சரியாக இருந்ததைப் பார்த்து ஒரு விநாடி தன் புரவியைச் சட்டென்று நிறுத்தி, மற்றப் படைகளையும் உட்புகாதிருக்கத் தன் வாளை உயர்த்திச் சமிக்ஞை செய்தான். எத்தனையோ போர்களைக் கண்டவனும், ஜெயசிம்ம சாளுக்கியன் போன்ற பெரிய தந்திரசாலிகளையே முறியடித்திருப்பவனும், வெகு சூட்சம புத்தியை உடையவனுமான அரையன் ராஜராஜனுக்கு, அந்தக் கதவுகள் அத்தனை ஏற்பாட்டுடன் சரியான சமயத்தில் திறந்தது பெரும் சந்தேகத்தை அளித்தது. கரிகாலன் உள்ளேயிருந்து அந்தக் கதவுகளைத் திருட்டுத்தனமாகத் திறந்திருந்தால், கதவுகள் மிக அவசரமாகவும் வேகமாகவும் திறக்கப்பட்டிருக்குமென்பதையும், ஏதோ அரசர்கள் வரவேற்புக்காகத் திறக்கப்படும் கதவுகளைப் போல் அத்தனை நிதானமாக, ஒழுங்காகத் திறக்கப்பட மாட்டாவென்பதையும் உணர்ந்து கொண்ட அரையன் ராஜராஜன், இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிறதென்ற முடிவுக்கு வந்தான். வந்ததும், அவன் உத்தரவுகளும் மின்னல் வேகத்தில் பறந்தன.

தன் உபதளபதிகளில் மூவரை அழைத்து, சோழர் படைத் தலைவன் கிழக்கு வாயிற் கதவு மூட ஆரம்பிக்கும் வரையில் தாக்க ஆரம்பிக்க வேண்டாமென்றும், மூடத் தொடங்கியதும் திடீரென உட்புகுமாறும் செய்தி சொல்லி பிரும்ம மாராயரிடம் ஓர் உபதளபதியை அனுப்பினான். இன்னொரு உபதளபதியை அனுப்பி மேற்கு வாயில் படைகளுக்குத் தலைமை



சாண்டில்யன்

தாங்கி நின்ற செங்கமலச் செல்வியை உடனே அவ்வாயிலைத் தாக்கிக் கதவுகளைப் பத்துப் பதினைந்து யானைகளைக் கொண்டு நொறுக்கி உட்புகுமாறு ஆக்ஞாபித்துவிட்டு, மற்றொரு உபதளபதியை நோக்கி மூன்று கோட்டைக் கதவுகளுக்கும் மேலே தெரிந்த சுழல் சக்கரங்களைக் காட்டி அந்தச் சக்கரங்களை இயக்க வரும் வீரர்களை அம்பெறிந்து கொன்று விடுமாறும் உத்தரவிட்டான்.

அரையன் ராஜராஜன் உத்தரவுகள் கண நேரத்தில் நிறைவேற்றப்பட்டன. மூன்று பிரிவுகளிலுள்ள வில்லவர், கோட்டை வாயில்கள் மீதுள்ள சுழற் சக்கரங்களுக்கு அம்புகளைக் குறிவைத்து நின்றார்கள். தன் தந்தையைப் போலவே தங்கக் கவசத்தை அணிந்து, அந்தப் போர் உடைகளிலும் பூரண அழகு பொலிவுற்று விளங்க வீரலக்ஷ்மியைப் போல் புரவி மீது வீற்றிருந்த செங்கமலச் செல்வி, பின்னாலிருந்த யானைப் படையிலிருந்து பத்து யானைகளைக் கொண்டு மேல் வாயிற் கதவுகளைத் தாக்கும்படி தன் வீரர்களுக்கு உத்தரவிட்டாள். துதிக்கையில் நீண்ட மரங்களைக் கொண்டு யானைகள் மேற்கு வாயிற் கதவுகளைப் பேரிடியாக இடிப்பதை உள்ளிருந்து கேட்ட பிரதாபருத்திரன் பிரமித்துப் போனான். தாக்குதல், திறந்திருந்த மற்ற இரண்டு வாயில்களிலுமிருந்து வராமல், மேற்கு வாயிலிலிருந்து வருவது பெரும் ஏமாற்றத்தை அளித்தது பிரதாபருத்திரனுக்கு. மிகத் தந்திரசாலியான எதிரியால் தான் ஏமாற்றப்படுவதை அறிந்த பிரதாபருத்திரன், கோட்டைத் தளத்தின் மேற்குப் புறத்திலிருந்த வீரர்களை அம்பெய்து யானைகளை விரட்டுமாறு பணித்ததன்றி, மற்ற இரு வாயில்களையும் மூடுமாறும் உத்தரவிட்டான்.

அந்தப் போர் நிலையில் எந்தத் தளபதியும் இடக்கூடிய உத்தரவுகள் அவைதான். ஆனால் அந்த உத்தரவுகளை நிறைவேற்றுவதில் நூற்றுக் கணக்கான தன் வீரர்கள் பலியாவார்கள் என்பதையோ, அந்தப் பலியும் வீண்பலியாகும் என்பதையோ, பிரதாபருத்திரன் எதிர்பார்க்கவில்லை. இந்த நிலைக்குக் காரணம் என்ன என்பதை அறியலாமென்றாலோ அதை விளக்கக் கரிகாலனும் அருகில் இல்லை. அவனையும் அவன் சகாக்களையும் சிறையிலடைத்து விட்டே பிரதாபருத்திரன், யுத்தத்துக்குக் கிளம்பியிருந்தான். இப்படிப் பல வகையிலும் கையொடிந்து நின்ற பிரதாபருத்திரன், திடீரெனத் தன் படைகளின் மீது மோதிய மற்றுமொரு பேராபத்தையும் சமாளிக்க வேண்டியதாயிற்று.

அவன் உத்தரவுப்படி யானைகள் மீது அம்பு எய்ய முயன்ற வீரர்கள், கோட்டைத் தளத் துவாரங்களுக்கு அருகில் தோன்றிய உடனேயே, அவர்களுக்காகத் தயாராயிருந்த சோழ நாட்டு வில்லவர்களின் அம்புகள் அந்தத் துவாரங்களில் பாய்ந்தன. மூன்று வாயிற் கதவுகளையும் இயக்கி மூட சுழற் சக்கரங்களுக்கு அருகில் கோட்டை மீது தோன்றிய வீரர்கள், சோழ வில்லவர் அம்புகள் பாய்ந்து 'ஹா... ஹா....'வென்று பயங்கர மரணக் கூச்சலிட்டுச் சாய்ந்தார்கள். அந்த மரணக் கூச்சலே அடுத்து எழுந்த பெரும் போர்க் கூச்சலுக்குக் காரணமாயிற்று.

மேற்கு வாயிலில் யானைகள் உக்கிரமாக மரங்களால் கதவுகளைத் தாக்கின; மத்தகங்களால் இடித்தன. அத்துடன் ரதங்கள் முகப்பிலும் பெரும் வாரைகளை இணைத்துப் புரவிகளை வெகு வேகத்தில் விட்டுக் கதவுகளை நொறுக்க உத்தரவிட்டாள் செங்கமலச் செல்வி. அந்த மோதல்களால் கதவின் பாகங்கள் சரசரவென்று நொறுங்கிய சப்தமும், அதே காலத்தில் மற்ற இரு வாயிற் கதவுகள் பக்கவாட்டிலிருந்த வீரர்களால் மூடத் தொடங்கிய கிரீச் கிரீச்சென்ற பெரும் ஒலியும், அவை மூடத் தொடங்கியதும் அரையன் ராஜராஜன் சைகை செய்ய, பெரும் கோஷத்துடன் சூறாவளியால் உந்தப்பட்ட கடலைப் போல் உள்ளே பாய்ந்த சோழப் படைகளின் பேரரவமும், எல்லாமாகச் சேர்ந்து பிரளய சப்தத்தால் ஏற்படும் பெரும் பயங்கரத்தைச் சிருஷ்டித்தன.

மூடத் தொடங்கிய கதவுகள் கால்வாசி மூடுவதற்குள்ளாகவே, வெள்ளம் போல் சோழப் படைகள் உட்புகுந்து விட்டதாலும், கதவுக்குப் பக்கத்திலிருந்த வீரர்கள் எதிர்பாராதவிதமாகத் தாக்கப்பட்டதாலும் கோட்டைக்குள்ளே திடீரெனக் கடும் போர் மூண்டது. புரவிகள் மோதின; ஈட்டிகள் பாய்ந்தன.

அம்புகள் பறந்தன; வாட்கள் சுழன்றன!

போர் அரக்கனின் தாண்டவம் பயங்கரச் சொரூபத்தை அடைந்தது. சோழ வீரர்கள் திடீரென உட்புகுந்த தால் தாக்குதலின் முதற் பயனை அவர்களே அடைந்தார்கள். அவர்கள் வாளுக்கு இரையான மாசுணி வீரர்களின் தலைகள் கீழே புரண்டு எதிரிகளின் புரவிகளின் கால்களில் மிதியுண்டு கண்களும் வாய்களும் சிதைந்து, ரத்தமும் சதையும் பிய்ந்து கோர சொரூபங்களாகக் காட்சியளித்தன. தலையிழந்த முண்டங்களோ இருதயம் நிற்பதற்கு முன்பாகத் தள்ளாடித் தள்ளாடி நடந்து தடால் தடாலென விழுந்தன. அவற்றின் மார்மீதும் வயிற்றின் மீதும் புரவிகள் குளம்புகளை அழுத்தி ஏறி ஓடின.

மாற்றானால் எதிர்பாராத விதமாகத் தாக்கப்பட்ட பிரதாபருத்திரனும் தன் பெரும் வாளைச் சுழற்றிக் கொண்டு கிழக்கு வாயிலில் அரையன் ராஜராஜ னைத் தேடிச் சென்றான். அங்கு தமது பெரும் சரீரத்துடனும் ரத்தம் தோய்ந்த வாளுடனும் பிரும்ம மாராயர் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்ததைக் கண்டதும், உண்மை முழுவதும் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது பிரதாப ருத்திரனுக்கு. கரிகாலன் தன்னை நன்றாக ஏமாற்றி விட்டானென்பதை யும், அதனால் விளைந்த அனர்த்தமே அந்தச் சிக்கல் என்பதையும் உணர்ந்து கொண்ட பிரதாபருத்திரன் கோபம் மேலிட்டாலும், அதனால் பயனேது மில்லையென்பதை உணர்ந்து மிக நிதானமாகவே தன் படைகளை நடத்தினான். பிரதாபருத்திரனைத் தூரத்திலிருந்தே பார்த்த பிரும்ம மாராயருக்கோ உற்சாகம் தாங்க முடியவில்லை.

போரிலே இணையற்ற பராக்கிர மத்தைக் காட்டவல்லவராகையால், ராஜராஜ பிரும்ம மகராஜ் என்று மிக மரியாதையுடன் சோழ மண்டலம் முழுவதும் அழைக்கப்பட்டு வந்த பிரும்ம மாராயர், அன்று பெரும் பிரும்ம ராட்சசனைப் போல் தோன்றினார். அந்தண குலத்தில் பிறந்தவரானாலும் போர் வெறியை அதிகமாக உடைய பிரும்ம மாராயர் தமது பெரும் குதிரையை நாலா பக்கத்திலும் சுழலவிட்டு, எல்லா



## காற்றினும் விரைவாய்... அட்லஸ் சவாரி!

**புதிய ஸ்போர்ட்ஸ்டெர் 5 - ஸ்பீட்**

இம்போர்ட்டட் கியர் சிஸ்டம்.

* இறக்குமதி செய்யப்பட்ட ஸன்ரேஸ் கியர் சிஸ்டம் ஸெர்வோ பான்ட்டா மெக்கானிஸம் இணைந்தது.

* கியர் 1 மற்றும் 2 ! மிதித்தவுடன் பறந்திட. எதிர்காற்றிலும் அலுக்காத சவாரி. மேட்டிலும் உற்சாகமாய் ஏறலாம். கியர் 3 ! மணல் தரையிலும் குறையா வேகம்.

* கியர் 4 மாற்றுங்கள் ! மேலும் அதிக வேகம் பெறுங்கள்.

* கியர் 5 ! சிட்டாய்ப் பறந்திட.

* விசேஷமாய் வடிவமைக்கப்பட்ட ஃபிரேம் சுலபமாய் கியர் மாற்றிட

* அக்ரிலிக, பாலி குரோமேட்டிக் வண்ணங்கள் — பர்கண்டி, ப்ளூ, மெரூன், கிரே.

**பைக்கிலே மீண்டும் ஒரு புரட்சி!**

* துணிவுடன் முந்திச் செல்ல விரும்பினால் பிரத்யேக டாக்கோ மீட்டர் தேர்ந்தெடுப்பீர் ஸ்போர்ட் ஸ்டெர் 5 ஸ்பீட் அல்லது ஸ்போர்ட் ஸ்டெர்




**Atlas**
«FUNFLEET»

உலகத் தரமுள்ள ஸ்டைலான ஸைக்குகள் !

CONTRACT AC—271/87/TAM

பாட்களையும்விட அகலமும் கனமும் நீளமுமுள்ள தமது வாளைச் சுழற்றிச் சுழற்றி அருகே நெருங்கியவர்களையெல்லாம் வெட்டி வீழ்த்திக் கொண்டு பிரதாபருத்திரனை நோக்கி வந்தார். வாளினால் மட்டும் போரில் அவருக்குத் திருப்தி ஏற்படுவதில்லையென்பதும், வேலெறிவதில் மிகுந்த ஆசையுடையவரென்பதும் மிகப் பிரசித்தியென்பதைப் பிரதாபருத்திரனும் அறிந்திருந்தானாகையால், அவனும் மிகுந்த எச்சரிக்கையுடன் போரிட்டான். புரவியின் பக்கவாட்டிலிருந்த தோள்பட்டையிலிருந்து பிரும்ம மாராயர் ஈட்டிகளிலொன்றை எடுத்துப் பயங்கரமாக வீசியபோதும், தலை குனிந்து தப்பிக் கொண்ட பிரதாபருத்திரன், தனது வாளையும் சுழற்றிச் சுழற்றிச் சோழ வீரர்களை வெட்டிக் குவித்துக் கொண்டு பிரும்ம மாராயரை நோக்கிச் சென்றான். அவன் கூச்சலைக் கேட்ட அவன் வீரர்களும், மிக உக்கிரமாகப் போரிட்டு அலை அலையாகப் பிரும்ம மாராயர் படைப் பிரிவின் மீது மோதினார்கள்.

போர் உக்கிரமாவதைக் கண்ட பிரும்ம மாராயர், ராட்சத சிரிப்பொன்றை வெளியிட்டார். அவர் முகத்திலே தெளித்துக் கிடந்த மாற்றார்கள் ரத்தமும், அவர் இருப்புக் கவசத்திலும் காலிலும் ஒட்டிக் கொண்டிருந்த சிறு சதைப் பற்றுகளும், வாளை அவ்வப்பொழுது துடைத்துத் திரட்டி அவர் வீசியெறிந்த சதையும் ரத்தமும் இணைந்த சிறுசிறு பிண்டங்களும் எல்லாமாகச் சேர்ந்து, வருகிறவன் மனிதனா அல்லது பிசாசா என்று சந்தேகமுறச் செய்தன.

இவர் போர் முறைக்கு முற்றிலும் மாறாக இருந்தது அரையன் ராஜராஜனின் போர் முறை. அவன் புரவி, வீரர்களின் கூட்டங்களுக்கிடையே அம்பு போல் பாய்ந்து சென்றது. அவன் கரத்திலிருந்த நீண்ட மென்மையான வாள், மின்னல் வேகத்தில் ஏதோ நெளிந்து வரும் சர்ப்பம் போல் கனவேகத்தில் சுழன்றது. அது பட்ட இடங்களிலெல்லாம் வீரர்கள் பட்டென்று சாய்ந்தனர். வாளைச் சுழற்றுவதிலும் கலை இருக்கிறது. அதிலும் மென்மையான ஒரு தன்மை இருக்கிறது. அதிலும் அரையன் ராஜராஜன் நிரூபித்தான் அன்றையப் போரிலே. வாள் தடால் தடாலென்று பாய்வதைவிட எப்படி வாழைப் பழத்தில் செருகுவது போல, அதை மனித உடலில் செருகி ஆவியைக் குடிக்கச் செய்யலாம் என்பதைக் காட்டினான் அரையன் ராஜராஜன். அவன் நுழைந்த தெற்கு வாசலில் இருந்த மாசுணி வீரர்களின் அணிவகுப்பு கண்ணிமைக்கும் நேரத்தில் கலைக்கப் பட்டது. உள்ளே நுழைந்த அவன் படைப் பிரிவு அவன் செய்த சைகையை யொட்டித் திடீரென்று இரண்டாகப் பிரிந்து தெற்கு வாயிலின் மாசுணிப் படையை வளைத்துக் கொள்ளவே எதிரிகளின் நிலைமை மிக அபாயமான கதிக்கு வந்து விட்டது.

பிரும்ம மாராயரின் படையுடன் போர் செய்து கொண்டே சற்றுப் பின்னால் திரும்பி நோக்கிய பிரதாபருத்திரன், தான் பேராபத்தில் சிக்கிவிட்டதை உணர்ந்தான். உள்ளே நுழைந்த சில விநாடிகளுக்குள்ளாகவே, அரையன் ராஜராஜன் படைப் பிரிவு நாகர்களில் பெருவாரியான பேர்களை வெட்டி வீழ்த்தி விட்டதையும், தன்னை நோக்கிப் பின்புறத்தில் அரையன் ராஜராஜன் நெருங்குவதையும் கண்டான். பிரும்ம மாராயருக்கும் அரையன் ராஜராஜனுக்கும் இடையில் தான் சிக்கிவிட்டால் தனக்குக் கதிமோட்சம் கிடையாதென்பதையும் புரிந்து கொண்ட பிரதாபருத்திரன், திடீரெனத் தன் படைகளைச் சிறிது பின்னுக்கு நகரும்படி செய்து, ஒரே முகமாக எதிரிகளைச் சமாளிக்க எண்ணி, அதற்கேற்பத் தன் வாளை உயர்த்தி இருமுறை சைகை செய்தான். அந்த எண்ணத்திலும் மண் விழுந்தது.

அவன் சைகை செய்து படைகளைப் பின்னுக்கு வாங்க முயன்ற தருணத்தில், மேற்கு வாசல் கதவுகளை

குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டால் கை நோகிறது. அதைக் கீழே இறக்கி விட்டால் மனம் நோகிறது.

—பொலீவியப் பழமொழி

—உஷா கிருஷ்ணமூர்த்தி



''என்னோட சைக்கிள்ல வேகத்தடை இருக்கு.''

''எப்படி?''

''வேகமாப் போனால் சைக்கிள் செயின் தானே கழண்டுக்கும்.''

—கிங்லி

உடைத்துக் கொண்டு செங்கமலச் செல்வி தனது ரதங்களுடனும் காலாட் படைகளுடனும் உள்ளே புகுந்தாள். சக்கரக் கோட்டத்தின் மேற்கு வாயில் வழியாக ரதங்கள் பாய்ந்து வந்தன. அவற்றுக்குப் பக்கவாட்டில் வந்த போர் யானைகள் பயங்கரமான கூச்சலிட்டுப் பலரை மிதித்தன. பலரை புரவிகளி லிருந்து தூக்கி ஆகாயத்தில் விட்டெறிந் தன. இன்னும் சிலரைப் பக்கவாட்டுச் சுவர்களில் மோதி, தலையை உடைத் தன. செங்கமலச் செல்வியிடமிருந்த வில்லவர்களும் ரத வீரர்களும் அரையன் ராஜராஜன் படைப் பிரிவோடு இணைந் தனர்.

இத்தனைக்கும் சளைக்காமலே பிரதாபருத்திரன் போரிட்டான். இந்த மாதிரிப் போர் முறைகள் பலவற்றை ஆயுள் முழுவதும் கண்டுள்ள அரையன் ராஜராஜன், செங்கமலச் செல்வியின் படையைக் கோட்டைக்குள் நன்றாகப் புகவிட்டு எதிரி அணிவகுப்பை மீண்டும் உடைத்துவிடவே, பிரதாபருத்திரன் படைகள் கலைந்து கலைந்து சிறுசிறு கூட்டங்களாகப் பிரிந்து நின்றே போரிட் டன.

போர் அரை ஜாம நேரம்தான் நடந்தது. ஆனால் எத்தனை உக்கிர மான போர்! நாகர்கள்தான் எத்தனை வீராவேசத்துடன் போர் புரிந்தார்கள்! அந்தப் பிரும்ம மாராயரென்ன அந்தணனா! அரக்கனா! அதென்ன கோரச் சிரிப்பு! கோரக் கூச்சல்! அவர் கையிலிருந்தது வாளா, அல்லது கும்பகர்ணன் தண்டாயுதமா!

சக்கரக் கோட்டத்தின் போர் பிரமிக்கும்படியான போர்! சோழர்கள் போர்த் தந்திரம், வீரம், இத்தனைக்கும் பெரும் சோதனையாக வந்த போர்! அந்தச் சோதனையில் சோழர்கள் அடைந்த வெற்றி, சரித்திரத்திலும் பொறிக்கப்பட்டிருப்பதில் விந்தை யென்ன இருக்கிறது!

அரை ஜாமத்தில் ஒரு மாபெரும் கோட்டையின் வீழ்ச்சியென் றால், அது சாமானிய சாதனையா? ஒட்டர நாட்டின் பேரரணாக நின்ற நாகர்களின் வீழ்ச்சியென்றால் அது சாமானிய வெற்றியா? அந்தப் பெரு வெற்றியை அன்று ஸ்தாபித்தான் விக்கிரமச் சோழிய வரையனான அரையன் ராஜராஜன். வீரர்களின் சேதம் அதிகமில்லாமலும், எதிரிகளை யும் அவசியமான அளவுக்கு மேல் நாசம் செய்யாமலும் படைகளைத் திறமை யுடன் அணிவகுத்து நடத்தியதால், அன்று கங்கைப் பயணத்தைத் தடுத்து நின்ற முக்கியமான பெரும் சுவரை இடித்துத் தள்ளிவிட்டான், சோழர் களின் மாபெரும் தலைவன்.

போர் முடிவதற்கும், இரவின் மூன்றாம் ஜாமம் தொடங்குவதற்கும் சரியாயிருந்தது. போரை நிறுத்திக் கடைசியாகக் கத்தியை உறைக்குள் போட்ட சோழர் படைத் தலைவன், காயமடைந்த வீரர்களைப் பாசறைக்குக் கொண்டு போய்ச் சிகிச்சை செய்யவும், தோல்வியடைந்த எதிரி வீரர்களைக் காவலில் வைக்கவும் உத்தரவிட்டான். இந்த வெற்றிக்குக் காரண புருஷர்களில் முக்கியஸ்தனான கரிகாலனையும் அவன் சகாக்களையும் விடுவித்து அழைத்து வருமாறும் கூறினான். எதிரிகளுக்கும் கருணை காட்டும் பெரும் வள்ளல் என்ற பிரசித்தி பெற்ற விக்கிரமச் சோழிய வரையன் இந்த உத்தரவுகளை இட்டதோடு நிற்காமல் போரில் பெரும் காயமுற்று வீழ்ந்த பிரதாபருத்திரனை

## பெயரை மாற்றிக் கொண்டேன்

கே. எஸ். கோபாலகிருஷ்ணன் இயக்கும் ஒரு படத்தில் நடித்து வரும் இவரை, நடிகர் செந்தாமரை நியூமராலஜி கணக்குப் பார்த்து மேகலா ஆக்கி விட்டார். அசல் பெயர் பத்மினி. 'சினிமாவில் இன்னொரு மேகலா இருந்தாலும் இந்தப் பெயர் மாற்றம் உனக்கு நிறைய வாய்ப்புக்களைத் தேடித் தரும்,' என்றாராம், செந்தாமரை.

—வதன்

அவனது மாளிகைக்குக் கொண்டு போய்த் தனது சொந்த வைத்தியரைக் கொண்டே சிகிச்சையும் செய்ய லானான்.

அந்தப் பயங்கர இரவின் நான்காவது ஜாமத்தில் சில சோழ வீரர்களின் காவற் கோஷங்களைத் தவிர, வேறெவ்விதக் கூச்சல்களுமில்லா மல் மீண்டும் அமைதியைப் பெற்றது சக்கரக் கோட்டம். காலையில் வந்து கவிந்து கொள்ளும் கழுகுக் கூட்டங்களி லிருந்து கோட்டையைக் காப்பாற்ற, பிணங்கள் வாரியெடுக்கப்பட்டு வண்டி களில் போட்டுக் கோட்டைக்கு வெளியே மேற்றிசையிலிருந்த காட்டு முகப்பில் குவிக்கப்பட்டன. முதல் இரண்டு ஜாமங் களில் மூடிக் கிடந்த கோட்டையின் பெரும் கதவுகள் நான்காவது ஜாமத்தில் திறந்தே கிடந்தன. அந்த வாயில் களுக்குள்ளே நுழைந்த 'உஸ்' என்ற தென்றல், பெரும் தொந்தரவு ஒரு வழியாகத் தீர்ந்ததற்காக ஆயாசப் பெருமூச்சு விடுவது போன்ற பிரமையை ஏற்படுத்தியது.

அதே சமயத்தில், பிரதா பருத்திரன், தனது மாளிகையிலே, மலர்ப் பஞ்சணையிலே, மார்பு எழுந்து எழுந்து தாழ, இதயத்தின் வெகு அருகே பாய்ந்திருந்த பிரும்ம மாராயரின் வேலின் காயம் குருதியை இடைவிடாது கிளப்பிக் கொண்டிருக்கப் படுத்துக் கொண்டிருந்தான். அவன் காயத்தைப் பரிசோதித்துக் கலுவத்தில் மருந்தை அரைத்துப் போட்ட வைத்தியர், 'இனி பயனில்லை' என்பதற்கு அறிகுறியாக உதட்டைப் பிதுக்கினார்.

அதைப் பிரதாபருத்திரனுக்குப் பக்கத்தில் நின்றிருந்த அரையன் ராஜராஜன், கரிகாலன், பிரும்ம மாராயர் ஆகியவர் மட்டுமல்ல, பிரதாப ருத்திரனும் கவனித்தான். ஆனால், அந்த வீரன் முகத்தில் பயச் சாயை படருவதற்குப் பதிலாகப் புன்முறுவலே படர்ந்தது. பேசக் கஷ்டமாயிருந்ததால் கரிகாலனை அருகில் வரும்படி கையால் ஜாடை காட்டினான். அருகில் நெருங்கிய கரிகாலனைப் பஞ்சணையில் வைத்துக் கொண்ட பிரதாபருத்திரன் மெல்ல உதடுகளைத் திறந்து, ''என்னை வஞ்சித்து விட்டாயே, கரிகாலா!'' என்றான்.

மரணப் படுக்கையிலிருந்த அந்த மாவீரனுடைய நிலையைக் கண்ட தும், கரிகாலன் இதயமும் கரைந்தது. ''என்ன செய்வது மன்னவா? என் கடமை தங்களை வஞ்சிக்கத் தூண்டி யது. சோழப் பேரரசின் பிற்காலம், பெருமை, விஸ்தரிப்பு எல்லாமே அந்த வஞ்சனையின் அவசியத்தை வலி யுறுத்தின,'' என்றான்.

''இருந்தாலும், நான் உன்னை வஞ்சிக்கப் போவதில்லை. தலையைச் சாய்,'' என்று தீனக் குரலில் சொன்ன பிரதாபருத்திரன் உதடுகளுக்காகத் தலையைத் தாழ்த்தினான் கரிகாலன். அடுத்த கணம், பிரதாபருத்திரன் வெற்றிப் பார்வையொன்று அரையன் ராஜராஜன்மீது நிலைத்தது. அதைத் தொடர்ந்து, சில வார்த்தைகள் கரிகாலன் காதில் ஓதப்பட்டன.

அரையன் ராஜராஜன் உண்மையை உணர்ந்து திக்பிரமை யடைந்தான். நாகர் படைத் தலைவன் தன் மரண நேரத்தில் சோழப் பேரரசைக் கலக்கவல்ல ஆலகால விஷத் தைக் கக்கிவிட்டானே என்ற நினைப்பு அரையன் ராஜராஜனை அசையவொட்டாமல் அடித்து விட்டது. அப்படி நின்ற அரையன் ராஜராஜன்மீது பிரமிப்பும் குழப்பமும் கலந்து நின்ற கரிகாலன் பார்வையொன்று பதிந்தது. 'சரி, குடி கெட்டு விட்டது! பேரிடி சோழப் பேரரசின் மீது இறங்கி விட்டது!' என்று தீர்மானித்துக் கொண்டான் அரையன் ராஜராஜன்.

(தொடரும்)






## 58. என் அன்னை எங்கே?

இறக்கும் தருவாயில் நாகர்கள் தலைவன், எத்தனையோ வருஷங்களாகப் புதைந்து கிடந்த மாபெரும் மர்மத்தை உடைத்துவிட்டு, சக்கர கோட்டத்தின் வீழ்ச்சிக்குப் பழி வாங்குவதற்காகச் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்கே அடிகோலி விட்டானே என்ற நினைப்பால், எந்தச் சந்தர்ப்பத்திலும் கவலையைக் காட்டாத அரையன் ராஜராஜன் முகத்திலும் சொல்லவொண்ணாக் கவலை படர்ந்து நின்றது. அத்துடன் அந்த மர்மத்தைப் புரிந்து கொண்டதற்கு அடையாளமாகக் கரிகாலனிடமிருந்து கிளம்பிய பார்வையும் அந்தக் கவலையை ஆயிரம் மடங்கு அதிகமாக்கிவிடவே, பெரும் குழப்பத்துக்கும் உள்ளானான், சோழர்களின் பிரதான படைத்தலைவன். பிரமிப்பும், குழப்பமும், பரிதாபமும் கலந்து திரும்பிய கரிகாலன் கண்களில் கேள்விகளும் ஏராளமாகத் தொக்கி நின்றதையும், அந்தக் கேள்விகளுக்கெல்லாம் அடுத்த சில வினாடிகளில் தான் பதில் சொல்ல நேரிடுமென்பதையும் உணர்ந்த அரையன் ராஜராஜனுக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. அந்தத் தருணத்தில். 'எந்த ரகசியத்தைப் பாதுகாக்க ஆயுளெல்லாம் சிரமப்பட்டேனோ, எந்த ஒரு ரகசியம் வெளியானால் சோழ நாட்டின் எதிரிகளுக்குப் பெரும் குதூகலம் உண்டாகுமோ, அந்த ரகசியம் சோழப் பேரரசுக்கு மாபெரும் கீர்த்தியை அளிக்க வல்ல இந்தப் படையெடுப்பின் போது, அதுவும் மாசுணர்களின் மாபெரும் தோல்வியின் போதுதானா ஏற்பட வேண்டும்?' என்று உள்ளூர ஓடிய எண்ணங்களால் கவலை தோய்ந்த மூச்சும் விட்டான் அரையன் ராஜராஜன்.

பிரதாபருத்திரன் சயன அறையில் நடந்த நாடகமனைத்தையும் பிரும்மமாராயரும் கவனிக்கத்தான் செய்தார். மரணப் பெருமூச்சுடன் ஏதோ சில வார்த்தைகளைப் பிரதாபருத்திரன் கரிகாலனின் காதில் முணுமுணுத்தது, அந்த முணுமுணுப்புக்குப் பின் வெற்றி முழங்கிய பார்வையை அவன் அரையன் ராஜராஜன்மீது திருப்பிவிட்டுத் தலையைச் சாய்த்தது, அதற்குப் பிறகு ஏதோ பெரிய விஷயத்தைப் புரிந்துகொண்டவன் போலக் கரிகாலன் சோழர் படைத் தலைவனைப் பார்த்தது, அந்தப் பார்வையின் விளைவாக அரையன் ராஜராஜன் ஆழ்ந்த கவலையால் பீடிக்கப்பட்டது, அத்தனை விவரங்களும் பிரும்மமாராயரின் கண்களில் ஒன்றுகூட விடாமல் பட்டாலும், பிரதாபருத்திரன் அப்பேர்ப்பட்ட என்ன மர்மத்தைச் சொல்லியிருப்பான் என்பதைப் புரிந்து கொள்ளச் சக்தியற்றவராய் அரையன் ராஜராஜனை நோக்கி, ''படைத்தலைவர் ஏதோ கவலையில் ஆழ்ந்திருப்பதாகத் தோன்றுகிறது,'' என்று புதிதாக ஜோஸ்யம் சொல்பவர் போல் பேசினார்.

சோழர்களின் பிரதான படைத் தலைவன், அவர் கேள்விக்கு எந்தவிதப் பதிலையும் சொல்லாமல், தனக்குச் சற்றுத் தூரத்தில் நின்றிருந்த உபதளபதியை அழைத்து, ''சக்கரக் கோட்டத்துத் தலைவனுக்கு ஒரு சக்கரவர்த்திக்குரிய மரியாதைகளுடன் தகனம் நடக்கட்டும்! நானும் கரிகாலனும் என் மகளும் தங்குவதற்குப் பக்கத்து

—சாண்டில்யன்—



மாளிகையைச் சித்தம் செய். பிரம்மமாராயரும் இதர உபதளபதிகளும் கோட்டையின் தெற்கு வாசலை அணைத்து நிற்கும் பாசறைகளில் தங்குவார்கள்,'' என்று படபடவென உத்தரவுகளைப் பிறப்பித்துவிட்டு, ''கரிகாலா! என்னுடன் வா,'' என்று கூறி, அந்த அறையைவிட்டு விடுவிடுவென்று வெளியே நடந்தான். அரையன் ராஜராஜன் ஆணையிட்டுச் சென்ற வேகத்தைக் கண்ட பிரும்மமாராயர்,, அத்தனை படபடப்புக்குக் காரணம் பிரதாபருத்திரன் வார்த்தைகளே என்பதை உணர்ந்து கொண்டார். ஆகையால், சற்று நேரம் பிரமித்து நின்றாலும் கடைசியாகச் சமாளித்துக் கொண்டு அறைறை விட்டு வெளியேறினார்.

கரிகாலன் மட்டும் பிரதாபருத்திரன் மலரணைக்குப் பக்கத்தில் பிரமித்து நின்று கொண்டிருந்தான். அவன் மனத்திலே பிறப்பு மர்மத்தை அறிந்ததாலுண்டான மகிழ்ச்சியும், அதன் விளைவாக அரையன் ராஜராஜன் பேச்சிலே ஏற்பட்ட மாறுதலால் உண்டான வருத்தமும் கலந்து அலைமோதி நின்றன. பிறப்பு மர்மத்தை அறியும் எண்ணத்துடன் சூடாமணி விஹாரத்திலிருந்து புறப் பட்டு எந்தெந்த இடத்திற்கோ சென்று, கடைசியாக இந்த யுத்தச் சூழ்நிலையில் எதிர்பாராத ஒருவன் மூலமாகத் தன் பிறப்பு மர்மத்தை உடைத்த விதியின் விசித்திர விளையாட்டை எண்ணி வியந்தது அவன் உள்ளம். அந்த வியப்பு, அந்த உண்மையை அறிந்ததால் ஏற் பட்ட அதிர்ச்சியின் விளைவாக ஏற்பட்ட பிரமிப்பு, இரண்டையும் பிரதிபலித்து நின்ற அவன் முகத்தைப் பார்த்துத் தானோ என்னவோ சவமாகக் கிடந்த பிரதாபருத்திரன் கடையிதழ்களில் ஒரு வெற்றிச் சிரிப்பு நிலைத்துக் கிடந்தது. கரிகாலன் உயிரற்ற எதிரியின் சடலத்தைக் கூர்ந்து கவனித்தான். பிரதாபருத்திரன் ஏதோ முழு அமைதி யுடன் உறங்குவதாக அவனுக்குப் பட்டதே யொழிய மரணக்களை எதுவுமே அந்த முகத்தில் இல்லை.

மின்சார ரயிலில் தன் கறுப்புக் கோட்டைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்ட நண்பரிடம், ''புழுக்கமா?'' என்றேன். ''அதெல்லாம் இல்லை. என் கறுப்புக் கோட்டைப் பார்த்து என்னை டிக்கெட் பரிசோதகர் என்று எண்ணி நாலைந்து பேர் இறங்கி விட்டார்கள். அதனால்தான்,'' என்றார் நண்பர்.

# கோட்டைத் தாண்டி ஓடுகிறார்கள்

—விஜயபாஸ்கரன்

தோல்வியிலும் பெரும் காரியத்தைச் சாதித்து விட்டதற்கான வெற்றிக் களையே கம்பீரமான அந்த முகத்தில் தெரிந்தது, கட்டுப்படுத்திய பிரமாணத்தை உடைத்து விட்டதில் பெரும் பெருமையே அடைந்தவனாகத் தோன்றினான் அந்த மாவீரன், உயிரற்ற அந்த நிலையிலும்.

கடந்த கால நிகழ்ச்சிகளைப் பற்றி அந்தச் சவம்கூட ஆயிரம் கதைகளைச் சொல்வதுபோல் தோன்றியது கரிகாலனுக்கு! பிரதாபருத்திரன் விளக்கிய மர்மத்தால் தன் வாழ்வு எந்த நிலைக்கு உயர்ந்து விட்டதென்பதைக் கரிகாலன் சந்தேகமற உணர்ந்து கொண்டானானாலும், அந்த உயர்ந்த நிலைக்குத் தன்னை அழைத்துச் செல்லப் பெரும் சாட்சியங்கள் தேவையென்பதையும் அறிந்து கொண்டானாகையால், தன் குழப்பமான நிலையிலிருந்து தன்னைச் சற்றே விடுவித்துக் கொண்டு, அறையைவிட்டு வெளியே சென்றான்.

பிரதாபருத்திரன் மாளிகையில் பல கட்டுக்களைக் கடந்து வாயிலை அணுகிய கரிகாலன், தனக்காகக் காத்திராமல் சோழர்களின் படைத் தலைவன் கோட்டையைச் சுற்றிப் பார்க்கச் சென்று விட்டதாகக் கேள்விப்பட்டதும், அவன் சென்ற திக்கை விசாரித்துக் கொண்டு அந்த மார்க்கத்தில் வேகமாக நடந்து சென்றான். கோட்டையின் கிழக்கு வாயிலை நோக்கி நிதானமாக நடந்து சென்று கொண்டிருந்த அரையன் ராஜராஜனைத் தூரத்திலிருந்து கவனித்த கரிகாலன், வெகு சீக்கிரத்தில் அவனை அணுகி ஏதும் பேசாமல் பின்னால் நடந்தான். சுமார் ஒரு ஜாமத்திற்கு மேல் இருவரும் கோட்டைப் பகுதிகளைச் சுற்றினார்கள். கிழக்கு, தெற்கு, மேற்கு வாயில்களில் எங்கெங்கு எந்தெந்தப் படைகள் தங்க வேண்டியது, படைகளின் எப்பிரிவுகள் கோட்டைக்கு வெளியேயிருந்த கூடாரங்களில் தங்க வேண்டியது என்பதையெல்லாம் நிர்ணயித்து, ஆங்காங்கிருந்த உபதளபதிகளுக்கு உத்தரவுகள் போட்டுக் கொண்டே வந்தான், அரையன் ராஜராஜன்.

எத்தனையோ எண்ணங்கள் உள்ளத்தில் ஊசலாடிய அந்த நிலையிலும், அரையன் ராஜராஜனிடமிருந்து தான் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றனவென்பதைக் கரிகாலன் கண்டான். போர் முறையை எத்தனை சாமர்த்தியமாக மாற்றியமைத்துச் சோழர் படைத் தலைவன் சக்கரக் கோட்டத்தில் வெற்றி கண்டான் என்பதைத் தன்னை விடுதலை செய்ய வந்த உபதளபதிகளிடமிருந்து ஏற்கனவே அறிந்து கொண்டு, அதனால் அரையன் ராஜராஜனிடம் பெரும் மதிப்புக் கொண்டிருந்த கரிகாலனுக்குப் போருக்குப் பின் அவன் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் ஆச்சரியத்தை விளைவித்தன. சக்கரக் கோட்டத்தின் கோட்டையைச் சித்தம் செய்யவும், சிக்கிய எதிரிகளைக் காவல் புரியவும், எதிரிப் படையினர் தாங்கள் அயர்ந்திருக்கும்போது கலகம் செய்யாதிருக்கவும் அரையன் ராஜராஜன் செய்த ஏற்பாடுகளைக் கவனித்த கரிகாலன், போரின் வெற்றியைவிட வெற்றியைக் காப்பாற்றுவதற்கு எத்தனை எத்தனை ஏற்பாடுகள் தேவை என்பதைத் தெரிந்து கொண்டான். அந்த அறிவு அவனுக்கு அரையன் ராஜராஜனிடம் மேலும்

மேலும் பக்தியை உண்டாக்கவே, எத்தனையோ சாத்திரங்களைத் தான் கற்றிருந்தாலும், தான் கற்றது கைம் மண்ணளவே என்பதைப் புரிந்து கொண்ட கரிகாலன், அடுத்த ஜாமம் முழுவதும் அரையன் ராஜராஜனுடன் மௌனமாகவே சுற்றினான்.

நான்காவது ஜாமம் முடிந்தது. இரவின் கோர இருளைக் கிழித்துக் கொண்டு பொழுதும் புலர்ந்தது. தன் வம்சம் அடைந்த வெற்றியைக் கண்டு குதூகலிப்பவன் போல் சூரியனும் உதய மாகித் தன் செங்கதிர்களைச் சக்கரக் கோட்டத்தின் உப்பரிகைக்ள் மீது வீசினான். ஆம், இருள் கிழிந்தது. கரிகாலன் வாழ்க்கையைச் சூழ்ந்திருந்த மர்ம இருளும் கிழிந்தது! ஆனால் அந்த இருள் கிழிந்ததும், அரையன் ராஜ ராஜன் உள்ளத்திலே இருள் சூழ்ந்து விட்டதே! வாழ்க்கையே பூமியின் மண்ணைப் போல்தானா? ஓர் இடத்தி லிருந்து மண்ணை வெட்டினால் இன்னோர் இடத்தில்தானே அதைப் போட வேண்டும்? விசுவத்தில் பொருள்கள் அழிவதில்லை. ஓர் இடத்தி லிருந்து அகன்றால், இன்னோர் இடத் தில் அவை குவியத்தான் செய்யும். அழிவு என்று நாம் கருதுவதற்கு நம் அறிவீனமே காரணம். ஆண்டவன் சிருஷ்டியில் எதுவுமே அழிவதில்லை. உணர்ச்சிகளுக்குக்கூட இந்த விதிதான். ஒருவன் மகிழ்ச்சி இன்னொருவனுக்குத் துன்பம். ஒருவன் வெற்றி இன்னொரு வனுக்குத் தோல்வி. இந்த நியதியி லிருந்து யாரும் தப்பமுடியாது. என்பதை அரையன் ராஜராஜன் சந்தேக மற அன்று உணர்ந்தான்.

அந்த உணர்வால், அன்று முழுவதும் அவனுக்கு உணவுகூடச் சரியாகச் செல்லவில்லை. எந்தச் சோழ ராஜ்யத்திற்காகத் தன் வாழ்வின் அணைத்தையும் அர்ப்பணித்துப் பல போர்களில் வெற்றி கண்டானோ, அந்தச் சாம்ராஜ்யமே படுகுழியில் விழும் ஸ்திதியிலிருப்பதை அறிந்த அரையன் ராஜராஜன், கரிகாலனை அன்று முழுவதும் காணவோ பேசவோ மறுத் தான். ஆனால் எத்தனை நேரம் அந்தச் சந்திப்பை ஒத்திப் போட முடியும்? அன்று மாலை நேரத்தில் கரிகாலன் எந்தவித அறிவிப்புமின்றி அவன் மாளிகை அறையிலேயே நுழைந்தான். சிந்தனையில் ஆழ்ந்திருந்த சோழர் படைத் தலைவனின் கண்களும் கரிகாலனை நோக்கி எழுந்தன.

அரையன் ராஜராஜனை அப்பொழுது நோக்கிய கரிகாலன் கண் களில் எந்தவிதக் குழப்பமும் இல்லை. சிறிதும் சலனமில்லாத கூரிய கண்கள் தன்மீது நிலைப்படுவதைக் கண்ட அரையன் ராஜராஜன், 'கரிகாலன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி விட்டான்,' என்று உணர்ந்து கொண்டு, 'இத்தகைய ஒரு சிறுவனுக்கு எதிரில் நான் உணர்ச்சிகளைச் சிதற விடுவதா?' என்ற எண்ணத்தினால், கம்பீரத் துடனும் உறுதியுடனும் கரிகாலனை ஏறிட்டுப் பார்த்து, ''என்ன கரிகாலா, என்ன விசேஷம்?'' என்று ஏதுமறியாத வனைப் போல் விசாரித்தான்.

ஈரப்பசை அடியோடு இல்லாத வரட்டுச் சொற்கள் கரிகாலன் உதடுகளி லிருந்து உதிர்ந்தன. ''விசேஷத்தை நீங்களே அறிவீர்கள் தந்தையே!'' என்றான் கரிகாலன்.

இந்தப் பதில் அரையன் ராஜராஜனுடைய உறுதியை இன்னும் அதிகமாக இறுக்கவே, அவன் ஆச னத்தை விட்டு எழுந்து, எதிரே




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு

இருந்த சாளரத்தை நோக்கிச் சென்று வெளியே எதையோ எட்டிப் பார்த்துக் கொண்டே, ''ஆம் கரிகாலா! அறிவேன்!'' என்று சொன்னான்.

''அறிந்தால் அதைப் பற்றி எனக்கு விளக்கம் தர வேண்டியது தங்கள் கடமையில்லையா?'' என்று கேட்டான் கரிகாலன்.

அரையன் ராஜராஜன் ஏதோ மின்னலால் தாக்கப்பட்டவன் போல் சட்டென்று திரும்பினான். ''இல்லை. அது என் கடமையில்லை,'' என்று திட்டமாகவும் கூறினான்.

கரிகாலன் புருவங்கள் ஆச்சரியத்தால் சற்றே உயர்ந்தன. ''என்ன, உங்கள் கடமையில்லையா? நீங்கள் என் வளர்ப்புத் தந்தைதானே?'' என்று கரிகாலன் வினவினான்.

''ஆம்!'' உடனே வந்தது அரையன் ராஜராஜன் பதில்.

''என் தாய் தந்தையர் உங்களிடம்தானே என்னை ஒப்படைத்தார்கள்?''

''ஆமாம்.''

''என் வாழ்வின் பிற்காலம், என் அந்தஸ்து, நலம் எல்லாவற்றையும் தங்களிடம்தானே ஒப்படைத்தார்கள்?''

''ஆமாம்.''

''அப்படியானால், என் நலத்தைப் பாதிக்கக்கூடிய நடவடிக்கைகளை எடுக்க உங்களுக்கு உரிமையளித்தது யார்? என்னை ஏன் சூடாமணி விஹாரத்துக்கு அனுப்பி வைத்தீர்கள்? என் பிறப்பின் உண்மையை ஏன் ஒளித்தீர்கள்? இதனால் உங்களுக்கு ஏற்பட்ட லாபமென்ன? உயர்ந்த குடியில் பிறந்தும் உத்தமமான தாய் தந்தையர் வயிற்றில் ஜனித்தும் நான் அநாதையாக, புத்த பிக்ஷுக்களிடம் துறவிகளோடு துறவியாக வாழும் நிலையை ஏற்படுத்தி வைத்தீர்களே, அது எந்த நியாயத்தில் சேர்ந்தது?'' என்று படபடப்புடன் கேட்டான் கரிகாலன்.

''அரசியல் நியாயத்தில் சேர்ந்தது.''

''எனக்கு விளங்கவில்லை தந்தையே.''

''விளங்காதிருக்கும் வரையில் உனக்கும் நல்லது. எனக்கும் நல்லது மகனே! ஏன் சோழ நாட்டுக்கே நல்லது. எந்த ரகசியத்தை என் இதயத்திலே பூட்டி வைத்தே நான் இறக்க நினைத்தேனோ அந்த ரகசியத்தை, இன்று பிரதாபருத்திரன் வெளிப்படுத்தி விட்டான். அதை அறிந்து கொண்டதோடு திருப்தியடைந்து விடு. மேற்கொண்டு எந்தக் கேள்வியையும் கேட்காதே,'' என்று திட்டமாய்ப் பதில் கூறினான் அரையன் ராஜராஜன்.

ஆனால் கரிகாலன் சிறிதும் தயங்காமல் கேட்டான்: ''ஏன் கேட்கக் கூடாது? நீங்கள் ஏன் சொல்லக் கூடாது?'' என்று.

''பெரும் பிரமாணம் என்னைக் கட்டுப்படுத்துகிறது.''

''பிரமாணம்! பிரமாணம்! எல்லோரிடமும் ஒரே பிரமாணம், அந்தப் பிரமாணத்திற்குக் காரணம் யார்?''

அரையன் ராஜராஜன் பரிதாபம் துளிக்கும் விழிகளைக் கரிகாலன் மீது நாட்டினான். ''சொல்லட்டுமா கரிகாலா?'' என்ற வார்த்தைகள் மிக மெதுவாக வெளி வந்தன.




வித்தியாசங்கள் உள்ளன. விடை: 69'ம் பக்கம்

''சொல்லுங்கள்.''

சொன்னான் அரையன் ராஜராஜன். அவன் வாயிலிருந்து உதிர்ந்தவை சொற்களல்ல; பெரும் இடிகள் அவை. ''உன் தந்தை. என்னையும் சிலரையும் பிரமாணத்திற்குக் கட்டுப்படுத்தியது உன் தந்தைதான்!'' என்று அரையன் ராஜராஜன் பதிலைக் கேட்டுத் திக்பிரமை அடைந்த கரிகாலன் நீண்ட நேரம் கற்சிலை போல் நின்றான். பிறகு தடுமாறிய குரலில் வெளிவந்தன அவனிடமிருந்து சொற்கள். ''என் தந்தை! என் தந்தை! அவரா என்னைப் படுகுழியில் தள்ளப் பார்த்தார்? அவரா என்னை அநாதையாக வாழவைக்க இஷ்டப்பட்டார்? அவரா என்னைத் துறவியாக்கத் திட்டம் போட்டார்! ஏன்? ஏன்? ஏன்?'' என்ற வார்த்தைகள் பெரும் தடுமாற்றத்துடன் உதிர்ந்தன.

அரையன் ராஜராஜனும் துக்கப் பெருமூச்செறிந்து விட்டுச் சொன்னான்: ''உன் தந்தை பெரிய தியாகி கரிகாலா! அவர் பெயர் சரித்திரத்தில் இடம் பெறாதிருக்கலாம். ஆனால், அவரது நண்பர்களின் இதயத்திலே அழியா இடம் பெற்றிருக்கிறது கரிகாலா! விதியின் விசித்திர வலை உன் குடும்பத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அதற்கு உட்பட்டவர் உன் தந்தைதான். அவருக்கு நாங்கள் கொடுத்த பிரமாணத்தை யாரும் உடைக்க முடியாது,'' என்று.

''அப்படியானால் எனக்குக் கதிமோட்சம் இல்லையா?''

''இருக்கிறது.''

''யாரிடம்? எவர் மூலம்?''

''உன் தாய் மூலம்.''

''என்ன! என் தாய் உயிரோடிருக்கிறாளா?'' என்று வினவிய கரிகாலனுக்கு, மூச்சே நின்று விடும் போலிருந்தது. உணர்ச்சிகள் மின்னல் வேகத்தில் அவன் உடலில் சுழன்றன.

''இருக்கிறாள்,'' என்றான் அரையன் ராஜராஜன்.

''எங்கேயவள்? எங்கேயவள்? எங்கே என் அன்னை?'' என்று துடிக்கும் உதடுகளுடன் கேட்டான், கரிகாலன்.

''காஞ்சிக்கருகில்.''

''காஞ்சிக்கருகிலா?''

''ஒரு கிராமத்தில்; தனி மாளிகையில்.'

''சிறையிருக்கிறாளா?''

''இல்லை; சுதந்திரத்துடன் இருக்கிறாள்.''

''அவளிடம் இதோ போகிறேன், தந்தையே!'' என்று திரும்பிய கரிகாலனை, ''நில் கரிகாலா! அவசரப்படாதே, உன் தாயைப் பார்ப்பது அவ்வளவு எளிதல்ல,'' என்றான் அரையன் ராஜராஜன்.

வியப்பினால் விகசித்த விழிகளை அரையன் ராஜராஜன் மீது திருப்பிய கரிகாலன் கேட்டான்: ''என்ன! தாயைப் பார்ப்பது மகனுக்கு எளிதல்லவா?'' என்று.

''ஆம் கரிகாலா! உனக்கு எளிதல்ல அது. இத்தனை வருஷங்களாக உன்னைப் பார்க்க இஷ்டப்படாத உன் தாய், இப்பொழுது பார்க்க இஷ்டப்படுகிறாளா என்பதை அறிய வேண்டும்,'' என்ற அரையன் ராஜராஜன் சொற்கள் ஒவ்வொன்றும் கரிகாலன் இதயத்திலே பல வேல்களைப் போல் பாய்ந்தன. அந்தக் குழந்தை முகத்தின் கருவிழிகளில் துன்ப நீர் துளித்தது.

''என் தாய் என்னைப் பார்க்க இஷ்டப்படவில்லையா, தந்தையே?'' என்றான் குரல் தழுதழுக்க.

''இல்லை மகனே, இஷ்டப்படவில்லை.''

''ஏன் தந்தையே?''

''உன் தந்தையைப் போல்,



எம்.எல்.ஏ.: பதவி போயிருச்சு. தோட்டத்திலே போய்க் கொஞ்சம் வேலை செய்யறேன்.

மனைவி: ராமாவரமா? போயஸா?

—ஜான் ஜட்ஸன்.

அவளும் ஒரு தியாகி, மகனே. பெரும் தியாகிகளால் பெரிய அரசுகள் நிலைக்கின்றன. உன் பெற்றோர்கள் இதுவரை மாநிலம் கண்டிராத இணையற்ற தியாகிகள். மேற்கொண்டு என்னை எதுவும் கேட்காதே. கங்கைப் போர் முடியட்டும்! பிறகு உன் தாயிடம் உன்னை நானே அழைத்துச் செல்கி றேன். அதுவரை பொறுத்திரு,'' என்று கூறிய அரையன் ராஜராஜன், அத்துடன் அந்தச் சம்பாஷணை முடிந்து விட்டதென்பதற்கு அறிகுறியாக வேறு பக்கம் திரும்பினான்.

அங்கிருந்து ஏதோ சொப்பனத் தில் நடப்பவன் போல் தனது அறைக்கு நடந்து சென்ற கரிகாலன், பஞ்சணை யிலே, உள்ளமெல்லாம் கவலை வாட்ட உடலெல்லாம் உணர்ச்சிகள் பாயப் படுத்துக் கிடந்தான். தாயைப் பற்றிய எண்ணங்களே அந்த இளைஞன் இதயத்திலே அலைபாய்ந்து நின்றன. 'தாயே! என்னை ஏன் பார்க்க மறுக்கிறாய்? குழந்தைப் பருவத்திலே என்னை அணைத்த உன் கரங்கள் இப்பொழுது என்னைத் தொடத் துடிக்க வில்லையா?'' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். சிந்தனை எங்கெங்கோ சென்றது; அவன் நீண்ட நேரம் தன்னிலை மறந்தான்.

பின்னாலிருந்து அவன் உடலை வளைத்த இரு மலர்க் கரங்கள் அவனை இந்த உலகுக்குக் கொண்டு வந்தன. சற்றே திரும்பினான். அடுத்த விநாடி செங்கமலச் செல்வியின் பூவுடலின் திண்மைத் தளத்திலே புதைந்தது அவன் மலர் முகம். அவள் கன்னம் அவன் தலையிலே சாய்ந்து கிடந்தது. சற்றே அவிழ்ந்திருந்த அவளது கரிய கூந்தல், அவன் முகம் பதிந்திருந்த பஞ்சணைக்குப் பக்கவாட்டில் திரை போட்டது. அவள் கரங்கள் அவனை இறுக அணைத்தன. புயலில் அலைந்த மரக்கலம், ஏதோ கரையைக் கண்டு விட்டதைப் போன்ற அமைதியில் பெருமூச்சு விட்டான் கரிகாலன். அவள் உடலில் சுகந்தம், எழிலம்சங்களின் அண்மை, இரண்டுமாக இணைந்து அவனை இந்தத் துன்ப உலகத்திலிருந்து இன்பத்தை அள்ளிக் கொட்டும் ஏதோ ஒரு கனவுலகத்துக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தன.

(தொடரும்)

# மன்னன் மகள்



## 59. வெள்ளமும் தோணியும்

காதலுக்குத் தனிச் சூழ்நிலை தேவையில்லை. வேண்டிய சூழ்நிலையை அதுவே சிருஷ்டித்துக் கொள்கிறது. ஆசையாற காற்றினால் மோகமாகிற அலைகள் உந்தப்படும் போது பருவ வேட்கையாகிற சமுத்திரம் பிரளயம் போல் பொங்கி எழுந்து, இதர சப்தங்கள், பிரதேசங்கள் எல்லாவற்றையுமே முழுக அடித்து, பிரத்யேகமாகத் தனக்கென ஒரு சாம்ராஜ்யத்தை அமைத்துக் கொள்கிறது. ஆண் பெண் உணர்ச்சிகள் மட்டுமே உறவாடக் கூடிய அந்த இன்ப சாம்ராஜ்யத்தில், வேறு சக்திகளுக்கு

சாண்டில்யன்

இடம் இருப்பதில்லை. அத்தகைய ஒரு சாம்ராஜ்யத்திலே சிக்கிக் கிடந்தாள் செங்கமலச் செல்வி. அவளுடைய இளமையின் சக்திகள் வீசிய இன்பக் கயிறுகள், கரிகாலனையும் கட்டியிழுத்து மெள்ள மெள்ள அந்தச் சாம்ராஜ்யத்துக்கே இழுத்துச் சென்று கொண்டிருந்தன.

மாலை முற்றி மையிருள் சூழ்ந்து இரவின் ஆதிக்கம் நன்றாக ஏறிவிட்டிருந்த சமயம் அது. அவள் அணைப்பிலே அவன். கிடந்த அந்த மாளிகைக்குப் புறம்பேயிருந்த சக்கரக் கோட்டப் பிரதேசத்தில், துயரமும் வெற்றிச் செருக்கும் கலந்த சூழ்நிலை பயங்கரத்தை எங்கும் பரப்பிக் கொண்டிருந்தது. ஈன்றெடுத்த புதல்வர்களை அன்றையப் போரிலே இழந்த தாய்மார்களும், கணவன்மார்களை இழந்து நூலறுந்து குங்குமமிழந்த மனைவிகளும், தந்தை இறந்து அனாதையாகிவிட்ட குழந்தைகளும் கிளப்பிய அழு குரல்கள், பற்பல வீதிகளிலிருந்தும் எழும்பிக் கொண்டிருந்தன. அந்த அலறல்களை அடக்க ஆணையிடுவன போல் கோட்டையருகே இருந்த கொட்டகைகளில் பிணைக்கப் பட்டிருந்த போர் யானைகள் பயங்கரமாகப் பிளிறின. அத்துடன் வெற்றியடைந்த சோழ வீரர்கள் புரவிகளின் மீது வீதிகளில் உலாவி அமைதியை நிலைநிறுத்த இட்டுக் கொண்டிருந்த உத்தரவுகளும், போர் முடிந்ததும் மூலை முடுக்குகளில் ஒளிந்து கொண்டுவிட்ட மாசுணி வீரர்களைப் பிடித்திழுத்துத் தள்ளிக் கொண்டு செல்ல சோழ உபதலைவர்கள் ஆணையிட்டதால் உண்டான பேரரவமும் கலந்து ஒலித்ததால், கோட்டைத் தளம் முழுவதிலும் இன்பமோ அமைதியோ மருந்துக்கும் இல்லாத சூழ்நிலையே மண்டிக் கிடந்தது.

துன்ப ஒலிகளும் வெற்றிக் கோஷங்களும் நிறைந்த அந்தச் சூழ்நிலை, கரிகாலன் படுத்துக் கிடந்த அந்த மாளிகை மீதும் மோதத்தான் செய்தது. கோட்டை தளத்தில் எழுந்த அழுகுரல்கள் கரிகாலன் பஞ்சணைக்கு அங்கேயிருந்த சாளரத்தையும் துளைத்துக் கொண்டு புகுந்தன. அப்படி உள்ளே புகுந்த போதிலும் செங்கமலச் செல்வியின் உணர்ச்சி அலைகள் சிருஷ்டித்துவிட்ட இன்ப சாம்ராஜ்யத்தின் பெரும் கோட்டைச் சுவர்களை அவற்றால் சிறிதும் உடைக்க முடியாததால், அந்த அரணுக்கு வெளியிலேயே அவை ஆட்சி புரிய வேண்டியதாயிற்று. அவள் கன்னக் கதுப்பு அவன் தலைமீது பதிந்திருந்ததால், பக்கவாட்டில் திரை போட்ட அவள் கரிய கூந்தல் அவன் முகத்துக்கு மட்டுமல்ல, வெளி உலகத்துக்கே பெரும் திரையைப் போட்டு விட்டது.

செங்கமலச் செல்வி அன்று

---

## பிஸ்மில்லா கானுக்குப் பிடித்த ராகம்

ஷெனாய் வித்வான் பிஸ்மில்லா கான் சொன்னார்:

தென்னிந்தியாவிற்குப் பலமுறை கச்சேரி செய்ய வந்திருக்கிறேன். பெங்களூர், சென்னை முதலிய இடங்களில் எனக்கு நிரம்ப ரசிகர்கள் இருக்கிறார்கள்.

புதுடில்லியில் 35 ஆண்டுகளுக்கு மேலாக தான்சேன் கலைவிழாவைச் சிறப்பாக நடத்தி வரும் என்.பி. சேஷாத்ரி சாகேப் என்னுடைய நெருங்கிய நண்பர்.

மெதுவடை என்றால் எனக்கு உயிர். ஒருமுறை மாஸ்கோவுக்குப் புறப்படுகிற நாளன்று சேஷாத்ரி குடும்பத்தாரிடம் மெதுவடையும் சாம்பாரும் கொண்டு வரச் சொல்லியிருந்தேன். அவர்களும் ஆசையோடு மெதுவடை தயாரித்து எனக்காக எடுத்து வந்திருந்தார்கள். ஆனால் அன்று எனக்கு வயிறு சரியில்லாததால் மெதுவடையைச் சாப்பிட முடியவில்லை

மாஸ்கோவிலிருந்து திரும்பி வந்ததும் சேஷாத்ரி வீட்டிற்குப் போன் செய்து, மெதுவடையை நினைவு படுத்தினேன். அவர்கள் வீட்டில் அன்றைக்கு எல்லோருக்குமே உபவாச தினமாம். அப்படியிருந்தும், மெதுவடைகளையும், சாம்பாரையும் எனக்காகத் தயாரித்துக் கொண்டு வந்தார்கள்.

—என். பி.

மலர்கள் ஏதும் அணியா விட்டாலும், தலைக்கு வாசனைத் தைலத்தைத் தடவி ஸ்நானம் செய்திருந்தாளாகையால், கோதிவிட்டு விரித்திருந்த அவள் கூந்தலி லிருந்து கிளம்பிய சுகந்தம், தாயின் நினைப்பால் துன்பக் கேணியில் நீந்திக் கொண்டிருந்த கரிகாலன் உள்ளத்துக்குப் பெரும் அமைதியை அளித்தது. அவள் மார்பிலே தவழ்ந்து கிடந்த பட்டுப் புடவை அவள் அழகிய தோளின் அசைவால் சற்றுத் தாழ்ந்து விலகியது காரணமாக உட்பக்கத்தில் பதிந்து கிடந்த தங்கச் சங்கிலியின் நவரத்தினப் பதக்கம் மட்டுமின்றி, அது உறவாடிக் கொண்டிருந்த இளமை பொங்கிய எழில் பிரதேசங்களும் பக்கவாட்டில் திரும்பிய அவன் கண்களுக்குப் புலனாகவே, அடியோடு சுய நிலை மறந்த கரிகாலன், தன் இடது கையை அவள் இடையைச் சுற்றி அலைய விட்டான்.

இனமறியாத இளங்கன்று பசும் புற்றரையைச் சுற்றி அலைவது போல் திரிந்த அவன் இடக்கரத்தின் ஸ்பரிசத்தால் அடக்க முடியாத உணர்ச்சிகளின் வசப்பட்ட செங்கமலச் செல்வி தன்னைத் திடப்படுத்திக் கொள்வதற்காக அவனது இன்னொரு கையின் விரல்களைத் தன் விரல்களோடு பின்னி இறுக்கிக் கொண்டாலும், அவன் விரல்கள் அங்கும் விவரிக்க இயலாத விந்தைகளை விளைவித்ததால், அவள் திடம் சுக்கு நூறாக உடைந்து உணர்ச்சி வெள்ளத்தை அவள் அழகிய உடலெங்கும் பரவவிடவே பஞ்சணையிலே துவண்டாள் அந்தப் பைங்கிளி.



அவள் முகம், அவன் தலையை விட்டுப் பக்கவாட்டில் சரிந்தது; கன்னம் கன்னத்தோடு இழைந்தது.

கமல மலரின் இதழ்களையும் பழிக்கும் அவள் செவ்விய இதழ்கள் ஏதேதோ இன்ப வார்த்தைகளை முணுமுணுத்தன.

அந்த அப்சரஸ் சிருஷ்டித்து விட்ட சுவர்க்கத்திலே திண்மையும் மென்மையும் கலந்த அவள் உடல் அளித்த ஸ்பரிசத்திலே, தேனூறும் அவள் உதடுகள் ஊட்டிவிட்ட இன்பப் போதையிலே சிக்கி, உணர்வெல்லாம் இழந்த கரிகாலன் மனம், சக்கரக் கோட்டத்திலிருந்து எங்கோ பறந்து சென்றது. செங்கமலச் செல்வியின் அந்த ஸ்பரிசத்திலே வேறோர் அழகின் ஸ்பரிசத்தை அனுபவிக்கத் தொடங்கினான் பௌத்த மடச் சீடன். அவன் மனம் சக்கரக் கோட்டத்தி லிருந்து வேறோர் இடத்துக்குப் பறந்து சென்றது. அவன் கண் முன்னே சாளுக்கியர்களின் பெரும் கோட்டையும் வசந்த மண்டபமும் எழுந்தன. வசந்த மண்டபத்தின் தோட்டத்தின் பகுதிகள் ஒவ்வொன்றும் அவன் மனக்கண் முன்னே தாண்டவமாடத் தொடங்கின. நந்தவனத்தின் மரங்களடர்ந்த அடர்த்தியான பகுதியும், அதன் இலைகளிலே புகுந்து தரையிலே கல்லிழைத்த வெண்மதியின் கிரணங்களும், அன்று தான் ஏற்படுவன போல் தோற்றமளித்தன. அதோ, நந்தனவத்தின் நடுவேயுள்ள பூம்பொழில்! அந்தத் தோகை மயிலென்ன அந்த இடத்திலேதான் படுத்துக் கிடக்குமா? வசந்த மண்டபத்தின் முகப்பிலே பூத்து மஞ்சள் வாய் காட்டிச் சிரிக்கும் அந்தச் சம்பங்கிப் பூங்கொத்து என்ன சிரஞ்சீவியா? இத்தனை நாள் கழித்தும் வாடவில்லையே அது! அதோ வசந்த மண்டபத்தின் உட்புற அறை! அந்தப் பஞ்சணையில் மன்னன் மகளே படுத்துக் கிடக்கிறாள்! இப்படிப் பலவாறாக எண்ணமிட்டு உள்ளூரப் பேசிய அவன் மனம், மன்னன் மகளின் வனப்புப் பிரதேசங்களைக் கண்டதும் வாயடைத்து நின்றது.

பழகிய தந்தத்தைப் பழிக்கும் வழவழப்பான நிரஞ்சனா தேவியின் உடல் பஞ்சணையிலே புரண்டது. அப்படிப் புரண்டதால் மறைந்தும் வெளிப்பட்டும் ஜாலம் காட்டிய அழகம்சங்கள் அவனைப் பார்த்து நகைத்தன. பஞ்சணையில் புரண்ட அந்தப் பேரழகி எழுந்தாள். லாவண்ய மெல்லாம் குலுங்க தெற்குப் புறச் சாளரத்தருகே சென்றாள், நின்றாள். அவனும் அவளை நெருங்கினான். மிகச் சமீபத்தில் நின்றான். அது என்ன, அவள் தலையிலிருந்த செண்பக மலரின் வாசனையா? அல்லது அவள் உடலுக்கே அந்த மணம் இருக்கிறதா? கிருஷ்ணா நதியிலிருந்து கிளம்பிய தென்றல் அவள் உடலைத் தழுவி வந்து அவன் மேலும் பட்டது. அந்தச் சுகத்தில் ஆடிய அவள் உடல் அவன் மீதும் பட்டது!

கரிகாலன் உள்ளத்திலிருந்து இன்பப் பெருமூச்சு கிளம்பியது. ''தேவி,'' என்ற சொல் அதைத் தொடர்ந்து வெளிவந்தது.

''இல்லை, செல்வி!'' என்ற இரண்டே சொற்கள் கரிகாலன் கனவுத் திரையைச் சரேலென்று கத்தி கொண்டு கிழித்ததால் அவன் உடல் ஒரு முறை குலுங்கியது. சட்டென்று பஞ்சணையில் எழுந்து உட்கார முயன்றான் அவன். ஏற்கனவே செல்வியின் இடையிலே இருந்த கை அந்த இடைக்கு அடியிலே சிறைபட்டுக் கிடந்த தால் முழுவதும் எழுந்து உட்கார முடியவில்லை அவனால். அரையும் குறையுமாக எழுந்து உட்கார்ந்த நிலையிலேயே, பஞ்சணை யில் கிடந்த அந்தப் பைங்கிளியைத் திரும்பிப் பார்த்தான்.

பஞ்சணையில் ஒயிலாகப் படுத்துக் கிடந்த செங்கமலச் செல்வியின் முகத்திலே காதல் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. அவள் உடல் அவன் அணைப்பை எதிர்பார்த்துத் துன்பப் பட்டுக் கொண்டிருந்ததால், வேதனைக் குறியும் அவள் முகத்திலே தெரிந்தது. உணர்ச்சிகளின் வேகத்தை அடக்க முடியாமல் அவள் பெருமூச்சு விட்ட தால், அவளை எதிர் கொண்டழைப்பன போல் அவள் எழிலம்சங்கள் பெரிதாக மேல் நோக்கி எழுந்தன.

அவளைக் கரைகடந்த அனுதாபத்துடன் பார்த்தான், கரிகாலன். போர்க் கோலத்தில் கவசத் துக்குள்ளடங்கிய வீர சொரூபத்துடன் விளங்கவல்ல அவள் அழகிய உடல் குழந்தையின் சரீரம் போல் துவண்டு நெளிவதையும், புரவியின் பக்கவாட்டு களில் பலமாக அணையும் அவள் கால்கள்கூடச் செயலற்றுக் கிடப்பதை யும் கண்ட கரிகாலனும் துன்பப் பெருமூச்சு விட்டான். அவன் துன்பப் பெருமூச்சைக் கண்ட செங்கமலச் செல்வி மெல்ல நகைத்தாள்.

''ஏன் நகைக்கிறாய், செல்வி?'' என்று கேட்டான் கரிகாலன் மெல்லிய குரலில்.

அவள் கமல விழிகள் நன்றாக அகன்று அவனை ஏறெடுத்துப் பார்த்தன. அவள் உதடுகளும் லேசாக அசைந்தாலும் பேச்சு எதுவும் வெளியில் வரவில்லை.

''என்ன சொல்லுகிறாய், செல்வி?'' என்று மீண்டும் கேட்டான் கரிகாலன்.

''செல்வியல்ல, தேவி!'' என்று சொல்லிவிட்டு, துன்பப் புன்னகை காட்டினாள் அரையன் ராஜராஜன் மகள்.

''தேவியா?''

''ஆம், தேவிதான்!''

''புரியவில்லையே, செல்வி?''

''நிலைமை இருவருக்கும்



பட்ஜெட்டுக்குப் பின்—

''சார், நீங்க பாம்பே போறதுக்கு டிக்கெட் ரயிலுக்கு எடுக்கவா, பிளைட்டுக்கு எடுக்கவா...''

''ரயில்ல போற அளவுக்கு எனக்கு இன்னும் வசதி வரல. பிளைட்டுக்கே எடு.''

—முகமது யூசுப்.

# வத் ஒபு வா?

வர்த்தக ஒலிபரப்பு'

'வர்த்தக ஒலிபரப்பு' என்று பொருள். சந்தேகமானால், சென்னை வானொலியின் வர்த்தக ஒலிபரப்பில் அறிவிப்பைக் கேட்டுப் பாருங்கள்.

ஒரு பெண் அறிவிப்பு செய்கிறார். சுத்தமாகவும் தெளிவாகவும் இருக்கிறது.

ஓர் ஆண் அறிவிப்பாளர் மட்டும்—

'ஆல் இந்தியா ரேடியோ, சென்னை வானொலி நிலையம்...' என்பது வரை கரெக்டாய்ச் சொல்கிறார். அதன் பிறகு அவருக்கு என்ன நேரிடுகிறதோ தெரியவில்லை. 'விவித் பாத் வத் ஒபு' என்று அவசர அவசரமாகச் சொல்லி முடித்து விடுகிறார். ஒரு நாள் இல்லை, இரண்டு நாள் இல்லை. தினம் தினம்.

நிலையத்தில் இருக்கிற மற்றவர்கள் அவருக்கு இதை எடுத்துச் சொல்லக் கூடாதோ?

—ஆர்.

---

புரிந்துதானிருக்கிறது. விடைதான் புரியவில்லை.''

''என்ன நிலைமை? என்ன விடை?''

''சொல்லட்டுமா?''

''சொல்லேன். அதற்காகத் தானே கேட்கிறேன்.''

''உங்கள் நினைப்புக்கும் பார்வைக்கும் வித்தியாசம் இருக்கிறது.''

''நினைப்பு, பார்வை, வித்தியாசம்! புதிர் போடுகிறாயா, செல்வி?''

''புதிர் ஒன்றுமில்லை. நீங்கள் நினைப்பது தேவி. ஆனால் பார்ப்பது செல்வி.''

அவள் சொன்னதை நன்றாகப் புரிந்து கொண்டான் கரிகாலன். இருந்தாலும் புரியாதது போலவே கேட்டான். ''தேவியாவது! என்ன சொல்லுகிறாய்?'' என்று.

செங்கமலச் செல்வியின் வலக்கரம் எழுந்து அவன் வலக்கரத்தைப் பற்றிக் கொண்டது. ''என்னை ஏமாற்ற வேண்டாம், பிரபு! ஏமாற்றவும் உங்களால் முடியாது. உங்கள் வாயால் சொல்ல இஷ்டமில்லாததை நானே சொல்கிறேன். உங்கள் நினைப்பெல்லாம் நிரஞ்சனா தேவியிடம் இருக்கிறது. நான் உங்கள் அருகில் இருக்கிறேன். அவள் வெகு தொலைவில் இருக்கிறாள். ஆனால், உங்கள் உள்ளம் தொலைவில் உள்ள அவளிடம்தான் ஒன்றிக் கிடக்கிறது. உடல் மட்டும்தான் என்னருகே இந்தப் பஞ்சணையிலிருக்கிறது. இதை நன்றாக நானறிவேன். இன்னமும் அறிவேன். ஆனால்....'' என்று வார்த்தையை நிறுத்தி முகத்தை ஒரு பக்கமாகத் தலையணையில் திருப்பிக் கொண்டாள் செங்கமலச் செல்வி.

''ஆனால் என்ன செல்வி?'' கரிகாலனும் கேட்டான் தன் இடது கையை அவள் இடுப்பினின்றும் விடுவித்துக் கொண்டு.

''எவ்வளவோ வெட்கத்தை விட்டுத்தான் உங்களிடம் வருகிறேன். இருப்பினும் வெளிவிட்டுச் சொல்வதற்கும் அளவு இருக்கிறதல்லவா?'' இதை அவள் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டே சொன்னாள். ஆனால் அவள் கரத்தை அழுத்திய அவள் மலர்க் கரம் மீதிக் கதையைச் சொல்லியது.

'அட பைத்தியமே! இது புரியவில்லையா உனக்கு? என் அணைப்பிலே நீ நிரஞ்சனா தேவியின் அணைப்பைக் கண்டாய். என் உதடுகளில் அவள் அதரச் சுவையை அனுபவித்தாய். இளமை பூரித்த என் அவயவங்களெல்லாம் அவள் எழிலாகத் தோன்றுகிறது உனக்கு. அவளுக்கும் உனக்கும் இடையே உள்ள ஆற்றைக் கடக்க என் உடல் ஒரு தோணி உனக்கு என்பதை நான் அறியவில்லையா என்ன? கரையை அடைந்ததும் தோணி எதற்கு? தோணியிலேயே துடுப்பையும் எறிந்து விட்டு ஓடுகிறாய். தோணி ஆற்றோடு போனால் உனக்கென்ன? ஆற்றுச் சுழலில் ஆழ்ந்து அடித் தரையில் அழிந்தால்தான் உனக்கென்ன?' என்ற அவள்,

எண்ணங்களை விவரமாக எடுத்துச் சொல்லியது அவள் பூங்கரம்.

நிலைமை இருவருக்கும் புரிந்து விட்டது. ஆனால் விடை? அதைத்தான் செங்கமலச் செல்வி மீண்டும் கேட்டாள்.

''பிரபு! உங்களுக்குத் தெரிந்து விட்டதல்லவா?''

''உம்.'' சுரணையில்லாமலே பதில் சொன்னான் கரிகாலன்.

''ஆனால் விடை?''

''புரியவில்லை, செல்வி.''

''அதைத்தான் முன்பே சொன்னேன்.''

கரிகாலன் அனுதாபத்தால் பெருமூச்சு விட்டான். ''செல்வி! விதி உன் வாழ்க்கையில் இப்படியா விளையாட வேண்டும்?'' என்று மெள்ளக் கேட்டான்.

''விளையாடுவது விதியின் இஷ்டம்; அதற்கு உட்பட்டுத்தானே ஆகவேண்டும், பிரபு?''

''என்னை ஏன் பிரபு பிரபு என்று அழைக்கிறாய்?'' எரிச்சலுடன் எழுந்தது அவன் கேள்வி.

''பின் எப்படி அழைக்கட்டும்? மன்னா என்றழைக்கட்டுமா?''

''நான் எப்படி மன்னனாவேன்?''

''மன்னன் மகளின் பிற்காலக் கணவன் மன்னனாவது சகஜம்தானே?'' இதைச் சொல்லிய செல்வி, மீண்டும் துக்க நகை நகைத்தாள்.

கரிகாலன் அவள் மன வேதனையை நன்றாகப் புரிந்து கொண்டானாகையால், பதிலேதும் சொல்லாமல் எழுந்து சாளரத்தருகே சென்று நின்று கொண்டான். செல்வியும் பஞ்சணையிலிருந்து எழுந்து சென்று அவனருகே நின்றாள். இரண்டு பைங்கிளிகளுக்கிடையே சிக்கிய கரிகாலன் ஏதேதோ எண்ணங்கள் உள்ளத்தில் அலைமோத வெகு நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

அவள் அவன் தோள்மீது தலையைச் சாய்த்துக் கொண்டாள். பிறகு கேட்டாள்: ''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று.

''உன் வாழ்வைப் பற்றி.''

''அதைப் பற்றி இப்பொழுது கவலைப் படாதீர்கள்.''

''ஏன்?''

''வாழ்வு நிலைக்கட்டும்.''

''நிலைக்காமலென்ன?''

''பிரபு! நீங்கள் வந்தியத் தேவர் முன்பாகச் சுட்டிக் காட்டிய ஆறு சுவர்களில் ஒன்றுதானே தகர்ந்திருக்கிறது?''

''ஆறு சுவர்களா?''

''அதற்குள் மறந்து விட்டீர்களா? வங்கத்தையும் சோழ நாட்டையும் தடுத்து நிற்கும் ஆறு அரசுகளைப் பற்றி நீங்கள் சொல்லவில்லையா?''

''ஆம், சொன்னேன்.''

''அந்தச் சுவர்களிலே ஒன்றுதானே இடிந்திருக்கிறது. சக்கரக் கோட்டத்தின் வீழ்ச்சிக்குப் பிறகு நாம் சமாளிக்க வேண்டிய இந்திரதத்தன் முதலியோர் எங்கே போனார்கள்?''

''எங்கும் போகவில்லை.''

''ஆம், பிரபு! எங்கும் போகவில்லை. மீதியிருக்கின்றன. பலமான போர்கள். அந்தப் போர்களில் முன்னணியில் நான் நிற்பேன். மரணத்தை எதிர் நோக்குவேன். வேல், அம்பு, வாள் இவற்றில் எது பாய்ந்து இறந்தாலும், உங்கள் மடியில் இறப்பேன். அப்பொழுதாவது மனப்பூர்வாக என்னை மடியில் வைத்துக் கொள்வீர்களல்லவா?''

கரிகாலன் பதில் சொல்லவில்லை. அவன் கரங்கள் அவளை மெல்ல அணைத்தன. அந்த அணைப்பில் சுழன்று கொண்டே, ''ஆகட்டும் என்று ஒரு வார்த்தை சொல்லுங்கள்,'' என்று கெஞ்சினாள் செங்கமலச்செல்வி. அந்தக் கெஞ்சல் அவன் பலத்தை அடியோடு உடைத்தெறிந்தது. அடுத்த விநாடி அவன் பலமான பிணைப்பில் சிக்கிக் கொண்டாள் அவள்.

'ஆண் மகன் உறுதி இது தானா?' என்று நினைத்த செல்வி மதுரமாக நகைத்தாள்; அவனும் நகைத்தான். ஆனால் அதே சமயத்தில் அவர்கள் நகைப்பெல்லாம் உடைத்து அவர்கள் நகைப்பையெல்லாம் உடைத்து அவர்கள் வாழ்க்கையில் பெரும் மாற்றத்தை உண்டாக்கக் கூடிய இரண்டு ஓலைகளில் ராஜ முத்திரைகளை வைத்துக் கொண்டிருந்தான் விக்கிரமச் சோழிய வரையனான அரையன் ராஜ ராஜன்.

(தொடரும்)

# மன்னன் மகள்



சாண்டில்யன்

## 60. ஒரு குழல், இரு ஓலைகள்

காலக் காற்றிலே மாத ஏடுகள் ஆறு பறந்து சென்றன. சோழ சாம்ராஜ்யத்தின் வடக்குத் திசையிலே அரையன் ராஜராஜனும் கரிகாலனும் கலந்து முழக்கிய வெற்றி முரசொலியின் எதிரொலி, தொலை தூரத்திலிருந்த காஞ்சி மாநகரத்திலும் பலமாகக் கேட்டுக் கொண்டிருந்ததால், அந்த மாநகரம் அத்தனை வெற்றிகளையும் தானே சம்பாதித்து விட்டதாக எண்ணி, தன் உப்பரிகைகளின் பெருங்கிரீடங்களையும், கோவில்களின் பெரிய கோபுரங்களையும் வான வெளியில் உயர்த்திக் கொண்டு இறுமாப்புடன் காட்சி அளித்தது. அந்த உப்பரிகைகளுக்கும் கோபுரங்களுக்கும் வெற்றி முடிசூட்ட இயற்கை அன்னை ஏவிவிட்ட வெண்ணிற மேகங்கள் அவற்றை மெள்ள மெள்ள வளைக்கத் தொடங்கின.

மயிலையில் நடந்த ஒரு கம்பராமாயணப் பட்டி மண்டபத்திற்கு கி.வா.ஜ நடுவராக இருந்தார்.

இறை வணக்கமாகப் பாடிய பாடல் ராமனுக்கு முடிசூட்டும் விழாப் பாடல். கி.வா.ஜ. சிலேடையாக, ''இப் பாடலுக்கு ராமன் மட்டுமல்ல, நானும் பொருத்தமானவன்,'' எனக் கூறினார்.

காரணம் அப்பாடல் பாடும்போது கி.வா.ஜ. தற்செயலாக அவிழ்ந்த தனது குடுமியை முடிந்து கொண்டார். புரிந்துகொண்ட கூட்டத்தினர் அதை ரசித்தனர்.

கேட்டவர்: 'சங்கரிபுத்திரன்'.



# முடி ஜடிய கி.வா.ஜ.

ஏழு எட்டாவது நூற்றாண்டுகளில் பல்லவர்கள் பராமரிப்பிலே சிறப்பு ஆடைகளையும் வெற்றி ஆபரணங்களையும் தரித்த அந்தக் காஞ்சிமாநகர், அதைவிடப் பெரிய பேரரசாக விரிந்த சோழ சாம்ராஜ்ய சாகரத்தினிடையில் கல கலைகளுக்கும் இருப்பிடமாகக் கீர்த்தியையும் பொலிவையும் பெற்று விளங்கியதால், மக்கள் நாவிலே பல்லவ காஞ்சி என்ற பெயர் மறைந்து, சோழ காஞ்சி என்ற பெயர் உலாவலாயிற்று. இப்படிப் பாமரரும், புலவரும், புரவலரும் போற்றிப் புகழ்ந்த அந்தக் காஞ்சி மாநகர், தைத்திங்கள் உதயமான அந்தக் காலை நேரத்தில் இணையற்ற எழிலுடன் விளங்கிக் கொண்டிருந்தது.

'இடம் இரண்டு, தெற்றிகள் மூன்று, அரண்கள் நான்கு, தருக்கள் ஐந்து, புட்கள் ஆறு, நதிகள் ஏழு, பொதுக்கள் எட்டு, பொய்கைகள் ஒன்பது, சிலைகள் பத்து, மன்றங்கள் பதினொன்று' என்று புராணங்கள் விளக்கம் கூறியபின் தோன்றிய இரு பல்லரசுகளின் ஆதிக்கத்தில் அத்தனை செல்வங்களையும் ஆயிரம் மடங்கு அதிகமாகப் பெற்றுச் சிவ காஞ்சி என்றும், புத்த காஞ்சி என்றும், வைணவ காஞ்சி என்றும், ஜைன காஞ்சி என்றும் நான்கு காஞ்சிகளை உள்ளடக்கியதால், நான்கு பெரும் கலாசாரங்களையும் தன் கர்ப்பத்தில் சிறைப்படுத்திய அந்தக் காஞ்சி மாநகரத்திலே, அந்தக் காலை நேரத்திலே வேத கோஷங்களும் ஜைன புத்த மடாலயத் துதிகளும் பெரிதாக எழுந்து ஆகாயத்தைப் பரிசுத்தப் படுத்துவன போல் எங்கும் பறந்து கொண்டிருந்தன. நகரத்தை வளைத்து நின்ற பெரிய கோட்டைச் சுவரைச் சூழ்ந்து புறாக்களும், சுறாக்களும் சீறி எழுந்ததால் பார்க்கப் பயம் விளைவிக்கும் பேரகழியில் கிளம்பிய பெற்றலைகள் ராஜேந்திர சோழ தேவனைத் தாக்க முயலும் சிற்றரசர்களைப் போலக் கோட்டையின் பெரும் சுவர்களைப் பயனின்றித் தாக்கிக் கொண்டிருந்தன. அவை அப்படித் தாக்கிக்கொண்டிருந்ததால் எழும்பி 'களுக் களுக்' என்ற சப்தத்தை அடக்குபவர்களைப் போல கோட்டைச் சுவர்களின் மீது நாலா பக்கத்திலும் வேலும் கையுமாக உலாவிக் கொண்டிருந்த ஏராளமான வீரர்கள் 'பராக்' கோஷங்களைக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

'கணிகண்ணன் போகின்றான், காமருபூங் கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம், செந்நாப் புலவன் யானும் போகின்றேன், நீயும் உந்தன் பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்' என்று திருமழிசைப்பிரான் கூறியதும் அவர் சொன்ன வண்ணம் செய்த பெருமானும் மீண்டும் அவர் கோரிக்கைக்கிணங்கி, போக்கொழிந்து பள்ளி கொண்ட திருவெஃகாவின் உயர்ந்த கோபுரத்திற்குச் சற்றுத் தள்ளிப் பாய்ந்து கொண்டிருந்த வேகவதி நதியும், முன்பொரு காலத்தில் தன்னை அணைபோட்டுத் தடுத்த அதே பெருமானுக்காகப் பயந்ததுபோல் மெள்ளப் பிரவாகித்துக் கொண்டிருந்தாலும், இராஜேந்திர சோழ தேவன் அடைந்திருந்த பெரு வெற்றிகளின் காரணமாகச் சற்றுக் கர்வத்துடனேயே கரைகளைத் தாக்கிக் கொண்டிருந்தது. வேகவதியின் கரைகளிலே இருந்த தோட்டங்களில் அன்று காலை மலர்ந்திருந்த மல்லிகைகளும் முல்லைகளும் சற்று நேரத்திற்கெல்லாம் தாங்கள் அலங்கரிக்கவிருந்த மங்கையர்களின் சிங்காரக் கொண்டைகளை எண்ணிச் சிரித்துக் கொண்டிருந்தன.

கண் சுற்றிய இடங்களெல்லாம் கோபுரங்கள் பெருவாரியாக எழுந்திருந்ததால், அவற்றையெல்லாம் ஊடுருவ முடியாத கதிரவன், அன்று காலை நேரத்தில் வீசிய இளம்

கிரணங்கள் ஒவ்வொரு பக்கத்திலே கோபுரங்களின் பெரும் நிழல்களைப் பாய்ச்சியிருந்ததன் காரணமாக அந்தக் காஞ்சி மாநகர், அன்று அரண்மனையிலே தங்கியிருந்த ராஜேந்திர சோழ மன்னன் மனம் போலவே மிகக் குளிர்ந்து கிடந்தது. அந்தக் குளிர்ச்சிக்கு உதவி புரிந்த தைத்திங்களின் காலைப் பனி, கோபுரங்களின் மீது மட்டுமின்றி உப்பரிகைகள் மீதும் முத்து முத்தாய்ப் பதிந்து, காலைச் சூரிய ரச்மிகளைப் பல கூறுகளாகப் பிரித்து, நானாவித வர்ண ஜாலங்களைக் கிளப்பிக் கொண்டிருந்தன.

ஆழ்வார்களின் பாடல்களும் நாயன்மார்களின் பதிகங்களும் கோவில்களில் வேத சுரத்தில் ஓதப்பட்டதாலும் வீதிகளில் சென்ற ஓதுவார்கள் தேவாரங்களுக்குப் பண்ணிசைத்து வாத்தியங்களுடன் பாடிச் சென்றதாலும் ஏற்பட்ட ஒலிகளனைத்தும் கலந்து பெரிய பிரணவ சத்தம் போல் காஞ்சி மாநகரைச் சூழ்ந்து கொண்ட போதும், அரண்மனை ஸ்தூபியிலும் இதர உப்பரிகை மாடங்களிலும் இருந்த பட்சி ஜாலங்கள் தங்களுக்கும் ஈசன் ஒரு தனிச் சிறப்பை அளித்திருக்கிறான் என்பதைக் காட்ட நானாவித சப்தங்களைக் கிளப்பிக் கொண்டிருந்தன. காலை வேளையாதலால் தொழுக்களிலிருந்து மேய்ச்சலுக்கு அவிழ்த்து விடப்பட்ட மாடுகளின் 'அம்மா, அம்மா' எனும் இன்பச் சப்தங்களும், அரண்மனைக்குப் பக்கத்திலிருந்த திருமஞ்சனத்தார் வேளத்தை அடுத்துக் கிடந்த சேனைக் கூட்டங்களிலிருந்து எழுந்த யானைகளின் பிளிறல்களும், குதிரைகளின் கனைப்புகளும், மாடப் பறவைகள் கிளப்பிய சப்தங்களுடன் பெரும் போட்டியிட்டன.

இரவு முழுவதும் காவல் செய்த வீரர்களுக்கு ஓய்வு கொடுப்பதற்காக, ராஜவீதிகளில் போய்க் கொண்டிருந்த வீரர்களின் புரவிகளின் காலடிச் சத்தமும், வேகவதியின் ராஜ ஸ்நான கட்டத்துக்கு விரைந்து கொண்டிருந்த அரண்மனை ஸ்திரீகளின் சிவிகை ஆட்கள் போட்ட 'ஹூம்'கார ஒலியும் எல்லாமாகச் சேர்ந்து, அந்த மாநகரத்திற்கு இயற்கையாயுள்ள கம்பீரத்தை அதிகப்படுத்திக் கொண்டிருந்தன.

எங்கும் மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டு கிடந்தது. எங்கும் வீரர்களின் வெற்றிக் கோஷங்கள் வானைப் பிளந்தன. சோழர்களின் புலிக்கொடிகள் பல உப்பரிகைகளிலிருந்து ஆகாயத்திலே கம்பீரமாகப் பறந்துகொண்டு, சோழர்களின் ஆதிக்கத்தைப் பறை சாற்றிக் கொண்டிருந்தன. புலிக்கு அடங்கும் காலம் தனக்கு வந்துவிட்டதே என்ற வருத்தத்தினால் போலும், சிவகாஞ்சியிலிருந்த கைலாச நாதர் கோயிலிலும், இதர ஸ்தூபிகளிலும் காணப்பட்ட பல்லவ சிற்பச் சிங்கங்கள் பேச்சு மூச்சின்றி மௌனமாகக் கிடந்தன. புத்த காஞ்சியில் பல்லவ அரண்மனையின் உச்சி உப்பரிகையில் கைலாச நாதர் கோபுரச் சிங்கங்களை நோக்கி நகையாடும் முறையில், மிகப் பெரிய புலிக்கொடியொன்று காற்றில் படபடத்துக் காலைக் கதிரவன் ஒளியில் பளபளத்துக் கொண்டிருந்தது.

புலிக்கொடியின் ஆதிக்கம் தென்னாடெங்கும் பரவியதன்றி, வடநாட்டையும் ஊடுருவிச் சென்று கொண்டுதானிருந்தது. ஏற்கனவே கரிகாலன் கூறிய ஆறு சுவர்களில் நான்கு சுவர்கள் சரிந்துதான் போயின. சக்கரக் கோட்டம் சரிந்ததும், ஒட்டரனான இந்திரதத்தனும், தண்ட புத்தியின் தர்மபாலனும், தெற்கு லாடத்தின் ரணசூரனும், அரையன் ராஜராஜன் படை பலத்துக்கும் கரிகாலன் போர்த் தந்திரத்துக்கும் எதிரே நிற்கமாட்டாமல் சரிந்தே போனார்கள். இன்னும் இரண்டே சுவர்கள்! வங்காளத்தின்



''முதியோர் கல்விதான், அதுக்குன்னு இப்படியா?''

''என்னாச்சு?''

'''கி' என்றால் கிழவன், 'பா' என்றால் பாட்டின்னு சொல்லித் தர்றாங்க.''

—மேல்குந்தை வாசு

# தாகம் பெறலாம்-தரலாம்



## வரி வசூலிப்பவரோ, வரி செலுத்துபவரோ...லிம்கா அருந்தி தாகம் தணிப்பவரே.

நீங்கள் வருமான வரி செலுத்த வருவாயின் மதிப்பைப் போட்டு-போட்டுப் பார்த்து அல்லது வேறு ஒருவரின் வருவாயை கூட்டி-கூட்டிப் பார்த்து தாகத்தினல் தவிககும்போது. ஐஸோடானிக ஸால்ட் உள்ள கிருமிகளற்ற லிம்கா பாட்டிலை கையிலெடுப்பீர், தாகம் தணிப்பீர்.







ARTIFICIALLY FLAVOURED. CONTAINS NO FRUIT JUICE OR FRUIT PULP.

கோவிந்த சந்திரன். உத்திரலாடத்தின் மஹிபாலன்! இந்த இரண்டு அரசுகளும் சரிந்து விட்டால் புலிக்கொடி கங்கையின் கரையில் நாட்டப்படும்! அதை அறிந்து தானிருந்தான் பரகேசரிவர்மனான இராஜேந்திர சோழதேவனும். இருப்பினும், சாம்ராஜ்ய வெற்றியிலே மகிழ வேண்டிய அந்த மாபெரும் மன்னன் மனத்திலே மட்டும் அன்று மகிழ்ச்சி சிறிதும் இல்லை. ஏதோ பெரிய சுமை ஒன்று அந்த மாமன்னன் மனத்தை அழுத்திக் கொண்டிருந்ததை, தைத்திங்கள் உதயமான அந்தப் புனித காலை நேரத்தில் சோழப் பேரமைச்சர் கண்டார்.

கலை எழில் கரை புரண்டு ஓடும்படியாகப் பல்லவர்கள் கட்டிய புத்த காஞ்சியின் அரண்மனையின் அந்தரங்க முத்தாணி மண்டபத்தில், பெரும் அரியணையிலே அமர்ந்திருந்த இராஜேந்திர சோழ தேவன், தீவிர சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். மிகவும் அழகான தோற்றமுடையவனாதலால், இராஜேந்திர சோழன் என்ற இயற் பெயரோடு சுந்தரச்சோழன் என்ற காரணப் பெயரையும் பெற்ற அந்தச் சோழப் பேரரசனின் ஆறடி உயர சரீரம், பல்லவ சிம்மாசனத்திலே ஒருபுறமாகச் சாய்ந்து கிடந்தது. வயது சற்று ஏறியிருந்தாலும் அழகு சற்றும் குறையாத அவன் மதிவதனத்தில் துளிர்த்த கவலையை ஆற்ற இஷ்டப் பட்டனபோல், அவன் முகத்தைச் சுற்றித் தவழ்ந்து கொண்டிருந்த சுருட்டை மயிர்கள் வேகவதியிலிருந்து புறப்பட்ட காற்றில் மெள்ள ஆடி அந்தச் சுந்தர வதனத்தை அடிக்கடி தடவிக் கொடுத்தன. நாள் தவறாமல் அரியணையில் உட்கார்ந்து மக்களுக்கு நீதி செலுத்த வேண்டியிருந்ததால், நாள் தவறாமல் பெருங்கிரீடத்தை தரித்ததன் காரணமாக நெற்றியில் உச்சியில் ஏற்பட்டிருந்த வில் போன்ற வடுக்கூடச் சக்கரவர்த்தியின் முகத்துக்கு அழகையே அளித்துக் கொண்டிருந்தது. சிம்மாசனத்தின் கைகளிலே துவண்டு கிடந்த அவன் மெல்லிய கைகளிலே ஓடிய நரம்புகள், அந்தக் கைகள் எந்த வினாடியிலும் இரும்பாகும் தன்மையைப் பெற்றவை என்பதைச் சந்தேகமற நிரூபித்தன. சிம்மாசனத்தின் முன்புறத்திலே ஊன்றியிருந்த கால்களில் தென்பட்ட தழும்புகள் சதா போர்க்கவசம் பூண்டு புரவியில் செல்லும் அவன் பழக்கத்துக்குச் சான்றாக நின்றன. உள்ளம் பெரும் கவலையால் பீடிக்கப் பட்ட அந்தச் சமயத்திலும், இருவேல்களைப் போல் கூர்மையாகத் தெரிந்த அந்த மாமன்னனின் கண்ணின் கருமணிகள், 'இவரை யாரும் ஏமாற்ற முடியாது' என்ற எச்சரிக்கையை விடுவித்துக் கொண்டிருந்தன. அவன் கடை இதழில் சதா தவழ்ந்து கொண்டிருந்த ஒரு புன்சிரிப்பு எத்தனை கவலையிருந்தாலும் அதை அசட்டை செய்யக்கூடிய மனோபாவத்தை வெளிப் படுத்தியது. அன்று காலையும் அந்தப் புன்சிரிப்பு தவழ்ந்து கொண்டுதானிருந்தது. ஆனால் உள்ளேயுள்ள கவலையை அசட்டை செய்யும் மனோ பாவத்தின் அடையாளம் அன்று மட்டும் புலப்படவில்லை, இராஜேந்திர சோழனின் எழில் முகத்திலே.

மன்னன் வாயிலிருந்து




வாழ்க்கை என்பது கிரிக்கெட் போன்றது. ஒன் டே மாட்ச் மாதிரி விறுவிறுப்பாகவும் இருக்கும். டெஸ்ட் மாட்ச் மாதிரி போரடிக்கவும் செய்யும். மண வாழ்க்கை விவியன் ரிச்சர்ட்ஸ் பேட்டிங் மாதிரி விறுவிறுப்பாகவும், கபில் தேவ் பௌலிங் மாதிரி கிளுகிளுப்பாகவும், அசாருதீன் ஃபீல்டிங் மாதிரி சுறுசுறுப்பாகவும் அமைய வேண்டும். நடுவர்கள்—விளையாட்டு வீரர்கள் மாதிரி சண்டை போடாமல் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என வாழ்த்துகிறோம்.

(ஒரு திருமண வாழ்த்து மடலில் படித்தது.)

—தி. அஜந்தா

ஏதாவது வார்த்தை உதிருமோ என்று நீண்ட நேரம் எதிர்பார்த்து ஏமாந்த பேரமைச்சர், அரசன் கவனத்தைத் திருப்பத் தாமே முதலில் பேசத் தொடங்கி, ''மன்னவா'' என்று மெல்ல அழைத்தார்.

ஒருகளித்துச் சிம்மாசனத்தில் சாய்ந்து கிடந்த இராஜேந்திரன், சற்றுத் தலையைத் திருப்பி, பேரமைச்சர் மீது தன் கண்களை ஓடவிட்டான். வாய் எதுவும் பேசாவிட்டாலும் 'எதற்காக அழைக்கிறீர்கள்?' என்ற கேள்வி மன்னன் பார்வையில் தொக்கி நிற்பதைக் கண்ட பேரமைச்சர், விஷயத்தை விளக்க முற்பட்டு, ''அரையன் ராஜராஜனிடமிருந்து இன்னும் ஒரு தூதுவன் வந்திருக்கிறான்,'' என்றார்.

மன்னன் அதில் மகிழ்ச்சி கொள்வதற்குப் பதிலாகச் சினமே கொண்டான் என்பதை அவன் முகம் லேசாகக் காட்டினாலும், அவன் வாயிலிருந்து வார்த்தைகள் மிக நிதானமாகவே உதிர்ந்தன.

''தூதுவன் வந்திருக்கிறானா?'' என்று கேட்டான் மன்னன்.

''ஆம் அரசே,'' என்று மெள்ள நிமிராத தலையுடன் நிலத்தை நோக்கிக் கொண்டே பதில் சொன்னார் பேரமைச்சர்.

''ஒரே ஒரு வெள்ளிக் குழல் தானே வந்திருக்கிறது?''

''ஆமாம்.''

''அதில் கண்டிப்பாய் இரண்டு ஓலைகள் இருக்கும்.''

---




திறமை: புத்திசாலித்தனமான சோம்பேறித்தனம்.

—ஆர்னால்டு கிளாஸ்கோ.

''ஆமாம்.''

''குழலை உடைத்துப் பார்த்தீரா?''

''பார்த்தேன்.''

''இரண்டு ஓலைகள்...''

''இருக்கின்றன.''

''ஒன்று...''

''தங்களுக்கு.''

''இன்னொன்று?'' சினத்துடன் எழுந்தது சக்கரவர்த்தியின் கேள்வி. பதில் சொல்லத் தயங்கினார் பேரமைச்சர். இராஜேந்திரன் பதிலைச் சொன்னான்.

''இன்னொரு ஓலை தஞ்சை புத்த மடாலயத் துறவி பிரும்மானந்தருக்கு,'' என்று.

''ஆமாம் மன்னவா.'' பணிந்த குரலில் ஒப்புக்கொண்டார் பேரமைச்சரும்.

''அதில் பழைய சோழர் குல முத்திரை இருக்கிறதா?'' என்று மீண்டும் வினவினான் மன்னன்.

''இருக்கிறது,'' என்பதற்கு அறிகுறியாகப் பேரமைச்சர் தலையை ஆட்டினார்.

''அதே கிரீடம்,'' என்று தொடர்ந்தான் மன்னன்.

''ஆமாம்.''

''என்ன ஆமாம்? எதைப் பார்த்தாலும் ஆமோதிக்கிறீரே பேரமைச்சரே!'' என்று சொல்லிக் கொண்டே, ஆசனத்திலிருந்து கனவேகத்தில் எழுந்திருந்த இராஜேந்திர சோழதேவன், அரியாசனத்துக்கு எதிரே சற்று நேரம் உலாவினான். பிறகு சட்டென்று நின்று பேரமைச்சருக்கு அருகில் வந்து, ''நீர் இந்தப் பேரரசில் எத்தனை நாளாக அமைச்சராக இருக்கிறீர்?'' என்று கடினமான குரலில் கேட்டான்.

''தங்கள் தந்தை காலத்திலிருந்து.'' நிதானமாகவே பதில் சொன்னார், வயோதிகரான பேரமைச்சர்.

''சோழர் குல முத்திரையை, அதுவும் கிரீடத்தை, அரசகுல மக்களுக்கு எழுதப்படாத ஓலைகளில் பொறிப்பதுண்டா?'' என்று இராஜேந்திரன்

கல்யாணப் பரிசாக பினாடோன் குவார்ட்ஸ் டிவிகளை ஏன் மேலும் மேலும் அதிக மக்கள் வழங்குகிறார்கள்




## ...இணைபிரியாத அதன் உத்தரவாதத்திற்காக.

மிகவும் பிரியமானவர்களுக்கு மிகச் சிறந்த ஒன்றைத்தானே பரிசாக்க கொடுக்க முடியும். இணையற்ற பினாடோன் குவார்ட்ஸ் டிவியை விடச் சிறந்தது வேறென்ன இருக்கமுடியும். ஆழ்ந்த வண்ணமும் படத் தெளிவும் முழுமையாக இணைந்தது. கூடவே படக்குழாய்க்கு 3 ஆண்டு உத்தரவாதம். அருகிலுள்ள உங்கள் விற்பனையாளரிடம் போய் பினாடோன் கலர்/கருப்பு & வெள்ளை டிவி ரகங்களைப் பாருங்கள்.

நீங்காத நினைவாக நெஞ்சிலிருக்கும் எப்போதும் இப்பரிசு.

பினாடோன் தயாரிப்புக்கள் அனைத்துக்கும் துணை நிற்பது மாஸ்டர் கேர்—ஒரு போன் செய்தால் போதும் ஓடிவந்து செய்ய நாடெங்கும் விற்பனைக்குப் பின் சர்வீஸ்.

# Binatone

**நீடித்து உழைக்க சிறந்த அமைப்பு**

பினாடோன் எலக்ட்ரானிக்ஸ் பி.லிட்., 23/4788-90, அன்ஸாரி ரோடு, தரியா கஞ்ச், புதுதில்லி-110 002.

Arms Communications/BEPL/66/12/87-TAM

கேட்டான், கோபம் மெள்ளத் துளிர்த்த குரலில்.

''உண்டு,'' என்றார் அமைச்சர், இயற்கையாக அவருக்கிருந்த அமைதியைக் கைவிடாமல்.

''எந்தச் சந்தர்ப்பங்களில் உண்டு?'' என்று கேட்டான் ராஜேந்திரன்.

''அரசகுல மர்மங்களைப் பற்றி எழுதப்படும் ஓலைகளில் பொறிப்பதுண்டு.''

சிறிது நேரம் சிந்தித்துவிட்டுக் கேட்டான் ராஜேந்திரன், ''அப்படியானால் அரையன் ராஜராஜன் இந்தத் தஞ்சைத் துறவிக்கு எழுதும் ஓலைகளில், அரசகுல மர்மம் என்ன இருக்கிறது பேரமைச்சரே?'' என்று.

''எனக்குத் தெரியாது மன்னவா.''

''தெரிந்து கொள்ள வேண்டியது உமது கடமையல்லவா?''

''ஆமாம்.''

''அந்தக் கடமையை நிறைவேற்ற, என்ன செய்திருக்கிறீர்கள்?''

''எதுவும் செய்யவில்லை. அரையன் ராஜராஜன் திரும்பி வரட்டும் என்று பொறுத்திருக்க உத்தேசித்திருக்கிறேன்.''

இதைக் கேட்ட ராஜேந்திரன் மீண்டும் அரியணையில் அமர்ந்து கொண்டு, அவரைச் சற்று நேரம் உற்று நோக்கினான். ''நீர் பொறுக்கலாம் அமைச்சரே, என்னால் பொறுக்க முடியாது. நானும் ஆறு மாத காலமாகப் பொறுத்திருக்கிறேன். ஒவ்வொரு குழலிலும் இரண்டு ஓலைகள் வருகின்றன. ஒன்று எனக்கு, இன்னொன்று தஞ்சைத் துறவியாருக்கு. இன்னொரு ஓலையைப் படிக்க வேண்டாம் என்று ஓலையில் வேண்டுகோள்! சாம்ராஜ்யாதிபதி பார்க்க முடியாத ஓலை துறவிக்கு! இது விசித்திரமாயில்லை உமக்கு?'' என்று படபடப்புடன் பேசினான் இராஜேந்திரன்.

''அவசரப்படாதீர்கள் மன்னவா. காரணமில்லாமல் அரையன் ராஜராஜன் எதையும் செய்ய மாட்டான். அவனிடம் அவநம்பிக்கை கொள்ளாதீர்கள். பெரு வெற்றிகளைத் தங்களுக்குச் சம்பாதித்துத் தந்திருக்கும் அவனுக்குத் தாங்கள் செய்யும் கைம்மாறு இதுவல்ல. அரையன் ராஜராஜன் கங்கைப் படையெடுப்பிலிருந்து திரும்பட்டும். அவனே தங்களுக்குச் சகலத்தையும் சொல்வான்,'' என்று சமாதானப்படுத்த முய்ன்றார் பேரமைச்சர்.

இராஜேந்திர சோழ தேவன் மனத்தில் சிறிதும் சாந்தி ஏற்படவே இல்லை. எதையோ சற்று யோசித்துவிட்டுக் கேட்டான், ''அதுசரி! அரையன் ராஜராஜன் கீர்த்தியைவிடப் பன்மடங்கு அதிக கீர்த்தியைப் பெற்றுவிட்டானே, அந்த வாலிபன் யார்?''

''கரிகாலனைத்தானே குறிப்பிடுகிறீர்கள் மன்னவா?'' என்று வினவினார் பேரமைச்சர்.

''ஆம் அமைச்சரே! சக்கரக் கோட்டத்தின் வெற்றிக்கு மட்டுமின்றி, மற்றும் பல வெற்றிகளுக்கும் அடிகோலியதாகக் கூறப்படும் அந்தக் கரிகாலன் யார்?'' என்று விசாரித்தான் மன்னன்.

''முன்பே சொன்னேனே மன்னவா. அவன்தான் அரையன் ராஜராஜன் வளர்ப்பு மகன்,'' என்றார் பேரமைச்சர்.

''அது தெரியும் பேரமைச்சரே! அவன் யார்? எங்கிருந்து வந்தான்! அவனைப் பெற்றெடுத்தவர் யார்?''

''அவனுக்குப் பெற்றோர் யாருமில்லை. அவன் அனாதை. சூடாமணி விஹாரத்திலிருந்து வந்தான்.''

''அவனை அரையன் ராஜராஜனிடம் அனுப்பியது தஞ்சைத் துறவிதானே?''

''ஆமாம்.''

இராஜேந்திரனின் கண்களில் ஒரு புத்தொளி துளிர்த்தது. ''அப்படியானால் இந்தத் தஞ்சைத் துறவிக்குக் கரிகாலனைப் பற்றி ஏதோ தெரிந்திருக்க வேண்டும். அதுவும் அரசகுல மர்மமாகத்தான் இருக்க வேண்டும். அதனால்தான் இந்த ஓலை சோழர்குலக் கிரீட முத்திரையுடன் பிரும்மானந்தருக்கு அனுப்பப்படுகிறது. இப்பொழுது விளங்குகிறதா பேரமைச்சரே?'' என்றான்

இராஜேந்திரன்.

''இருக்கலாம்,'' என்றார் பேரமைச்சர்.

''அந்த மர்மம் என்ன என்பதை இன்று பார்த்து விடுகிறேன். அரையன் ராஜராஜனிடமிருந்து வந்த ஓலைகள் எங்கே?''

''இதோ.'' பேரமைச்சர், அரசன் நீட்டிய கைகளில் ஓலையைச் சமர்ப்பித்தார்.

இராஜேந்திரன் மீண்டும் ஆசனத்தைவிட்டு எழுந்து, ஓர் ஓலையை ஆசனத்திலேயே எறிந்தான். இன்னொரு ஓலையின் விலாசத்தைப் படித்து இதழ்களில் புன்முறுவல் தவழ அதன் முத்திரைகளை உடைக்கப் போனான். அடுத்த கணம் அந்தப் புன்முறுவல் மறைந்தது. ''நில் இராஜேந்திரா!'' என்று எழுந்த அதட்டலான குரல், சோழ சாம்ராஜ்யத்தின் ஏக சக்கராதிபதியான இராஜேந்திரனைக் கூட அசர வைத்தது. குரல் வந்த திசைக்காகத் திரும்பினான் இராஜேந்திரன். அச்சம் என்பதைக் கனவிலும் அறியாத அவன் கண்களில் கூடப் பயம் துளிர்த்தது. அரச குலத்தையே அசட்டை செய்யும் பார்வையுடன் வாயிற்படியில் நின்றிருந்த தஞ்சை மடாலயத் துறவி பிரும்மானந்தர் மன்னனை நோக்கி மிகுந்த கம்பீரத்துடன் நடந்து வந்தார்.

''வாரும். உமக்காகத்தான் காத்திருக்கிறேன்,'' என்றான் மன்னவன். அவன் இதழ்களிலே என்றும் யாரும் காணாத குரூரப் புன்சிரிப்புக் காணப்பட்டது.

மிகுந்த அசட்டையுடனும் துணிவுடனும் உள்ளே நுழைந்த பிரும்மானந்தர், அரசன் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களையும், அவன் கடையிதழில் தெரிந்த குரூரச் சிரிப்பையும் கவனித்ததும், அவன் உள்ளே ஓடிக்கொண்டிருந்த எண்ணங்களை நொடிப் பொழுதில் ஊகித்து விட்டாராதலால், தமது வாழ்க்கையின் மிக ஆபத்தான கட்டத்தைத் தாம் அணுகிவிட்டதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டிருந்தார்.

(தொடரும்)







இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 110'ம் பக்கம்.

## 61. துறவிக்கு வேந்தன் துரும்பு

சோழப் பேரரசின் மாமன்னன் தம்மை வரவேற்ற தோரணை, அவன் முகத்திலே துளிர்த்த உணர்ச்சிகள், கையிலே அவன் ஏந்தி நின்ற ஓலை—இவையனைத்தையும் தொகுத்துப் பார்த்த தஞ்சை மடாலயத் துறவி பிரும்மானந்தர், உள்ள நிலையை மிகத் தெளிவாகப் புரிந்துகொண்டு விட்டாராதலால், தமது கண்களை மஞ்சத்தில் கிடந்த ஓலைமீதும், இராஜேந்திரனுக்குச் சற்று அப்பால் முகத்தில் பேயறைந்ததுபோல் நின்றுகொண்டிருந்த பேரமைச்சர்மீதும் ஒரு விநாடி ஓடவிட்டார். அதுவரை பிரும்மானந்தருக்கு ஏதாவது சந்தேகம் இருந்திருந்தாலும், அதைப் பேரமைச்சரின் கிலிபிடித்த முகம் அறவே போக்கடித்துவிட்டதால், தமக்கு வரும் ஓலையின் மர்மத்தை அறியாமல் ஆறுமாத காலம் பொறுத்துக்கொண்டிருந்த இராஜேந்திரன் பொறுமையை அடியோடு இழந்துவிட்டானென்பதையும், அந்த ஓலை சம்பந்தமாக இருவருக்கும் பெரும் விவாதமும் நடந்திருக்கிறதென்பதையும் ஊகித்துக் கொண்டார் தஞ்சைத் துறவியார்.

உள்ளே ஓடிய எண்ணங்களைச் சிறிதும் வெளியில் காட்டாமல், புன்னகை தாண்டவமாடிய முகத்துடன், தமது இரு கைகளையும் உயரத் தூக்கி, ''தைத் திங்கள் உதயமான இந்த நன்னாளன்று, சோழப் பேரரசனுக்குச் சர்வ மங்களங்களும் உண்டாகப் புத்தர் பிரான் அருள் புரியட்டும். இராஜேந்திரனின் மெய்க்கீர்த்தி பாரெங்கும் பரவட்டும். இன்னும் இரண்டு மாதங்களில் புனித கங்கையின்



கரையில் நாட்டப்படும் புலிக்கொடி, பிறகு இமயத்தின் சிகரத்திலும் பறக்கட்டும்!'' என்று ஆசி கூறினார்.

வேல் போன்ற தன் கண்களைத் தஞ்சைத் துறவியார் மீது சில விநாடிகள் நாட்டிய சோழ வேந்தனின் கடையிதழ்களில் இருந்த புன்சிரிப்பு சிறிது நேரத்தில் நன்றாக விகசித்தது. வெளியே பெருமகிழ்ச்சியைக் காட்டிக் கொண்ட வேந்தன் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களில் சோகமும் விஷமுங் கலந்து நின்றன. ''சோழப் பேரரசின் விஸ்தாரத்துக்காகத் தங்கள் ஆசிகளை ஏற்கிறேன் துறவியாரே! ஆனால், தங்கள் இஷ்டப்படி இமயத்தில் புலிக் கொடி பறக்க வேண்டுமானால் இந்த ஆசிகள் மட்டும் போதாது...'' என்று பேசிய வேந்தன், பேச்சை முடிக்காமல் பாதியிலேயே நிறுத்தினான்.

அரசன் எண்ணங்கள் எந்தத் திக்கில் ஓடுகின்றன என்பதைப் புரிந்துகொண்ட தஞ்சைத் துறவியார், ஏதும் அறியாதது போலவே கேட்டார், ''ஆசிகள் போதாதா? வேறென்ன வேண்டும் மன்னவா?'' என்று.

''நம்பிக்கை,'' என்று பதிலிறுத்தான் அரசன்.

''நம்பிக்கையா! யார் நம்பிக்கை?'' என்று வினவினார் துறவியார்.

''சுற்றியிருப்பவர்கள் நம்பிக்கை,'' என்று பதில் கூறிய மன்னன் வார்த்தைகளைச் சற்று அழுத்தியே சொன்னான்.

''சொல்வது புரியவில்லை மன்னவா!''

''ஏன் புரியவில்லை? பெரிய சாம்ராஜ்யங்கள் நம்பிக்கையாலும் உறுதியாலும் ஸ்தாபிக்கப்படுகின்றன, பிரும்மானந்தரே! பூரண நம்பிக்கையை மன்னரிடம் வைத்துள்ள படைத் தலைவர்கள், மந்திராலோசனை சொல்பவர்கள், இவர்களால்தான் சாம்ராஜ்யங்கள் சிருஷ்டிக்கப்படுகின்றன.''

''உண்மை மன்னவா! இந்த அம்சங்களில் நமது சாம்ராஜ்யத்தில் எது குறைவாயிருக்கிறது? மன்னனைத் தெய்வமென்று மதிக்கும் மந்திரிகள் இல்லையா? சக்கரவர்த்திக்காக உயிரையே போரில் தியாகம் செய்த் துடிக்கும் சேனாதிபதிகள் இல்லையா?''

''இருக்கிறார்கள் துறவியாரே! படைத் தலைவர்களைப் பற்றியோ, அவர்கள் ஆற்றலைப் பற்றியோ நான் பேசவில்லை. நம்பிக்கையைப் பற்றிப் பேசுகிறேன்.''

''படைத் தலைவர்களின் ராஜ பக்திக்கு நம்பிக்கைதானே அஸ்திவாரம்?'' என்று கேட்டார் பிரும்மானந்தர்.

இராஜேந்திரன் அவரை நன்றாக உற்றுப் பார்த்துவிட்டுச் சொன்னான்: ''அப்படித்தான் நானும் நினைத்தேன், துறவியாரே! ஆனால் இரண்டும் வேறு பட்டவை என்பதைச் சமீப காலத்தில் தான் அறிந்தேன்,'' என்று.

பிரும்மானந்தர் அச்சம் சிறிதுமில்லாத கண்களை அரசன் மீது ஓட்டினார். பிறகு துக்கம் கலந்த பெருமூச்சொன்றை விட்டார். ''இது நியாயமல்ல இராஜேந்திரா!'' என்ற சொற்களும், அந்தப் பெருமூச்சொன்றைத் தொடர்ந்து வெளிவந்தன.

அரசன் கண்களில் விஷமும் கோபமும் கலந்து தாண்டவமாடின. ''எது நியாயமல்ல துறவியாரே? ஒரு படைத் தலைவன் அரசனுக்கெதிராகச் சதி செய்கிறானென்பது நியாயமல்ல என்கிறீரா? அல்லது அதை அரசன் ஆறு மாத காலம்




**'எல்லாமே தமாஷா'க நாடகம் போடும் சிரிப்பு சினிமா நடிகர் ஒரு படப்பிடிப்புக்கு வந்தார். அசிஸ்டெண்ட் டைரக்டர் ஓடிவந்து, ''சார்... நீங்க போன ஷெட்யூலுக்குப் போட்டுக்கொண்டு வந்த சட்டை எங்கே? அது கன்ட்டினியுட்டி ஷாட்... அதைப் போட்டுக் கொண்டுதான் நீங்க நடிக்கணும்,'' என்றார்.**

பொறுத்தது நியாயமல்ல என்கிறீரா? அந்தச் சதியில் துறவியான நீரும் கலந்து கொண்டது நியாயமல்ல என்கிறீரா? எதை நியாயமல்ல என்று கூறுகிறீர்?'' என்று உஷ்ணம் பரிபூரணமாகத் தொனித்த குரலில் கேட்டான் இராஜேந்திரன்.

அரசனுடைய சொல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலாக இதயத்தைத் தாக்கியதால் மனம் புண்பட்டதோடு சினமும் கொண்ட துறவியார், சீற்றத்தால் ஓரளவு சிவந்தும் விட்ட கண்களால் அரசனை ஏறிட்டுப் பார்த்து, ''மன்னவா! வார்த்தைகளை அளந்து பேசு. அதுவும் யாரைப் பற்றிப் பேசுகிறாய், யாரிடம் பேசுகிறாய் என்பதை நினைத்துப் பேசு,'' என்று அரசனுக்குச் சிறிதும் குறையாத உஷ்ணத்துடன் எச்சரித்தார்.

இராஜேந்திரன் கண்கள் ஆச்சரியத்தால் சற்றே மலர்ந்தன. ஆச்சரியம் மட்டுமல்லாமல் சீற்றமும் தலைதூக்கிய குரலில், ''துறவியாரே! நீர் இருக்கும் இடத்தை அறியாமல் பேசுகிறீர். இது சோழ சாம்ராஜ்யம். நினைப்பிருக்கட்டும்,'' என்றான் மன்னன்.

''இருக்கும் இடத்தை அறிந்துதான் பேசுகிறேன் மன்னவா! ஆனால் நான் உன் பிரஜை அல்ல!'' என்றார் துறவியார்.

''என் பிரஜை அல்லவா?''

''அல்ல. நான் சோழ சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவன் அல்ல.''

''பின் எந்தச் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவர்?''

''எந்தப் பேரரசு அழிந்தாலும், பிரளயமே வந்தாலும் அழியாத புத்தர் பிரானின் அன்புச் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்தவன். உனக்குத் தேவையாயிருக்கும் ஆயுதங்களும் படைகளும் எங்களுக்குத் தேவையில்லை இராஜேந்திரா! எங்களுக்கு அன்புதான் அஸ்திரம். அஹிம்சைதான் சாம்ராஜ்யம்,'' என்று படபடப்புடன் கூறினார் துறவியும்.

துறவியின் சொற்களால் அரசன் கோபம்தான் தணிந்தானோ அல்லது உள்ளூர அதை மறைத்தானோ சொல்ல முடியாது. துறவியின் பேச்சைக் கேட்டதும் அரசன் முகத்திலே சினம் மறைந்து, மீண்டும் புன்னகை தவழ்ந்தது.

''அப்படியானால் துறவியாரே! இந்தச் சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏன் வந்தீர்?'' என்று கேட்டான் மன்னவன்.

''இந்தச் சாம்ராஜ்யத்தில் அந்தச் சாம்ராஜ்யத்தைப் பரப்ப,'' என்று கோபம் சற்றே தணிந்த குரலில் பதில் சொன்னார் துறவியார்.

''அந்தச் சாம்ராஜ்யத்தை என் சாம்ராஜ்யத்தில் பரப்பத்தான் அரையன் ராஜராஜனுடன் ரகசியக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருக்கிறீரோ?'' என்று விசாரித்தான் மன்னவன்.

அரசனின் சாந்தம் கலந்த சொற்களில் ஆபத்தின் அம்சம் துளிர்ப்பதைக் கண்ட தஞ்சைத் துறவியார், சற்று எச்சரிக்கையுடனேயே பதில் சொல்லத் தொடங்கி, ''ஆம் மன்னவா! அதற்காகத்தான்,'' என்றார்.

''ஏன், அரையன் ராஜராஜன் புத்த மதத்தைத் தழுவ இசைந்து விட்டானா?''

''புத்த மதம் என்பது தனி மதமல்ல மன்னா! அது ஒரு கொள்கை. மக்கள் இருக்க வேண்டிய சூழ்நிலையை அது சிருஷ்டிக்கிறது. எங்கெல்லாம் அஹிம்சையும், சாந்தமும் சந்துஷ்டியும்

---

''அது என் சொந்தச் சட்டை. வீட்டிலே எங்கேயோ வச்சேன். காணாமப் போயிட்டுது,'' என்றார் சிரிப்பு நடிகர்.

''ஐயையோ! அந்தச் சட்டை இல்லேன்னா இன்னிக்கு ஷூட்டிங் கேன்சல். டைரக்டர் என் உயிரை வாங்கிடுவாரே,'' என்று அசிஸ்டெண்ட் பதறினார்.

ரொம்ப நேர யோசனைக்குப் பிறகு 'தமாசு' காரை எடுத்துக் கொண்டு, அசிஸ்டெண்ட் டைரக்டருடன் வீட்டுக்குப் போனார். சட்டையுடன் திரும்பினார்.

'வீட்டுக்குப் போனதும் 'தமாசு' ஒரு அறையைத் திறந்தார். அடேங்கப்பா! உள்ளே வைக்கோல் போர் மாதிரி இரண்டாயிரம் சட்டையைக் குவித்து வைத்திருக்கிறார். பார்த்துட்டு அசந்துட்டேன்,'' என்றார் அசிஸ்டெண்ட்.

பிறகு அந்த அசிஸ்டெண்ட் சொன்ன கிசுகிசு: ''நடிகர் அந்தச் சட்டையைத் தனியே ஒரு பைக்குள்தான் பத்திரமாக வைத்திருந்தார். வேண்டுமென்றே தயாரிப்பாளர்தனைச் சுத்தல்லே விடறதுக்காக, காணோம்னு ஆட்டம் காட்டி இருக்கிறார்.''

—சஜ்ஜி

## ட்ராஃபிக் ஜாமா? அப்படின்னா...



ஒரு டிராஃபிக் போலீஸ்காரர் மேடை மீது ஏறி நின்று கொள்கிறார். அவருக்கு வலது, இடது புறங்களில் ஒரு ஸ்டீரிங் வீல். அதை இப்படியும் அப்படியுமாக உருட்டினால் அதனுடன் இணைக்கப் பட்ட ஒரு சதுரப் பெட்டி, போக்குவரத்து வாகனங்கள் 'நிற்க'வோ 'செல்க'வோ செய்யும்.

இரவில் 'நிற்க' சிவப்பாகவும் 'செல்க' பச்சையாகவும் ஒளிரும்.

''ஆட்டோமாடிக் சிக்னல் போட்டால் என்ன?'' என்று அந்தப் போலீஸ்காரரைக் கேட்டேன்:

''இப்ப நீங்க அஞ்சு நிமிஷமா படம் எடுத்துப் பேசிட்டிருக்கீங்க. டிராஃபிக் ஜாம் ஆகலையே,'' என்றார் அவர்.

படம், தகவல்: பிரபு சங்கர்

---

நிலவுகின்றனவோ அங்கெல்லாம் புத்த மதம் உலவுகிறது,'' என்றார் துறவியார், கண்களை அந்த முத்தாணி மண்டபத்தின் மேல்புறத்துக்காக உயர்த்தி, அங்கிருந்த சித்தார்த்தன் சித்திரங்களைப் பார்த்துக் கொண்டே.

''அந்தச் சாந்தமும் சந்துஷ்டியும் இப்பொழுது அரையன் ராஜராஜனுக்கு ஏற்பட்டு விட்டது போலிருக்கிறது?'' என்று அரசன் ஏளனமாகக் கேட்டான்.

துறவி பெருமூச்செறிந்து கொண்டே சொன்னார்: ''இல்லை மன்னவா! அவன் மனத்தில் சாந்தி யுமில்லை, சந்துஷ்டியும் இல்லை. மற்றவர் களுக்குச் சாந்தியும் சந்துஷ்டியும் விளைவிக்கவே அவன் ஜீவிக்கிறான். உன் சாம்ராஜ்யத்தில் அன்பையும் க்ஷேமத்தை யும் நிலவ விடுவதே அவன் வாழ்வின் லட்சியம். அவனிடம் அவநம்பிக்கை கொள்ளாதே. உன் நன்மைக்கே அவன் உயிர் வாழ்கிறான்,'' என்று.

''அதற்காகத்தான் இந்த ரகசிய ஓலையை உமக்கு அனுப்புகிறானோ?'' என்று வேந்தன் வினவினான்.

''ஆமாம்.''

''அப்படியானால் இந்த ஓலை யில் என்னதான் எழுதியிருக்கிறது?''

''சொல்ல முடியாத நிலையி லிருக்கிறேன் இராஜேந்திரா!''

''அப்படியானால் இதை உடைத்தே பார்க்கிறேன்!'' என்று இராஜேந்திரன் கையிலிருந்த ஓலையின் முத்திரைகளை உடைக்க ஆரம்பித்தான்.

அடுத்த விநாடி துறவியின் குரல் மிகக் கடுமையாக ஒலித்தது அந்த முத்தாணி மண்டபத்தில். ''முத்திரை களை உடைக்காதே இராஜேந்திரா. உன் மீது ஆணை! உன் குலத்தின் மீது ஆணை! எந்தப் புலிக் கொடி உன் வெற்றிக் கெல்லாம் அடையாளமாக விளங்கு கிறதோ அதன்மீது ஆணை. உனக்கு இந்தப் பேரரசைக் கொடுத்த உன் தந்தை யின் மீது ஆணை!'' என்று கூறினார் துறவியார்.

அரசன் முத்திரையின் ஒரு பகுதியை உடைத்தான். துறவியார் அவன் கையை வெடுக்கென்று பிடித்துக் கொண்டார். ''கடைசி முறையாகச் சொல்கிறேன். எந்த மன்னுயிரையெல் லாம் உன்னுயிர் போல் பாவிக்கிறாயோ அந்த உன் மக்களின் மீது ஆணை, உடைக்காதே ஓலையை,'' என்று உத்தர விட்டார் துறவியார்.

பல ஆணைகளுக்கும் அசையாத இராஜேந்திரன், கடைசி ஆணையில் அசந்து போனான். ''மக்களின் மீது ஆணை,'' என்று உதடுகள் துடிதுடித்துச் சொற்களை உதிர்த்தன. துறவியை ஒருகணம் முறைத்துப் பார்த்த இராஜேந்திரன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. ஏதோ பேச வாயெடுத்த அவன் வாய் அடைத்து விடவே, துறவியிடம் ஓலையைக் கொடுத்துவிட்டுப் பேசாமல் உள்ளறையை நோக்கி நடந்தான்.

என்றும் கம்பீரமாகக் காட்சி யளிக்கும் இராஜேந்திரன் நடை இன்று மிகவும் தளர்ந்து காணப்பட்டது. அதைக்



அவள்: என்னது, உங்க வீட்டிலே நடு ராத்திரியிலே ஆடு மாடு எல்லாம் கத்தற மாதிரி ஒரே சத்தமா இருந்துச்சே?

பாங்க் மானேஜர் மனைவி: அதுவா? என் கணவர் சாங்க்ஷன் செய்த ஆட்டுக் கடன், மாட்டுக் கடன் எல்லாம் வசூலாகவில்லை. அந்தக் கவலையிலேயே ராத்திரி தூக்கத்திலே அப்படிக் கத்துகிறார்.

—எஸ். துரை

கண்ட தஞ்சை மடாலயத் துறவியின் கண்களில்கூட நீர் கசிந்தது. ''உனக்கு இணையான மன்னன் உலகில் கிடையாது இராஜேந்திரா! உன் சாம்ராஜ்யம் செழிக்கத்தானே இத்தனை பாடு படுகிறோம். இன்னும் இரண்டு மாதங்கள் பொறுத்திரு. மன்னவா! உன்னையும் மக்களையும் பாதிக்க இருக்கும் சிக்கல்கள் அறுந்து போகும். இடையில் எது நேர்ந்தாலும் மன்னித்து விடு என்னை,'' என்று வாய் விட்டே பேசினார். அதுவரை மௌனமாக நின்றிருந்த பேரமைச்சர் துறவியை அணுகி, வணங்கிக் கொண்டே சொன்னார்: ''துறவிக்கு வேந்தன் துரும்பு என்ற பழமொழியைக் கேட்டிருக்கிறேன் சுவாமி! ஆனால் இன்றுதான் அதன் அர்த்தத்தை நேரில் கண்டேன்,'' என்று.

பேரமைச்சரை நோக்கித் திரும்பிய துறவி, ''தவறு பேரமைச்சரே! பழமொழி தவறு. துறவிக்கு வேந்தன் துரும்பல்ல. அதுவும் இராஜேந்திர மன்னவன் கண்டிப்பாகத் துரும்பல்ல. அவன் குணக் குன்று. குணத்தினால் இமயத்தைவிட உயர்ந்து நிற்பவன். இல்லாவிடில் இந்த அற்பனை ஒரு விநாடியில் சீவிப் போட்டு ஓலையைப் படித்திருக்கலாமே. இவனைப் பெற்ற இராஜராஜன் சிறப்புற்றான். இவனைப் பெற்ற இந்த நாடும் சிறப்புப் பெற்றது. அவனல்ல துரும்பு. அவனிடம் உண்மையைச் சொல்ல முடியாமல் தவிக்கிறேனே, நான்தான் துரும்பு,'' என்று நாத் தழுதழுக்கப் பேசினார்.

அவர் எண்ணங்கள் எங்கெங்கோ பறந்து கொண்டிருந்ததால், அரண்மனையில் இரண்டு மூன்று நாட்களாவது தங்க வேண்டும் என்று பேரமைச்சர் விடுத்த அழைப்பைக்கூட ஏற்க மறுத்தார். அரசன் சென்றதும், அவன் தன்னிடமளித்த ஓலையைத் திறந்து படித்த அவர் முகத்தில் பெரும் கவலை சூழ்ந்தது. பிறகு பேரமைச்சரை நோக்கித் திரும்பிய துறவியார், ''பேரமைச்சரே! இப்பொழுது நிரஞ்சனா தேவி எங்கிருக்கிறாள்?'' என்று வினவினார்.



'நிலா நிலா ஓடிவா...
மல்லிகைப்பூ
கொண்டு வா...'

இந்திப் பாத்து வேந்தாம்...
நிலா ஓதி வரவேந்தாம்...
மல்லிப்பூ கொந்து
வரவேந்தாம்...'

சரி... 'நிலா நிலா
நடந்து வா.....
ரோஜாப்பூ
கொண்டு வா...'



''ஆபரேஷன் தியேட்டர் வாசல்லே ஏன் மெட்டல் டிடெக்டர் வச்சிருக்கு?''

''ஆபரேஷன் முடிஞ்சு பேஷண்ட்டை திரும்ப வார்டுக்குக் கொண்டு போகும்போது அவரோட உடம்புக்குள்ளே கத்தி, கத்தரி ஏதாவது மாட்டிக்கிட்டிருந்தா தெரிஞ்சிடு மில்லையா!''

— சு. நித்யா

---

''சூரத்தில்,'' என்று பதில் கூறினார் பேரமைச்சர்.

துறவியின் முகத்தில் கிலி படர்ந்தது. ''என்ன? சூரத்திலா?'' என்று கேட்டார்.

''ஆமாம்,'' என்றார் பேரமைச்சர்.

''அங்கு இன்னும் யாரிருக்கிறார்கள்?''

''வந்தியத் தேவர் இருக்கிறார்.''

''வந்தியத் தேவரும் அங்குதானிருக்கிறாரா? வெகு அழகு!''

''ஏன் துறவியாரே, இதிலென்ன தவறு நடந்தது? சூரத்து மாளிகை ஒன்றுதான் காலியாக இருந்தது. வேங்கி நாட்டு மன்னன் மகளை அங்கு அனுப்பி விட்டோம்.''

துறவியின் கண்களில் கோபம் பலமாக வீசியது. ''அனுப்பி விட்டீரா! பேஷ்! சூரத்தில் நிரஞ்சனா தேவியும் வந்தியத் தேவரும், அதே ஊரில்....'' என்று ஏதோ சொல்லப் போனவர், மேலே பேச்சை ஓட்டாமல், ''சரி சரி, இன்று பகல் இங்கேயே தங்குகிறேன். இன்றிரவு யாருக்கும் தெரியாமல் நான் சூரம் போக வேண்டும்,'' என்றார்.

''இரவிலா! ஏன்?''

''பகலில் செய்யக்கூடிய வேலையல்ல இது.''

பேரமைச்சர் துறவியார் மீது சந்தேகம் ததும்பிய கண்களை ஓட்டினார். துறவியார் பெரிதாக நகைத்தார்.

''ஏன் நகைக்கிறீர்?'' என்று கேட்டார் பேரமைச்சர்.

''என் தலையெழுத்தை நினைத்து, துறவியாக வாழ வேண்டியவன் உலகச் சிக்கலில் திளைத்திருப்பதை நினைத்து.''

ஏதோ பெரும் அரசியல் ரகசியம், இராஜேந்திரன் அறியத் தகாத ரகசியம், துறவியாரின் இதயத்திலே பூட்டிக் கிடக்கிறதென்பதை உணர்ந்து கொண்டாலும் அதைப் பற்றி ஏதும் கேட்கவில்லை பேரமைச்சர். துறவிக்கு வேண்டிய சகல வசதிகளையும் செய்து கொடுத்தார். அன்றிரவோடு இரவாகப் பயணம் செய்த பிரும்மானந்தர், சூரத்துக்கு நள்ளிரவில் வந்து, சூரத்தின் எல்லையிலேயே பல்லக்கை நிறுத்தி இறங்கிக் கொண்டு, திரும்பிச் செல்ல அவர்களுக்கு உத்தரவு கொடுத்தார். பல்லக்கு கண்ணுக்கு மறைந்ததும் விடுவிடு என்று நடந்து சில தெருக்களைக் கடந்து கடைசியாக ஊரை விட்டுத் தள்ளியிருந்த ஒரு தோப்புக்குள் காட்சியளித்த ஒரு சிறு மாளிகையை அணுகி இருமுறை மெல்லக் கதவைத் தட்டினார். உள்ளிருந்து விளக்குடன் வந்து கதவைத் திறந்த வேலைக்காரனிடம், பிரும்மானந்தர், தமது முஷ்டியைப் பிடித்துக் காட்டி ஏதோ சைகை செய்யவே, வேலையாள் பதிலேதும் சொல்லாமல் அவரை உள்ளே அழைத்துச் சென்றான். அந்த மாளிகையின் நடுக் கூடத்திலே இருந்த நடுத்தர வயதுள்ள ஒரு மாது துறவியாரைக் கண்டதும் எழுந்திருந்து, ''வாருங்கள்! வாருங்கள். ஏது இந்த நள்ளிரவில்?'' என்று முகமன் கூறிக் கொண்டே, துறவியார் உட்காருவதற்கு ஓர் ஆசனத்தையும் சுட்டிக் காட்டினாள். ஆசனத்தில் அமர்ந்த துறவியும் வந்த சமாசாரத்தை விளக்க முற்பட்டு, ''ஆபத்து நெருங்குகிறது மகளே!'' என்று சோகம் ததும்பிய குரலில் கூறினார்.

''உண்மையாகவா? என் மகனுக்கு...'' என்று பதை பதைப்புடன் கேட்டாள் அவள்.

''அவனுக்கொன்றும் ஆபத்தில்லை மகளே! சோழ சாம்ராஜ்யத்தைத்தான் ஆபத்து நெருங்கி வருகிறது. எந்த ஆபத்தைத் தவிர்க்க நீ இந்த அஞ்ஞாத வாசத்தை ஏற்றுக் கொண்டாயோ, அந்த ஆபத்து மிகத் துரிதமாக நெருங்குகிறது,'' என்று தொடங்கிய துறவியார், நெருங்கி வரும் ஆபத்தைப் பற்றி விளக்க விளக்கப் பெரும் கிலி படர்ந்தது அந்த மாதரசியின் முகத்திலே. ''இதற்காகவா நாங்கள் எங்கள் வாணாளையெல்லாம் வீணாக்கினோம் துறவியாரே! இதற்கொரு வழியில்லையா?'' என்று கதறினாள் அவள்.

(தொடரும்)

# மன்னன் மகள்

7.4.88

## 62. மணிமேகலை

அரசியல் தொல்லைகளிலிருந்து அவ்வப்பொழுது விடுபட்டுச் சிற்சில நாட்கள் ஓய்வெடுத்துக் கொண்டு உல்லாசமாகப் பொழுது போக்குவதற்காகப் பல்லவ மன்னர்களால் நிர்மாணிக்கப்பட்ட மாளிகைகளையே பெரும்பாலும் உடைய, கூரம் நகரத்தை அடுத்த அந்த அடர்த்தியான தோப்பிலே தன்னந்தனியே நின்ற அந்த மாளிகையிலே, துறவிகளைவிட ஒரு படி அதிகமாகவே உலக பந்தங்களிலிருந்து விடுபட்டுத் தனி வாழ்க்கை நடத்தி வந்த அந்த மாதரசி, துறவியார் தந்த தகவலைக் கேட்டதும் துன்பச் சூழலில் பூராவாகச் சிக்கிக் கொண்டதால், அவள் கண்களிலிருந்து அருவிகளைப் போல் நீர் சுரந்து பிரவாகித்தது. கைகளிலே முகத்தைப் புதைத்துக் கொண்டு அவள் விக்கி விக்கி வெகு நேரம் அழுவதைக் கண்ட பிரும்மானந்தர் மனமும் பாகாக உருகியதால், அவளைச் சாந்தப்படுத்த முயன்று, ''அழ வேண்டிய அவசியமில்லை, மகளே! நீ எந்த வம்சத்தைச் சேர்ந்தவள் என்பதை எண்ணிப் பார். அந்த வம்சத்தில் மன மகிழ்ச்சிக்கு இடங் கொடுத்தவர்கள் யாரேனும் இருக்கிறார்களா என்பதை யோசித்துப் பார்,'' என்று தைரியமூட்டினார்.

துறவியாரின் சொற்கள் அவளுக்கு ஓரளவு ஆறுதலை அளித்ததால், மெள்ள மெள்ள அவள் தன் துக்கத்தை ஓரளவு கட்டுக்குள் கொண்டு வந்தாள். முகத்திலிருந்த கைகளை நீக்கிக் கடைசியாகப் புடவைத் தலைப்பால் கன்னத்திலும் வழிந்தோடிய கண்ணீரையும் துடைத்துக் கொண்டு, அந்த மாதரசி துறவியார் மீது மீண்டும் தன் அழகிய விழிகளை நாட்டினாள். அவள் பார்வையில் தோய்ந்து கிடந்த சோகத்தின் ஆழத்தைக் கவனித்த பிரும்மானந்தரும், துன்பம் கலந்த பெருமூச்சொன்றை விட்டு, ''மகளே! சிலர் துன்பப் படுவதற்கென்றே பிறக்கிறார்கள். அதுவும் தியாகிகளுக்குத் துன்ப வழியைத் தவிர வேறு வழியில்லை. இது வாழ்க்கையின் நியதி. இதற்கு நாம் என்ன செய்யலாம்?'' என்று அவளைத் தேற்ற முயன்றார்.

''என் துன்பத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை துறவியாரே! மக்களுக்கு எதிரிகளால் ஏற்படக் கூடிய துன்பத்தைப் பற்றித்தான் கவலைப்படுகிறேன். தாய்மையின் உணர்ச்சிகளையெல்லாம் உள்ளடக்கி இதயத்தில் நான் பூட்டி வைத்திருக்கும் இந்த ரகசியம் என்னுடன் மாண்டுவிடும்; பிறகு சோழ சாம்ராஜ்யம் சௌக்கியப்பட்டு விடும் என்று நம்பியிருந்தேனே! அந்த நம்பிக்கையிலெல்லாம் மண் விழுந்து விட்டதே! கரிகாலன் பிறப்பின் ரகசியத்தை உணர்ந்து கொண்டு விட்டதாகச் சொல்கிறீரே!'' என்றாள் அவள், ஆசனத்தில் பதுமைபோல் உட்கார்ந்தபடியே.

''ஆம் மகளே! உன் மகன், தான் யார் என்பதை உணர்ந்து கொண்டு விட்டான். உணர்ந்து ஆறு மாதங்கள் ஆகின்றன,'' என்றார் துறவியார்.

''ஆறு மாதங்களா! அறிந்துமா என்னை விட்டு விலகி நிற்கிறான் என்

சாண்டில்யன்



மகன்!'' ஆச்சரியம் பெரிதும் துளிர் விட்ட குரலில் கேட்டாள் அவள்.

''ஆறு மாதங்கள் ஆகின்றன மகளே! ஆனால், உன் இருப்பிடம் அவனுக்குத் தெரியாது. பிறப்பு மர்மத்தை நாகர்கள் தலைவன் உடைத்து விட்டான் சக்கரக் கோட்டத்திலே. ஆனால், உன் இருப்பிடத்தைக் கூறுமுன்பு அவன் உயிர் உடலை விட்டுப் பிரிந்து விட்டது,'' என்று துறவியார் விளக்கினார்.

''பிரதாபருத்திரனா ரகசியத்தைச் சொன்னான்?''

''ஆம் மகளே!''

''அவன் என் 'கணவருக்குச் செய்து கொடுத்த பிரமாணம்?''

''உடைத்து விட்டான். பிரமாணத்தை உடைத்து விட்டான். ரகசியத்தை உடைத்து விட்டான். ஏன், சோழ சாம்ராஜ்யத்தின் அஸ்திவாரத்தையே உடைத்து விட்டான். உயிரோடு சாதிக்க முடியாததை இறப்பில் சாதித்து விட்டான் பிரதாபருத்திரன்.''

மஞ்சத்திலே உட்கார்ந்திருந்த மாதரசி நீண்ட நேரம் மௌனமாயிருந்தாள். பிறகு கேட்டாள்: ''பிறப்பின் ரகசியத்தை அறிந்த என் மகன் என்ன செய்தான்?'' என்று.

துறவியார் முகத்திலே பெருமை படர்ந்தது. ''உன் மணி வயிற்றில் பிறந்தவன் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்தான். தகப்பனுக்கு அசல் பிள்ளையம்மா அவன்! சாம்ராஜ்யத்தைக் கேட்கவில்லை; பதவிகளைக் கேட்கவில்லை,'' என்று பேசிப் பாதியில் நிறுத்திய துறவியாரை நோக்கிய அந்த மாதரசி, ''பின் எதைக் கேட்டான் துறவியாரே?'' என்று ஆசையுடன் கேட்டாள்.

துறவியார் ஏதோ பெரும் குற்றம்





என்னென்னவோ பேரிலே அட்டைப் பெட்டியிலே மாம்பழ ஜூஸ், ஆப்பிள் சாறு விற்கிறார்கள். ஒரு மூலையிலே மட்டும் துவாரம் போட்டுக் குடிக்க ஒரே ஒரு ஸ்ட்ராதான். ஹூம்... இரண்டு பேர்—காதலர்கள் என்று வைத்துக் கொள்ளுங்களேன்—குடிக்கிற மாதிரி இரண்டு துவாரம் போட்டு இரண்டு ஸ்ட்ரா கொடுத்தால் என்னவாம்? குடியா முழுகிப் போய்விடும்?

செய்தவரைப் போல் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு மெல்லிய குரலில் சொன்னார்: ''உன்னைப் பார்க்க வேண்டுமென்று கேட்டான், மகளே!'' என்று.

அந்த மாதரசியின் கமல விழிகளில் தாய்மை தூண்டிய இரண்டு நீர்த் துளிகள் மீண்டும் தோன்றின. ''என்னைப் பார்க்க வேண்டுமென்று கேட்டானா குழந்தை?'' என்றாள் நாத் தழுதழுக்க.

துறவியாருக்கும் துக்கம் பீரிட்டுக் கொண்டு வந்ததால் பதில் சொல்லாமல், 'ஆம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினார்.

பெருமையும் துக்கமும் கலந்த குரலில் அவள் மீண்டும் கேட்டாள்: ''அதற்கு அரையன் ராஜராஜன் என்ன பதில் சொன்னார்?''

''உன் அனுமதி பெற்று, உன்னிடம் அழைத்து வருவதாகச் சொன்னார்.''

''அதற்கு என்ன பதில் சொன்னான், குழந்தை?''

''உன் உதிரத்தில் பிறந்தவன் சொல்ல வேண்டிய பதிலைச் சொன்னான்.''

''அதாவது?''

''காத்திருக்கச் சம்மதித்தான். நீ அனுமதி கொடுத்தால் உன்னைப் பார்ப்பதாகச் சொன்னான். கங்கைப் போர் முடிந்ததும், உன்னைத் தேடி வருவானென்று நினைத்தேன்...'' என்று எதையோ சொல்ல முடியாமல் தயங்கினார் துறவியார்.

துறவியாரை அவள் உற்று நோக்கினாள். ''நினைத்தேன் என்றால்...?'' என்று ஒரு கேள்வியையும் வீசினாள்.

பதிலுக்குப் பெரும் வெடியை எடுத்து வீசிய துறவியார், ''அதுவரை அவன் அங்கிருக்கப் போவதில்லை மகளே! அவன் இன்னும் இரண்டு நாளைக்குள் காஞ்சி மாநகருக்குள் வருகிறான்,'' என்றார்.

அதுவரை எத்தனையோ உணர்ச்சிகளை வசப்படுத்திக் கொண்டு பெரிய ராணிபோல் ஆசனத்தில் வீற்றிருந்த அவள், திடீரென்று ஆசனத்திலிருந்து எழுந்து, ''என்ன! கரிகாலன் காஞ்சிக்கு வருகிறானா? எதற்குத் துறவியாரே, எதற்கு?'' என்று துடிதுடித்துக் கேட்டாள்.

''சோழ மன்னனைச் சந்திப்பதற்கு,'' என்றார் துறவியும் குரலில் ஓரளவு கவலை பாய.

''என்ன! கரிகாலன் இராஜேந்திரனைச் சந்திப்பதா? இது நடவாத காரியம்,'' என்றாள் அவள், ஏதோ ஆகஜை இடுபவள் போல்.

''நடவாத காரியமாவது! இது கண்டிப்பாக நடக்கப் போகிற காரியம். இதை நீயும் தடுக்க முடியாது. நானும் தடுக்க முடியாது,'' என்றார் துறவி.

''ஏன் தடுக்க முடியாது?'' என்று அவள் கேட்டாள்.

''இதோ பார்,'' என்று மடியிலிருந்த ஓலைச் சுருளை எடுத்து அவளிடம் நீட்டினார் பிரும்மானந்தர்.

நடுங்கும் கைகளுடன் ஓலையை வாங்கிக் கொண்ட அவள் அறையின் ஒரு

கோடிக்குச் சென்று அங்கிருந்த தூங்கா விளக்கில் அதை வரிவரியாகப் படித்தாள். பிறகு ஓலையைத் திருப்பி, அதில் பொறிக்கப்பட்டிருந்த முத்திரைகளைக் கவனித்தாள். அவள் கண்களிலே துக்கமும் ஆனந்தமும் கவலையும் கலந்து தாண்டவமாடின. துறவியார் ஏற்கனவே உடைத்திருந்தாலும், மீதியிருந்த முத்திரைச் சின்னங்களைக் கண்டதும், ''இந்த முத்திரைகள்...?'' என்று கேட்டாள்.

''உங்கள் ராஜவம்ச முத்திரைகள்,'' என்றார் துறவியார்.

''இந்தக் கையெழுத்து?''

''உன் மகனுடையது.''

''மணி மணியாக எழுதுகிறான் துறவியாரே!''

''அவனுக்குப் பயிற்சி சூடாமணி விஹாரத்தில் என்பது நினைவிருக்கட்டும்.''

''வாளைப் பிடிக்கும் கைகளுக்கு....''

''கையெழுத்து தலையெழுத்தாகத்தானிருக்கும். ஆனால் உன் மகன் சாஸ்திரம் படித்தவன் மகளே! சூடாமணி விஹாரத் தலைவர், ஒரு பேரரசனுக்கு வேண்டிய சகல வித்தைகளையும் கற்பித்திருக்கிறார். அவன் வாள் பிடிக்கும் முறையை நீ பார்த்ததில்லையே?''

விளக்கின் அருகில் ஓலையைக் கையில் பிடித்துப் படித்துப் பரவசப்பட்டுக் கொண்டிருந்த அந்த மாதரசி, தன்னை அடியோடு ஆகர்ஷித்து நின்ற அந்த ஓலையிலிருந்து கண்களை அகற்றி, முகத்தைத் தூக்கித் துறவியாரை நோக்கி, ''அந்தச் செல்லக் கைகளை ஐந்து வயதுக்குப் பிறகு எங்கு பார்த்தேன் பிரும்மானந்தரே?'' என்றாள். அவள் குரல் உணர்ச்சி மிகுதியால் ஆடியது.

உள்ளத்தை அப்படியே நெகிழ்த்தும் அந்தக் குரலைக் கேட்ட பிரும்மானந்தரும் சோகானந்தராக மாறி, ''மகளே! அந்தச் செல்லக் கைகள் இன்று இந்தச் சாம்ராஜ்யத்தை வடக்கே ...டும் விஸ்தரித்திருக்கிறது. உன் கணவனின் கரங்கள் சோழப் பேரரசைச் சிங்களத்தில் விஸ்தரித்தன. உன் மகன் கைகள் கங்கைக்குப் பாதை போட்டன. நீ கொடுத்து வைத்தவள். வீரன் மனைவியாகி, வீரனின் தாயுமாகித் தியாகத்தின் சிகரமாகவும் விளங்கும் தமிழ்த் தாய்மார்கள் எத்தனை பேர் இந்நாட்டிலிருக்கிறார்கள்? உன்னால் இந்நாடு பயனுற்றது. பெருமையும் பெற்றது,'' என்று உணர்ச்சி வெள்ளமாகப் பிரவாகித்த குரலில் சொன்னார்.

பெருமையுடன் தலையை அசைத்த அந்த மாதரசியை நோக்கிய துறவியார், ''மணிமேகலை....'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார். அந்தப் பெயரைக் கேட்ட அவள், திடீரென

---

தெருவில் இரண்டு பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். பக்கத்தில் ஒரு சிறுவன் நின்று அழுது கொண்டிருந்தான்.

அந்த வழியே சென்ற ஒரு போலீஸ்காரர் அவனிடம், ''தம்பி, இரண்டு பேரில் யார் உன் அப்பா?'' என்று விசாரித்தார்.

''தெரியாது அதைப் பற்றித்தான் அவர்கள் சண்டை போட்டுக்கொண்டிருக்காங்க,'' என்றான் சிறுவன்.

ஒரு பெரிய கட்டிடத்தில் பலவிதமான மாறுதல்கள் செய்து கொண்டிருந்தார்கள். எனவே அங்கங்கே பலவிதமான அறிவிப்பு அட்டைகள் மாட்டியிருந்தார்கள்.

ஒரு பெண் அந்த வழியே சென்றபோது



ங்கே?



ப்படி

அவரை நோக்கி இரண்டு அடிகள் எடுத்து ''பிரும்மானந்தரே!'' என்று எச்சரிக்கும் குரலில் அவர் பெயரையும் சொன்னாள்.

''ஏனம்மா?'' என்று கேட்டார் அவர்.

''அந்தப் பெயரை மறுமுறை சொல்ல வேண்டாம்.''

''ஏன்?''

''அது மறைந்து ஆண்டுகள் இருபத்திரண்டு ஆகிவிட்டன.''

''பெயர் மறையுமா மகளே?''

''அழிப்பவர் அழித்தால் அழியும்.''

''அழித்தது யார்?''

''அழிக்க யாருக்கு உரிமை உண்டோ அவர்கள் அழித்தார்கள்.''

அவள் இதயம் வெடிக்கத்தான் பேசினாள். அதை உணர்ந்து கொண்ட துறவியாரும், துன்பம் கலந்த புன்முறுவலொன்றை அவள் மீது வீசினார். ''புரிந்து கொண்டேன் மகளே! கரிகாலன் கர்ப்பத்திலிருக்கையிலேயே உன் பெயரை மாற்றி விட்டானா? எப்பேர்ப்பட்ட தியாகி அவன். அனுபவிக்க ஒரு குடும்பம்; அழிந்து போக ஒரு குடும்பம்!'' என்று பெருமூச்சு விட்டார் துறவியார்.

''அழிவும் ஆக்கமும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டது என்று அவர் சொல்லுவார்.''

''சொல்லுவார் சொல்லுவார்! நன்றாகத்தான் சொன்னார் போ,'' என்று அலுத்துக் கொண்டார் துறவியார்.

அவள் முகத்தில் அலுப்பேதுமில்லை. ''அவர் எதுவும் காரணமில்லாமல் சொல்ல மாட்டார் துறவியாரே. எங்கள் குடும்பம் மறைந்து, இராஜேந்திரன் குடும்பம் வாழ வேண்டுமென்பது அவர் பிரார்த்தனை,'' என்றாள் ஓரளவு மகிழ்ச்சியும் குரலில் பொங்க.

''தெய்வப் பிறவிகள் என்று சொல்கிறார்களே, அப்படிப்பட்டப் பிறவிகள் உண்டோ என்று சந்தேகப் பட்டேன். கண்டிப்பாக இருக்கிறார்கள்,'' என்று தமக்குள்ளேயே சொல்லிக் கொண்ட துறவியார், ''அது கிடக்கட்டும் மகளே! இன்னும் இரண்டு நாட்களில் இராஜேந்திரனைக் கரிகாலன் சந்திக்கப் போகிறானே, இந்தச் சங்கடத்திற்கென்ன செய்வது?'' என்று கேட்டார்.

''சந்தித்தால் உண்மை வெளியாகிவிடுமே?'' என்று அவளும் துன்பப் பெருமூச்சு விட்டாள்.

''அது வெளியாகாது மகளே!''

''கண்டிப்பாய் வெளியாகும்.''

''எப்படி?''

''அவன் கண்கள்.''

''யார் கண்கள்? கரிகாலன் கண்களா?''

---

ஓர் அட்டை தற்செயலாக அவள் முதுகுப் புறத்தில் மாட்டிக்கொண்டு விட்டது. அதைக் கவனியாமலேயே அவள் பாட்டுக்குப் போய்க்கொண்டிருந்தாள். அட்டையில் இருந்ததாவது:

''முன்புறம் சில மாறுதல்கள் செய்யப் பட்டு வருவதால் வாடிக்கையாளர்கள் பின்புறம் வழியாகப் பிரவேசிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.''

மரணத் தறுவாயில் மனைவி சொன்னாள்: ''நீங்க எப்படியும் கல்யாணம் செய்துப்பீங்க. அவள் இங்கே சமைப்பாள். சாப்பிடுவாள். நம் படுக்கையில் படுத்துக்கொள்வாள். எல்லாம் பரவாயில்லை. ஒண்ணே ஒண்ணு மட்டும் கேட்டுக்கிறேன். என்னோட டிரெஸ்களை மட்டும் அவள் போட்டுக்க விடாதிங்க.''

''அந்த விஷயத்தில் உனக்குக் கவலை வேண்டாம். எப்படியும் ஜூலிக்கு உன் சைஸ் சரியாயிருக்காது,'' என்றான் கணவன்.



அப்பொழுது?

# BPL·SANYO

## இசை வேந்தர்கள்

பிபிஎல் தரம்

ஸான்யோ தொழில் நுட்பம் • பலவித ரகங்கள்

இப்பொழுது மனதை கவரும் விலைகளில் கிடைக்கிறது.

க்யூபிக்ஸ்

மினி மற்றும் ஸ்லிம்



M7740K



M7010K



M1760H

ஸ்டீரியோ ரேடியோ/காஸட் ரிகார்டர்கள்

ஸ்டீரியோ இரட்டைக் காஸட் ரிகார்டர்



C1K



M9903-2H



MW200K

மோனோ-ரேடியோ/காஸட் ரிகார்டர்கள்

காஸட் ரிகார்டர்கள்



M2429-2H



M2800-2H



C1004



C1002

BPL/3229 TAM

# BPL-AUDIO

***Always the best!***

''ஆம் பிரும்மானந்தரே! அவன் கண்களே உண்மைக் கதையைச் சொல்லுமே. ஐந்து வயதிலேயே அவர் முகத்தை உரித்து வைத்திருந்ததே அவனுக்கு. இந்த வயதில் எப்படி மாறும்?''

துறவியார் தீர்க்காலோசனையில் ஆழ்ந்தார். அவளைப் பிடித்திருந்த அந்தப் பயம் அவரையும் வாட்டியது. கடைசியாக அவர் பேச முற்பட்டபோது, ஆழ்ந்த கவலையும் அவர் குரலில் தெரிந்தது. ''ஆம் ஆம்! கும்பகோண மடாலயத்தில் அவனைச் சந்தித்தபோதே அந்தப் பார்வையிருந்தது. எதற்காகச் சிருஷ்டி கர்த்தா அத்தனை அச்சாக அவனைச் சிருஷ்டிக்க வேண்டும்?'' என்று சிருஷ்டி கர்த்தாவையே கடிந்து கொண்ட துறவியார், ''இந்த அரையன் ராஜராஜனுக்குப் புத்தி எங்கே போயிற்று? எதற்காகக் கரிகாலனை இங்கே அனுப்புகிறான்?'' என்று அவன் மீதும் எரிந்து விழுந்தார். மீண்டும் சற்று நேரம் யோசித்து விட்டு, ''மகளே கவனமாகக் கேள். சில நாட்களுக்கு எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்த மாளிகையை விட்டுக் கிளம்பாதே. நான் காஞ்சியிலேயே தங்கி, ஆபத்தை எத்தனை தூரம் தவிர்க்க முடியுமோ அத்தனை தூரம் தவிர்க்கிறேன். பிறகு புத்தர்பிரான் விட்ட வழி,'' என்று கூறினார்.

துறவியாரின் வார்த்தைகளில் ஒரு பகுதியை அவள் புரிந்து கொண்டாள். ஆனால் மாளிகையை விட்டு வெளியே கிளம்ப வேண்டாமென்ற அவர் உத்தரவுக்கு மட்டும் காரணத்தை அறியாததால் கேட்டாள், ''ஏன் நான் வெளிக் கிளம்பக் கூடாது?'' என்று.

''நிரஞ்சனா தேவியும் வந்தியத் தேவரும் இந்த ஊரில் தான் இருக்கிறார்கள்,'' என்றார் துறவியார்.

''வேங்கி நாட்டு மன்னன் மகளா? என் மகன் ஆசை கொண்டான் என்று எழுதியிருந்தீர்களே, அவளா?'' என்று விசாரித்தாள் மணிமேகலை.

ஒருவன்: அவங்க இரண்டு பேரும் ஒரே ஓட்டல்ல சாப்பிடறாங்கன்னு சொல்றே. ஒருத்தர் குண்டா இருக்கார். ஒருத்தர் ஒல்லியா இருக்காரே?

மற்றவர்: ஒல்லியா இருக்கிறவர் பணம் கொடுத்துச் சாப்பிடறவர். குண்டா இருக்கிறவர் அவர் கூடப் போயிட்டு வர்றவர்.



—சூ

—எம். சீதாமணி

## உங்களுக்கு நீங்களே

நீங்கள் படிக்கும் விஷயத்தை நினைவில் வைத்துக்கொள்ள ஒரு வழி:

கண்ணை மூடிக்கொண்டு, 'சேதி தெரியுமோ?' என்று ஆரம்பித்து, மெதுவாக, உங்களுக்கு நீங்களே அந்த விஷயத்தைச் சொல்லிக் கொள்ளுங்கள்.

சொல்லி முடித்ததும் 'அட அப்படியா?' என்று உங்களுக்கு நீங்களே ஆச்சரியமாகச் சொல்லிக் கொள்ளுங்கள்.

—மார்ஜரி வில்ஸன்

''ஆம்.''

''அப்படியானால் அவளைப் பார்க்க...''

''கரிகாலன் நிச்சயம் கூரத்துக்கு வருவான்.''

மணிமேகலையின் கண்கள் ஆனந்த பாஷ்பம் சொரிந்தன. ''அப்பொழுது நானும் அவனை ஒருமுறை பார்க்கலாமா, பிரும்மானந்தரே?'' என்று கேட்டாள்.

பிரமிப்பினால் மலர்ந்த விழிகளை அவள் மீது நாட்டினார் பிரும்மானந்தர். சோழ சாம்ராஜ்யத்துக்கு ஆபத்து மெள்ள மெள்ள அணுகுவதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டார். அந்த ஆபத்து எத்தனை பெரிய இடிபோல இறங்கக் கூடியது என்பதையும் உணர்ந்து கொண்டார். ஆனால், இத்தனை சீக்கிரம் அந்த இடி இறங்கும் என்று அவர் சொப்பனத்திலும் நினைக்கவில்லையாகையால், அன்றிலிருந்து இரண்டாவது நாள் சோழப் பேரரசுக்குப் பெரும் கண்டம் என்பதைத் தெரிந்து கொண்டு கவலைக் கடலில் அழுந்தினார்.

இராஜேந்திரனும் கரிகாலனும் சந்திப்பது இடிகளை உதிர்க்கவல்ல பெரிய மேகங்களின் சந்திப்புக்குச் சமானம் என்பதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டதால், என்ன செய்வதென்று அறியாமல் தவித்த தஞ்சைத் துறவியாருக்கு அடுத்த நாளே பெரும் அபாயம் காத்திருந்தது காஞ்சி மாநகரத்திலே.

(தொடரும்)




## 63. மன்னன் விளக்கமும் துறவியின் கலக்கமும

இராஜேந்திர சோழ தேவனும் கரிகாலனும் சந்தித்தால் ஏற்படக்கூடிய அபாயத்தைப் பற்றி அடிக்கடி எண்ணியதன் விளைவாகக் கவலையால் பெரிதும் பீடிக்கப்பட்ட மனத்துடன் காஞ்சி மாநகரை மறுநாளே அடைந்த தஞ்சைத் துறவியார் பிரும்மானந்தர், அங்கு நடந்து கொண்டிருந்த ஏற்பாடுகளைக் கண்டு சொல்லொண்ணா வியப்பும் கலவரமும் அடைந்து பேரமைச்சர் மாளிகையை நோக்கி வெகு வேகமாக நடந்தார். நகரத்தின் தெருக்களில் தாம் கண்ட கோலாகலத்திற்கும் துரிதத்திற்கும் சிறிதும் குறையாத சூழ்நிலையைப் பேரமைச்சர் மாளிகையிலும் கண்ட பிரும்மானந்தர், விஷயம் விபரீத நிலைக்குச் செல்லுகிறதென்பதை ஓரளவு ஊகித்துக் கொண்டாரானாலும் அதற்கு வித்து எந்த இடத்தில் என்பதை உணர்ந்து கொள்ளப் பேரமைச்சரின் அந்தரங்க அறையை நாடிச் சென்றார். பிரும்மானந்தர் உள்ளே நுழைந்த சமயத்தில் தீவிர யோசனையுடன் ஓலையில் ஏதேதோ எழுத்தாணியால் துரிதமாக எழுதிக் கொண்டிருந்த பேரமைச்சர் ஓலையிலிருந்து கண்களை அகற்றாமலும், வந்தவர் யாரென்று பார்க்கத் தலையைச் சிறிதுகூடத் தூக்காமலும் கருமமே கண்ணாயிருந்தார். அவர் எதிரே அவர் கட்டளைக்காகக் காத்து நின்ற வீரர் இருவர்கூட அசைவற்று அவரையே பார்த்துக் கொண்டு நின்றதைக் கண்ட பிரும்மானந்தர், முக்கியமான ஏதோ கட்டளைகளைப் பேரமைச்சர் பிறப்பித்துக் கொண்டிருக்கிறார் என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டாலும் அந்தக் கட்டளைகள் யாதாயிருக்குமென்பதைப் பூரணமாக அறியாததாலும், அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை உள்ளூரப் பொங்கி எழுந்ததாலும், தம் வருகையைப் பேரமைச்சருக்கு உணர்த்த இஷ்டப்பட்டு ஒருமுறை தொண்டையைப் பலமாகக் கனைத்தார். அந்தக் கனைப்பினால் சிந்தனை கலைந்த பேரமைச்சர் எழுதுவதைச் சற்றே நிறுத்திக் கண்களை உயரத் தூக்கி, வந்திருப்பவர் யாரென்று கவனித்ததும், ''அடடா! துறவியாரா! கவனிக்கவில்லை; மன்னிக்க வேண்டும். இப்படி அமருங்கள்,'' என்று பரபரப்புடன் ஓர் ஆசனத்தையும் சுட்டிக் காட்டினார்.

ஆசனத்தில் அமர்ந்து கொண்ட பிரும்மானந்தர் பேரமைச்சர் கையிலிருந்த எழுத்தாணிமீதும் அவர் மடியிலிருந்த பலகை மீது கிடந்த ஓலை மீதும் கண்களை ஓட்டி, ''அமைச்சுத் தொழில் விடியற் காலையிலேயே தொடங்கி விட்டது போலிருக்கிறதே?'' என்று வினவினார்.

துறவியாரின் கண்கள் சென்றவிடங்களைப் பேரமைச்சரின் கண்களும் கவனிக்கத்தான் செய்தன. இருந்த

போதிலும் அதைக் கவனிக்காதது போலவே பேசத் தொடங்கிய பேரமைச்சர், ''அமைச்சுத் தொழிலுக்குக் காலையேது, மாலையேது, இரவுதானேது? அரசன் கட்டளையிட்டால் நிறைவேற்ற வேண்டியது அமைச்சன் பொறுப்பு,'' என்றார்.

''உண்மைதான் பேரமைச்சரே! பேரரசன் இடும் கட்டளை; அதுவும் ஒரு மன்னன் விஜயத்தை யொட்டி இடும் கட்டளை. அதை நிறைவேற்றும் பொறுப்பு இருக்கும்போது காலையென்றும் மாலை யென்றும் பார்த்தால் முடியாதுதான்,'' என்று ஒப்புக் கொண்டதுபோல் தலையாட்டிய துறவியாரை, ஆச்சரியம் ததும்பும் கண்களுடன் நோக்கிய பேரமைச்சர், ''மன்னர் விஜயமா? எந்த மன்னர் விஜயம் செய்யப் போகிறார்?'' என்று வினவினார்.

துறவியார் ஏளன நகையொன்றை உதிர்த்துவிட்டுச் சொன்னார்: ''பேரமைச்சரே! நான் துறவியாயிருந்தாலும் அரசியல் விஷயங்களை அறியாதவனல்ல.''

''அறியாதவர் என்று யார் சொன்னது?'' என்றார் பேரமைச்சர் பணிவு நிரம்பிய குரலில்.

''அப்படிக் குறிப்பாகச் சொல்ல வில்லை. ஆனால், உமது பேச்சின் உள்ளர்த்தம் அதுதான்.''

''நீர் சொல்வது விளங்கவில்லை துறவி யாரே!''

''மன்னர் விஜயமா என்று ஆச்சரியத் துடன் கேட்டது நீர்தானே?''

''ஆமாம்.''

''மன்னர் விஜயத்துக்கான ஏற்பாடு களைச் செய்வது யார்? கோட்டை வாசல்களில் பெரும் புலிக்கொடிகளைப் பறக்க விட்டது யார்? தெருக்களில் மகர தோரணங்களுக்கான கால்கள் ஏன் நடப்படுகின்றன? தெருக்களில் செல்லும் குதிரை வீரர்களையும் பார்த்தேன். குதிரைகளின் நெற்றிகளில் வெற்றிப் பட்டயங்



# விரைந்து செயல்படுவீர்!
# இயற்கை வழியில் குணம் பெறுவீர்.

**ஊண்டு + எய்டு**

இந்த மூலிகை மருந்தை ஸ்பிரே செய்யவும். அது வெட்டுக் காயங்கள், சிராய்ப்புகள் ஆகியவற்றிலிருந்து இரத்தம் வெளியாவதை உடனே நிறுத்தச் செய்து அவற்றை குணப்படுத்த ஆரம்பிக்கிறது. (இதை உபயோகிக்குமுன் காயத்தை சுத்தம் செய்யத் தேவையில்லை)

இது கிருமிகளை அழிப்பது மட்டுமல்லாமல் உடலின் இயற்கையான குணமாகும் தன்மையை துரிதப்படுத்தி, காயத்தை சீக்கிரமாகவே ஆற வைக்கிறது. வேறெந்த மருந்தும் இதைப்போல் விரைவாகவும் நல்ல முறையிலும் குணமாக்குவதில்லை.

**புருய்ஸ் + எய்டு**

சில சமயங்களில் கதவிடுக்கில் விரல் மாட்டிக்கொண்டு நசுங்கி விடும்; கிரிக்கெட் பந்தினால் அடிபட்டுவிடும். இச்சமயங்களில் இரத்தம் கட்டிக் கொண்டு ஊமைக் காயம் ஏற்படுகிறது.

முதல் முறையாக, இப்போது இதை குணமாக்க முடியும்.

புருய்ஸ் எய்டு ஸ்ப்ரே செய்யவும். அதிலுள்ள மூலிகைகள் விரைந்து செயல்பட்டு பயங்கர வலியிலிருந்து உங்களுக்கு நிவாரணம் தருகிறது. மேலும் வீக்கமோ, நீல நிற தழும்போ ஏற்படாமல் தடுக்கிறது.

**பர்ன் + எய்டு**

இந்த மூலிகை மருந்து தண்ணீரைவிட எளிதில் குளிரச் செய்யும் சக்தி வாய்ந்தது.

இது சுட்ட புண்ணை மேலாக குளிரச் செய்வதோடல்லாமல் தோலின் உட்புகுந்து எரிவது போன்ற உணர்ச்சியையும் நன்கு கட்டுப்படுத்துகிறது. நீண்ட நேரத்திற்கு நிவாரணம் தருகிறது.

பர்ன் எய்டை புண் ஏற்பட்ட உடனேயே ஸ்ப்ரே செய்த உடன் கொப்புளம் ஆகாமல் விரைவில் புண் ஆறுகிறது.




**க்விக் எய்டு கிட்—நீங்கள் எங்கிருந்தாலும் இதை உங்கள் அருகில் வைத்திருங்கள். வீட்டிலோ அல்லது பயணம் செய்யும்போதோ.**

**எந்தவித விபத்தையும் சமாளிக்க உங்களை நிச்சயம் தயார் செய்து கொள்ளுங்கள்.**



**RKB HERBALS**

க்விக் எய்டு கிட் HERBALS இயற்கையின் இதமான அணைப்பு

TSA/RKB/42/TAM

களைக் கட்டுவானேன்? இதெல்லாம் யார் ஏற்பாடு? மன்னர் விஜயம் செய்யும் காலத்தில் மட்டுமே இந்த ஏற்பாடுகள் உண்டு என்பது எனக்குத் தெரியாதா பேரமைச்சரே?'' என்றார் துறவியார், விடுவிடுவென்று உணர்ச்சி பூரணமாகக் குரலில் பொங்க.

பேரமைச்சர் உடனே பதில் ஏதும் சொல்லாமல், தலையை நீண்ட நேரம் தொங்கப் போட்டுக் கொண்டார். பேச்சு ஏதாவது தொடங்குவதானாலும் அது பேரமைச்சரிடமிருந்தே தொடங்கட்டும் என்று துறவியாரும் காத்திருந்தார். சில நிமிடங்களுக்குப் பிறகு பெருமூச்சொன்றை விட்டுத் தலையைத் தூக்கிய பேரமைச்சர், துறவியாரை நோக்கி, ''துறவியாரே! இது எனக்குப் புரியாத புதிராகவே இருக்கிறது. மன்னர் யாரும் விஜயம் செய்யவில்லையென்பது உண்மை. ஆனால் ஒரு படைத் தலைவனுக்கு, அதுவும் ஊர் பேர் தெரியாத ஒரு சிறுவனுக்கு இத்தனை ஏற்பாடுகளைச் செய்யும்படி சக்கரவர்த்தி ஏன் கட்டளையிட்டார் என்பது எனக்கே புரியவில்லை,'' என்றார்.

துறவியாரின் முகத்தில் மெள்ள மெள்ளக் கவலைக் குறி படரலாயிற்று. அந்தக் கவலை குரலிலும் நன்றாகப் பிரதி பலிக்கக் கேட்டார் துறவியார், ''என்ன பேரமைச்சரே, சக்கரவர்த்தி உத்தரவா?'' என்று.

''ஆமாம்,'' என்று சொல்லித் தலையையும் அசைத்தார் பேரமைச்சர்.

''கரிகாலனை ஒரு மன்னனுக்குச் சமானமாக எதிர்கொள்ள உத்திர விட்டானா இராஜேந்திரன்?''

''இல்லை துறவியாரே! மன்னனுக்குச் சமானமாக அல்ல. தாமே இந்த மாநகரத்துக்கு வந்தால் எத்தகைய வரவேற்பை அளிப்பது சம்பிரதாயமோ, அத்தனை சம்பிரதாயத்தையும் கடைப் பிடிக்கும்படி சக்கரவர்த்தி உத்திர விட்டிருக்கிறார்.''

துறவியார் மறுபடியும் ஆலோசனையில் இறங்கினார். அவர் உள்ளத்தே அவர் ஆயுளில் அதுவரை அனுபவிக்காத கிலி எழுந்து நின்றது. 'இராஜேந்திரன் உள்ளத்திலே பெரும் சந்தேகம் எழுந்துவிட்டது, கரிகாலன் யார் என்பது ஒருவேளை அவனுக்குத் தெரிந்து விட்டதோ?' என்று தமக்குள்ளேயே சொல்லிக்கொண்ட துறவியார் பேரமைச்சரை நோக்கி,

''சம்பிரதாயத்துக்கு விரோதமான வரவேற்புக்கு நீங்களும் ஒப்புக் கொண்டீர்களா?'' என்று கேட்டார்.

''ஒப்புக் கொள்ளவில்லை துறவியாரே!'' திட்டமாக அறிவித்தார் பேரமைச்சர்.

''நீர் எதிர்த்துமா இராஜேந்திரன் கட்டாயப்படுத்தினான்?'' என்று கேட்டார் துறவியார்.

''ஆமாம் துறவியாரே! சக்கரவர்த்தி திட்டமாகக் கட்டளையிட்டு விட்டார். மன்னர்களுக்குண்டான மரியாதைகளைப் படைத் தலைவர்களுக்கு அளிப்பது வழக்கமில்லையென்றேன்,'' என்று பேரமைச்சர் தயங்கினார்.

''அதற்கு மன்னன் என்ன சொன்னான்?''

''படைத் தலைவர்களால்தான் மன்னர்கள் பெருமையடைகிறார்கள், ஆகவே, மன்னர்களுக்குண்டான மரியாதைகளை அவர்களும் பெறத் தகுந்தவர்கள் என்று சொன்னார்.''

''பிறகு?''

''பெரும் கொடிகளைக் கோட்டைச் சுவர்களில் நாட்டும் ஒரு வழக்கத்தையாவது கைவிடலாமென்று கூறினேன்.''

''உம்.''

''சக்கரவர்த்தி ஒப்புக் கொள்ளவில்லை. 'எதையும் கைவிட வேண்டாம். நானே பட்டணப் பிரவேசம் செய்வதாக நினைத்துக் கொள்ளும்' என்று சற்றுக் கோபத்துடனே சொன்னார். துறவியாரே! சக்கரவர்த்திக்கு இத்தனை கோபம் வந்து நான் பார்த்ததேயில்லை. தாங்கள் அன்று அந்த ஓலையைப் பெற்றுச் சென்றதிலிருந்து ஒரு நிலையில் இல்லை சக்கரவர்த்தி. அந்த இன்னொரு ஓலையைப் படிக்காமல் ஆசனத்தில் விட்டெறிந்து சென்றாரே நினைப்பிருக்கிறதா?'' என்று பேரமைச்சர் சந்தேகம் கேட்டார்.

''ஆகா! நினைப்பிருக்கிறது,'' என்று பதில் சொன்னார் துறவியார், பிறகு என்ன நடந்தது என்பதை அறியும் ஆவலுடன்.

''அந்த ஓலையை எடுத்துச் சென்று அவரைப் படிக்கத் தூண்டினேன்.''

''படித்தாரா?''

''படித்தார். படித்ததும் அவர் முகத்திலே பெரும் மாறுபாடு ஏற்பட்டதைக் கவனித்தேன்.''

''மாறுபாடு என்றால்?''

''பெரும் குழப்பம்.''

''உம்.''

''அந்தக் குழப்பத்திற்குப் பின் தெளிவு. அரசர் கண்கள் திடீரென எதையோ அறிந்து விட்டனபோல் பிரகாசித்தன. பிறகுதான் இப்படி உத்தர விட்டார். ஆமாம், துறவியாரே, யார் இந்தக் கரிகாலன்?'' என்று விசாரிக்கத் தொடங்கினார் பேரமைச்சர்.

அந்தக் கேள்விக்குத் துறவியார் பதிலேதும் சொல்லாமல், ஒரேயடியாக ஆசனத்தில் சாய்ந்து கொண்டு விட்டார். ''முதலில் குழப்பம். பிறகு தெளிவு. அரசர் கண்கள் பிரகாசித்தன,'' என்று மீண்டும் மீண்டும் ஏதோ மந்திரத்தை உச்சரிப்பது போல் அவர் உதடுகள் அந்தச் சொற்களை உச்சரித்தன. மன்னன் முகத்தில் முதல் நாளன்று பேரமைச்சர் குழப்பத்தைக் கண்டாரோ இல்லையோ, அன்றைய தினம் பிரும்மானந்தரின் முகத்தில் பெரும் குழப்பத்தைக் கண்ட பேரமைச்சர் அதற்குக் காரணத்தை அறிந்துகொள்ள விரும்பி, ''யார் இந்தக் கரிகாலன் துறவியாரே?'' என்று மீண்டும் பழைய கேள்வியைக் கேட்டார்.

''எங்கள் மடாலய சிஷ்யன். சூடாமணி விஹாரத் தலைவரிடம் கல்வி பயின்றவன்,'' என்றார் துறவியார், ஏதோ பதில் சொல்ல வேண்டும் என்பதற்காக.

''அதுவும் தெரியும். அவன் அரையன் ராஜராஜன் வளர்ப்பு மகனென்பதும் தெரியும். அதெல்லாம் பழங் கதை. புதுக் கதை ஏதாவது சொல்லத் தங்களால் முடியுமா?'' என்று கேட்டார் பேரமைச்சர்.

''நான் இங்கு கதை சொல்ல வரவில்லை பேரமைச்சரே!'' என்று எரிந்து விழுந்த பிரும்மானந்தர், ''அரசருக்கு அன்று வந்த ஓலை தங்களிடம் இருக்கிறதா?'' என்று வினவினார்.

''இல்லை. அரசரிடமே இருக்கிறது,'' என்றார் பேரமைச்சர்.

துறவியார் சட்டென ஆசனத்திலிருந்து எழுந்து, ''அப்படியானால் நான் அரசரைப் பார்த்து




நான் மதுரையில் உள்ள ஒரு மேல்நிலைப் பள்ளியில் தேர்வு எழுதச் சென்றிருந்தேன். எங்களுக்கு ஹால் சூபர்வைசராக வந்த ஒரு தமிழாசிரியர், பக்கத்திலுள்ள மாணவனுக்கு நான் என் பேப்பரைக் காட்டுவதைப் பார்த்துவிட்டார். பெருத்த குரலில், ''மத்தவங்களுக்கு உங்க விடையைக் காட்டாதீங்கப்பா! அப்புறம் அவன் பாஸ் பண்ணி உங்ககூடப் போட்டியா இண்டர்வியூவுக்கு வந்துடுவான்,'' என்றார்.

—எஸ்.பி. பாலசுப்பிரமணியன்

விட்டு வருகிறேன்!'' என்று கூறிவிட்டுப் பேரமைச்சரின் அறையை விட்டுக் கிளம்பி வெளிவந்து அரசர் மாளிகையை நோக்கி நடந்தார். சக்கரவர்த்தியால் பெரிதும் மதிக்கப்பட்ட துறவியார், எந்த இடைஞ்சலுமில்லாமல் மன்னன் மாளிகையை அடைந்து, மன்னன் இருக்குமிடத்தைப்பற்றி விசாரித்தார். சக்கரவர்த்தி அன்று தாம் சந்தித்த முத்தாணி மண்டபத்திலேயே இருப்பதை அறிந்து, அங்கு விரைந்த துறவியார், முதல் நாளைப் போலவே அரசன் அரியணையில் அமர்ந்திருப்பதையும் ஆழ்ந்த யோசனையிலிருந்ததையும் கண்டார்.

தூரத்தேயிருந்த முத்தாணி மண்டப வாயில்களில் காவல் புரிந்த வீரர்கள் கூடச் சுவரை ஒட்டிப் பயபக்தியுடன் நின்றிருந்ததால், அவர்கள் இருப்பதும் துறவியின் கண்களுக்குப் புலப்படவில்லை. 'ஹோ'வென்று விரிந்து கிடந்த அந்தப் பெரும் மண்டபத்தின் நடுவே, தலையை மார்புக்காகத் தாழ்த்தி உட்கார்ந்திருந்த மன்னனைக் கண்ட துறவியார் நிஷ்டையைக் குலைக்க இஷ்டப்பட்டு, ''இராஜேந்திரா! ஏன் தனித்து உட்கார்ந்திருக்கிறாய்?'' என்று குழையும் குரலில் விசாரித்தார்.

சிந்தனையிலிருந்த இராஜேந்திரன் சிரத்தைத் தூக்கித் துறவியாரை நோக்கினான். ''ஓ! துறவியாரா? அமருங்கள்!'' என்று சொல்லிப் பக்கத்தேயிருந்த ஆசனத்தையும் காட்டினான். அரசன் குரல் வறண்டு கிடந்ததைத் துறவியார் கவனித்தார். அதன் காரணத்தை அவர் ஓரளவு அறிந்து கொண்டும் இருந்தாராதலால், ''மன்னவா! கவலை வாய்ப்பட்டிருக்கிறாய் போலிருக்கிறது?'' என்று மெல்லக் கேட்டார்.

''அரசு ஒரு சுமை; அதைத் தாங்க வேண்டியவனுக்குக் கவலை இயற்கை,'' என்றான் இராஜேந்திரன்.

''இந்தப் பெரும் சுமை இன்று நேற்று ஏற்பட்டதல்லவே இராஜேந்திரா! இத்தனை நாளாக உன் முகத்தில் நான் கவலையைக் கண்டதில்லையே!'' என்று துறவியார் விசனம் ததும்பக் கூறினார்.

''உண்மைதான் துறவியாரே! இத்தனை நாள் சுமையை நான் வகிக்கவில்லை. எனக்காக உம்மைப் போன்ற பெரியோர்கள் வகித்தார்கள். ஆகவே, சுமை என் தோள்களில் பாரத்துடன் இறங்கவில்லை,'' என்று மன்னன் துறவியாரை உற்று நோக்கினான்.

துறவியார் சங்கடத்தால் ஆசனத்தில் அசைந்தார். ''புரியவில்லை மன்னவா?'' என்று கூறினார்.

''இதில் புரியாததற்கு என்ன இருக்கிறது துறவியாரே. புத்த மடாலயங்கள், சைவ, வைணவ மடாலயங்கள் எல்லாமே சோழ மண்டலத்தில் உண்டு. பலதரப்பட்ட மதங்களின் சின்னங்களான இந்த மடாலயங்கள் மன்னர்கள் நம்பிக்கைக்கும், மன்னர்களின் மடாலயங்களின் நம்பிக்கைக்கும் பாத்திரமாக இருந்தார்கள். அந்தப் பரஸ்பர நம்பிக்கை

# பற்களைப் பற்றிய ஒரு பெரிய உண்மை

வாய் துர்நாற்றம் என்பது பற்களைவிட அதிகம்,
ஈறுகள் சம்பந்தப்பட்டதாகும்.



# மற்றுமொரு பெரிய உண்மை

போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட்டில்
உள்ள ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜெண்ட் மட்டுமே ஈறுகளை
வலுவாக்கி அவற்றை ஆரோக்கியமாக வைக்கிறது.
அதனால் வாய் துர்நாற்றம் ஏற்பட வாய்ப்பே இல்லை.

நுரை வளமுள்ள
போர்ஹென்ஸ்
—நீல நிறப் பேக்கிலே.




கட்டுப்படுத்தப்பட்ட
நுரையுள்ள
—ஆரஞ்சு பேக்கிலே.




32 என்றும் பத்திரம்

ஒரு பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்.

GM.27/88.Tm

யாலும் மக்கள் வீரத்தாலும் வளர்ந்தது சோழ நாடு,'' என்று விவரித்தான் இராஜேந்திரன்.

''நம்பிக்கை இப்பொழுது எங்கே போய்விட்டது மன்னவா?'' என்று வினவினார் துறவியார்.

''எங்கே போய்விட்டது என்பது தெரியாது துறவியாரே! போய்விட்டது என்பது எனக்குத் தெரியும்,'' என்றான் மன்னன்.

''எப்படித் தெரியும்?''

''அரசகுல ரகசியங்கள் மறைக்கப்படுகின்றன. என் சொந்தப் படைத் தலைவர்களால் மட்டுமல்ல, என் நம்பிக்கையைப் பூரணமாகப் பெற்ற மடாலயத் தலைவர்களாலும்கூட!''

இனி மறைத்துப் பேசுவதால் பயனில்லை என்பதை உணர்ந்துகொண்ட துறவியார், பகிரங்கமாக விஷயத்துக்கு வந்து, ''கரிகாலனைப் பற்றித்தானே பேசுகிறாய் இராஜேந்திரா?'' என்றார்.

''ஆமாம், துறவியாரே!''

''அதை அறிவது உனக்கு நன்மை பயக்காது.''

''என் நன்மையைப் பற்றி எனக்குக் கவலையில்லை.''

''வேறு எதைப்பற்றிக் கவலை?''

''உண்மையைப் பற்றி.''

''எது உண்மை?''

''கரிகாலன் சோழ வம்சத்தைச் சேர்ந்தவன் என்பது,' என்று சொன்ன இராஜேந்திரன், திடீரென்று ஆசனத்தை விட்டு எழுந்து, துறவிக்கு வெகு அருகில் வந்து, அவரை உற்று நோக்கினான். கூர்மையான அந்தக் கண்களைச் சந்திக்க முயன்ற துறவியாரின் கண்கள் நிலத்தில் பாய்ந்தன. மன்னன் சொற்கள் அவர் தலை மீது வெடிக்கத் தொடங்கின. ''கரிகாலன் சோழ ராஜ வம்சத்தைச் சேர்ந்தவன் என்பது எனக்குத் தெளிவாகப் புரிந்துவிட்டது. என்ன காரணத்தைக் கொண்டோ அவன் பிறப்பை நீங்கள் மறைக்கப் பார்க்கிறீர்கள். ஆனால் அவன் உண்மை ஸ்தானத்தை நான் மறைக்க விரும்பவில்லை. சக்கரவர்த்திகளுக்குரிய மரியாதைகளுடன் அவன் வரவேற்கப் படுவான். நாளை மறுநாள் இந்தக் காஞ்சி மாநகரிலேயே அவன் பட்டணப் பிரவேசம் நடக்கும். அவன் இந்த மாளிகையில் என்னுடன் தங்குவான். தனிமையில் அவனுடன் பேசுவேன். உண்மையை அறிவேன்,'' என்று பேசிக்கொண்டு போன இராஜேந்திரன் சட்டெனக் குரலைத் தாழ்த்தி, ''அதுமட்டுமல்ல துறவியாரே!'' என்றான்.

துறவியார் பேச நா எழாமல் மெல்லத் தலையைத் தூக்கி அவனைப் பார்த்தார். இராஜேந்திரன் விவரித்தான். ''நீர் நேற்றுக் கூரம் சென்றபோது, என் ஒற்றர்கள் உம்மைத் தொடர்ந்தார்கள், கூரத்தின் மாளிகையிலிருக்கும் அந்த மணிமேகலைக்கும் கரிகாலன் பட்டணப் பிரவேசத்தைப் பார்க்க அழைப்பு இன்று போகிறது. அவளும் இந்த அரண்மனைக்கு வருவாள். கரிகாலன் பிறப்பு ரகசியம் இன்னும் இரண்டே நாட்களில் இந்த அரண்மனையில் உடைபட்டுவிடும்...''

இராஜேந்திரன் பேச்சைச் சற்றே நிறுத்தினான். துறவியார் முகத்தில் பெரும் கிலி தாண்டவமாடியது. ''வேண்டாம் இராஜேந்திரா! இந்த முயற்சியைக் கைவிட்டு விடு,'' என்று கெஞ்சினார்.

ஒரு விநாடி துறவியை உற்றுப் பார்த்த இராஜேந்திரன், ''இந்த ஓலையில் கண்ட விஷயத்தைப் படியும்,'' என்று மடியிலிருந்த ஓர் ஓலையை நீட்டினான் துறவியாரிடம்.

அதைப் படித்த துறவியாரின் கோபம் எல்லை கடந்து போகவே, ''அட முட்டாள்! பாவி! குடியைக் கெடுத்தாயே!'' என்று தம்மையும் மறந்து கூவினார்.

(தொடரும்)



''அவர் படகிலே ஏறி அவசரமாப் போய்கிட்டே இருக்காரே, எங்கே?''

''அடகுக் கடையில் அடகு வச்சிருக்கிற அவருடைய மனைவியோட நகை மூழ்க்கிட்டு இருக்காம்! அதை மீட்கத்தான்!''

—கடலூர் கன்னியப்பன்

சாண்டில்யன்

## 64. பட்டணப் பிரவேசம்

சுயநிலை, சூழ்நிலை இரண்டையும் அறவே மறந்து துறவியார் கூவிவிட்டதைக் கண்டதும் சோழப் பேரரசனான இராஜேந்திரன் முகத்தில் ஒரு வினாடி புன்முறுவலொன்று தோன்றி மறைந்தது. மறுவினாடி அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்த வார்த்தைகளும் மதுரமாகவே இருந்தாலும், மன்னன் தம்மை ஆழம் பார்க்கிறானென்பதைச் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிந்து கொண்டார் துறவியார். யாரையும் ஊடுருவிப் பார்க்க வல்ல கூரிய புத்தியுடைய இராஜேந்திரனிடம், எக்கச்சக்கமாக எதையாவது பேசிவிட்டால் கரிகாலன் பிறப்பு மர்மம் அடியோடு உடைபட்டுப் போகுமென்பதைத் துறவியார் உணர்ந்து கொண்டாராதலால், கொந்தளித்த தமது உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு, மிகுந்த எச்சரிக்கையுடன் மன்னன் கேள்விகளுக்குப் பதிலளிக்கலானார்.

''துறவியாரே! யார் முட்டாள், யார் பாவி?'' என்று கேட்டான் இராஜேந்திரன், ஏதும் அறியாதவன் போல்.

''உன்னுடைய படைத்தலைவன்தான் இராஜேந்திரா!'' என்றார் துறவியார், பதட்டத்தை வெளியில் காட்டாமலே.

''யார், அரையன் ராஜராஜனுக்கா இந்த வசை பாடல்?'' என்று மன்னன் மீண்டும் கேள்வியைத் திருப்பினான்.

''ஆம்.''

''சோழர்களின் பிரதான படைத்தலைவனுக்கு உசிதமான அடைமொழிகள் அல்லவே அவை?''

''விஷயத்தைப் புரிந்து கொள்ளாமல் ஓலை எழுதும் யாருக்கும் தகுந்த அடைமொழிகள்தான் அவை. இத்தகைய ஓலையை எழுதுபவன் சோழர்களின் படைத் தலைவனாயிருந்தாலும், அவனுக்கும் பொருந்தும் இந்த அடைமொழிகள்.''

இதைக் கேட்ட இராஜேந்திரன் முகத்தில் புன்முறுவல் மீண்டும் லேசாகப் படர்ந்தது. துறவியார் தன்னிடம் மீள முடியாமல் சிக்கிக் கொண்டுவிட்டாரென்பதைத் தீர்மானித்துக் கொண்ட மன்னன், ''துறவியாரே! அரையன் ராஜராஜன் எந்த விஷயத்தைப் புரிந்து கொள்ளவில்லை? யார் குடியைக் கெடுத்தான்? என்ன குற்றம்தான் அவன் செய்துவிட்டான்?'' என்று வினவினான்.

அரசன் முகத்தில் தோன்றிய புன்முறுவலையோ, அவன் வார்த்தைகளில் கண்ட குழைவையோ கவனிக்கத் தவறாத துறவியார், ''இராஜேந்திரா! இந்தத் துறவியைப் பற்றி உன்னுடைய மதிப்பீடு இவ்வளவுதானா?' என்று உள்ளூர நகைத்துக் கொண்டாலும், அதை வெளியில் காட்டாதவராய் வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னார். ''இராஜேந்திரா! உணர்ச்சி மிகுதியால் கூறிவிட்டேன். ஆனால் குற்றம் யார் செய்தாலும் குற்றம்தானே?'' என்றார்.

''உண்மைதான் துறவியாரே! அரையன் ராஜராஜன் என்ன குற்றம்

மன்னன்

# ஒரு வழி!

எங்கே போகிறோம் என்பதைத் தெரிந்து கொண்டிருப்பவனுக்கு எல்லாரும் வழி விடுகிறார்கள்.

—டேவிட் ஜோர்டன்

செய்தானென்றுதான் கேட்கிறேன்,'' என்று மன்னன் சற்று அழுத்தமாகவே கேட்டான்.

''இந்த ஓலையை அவன் எழுதியதே குற்றம். அதுவும் ஒரு சாதாரண வீரனுக்கு அரச மரியாதைகளை அளிக்கும்படி எழுதியது பெருங் குற்றம். இதோ இந்த வரிகளைப் பார். 'மன்னர் பிரானே! இந்த வேண்டுகோள் தங்களுக்கு வியப்பை அளிக்கலாம். ஆனால், கரிகாலனை மன்னனுக்குரிய மரியாதைகளுடன் ஏற்றுக் கொள்ளுங்கள்.' இப்படி அவன் சக்கரவர்த்தியாகிய உனக்கு எழுதலாமா? சாதாரணப் படைத் தலைவனை மன்னர் மரியாதைகளுடன் வரவேற்பது வழக்கத்துக்கு விரோதமல்லவா?'' என்று கூறி, ஓலையிலிருந்த வரிகளையும் கையால் சுட்டிக் காட்டினார் துறவியார்.

பதிலுக்கு இராஜேந்திரன் சிரித்தான். ''அதனாலென்ன துறவியாரே! கரிகாலன், மன்னர் குலத்தைச் சேர்ந்தவன். அதற்குரிய மரியாதைகளை அவனுக்கு அளிப்பதில் தவறென்ன?''

''இராஜேந்திரா! உன் ஊகத்தினால் அவன் மன்னர் மரபைச் சேர்ந்தவனாயிருக்கலாம். ஆனால், அதற்குச் சரியான அத்தாட்சிகள் இன்னும் கிடைக்கவில்லை. மக்களுக்கு அவனைப் பற்றி எதுவும் தெரியாது.''

''தெரியாவிட்டாலென்ன?''

''மக்கள் பேசுவார்கள்.''

''பேசினாலென்ன?''

''பேச்சு மாற்றார் காதில் விழும்.''

''விழுந்தாலென்ன?''

கடைசிக் கேள்வியைக் கேட்டதும், மேற்கொண்டு என்ன பதிலைச் சொல்வதென்று அறியாமல் திகைத்த துறவியார் பெருமூச்சு விட்டார். துறவியார் ஏதோ தீவிரமான ரகசியத்தை மறைக்கிறாரென்பதையும், என்ன வற்புறுத்தினாலும் மர்மம் அவரிடமிருந்து பெயராதென்பதையும் அறிந்துகொண்ட இராஜேந்திரனும், அதற்குமேல் அவரை வற்புறுத்தாமல் பேச்சை வேறு திசைகளில் திருப்பினான்.

'கரிகாலன் மன்னனுக்குரிய மரியாதைகளுடன் இராஜேந்திரனால் வரவேற்கப்பட்டான் என்றால் கரிகாலன் எந்த மன்னர் மரபைச் சேர்ந்தவன் என்ற கேள்வி எழும். அவன் சோழமரபு என்றால் யார் மகன் என்ற கேள்வியும் எழும். கேள்வி எழுந்தால்?' முடிவைப்பற்றி நினைக்கவும் அஞ்சினார் துறவியார். ஆகவே, அதைப்பற்றி உள்ளூரப் பல வாறாகச் சிந்தித்தாலும், வெளியில் வேறு அரசாங்க விஷயங்களைப் பற்றி மன்னனுடன் விவாதித்துவிட்டு வெளியே சென்ற துறவியார் அடுத்த இரண்டு நாட்களில் அந்த ஊரிலிருந்து பெரிய புத்த மடாலயத்துக்கும், அரண்மனைக்குமாக அலைந்து கொண்டிருந்தார்.

கரிகாலன்—இராஜேந்திரன் சந்திப்பைப் பற்றித் திகில் பட்டுக்கொண்டிருந்த தஞ்சைத் துறவியார், மடாலயத்தில் சில நாழிகைகளும், அரண்மனையில் சில நாழிகைகளுமாகக் காலம் கழித்துக் கொண்டிருந்ததாலும், அவர் மனம் மட்டும் சிங்களத்துக்கும் வங்கத்துக்கும் தஞ்சைக்குமாகப் பறந்து கொண்டு, பழைய விஷயங்களையும் புதுப் பிரசினைகளையும் இணைத்து இணைத்துப் பார்த்துக் கொண்டிருந்தது. துறவியாரின் இந்தத் திண்டாட்டத்தைக் கண்டு நகைப்பது போலக் காஞ்சி மாநகரம் பெரும் கொண்டாட்டத்துக்கும் குதூகலத்துக்கும் இருப்பிடமாகிக் கொண்டிருந்தது. சோழப் பேரமைச்சர் முற்பிறப்பில் மயனாக இருந்திருக்கவேண்டும். காஞ்சி மாநகரத்தை ஏதோ மந்திரக் கோலால் மாற்றி விட்டவர்போல, அதற்கு ஒரு புதுக்

கோலத்தையே போட்டுக் கொண்டிருந்தார்: நாற்புறக் கோட்டை வாசல்களிலும் பெரும் புலிக் கொடிகள் பறந்தன. அந்த மாநகரத்தின் பெரும் மூலைகளில் நின்று கொண்டிருந்த பிரும்மாண்டமான கோயில் ரதங்கள், பற்பலவிதமான வண்ணச் சித்திரங்களைத் தாங்கி நின்ற சீலைகளை அணிந்தன. தெருக்களெங்கும் நடப்பட்ட பெரும் பந்தங்கள், முதல் நாளிரவன்றே காஞ்சி மாநகரை ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கச் செய்து கொண்டிருந்தன. நூற்றுக்கணக்கான அரண்மனை யானைகளுக்கு அம்பாரிகள் அணிவித்து முகப் பட்டயங்களைக் கட்டி அழகு செய்யப் பட்டிருந்ததாலும், பெரு விழாக்களின் போது இருபுறங்களிலும் இவற்றுக்குத் தொங்கவிடப்படும் பெரு மணிகளும் ஊசலாடியதாலும் மணியோசை எங்கும் ஒலித்துக் கொண்டிருந்தது.

அரசகுல மக்கள் ஏறிச் செல்லும் புரவிகளுக்குப் பொன் சேணங்கள் அணிவிக்கப்பட்டன. சோழப் பேரரசனின் மகிஷிகள் ஊர்வலத்தில் கலந்துகொள்வதற்காக முத்துச் சிவிகையும், ரத்தினச் சிவிகையும் சுத்தம் செய்யப்பட்டன. கரிகாலனுக்கு அணிவிக்க வேண்டிய இரத்தினாபரணங்கள் எவையென்பதைப் பேரமைச்சர் தீர்மானித்ததன்றி, அது சம்பந்தமாக அரசரையும் கலந்து கொண்டார். கோவில்களிலெல்லாம் அபிஷேக ஆராதனைக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. ஆயிரம் வீரர்கள் புடைசூழ நகரப் பிரதானி மட்டுமே கரிகாலனை எதிர்கொண்டால் போதுமென்று பேரமைச்சர் அபிப்பிராயப்பட்டார். ஆனால் மன்னன் அதற்கு ஒப்புக் கொள்ளாமல், 'கரிகாலனை நானே எதிர்கொள்ள வேண்டும்,' என்று தீர்மானமாக அறிவித்து விட்டான். இந்த விவரத்தைப் பேரமைச்சரே மறுநாள் துறவியாரிடம் கூறினார்.

முதல் நாளும் மறுநாளும் பல அலுவல்களில் ஈடுபட்டிருந்த துறவியார், அவ்வப்போழுது பேரமைச்சரைச் சந்தித்து, யார் யாருக்கு அழைப்புப் போகிறது, யார் யார் எங்கு தங்குவார்கள் என்ற தகவல்களைச் சேகரித்துக் கொண்டிருந்தார். அப்படி வந்த ஒரு சமயத்தில், பேரமைச்சர் பெருங் குழப்பத்தில் இருந்ததைக் கண்ட துறவியார் பேரமைச்சரின் இஷ்ட விரோதமாகக் காரியங்கள் நடக்கின்றனவென்பதை அறிந்து கொண்டாலும் அதை வெளியில் காட்டாமல், ''பேரமைச்சர் பெரும் குழப்பத்தில் இருக்கிறார் போலிருக்கிறது. இருக்காதா? அத்தனை ஏற்பாடுகளுக்கும் தாங்கள் ஒருவர்தானே பொறுப்பாளி,'' என்று பாதி சிலாகிப்பதுபோலும், பாதி அனுதாபப்படுவது போலவும் பேசினார்.

''வேலையின் அதிகத்தினால் குழம்பவில்லை துறவியாரே! சம்பிரதாய விரோதங்கள் ஏற்படும்போதுதான் குழப்பமடைகிறேன்,'' என்ற பேரமைச்சர் பதில் கூறினார் வருத்தம் தோய்ந்த குரலில்.

''என்ன சம்பிரதாய விரோதம்?'' என்று துறவியார் ஆவலுடன் விசாரித்தார்.

''மன்னனை எதிர்கொள்வதானாலும் நகரப் பிரதானிதான் எதிர்கொள்வது வழக்கம்.''

''ஆமாம். சந்தேகமென்ன?''

''சந்தேகமென்னவா? இப்பொழுது சக்கரவர்த்தி தாமே கரி

## வாரியாரின்  விரோதிகள் யார்?

இத்தனை வயதாகியும் கிருபானந்த வாரியாரின் குரல் கணீர். 'யாரங்கே? வாயை மூடு!' என்று கதையின் ஊடே வருவதுபோல் சிலேடையாக ஓர் அதட்டல் போட்டாரே பார்க்கவேண்டும்! கபாலி கோயிலே கிடுகிடுத்துவிட்டது. (7.4.88). ஆனால் ஒரு தொல்லை. சொற்பொழிவு நடந்து கொண்டிருக்கும்போது இடையிடையே மாலை போடும் சாக்கிலும், பழ தானம் செய்வது போலும், சுய விளம்பரத்தைத் தேடிக் கொண்டு சில ஆண்களும் பெண்களும் குறுக்கிட்டுக் கதை கேட்கிறவர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறார்களே, —ஹூம்...! (ஆரம்பத்திலோ முடிவிலோ வைத்துக் கொண்டால் என்னவாம்?)

—சிவி.



கதிரவன் உதயத்தோடு லட்சுமியின் கடமைகளும்
தொடங்கிவிட்டன. வாசலைத் தெளித்து கோலம் போடுவது;
பாலைக் காய்ச்சுவது; காய்கறிகளை நறுக்கியபின்,
சமையல்கட்டில் வேலைகளை மும்முரமாகச் செய்வது;
பாபுவைப் பள்ளிக்கு அனுப்புவதற்கு முன்,
புத்தகங்களையும், டிபன் பாக்ஸையும் தயாராக எடுத்து
வைப்பது; துணிமணிகளை இஸ்திரி
செய்வது. இது மட்டுமல்ல. கணவர்
சட்டையில் பட்டன் தைப்பது முதல்,
அவருக்கு வேண்டிய பணிவிடை
களைச் செய்து ஆபீசுக்கு
அனுப்புவதுவரை, அவளது உதவி தேவைப்படுகிறது.



இப்படி, பம்பரமாக ஓடியாடி எல்லோரையும்
கவனித்துவிட்டு, பின்னர் களைப்படையும்
தருணத்தில்,'ஸன்ரைஸ் காப்பி
பருகி இளைப்பாறுகிறாள்.
சோர்வு நீங்கி உற்சாகமடைகிறாள்.
அன்றாடம் அவளுக்கு இதே
நாடகம்தான் என்றாலும், காலைக் கடமைகளை
கனிவோடு செய்யும் அவள் முகம்,
புத்துணர்வு தரும் ஸன்ரைஸ் காப்பி பருகியபின்
பகலவன்போல் பிரகாசிக்கிறது.




# ஸன்ரைஸ் காப்பியின் புத்துணர்வு தரும் சுவை. இதோ, உங்களுக்கு மிகத் தேவையான நேரத்தில்.

Nestlé
**ஸன்ரைஸ்**
இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி ப்ளெண்ட்

HTA 5438 TAM



காலனை எதிர்கொள்ளப் போவதாக அறிவிக்கிறார்.''

துறவியார் ஒருகணம் திகைப்புக் கொண்டாரானாலும் அதைச் சமாளித்துக் கொண்டு, ''அப்படியா! அதை நீங்கள் எதிர்க்கவில்லையா?'' என்று வினவினார்.

''எதிர்த்தேன். கேட்கவில்லை,'' என்று துக்கத்தால் பெருமூச்சு விட்டார் பேரமைச்சர்.

''நான் மன்னனிடம் சொல்லட்டுமா?'' என்று தமக்கு மன்னனிடம் இருக்கும் பெரும் சலுகையைச் சுட்டிக் காட்டிக் கேட்டார் துறவியார்.

''பயனில்லை துறவியாரே! இந்த விஷயத்தில் சக்கரவர்த்தி பிடிவாதமாயிருக்கிறார். இதில் மட்டுமல்ல, கரிகாலனுக்கு அவர் அணிவிக்க உத்தேசித்திருக்கும் ஆபரணம் எது தெரியுமா?''

''எது?''

''செங்கதிர் மாலை!''

''என்ன, செங்கதிர் மாலையா! பெரும் போரிட்டுச் சேரனிடமிருந்து கைப்பற்றிய அந்த இரத்தின மாலையா? அது சக்கரவர்த்தியின் சொந்தப் பொக்கிஷத்தைச் சேர்ந்ததாயிற்றே. தவிர, அதைக் கண்டுபிடித்து அனுப்பியவனும் கரிகாலன் என்று வந்தியத் தேவரே அறிவித்திருக்கிறாரே.''

பேரமைச்சர் பதிலேதும் சொல்லாமல் துறவியாரை ஊன்றிப் பார்த்தார்.

''துறவியாரே! நான் இராஜராஜ சோழன் காலத்திலிருந்து அமைச்சனாயிருக்கிறேன்,'' என்று சற்றுக் கடுமையாகவும் வார்த்தைகளைச் சொன்னார்.

''யார் இல்லையென்று சொன்னது?'' என்று துறவியார் பணிவாகக் கேட்டார்.

''இல்லையென்று யாரும் சொல்லவில்லை, துறவியாரே! ஆனால் ஒன்றுமறியாத குழந்தையென்று நினைத்து நீர் என்னிடம் பேச வேண்டாம். இந்த ஏற்பாடுகள் எல்லாம் ஏதோ காரணத்துடன் நடக்கிறது. அந்தக் காரணம் உமக்குத் தெரியும். எனக்குத் திட்டமாகத்

தெரியாவிட்டாலும் என்னாலும் ஓரளவு ஊகிக்க முடிகிறது. ஆகையால்தான் அதிக எதிர்ப்பை இதில் நான் காட்ட முடிய வில்லை. ஆனால் என்னையும் திகைக்க வைக்கும் உத்தரவுகளைச் சக்கரவர்த்தி பிறப்பிக்கிறார். 'என்ன செய்வது என்று எனக்கே புரியவில்லை,'' என்றார் பேரமைச்சர் குரலில் கவலை பாய.

''என்ன உத்தரவுகள் அவை?'' என்று துறவியார் வினவினார்.

''வரவேற்பு, அரண்மனையின் பொது மண்டபத்தில் இல்லை.''

''பின்பு?''

''அரசரின் சொந்த முத்தாணி மண்டபத்தில்.''

''அப்படியா!''

''ஆமாம்.'' அதுவும் அங்கு அரசர் நடுப் பீடத்தில் அமருவார். அவருக்குச் சமமாக உட்கார நான்கு ஆசனங்கள் போடப்படும்.''

''நான்கு பேர்கள் யார்?''

''மகிஷிகள் இருவர்.''

''அது சரி.''

''கூரத்திலிருந்து வரும் மணிமேகலை அம்மையார்.''

''என்ன?''

''ஆமாம்! அவருக்கருகே கரிகாலன்.''

அவ்வளவுதான்; துறவியார் மனோ பலமெல்லாம் காற்றிலே பறந்தது. ஏதோ பெயருக்கு பெரும் பலசாலி போல ஆசனத்தில் அமர்ந்திருந்தாரே தவிர, தம் சக்தியெல்லாவற்றையும் யாரோ அபகரித்துக் கொண்டு செல்லும் பிரமை ஏற்பட்டது அவருக்கு. அவர் மூளையில் ஏதேதோ நிகழ்ச்சிகள் தோன்றித் தோன்றி மறைந்தன. பேரமைச்சர் முகத்தில் தெரிந்த குழப்பத்தைவிடப் பெரும் குழப்பம் அவர் முகத்திலும் பரவியது. ''இந்த வரவேற்புக்கு நிரஞ்சனா தேவியும் வருகிறாளோ?'' என்று கேட்டார்.

''வேங்கி நாட்டு இளவரசிக்கு மட்டுமல்ல. வந்தியத் தேவருக்கும் அழைப்புப் போயிருக்கிறது.'' என்று அறிவித்தார் பேரமைச்சர்.

''அவர்களுக்கு ஆசனங்கள்?''

''ஒரு படி கீழே போடச் சொல்லி உத்தரவு.''




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆ

மன்னனுடைய உத்தேசத்தைப் பற்றி அதுவரை ஏதாவது சந்தேகமிருந்தால், அதைப் பேரமைச்சரின் கடைசிச் சொற்கள் அடியோடு உடைத்தெறிந்து விட்டன. ஆகவே அடுத்த நாள் அணுகி வரும் அபாயத்தைத் தவிர்க்கப் பெரும் முயற்சியில் இறங்கினார் துறவியார். நாளின் பெரும் பாகத்தைப் பெரிய புத்த மடாலயத்திலேயே கழித்தார். புத்த பிட்சுக்களை அவ்வப்பொழுது ஏதேதோ அலுவலாக எங்கெங்கோ அனுப்பிக் கொண்டிருந்தார். சற்று நேரத்திற்கொரு தரம் மடாலயத் தலைவரைச் சந்தித்து, நீண்ட நேரம் அந்தரங்க சம்பாஷணையில் இறங்கிக் கொண்டிருந்தார்.

துறவியாரின் இந்தக் கஷ்டங்களை அடியோடு உணராத காஞ்சி மாநகர், பெரும் விழாக்கோலம் பூண்டு நின்றது. காலையிலும் மாலையிலும் மக்கள் பெருங்கூட்டமாக வீதிகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். பௌர்ணமி தினத்தன்று காலையில் கலிங்கத்தையும் ஒட்டர நாட்டையும், மாகணி தேசத்தையும் வெற்றி கொண்டு




வித்தியாசங்கள் உள்ளன. விடை: அடுத்த பக்கம்.

கங்கைக்குப் பாதை போடும் படைத் தலைவன் கரிகாலன், மன்னரால் வடக்கு வாசலில் எதிர்கொள்ளப்படுவான் என்று அடிக்கடி பறை சாற்றப்பட்டதால், அன்று விடியற்காலை முதலே ஜன சமுத்திரம் வடக்கு வாசலிலும், வடக்கு ராஜ வீதியிலும் திரண்டு நின்றது. மற்ற ராஜ வீதிகளிலும் படைத்தலைவன் வலம் வருவதாக இருந்தபடியால் அந்த இடங்களிலும் மக்கள் அலை அலையாகக் காலை முதலே மோதத் தொடங்கினார்கள். நகரெங்கும் தோரணங்கள் காற்றிலாடின. மாளிகைகளிலெல்லாம் இரண்டு நாட்களாக மங்கையர் தீட்டிய செம்மண்ணும் மஞ்சளும் காஞ்சி மங்கையின் சௌபாக்கியத்தை வலியுறுத்தின. அந்தச் சௌபாக்கியத்திற்கு இன்னுமதிக மெருகு கொடுக்க வருபவன் போல் எழுந்த கதிரவனும் அந்தக் காஞ்சிமாநகர் மீது தன் செவ்விய கிரணங்களை வீசினான். அவன் எழுந்ததைக் குறிக்கவே ஊதப்பட்ட துந்துபி வாத்தியங்களின் சப்தங்களோடு இணைபவன் போல இராஜேந்திர சோழ தேவனும் அரண்மனைக்கெதிரே நின்ற தன் புரவியில் தாவி ஏறினான்.

இரண்டு நாட்களும் அடிக்கடி தூதர்கள் வந்து கொண்டிருந்ததன் விளைவாகக் கரிகாலன் காஞ்சி மாநாகரின் வடக்கு வாயிலை அடையும் நேரத்தை அரண்மனைக் கணிதர் திட்டமாகக் குறித்திருந்ததால், சோழர் புலிக்கொடி முன்பொரு குதிரையில் செல்ல, பின்பு மெல்ல நடந்தது இராஜேந்திரன் புரவி. அதனை அடுத்து நகர்ந்தது மந்திரி பிரதானிகளடங்கிய பெரும் ஊர்வலம். இந்த மாபெரும் ஊர்வலம் கதிரவன் கிளம்பிய இரண்டாவது நாழிகை முடிந்ததும், காஞ்சி மாநகரத்தின் வடக்கு வாயிலில் நின்றது. அதே வினாடியில் எதிரே வரும் படையின் சத்தமும் வீரர்கள் காதில் விழுந்ததால் பேரமைச்சர் செய்த சைகையையொட்டி துந்துபிகள் மீண்டும் முழங்கின.

பெரும் கறுப்புப் புரவியொன்றில் பூரண போர்க் கோலத்துடன் காஞ்சியின் வடக்கு வாயிலில் கரிகாலனைக் கண்டதும் திடீரென மேளங்கள் முழங்கின. பேரிகைகள் சப்தித்தன. கூட்டம் கூட்டமாக அணி வகுத்து வந்த இளமங்கையர் அந்த வெற்றி வீரனுக்கு மங்கள கீதங்களைப் பாடி ஆரத்தி சுற்றினார்கள். கோவில் மணிகள் திடீரெனப் பீரிட்டெழுந்து, விடாமல் 'கண கண' வென்று ஒலித்தன. அதிர் வேட்டுகள் ஆங்காங்கு போடப்பட்டதால் காஞ்சி மாநகரே அவ்வரவேற்பில் அதிர்ந்தது.

இத்தகைய வரவேற்பை எதிர் பார்க்காத கரிகாலன் ஒரு வினாடி திகைத்தானாயினும், மறு வினாடி சமாளித்துக் கொண்டு, குதிரையிலிருந்து கீழே குதித்து ராஜநடை நடந்து மன்னன் புரவிக்கருகில் வந்து அவனை வணங்கினான். இராஜேந்திரன் ஒரு கணம் கரிகாலன் கண்களைக் கூர்ந்து கவனித்துவிட்டு, வலது கரத்தை அசைக்கவே, பேரமைச்சர் பெரும் குரலில் அவனை வரவேற்று முகமன் கூறினார். பிறகு மீண்டும் மன்னர் சைகைப்படி கரிகாலன் புரவியில் அமர்ந்து கொள்ள, ஊர்வலம் திரும்பி ராஜ வீதிகளில் நுழைந்தது.

ராஜவீதிகளின் மாளிகையின் உப்பரிகைகளிலிருந்து மங்கையர் அந்த மாவீரன்மீது மலர்களைத் தூவினார்கள். அதுவரையில் அவனைப்பற்றிக் கதைகதையாகக் கேட்டிருந்த பாவலர்கள் அவன்மீது வெற்றிப் பாக்களைப் புனைந்து பாடினார்கள். வழிநெடுகப் பேரமைச்சர் ஒப்புக் கொண்ட இடங்களில் மட்டும் ஆரத்திகள்

அனுமதிக்கப்பட்டன. இருந்தபோதிலும், காலையில் புறப்பட்ட ஊர்வலம் புத்த காஞ்சியிலிருந்த பல்லவ அரண்மனையை அடைய நடுப் பகல் ஆயிற்று. அரண்மனை வாயிலில் சக்கரவர்த்தி குதித்ததும், அவரையும் கரிகாலனையும் பக்கத்தில் நிற்க வைத்து மங்கள ஆரத்தி எடுக்கப் பட்டது. மகிஷிகளுடனும் கரிகாலனுடனும் முக்கிய மந்திரிப் பிரதானிகளுடனும் உள்ளே நுழைந்த இராஜேந்திர சோழ தேவன், நேரே முத்தாணி மண்டபத்துக்குள் நுழைந் தான்.

கரிகாலன் சொர்க்கலோகத்தில் இருந்தானானாலும், கூரிய அவன் புத்திக்கு இது வெறும் வரவேற்பு அல்ல வென்பதும் ஏதோ பெரும் நாடகம் நடத்தப்படுகிறதென்பதும் தெள்ளெனத் தெரியவே, அவன் சக்கரவர்த்தியிடம் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொண்டான். வரவேற்பு முடியும்வரை சக்கரவர்த்தி எவ்வளவு மௌனமாயிருந் தாரோ, அத்தனை மௌனமாக அவனும் இருந்தான். அதைக் கண்ட தஞ்சைத் துறவியார் பெரும் ஆச்சரியத்துக்குள்ளா னார் என்பது உண்மையானாலும், மணிமேகலை அன்று நடந்துகொண்ட முறைதான் அவரைப் பெரிதும் திகைக்க வைத்தது. 'இலக்கியத்தில் கண்ட மணிமேகலை துறவறம் பூண்டாளோ இல்லையோ' கூரத்தின் மணிமேகலை உண்மைத் துறவிதான்' என்று உள்ளூர வியந்து கொண்டார் துறவியார்.

கற்சிலையென உட்கார்ந்திருந் தாள் மணிமேகலை. மந்திரிப் பிரதானிகள் முத்தாணி மண்டபத்திலிருந்து வெளியேறிய பின்பும், நிரஞ்சனா தேவியும் வந்தியத்தேவரும் வணக்கங்கள் கூறி விடை பெற்றுக்கொண்ட பின்பும், ஏன் மகிஷிகள் சென்ற பின்பும்கூட மணிமேகலையையும் கரிகாலனையும் முத்தாணி மண்டபத்திலேயே நிற்க வைத்தான் இராஜேந்திரன்.

சம்பிரதாயமாக ஏதேதோ பேசிய இராஜேந்திரன் கடைசியாக மணிமேகலையை நோக்கி, ''அம்மணி! இதோ சோழ நாட்டின் மாவீரரில் ஒருவன். இவனை உங்களுக்குத் தெரி கிறதா?'' என்று கேட்டான்.

மணிமேகலையின் கண்கள் கரிகாலனை ஏறெடுத்துப் பார்த்தன. பின்பு இராஜேந்திரனுக்காகத் திரும்பின. ''தெரியவில்லை மன்னவா!'' என்றாள், எந்த உணர்ச்சியும் தொனிக்காத குரலில்.

''இதற்கு முன்பு பார்த்ததே இல்லையா?'' என்று இராஜேந்திரன் மீண்டும் கேட்டான்.

''இல்லை,'' என்றாள் அவள்.

இராஜேந்திரன் முகத்தில் கோபத்தின் சாயை மெள்ள மெள்ளப் படர்ந்தது. நன்றாக எடை போடப்பட்ட வார்த்தைகளை, ஒரே சீராக எழுந்த குரலில் உதிர்த்தான். நிதானமான அந்த வார்த்தைகள், அவற்றைப் பிரமாதமாக எதிரொலி செய்த அந்த முத்தாணி மண்டபத்தின் சுவர்கள் எல்லாமே பெரும் பயங்கரமான சூழ்நிலையைச் சிருஷ்டித்த தால், திக்குமுக்காடிப் போன துற வியாருக்கு உயிரே போய்விடும் போலிருந்தது. இரண்டு தலைமுறைகளாக மறைக்கப்பட்ட மாபெரும் ராஜ ரகசியம் அம்பலமாகும் நாழி நெருங்கிவிட்டதை உணர்ந்த பிரும்மானந்தர், சோக சொரூபி யாக மாறினார். உலகமே சுழல்வது போலிருந்தது அவருக்கு...

(தொடரும்)

ஆறு வித்தியாசங்கள்
விடை:

1. பயல்
2. கால் சட்டை
3. ஸ்டிரா
4. மைக்
5. துண்டு
6. குடிசை

''என் தொடைமீது தலையணை வச்சிங்களே! எதற்கு?''

''நீங்க தாளம் போடும்போது மைக் அதிருகிறது.''




—சுதர்ஸன்

# மன்னன் மகள்

22.4.88

## 65. அவன் கண்கள்

சாண்டில்யன்

''அதோ, அவன் கண்களைப் பாருங்கள்!'' உள்ளூர உணர்ச்சிகள் பெரும் அலைகளாக எழுந்து கொண்டிருந்தாலும், அவற்றைச் சிறிதும் வெளியில் காட்டாத வறட்டுக் குரலில் சிறிது இரைந்தே இந்த வார்த்தைகளை உதிர்த்தான் இராஜேந்திர சோழ தேவன். அந்த முத்தாணி மண்டபம் கூட இராஜேந்திரனுக்குத் துணைபுரிவதைப் போல நாலா பக்கங்களிலிருந்தும் 'அதோ அவன் கண்களைப் பாருங்கள்' என்று எதிரொலி செய்தது! கரிகாலன் பிறப்பைச் சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டிக் கொடுக்கும் அந்தக் கண்களின் அத்தாட்சியிலிருந்து, அந்த வம்சத்தார் யாருமே தப்ப முடியாதென்பதை அறிந்து கொண்ட துறவியார் திக்பிரமையடைந்ததன்றி, அந்தச் சமயத்தில் உண்மையாகவே உலகத்தைப் பெரிதும் வெறுத்து உண்மைத் துறவியாகி ஆசனத்தில் சாய்ந்து விட்டார். அந்த வார்த்தைகளை அர்த்த புஷ்டியுடன் உதிர்த்த இராஜேந்திரன் குரல் சிறிதும் உணர்ச்சியைக் காட்டாவிட்டாலும், முகத்தில் படர்ந்த கோபச் சாயை கொஞ்சம் அதிகப்பட, அவனும் ஆசனத்தில் ஒரு முறை அசைந்தான்.

இந்த நிலையிலே அசையாதிருந்தவர்கள் இரண்டு பேர்கள். ஒருத்தி மணிமேகலை; மற்றொருவன், எத்தகைய சந்தர்ப்பத்திலும் உணர்ச்சிகளை வெளியில் காட்டாமல் மறைத்துப் பொய்யை மெய்யைப் போல் சொல்லும் ஆற்றலைப் படைத்த கரிகாலன். மன்னன் தன்னையும் நடுத்தர வயதுள்ள அந்த மாதையும் மட்டும் முத்தாணி மண்டபத்தில் நிறுத்திக்கொண்டு, மற்றவர்களுக்கு விடையளித்து விட்டதையும், பிறகு நிதானமாகச் சம்பாஷணை தொடங்கியதையும், இரண்டு மூன்று கேள்வி பதில்கள் முடியுமுன்பாகவே கோபச் சாயை மன்னன் முகத்தில் படர்ந்ததையும் 'கண்ட கரிகாலன் தன்னைப் பற்றிய பேருண்மையைக் கண்டுபிடிக்க இராஜேந்திரன் முயலுகின்றான் என்பதையும் நொடிப் பொழுதில் ஊகித்து விட்டவனாக, முகத்தில் எந்த வித உணர்ச்சிகளையும் காட்டாமல் லேசாகப் புன்முறுவல் செய்தான். கும்பகோணம் மடாலயத்தில் தஞ்சைத் துறவியார் பச்சைக்கல் மோதிரத்தைத் துடைத்து ஆராய்ந்த சமயத்தில், சாளரத்தின் வழியாக அந்த மோதிரத்தையும் கரிகாலன் கண்களையும் கண்ட மாத்திரத்தில், 'அவன் மகனா இவன்!' என்று சைவத் துறவியார் வியந்து பார்த்த அதே முகம்! அதே கண்கள்! இரண்டிலும் இந்தப் பழைய விஷமப் பார்வையே படர்ந்து கிடந்தது! அந்த மாதரசிக்கும் தனக்கும் நெருங்கிய உறவு இருக்கிறதென்பதையும், அந்த உறவைப் பட்டவர்த்தனமாக்கவே மன்னன் முயலுகிறானென்பதையும், அதற்கெல்லாம் சிறிதும் மசியாமல் அம்மாதரசி மண்டலாதிபதியான சோழ சக்கரவர்த்தியைத் திருணமாக மதித்து உட்கார்ந்திருப்பதையும் கண்ட கரிகாலன், அவளுக்கு ஏற்பட்டுள்ள சங்கடத்திலிருந்து அவளை எப்படியும் விடுவிப்பதென்று கங்கணம் கட்டிக் கொண்டவனாய், மன்னன் கேள்வியைக் குறுக்கே மறித்து, ''மன்னர் மன்னவா! என் கண்களில் அவர்கள் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? ஊர் பேர் தெரியாத ஒருவன் கண்கள் இவை. நாகையிலிருந்த எனது குருநாதர் உபதேசித்தபடி உயரிய துறவறத்தைப் பூணாமல், புத்த விஹாரத்திலிருந்து புறப்பட்டுப் போர்களில் கலந்து உயிர் வதைக்கு உடந்தையாயிருக்க உட்பட்ட ஒரு பாவியின் கண்கள் இவை. இந்தக் கண்களைப் பார்க்கும்படி அந்தப் புண்ணியவதியை ஏன் வற்புறுத்துகிறீர்கள்?'' என்று கேட்டான், பணிவும் விஷமமும் நிரம்பிய குரலில்.

இராஜேந்திர சோழன்

கரிகாலனை ஒரு முறை உற்றுப் பார்த்து விட்டு, அவனுக்குப் பதிலேதும் சொல்லாமல் மணிமேகலையின் பக்கமே திரும்பி, ''அம்மணி, நன்றாகப் பாருங்கள்! அதோ அந்தக் கண்கள்! அவை யாரையும் உங்களுக்கு நினைப்பூட்டவில்லையா?'' என்று வினவினான்.

மணிமேகலை மீண்டும் தன் கண்களை உயர்த்திக் கரிகாலன் கண்களை நோக்கினாள். சந்தித்த நான்கு கண்களும் சிறிது நேரம் உறவாடின. ஆனால் அந்தக் கண்கள் பதிந்து நின்ற முகங்களில் மட்டும் எந்தவிதச் சலனமும் இல்லை. திரும்பி மன்னனைப் பார்த்த மணிமேகலையின் முகத்தில் சாந்தியே நிலவி நின்றது. ''அழகான கண்கள் மன்னவா! ஆனால் அவற்றை எந்த உத்தேசத்துடன் பார்க்கச் சொல்கிறீர்கள்? எனக்கு விளங்கவில்லையே!'' என்றாள்.

''இந்தக் கண்கள் உங்களுக்கு யாரையும் நினைப்பூட்டவில்லையா? நன்றாக யோசித்துச் சொல்லுங்கள் அம்மணி,'' என்று இராஜேந்திரன் மீண்டும் கேட்டான். இம்முறை அவன் சொற்களில் சிறிது கண்டிப்பும் இருந்தது.

''இல்லை, யாரையும் நினைப்பூட்டவில்லை,'' என்று திடமாகப் பதில் சொன்னாள் மணிமேகலை.

''என் மூத்த மகனைப் பார்த்திருக்கிறீர்களா?''

''இல்லை,' அந்தப் பாக்கியம் எனக்கில்லை. நான் கூரத்தில் ஒரு காட்டில் தன்னந்தனியே வசிக்கிறேன். உலகத்துடன் உறவை விட்டு நீண்ட நாளாகிறது.''

''உறவை விடக் காரணம்?''

''அது சொந்தக் காரணம் மன்னவா!''

''காரணத்தைச் சொல்ல முடியுமா?''

''முடியாது.''

''ஏன்?''

''சொல்ல வேண்டாமென்று என் கணவர் உத்தரவு. அதை மீற வைக்கச் சோழ நாட்டுச் சக்கரவர்த்தியல்ல ஆண்டவனே வந்தாலும் முடியாது.''

உறுதியுடனும் தன்னைப் பார்த்து மிகுந்த அசட்டையுடனும் கூறிய அந்த வார்த்தைகளைக் கேட்ட சோழப் பேரரசனின் அழகிய வதனத்திலே கோபத்திற்குப் பதில் ஆச்சரிய ரேகையே நன்றாகப் படர்ந்தது. எப்பேர்ப்பட்ட கற்புக்கரசிகள் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள் என்பதை நினைத்துப் பார்த்ததால் பெருமிதத்தோடு உவகையும் கொண்ட இராஜேந்திரனின் வாயிலிருந்து அடுத்து உதிர்ந்த வார்த்தைகளில் கருணையும் அன்பும் பொங்கி வழிந்தன.

''அம்மணி உங்களைப் போன்ற தவச் செல்விகளால் இந்தத் தமிழ்நாடு சிறப்படைகிறது. அதைக் கண்டு மன்னனான நானும் பெருமையடைகிறேன். உண்மையறிந்து மன்னன் வாழ வேண்டும் என்ற தமிழ்ப் பண்பாட்டின் முறைப்படிதான் இந்தக் கேள்வியைக் கேட்கிறேன். தவறாக நினைக்க வேண்டாம். எந்த மன்னாதி மன்னனுக்கும் வணங்காத என் தலை தங்களைப் போன்ற கற்புக்கரசிகளின் கால்களில் தாழ்வதைப் பெருமையாகக் கொள்ளும். நீங்கள் எனக்கு வயதில்

---



பூர்ணம் விசுவநாதன்—நாளுக்கு நாள் மெருகு கூடுகிறது. (அப்பா வந்தார்) சிரிக்க வைக்கிறார். நெகிழ வைக்கிறார். எவ்வளவு அனாயாசமாக, துளிகூடப் பிசிறு தட்டாமல். ஆனாலும் ஓர் ஏக்கம். இரண்டிலே மூன்றிலே, தனிக் குடித்தனத்தில் மாதிரி, பத்தோடு பதினொன்றாக ஒரு சின்ன ஆனால் அழுத்தமான பாத்திரமேற்கக் கூடாதா? தனி வயலின் ஒரு ரசம். ஆர்க்கெஸ்ட்ராவில் வாசிப்பது இன்னொரு ரசம்தானே?

—க.அ.

## பூரணம் மைனஸ் தனிக்குடித்தனம்

சிறியவர்கள் போல் தோன்றுகிறது. இருந்தாலும் உறுதியில் உங்களுக்கு நானும் இணையில்லை. இந்த மண்டபத்தில் யாருமே இணையில்லை. ஆகவே, தாயே பணிவுடன் கேட்கிறேன், சொல்லுங்கள்... என் தந்தையையாவது பார்த்திருக்கிறீர்களல்லவா?'' என்று மெல்லக் கேட்டான் இராஜேந்திரன்.

மணிமேகலை துயரம் தோய்ந்த இராஜேந்திரனின் அழகிய வதனத்தை நோக்கினாள். அதுவரை உணர்ச்சிகளைக் காட்டாத அவள் கண்களிலும் இரண்டு துளி நீர் எழுந்து நின்றது. ''மன்னர் பெருமானே! நீயே இந்தச் சோழ மண்டலத்தை ஆளத் தகுந்தவன். துளிகூடச் சந்தேகமில்லை. உன் புண்பும் உன் பணிவும் உன் வீரத்துக்குச் சிறிதும் சளைத்ததல்ல. ஆகையால் நீ உயர்ந்தவன். இப்படி நீ என்று அழைக்கிறேனே என்று நினைக்காதே. உன்னைவிட நான் வயதில் சற்றுப் பெரியவள். உன்னை ஏக வசனத்தில் அழைக்கும் உரிமையும் எனக்கு உண்டு. அது என்ன உரிமை என்று மட்டும் கேட்காதே. கற்புக்கரசி என்று நீ என்னை அழைத்தாய். அது உண்மையென்று நீ நம்பினால், என்னை உன் அன்னையாக மதித்து நட. நான் சொல்லும் வார்த்தைகளுக்குத் தடை சொல்லாதே. மேற்கொண்டு எந்தக் கேள்வியும் கேட்காதே,'' என்றாள் உணர்ச்சியால் குழைந்து போன குரலில்.

அடுத்த வினாடி அந்த மண்டபத்தில் மௌனம் சிறிது நேரம் நிலவியது. அந்த மௌனத்தைக் கரிகாலனே கலைத்தான். ''மன்னவா! இந்த அம்மணியின் சொல்லைத் தாங்கள் எப்படி மீற முடியும்? மண்டலத்தையே ஆள்பவரானாலும், கற்புடைய மாதருக்குக் கீழ்ப்படிவதுதானே மாநிலத்தின் வழக்கு? என்னுடைய கண்களைப் பற்றி இப்பொழுது என்ன கவலை? சோழ மண்டலத்தில் எத்தனையோ அநாதைகள் இருக்கிறார்கள். அவர்கள் கண்களையெல்லாம் ஆராய்ந்து கொண்டிருந்தால் மன்னருக்கு ஒரு ஜென்மம் போதாது; பல ஜென்மங்கள் வேண்டியிருக்கும்,'' என்றான்



ரிகாலன்.

மன்னன் முகத்தில் கவலையும் யக்கமும் சிறிது தோல்விக் குறியுங்கூடத் துலங்கின. ஆகவே கரிகாலனைப் பார்த்துச் சொன்னான்: ''கரிகாலா! ன் கண்கள் அநாதையின் கண்கள் அல்ல,'' என்று.

''வேறு யார் கண்கள் மன்னவா?''

கரிகாலன் தன்னைப் பார்த்து கைக்கிறானென்பதை இராஜேந்திரன் உணர்ந்து கொண்டாலும், அதைச் சிறிதும் வெளியில் காட்டாமலும், தன் நினைவு அறுபடாமலும் தொடர்ச்சியாகப் பேசினான். ''உன் கண்கள் அநாதையின் கண்களல்ல ரிகாலா! அவை அரச வம்சத்தின் கண்கள். அதுவும் சோழ ராஜவம்சத்தின் கண்கள்! பார்த்த உடனேயே நான் புரிந்து கொண்டேன். பார்க்கும் யாரும் புரிந்து கொள்ளாமலிருக்க முடியாது. இந்தக் கண்களை உடையவனின் பூர்வீகத்தை இந்தப் பூமண்டலத்தில் யாருமே மறைக்க முடியாது. அரையன் ராஜராஜன் தன் ஓலைகளில் சோழர்குல ராஜ முத்திரையைப் பொறித்து, உன்னைப் பற்றி இந்தத் தஞ்சைத் துறவியாருக்கும் எழுதிய போதே உண்மையை ஓரளவு ஊகித்தேன். உன்னைப் பார்த்ததும் உண்மை ஊர்ஜிதமாகிவிட்டது. அதை என் நீதி சபை முன் உறுதி செய்ய அத்தாட்சிகள் தேவை. அந்த அத்தாட்சிகளை இந்த அம்மணியும், துறவியாரும், அரையன் ராஜராஜனும் தரமுடியும். ஏன் தர மறுக்கிறார்கள்?'' என்று வினவினான்.

மணிமேகலை சிறிதும் அசையாமல் உறுதியுடன் மன்னனைப் பார்த்தாள்.

அவளிடமிருந்து எந்தத் தகவலையும் பெற முடியாதென்பதைத் தீர்மானித்துக் கொண்ட இராஜேந்திர சோழ தேவன் மேலும் கரிகாலனைப் பார்த்துச் சொன்னான்: ''கரிகாலா! உன்னைப் பார்க்கும் போதெல்லாம் என் மகன் நினைவே வருகிறது எனக்கு. என் மகன் எப்படி இருப்பான் தெரியுமா? உறையூருக்கு வந்து பார், தெரியும்!''

''கண்டிப்பாய் வருகிறேன் மன்னவா! படைத் தலைவனுக்கு இளவரசன் அன்பு கிடைப்பது பிற்காலத்தில் பலனளிக்குமல்லவா?'' என்றான் கரிகாலன், இராஜேந்திர சோழ தேவனைச் சரியாக அர்த்தம் செய்து கொள்ளாதவன் போல்.

''அதற்குச் சொல்லவில்லை கரிகாலா! உன் கண்களுக்கும் அவன் கண்களுக்கும் வித்தியாசம் சிறிதுமில்லை. சொல்வது புரிகிறதா?''

''புரியாமலென்ன? நானும் அரச வம்சத்தைச் சேர்ந்தவனென்று கூறுகிறீர்கள். அரச வம்சங்களில் கிளைகள் பல இருப்பது சகஜம்தானே மன்னவா? அதில் ஒரு தூரத்துக் கிளையில் என் தந்தை பிறந்திருக்கலாம். அந்தச் சாயை எனக்கிருக்கலாம். இதில் என்ன வியப்பு இருக்க முடியும்?'' என்றான் கரிகாலன்.

''தூரத்துக் கிளையாயிருக்க முடியாது கரிகாலா! அருகேயுள்ள கிளை, அதுவும் மிக அருகேயுள்ளது. இல்லாவிடில் இந்தத் தமிழ் மண்டலத்தையே ஒரு காலத்தில் மயக்கிய அந்தக் கண்கள் உனக்கு இருக்க முடியாது. அந்தக் கண்கள் நாட்டில் இருவருக்குத்தான் உண்டென்று நினைத்தேன். ஒன்று எனக்கு; இரண்டாவது என் மூத்த மகனுக்கு. மூன்றாவது பேர்வழியும் இருக்கிறான் கரிகாலா! அது நீதான். அந்தக் கண்கள்...''

மேகங்கள் கவிந்து விட்டன. இடி இடிக்கப் போகிறது என்ற முடிவுக்கு வந்து விட்டார் துறவியார்.

இடி மெல்ல இறங்கியது. மதிப்பும் மகிழ்ச்சியும் துயரமும் கலந்த குரலில் சொன்னான் இராஜேந்திர சோழ தேவன்: ''அந்தக் கண்களைக் கண்டு படைகள் பணிந்தன; மங்கையர் மயங்கினர்; அறிவாளிகள் வியந்தனர். கரிகாலா! அந்தக் கண்கள் என் தந்தை இராஜராஜ சோழ தேவனின் கண்கள்!''

இதைச் சொல்லிய



''சமையல் நல்லா இருக்குன்னு சொன்னேன் அதுக்குப் போய் என் மனைவி மூஞ்சியைத் தூக்கி வைச்சுக் கிட்டுப் போறா...''

''இதுல என்ன தப்பு இருக்கு...?''

''நான் பண்ணின சமையலை நானே நல்லா இருக்குன்னு சொன்னது அவளுக்குப் பிடிக்கலை...''

—வி. சாரதி டேச்சு

இராஜேந்திர சோழ தேவன், நீண்ட நேரம் உணர்ச்சி மிகுதியால் தன் ஆசனத்தில் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். பிறகு மெள்ளத் தலையை நிமிர்த்தி மணிமேகலையை நோக்கி, ''அம்மணி! என் வம்சத்தில் பிறந்த இவனுக்கு உரிய ஸ்தானத்தை அளிக்க வேண்டியது என் கடமை. அதை நிறைவேற்ற உதவ மாட்டீர்களா? யார் இவன்? எப்படி என் தந்தையின் சாயலைப் பெற்றான்? இவன் போர்த் தந்திரங்களும் அவர் முறைகளைப் போலவே அமைந்திருக்கின்றனவே அம்மணி,'' என்று கெஞ்சினான்.

மணிமேகலை சாந்தி சிறிதும் கலையாத குரலில் சொன்னாள்: ''மன்னவா! அவன் இருக்க வேண்டிய ஸ்தானத்தில் அவன் இருக்கிறான். ஆகையால் கவலைப்படாதே. அவன் பரம்பரையை அறிந்து புதிதாகச் செய்யக் கூடியது ஏதுமில்லை. என்னை நம்பு,'' என்று.

தன் முயற்சி தோல்வியடைந்து விட்டதைப் பூரணமாக உணர்ந்து கொண்டான் இராஜேந்திர சோழ தேவன். ஆகவே மேற்கொண்டு எதுவும் பேசாமல் எழுந்து, மெள்ள உள்ளறைகளுக்காக நடந்து சென்றான். மணிமேகலையும் கரிகாலனை ஒருமுறைகூடத் திரும்பிப் பார்க்காமலே அந்தப்புரத்தை நோக்கி நடந்தாள். அரண்மனையின் உப்பரிகை அறைகளில் ஒன்றில் கரிகாலன் தங்கினான்.

சக்கரவர்த்தியை நடத்துவது போலவே அவனை எல்லோரும் நடத்தினார்கள். ஆனால் கரிகாலன் மனம் மட்டும் போக போக்கியங்களை வெறுத்து எங்கெங்கோ அலைந்து கொண்டிருந்தது.

இரவு ஏறிவிட்டதற்கு அறிகுறியாகக் கோவில்களில் அர்த்தஜாம பூஜையின் மணிகளின் பேரரவம் கேட்டது. அந்த அரவமும் சற்று நேரத்திற்கெல்லாம் ஓய்ந்து போகவே என்ன செய்வதென்றறியாமல் கண்களை மூடிய கரிகாலனை ஒரு கை மெள்ள அசைத்து எழுப்பியது.

கண் விழித்த கரிகாலனுக்கு எதிரே துறவியார் நின்று கொண்டிருந்தார்.

''என்ன துறவியாரே! இந்த நள்ளிரவில்?'' என்ற கரிகாலனைப் பேசாமலிருக்கும்படி சைகை செய்த துறவியார் அவனை மெள்ளத் தமது பின்னால் அழைத்துச் சென்று அரண்மனையின் வேறோர் அறைக்குள் நுழைந்தார். அங்கிருந்த ஏதோ ஒரு கல்லை மெள்ளப் பெயர்த்து, கீழே தெரிந்த படிகளில் தாமும் இறங்கி, கரிகாலனையும் இறங்கச் சொன்னார். இருவரும் அந்தச் சுரங்க வழியாக நீண்ட தூரம் நடந்து சென்றார்கள். சுரங்கம் முடிந்த இடத்தில், திடீரென இருள் விலகியது. மெல்லிய தீபமொன்று தூரத்தில் பளிச்சிட்டது. ''போ! கரிகாலா! புத்தர் பிரான் அருள் உனக்குக் கிட்டப் போகிறது,'' என்று மெல்ல அவன் காதுக்கருகில் சொன்னார், தஞ்சைத் துறவியார். அடிமேலடி வைத்து நடந்தான், கரிகாலன். சுரங்க வழி மெல்ல விரிந்தது. மேலே சென்ற படிகள் பெரும் மண்டபத்தில் அவனைக் கொண்டு சேர்த்தன. அந்த மண்டபத்தின் கோடியில் பிரும்மாண்டமாக உட்கார்ந்திருந்த போதி சத்துவர் சிலையின் அருள் விழிகள் அவனை அருகே அழைத்தன. அருகில் சென்ற கரிகாலன் அந்தச் சிலையின் அழகைக் கண்டு பிரமித்து நீண்ட நேரம் நின்றான், மெய்மறந்த நிலையில். அந்தச் சிலைக்குச் சற்று அப்பாலிருந்து ஒரு கதவு திறந்ததையோ, திறந்த அந்தக் கதவின் வழியாக ஓர் உருவம் மெல்ல நடந்து தன் அருகில் வந்ததையோ, அவன் கவனிக்கவில்லை.

(தொடரும்)



''பேஷண்ட் எப்படி இருக்கிறார்னு கேட்டால் டாக்டர் 'பவுண்டரி' சிக்னல் காட்டுகிறாரே...ஏன்?''

''இன்னும் நாலு நாள் தாங்குமாம்.''

—ஞா. ஞானமுத்து.

# சமீபத்தில் நான் படித்த புத்தகம்

(கமல் சொல்கிறார்.)



கஞ்சா, ஹெராயின், பிரௌன் ஷுகர், மார்பின், மரியானா, கொக்கேயின் இந்த மாதிரி போதைப் பொருட்கள் இளைஞர் சமுதாயத்தையே கெடுத்துக் கொண்டிருக்கின்றன. அணுகுண்டைவிட உலகம் முழுவதும் பயப்படுவது இந்தப் போதை பொருட்களைப் பற்றித் தான். தங்கம், வைரம் கடத்துவதைவிட போதைப் பொருள் கடத்துவது பெருகிவிட்டது. சுத்தமான ஹெராயின் ஒரு கிலோவின் விலை சுமார் ஒரு கோடி ரூபாய்—அதாவது பத்து மில்லியன் டாலர். இந்தியாவில் முப்பது லட்சத்துக்குக் கிடைக்கிறதாம். பம்பாய்க்கு அடுத்தபடியாகத் தமிழ் நாட்டில்தான் கடத்தப் படுவதாகச் சொல்கிறார்கள்.

மிக விரைவில் அடிமையாவது இந்தப் போதைக்குத்தான். மூன்று நாள் அனுபவித்து விட்டவனுக்குச் சிகிச்சை அளிக்கத் தேவையான நாட்கள் மூன்று வருஷம்.

பல சமூக அமைப்புக்கள் இந்தப் போதையை ஒழிப்பதற்கு குரல் கொடுத்து வருகின்றன. இந்த போதையால் தன் தங்கையின் வாழ்க்கையே பாதிக்கப்பட்டு விடுகிறது என்பதால், அதை ஒழிப்பதற்காகப் போலீஸ் அதிகாரி அதிவீரபாண்டியன் எடுக்கும் முயற்சிதான் சூரசம்ஹாரம். இந்தக் கதையைக் கேட்டவுடனே போதை சம்பந்தப்பட்ட புத்தகங்கள் நிறைய வாங்கிப் படிக்கத் தொடங்கினேன். "Naked Lunch" என்ற புத்தகம் என்னை மிகவும் கவர்ந்தது. பதினைந்து வருடமாக இந்தப் போதைக்கு அடிமையான ஒரு நோயாளியைக் குணமடையச் செய்த ஒரு டாக்டர் எழுதியது தான் இந்தப் புத்தகம்.

—வி.பி.

# மன்னன் மகள்

சாண்டில்யன்



## 66. மகனே, நீ மண்டலாதிபதி!

அரண்மனையிலிருந்து கிளம்பிய அத்தனை குறுகிய சுரங்க வழி அப்படி அந்த இடத்தில் திடீரென முடியுமென்பதையோ, முடிந்த இடம் அத்தனை பெரிய புத்த விஹாரமாக விரியுமென்பதையோ, சொப்பனத்திலும் நினைக்காத கரிகாலன், எதிரேயிருந்த புத்தர் பிரான் சிலை மீதே கண்களை நாட்டி எண்ணங்களைப் பல இடங்களில் சுழல விட்டுக் கொண்டிருந்தான். காவியங்களை நிரம்பப் படித்திருந்த கரிகாலன் பிற்காலத்தில் இந்த இடங்களை நினைத்துப் பார்த்தபோது, முடிந்தது சுரங்க வழியல்லவென்றும், தன் வாழ்க்கையின் மர்மமே என்றும், விரிந்தது புத்த விஹாரமல்லவென்றும், தன் பிறப்பைப் பற்றிய உண்மையேயென்றும், காவிய ரீதி உவமைகளை அமைத்து அமைத்து மகிழ்ந்திருக்கிறான். ஆனால் அந்த இரவில் போதிசத்துவரின் அருள் விழிகளுக்கு முன்பாக, அவர் அருகே பளிச்சிட்ட சிறு விளக்கின் ஒளிச்சுடரின் வெளிச்சத்தில் நின்றபோது, காவியங்களோ உவமைகளோ அவன் கருத்துக்குச் சிறிதும் எட்டவில்லை.

போதிசத்துவரின் புண்ணிய விழிகளில் தன் விழிகளை ஊன்றி அவருடைய மகாசக்தியில் கலந்துவிட்டவனைப் போல் நின்றிருந்த தன் மகனைக் கண்ட மணிமேகலை, அவன் எண்ணங்களைச் சிறிதும் கலைக்காத முறையில் அடிமேலடி வைத்து மெள்ளப் பதுமையென நடந்து, அவனுக்குப் பின்புறத்தே வந்து நின்று குனிந்து, அவனை நீண்ட நேரம் நோக்கினாள். தலையிலே சுருட்டையாயிருந்த மயிர்கள், அவசியமான வளைவுகளுடன் ஆண்மகனுக்குரிய பலத்துடன் ஓடிய நீண்ட வலுவான முதுகுப்புறம், உறுதியாகக் கீழே நின்ற கால்கள், திண்மையான தோள்கள், இவற்றையெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்த மணிமேகலையின் கண்களில் அன்பு நீர் மெள்ளத் திரண்டது. ஐந்து வயதில் அனுப்பிய தன் குழந்தையை வாலிபப் பருவத்தில் பார்த்த அந்தத் தாயின் உடலில் ரத்தத்தின் பாசம் குபீரெனப் பாய்ந்ததால் நரம்புகள் உணர்ச்சி மிகுதியால் ஒருமுறை அவளைச் சிறிது ஆட்டின. எத்தனையோ துன்பங்களை வாழ்க்கையில் தாங்கி நின்ற அவள் இதயம், படபடவென்று அடித்துக் கொண்டது. அவளது கரங்கள் அவன் தோள்கள்மீது மெள்ள அமர்ந்தன.

உலகத்திலேயே இரண்டு கைகளுக்குத்தான் அமர சக்தி உண்டு என்பதைக் கரிகாலன் படித்திருந்தான். ஒன்று, பத்து மாத காலம் தாங்கிய தாயின் ரத்தமோடும் கை. இன்னொன்று, கட்டி வாழும் மனையாளின் கை. ஆண்மகன் நோயுற்ற காலங்களில் இந்தக் கைகள் பட்ட மாத்திரத்தில் பெரும் சாந்தியுண்டு என்பதை அவன் சாஸ்திர வாயிலாக அறிந்திருந்தான். ஆனால் அந்தக் கைகளின் அமரத்துவம் சாந்தி தரும் தன்மை எத்தனை பெரிது என்பதை, அன்று, அந்தச் சுரங்க முடிவிலே விரிந்த

புத்த விஹாரத்தில்தான் அறிந்தான் கரிகாலன். மணிமேகலையின் கைகள் தோள்களில் பட்ட மாத்திரத்திலேயே, அவன் உடல் பூராவும் ஆனந்த வெள்ளம் பாய்ந்து நின்றது.

மகனுடைய தலையை மெல்லத் தன்னுடைய மார்பில் சாத்திக் கொண்ட மணிமேகலை, குனிந்து அவனை உச்சி மோந்தாள். அவள் கரங்கள் அவன் உடலைச் சுற்றி ஐந்து வயதுக் குழந்தையை அணைப்பது போல் அணைத்தன. கண்கள் நீரை அவன் தலையில் உதிர்த்தன.

தலையில் தாய் உதிர்த்த கண்ணீர்த் துளிகள் சுடச்சுட இறங்கிய தாலோ அல்லது புத்தியிலிருந்து இருளை நீக்க அந்த புனித நீருக்கிருந்த சக்தி யாலோ தெரியாது, கரிகாலன் மெள்ள வாய்விட்டு, ''அம்மா'' என்று தடு மாற்றத்துடன் அழைத்தான்.

''அம்மா!'' அந்தச் சொற்களைக் கேட்க எத்தனை வருஷங் களாகத் துடித்துக்கொண்டிருந்தாள் மணிமேகலை. மூன்றே எழுத்துக்கள் தான்! ஆனால் அவற்றில் அத்தனை பெரிய அமுத வெள்ளமோ தோய்ந்து கிடக்க முடியும்! பிரணவ சப்தத்திலும் மூன்றே எழுத்துக்கள்தான் இருக்கின் றன. 'அ, உ, ம்' என்ற இந்த எழுத்துக்கள்தான் காலத்துக்கும் சிந்தனைக்கும் அப்பாற்பட்ட 'ஓம்' என்ற பிரணவ சப்தமாக மாறியிருக் கின்றன. அலையெழும் கடலின் இரைச்சலில், சூறாவளியின் கூச்சலில் பிரணவ சப்தத்தைக் கேட்கிறோம். ஆனால் அதைவிடச் சிறந்த மந்திரச் சொல்லான 'அம்மா!' எனும் மூன்று எழுத்துக்களில் அடிக்கும் தென்றலில் தான் எத்தனை இனிமை என்று மணிமேகலை அந்தச் சமயத்தில் நினைத்தாள்.




கரிகாலனை அந்த வாலிப வயதுக்குள் எத்தனையோ பேர் ''மகனே'' என்று அழைத்திருக்கிறார் கள். சூடாமணி விஹாரத் தலைவர் அழைத்திருக்கிறார்; தஞ்சைத் துறவி யார் அழைத்திருக்கிறார்; சிற்சில சமயங் களில் அரையன் ராஜராஜனும் அழைத்திருக்கிறான். ஆனால், அந்த அழைப்பு வேறு. தாயின் கர்ப்பத்தி லிருந்து கிளம்பும் ஆசைக் குரல் வேறு. அது எத்தனை இனிமையாக ஒலிக்க முடியும் என்பதை அன்றுதான் அறிந்தான் கரிகாலன்.

''அம்மா!'' என்று கூறிய கரிகாலன், குனிந்து அவள் புனித பாதங்களைத் தன் கரங்களால் தொட்டான். அவனைச் சரேலென எழுப்பி மீண்டும் அணைத்துக்கொண்ட மணிமேகலை, ''கண்ணே, நான் யாரென்பதை எப்படி அறிந்தாய்? இங்கு வருமுன்பே தஞ்சைத் துறவியார் கூறி விட்டாரா?'' என்றாள்.

''இல்லையம்மா!'' என்றான் கரிகாலன், அவள் அணைப்பை விட்டு அகல முடியாதபடியால், தலையை உயரத் தூக்கி அவள் மலர்முகத்தைப் பார்த்தபடி.

''பின் எப்படித் தெரிந்து கொண்டாய்?'' என்றாள் அவள் வியப்பும் மகிழ்ச்சியும் கலந்து குரலில் தொனிக்க.

''அம்மா, பிறர் சொல்லித் தெரிய வேண்டிய உறவா இது? சூரியனுக்கும் தாமரைக்கும் உள்ள உறவை பிறரா சொல்லிக் கொடுக்கிறார் கள்? சந்திரனுக்கும் ஆம்பலுக்கும் உள்ள உறவை விளக்க ஆசிரியர் ஒருவர் தேவையா? மாட்டுக்கும் கன்றுக்கும் உறவை விளக்க உபாத்தியாயரை அமர்த்துகிறார்களா? இயற்கையே இந்த உறவைக் கற்பிக்கிறது. உங்களை முத்தாணி மண்டபத்தில் கண்டதுமே தெரிந்து கொண்டேனே—உங்களுக்குத் தான் தெரியவில்லை நான் யாரென்று.''

என்றான் கரிகாலன்.

அவன் பேசும் அழகைக்கண்டு வியந்த மணிமேகலை, அவன் தலையை ஆசையுடன் கோதிவிட்டாள். பிறகு மெள்ளத் துன்பச் சிரிப்பு சிரித்துவிட்டுச் சொன்னாள்: ''கண்மணி! இயற்கை கற்பிக்கும் உறவு இது என்றாயே, அந்த இயற்கை மகனுக்கு மட்டுந்தான் கற்பிக்குமா?'' என்று.

''அப்படியானால்?''

''உன்னை எனக்கு எப்படித் தெரியாதிருக்க முடியும்? ஐந்து வயதில் என் கரங்களால் தூக்கி அரையன் ராஜராஜனிடம் உன்னை ஒப்படைத்த நாள் முதல் உன் வளர்ச்சியின் ஒவ்வோர் அம்சத்தையும் என் மனம் உணர்ந்திருக்கிறதடா மகனே. நீ வளர்த்த இடம், முறை அனைத்தையும் நான் அறிவேன். உன்னைப் பார்க்க எத்தனை நாள் துடித்திருப்பேன்! தூங்காமல் எத்தனை நாள் அழுதிருப்பேன்! என் கண்ணீர் முழுதும் கலந்து ஓடுமானால், இந்த நகரின் வேகவதி ஆறு, அதற்கருகில் சிறு வாய்க்காலாகத் தெரியுமடா மகனே!'' என்று தடுமாறித் தடுமாறிக் கூறினாள். அப்பொழுதும் அவள் கண்கள் நீரை உகுத்தன.

அந்த நீரைக் கரிகாலன் தனது வலதுகரத்தால் துடைத்துவிட்டு, ''அம்மா, தெரிந்துமா மன்னன் முன்பாக என்னை யாரென்று தெரியாதென்று சொன்னீர்கள்?'' என்று கேட்டான்.

நாக்குழறச் சொன்னாள் அவள்: ''ஆமடா மகனே! தெரிந்துதான் எந்தத் தாயும் சொல்லக்கூடாத அந்த வார்த்தைகளைச் சொன்னேன்.''

''ஏன் அம்மா? ஏன் அப்படிச் சொன்னீர்கள்?''

''நீ யாரென்பது இராஜேந்திர சோழ தேவனுக்குத் தெரியக்கூடாதடா மகனே!''

''ஏன் தெரியக்கூடாது அம்மா? இராஜேந்திர சோழ தேவன், தாய்க்கும் மகனுக்கும் இடையே நிற்கும் பொல்லா



இதயம் வாய்ந்த கொடியவனா?''

''இல்லை மகனே! அவன் கொடியவனல்ல. இராஜேந்திர தேவனைப் போல் அறவழியில் செல்லக் கூடிய மண்டலாதிபதிகளைச் சரித்திரத்தில் விரல் விட்டு எண்ணிவிடலாம். அவன் தயாளம் சரித்திரப் பிரசித்தி பெற்றது. அவன் கொடியவனாய் இருந்தால் அஞ்ச மாட்டேன். அவன் நேர்மையைக் கண்டுதான் அஞ்சுகிறேன்.''

''நேர்மையைக் கண்டு அஞ்சுகிறீர்களா? விந்தையாய் இருக்கிறதே தாயே?''

''விந்தையும் விசித்திரமும் வாய்ந்த வாழ்வுதானடா உன் வாழ்வும் என் வாழ்வும்.''

''விளங்கவில்லையே எனக்கு!''

''விளங்க வைக்கத்தான் உன்னை இங்கு அழைத்துவரச் செய்தேன் மகனே. உன் பிறப்பின் பெரும் ரகசியத்தை, அதுவாக உடையு முன்பு நானாகவே உனக்குச் சொல்லி விடலாமென நிச்சயித்தேன். உன் தந்தை உயிருடனிருந்தால் நான் இப்பொழுது செய்யும் காரியத்திற்குக் கண்டிப்பாய் இணங்குவார் என்று என் மனம் சொல்லியதாலேயே உன்னை இங்கு சந்திக்கவும் பேசவும் தீர்மானித்தேன். அந்தத் தீர்மானத்தில் ஏதாவது முன்பு சலனமிருந்தாலும், இன்று பகல் முத்தாணி மண்டபத்தில் இராஜேந்திர தேவன் கொண்ட சந்தேகத்துக்குப் பிறகு அந்தச் சலனம் தீர்ந்து விட்டது,'' என்று சொல்லிப் பெருமூச்செறிந்த மணிமேகலை மெள்ளக் கரிகாலனை அழைத்துச் சென்று புத்தபிரான் காலடியிலிருந்த ஒரு சிறு பீடத்தில் தான் உட்கார்ந்து கொண்டு, மகனைத் தரையில் உட்கார வைத்தாள்.

அப்படி உட்கார வைத்துக் கொண்டு தன் முழந்தாளில் பதிந்த தலையின் மயிர்களைக் கோதிவிட்டுத் தன்னை ஆவலுடன் நோக்கிய கண்களைப் பார்த்து, ''உண்மைதான் மகனே! அந்தக் கண்களை உடையவன் பிறப்பை யாரும் மறைக்க முடியாது. ஆகவே, இராஜேந்திர சோழ தேவனிடமிருந்து நீ எப்படி மறைக்க முடியும்?'' என்றாள்.

கரிகாலன் கண்கள் தாயின் மலர் முகத்தில் பிரதிபலித்த துயரத்தைக் கண்டன.

மணிமேகலை சற்று நேரம் பேசாமலிருந்தாள். பிறகு சொன்னாள்: ''மகனே, உன் கண்களில் தெரிவது சோழ இராஜகுல வம்சத்தைப்பற்றிய பெரிய ரகசியம்; இரண்டு தலைமுறைகளின் கதை. அந்தக் கதையை அறியச் சோழ மண்டலத்தின் பகைவர்கள் துடிக்கிறார்கள். அதை எங்களில் சில பேர் இதயத்தில் வைத்துப் பூட்டி விட்டோம்.''

கரிகாலன் தாயை நன்றாக ஏறெடுத்துப் பார்த்தான். ''ஏன் பூட்டி வைக்க வேண்டும்?'' என்றும் கேட்டான்.

''சோழ ராஜ்ய நன்மையை உத்தேசித்து; மக்களின் க்ஷேமத்தை முன்னிட்டு,'' என்றாள் மணிமேகலை.

''என் பிறப்பு மர்மம் வெளியானால் என்ன நடக்கும்? சோழ சாம்ராஜ்யம் அழிந்துவிடுமா?''

''ஆம் மகனே! சோழநாடு பிளவுபடும். சாம்ராஜ்யம் சிதறிப் போகும். உள்நாட்டில் யுத்தமுண்டாகும்.''

''இதே வார்த்தைகளை என்னிடம் சூடாமணி விஹாரத் தலைவரும் சொன்னாரம்மா. என்னை வீரன் வாழ்க்கையை விட்டுத் துறவறத்



கணவன்: ''ஏண்டீ... உன் தம்பி வந்துட்டுப் போயிருந்தானா?''

மனைவி: ''எப்படி கண்டு பிடிச்சீங்க?''

கணவன்: ''ஆஷ் டிரேயில் இரண்டு சிகரெட்டுத் துண்டு காணமே?''

—இந்து குமரப்பன்

துக்கு விரும்பியபடியாகக்கூட அழைத்தார்,'' என்றான் கரிகாலன்.

இதைக் கேட்ட மணிமேகலை, அத்தனை துன்பத்திலும் மெள்ள நகைத்தாள். ''ஏனம்மா சிரிக்கிறாய்?'' என்றான் கரிகாலன் சந்தேகத்துடன்.

''சிரிக்காமல் என்ன செய்வேன் மகனே! உன் தந்தையை அறிந்த சூடாமணி விஹாரத் தலைவர், உன்னைத் துறவியாக்க முடியுமென்று நினைத்தாரே, அந்த விந்தையை நினைத்தால் யார்தான் சிரிக்காமலிருக்க முடியும்? மகேந்திர தேவருடைய மகன் ஒரு துறவியா! விந்தையிலும் விந்தை! துறவியாகும் மனப்பான்மை உங்கள் குலத்திலேயே கிடையாதடா என் கண்மணி.''

கரிகாலன் இதயம் பலமாக ஒடிக்கொண்டிருந்தது. ''மகேந்திர தேவர்! அதுவா என் தந்தையின் பெயர்,'' என்று மெள்ள ஏதோ பலமாகச் சொல்லக் கூடாத மந்திரச் சொற்களை உச்சரிப்பவன் போல் சொன்னான்.

''அதுதான் உன் தந்தையின் பெயர். மகனே! அவரை விடப் பெரிய வாள்வீரர் இந்தச் சோழ மண்டலத்தில் கிடையாது. அவர்...'' சற்றே தயங்கினாள் மணிமேகலை.

அவள் தயங்கிய அதே வினாடியில் விஹாரத்தின் வேறொரு பக்கத்திலிருந்து கதவொன்று திறந்தது. ''தயங்காதே மகளே! உண்மையைச் சொல்லிவிடு. உண்மையை அறிவதற்காகவே உலகம் பூராவும் அலைந்து சோதனை செய்த போதிசத்துவரின் நிழலில் நீங்கள் நிற்கிறீர்கள். இங்கு சத்தியத்துக்குத்தான் இடம். வாழ்க்கையின் மறைவுகள் திரைகள் எல்லாம் கிழிக்கப்பட வேண்டிய இடம் இது. சொல்லிவிடு மணிமேகலை!'' என்று கூறிக்கொண்டு, நாகப் பட்டிணத்தின் சூடாமணி விஹாரத் தலைவர் உள்ளே நுழைந்து அவர்களுக் கருகில் வந்தார். அவரைக் கண்ட கரிகாலன் எழுந்து தலை வணங்கினான்.

அவனுக்கு ஆசி புரியும் முறையில் கைகளை உயர்த்திய சூடாமணிவிஹாரத் தலைவர், ''கரிகாலா! நீ நாகையை விட்டுப் புறப்பட்டது முதல் இன்றுவரை உன் நடவடிக்கைகளை நானறிவேன். தஞ்சைத் துறவியார் அவ்வப்பொழுது விஷயங்களை எனக்கு அறிவித்து வருகிறார். உனக்கு விமோசனம் பிறக்கும் காலம் வந்துவிட்டது. ஏன், உன் உறுதியால் நாட்டுக்கு விமோசனம் பிறக்கும் காலம் சமீபித்துவிட்டது. ஆகையால்தான் உன் தாயும் நீயும் சந்திக்க நாங்கள் உடன்பட்டோம்,'' என்றார்.

''தாயும் சேயும் சந்திக்க நீங்கள் உடன்பட வேண்டுமா? தந்தையே! இயற்கைக்கு அணைபோடப் புத்த மதம் இடங்கொடுக்கிறதா?'' என்று கேட்டான் கரிகாலன் ஆத்திரம் தணிந்த குரலில்.

''ஆம் குழந்தாய்! அஹிம்சையை நிலைநிறுத்துவது புத்த மடாலயங்கள் கடமை. மக்கள் ரத்தம் அனாவசியமாகச் சிந்தப்படுவதைத் தடுக்கவேண்டியது எங்கள் கடமை. உன் பிறப்பின் மர்மம் இப்பொழுது வெளியானாலும், நீ யாரென்பதை உலகத்துக்கு அறிவிக்க முடியாது. அறிவிப்பதில்லையெனப் பிரமாணம் செய்! இதோ புத்தர் பிரான் முன்பாகப் பிரமாணம் செய்,'' என்று ஆணையிட்டார் சூடாமணி விஹாரத் தலைவர்.

''ஏன் அப்படிப் பிரமாணம் செய்ய வேண்டும் தந்தையே,'' என்று சீறிய கரிகாலன், தன் தாயையும் நோக்கினான்.

''மணிமேகலையின் உதிரத்தில் உதித்த நீ பிரமாணம் செய்ய மறுக்க முடியாது.''

''ஏன்?''

இந்தக் கேள்விகளுக்கு மணிமேகலை பதில் கூறினாள். ''அது உன் தந்தையின் கட்டளை மகனே. உலகத்தார் உன் பிறவி மர்மத்தை அறியக்கூடாதென்று அவர் இறக்கும் தறுவாயில் ஆணையிட்டிருக்கிறார். அந்த ஆணைக்குக் கட்டுப்பட்டுத்தான் பிரமாணம் செய்தேன். அந்தப் பிரமாணம்...''

''அந்தப் பிரமாணம்?''

இப்பொழுது விஹாரத் தலைவர் பதிலிறுத்தார். ''பலரைக் கட்டுப்படுத்தியிருக்கிறது. நான், அரையன் ராஜராஜன், தஞ்சைத் துறவியார், பிரதாபருத்திரன் நால்வரும் உன் தந்தையின் மரணப்படுக்கையில்.

ஈழத்துப் போர்ப் பாசறையில் பிரமாணம் செய்து கொடுத்தோம். மகனே! அந்தப் பிரமாணத்தை பிரதாப ருத்திரன் உடைத்தான். நீதான் சோழப் பேரரசின் அரியணையில் உண்மையாக உட்கார வேண்டியவன் என்பதை மரணத் தறுவாயில் உன்னிடம் கூறி விட்டான். அதனால்தான் அதைப் பற்றிப் பேச நாங்களும் முற்பட்டோம். அரையன் ராஜராஜன் இதைப்பற்றிப் பல ஓலைகள் எனக்கும் தஞ்சைத் துறவியாருக்கும் எழுதியிருக்கிறான். இப்பொழுது அவன் கங்கைக் கரையை நாடிச் செல்கிறானென்பது உண்மையே யானாலும் அவன் மனம் இந்த இடத்தைத்தான் நாடி நிற்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. சோழ மண்டலத்தின் கதி உன் கரங்களில் இருக்கிறது மகனே! ஆகவே, போதிசத்து வரின் முன்பாகப் பிரமாணம் செய்,'' என்று புத்தர்பிரான் சிலையைத் தன் வலக்கரத்தால் சுட்டிக் காட்டினார்.

சிலைக்கருகில் கரிகாலன் சென்று அந்தச் சிலையின் பாதத் திலிருந்த மலரில் ஒன்றை எடுத்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு, சூடாமணி விஹாரத் தலைவர் கூறியபடி பிரமாண வார்த்தைகளை உச்சரித்தான். பிறகு தாயை நோக்கித் திரும்பி, ''தாயே! உன்மீது ஆணை. நான் யாரென்பதை உலகத்துக்கு அறிவிப்பதில்லை. இப்பொழுது சொல்; நான் யார்?'' என்று கேட்டான்.

அவன் சிலையருகில் சென்ற போது எழுந்திருந்த மணிமேகலை, மீண்டும் பீடத்தில் உட்கார்ந்து கொண்டு, மகனை அருகில் உட்காரும் படி சைகை செய்தாள். தன் விருப்பப்படி உட்கார்ந்த மகனை நோக்கி, ''மகனே! இராஜேந்திரன் சந்தேகித்தபடி உனக் கிருப்பது இராஜராஜ சோழ தேவரின் கண்கள்! இதே கண்களைத்தான் உன் தந்தையும் பெற்றிருந்தார். அவர்தான் இராஜராஜ சோழதேவரின் மூத்த மகன்! இன்று இராஜேந்திர சோழதேவர் அமர்ந்திருக்கும் பீடத்தில் அமர்ந்து இந்தப் பேரரசை ஆளவேண்டியவர் உன் தந்தை. அவர் இல்லாததால் இப்பொழுது இராஜேந்திர சோழ தேவன் பீடத்தில் அமரவேண்டியவன் நீ. இந்த உண்மையைச் சோழநாட்டு விரோதிகள் சிலர் அறிவார்கள். சேரனுக்கு இந்த உண்மை எப்படியோ தெரிந்திருக்கிறது. ஆனால், அதை மக்களிடம் எடுத்துச் சொல்லச் சரியான அத்தாட்சிகள் அவர்களிடம் சிக்க வில்லை. இருப்பினும் உன்னைக் காரண மாக வைத்துச் சோழநாட்டை இரண்டு பிளவாக்கிப் போர் கிளப்பச் சதி செய்து வருகின்றார். உண்மையாகப் பட்டத்துக்கு வரவேண்டிய நீ இருப்பதை மக்கள் அறிந்தால் சோழ மண்டலம் இரண்டுபட்டுவிடும். மகனே! இதைத்தான் உன் தந்தை தவிர்க்க முயன்றார். நீ அனாதையல்லடா மகனே! இராஜராஜ சோழ சக்கரவர்த்தி யின் மூத்த பிள்ளையின் மகன். இந்தச் சோழ மண்டலத்தின் உண்மைச் சக்கரவர்த்தி!'' என்று மணிமேகலை தடுமாறிய குரலில், திடுக்கிடும் அந்தக் கதையை மெள்ள மெள்ளச் சொல்லத் தொடங்கினாள்.

மகேந்திர தேவனின் தியாகத்தின் கதை அது. நாட்டு நன்மைக்காகத் தன் ஜீவியத்தையே மறைத்த ஒரு மாவீரனின் விசித்திரக் கதை. அதை மெள்ள மெள்ள விவரிக்கத் தொடங்கிய தன் தாயை, இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந் தான் கரிகாலன். கதையை அவள் தொடங்கினாள்.

(தொடரும்)



பஸ்ஸில்—

இவள்: ''பையா...! இது உன் பையா?''

அவன்: ''ஆமாம் பாட்டி. நீ வைபாட்டி.''

—கடுவை கோபால்சாமி

# மன்னன் மகள்



## 67. அவன் கதை

''மகனே கேள்! சோழ ராஜகுல வம்சத்தின் இந்த அற்புதக் கதையைக் கேள். வீரத்தாலும் தியாகத்தாலும் வளர்ந்த இந்தப் பேரரசின் சில தலைமுறைகளைப் பற்றிய கதையைச் சொல்கிறேன், கவனமாகக் கேள். விஜயாலய சோழதேவரும் ஆதித்தரும் ஸ்தாபித்த சோழ ராஜ்யத்தைப் பாய் வேய்ந்து, ஈழத்தின்மீது படையெடுத்த பராந்தகர் பெரிதும் விஸ்தரித்தார். ஆனால், அவருக்குப் பிறந்த ராஜாதித்தனும் அவனுக்குப் பின்னால் வந்தவர்களும் ஆற்றல் படைத்தவர்களாயில்லாமையால் சோழர்கள் ராஜ்ய விளக்கு முப்பத்தாறு ஆண்டுகள் மங்கிக் கிடந்தது. அதன் திரியைத் தூண்டிவிடப் பிறந்தார் இராஜராஜ சோழ தேவர். அவர் முடி சூடிய பின்பு சோழர் பேரரசு பெரிதும் விரிந்தது. புலிக் கொடி தட்சிண பாரதத்தில் எங்கும் பறந்தது. ஆனால், அவர் முடிசூடு முன்பாகவே நடந்தது ஒரு கதை. வாலிப வயதிலேயே பிறநாடு செல்ல ஆவல் படைத்த இராஜராஜ சோழ தேவர் பலமுறை ஈழ நாட்டுக்குச் சென்றார். அப்படியொரு முறை சென்றபோது ஈழமன்னர்

சாண்டில்யன்

பரம்பரையின் தூரக்கிளையொன்றில் பிறந்த மானவதியென்ற பேரழகியைக் கண்டு மையல் கொண்டார். பராந்தகர் காலத்துக்குப் பின்பே சோழர்களுடன் பெரும் பகை கொண்ட ஈழ மன்னர் குலத்தார், இந்தத் திருமணத்துக்கு ஒப்புக் கொள்ளாது போகவே, ரகசியமாகவே இருவரும் மணம் புரிந்து கொண்டனர். சில நாள் ரகசியமாக அந்தப் பெண்மணியுடன் ஈழத்திலேயே காலம் கழித்து வந்த இராஜராஜ சோழ தேவருக்கு, சோழ நாட்டிலிருந்து அவசர அழைப்பு வரவே, அவர் மானவதியை அந்த மரகதத் தீவில் விட்டுத் திரும்பினார். இங்கோ அவருக்கு அரியணை காத்திருந்தது. முடி சூடியபின் அரசாங்க அலுவல்கள் ஏராளமாக அவரை வளைத்துக் கொண்டன. அவற்றை ஒருவிதமாகத் தீர்த்துக் கட்டியபின்பு, தமது மனையாளை அழைத்துவர ரகசியமாக ஈழமேகிய இராஜராஜர், அவள் தாம் மறைத்து வைத்த இடத்திலிருந்து மறைந்துவிட்டதை அறிந்தார். ஈழ மன்னர் குல வட்டாரங்களிலிருந்து, அவள் இறந்துவிட்டதாகவும் தெரிய வந்தது. மனம் உடைந்து நாடு திரும்பி வந்த இராஜராஜருக்கு, மந்திரிமார்கள் புதியதொரு விவாகத்தையும் செய்து வைத்தார்கள். புது மகிஷிக்கு இராஜேந்திர தேவர் பிறந்தார். இராஜேந்திர தேவருக்கு வாலிப வயதாகி, அவருக்கு இளவரசுப் பட்டம் சூட்ட இராஜராஜர் முனைகையில், அவருடைய முதல் மனைவி உயிரோடிருப்பதாகவும் அவளுக்கொரு குழந்தையும் இருப்பதாகவும், பட்டம் அதற்கே உரியதென்றும், ஈழத்து மன்னன் ஓலையனுப்பினான். சோழப் பேரரசரான இராஜராஜர் கலங்கினார். சோழ நாட்டைக் கேவலப்படுத்தவும், சமயம் பார்த்துத் தன் வசப்படுத்தவுமே, கர்ப்பமாயிருந்த மானவதியை ஈழ மன்னன் மறைத்து வைத்து, இளவரசுப் பட்ட சமயத்தில் தகராறைக் கிளப்புகிறானென்று அரசனும் முதன் மந்திரியும் உணர்ந்து கலங்கினர். இளவரசுப் பட்டம் கட்ட வேண்டிய இராஜேந்திரரை என்ன செய்வதென்று திகைத்தார் இராஜராஜர். இப்படித் திகைத்துக் கொண்டிருந்த ஒரு நாளிரவு இராஜராஜருக்கு ஒரு ஈழத்தான் ரகசிய ஓலையொன்றைக் கொண்டு வந்தான். அதைப் படித்த இராஜராஜர் திடீரென ரகசியமாக யாருக்கும் சொல்லாமல் தொண்டி மாநகரை நோக்கிச் சென்றார். அங்கே ஒரு சிறு குடிசையில் இராஜராஜருடைய முதற் செல்வனுடன் மானவதி நின்றிருந்தாள். கிழிந்த உடையில் திருட்டுத்தனமாக ஈழத்துப் படகோட்டிகளின் உதவியால் சோழ நாடு வந்த அந்த அரச மகளின் கோலத்தைக் கண்ட இராஜராஜர் கண்ணீர் விட்டார். 'மானவதி! நீ இறந்து விட்டாயென்றல்லவா நினைத்தேன்!'' என்று கதறினார். தியாகமே உருவான அவள் தேற்றினாள். 'உங்கள் நாட்டை அபகரிக்க ஈழ ராஜகுலத்தார் செய்த சூழ்ச்சி இது. கர்ப்பமாயிருந்த என்னைச் சிறையிலடைத்து வைத்தார்கள். இந்தச் செல்வன் சிறிது வளர்ந்ததும் சோழ நாட்டு அரியணைக்கு உரிமை கொண்டாடினார்கள். ஆனால், நானும் இவனும் சிறையிலிருந்த சில நண்பர்கள் உதவியால் தப்பி இங்கு வந்தோம். இதோ உங்கள் செல்வன்,' என்று வாலிப வயதுடன் பக்கத்தில் நின்றிருந்த மைந்தனை இராஜராஜர் கையில் பிடித்துக் கொடுத்தாள் மானவதி!''




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு

என்று கதையைச் சொல்லிய மணிமேகலை, ஆயாசத்தால் பெருமூச்செறிந்தாள்.

அந்தக் கதையைக் கேட்கக் கேட்க ஆச்சரியத்தில் மூழ்கிய கரிகாலன், ''பிறகு?'' என்று கதையைச் சொல்லத் தாயை மேலும் முடுக்கினான்.

கதையைத் தொடர்ந்தாள் அவள்: ''பிறகுதான் ஒரு மகா தியாகியின் கதை ஆரம்பமாகிறது. மகனே! எந்தக் காரணத்தைக் கொண்டும் சோழப் பேரரசின் விஸ்தரிப்பைத் தடுக்கக் கூடாது என்று மானவதி கூறிவிட்டாள். தானும் தன் மகனும் இறந்துவிட்டதாகப் புத்த பிக்ஷுக்களைக் கொண்டு நாடெங்கும் வதந்தியையும் கிளப்பி விட்டாள். இராஜேந்திரன் இளவரசுப் பட்டம் கட்டிக் கொள்ளட்டுமென்று திட்டமாகச் சொல்லிவிட்டாள். தான் தனித்துக் கூரத்து மாளிகையின் அக்ஞாதவாசம் புரியவும் சம்மதித்தாள். அந்த அந்தியைச் செய்ய இராஜராஜருக்கு இஷ்டமில்லைதான். ஆனால் சோழப் பேரரசின் நலனை முன்னிட்டு அதற்கு இசைந்தார். மானவதி உலகத்தின் கண்களிலிருந்து மறைந்து வாழ்ந்தாள். அவள் செல்வன், அவர்தான் உன் தந்தை மகேந்திரத் தேவர், சோழர்கள் படையில் சாதாரண வீரனாகச் சேர்ந்தார். மகேந்திர தேவர் தமது பிறப்பு ரகசியத்தை யாரிடமும் சொல்லக்கூடாதென்று அவரிடமும் பிரமாணம் வாங்கிக் கொண்டு மானவதி சில வருஷங்களில் உலகை விட்டு மறைந்தாள். பிறகுதான் மானவதியின் செல்வரை நான் மணந்தேன். நான் பரம ஏழை. என்னை எப்படி அவ்வளவு பெரிய வீரர் மணக்க முற்பட்டாரென்று எனக்கே ஆச்சரியமாயிருந்தது. மணந்த நாங்களிருவரும் இணைபிரியாமல் வாழ்ந்தோம். அந்த இன்ப இணைப்பிலே நீ பிறந்தாய் கரிகாலா. கரிகாலன் என்ற பெயரை அவரே உனக்கு வைத்தார். பிறகு எந்த ஈழத்திலிருந்து வந்தாரோ அந்த ஈழத்துப் போரிலேயே உன் தந்தை மாண்டார்,'' என்று பேசிய மணிமேகலை, உணர்ச்சிப் பெருக்கால் இரண்டு துளிக் கண்ணீரை விட்டுச் சிறிது கதையை நிறுத்தினாள். சற்று நிதானித்துவிட்டு மறுபடியும் சொன்னாள்: 'ஈழத்துப் போர்ப் பாசறையில் மரணப் படுக்கையிலிருந்த அவர், அப்பொழுது உதவிப் படைத் தலைவனாயிருந்த அரையன் ராஜராஜனையும், போரில் காயமுற்றோருக்கு உதவப் போயிருந்த இரண்டு புத்த பிக்ஷுக்களையும் தம்மிடம் வரவழைத்தார். வரவழைத்துத் தம் வாழ்க்கை வரலாற்றைக் கூறினார். எந்தக் காரணத்தை முன்னிட்டும் அதை யாருக்கும் தெரிவிக்கக்கூடாதென்று பிரமாணமும் வாங்கிக் கொண்டார். அந்தப் பிரமாணம் வாங்கும் சமயத்தில் படையிலிருந்த பிரதாபருத்திரனும் உள்ளே நுழைந்தான். ஆகவே அவனும் பிரமாணம் செய்ய வேண்டியதாயிற்று. இப்படிப் பிரமாணம் செய்தபின் எப்படியாவது தன் மகனைப் பெரிய வீரனாக வளர்க்கும்படி அரையன் ராஜராஜனிடம் வேண்டிக்கொண்டு, நான் உன்னுடன் சூடாமணி விஹாரத்துக்கு அனுப்பிவைத்தேனே, அந்தப் பச்சைக் கல் மோதிரத்தையும் கொடுத்துவிட்டு, இவ்வுலக வாழ்க்கையிலிருந்து விடை பெற்றுக் கொண்டார். அந்தப் பச்சைக் கல் மோதிரம் இராஜராஜர் மானவதிக்குக் கொடுத்து, மானவதி தேவி உன் தந்தைக்கு




வித்தியாசங்கள் உள்ளன. விடை: 73'ம் பக்கம்




# 4 நவீன 'கிளிப்'புகள்

சூப்பர் **சேஸ்** வாஷிங் பவுடரின் ஒவ்வொரு பேக்கட்டுடனும்

இதோ ஒரு புதுமை!
இறுகப்பற்றிக்கொள்ளும்
இந்தக் 'கிளிப்' புகளை துணி
உலர்த்தும் கொடியிலேயே
கோர்த்து விடலாம்.

எனவே, சூப்பர் சேஸ்
வாஷிங் பவுடர் வாங்கி,
இந்தக் 'கிளிப்' புகளை
இன்றுமுதலே சேகரிக்கத்
தொடங்குங்கள்!




**சலுகை 31-5-88 தேதிவரை**

இச்சலுகை
தமிழ்நாட்டில் மட்டுமே

அழுக்கை நீக்க

நீண்டும் அணுகாமல் தடுக்க.

A PRODUCT OF




தூத்துக்குடி ஆல்கலி கெமிக்கல்ஸ் அண்டு ஃபெர்டிலைசர்ஸ் லிமிடெட்,
553, அண்ணா சாலை, சென்னை - 600 018.

Artig/TAC/012/88/TAM/A

அளித்தது. உன் தந்தை அரசகுல அடையாளமாக உனக்கு வைத்துச் சென்ற செல்வம் அது.''

மணிமேகலை மீண்டும் கதையை நிறுத்தினாள். துக்கத்தினால் ஏற்பட்ட பெருமூச்சொன்றும் அவளிட மிருந்து வெளி வந்தது. அதுவரை எந்தச் சந்தர்ப்பத்திலும் கண்ணீரை விடாத கரிகாலன் கண்களிலும் நீர் துளித்தது. அவன் கண்களைத் துடைத்துவிட்டுச் சொன்னாள் அவள்: ''மகனே! அவர் மரணத்திற்குச் சில வருஷங்களுக்கு முன்புதான் என்னிடம் உண்மையைச் சொன்னார். 'உங்களுக்குரிய இடத்தில் இராஜேந்திரன் ஏன் ஆள வேண்டும்?' என்று மண்ணாசையால் கேட்டேன். 'பெண்ணே! பெரும் தியாகத்தால்தான் பேரரசுகள் ஸ்தாபிக்கப்படுகின்றன. அரசாள்வதைவிடத் தியாகம் பெரிது. நான் ஆண்டாலென்ன, என் தம்பி ஆண்டாலென்ன? சோழ மண்டல விஸ்தரிப்புத்தான் முக்கியம். இதை மறக்காதே!'' என்று பதில் சொன்னார் உன் தந்தை. அவர் பேசும் உறுதியை நீ கண்டதில்லையடா என் கண்ணே! ஒருமுறை அவர் சொல்வதைக் கேட்டால், யாரும் அவரை மறுத்துப் பேச முடியாது. எல்லாம் இராஜ தோரணைதான். அவர் உறுதியை நானும் கடைப்பிடித்தேன். உன்னை யாரென்று சொல்வதில்லையென்று நீ பிறந்த உடனேயே நான் செய்து கொடுத்த பிரமாணத்தை இன்றளவும் காப்பாற்றிவிட்டேன். நீ என்னிட மிருந்தால் உண்மை வெளிப்பட்டு விடுமோ என்று பயந்து, ஐந்து வயதில் அரையன் ராஜராஜன் மூலம் உன்னைச் சூடாமணி விஹாரத்துக்கு அனுப்பி னேன். ஆனால் வைக்கோலால் மூடி நெருப்பை அணைக்க முடியுமா? நீ இருப்பது மெள்ள எதிரிகளுக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது. சேரனும் பாண்டியனும் ஏதோ சந்தேகப் படுவதாகச் சூடாமணி விஹாரத் தலைவர் அறிவிக்கிறார் மகனே! வேங்கியில் நீ கையாண்ட தந்திரங்கள், சக்கரக் கோட்டத்திலும் இதர இடங் களிலும் நீ காட்டியிருக்கும் இணையற்ற வீரம் உன் புகழை உச்ச நிலைக்குக் கொண்டு வந்துவிட்டது. இனி...'' என்று விசனத்தால் அழுதாள் மணிமேகலை.

அடுத்த விநாடி அவள் உடலே




நடுங்கும்படியான வார்த்தைகளைச் சொன்னார் சூடாமணி விஹாரத் தலைவர்: ''இனி இவன் இந்நாட்டி லிருக்கக் கூடாது!'' என்ற கடும் சொற்களை மிக நிதானமாக உதிர்த்தார்.

கரிகாலன் தன் கோப விழிகளை அவர்மீது நாட்டி, ''தந்தையே! என் நாட்டில் நான் இருக்கக் கூடாதா?'' என்று உணர்ச்சி மிகுதியால் சீறினான்.

சூடாமணி விஹாரத் தலைவரின் பரிதாப விழிகள் அவனையும் மணிமேகலையையும் மாறி மாறிப் பார்த்தன. பிறகு கருணை பொங்கி வழியும் குரலில் அவர் சொன்னார்: ''கரிகாலா! உன் பிறப்பு மர்மத்தை இனி அதிக நாள் மறைக்க முடியாது. உண்மை வெளிப்பட்டாலோ உள் நாட்டுச் சண்டை ஏற்படும். பிறகு சோழ சாம்ராஜ்யத்தின் நாசம். இவற்றுக் காகவா உன் தந்தை மகேந்திர தேவன் முடியுரிமை துறந்தான்? இதற்கா உன் தந்தையின் தாய், அந்தத் தியாகி, வாழ்நாளை அக்ஞாத வாசத்தில் கழித்தாள்? நன்றாகச் சிந்தித்துப் பார். இரு தலைமுறைகளின் தியாகத்தைக் கரிகாலன் உடைத்துச் சோழப் பேரரசை நாசம் செய்தான் என்ற அபகீர்த்தி உனக்கு வேண்டுமா என்பதை யோசித்துப் பார்.''

சூடாமணி விஹாரத் தலைவரின் வார்த்தைகளுக்கு நீண்ட நேரம் பதில் சொல்லாத கரிகாலன், தன் தாயிடமிருந்து எழுந்து, நீண்ட நேரம் புத்தர் பிரானை நோக்கிக் கொண்டே நின்றான். பிறகு மணிமேகலையைப் பார்த்து, ''அம்மா! உன் எண்ணமும்

இதுதானா?'' என்று கேட்டான்.

''ஆம் மகனே! வேறு வழியில்லை,'' என்றாள் அவள், வறண்ட குரலில்.

கரிகாலனின் கண்கள் நிதானமாகச் சூடாமணி விஹாரத் தலைவரை ஆராய்ந்தன. கடைசியாக வந்த சொற்களில் உறுதி நிரம்பி நின்றது. ''ஆகட்டும் தந்தையே! உங்கள் விருப்பப்படி பிறந்த மண்ணை விட்டுப் போகிறேன். ஆனால் இரண்டு நிபந்தனைகள்!'' என்றான் கரிகாலன்.

''என்ன நிபந்தனைகள் மகனே?'' என்று கேட்டார், சூடாமணி விஹாரத் தலைவர்.

''ஒன்று; என் தாய் என்னுடன் வந்துவிட வேண்டும்.''

''சரி.''

''இன்னொன்று, நான் நிரஞ்சனா தேவிக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டும்.''

''என்ன வாக்குறுதி அது கரிகாலா?''

''இரண்டு வாக்குறுதிகள் கொடுத்தேன் வேங்கி நாட்டு மன்னன் மகளுக்கு. ஒன்று, அவள் தம்பியை வீரனாக்குகிறேன் என்று சொன்னேன். வீரனாக்கி விட்டேன்! அரையன் ராஜராஜனுடைய மிகச் சிறந்த உப தலைவர்களில் இப்பொழுது அவனும் ஒருவன். வேங்கி நாட்டை ராஜராஜ நரேந்திரனிடம் ஒப்படைக்கிறேன் என்று உறுதி கூறியிருக்கிறேன். அது இன்னமும் நடக்கவில்லை.''

''எப்பொழுது நடக்கும்?''

''இன்னும் இரண்டு மாதங்களில். என் திட்டப்படி எல்லாம் நடந்தால், அரையன் இராஜராஜன் இந்த மாதமே கங்கைக் கரையில் சோழர்களின் புலிக் கொடியை நாட்டுவார்; அடுத்த மாத ஆரம்பத்தில் அவர் கோதாவரி நதி தீரத்துக்கு வருவார். அங்கு இராஜேந்திர சோழ தேவர் அவரைச் சந்திக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன்.''

''எதற்காக இந்த ஏற்பாடு?''

''ஜெயசிம்ம சாளுக்கியனை முறியடிக்க. இராஜேந்திர சோழ தேவர் படையின் ஒரு பகுதியுடன் கோதாவரி நதி தீரத்தில் அரையன் ராஜராஜனைச் சந்திப்பார். அவர் புறப்பட்ட சில நாட்களுக்கெல்லாம், நான் இங்கிருந்து படையின் மற்றொரு பிரிவுடன் புறப்பட்டுக் கிருஷ்ணா நதி தீரம் செல்வேன்.''

இதைக் கேட்ட சூடாமணி விஹாரத் தலைவரின் கண்களில் போர் வெறி தாண்டவமாடியது. ''புரிந்தது கரிகாலா, புரிந்தது!'' என்று, அங்கிருந்த சூழ்நிலையையும் அதுவரை மணிமேகலை சொன்ன சோகக் கதையையும் மறந்து ஆனந்தத்துடன் கூறினார்.

பீடத்திலிருந்து மணிமேகலை எழுந்து, அவரை ஆச்சரியத்துடன் நோக்கி, ''எது புரிந்தது ஸ்வாமி?'' என்று வினவினாள்.

''மகளே! நீ பாக்கியம் செய்தவள். மகா வீரனும் யுத்த தந்திரத்தில் இணையற்றவனுமான மகனைப் பெற்றிருக்கிறாய். அவன் தந்திரம் புரியவில்லையா உனக்கு? இராஜேந்திர சோழ தேவன், கங்கையிலிருந்து திரும்பி வரும் தன் தளபதியைச் சந்திக்கக் கோதாவரிக்



''உங்க வீட்ல யாராவது விருந்தாளிங்க வந்தா மட்டும், எல்லாரும் 5 பாட்டு பாடுன்னு உங்களுக்குள்ளே சொல்லிக்கிறீங்களே ஏன்?''

''பஞ்சப்பாட்டு பாடுன்னு அர்த்தம்!''

–சீர்காழி ஸ்ரீராம்.

ஆறு வித்தியாசம் விடை:

1. கதை
2. பூ
3. திருடன் சட்டை
4. வீட்டுக்காரர் கிராப்
5. பையன் கை.
6. போஸ்டர்.



க்கரைக்குச் செல்வார். அவர்களை எதிர் கொள்ளும் பாவனையில் உன் மகன் ஒரு படையுடன் கிருஷ்ணா நதிக் கரைக்குச் செல்வான். வேங்கி நாடு கோதாவரிக்கும் கிருஷ்ணா நதிக்கும் இடையிலிருக்கிறதல்லவா?'' என்று குறிப்பிட்டு மணிமேகலையை உற்றுப் பார்த்தார் சூடாமணி விஹாரத் தலைவர்.

மணிமேகலையின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் சுரந்தது. ''புரிந்தது சுவாமி! இராஜேந்திர சோழ தேவர் படைக்கும் என் மகன் படைக்கும் இடையே வேங்கி நாடு சிக்கிக் கொள்ளும். ஆகவே இனி அதற்கும் சாளுக்கியர்களிடமிருந்து விடுதலை!'' என்றாள் மணிமேகலை, பெருமையும் ஆனந்தமும் கலந்த பார்வையைத் தன் மகன்மீது நாட்டிக் கொண்டே.

தன்னைப் பற்றித் தாயும் சூடாமணி விஹாரத் தலைவரும் பாடிய புகழ்ச்சிப் பாடல்களை விரும்பாத கரிகாலன், ''அது கிடக்கட்டும் தந்தையே! இரண்டு நிபந்தனைகளும் தங்களுக்குச் சம்மதந்தானே?'' என்று விசாரித்தான்.

சூடாமணி விஹாரத் தலைவர் பெருமையால் நன்றாக விகசித்த தமது கண்களைக் கரிகாலனை நோக்கி நாட்டினார். ''இரண்டும் சம்மதந்தான் கரிகாலா, வேங்கிப் போருக்குப் பிறகே நாட்டை விட்டுச் செல்லலாம். இராஜேந்திரன் கடல் கடந்து கடாரத் தீவின் மீதும் படையெடுக்கத் திட்டமிட்டிருக்கிறான். அந்தப் படையெடுப்புக்கு உன்னைத் தளபதியாக்க அரையன் ராஜராஜனுக்கு எழுதி நானே ஏற்பாடு செய்கிறேன். சோழ சாம்ராஜ்யம் உன்னால் கடல் கடந்தும் விரியட்டும் மகனே! உங்கள் குலம் செய்த தவப்பயன் நீ. உன் தந்தை மகேந்திர தேவன் தியாகத்துக்கு உன் தியாகம் சிறிதும் குறைந்ததல்ல!'' என்று கூறிய சூடாமணி விஹாரத் தலைவர், மணிமேகலையை நோக்கித் திரும்பி, ''மணிமேகலை! உன் மணி வயிறு பாக்கியம் செய்தது. சரித்திரத்தில் இணையற்ற தியாகத்தைச் செய்யும் தனயனைப் பெற்றாய். அரசர்கள் உலகத்தில் பல பேருண்டு! தியாகிகள் சில பேர்தான். சரித்திரத்தில் இடம் பெற்றுப் பிரகாசிக்கும் மன்னர்கள் பலருண்டு. நாட்டுக்குச் சேவை செய்து மக்கள் கண்ணில் படாது மறைந்து போகும் மகான்கள் சிலர்தானுண்டு. இராஜேந்திரனைப் போல் உன் மகன் சரித்திரத்தில் இடம் பெறாதிருக்கலாம். ஆனால் புத்தர் பிரான் அருளுக்கு அவன் பாத்திரமானவன். அந்த அருளிருக்க உலகத்தில் பூதப் பொருள்கள் உன் மகனுக்கு எதற்கு?'' என்று வாழ்த்தினார்.

மணிமேகலையும் கரிகாலனும் ஒருவரையொருவர் சிறிது நேரம் பார்த்துக் கொண்டனர். அவ்விருவரும் ஒருவரையொருவர் விழுங்கி விடுவதைப் போல் பார்த்துக்கொண்டு நிற்பதைச் சூடாமணி விஹாரத் தலைவர் கவனித்து விட்டு, போதிசத்துவரை நோக்கினார். தாயும் தனயனுங்கூடப் போதி சத்துவரின் அருள் விழிகளை நோக்கினார்கள். புத்தர் பிரானின் மந்தகாசம் அவர்கள் உள்ளங்களுக்குச் சாந்தியளித்தது. அவர் அருகேயிருந்த தீபமும் அவர்கள் தியாக வாழ்வுக்கு அமர ஒளியிட்டுச் சுடர்விட்டுப் பிரகாசித்தது.

(தொடரும்)

## யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
## காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா



முன்னிருந்து பின் படிக்கினும் மாற்றிப் பின்னிருந்து முன் படிக்கினும் ஒன்றுபோல் வருவது 'மாலை மாற்று' ஆகும்.' என்று திருஞானசம்பந்தர் இயற்றிய இந்தச் செய்யுளுக்கு விளக்கமும் தருகிறார் கி.வா. அவர்கள்.

பாடலும் விளக்கமும்:

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா

யா—எவையும்; யாம்—நாங்களும்; ஆம்—ஆகும்; ஆம்நீ—ஆயின் நீ; யாமா—யாமங்களாக இருப்பவனே; மா—பெருமையுடைய; யாழீ—யாழியையுடையவனே; காமா விருப்பத்தைப் பெற்றவனே; காண்நாக—காணப்படுகின்ற பாம்பை அணிந்தவனே; மாகாழீ—பெருமையுடைய ஹாரத்தைப் பெற்றவனே; யாமாமாயா—பசு மாடும் மற்ற மிருகங்களும் மாயாத நீயாக இருக்கிறாய்; மாமாயா—பெருமையையும் மாயமான தோற்றத்தையும் உடையவனே.

—பாமாஜி

முதன் முதலாக வேங்கித் தலைநகரின் வசந்த மண்டபத்தில் சந்தித்த நாளன்று அவன் மீது கொழுந்துவிட்ட காதல் அப்பொழுதும் எரிந்து கொண்டிருந்தாலும், அதைப் பொறாமையென்னும் சருகுகளையிட்டு மூடப் பார்த்தாள் அவள். ஆனால் சருகுகள் பற்றத்தான் செய்தன.

19.5-88

## 68. இமைப் பொழுதில் மறைந்த இடைக்காலம்

நிலவரைக் கூடத்தின் போதி சத்துவருக்கு முன்பாக முதன் முதலாகத் தன் தாயை இன்னாரென்று அறிந்ததால் உண்டான மகிழ்ச்சி வெள்ளத்தின் காரணமாக, அடுத்த ஒன்றரை மாத காலம் ஓடியதே தெரியவில்லை கரிகாலனுக்கு. கரிகாலன் மனம் எத்தனை மகிழ்ச்சியில் ஆழ்ந்திருந்ததோ, அத்தனை துன்பத்தில் ஆழ்ந்து கிடந்தது. சோழ மண்டலாதிபதியான இராஜேந்திரன் மனம். கரிகாலன் இன்னாரென்று அறியச் சக்கரவர்த்தி செய்த முயற்சிகள் அனைத்தும் வீணாயின. அரையன் ராஜராஜன் கரிகாலனைப் பற்றி எழுதிய ஓலைகளிலெல்லாம் ராஜ முத்திரையைப் பொறித்ததாலும், தஞ்சைத் துறவியார் மணிமேகலையைத் தனிமையில் கூரத்தில் சந்தித்துப் பேசியதாலும், அவளுக்கும் கரிகாலனுக்கும் நெருங்கிய உறவு இருக்கிறதென்பதை ஊகித்துக் கொண்ட இராஜேந்திரன், அந்த மர்மத்தை உடைக்க மணிமேகலையைக் காஞ்சி மாநகரத்துக்கு வரவழைத்தது பெரும் வியர்த்தமாகப் போய்விட்டது. முத்தாணி மண்டபத்தில் கரிகாலனைத் தனக்குத் தெரியாதென்று ஒரேயடியாகச் சாதித்துவிட்ட மணிமேகலை, மகனைச் சந்தித்த இரண்டாவது நாளே கூரத்துக்குப் போய்விட்டாளாதலால் அவளை உபயோகித்து எந்தவித ரகசியத்தையும் தெரிந்துகொள்ள ஏதுமில்லாமல் போய்விட்டது சோழப் பேரரசனுக்கு.

அடுத்தபடியாகத் தஞ்சைத் துறவியாரிடமிருந்து உண்மையைக் கிரகிக்கலாமென்று இராஜேந்திரன் செய்த முயற்சியும் வீணாகவே, உண்மை அடியோடு தெரியாமல் அவன் பெரும் குழப்பத்துக்கு உள்ளானான். சோழ ராஜ வம்சத்தின் ஏதோ ஒரு கிளைக்குத் தன்னால் பெரும் அநீதி ஏற்பட்டிருக்கிறதென்பதை இராஜேந்திரன் உணர்ந்து கொண்டானேயொழிய, அது என்ன அநீதி, அந்த அநீதியை இழைத்தவர் யார் என்ற விவரங்கள் அறியாமல் துன்பக் கடலில் ஆழ்ந்தான் இராஜேந்திரன். உண்மையைக் கரிகாலனிடமிருந்து அறிய, அவனைத் தன்னுடனேயே வைத்துக்கொண்டு, பல கோணங்களில் அவன் வாழ்வை ஆராய்ந்து எண்ணற்ற கேள்விகளையும் கேட்ட சோழப் பேரரசன், கரிகாலனுடைய பேச்சுத் திறமையை வியக்க முடிந்ததே தவிர, அவன் வாழ்வு

சாண்டில்யன்



மன்னன் மகள்

ரகசியத்தை அறியமுடியவில்லை.

இராஜேந்திரன் எதைக் கேட்டாலும் ஆச்சரிய ரேகையே படர்ந்து நின்றது, கரிகாலன் முகத்தில். மன்னர் தம் தனியறையில் அவனைத் தன்னந்தனியே வரவழைத்து, ''கரிகாலா! நீ சோழ ராஜ வம்சத்தைச் சேர்ந்தவனாயிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. உனது பிறப்பைப் பற்றி உனக்கு எதுவுமே தெரியாதா?'' என்று வினவியபோது, ''இருக்கலாம் மன்னவா! ஆனால் பெரிய ராஜ வம்சங்களில் கிளைகள் பல உண்டு. அவற்றுக்கு உபகிளைகளும் உண்டு. அதில் எந்தக் கிளையோ நான்? எந்தக் கிளையாயிருந்தாலென்ன? மன்னரான தாங்கள் மக்களுக்குச் செய்யும் சேவையில், சோழப்பேரரசை விஸ்தரிக்கும் பணியில் நானும் ஈடுபட்டிருக்கிறேன். இதுவே மனதுக்குச் சாந்தியளிக்கக் கூடியதல்லவா? மற்றதைப்பற்றி நாம் கவலைப் படுவானேன்? ஆனால், ஒரு கவலை மட்டும் எனக்குண்டு,'' என்றான்.

''எதைப் பற்றிக் கவலை?''

''வேங்கியைப் பற்றி.''

''வேங்கியைப்பற்றி என்ன கரிகாலா?'' என்று வினவினான் இராஜேந்திரன்.

''வேங்கி நாட்டில் நானிருக்கையில் நிரஞ்சனாதேவிக்கு ஒரு வாக்குறுதி அளித்தேன். அதுவும் சோழ நாட்டின் நன்மையை முன்னிட்டு...'' என்று கரிகாலன் பேச்சைத் துவக்கினான்.

''என்ன வாக்குறுதி?'' என்று சோழ மண்டலாதிபதி விசாரித்தான்.

''தங்கள் சகோதரி குந்தவையின் மகன் ராஜராஜ நரேந்திரனை வீரனாக்குவதாக வாக்களித்தேன். ஜெயசிம்ம சாளுக்கியன் ராஜராஜ நரேந்திரனைப் பலவீனனாக்கி, வேங்கியைத் தன் கைவசப்படுத்தி, தன் மருமகன் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனை மன்னனாக்கத் திட்டமிட்டான். அதற்கு நானே இடம் கொடுத்தேன். வேங்கியிலிருந்து விமலாதித்தன் மகளையும் ராஜராஜ நரேந்திரனையும் அப்புறப்படுத்தினேன்; எதற்கென்று மன்னருக்குத் தெரிந்திருக்கும்.''

''தெரியாது, சொல்.''

''தங்கள் கொடி புலிக்கொடி அல்லவா?''

''ஆம்.''

''புலி பதுங்கித்தானே பாயும்?''

''ஆம்.''

''பதுங்கட்டும் என்றுதான் நிரஞ்சனா தேவியைத் தங்களிடமும், ராஜராஜ நரேந்திரனை அரையன் ராஜராஜனிடமும் ஒப்படைத்தேன். இப்பொழுது ராஜராஜ நரேந்திரன் பயங்கொள்ளியல்ல! பல போர்களைக் கண்ட மாவீரன். அவன் கைகள் வலுவிழந்த கைகளல்ல, வலுவுள்ள கரங்கள். தங்கள் மகள் அம்மங்கா தேவிக்கு மிகவும் பொருத்தமான கணவன்.''

இதைக் கேட்ட இராஜேந்திர சோழதேவன் தீர்க்காலோசனையில் இறங்கினான். ஆனால், தொடர்ந்து பேசிய கரிகாலன், ''யோசிப்பதற்கு எதுவும் இல்லை மன்னவா! யோசிக்க வேண்டியதையெல்லாம் நானே



யோசித்து விட்டேன். முடிவு செய்ய வேண்டியதையெல்லாம் நானே முடிவு செய்து விட்டேன். என் திட்டங்களுக்குத் தங்கள் ஆதரவு இருக்கும் என்ற நம்பிக்கையில் புலி பதுங்கியாகிவிட்டது. இனிப் பாயும் நாள் வந்து விட்டது. தங்களுக்கு இன்னும் இரண்டொரு நாளைக்குள் அரையன் ராஜராஜனிடமிருந்து ஓலை வரும். தாங்கள் கோதாவரிக் கரையில் அவரைச் சந்திக்க நேரிடும். நான், தாங்கள் கிளம்பிய இரண்டாம் நாள் புறப்பட்டுக் கிருஷ்ணா நதியை ஒரு



வாரத்தில் அடைவேன். தாங்கள் கோதாவரியிலிருந்து தங்கள் மருமகனுடன் திரும்புவதற்குள் வேங்கி நாட்டு அரியணையைக் காலியாக்கி வைத்திருப்பேன். தங்கள் கையாலேயே தங்கள் மருமகனுக்கு முடிசூட்டலாம்,'' என்று விளக்கினான்.

சோழப் பேரரசனின் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. இத்தனை முன் யோசனையும் போர்த்திட்டம் வகுக்கும் நுண்ணறிவும், தன் தந்தைக்கும் தனக்கும் மட்டுமே உண்டென்று அதுவரை நினைத்துக் கொண்டிருந்த இராஜேந்திரனுக்கு, ஊர் பேர் தெரியாத அந்த வாலிபனின் பேச்சும் போக்கும் பெரும் விசித்திரமாயிருந்தது. 'இவன் என் தந்தையின் நெருங்கிய உறவினன்! சந்தேகமில்லை' என்று பலமுறை தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். ஆனால் என்ன உறவு என்பதைக் கண்டுபிடிக்க முடியாமல் தவித்தான்.

இந்தச் சம்பாஷணை நடந்த தினத்துக்கு அடுத்த சில நாட்கள், இராஜேந்திர தேவன் இது சம்பந்தமாக வந்தியத்தேவரைக் கலந்து பேசினான். கரிகாலனுக்கு பெரிய விருந்துகள் வைத்தான். பட்டணப் பிரவேசத் தினத்தன்று போடத் திட்டமிட்டு, கரிகாலன் கண்களைக் கண்ட குழப்பத்தில் போடாமல் விட்டுப்போன செங்கதிர் மாலையை, மந்திரிப் பிரதானிகள் அறிய அவன் கழுத்தில் போட்டான். எந்த மாலையைப் பெறுவதற்காக இராஜேந்திரன் சேரனுடன் பெரும் போரை நடத்தினானோ, அதே செங்கதிர் மாலையை மன்னன் கரிகாலனுக்குப் பரிசாக அளிப்பதைப் பார்த்துப் பேரமைச்சர்கூட வியப்புக்கு உள்ளாகி, 'இவனுக்கும் அரசகுலத்துக்கும் ஏதோ சம்பந்தமிருக்கிறது' என்று தீர்மானித்தாரேயொழிய, அது என்ன சம்பந்தம் என்பதை அறிய இயலாதவரானார்.

இந்தச் சம்பவங்கள் கரிகாலனுடன் ஒரே அரண்மனையில் இருந்த நிரஞ்சனா தேவிக்கும் பெரும் ஆச்சரியத்தை விளைவித்ததாலும், அவள் கரிகாலனைச் சந்தித்த சமயங்களில் கூட அவனை ஏறெடுத்துப் பார்க்காமலேயே போய்க் கொண்டிருந்தாள். தன் சகோதரனையும் தன்னையும்

சோழப் பேரரசின் நன்மைக்காகக் கரிகாலன் நாட்டை விட்டுக் கடத்தி விட்டான் என்ற நினைப்பில், அவனுடன் தீரா விரோதம் கொண்டிருந்த வேங்கிநாட்டு மன்னன் மகளுக்கு, அவனைப்பற்றிக் காஞ்சி மாநகரில் நடந்த கொண்டாட்ட மெதுவும் பெரும் எரிச்சலையே தந்தது. முதன் முதலாக வேங்கித் தலைவரின் வசந்த மண்டபத்தில் சந்தித்த நாளன்று, அவன்மீது கொழுந்துவிட்ட காதல், அப்பொழுதும் எரிந்து கொண்டிருந்ததாலும், அதைப் பொறாமையென்னும் சருகுகளை விட்டு மூடப் பார்த்தாள் அவள். ஆனால் சருகுகள் பற்றத்தான் செய்தன. எரியும் வீட்டை அலட்சியம் செய்யும் வீட்டுக் காரனைப் போல, பெண்ணுக்குள்ள இயற்கையான பிடிவாதத்தால் தன் உடல் பஸ்மீகரமானதைக்கூடக் கவனி யாமல், கோபாவேசத்தில் மூழ்கியிருந் தாள் நிரஞ்சனா தேவி.

அவள் மெள்ள மெள்ள வாடுவதைக் கண்ட வந்தியத்தேவர் மட்டும், காரணத்தை நன்றாக அறிந்திருந்ததாலும், ஏதும் செய்யச் சக்தியற்றவரானார். எதையும் நொடிப் பொழுதில் அறிந்துகொள்ளக்கூடிய வந்தியத் தேவர், கரிகாலன்மீது அவளுக் கிருந்த அபாரமான காதலை உணர்ந்தே இருந்தார். கங்கைப் படையெடுப்புக்குச் சாளுக்கியர் எல்லையிலிருந்து படைகள் புறப்பட்ட நாளன்று, அவள் கரி காலனுக்குத் திலகமிடத் தயங்கியதை அன்றும் நினைத்துப் பார்த்த வந்தியத் தேவர், ''பெண்களுக்கு ஒருவனிடம் காதல் பிறந்துவிட்டால், அவர்களும் துன்பப்பட்டு, பிறரையும் துன்பத்தி லாழ்த்த வேண்டுமா?'' என்று தமக்குத் தாமே சொல்லி வியந்து கொண்டிருந் தார். என்ன வியந்தும் கரிகாலனுக்கும் நிரஞ்சனா தேவிக்குமிடையிலிருந்த பெரும் சுவரை இடிக்க அவர் என்ன முயன்றும், பலன் சிறிதும் ஏற்படாது போயிற்று. ஆனால் அந்தச் சுவர் ஒரு நாள் கண்டிப்பாய் இடியுமென்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்டிருந்த வந்தியத் தேவர், அந்த இடைக்கால ஊடலை வேடிக்கையுடன் கவனித்துக் கொண்டிருந்தார். அந்த ஊடலைத் தவிர்க்க வந்தவன் போல், அரையன் ராஜராஜனிடமிருந்து ஒரு தூதுவன் ஓலையுடன் வந்தான்.

ஓலையில் இரண்டே வரிகள் எழுதியிருந்தான் அரையன் ராஜராஜன். ''மஹிபாலன் முறியடிக்கப்பட்டான். கங்கைக் கரையில் புலிக்கொடி நாட்டப் பட்டது. கங்கையின் புனித நீரை ஆயிரம் குடங்களில் எடுத்து வருகிறேன். மன்னர் பிரானை, கங்கை கொண்ட சோழ வேந்தனை, புண்ணிய நதியான கோதாவரி தீரத்தில் சந்திக்கிறேன்.'' இவ்வளவுதானிருந்தது ஓலையில்.

முத்தாணி மண்டபத்திலே, சிற்றரசரும், தளபதிகளும் மந்திரிகளும் நிறைந்திருந்த மாபெரும் சபையிலே, ஓலையைப் பேரமைச்சர் படித்தார். செய்தியின் மகிழ்ச்சி தந்த அதிர்ச்சியால் சற்று நேரம் சபையில் மௌனமே நிலவியது. பெரும் சாதனையைத் தந்த ஆண்டவனை நோக்குவதுபோல் உயரக் கண்களைத் தூக்கினான் சோழச் சக்கரவர்த்தி. அவன் வெற்றிக்கு ஆசி கூறுவது போல் ஆலய மணிகள் ஒலித்தன. சற்று நேரத்திற்கெல்லாம் மகிழ்ச்சிக் கொண்டாட்டத்தை முன்னிட்டு, காஞ்சி மாநகரத்திலே பேரிகைகள் பிரமாதமாகச் சப்தித்தன.

அடுத்த இரண்டு நாட்களில் படைகள் அணிவகுத்தன. பேரிகைகள் முழங்க, வாத்தியங்கள் கோஷிக்கத் தன் படைத் தலைவனைச் சந்திக்கக் கோதாவரி தீரத்துக்குப் பயணமானான் இராஜேந்திர சோழ தேவன். அதற் கடுத்த இரண்டு நாட்களில், மற்றொரு படைப் பிரிவுடன் வேங்கியை நோக்கிச் சென்ற கரிகாலன், தன்னுடன் நிரஞ்சனா தேவியையும் அழைத்துச் சென்றான். முதலில் நிரஞ்சனா தேவி புறப்பட மறுத்தாள். ஆனால், அந்தப் புரத்தில் அரசர் ஆணைப்படி அவளைச் சந்தித்த கரிகாலன், ''தேவி! புறப்படுவது தங்களிஷ்டமுமல்ல; என் இஷ்டமுமல்ல; சோழப் பேரரசர் ஆணை. சோழ நாட்டின் மிகப் பிரசித்தி பெற்ற சரித்திரக் கட்டத்தில் நாம் நிற்கிறோம். புறப்படுங்கள்,'' என்று கட்டளையிட்டான்.

வேண்டாவெறுப்பாகப் புறப்பட்ட நிரஞ்சனா தேவிக்கு நாளாக ஆக, படைகள் செல்லும் திக்கைக் கவனிக்கக் கவனிக்க, கரிகாலனின் எண்ணம் என்ன என்பது மெள்ள மெள்ள விளங்கத் தொடங்கியது.

அவளுக்கு மட்டுமல்ல. ஜெயசிம்ம சாளுக்கியனுக்கும், விஷ்ணுவர்த்தன விஜயாதித்தனுக்கும் கூட நன்றாக விளங்கி விடவே, கரிகாலன் எதிர் பார்த்தபடி வேங்கிப் போர் மும்முரமாக நடைபெறவில்லை.

''சோழர் படைகளைக் கண்டதும், விஷ்ணுவர்த்தன விஜயா தித்தன் ஓடிவிட்டான்,'' என்று சரித்திரமே சான்று கூறுகிறது. பெரும் போர்களைக் கண்டவனும் மிக்க தந்திர சாலியுமான ஜெயசிம்ம சாளுக்கியன், இராஜேந்திரன் படைகளுக்கும், கரிகாலன் படைகளுக்குமிடையே தன் படைகளைக் காவு கொடுக்க இஷ்டமில்லாமல், கரிகாலன் வருமுன்பாகப் படையின் பெரும் பகுதியை மேலைச் சாளுக்கிய எல்லைக்கு அழைத்து சென்று விட்டதால் வேங்கிக் கோட்டையின் கதவுகள் திறந்தே கிடந்தன!

ஒரு வருஷ காலத்துக்கு முன்பு, யாருமற்ற அநாதையாக, சாளுக்கிய வீரர்களால் திருடனாக மதித்துத் துரத்தப்பட்ட அதே நகரத்தில், சோழர் களின் மாபெரும் படைத் தலைவனாக தன் வரவை உத்தேசித்துப் பேரிகைகள் முழங்கப் படைகளுடனும் நிரஞ்சனா தேவியுடனும் நுழைந்தான் கரிகாலன்.

அடுத்த சில தினங்களில், இராஜேந்திரனது படையும் வேங்கிக்கு வரவே, ஜனசமுத்திரத்தில் மூழ்கிக் கிடந்தது வேங்கியின் தலைநகர். நிரஞ்சனா தேவியின் உள்ளத்தில் மகிழ்ச்சி மட்டுமல்ல, குற்றம் செய்து விட்ட ஓர் உறுத்தலும் இருந்து கொண் டிருந்தது. பல நாட்களுக்கு முன்பு அனாதையாகச் சந்தித்த கரிகாலனை, அதே வசந்த மண்டபத்தின் அறையில் மீண்டும் சந்தித்த அவள், பேச நா எழாமல் தவித்தாள். பல நாட்களுக்கு முன்பு எந்தப் பஞ்சணையில் அவளைப் பார்த்துக் கரிகாலன் மலைத்து மனத்தைப் பறி கொடுத்தானோ, அதே பஞ்சணையில் அவளை மீண்டும் பார்த்தான் கரிகாலன். அவர்களிருவர் உள்ளங்களும் பின் நோக்கிப் பாய்ந்தன. இடைக்காலம் இமைப் பொழுதில் எங்கோ மறைந்தது. அன்றும் அந்தப் பழைய மையிருட்டுத்தான். ஆனால் அதில் வாழ்வின் விளக்கொளியும் சற்றே பளிச்சிட்டது.

''அரசகுமாரி!'' என்று மெல்ல அழைத்தான் அவன்.

ஆவல் மிதமிஞ்சிப் பிரவாகித்த அரசகுமாரியின் அழகிய விழிகள், அவனை நோக்கி எழுந்தன.

(தொடரும்)







இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 78'ம் பக்கம்



# மன்னன் மகள்

26.5.88

## 69. மன்னர் கட்டளை

அஞ்சாமல் எவரையும் ஏறெடுத்து நோக்கும் திறன் வாய்ந்த நிரஞ்சனா தேவியின் அஞ்சன விழிகள், அன்று அச்சத்தால் சற்றே சலித்தன. அச்சத்துடன் ஆவலும் கலந்து கொள்ளவே, பயமும் நாணமும் கலந்த பார்வையொன்றை அவன்மீது படரவிட்டாள் மன்னன் மகள். அப்படிப் படர விட்டதால் உள்ளத்தே எழுந்த பலதரப்பட்ட எண்ணங்கள் அந்தப் பாவையின் இதயத்தில் எத்தனை எத்தனையோ உணர்ச்சிகளைக் கிளப்பிவிட்டதால், அவள் பூவுடல் பஞ்சணையில் ஒருமுறை லேசாக அசைந்தது. கரிகாலன் அதே வசந்த மண்டபத்தில் தன்னைச் சந்தித்த ஒவ்வொரு சமயத்திலும் அவனுடைய சொரூபம் எந்தெந்த விதமாக மாறுபட்டு எந்த நிலையில் அன்று அவன் தன் முன் நிற்கிறானென்பதைச் சிந்தித்துப் பார்த்தாள் அவள். முதலில் சாளுக்கிய வீரர்களுக்குப் பயந்து தஞ்சமென்று ஓடிவந்த கரிகாலன், பிறகு 'வஞ்சகன் நீ' என்று தன்னாலேயே வெறுக்கப்பட்டு விரட்டப்பட்ட கரிகாலன், கடைசியாகச் சோழ நாட்டுக்காக வடநாட்டிலே வெஞ்சமர் புரிந்து பெரும் புகழ் படைத்த இராஜேந்திர தேவனிடம் அரச மரியாதைகளைப் பெற்று, சக்கரவர்த்திக்குச் சமானமாக மக்களால் மதிக்கப்படும் மாவீரனான கரிகாலன்—ஆகிய இந்த மூன்று விதக் கரிகாலன்களைப் பற்றி எண்ணிப் பார்த்த அந்த ஏந்திழை, முயற்சியுள்ள ஒரு மனிதன் ஒரு வருஷ காலத்திற்குள் எந்தப் பதவியிலிருந்து எந்தப் பதவி வரை எட்டலாம் என்று உள்ளுக்குள்ளேயே பெரிதும் வியந்து கொண்டாள். சில சமயங்களில் தனக்கு உற்ற காதலனாகவும், பல சமயங்களில் ஜெயசிம்ம சாளுக்கியனின் ஒற்றனாகவும் காட்சியளித்தாலும், உண்மையில் தனக்கும் தன் தம்பிக்கும் வாழ்வளிப்பது ஒன்றையே வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருந்தானென்பதையும், அதைத் தான் புரிந்து கொள்ள முடியாமல் சந்தேகப் பேய்க்கு அடிமையான தன் பேதமையையும் நினைத்துப் பார்த்த நிரஞ்சனாதேவி, உள்ளே எழுந்த வருத்தத்துக்கு அடையாளமாகப் பெருமூச்சொன்றும் விட்டாள்.

உள்ள நிலையைக் கொண்டே எதையும் ஊகிக்கும் கூரிய அறிவு படைத்த கரிகாலன், அவள் கண்களில் முதலிலே தெரிந்த சலனத்துக்கும், பின்னர் அவள் அழகிய உடல் பஞ்சணையில் நெளிந்ததற்கும், கடைசியாக எழுந்த பெருமூச்சுக்கும் காரணத்தை அரைக் கணத்தில் உணர்ந்து கொண்டானாதலால், அவள் எண்ணங்களுக்கும் இதய வேதனைகளுக்கும் விடுதலையளிக்கும் நோக்கத்துடன், ''அரசகுமாரி!'' என்று மீண்டும் ஒருமுறை அழைத்தான்.

பதில் சொல்ல நா எழாததால், அரசகுமாரி ஒரு 'ஹூம்' மாத்திரம் கொட்டிவிட்டுத் தலையையும் தொங்கப் போட்டுக் கொண்டாள்.

சாண்டில்யன்

''சில நாட்களாகவே அரசகுமாரி மௌன நிலையை அடைந் திருப்பதைப் போல் தோன்றுகிறது?'' என்று கூறிக் கொண்டே வாயிற் படியிலிருந்து கட்டிலை நோக்கி வந்தான் கரிகாலன்.

தாழ்ந்த நிலத்தை நோக்கிக் கிடந்த வேங்கி நாட்டு மன்னன் மகளின் மணி விழிகள் தரையில் உறுதியுடன் பாவி வந்த அந்த வீரனின் கால்களைக் கவனித்தன. அப்படி அவன் எடுத்து வைத்த நான்கு அடிகளில் உண்டான சப்தம்கூட அவள் உடலிலிருந்து உணர்ச்சி வெள்ளத்தில் கலந்து இதயத்திலே சென்று 'பட்பட்' என்று தாக்குவது போன்ற பிரமை உண்டாகவே, உடல் ஒருமுறை லேசாக நடுங்கவும் செய்தது. அந்த நடுக்கத்தைக் கவனித்த கரிகாலன் இதழ்களில் லேசாகப் புன்முறுவல் படர்ந்தது. ''நடுக்கத்திற்கு இனி அவசியமில்லை அரசகுமாரி! தங்கள் எதிரிகள் அழிந் தார்கள். வேங்கி விடுதலை பெற்றது. தங்கள் தம்பியும் வேங்கி நாட்டு அரியணையில் நாளைக்கு அமரப் போகிறார்,'' என்று ஆறுதல் சொல்லும் முறையில் பேசினான் அவன்.

இந்தப் பேச்சு அவளை நிமிர்ந்து உட்கார வைத்தது. தலையைக் குனிந்து கொண்டே சொன்னாள் அவள்: ''நடுக்கத்திற்குப் பயம் மட்டும் காரண மல்ல படைத் தலைவரே! நன்றியும் சில வேலைகளில் காரணமாயிருக்கும்,'' என்று.

கரிகாலன் முகத்தில் புன்முறுவல் மறைந்து, வருத்தத்தின் சாயை சற்றே படர்ந்தது. ''நன்றி எதற்கு அரசகுமாரி?'' என்று வின வினான்.

''ஒரு கோழையை வீரனாக்கி யதற்கு; இந்த நாட்டை மாற்றானிட மிருந்து மீட்டதற்கு,'' என்றாள் மன்னன் மகள்.

''வேங்கி நாட்டு மன்னன் என்றும் கோழையாயிருந்ததில்லை,'' என்று அழுத்தமாகப் பதில் சொன்னான் கரிகாலன்.

மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினாள் மன்னன் மகள், தன் தம்பியைப் பற்றிக் கரிகாலன் சொன்ன சொற்களைக் கேட்டதால். இருந்தாலும் அதைப் பற்றி விவரமாகத் தெரிந்து கொள்ள மனம் ஆசைப் பட்டதால், சம்பாஷணைத் திரியைத் தூண்டிய அவன், ''யாரைப் பற்றிச் சொல்லுகிறீர் கள்? ஜெயசிம்ம சாளுக்கியனைப் பற்றியா?'' என்று கேட்டாள்.

''இல்லை. ராஜராஜ நரேந்திரனைப் பற்றி.''

''ஒரு வருஷத்திற்கு முன் அவன் வாளைப் பிடிக்கவும் அஞ்சினான்.''

''அப்பொழுது அவரைச் சுற்றி வஞ்சியர் கூட்டமிருந்தது. வஞ்சகர் கூட்டமிருந்தது. ஆனால், வெஞ்சமர் விளைவிக்கும் வீரர்கள் கூட்டமில்லை. எந்த உறுதியும் சூழ்நிலையைக் குலைக்கும் அரசகுமாரி! ஏன்? நல்லவன் என்று முதலில் என்னைப் பற்றி உறுதி கொண்ட நீங்களே, பின்னால் என்னை மாற்றானின் கையாள் என்று கருத வில்லையா?''

தன்னையே கரிகாலன் மடக்கி விட்டதைக் கண்ட அரசகுமாரி, பஞ்சணையிலிருந்து மெள்ள எழுந்து பதிலேதும் சொல்லாமல் சாளரத்தை நோக்கிச் சென்றாள். கரிகாலன் அவளைத் தொடரவில்லை. நின்ற இடத்திலிருந்து, பஞ்சணைக்கருகி லிருந்தே பேசினான்: ''அரசகுமாரி! தங்களை வருத்த வேண்டுமென்று நான் பேசவில்லை. உதாரணத்துக்காகச் சொன்னேன். தங்கள் தம்பி இன்று பல போர்களைக் கண்ட மகாவீரர். அவரி டம் நீங்கள் அந்தச் சலனமுள்ள கண்களை இனி என்றுமே பார்க்க முடியாது. ஒரு வருஷத்திற்கு முன் அவர் வாளைப் பிடிக்கவும் அஞ்சி இருக்கலாம். ஆனால் இன்று அந்தக் கரம் வாளைப் பிடித்து இந்த வேங்கி நாட்டை மாற்றா ரிடமிருந்து காக்கும் பெரும் வலிமை பெற்றிருக்கிறது. இதெல்லாம் எங்கிருந்து வந்தது?'' என்று பேசிக் கொடே போனவனை, ''தங்களிட மிருந்து...'' என்று அரசகுமாரியின் சொல் சட்டென்று இடைமறித்தது.

''என்னிடமிருந்து மன்னர் வாட் பயிற்சி பெற்றிருக்கலாம், போர்ப் பயிற்சி கற்றிருக்கலாம். ஆனால் அவை அவருக்குப் படிந்தது என்னால் மட்டு மல்ல அரசகுமாரி.''

''பின் யாரால்?''

''எதனால் என்று கேளுங்கள்.''



"ஹூம்.... எதனால்?"

"அவருடைய உடலிலே ஓடும் பரம்பரை ரத்தத்தால். வீரனான மன்னன் விமலாதித்தனுக்குப் பிறந்தவன் கோழையாயிருக்க முடியாது. இயற்கையில் ராஜராஜ நரேந்திரர் பெருவீரர். செயற்கை அவருக்குக் கோழைச் சாம்பலைப் பூசியது. அதை அகற்ற என் கை உதவியது. அவ்வளவுதான் அரசகுமாரி! இயற்கையில் இல்லாத வீரத்தை யாருக்கும் ஊட்ட முடியாது. வாளை இரும்பிலிருந்துதான் உற்பத்தி செய்ய முடியும். மேகம்தான் நீரைக் கொடுக்க முடியும். இயற்கையின் கர்ப்பத்திலிருக்கும் அம்சங்களைத்தான் மனித முயற்சி திரட்டி வளர்க்க முடியும்," என்றான் கரிகாலன்.

நிரஞ்சனாதேவி சாளரத்தின் பக்கத்திலிருந்து நீண்ட நேரம் திரும்பவுமில்லை; பேசவுமில்லை. சற்று நேரம் அவளையே கவனித்துக் கொண்டிருந்த கரிகாலன், "அரசகுமாரி," என்று மீண்டும் அழைத்தான்.

"ஹூம்."

"நான் வந்த காரியம்."

"சொல்லுங்கள். எதையும் கேட்கச் சித்தமாயிருக்கிறேன். வேங்கி அரச குடும்பம் நன்றி கெட்ட குடும்பமல்ல."

"எதைச் சொன்னாலும் கேட்பீர்களா?"

அவள் இதயம் பட்பட்டென அடித்துக் கொண்டது. அவன் எதைக் கேட்கப் போகிறான் என்பதை நினைத்ததால் உண்டான நாணத்தால் அவள் உடல் சிலிர்த்தது. "சொல்லுங்கள்," என்று இனிய குரலில் ஏதோ வீணையை மீட்டுவது போல் பேசினாள் அவள்.

"அரசகுமாரி!"

"ஏன்?"

"ஒரு வரம் வேண்டும்."

"கேளுங்கள்."

# பார்வை



என்றைக்காவது ஒரு நாள் வெற்றி பெறப் போகும் கொள்கைக்காக நான் தோற்றால் பரவாயில்லை. என்றைக்காவது ஒரு நாள் தோற்கப் போகும் ஒரு கொள்கைக்காக ஜெயிக்க விரும்பவில்லை.

—உட்ரோ வில்சன்

சிலரை நாம் புரிந்து கொள்ளாததால் வெறுக்கிறோம். வெறுக்கும் வரையில் அவர்களைப் புரிந்துகொள்ளப் போவதில்லை.

—கால்ட்டன்

தியாகம் செய்யவும், மன்னிக்கவும், நன்றி கூறவும் தெரிந்து கொண்டு விட்டால் நாம் சந்தோஷத்தைத் தேடி ஓட வேண்டியதில்லை. சந்தோஷம் நம்மைத் தேடி வரும்.

—ஜோசப் நியூட்டன்

''என் வாள் உங்களுக்கு அடிமையென்று ஒரு சமயத்தில் ஆணை வைத்தேன்.''

''ஆம்.''

''அந்த ஆணையிலிருந்து விடுதலை வேண்டும்.''

நீரில் திடீரெனக் கல்லைத் தூக்கிப் போட்டால் தடாகத்தில் ஏற்படும் கலக்கத்திற்குச் சமமான கலக்கத்தை அந்தக் கோரிக்கையால் அடைந்த அரசகுமாரி, சாளரத்திலிருந்து திடீரென, அவனை நோக்கித் திரும்பினாள். காதல் மொழிகளை அவனிடமிருந்து எதிர்பார்த்த உள்ளம் சுக்குநூறாக உடைந்ததன் காரணமாக, இதய தாபத்தால் அழகிய இதயப் பிரதேசம் எழுந்து தாழப் பெருமூச்சு விட்டாள். ''எதற்கு அந்த விடுதலை?'' என்றும் கேட்டாள், உணர்ச்சிகள் நிலை குலைந்ததன் விளைவாக, வார்த்தைகளும் நிலைகுலைந்தே உதிர்ந்தன.

''ஆணையிட்ட வேலை முடிந்து விட்டது. தவிர....'' என்று தயங்கினான் கரிகாலன்.

''தவிர?''

''ஆணையை எப்பொழுதும் நிறைவேற்ற இயலாது.''

''ஏன்?''

''இந்த நாட்டிலிருந்து நான் வெளியேறப் போகிறேன்.''

அவள் ஏதும் புரியாமல் விழித்தாள். பிறகு தவறாக அர்த்தம் செய்து கொண்டு பேசினாள். ''ஆம்! ஆம்! வேங்கி நாட்டில் தங்களுக்கு என்ன வேலை? சோழ நாட்டின் மாபெரும் படைத் தலைவருக்கு இந்தச் சிற்றரசு ஏற்றதில்லைதான்,'' என்று உள்ளத்தே எழுந்த குமுறலால் நின்ற இடத்தில் சிறிது அசையவும் செய்தாள்.

கரிகாலன் அந்த அசைவைக் கவனித்தான். அவள் சொற்களில் கண்ட தவறையும் கவனித்தான். அதைத் திருத்த உறுதியுடன் கூறினான், 'வேங்கி நாட்டிலிருந்து மட்டுமல்ல அரசகுமாரி, சோழ நாட்டிலிருந்தும் போகிறேன்! நான் பிறந்த மண்ணை விட்டே போகிறேன். பாரத நாட்டு எல்லையை விட்டே போகிறேன்,'' என்று.

அவள் அவனை நெருங்கி வந்தாள். அவன் வாயிற்படிக்காகத் திரும்பி அவளுக்குத் தன் முதுகைக் காட்டிக் கொண்டே இரண்டடி எடுத்து வைத்தான். ''நில்லுங்கள்!'' என்று அவள் இட்ட உத்தரவு சட்டென்று அவன் கால்களைப் பிடித்திழுத்து நிறுத்தியது. இரண்டு விநாடிகள் சென்றன. கொழுகொம்பு மீது பூங்கொடியொன்று தழுவிச் செல்வது போல் தன் தோள்மீது அவள் கரம் நெளிவதைக் கண்ட கரிகாலன் கற்சிலையென நின்றான். அவன் கன்னத்தோடு இழைந்தது ஒரு கன்னம். அந்தப் பக்கத்திலிருந்து மெள்ள எழுந்தன இசைச் சொற்கள்.

''நீங்கள் எங்கும் போகக் கூடாது.''

''அது என் இஷ்டமல்ல.''

''என் இஷ்டம்.''

''நம் இருவர் இஷ்டமல்ல; விதியின் இஷ்டம்.''

''அதை நாம் வலிமையால் வெல்வோம்.''

''வெல்ல நான் வேறு நாடு செல்ல வேண்டும்.''

''எங்கு?''

''கடாரத்திற்கு.''

''என்ன! கடல் கடந்தா?''

''ஆம்.''

''ஏன்?''

''பிறந்த மண்ணிலிருக்க முடியாத துர்ப்பாக்கியன் நான்.''

இதைச் சொன்ன போது, கரிகாலன் உடல் சிறிதே ஆடியதை உணர்ந்தாள், பின்னால் நின்ற வேங்கி நாட்டுப் பைங்கிளி. அவன் இதயத்திலே மாபெரும் சுமையிருப்பதை அறிந்த மன்னன் மகள், அவனைத் தன் இரு கரங்களாலும் ஆதரவாகத் தழுவினாள். ''அப்படியானால், உங்களுடன் நானும் வருகிறேன்,'' என்று கீதம் போலப் பேசினாள், அவன் காதுக்கருகே.

''பிறந்த மண்ணை விட்டா?'' என்றான் கரிகாலன் திரும்பாமலே.

''ஆம், பிறந்த மண்ணை விட்டுப் புகுந்த மண்ணுக்குச் செல்லுவது பெண்கள் கடமை அல்லவா?'' என்று அவள் கூறினாள்.

அடுத்த விநாடி, அவள் கைகளைத் தன் உடலிலிருந்து அகற்றி, விலகி நின்ற கரிகாலன், ''அரசகுமாரி! கனவுலகில் இருக்கிறீர்களா?'' என்று கோபத்துடன் பேசினான்.

கோபத்திலும் அவன் முகம் அழகாயிருந்ததை நிரஞ்சனா தேவி கவனித்துப் புன்முறுவலுடன் கூறினாள்: ''நனவுலகை விடக் கனவுலகில் இன்பம் இருக்குமானால் அதை நாடுவதுதான் முறை,'' என்று.

''இன்பத்துக்காக உள்ள நிலையைப் பலி கொடுப்பது விவேகமல்ல அரசகுமாரி,'' என்று கரிகாலன் விளக்கினான்.

''எது உள்ள நிலை?''

''நீங்கள் வேங்கி நாட்டு மன்னன் மகள், நானோ....''

''மன்னர்களைச் சிருஷ்டிக்கும் மாபெரும் வீரர்.''

''நான் ஊர் பேர் தெரியாத அனாதை.''




**விடை**

4, 12 எண்ணுள்ள வட்டங்கள் ஒரே அளவு.
10 மிகப் பெரிது.
8 மிகச் சிறிது.

''அனாதை நீங்கள் அல்ல. உங்களைப் போன்ற வீரர்களைப் பெறாத நாடுகளுக்குத்தான் அந்த வார்த்தை பொருந்தும்.'' அவள் பிடிவாதத்தைக் கண்ட கரிகாலன், வெகுண்டு அவளை அணுகி, அவள் கைகளைப் பிடித்துப் பலமாக அழுத்திக் கொண்டே சொன்னான்: ''அரசகுமாரி! நீங்களிருக்கும் உயர்ந்த பீடத்திலிருந்து, என் சுயநலனுக்காக உங்களை ஒரு நாளும் கீழே இறக்க மாட்டேன்,'' என்று.

''இறக்க வேண்டாம்; உயர்த்தி விடுங்கள்,'' என்றாள் நிரஞ்சனா தேவி.

''எங்கு?''

''உங்கள் மனப் பீடத்தில்.''

''வேண்டாம் இந்தப் பிடிவாதம், அரசகுமாரி. என் மனப் பீடத்தில் எப்பொழுதும் நீங்கள் இருக்கிறீர்கள். எந்த விநாடி உங்களைச் சந்தித்தேனோ, அந்த விநாடியிலிருந்து அந்த இடத்தை விட்டு நீங்கள் அகலவில்லை. இனி என்றுமே அகல மாட்டீர்கள். ஆனால் மன்னன் மகளான உங்களை, வசந்த மண்டபத்தில், இதோ இந்தப் பஞ்சணையில் புரண்ட உங்களைக் கண் காணாத நாட்டிற்கு, இரத்த வெள்ளம் பாயப் போகும் கோரப் போர் எழக் கூடிய தூரப் பிரதேசங்களுக்கு அழைத்துச் செல்ல நான் இஷ்டப்படவில்லை,'' என்று, உணர்ச்சி ததும்பப் பேசினான் கரிகாலன்.

அவள் உள்ளம் நெகிழ்ந்தது,



மரம் நட்டுட்டுப் போனார். இப்ப ஏன் மறுபடியும் வருகிறார்?''

''இன்று மரத்துக்குத் தண்ணீர் ஊற்று விழா.''

—க. இராமலிங்கம்

உறுதி குலைந்தது. கைத் தாமரைகளால் முகத் தாமரையை மூடினாள். குலுங்கிக் குலுங்கி அழுதாள். குலுங்கி அழுது குறுகிவிட்ட அவளுடைய மென்மையான சரீரத்தை, இரண்டெட்டில் தாவிப் பிடித்துக் கொண்ட கரிகாலன், ''நிரஞ்சனா! அழாதே. என்னால் தாங்க முடியவில்லை. உன்னைப் பிரிவதால் உண்டாகும் வேதனையை அதிகப்படுத் தாதே!'' என்றான்.

அவள் பதில் சொல்லாமல் தேம்பினாள். அவன் கைகள் அவள் அழகிய உடலை வளைத்துச் சென்றன. அவள் முகம் விசாலமான அவன் மார்பில் புதைந்தது. அப்பொழுது அவள் தேம்பியது, அவன் இதயத்துக்கே தன் உள்ள ஆசைகளைச் செய்தியாகத் தொகுத்து அனுப்பியது போலிருந்தது. நீண்ட நேரம் அந்த நிலையில் நின்ற அவர்களை வாயிற் படியிலிருந்து கிளம்பிய ஒரு நகைப்புத் தட்டியெழுப்பவே இருவரும் விலகி நின்று, வாசற் படியை நோக்கினர்.

அவர்கள் பார்த்ததும் நகைப்பைச் சற்று நிறுத்தி உள்ளே நுழைந்த ராஜராஜ நரேந்திரன், ''இது சக்கரக் கோட்டமல்ல படைத் தலைவரே!'' என்று சொல்லி மீண்டும் ஒரு சிரிப்பை உதிர்த்தான்.

கரிகாலன் பதில் கூறவில்லை. கேள்விக்கு அறிகுறியாகக் கண்களை உயர்த்தினான்.

''இது சக்கரக் கோட்டமல்ல கரிகாலரே! உமது தந்திரத்தால் இதை வெற்றி கொள்ள முடியாது. அக்காவின் உள்ளம் பெருங் கோட்டை, அதன் சுவர்கள் இரும்பு, அதை உடைக்க நீரல்ல, உம்மைவிடப் பெரிய வீராதி வீரர்கள் வந்தாலும் முடியாது. நீங்கள் கடாரத் தீவுக்கல்ல, உலகத்தின் எல்லைக்கே சென்றாலும் அந்தக் கோட்டை உங்களைத் தொடரும்,'' என்றான் ராஜராஜ நரேந்திரன்.

''என்ன சொல்கிறீர்கள் மன்னவா?'' என்றான் கரிகாலன்.

''இன்று நான் மன்னனில்லை. நாளைக்குத்தான் முடி சூடும் விழா.''

''சரி.''

''இன்று நான் உனது மாணவன்.''

''அதற்கு என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

''எனக்கு வாட் பயிற்சி அளித்தீர்கள்; போர்ப் பயிற்சி அளித்தீர்கள்....''

''அதற்காக?''

''குருவுக்குக் காணிக்கை செலுத்த வேண்டும். இதோ என் காணிக்கை,'' என்று சொல்லிக் கொண்டே, அவர்கள் அருகில் வந்த ராஜராஜ நரேந்திரன், தன் சகோதரியின் கையை எடுத்துக் கரிகாலனின் கையில் இணைத்தான். எதிர்பாராத விதமாகத் தன் கையுடன் அரசகுமாரியின் கை இணைக்கப்பட்டதால் நிலை குலைந்து போன கரிகாலன், கையை இழுத்துக் கொள்ள முயன்றதைக் கண்ட ராஜராஜ நரேந்திரன், ''விடாதே அக்கா, கெட்டியாகப் பிடித்துக் கொள்,'' என்று சொல்லி மீண்டும் நகைத்துவிட்டு வெளியே செல்ல முயன்றான். அவனை, ''அரசே!'' என்ற கரிகாலன் குரல் தடுத்து நிறுத்தியது.

திரும்பி நோக்கினான் ராஜராஜ நரேந்திரன். ''இது முறையல்ல...'' என்று ஏதோ சொல்லப் போன கரிகாலனை, அதிகாரத் தோரணையில் பார்த்த ராஜராஜ நரேந்திரன், ''கரிகாலரே! என் சகோதரியின் உள்ளம் எனக்குத் தெரியும். ஆகையால் நீர் இந்தக் காணிக்கையை ஏற்கத்தான் வேண்டும். இன்று, இது எனது வேண்டுகோள். நாளைக்கு இதுவே கட்டளை. ஏன் தெரியுமா? நாளைக்குத்தான் நான் மன்னன்!'' என்று கூறிவிட்டு, வெளியே நடந்தான்.

தனிமையில் விடப்பட்ட கரிகாலன் சங்கடத்தால் நகர முயன்றான். மன்னன் மகளின் கை அவனை இறுக்கப் பிடித்தது. அவனைப் பார்த்த விழிகளில் ஆசை பொங்கி வழிந்தது. ''என்ன செய்வேன் சுவாமி! மன்னர் கட்டளை!'' என்று தலை குனிந்து, வெட்கத்துடன் சொற்களைக் கொட்டி, ஆசை, வெட்கம், இன்பம் எல்லாம் கலந்த சிரிப்பையும் உதிர்த்தாள், விமலாதித்தன் மகளான நிரஞ்சனா தேவி.

(தொடரும்)

# மன்னன் மகள்

2-6-88

## 70. கடல் காற்று

கடலிலிருந்து எழுந்து வந்த வசந்த காலத்தின் இன்பமான காலைக் காற்று, சூடாமணி விஹாரத்தின் நடு மண்டபத்திலிருந்த புத்தர்பிரான் சிலையின் கழுத்தை அலங்கரித்து நின்ற மலர் மாலையை மெள்ள அசைத்துக் கொண்டிருந்தது. அதிலிருந்து உதிர்ந்த ஓரிரு புஷ்பங்கள் போதி சத்துவரின் காலடியிலே வணங்கிக் கிடந்த மஹாவீரனின் தலைமீது உதிர்ந்தன. புத்தர் பிரானின் இருபுறத்திலுமிருந்த தூங்கா விளக்குகளின் ஒளிகூட அந்த வீரனின் கன்னங்களிலே பாய்ந்து அவற்றுக்கு மெருகூட்டியதன்றி, நெற்றிப் பிரதேசத்திலும் விழுந்து சிந்தையிலே அவனுக்கிருந்த சலனத்தை அறுக்க, போதி சத்துவர் அளித்த ஞான ஒளியெனப் படர்ந்து நின்றது. நீண்ட நேரம் தலை வணங்கிக் கிடந்த அந்த வீரனின் உதடுகள், ''புத்தம் சரணம் கச்சாமி'' ''சங்கம் சரணம் கச்சாமி'' என்ற மந்திரங்களைச் சற்று உரக்கவே உச்சரித்ததால், அந்த மண்டபத்தின் பெரும் சுவர்களும், உயரத்தே தளைந்து கிடந்த கூரையின் ஓட்டுக் கற்களும் அந்த மந்திரங்களைத் திரும்பத் திரும்ப எதிரொலி செய்து, அந்தச் சூடாமணி விஹாரத்தில் எங்கும் சாந்தியை நிலவச் செய்ய முயன்று கொண்டிருந்தன.

ஆனால், தலைவணங்கிக் கிடந்த அந்த வாலிபன் மட்டும், மனத்திலே சிறிதும் சாந்தி பெறாததால், மீண்டும் மீண்டும் அந்த மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு மீளாத் தியானத்திலேயே கிடந்தான். அப்படிப் புத்தரின் கருணையை நாடி அவர் திருவடிகளில் சரணடைந்து கிடந்த அந்த வீரனை, அவனுக்குப் பின்னால் நின்று அருட் கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்த சூடாமணி விஹாரத்தின் தலைமைப் பிட்சு மெள்ளத் தமது வலக்கரத்தால் தொட்டு, ''கரிகாலா! எழுந்திரு! போதி சத்துவரின் அருள் உனக்குக் கிடைத்துவிட்டது,'' என்று சற்றே அசைத்து எழுப்பினார்.

நித்திரையிலிருந்து விழித்தவன் போல் நிஷ்டையிலிருந்து விழித்த கரிகாலன், மெள்ளத் தன் தலையைத் திருப்பி சூடாமணி விஹாரத் தலைவரை நோக்கி, ''அருள் கிடைத்தது உண்மை தானா தந்தையே?'' என்று வினவினான்.

சூடாமணி விஹாரத் தலைவர் சாந்தம் நிலவும் தமது விழிகளைச் சற்று அகலமாகவே விரித்து, இதயத்தில் எழுந்த ஆச்சரியத்தை முகத்திலும் காட்டி, ''என்ன சந்தேகம் கரிகாலா? என் வார்த்தையிலும் உனக்குச் சந்தேகமா?'' என்று வினவினார்.

''இல்லை தந்தையே!'' என்றான் கரிகாலன், புத்தர் பிரான் திருவடிகளை விட்டு எழுந்திருந்து, இரண்டடி பின்னுக்கு நகர்ந்து, தனது குருநாதரை ஏறிட்டு நோக்கிக் கொண்டே.

சூடாமணி விஹாரத் தலைவர் அருகில் வந்த கரிகாலன் தலையிலே தமது திருக்கரத்தை வைத்துத் தடவி, அதில் கிடந்த ஒரு புஷ்பத்தை எடுத்துக்

சாண்டில்யன்



கரிகாலனிடம் காட்டி, ''கரிகாலா! நீ போதிசத்துவரின் திருவடிகளில் கிடந்த போது, இது அவர் மலர் மாலை யிலிருந்து உன் தலையில் உதிர்ந்தது. இன்னொரு புஷ்பங்கூட உதிர்ந்ததைப் பார்த்தேன். அவர் தூவிய மலர்கள் உன்னைப் பாவனமாக்கியிருக்கின்றன கரிகாலா!'' என்று விளக்கினார்.

''தந்தையே? தங்கள் வார்த்தைகளில் எனக்குச் சந்தேக மில்லை. ஆனால் அருள் கிடைத்தவன் மனத்தில் சாந்தி இருக்க வேண்டுமே. அதில்லையே! என் மனம் எதிரேயுள்ள கடலலைகளைப்போல் கொந்தளிக் கின்றதே!'' என்றான் கரிகாலன்.

''குழந்தாய்! கொந்தளிப்பதை அடக்குவது உன் கடமை. மனக் குதிரையை அடக்குபவனே உண்மை யான சாரதி என மகாபாரதமே கூறுகிறது. மனித வாழ்வாகிற கடலிலே ஆசையே ஜலம்; அதைப் பெரும் அலைகளாக எழுப்புபவை சந்தர்ப்பங்கள். அந்தச் சந்தர்ப்பங்களை வெற்றி கொண்டு மரக்கலத்தைச் செலுத்துபவனே மாலுமி. அத்தகைய மாலுமியாக நீ திகழ வேண்டும் கரி காலா!'' என்று வார்த்தைகளை மிக அழுத்தமாக உச்சரித்துச் சாந்தமாகப் பேசினார், சூடாமணி விஹாரத் தலைவர்.

''தந்தையே! சந்தர்ப்பங்களை எப்படி வெற்றி கொள்வேன்? இங்கிருந்து கிளம்பிய நாட்களாக என் வாழ்வில்

A

(ஓவியக் கண்காட்சியில்)

அவன்: ''சுவரில் மாட்டியுள்ள நிர்வாண ஓவியம் உன்னைப் போலவே இருக்கிறதே... மாடலாக நின்றாயா?''

அவள்: சே! சே. நிச்சயமாய் இல்லை. ஓவியர் தன் ஞாபக சக்தியால் வரைந்திருப்பார்!



எத்தனை திருப்பங்கள்! எத்தனை பேர்வழிகள் வந்து என் பாதையில் குறுக்கிட்டிருக்கிறார்கள்.. அனாதை என்று புறப்பட்டவன், சோழ அரசகுல வம்சத்து மகனானேன். சதியில் சிக்கினேன். இரு மாதர்களின் காதலில் கட்டுண்டேன். ஒருத்தியை மணந்தேன். மற்றொருத்தியைக் கைவிட்டேன். தாயைப் பார்த்தேன். அவளைத் தாயென்று வெளிப்படையாகச் சொல்லும் உரிமையிழந்தேன். இப்பொழுது பிறந்த நாட்டை விட்டு என்னைக் கடத்திச் செல்ல எதிரே கடலில் மரக்கலங்கள் சித்தமாக நிற்கின்றன; இதென்ன வாழ்க்கை தந்தையே!'' என்று மனம் நெகிழ்ந்ததால், குரலும் தழுதழுக்கக் கேட்டான் கரிகாலன்.

''வாழ்க்கையை நிர்ணயிப்பது நமது கடமையல்ல குழந்தாய். அதை நிர்ணயிப்பது நமக்கு மீறிய சக்தி. அந்தச் சக்தி விரும்பும் பாதையில் வாழ்வது நமது கடமை. இரு மாதர் உன்னைக் காதலித்தது உன் தவறல்ல; ஒருத்தி மீது நாட்டம் கொண்டதும் உன் தவறல்ல; விதிப்புயலில் மனிதர்கள் பல்படி எடுத்து வீசப்படுகிறார்கள். யார் யார் எங்கு மோதிக் கொள்கிறார்களோ யார் கண்டது? இயற்கையின் விசித்திரத்தை நாம் அறிய முடியுமா? செங்கமலச்செல்வியைப் பற்றிக் கவலைப் படாதே கரிகாலா! அவள் அரையன் ராஜராஜனைப் போல் மிகுந்த உறுதியுடையவள். உன் உள்ளத்தை உணர்ந்தவள். ஆதலால் அவள் உன் பிரிவிலே சாந்தி பெறுவாள். காலம் எதையும் ஆற்றிவிடும். உன் அன்னையைப் பற்றி என்ன கவலை? அவள் ஏற்கனவே நீ செல்லப் போகும் மரக்கலத்தில் இருக்கிறாள்.''

கரிகாலன் விழிகள் நன்றியறிதலுடன் சூடாமணி விஹாரத் தலைவரை நோக்கின. ''என்ன? என் அன்னை வந்து விட்டாரா? கூரத்திலிருந்தா? எப்பொழுது?'' என்று மிதமிஞ்சிய ஆசையால் விடுவிடுவென்று வினவினான்.

சாந்தம் நிறைந்த புன்முறுவலொன்று சூடாமணி விஹாரத் தலைவர் உதடுகளில் தவழ்ந்தது. ''ஆமாம், கரிகாலா! உன் அன்னையை யாருமறியாமல் வரவழைத்து, புத்த சன்யாசிகள் உடையில் உன் மரக்கலத்துக்கு அனுப்பி விட்டேன். அவளுடன் நிரஞ்சனா தேவியும் உனக்காக அதோ கடலில் ஆடி நிற்கும் மரக்கலத்தில் காத்திருக்கிறாள். உன் அன்னையை உன்னுடன் வெளிநாடு அனுப்புவதாகக் காஞ்சியின் நிலவறைக் கூடத்தில் சொன்னேனே, அந்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டேன். உனக்காக வெளியே கடலில் நாகப்பட்டினத்துக்குப் போட்டியாக இன்னொரு நகரமே உதயமாகிவிட்டது போல் நூறு மரக்கலங்கள் நிற்கின்றன. கடற்கரையில், அரையன் ராஜராஜன் முதலிய படைத் தலைவர்கள் உன்னைக் கடாரத் தீவுக்கு வழியனுப்பக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். போ கரிகாலா! போ! தமிழகத்துக்குப் புறம்பேயும் உன் புகழ் பரவப் போகிறது. அரச வம்சத்தில் பிறந்த உன் பெயர் அரசு மரபுக் குறிப்புக்களில் மறையலாம். சரித்திரத்திலும் மறையலாம். ஆனால் மக்கள் மனத்திலிருந்து மறையாது. உன்னுடன் வசித்த புத்த பிக்ஷுக்கள் உன்னை மறக்க மாட்டார்கள். வையகம் வாழத் தன் வாழ்வைத் துறந்த புத்தர் பிரானின் கொள்கைகளைக் கடாரத் தீவிலும் பரப்பு. போய் வா!'' என்று, அவன் கடமையின் திசையைச் சுட்டிக் காட்டினார் சூடாமணி விஹாரத் தலைவர். அவர் கூறியதை ஆமோதிப்பன போல், வெளியில் துந்துபி வாத்தியங்களும் பேரிகைகளும் முழங்கின.

கரிகாலன் தந்தையின் காலடிகளில் விழுந்து வணங்கிவிட்டு, அவருடன் விஹாரத்துக்கு வெளியே வந்தான் சோழ நாட்டின் மாபெரும் படைத் தலைவனைக் கண்டதும், மீண்டும் துந்துபிகள் முழங்கின. எதிரே கடலில் இருந்த மரக்கலங்களில் இருந்த புலிக்கொடிகள், கரிகாலனை 'வா! வா!' என்று அழைப்பன போல் அசைந்தன. 'பிறந்த மண்ணின் மீதுள்ள ஆசையை




தனக்கு நியமிக்கப்பட்ட புதுக் காரிய தரிசியைப் பற்றித் தகப்பன் சொன்னான்:

''அவள் அழகி. திறமைசாலி. புத்திசாலி. சுருக்கமாகச் சொன்னால், அழகான பொம்மை.''

மகன் குறுக்கிட்டான்: ''ஏன் டாடி, அந்தப் பொம்மையைக் கீழே படுக்க வைக்கும் போது, கண்களை மூடிக் கொள்கிறாளா?''

விடு கரிகாலா! இதோ நான் உனக்கு இடம் தருகிறேன்' என்று சொல்வது போல், கடல் அலைகள் பெரிதாகக் கர்ஜித்தன.

அமைதியுடனும் சாந்தியுடனும் கரிகாலன் சைன்னியங்களின் கூட்டத்திடையே நடந்து சென்று அரையன் ராஜராஜன் நின்றிருந்த இடத்துக்கு வந்து, அவன் தாள்களில் வணங்கினான். தன் வளர்ப்புப் பிள்ளையைப் பயணக்கோலத்தில் கண்ட அரையன் ராஜராஜன் கண்களில் நீர் சுரந்தது. பேச நா மறுத்தது. ஆகவே கரிகாலனை இரு கைகளாலும் தடவிக் கொடுத்தான். அரையன் ராஜ ராஜனுக்கு அருகே நின்றிருந்த செங்கமலச் செல்வி அன்று பூரணப் போர் உடை அணிந்து கம்பீரமாகக் காட்சியளித்தாள். கங்கைப் போரிலே அவள் கன்னத்திலே ஏற்பட்ட சிறு காயத்தின் தழும்புகூட அன்று அவள் அழகை அதிகப்படுத்திக் காட்டியதே தவிரச் சிறிதும் குறைக்கவில்லை. கரிகாலன், அவள் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு, ''செல்வி!'' என்றான்.

ஏதும் பேச வகையில்லாததால், அவள் அழகாகப் புன்முறுவல் செய்து, ''கடல் கடந்தும் சோழநாட்டுப் புகழைப் பரப்புங்கள் படைத்தலைவரே. சென்று வாருங்கள்,'' என்று தைரியமாகவே பேசினாள்.

பதில் சொல்ல முடியாமல் தயங்கினான் கரிகாலன். அவள் புன்முறுவல் வேஷமென்பதையும், அவள் உள்ளம் வெடித்துக் கொண்டிருக்கிற தென்பதையும் உணர்ந்த கரிகாலன், மீண்டும் ஏதோ சொல்ல வாயெடுத்ததை அவளே தடுத்து, ''பேசும் சமயம் போய்விட்டது தலைவரே! சென்று வாருங்கள், எனக்கு என் வாள்தான் இனி வாழ்வுக்குத் துணை. என் தந்தை இன்னும் சாளுக்கியர்களுடன் போரிடுவார். அவருக்கு மகனில்லை. நான் மகனாக இருப்பேன். அவர் பக்கலிலே நின்று போராடுவேன். எனக்காகக் கவலைப்படாதீர்கள். நிம்மதியாகச் சென்று வாருங்கள்,'' என்று கூறிக் கடலை நோக்கிக் கையையும் காட்டினாள்.

கடைசியாக அந்தப் பேரழகியை ஒரு பார்வை பார்த்து விட்டுத் தலைகுனிந்த வண்ணம், அணி வகுத்து நின்ற படைகளின் ஊடே சென்ற கரிகாலன், சற்று தூரத்தில் நின்றிருந்த சைவத் துறவியாரிடம் சென்று, ''ஜெயவர்மா! நீ குறுக்கே வந்திராவிட்டால், வாழ்வில் பல உண்மைகளை நான் அறிந்திருக்க மாட்டேன். இந்தப் பெயரும் பதவியுங் கூட இத்தனை சீக்கிரத்தில் எனக்கு வந்திருக்காது. அதற்கு இதோ பரிசு!'' என்று கூறி, தன் கழுத்தில் இராஜேந்திர சோழ தேவனால் போடப்பட்ட செங்கதிர் மாலையை எடுத்து அவரிடம் கொடுத்து, ''சேர மன்னரிடம் இதைக் கொடு. எதை முன்னிட்டுத் துறவி வேஷம் போட்டாயோ அந்தப் பணி இத்துடன் பூர்த்தியாகிறது. சக்கரக் கோட்டத்தில் நீ உண்மை சொல்லி, சோழர்படைகளுக்கு பெருவெற்றி அளித்ததற்காக இதை உனக்களிக்கிறேன்,'' என்று சொல்லிவிட்டு கடற்கரையை நோக்கி நகர்ந்தான்.

அவனைத் தொடர்ந்து போர் உடைகளை அணிந்த மாலுமிகள் சென்றார்கள். அவனையும் இன்னும் பல வீரர்களையும் ஏற்றிச் செல்ல, அலங்காரம் செய்யப்பட்ட படகுகள் கரையோரத்தில் இழுத்துவிடப்பட்டிருந்தன. பல படகுகளுக்கு நடுவே நடப்பட்டிருந்த புலிக் கொடிக்குக் கீழே கரிகாலன் நின்று கொண்டான். பேரிரைச்சலுடன் மாலுமிகள் படகைத் தள்ளினார்கள்.

நூறு படகுகள் நகர்ந்தன. கரையில் நின்றிருந்த படை வீரர்கள் செய்த வாழ்த்துக் கோஷம் வானைப் பிளந்தது.

சுமார் இரண்டு நாழிகைகளில் மரக்கலங்கள் புறப்பட்டதைப் பார்க்க

விரும்பினவன்போல் ஆதவனும் கீழ்த் திசையில் எழுந்தான். அவன் வீசிய பொற்கிரணங்களில் மின்னி ஆடிக் கொண்டு நூறு மரக்கலங்கள் பாய் விரித்து நகர்ந்தன.

அந்த மரக்கலங்களையே பார்த்துக்கொண்டு கரையில் நின்றாள் செங்கமலச் செல்வி. அதுவரை உறுதியுடன் நின்ற அவள் உள்ளத்தின் கரை உடைந்து அதிலிருந்து பாய்ந்த உணர்ச்சிகள் கண்ணீராக வெளிவந்தன. அவள் குலுங்கிக் குலுங்கிக் குழந்தைபோல் அழுதாள். அரையன் ராஜராஜன் தன் குழந்தையை ஆதரவாக அணைத்துக் கொண்டு சொன்னான், "குழந்தாய் வருந்தாதே. தியாகத்தால்தான் பெரிய சாம்ராஜ்யங்கள் ஸ்தாபிக்கப்படுகின்றன. அதோ, அந்த மரக்கலத்தில் போகின்றது, மூன்று தலைமுறைகளைச் சோழ மண்டலத்துக்காகத் தியாகம் செய்த பெரிய குடும்பம். அதோ போகிறான் சோழ நலனுக்காக நாட்டையே துறந்த, மணிமகுடத்தையும் பேரரசையும் உதறிவிட்ட மகா புருஷன். அந்தத் தியாக அக்கினியில் நீயும் குளித்துவிடு மகளே, உன் மனத்திற்குச் சாந்தி ஏற்படும்," என்று.

மெள்ள மெள்ள அழுகையை நிறுத்தி, அவள் கரிகாலன் செல்லும் மரக்கலத்தை நோக்கினாள். அத்துடன் நிலத்தைப் பார்த்துக்கொண்டே, "அவர் பேரரசை மட்டுமா தியாகம் செய்தார். என்னையும் தியாகம் செய்தாரே அப்பா! ஆனால் நான் எப்படி அவரைத் தியாகம் செய்வேன்?" என்று சொன்னாள் செங்கமலச் செல்வி.

"தியாகத்திற்கு எல்லை எதுவுமே கிடையாது, மகளே! பெற்ற மகளான உன் வாழ்வையே நான் தியாகம் செய்து கரிகாலனைக் கடல் கடந்து அனுப்பவில்லையா? நான் இஷ்டப்பட்டிருந்தால், வேங்கிப் போரைத் தடுத்திருக்க முடியாதா? தடுத்திருந்தால் ராஜராஜ நரேந்திரன் தான் முடிசூடியிருப்பானா? அல்லது நிரஞ்சனாதேவிதான் கரிகாலனை வதுவை செய்து கொண்டிருப்பாளா? வா மகளே, சோழ நாடு நம்மை அழைக்கிறது. இன்னும் ஜெயசிம்மன் உயிரோடிருக்கிறான். வா, சாளுக்கியர் எல்லைக்குச் செல்வோம். நமக்குப் பாசறையிருக்கிறது," என்று கூறிவிட்டுப் பக்கத்திலிருந்த புரவிமீது ஏறினான். தந்தையின் வார்த்தைகளால் ஓரளவு சாந்தியே ஏற்பட்டது அந்த வீர மகளின் உள்ளத்துக்கு. தன் வாளை ஆசையுடன் ஒரு முறை தடவிக் கொடுத்துக் கொண்டாள்.

வங்கக் கடலில், வசந்தத்தின் காற்றில் வெள்ளி நிலவு பாய்ச்சிய இன்ப ஒளியில் பாய் விரித்து ஓடிய மரக்கலத்தின் உள்ளறைப் பஞ்சணையில் நிரஞ்சனாதேவி இணையற்ற அலங்காரத்துடன் தேவகன்னிகை போல் படுத்துக் கிடந்தாள். அந்தப் பஞ்சணை முகப்பிலே ஆழ்ந்த யோசனையிலே உட்கார்ந்திருந்தான் கரிகாலன். அமுத கலசங்கள் அருகிலிருக்க அமுதத்தைப் பருகாத அறிவிலியொருவன் இருப்பானா என்று ஏளனம் செய்வதுபோல் கடலலைகள் அந்த மரக்கலத்தின் பக்கவாட்டுகளில் தாக்கிக் 'களுக்' 'களுக்' கென்று நகைத்தன.

ஆபீஸில் திடீரென்று திருடர்கள் புகுந்தவுடன், அவள் பயந்து, ஹால் நடுவே நிமிர்ந்து படுத்து விட்டாள்—ஆடைகளைக் களைந்து விட்டு.

அவள் அருகே படுத்த சிநேகிதி, "ச்சீ... வந்திருப்பது திருடர்கள். ஆபீஸ் பார்ட்டி என்று நினைத்து விட்டாயா!"



# மேனியின் சுக துக்கம்



## ஆப்த நண்பனுக்கு மட்டுமே புரியும்

உங்கள் மேனி வெப்பம், வியர்வை, அழுக்கினால் வாடும்போது உதவும் உண்மை நண்பன் மார்கோ. மார்கோவில் தாராளமாக இருக்கும் வேப்பெண்ணெய் சருமத்தை சுத்தம் செய்வதோடு அதனை நன்கு பராமரிக்கவும் செய்கிறது. சருமத்துவாரங்களில் ஊடுருவி அழுக்கையும் கிருமிகளையும் நீக்கி வெய்யிலினாலும் காற்றினாலும் மேனி இழக்கும் இயற்கை வளத்தை ஈடு செய்கிறது. அதன் இயற்கை பொலிவு வெளிப்பட்டு பிரகாசிக்கச் செய்கிறது. மார்கோ உபயோகித்த ஒவ்வொரு குளியிலும் ஒரு அன்புப் பரிசு என்பதை உணர்வீர்

மதிப்பில் உயர்ந்த இப்பரிசின் விலையோ உங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தும். இதர விலையுயர்ந்த சோப்புகளைவிட மிகவும் குறைவு. உங்கள் மேனியின் பேரில் இது காட்டும் அன்பிற்கு விலையே இல்லை!

**மார்கோ உபயோகியுங்கள்
உங்கள் மேனியின்
ஆப்த நண்பன்**




**மார்கோ ஸோப்**

Response 2007

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. மின்விசிறி
2. மேஜை
3. வேட்டி
4. வந்துடும்
5. வீட்டுக்காரரின் மார்பு
6. சட்டை



ஆனால் அவன் அசையவில்லை. யோசனையிலேயே ஆழ்ந்திருந்தான். நிரஞ்சனாதேவி வெட்கம் தழுவும் தன் விழிகளைக் கரிகாலனின் குழந்தை முகத்தின்மீது ஆசையுடன் நாட்டிக் கொண்டு, பஞ்சணையில் சிறிது ஒருக்களித்து உடலோடு உடல் உராய, அவன் கையைத் தன் மலர்க் கரத்தால் பற்றி, ''என்ன ஆழ்ந்த யோசனை?'' என்று வினவினாள்.

''பிறந்த மண்ணை விட்டுப் போகிறோம் நிரஞ்சனா!'' என்றான் கரிகாலன் பெருமூச்சு விட்டுக் கொண்டே.

''புத்த விஹாரத்தில் துறவிகளோடு துறவியாய் வாழ்ந்த உங்களுக்கு இன்னும் மண்ணாசை விடவில்லையா?'' என்று அவள் மெள்ளச் சிரித்தாள்.

அவன் அவளை நோக்கித் திரும்பினான். மோகனாகாரமாகக் கிடந்த அவள் உருவத்தின் அழகுப் பிம்பங்கள் அவனை வாவாவென்று அழைத்தன. பல நாட்களுக்கு முன்பு வசந்த மண்டபத்தின் பஞ்சணையில் படுத்துக்கிடந்த நிலையில் அன்று அவள் இல்லை. முன்போ, அவள் மூடிக்கிடந்த புஷ்பம், இதழ்களை விரிக்காத மொட்டு. ஒடுங்கி ஒருக்களித்து மாரன் வில்லைப் போல் வளைந்து கிடந்தாள். இன்றோ அவள் விகசித்த செந்தாமரை; மாரன் விளையாட்டுக்கான மலர்ச் சோலை, நன்றாக, அலட்சியமாக, பக்கத்திலிருப்பவனுக்குத் தான் சொந்தம் என்ற நினைப்பில், எழில்கள் நன்றாகப் புலப்படும்படியாகக் கிடந்தாள். ஆசை அவள் நாணத்தை அறுத்திருந்தது. அவள் பார்வை அவன் சிந்தையை [illegible]ோடு கலைத்துவிட்டது.

அந்தக் காமன் கரும்பு வில்லின் கனிரசங்கள் இனி தனக்குச் சொந்தம் என்ற நினைப்பு, மண்ணாசையை வெட்டிப் பெண்ணாசைக்கு இழுத்தது அந்த வீரனை. அந்த ஆசை ஒலிக்கு அவள் சிரித்துச் சுருதி கூட்டினாள். அவன் கையைப் பிடித்த அவள் கரத்துக்குத்தான் என்ன துணிச்சல்! ஆசை வெட்கமறியாது என்பது உண்மை தானா? இதை நினைத்து உணர்ச்சிகளால் நெகிழ்ந்த நிரஞ்சனா தேவி அவனைப் பார்க்கவும் வெட்கினாள்.

அந்த வெட்கம் அவளுக்கு இன்னும் அதிக அழகைக் கொடுத்தது. அவள் அசைவுகளால், அவள் மயூர உடல் அவன் உடலில் உராய்ந்து இன்ப அலைகளை அவன் உடலில் மட்டுமின்றி உள்ளத்திலும் பாய்ச்சியது.

அலைகள் பேரரவம் செய்தன. நிலை குலைந்த ,கரிகாலனுக்கு, நிரஞ்சனா தேவியின் தலையிலிருந்த ஜாதி மல்லிகைப் புஷ்பங்களின் வாசனையை எடுத்து வந்து கொடுத்தது மன்றி 'இதென்ன புஷ்பம்! அதோ அவள் உடலிலே எத்தனை புஷ்பங்கள் கரிகாலா!' என்று கடற்காற்று அவன் காதி[illegible]ல ஊதியும் சென்றது.

அவன் அவளை நெருங்கினான். அவள் மோகனப் புன்முறுவல் செய்தாள். அடுத்த விநாடி அவன் வலியக்கரங்களிலே அவள் சிறைப்பட்டுக் கிடந்தாள். 'முகந்தான் குழந்தை முகம் இவருக்கு. மற்றபடி...?' என்று நினைத்த அவள், மேலே நினைக்கவும் முடியாமல் வெட்கி நின்றாள். அவள் மட்டுமா வெட்கினாள்! வானத்தில ஓடிய மதியும் வெட்கி தன் முகத்தை ஒரு முகில் கூட்டத்தில் புதைத்துக் கொண்டது.

தமிழ்நாட்டின் கரை, தூரத்தே மறைந்துகொண்டே நின்றது. மரக்கலத்தின் உள்ளே இருந்த அறையிலும் எத்தனையோ உணர்ச்சிக் கரைகள் உடைந்தன! வரையறைகள் அறுந்தன!

கரையும் வரையறையும் இயற்கையின் சிருஷ்டி. ஆனால், அவற்றைக் கடப்பதும் உடைப்பதும் மனிதனின் -முயற்சி; இது மனிதன் உதயமான நாளாய் இருந்து வரும் இயற்கையின் நியதி.

(முற்றும்)